# இந்தியப் பொருளியல்

## (முதல் பகுதி)

## (INDIAN ECONOMICS)

## (PART I)


ஆசிரியர்கள்

**ஜி. பி. ஜாதர், கே. ஜி. ஜாதர்**

தமிழாக்கம்

**எம். பாலசுப்பிரமணியன், எம்.ஏ., எம்.காம்.,**

விரிவுரையாளர், வணிகவியல் துறை,

ஏ. எம். ஜெயின் கல்லூரி, சென்னை.







**தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்**

த. பா. நி. (க.வெ.) வரிசை எண்—40

# இந்தியப் பொருளியல்

(முதல் பகுதி)

(INDIAN ECONOMICS)

(PART I)

ஆசிரியர்கள்
ஜி. பி. ஜாதர், கே. ஜி. ஜாதர்

தமிழாக்கம்
எம். பாலசுப்பிரமணியன், எம்.ஏ., எம்.காம்.,
விரிவுரையாளர், வணிகவியல்துறை,
ஏ. எம். ஜெயின் கல்லூரி, சென்னை.





தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம்

First Edition — February, 1964
Reprint — December, 1972

T.N.T.B.S. (C.P.) No. 40

© Tamil Nadu Text Book Society

# INDIAN ECONOMICS—Part I

G. B. JATHAR AND K. G. JATHAR

*Translation*
M. BALASUBRAMANIYAN

**Price Rs. 7-70**

This translation of INDIAN ECONOMICS By G. B. Jathar and K. G. Jathar is published by arrangement with the Oxford University Press.

*'Published by The Tamil Nadu Text Book Society under the Centrally sponsored Scheme of Production of books and literature in regional languages at the University level, of the Government of India in the Ministry of Education and Social Welfare (Department of Culture), New Delhi.'*

*Printed by :*
**Muthukumaran Press,**
**Madras-1.**

# அணிந்துரை

## திரு. இரா. நெடுஞ்செழியன்

(தமிழகக் கல்வி-உள்ளாட்சித்துறை அமைச்சர்)

தமிழைக் கல்லூரிக் கல்வி மொழியாக ஆக்கிப் பன்னிரண்டு ஆண்டுகள் ஆகிவிட்டன. குறிப்பிட்ட சில கல்லூரிகளில் பி.யூ.சி., பி.ஏ. வகுப்பு மாணவர்கள் தங்கள் பாடங்கள் அனைத்தையும் தமிழிலேயே கற்று வருகின்றனர். நாடு முழுதும் பரந்துள்ள மாணவர்களின் ஆர்வம், 'தமிழிலேயே கற்பிப்போம்' என முன்வந்துள்ள கல்லூரி ஆசிரியர்களின் ஊக்கம், பிற பல துறைகளிலும் தொண்டு செய்வோர் இதற்கெனத் தந்த உழைப்பு, தங்கள் சிறப்புத் துறைகளில் நூல்கள் எழுதித் தர முன்வந்த நூலாசிரியர்கள் தொண்டுணர்ச்சி இவற்றின் காரணமாக இத்திட்டம் நம்மிடையே மகிழ்ச்சியும் மன நிறைவும் தரத்தக்க வகையில் நடைபெற்று வருகிறது.

பல துறைகளில் பணிபுரியும் பேராசிரியர்கள் எத்தனையோ நெருக்கடிகளுக்கிடையே குறுகிய காலத்தில் அரிய முறையில் நூல்கள் எழுதித் தந்துள்ளனர்.

வரலாறு, அரசியல், உளவியல், பொருளாதாரம், தத்துவம், புவியியல், புவியமைப்பியல், மனையியல், கணிதம், இயற்பியல், வேதியியல், உயிரியல், வானியல், புள்ளியியல், விலங்கியல், தாவரவியல், பொறியியல் ஆகிய பல துறைகளில் மூல நூல்கள், மொழிபெயர்ப்பு நூல்கள் என்ற இருவகையிலும் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனம் வெளியிட்டு வருகிறது.

இவற்றுள் ஒன்றான '**இந்தியப் பொருளியல்-I**' என்ற இந்நூல் தமிழ்நாட்டுப் பாடநூல் நிறுவனத்தின் **40** ஆவது வெளியீடாகும். தமிழ் மக்களின் பேராதரவினாலும், தமிழைப் பயிற்சி மொழியாகக்கொண்ட மாணவர்களின் நல்லூக்கத்தினாலும் இதன் முந்தைய பதிப்புப் படிகள் அனைத்தும் விற்பனையாகிவிட்டன. ஆதலின், இப்பொழுது இந்நூல் மீண்டும் வெளிவருகின்றது. இந்நூல் மைய அரசு, கல்வி சமூக நல அமைச்சகத்தின் மாநில மொழியில் பல்கலைக்கழக நூல்கள் வெளியிடும் திட்டத்தின்கீழ் வெளியிடப்படுகிறது.

உழைப்பின் வாரா உறுதிகள் இல்லை; ஆதலின், உழைத்து வெற்றி காண்போம். தமிழைப் பயிலும் மாணவர்கள் உலக மாணவர்களிடையே சிறந்த இடம் பெறவேண்டும். அதுவே தமிழன்னையின் குறிக்கோளுமாகும். தமிழ்நாட்டுப் பல்கலைக் கழகங்களின் பல்வகை உதவிகளுக்கும் ஒத்துழைப்புக்கும் நம் மனம் கலந்த நன்றி உரியதாகுக.

**இரா. நெடுஞ்செழியன்**

# முன்னுரை

நம் நாடு சுதந்திரம் பெற்றுப் பத்தாண்டுகள் கழிந்தன. இக் காலத்தில் விளக்கவொண்ணு மாறுதல்கள் பொருளாதாரத் துறையில் ஏற்பட்டுள்ளன. இவ்வாறு கடந்த பத்தாண்டுகளை ஆவேசம் மிக்க காலம் எனக் கூறலாம். தேசிய ஏற்றத் தாழ்வுகளைச் சீராக்க முயல்வதில் ஏற்படும் அவதிகளிலிருந்து வெளிப்படும் நடைமுறைப் பொருளாதார அமைப்பை, இந் நூலில் சித்திரித்துக் காட்டியுள்ளோம். இன்று நம் நாட்டின் பொருளாதாரத் துறையில் உள்ள எல்லாப் பகுதிகளையும் சற்றேறக் குறைய 600 பக்கங்களில் இப் புத்தகம் எடுத்துக் கூறியுள்ளது. இது பல்கலைக்கழக மாணவர்களுக்கெனச் சிறப்பாக எழுதப்பட்டபோதிலும் அரசியல்வாதிகளும், பொதுநோக்கு உடையவர்களும், இதரரும் இதைப் படித்துப் பயன்பெறலாம்.

பேரறிஞர் ஓ. எச். கே. ஸ்டேட் என்ற புவியியல் பேரறிஞர் விநோதமாகக் கீழ்வருமாறு கூறியுள்ளார்: 'உலகில், நினைக்கும் பிராணிகளில் இந்தியா சம்பந்தமான விவரங்களைப்பற்றி எழுதுபவர்களை ஒரு தனி வரிசையில் வைக்கலாம். ஏதோ சில உற்சாகமூட்டும் தகவல்கள் நீங்கலாகப் பொதுப்படையில் அவர்கள் அரசினர் குழுக்கள், தீர்வை விகித விசாரணைகள், விவரச்சுவடிகள் இவைபோன்றவற்றை நுனிப்புல் மேய்வதுபோன்று மேலெழுந்தவாரியாகப் பாராமல், மேலும் மேலும் ஆராய்வார்கள். மூலத் தகவல்கள் எவ்வளவு சிறந்திருப்பினும் அவற்றிலுள்ள சத்தும் சுவையும் வரவரக் குன்றிவிடுகின்றன.'[1] இம் முறையில் நம்மீது சாட்டப்பட்டுள்ள கடுமையல்லாத குற்றத்தை

1 *இந்தியாவும் பாகிஸ்தானும் — ஜெனரல் அண்டு ரீஜனல் ஜ்யாக்ரபி, 1954.*

நாம் ஒப்புக்கொண்டு, நினைக்கும் பிராணிகள் வரிசையில் சேர்க்கப்படுவதற்கும் இசைகின்றோம். சென்ற சில ஆண்டுகளாக அரசியலாரின் தகவல்களும், புள்ளிவிவரங்களும், ஏனைய அரசாங்கத் தொடர்புடைய குழுவினரின் தகவல்களும் பெருவாரியாக வந்து குவிகின்றன. இவை அனைத்தையும் நாம் எடுத்துக்கொள்ள இயலவில்லையெனினும், தவிர்க்கவியலாத முக்கியப் பகுதிகளைமட்டிலும் இவண் காட்டியுள்ளோம்.

இதனாசிரியர், தார்வார் அகில இந்திய ரேடியோவில் பணியாற்றும் திரு. எஸ். பி. கெர், பி. காம். அவர்களுக்கு மிகவும் கடமைப்பட்டுள்ளார்கள். அவர் இப்புத்தகத்தில் 17, 18, 20, 22ஆம் அதிகாரங்களை[1] உருவாக்க உதவியுள்ளார். அதிகாரங்கள் 17-ம் 18-ம் அவர் எழுதிய அமைப்பிலேயே வெளியிடப்பட்டுள்ளன.

ஜி. பி. ஜாதர்,
பூனா, 1957 கே. ஜி. ஜாதர்.

1 இவ் வதிகாரங்கள் இரண்டாம் பாகத்தில் உள்ளன.

# தமிழாக்கியோன் முகவுரை

'விரைந்து தொழில்கேட்கு ஞால நிரந்தினிது
சொல்லுதல் வல்லார்ப் பெறின்' —குறள்.

சொல்லப்படுவனவற்றை வரிசைப்படக் கோத்து, இனிதாகச் சொல்லவல்லான் சொற்களை உலகத்தார் விரைந்து ஏற்றுக் கொள்வர் என்பது மரபு. தற்போது தாய்மொழியில் பல்வேறு நூல்களைப் போதிக்கவேண்டுமென்ற கொள்கை மேலோங்கிக் குன்றின்மேலிட்ட விளக்கினைப் போன்றுள்ளமை தெரிந்ததே.

கடந்த பல ஆண்டுகளாகத் தமிழ்நாட்டில் தமிழ்மொழியின் வாயிலாகப் போதனை செய்யவேண்டுமென்ற விறுவிறுப்பான கொள்கை நிலவிவருவது வெள்ளிடை மலை. இப் பிரச்சினைக்குத் தீர்வு காணும் முறையில் பல்வேறு ஆங்கில நூல்கள் தமிழ்மொழியில் பெயர்க்கப்பெறுகின்றன.

தமிழ் மாணவனாகிய காரணத்தாலும், ஆங்கில மொழியில் பயிற்சி பெறாத மக்களுக்கு 'இந்தியப் பொருளியலி'ல் மலிந்து கிடக்கும் பல்வேறு கொள்கைகளை எளிதில் விளங்க வைக்கவேண்டும் என்ற ஆர்வம் உள்ளதாலும் இத் தமிழாக்க செய்ய முன்வந்தேன்.

ஆக்ஸ்ஃபோர்டு பல்கலைக்கழக அச்சுக்கூடத்தினரால் (Oxford University Press) 1957ஆம் ஆண்டில் வெளியிடப்பட்ட திரு. ஜி. பி. ஜாதர், கே. ஜி. ஜாதர் என்ற இருவர் எழுதிய 'இந்தியப் பொருளியல்' என்னும் மாபெரு நூலில் முதல் இருபத்தோரு அதிகாரங்களைத் தமிழாக்கம் செய்துள்ளேன்.

மூல ஆசிரியர்களின் கொள்கைகளை எவ்விதத்திலும் மாற்றாது உள்ளவாறே தமிழாக்கத்தில் அமைத்துள்ளேன். இம் முயற்சியில் போதிய ஊக்கம் காட்டி ஆதரவளித்த தமிழ் வெளியீட்டுக் கழகத்திற்கு என் அன்பு கலந்த நன்றி.

38, நந்தனம் தொடர்ச்சி,
சென்னை - 35.

ம. பாலசுப்பிரமணியன்

# பொருளடக்கம்

# 1. முகவுரை

## 1. இந்தியப் பொருளாதாரத்தின் கருத்து

பொதுவாக எவரேனும் இந்தியப் பொருளியல் என்ற நூலினை மேலெழுந்தவாரியாகப் பார்த்தவுடன், அதன் சுருக்கமான இலக்கணம் என்னவா யிருக்கக் கூடும் என ஆராயலாம். இதைக் கண்ணுற்றதும் மூன்று வகையான ஐயப்பாடுகள் தோன்றுகின்றன. (1) இந்தியப் பொருளாதார இயலா அல்லது இந்தியாவிலேயே நூதனமானதும் வேறெங்கும் தோன்றாததுமான அடிப்படைக் கொள்கைகள் படைத்தனவா?* (2) இந்திய முறையில் வரலாற்று வழியில் தனிப்பட்ட கொள்கைகளைப் பரப்பி, அவற்றின் முறையிலே உருவான புது எண்ணங்களின் கோவையா? அல்லது (3) இந்தியாவில் இடர்ப்படும் அநேக பிரச்சினைகளைப்பற்றிய ஆராய்ச்சிகளா? இம் மூன்று பிரிவுகளைப் பற்றிய கேள்விகள் கேட்கப்படலாம். ஆயினும் அனுபவத்தில் கடைசியாகக் கூறப்பட்டதைத்தான் பொதுவாக இந்தியப் பொருளாதாரம் எனக் கூறுவர்.

'இந்தியப் பொருளாதாரம்' என்ற சொல் முதன்முதலில் இந்த எண்ணத்திற்கேற்ப மகாதேவ கோவிந்த ரானடே அவர்களால் கூறப்பட்டது. அவர்களுக்கு இது இரண்டு எண்ணங்களைக் கொடுத்தது. அவ் விரண்டினையும் அவர் இங்கு வலியுறுத்தியுள்ளார். முதன்முதலாக அவர் கூறுவது என்னவெனில் இந்தியப் பொருளாதாரம் எனப்படுவது முன்னேற்றமடைந்த மேனாடுகள், குறிப்பாக இங்கிலாந்தின் பொருளாதாரத்தினின்று—

* தனிப்பட்ட பொருளாதாரக் கொள்கை கொண்ட இயல் இல்லை என இயம்ப முடியாது. இந்தியப் பொருளாதாரம் எனக் கூறியவுடனேயே இம்மாதிரிக் கொள்கை என்ற விளக்கம் கிடைக்கிறதா இல்லையா என்பதுதான். இரண்டாவது விளக்கத்திலும் இதை வற்புறுத்தலாம்.

பூனா பல்கலைக் கழகத்தினர் அர்த்த விளக்கமற்ற 'இந்தியப் பொருளாதாரம்' என்ற சொல்லைத் தங்கள் பாடத்திட்டத்திலிருந்து நீக்கி 'இந்தியப் பொருளாதாரப் பிரச்சினைகள்' என்ற பெயரைத் தந்தனர்.

அடிப்படையினின்று—வேறுபட்டது. சரியானமுறையில் முடிவு காண அவற்றைத் தனித்தனியே நன்கு தெரிந்துகொள்ளுதல் வேண்டுமென்றார். *இங்கிலாந்திற்கு எது நன்மை பயக்க வல்லதோ, அதே இந்தியாவிற்கு நலம் என்ற எண்ணமுள்ள ஆங்கிலேய அரசின் கொள்கைகளை அவர் கடுமையாகத் தாக்கினார்.

திரு. ரானடேயின் மனத்தில் தோன்றிய இரண்டாவது எண்ணமாவது: அக் காலத்தில் இங்கிலாந்தில் அறிந்திருந்த பொருளியல், இந்திய நிலைமையை ஒட்டிக் கருதப்படவில்லை என்பது வெள்ளிடை மலை. இங்குள்ள நிலைமைக் கேற்ப அமையவேண்டுமென்று அவர் கூறியுள்ளார்.

1892-ல் பூனாவிலுள்ள டெக்கான் கல்லூரியில் திரு. ரானடே செய்த விரிவுரையில் இந்த இரண்டு கருத்துகளும் பொதிந்துள்ளன. அவரது விரிவுரைகள் கழிந்து, இற்றைக்கு 60 ஆண்டுகளுக்கு மேலாயின. அவற்றில் மேற்கோளாகக் காட்டப்பட்டவையும், வன்மையாகக் கூறப்பட்டவையும் இன்று மிகவும் இயல்பானவையாகவும் சாதாரணமானவைகளைப் போலும் ஆகிவிட்டன. இந்தியப் பொருளாதாரக் கோட்பாடு இன்னதென்றும், அதைத் தனியே படித்தல் வேண்டுமென்றும் வரையறுத்து, வழிகாட்டி போன்று அமைந்தால் நாம் அவற்றைப் படித்தல் இன்றியமையாதது.

## 2. ரானடேயின் கொள்கைகளைப் பற்றிய சுருக்கம்

முன்னர்க் குறிப்பிடப்பட்ட திரு. ரானடேயின் விரிவுரையின் சுருக்கம் வருமாறு:

அரசியல் கலையிலும், சமூகக் கலையிலும் சம்பந்தக் கொள்கையுள்ளது போன்று மக்கள் இனம், சமூக, சட்ட, நிதி, ஒழுக்க முறை, பொருளியல், சுற்றுப்புற வேற்றுமைகள் உள்ளன. பொருளாதாரக் கொள்கைகளைச் செயல்முறையில் கொண்டு வரும்போது மேற்கண்ட வேற்றுமைகளால் இடத்திற்கேற்ப மாற்றி யமைத்தல் வேண்டும். அமைப்பு, தட்பவெப்ப நிலை, நிலம், சட்டங்கள், நிறுவனங்கள், முற்கால வரலாறு, தேசிய

* பொருளாதார நிலைமையில் எந்த இரு நாடுகளும் ஒரே மாதிரியாக அமைந்திருப்பதில்லை. ஒவ்வொரு நாட்டிலும் ஏற்படும் பிரச்சினைகள் தனிப்பட்டவை. செய்முறையில் கொள்கைகள் வகுக்க இந்தப் படிப்பின் தேவை இது ஓர் உண்மையென விளங்கி யிருக்கிறது. ரானடே காலத்தில் இது இவ்வளவு வெட்டவெளிச்சமாய் விளங்கவில்லை. ஆதலால்தான் அழுத்தம் திருத்தமாகவும் ஆணித்தரமாகவும் இந்தியப் பொருளாதாரம் தனிப் படிப்பியல் எனக் கூறப்பட்டது.

விருப்பங்கள், தேவைகள், பழக்க வழக்கங்கள் இவைகளைப் பொறுத்தே எவ்விதமான கொள்கைகளையும் மேற்கொள்ள வேண்டும் என்றுர். ஜான்ஸ் வேர்ட்மில் கூறியதுபோலப் பொருளாதாரக் கோட்பாடுகள் அமைந்த செயல்முறைப் பிரச்சினைகள் இல்லை ஆயினும் இப் பிரச்சினைகள் அரசியல், ஒழுக்கமுறை இவைகளைப் பொறுத்து உள்ளன. இவ்வாறில்லாமல் ஒன்றையும் கொள்ள இயலாது. பழங்காலப் பொருளாதாரக் கோட்பாடுகளை வரையறுக்கும்முன் கொள்ளவேண்டிய எடுகோள்கள் : (1) தேசியப் பொருளாதாரம் எனப்படுவது தனிப்பட்ட முறை. இதைக் கூட்டமாகக் கருதுவது பொருத்தமன்று. (2) தடங்கலற்றும் அளவையற்றதுமான போட்டி தனிப்பட்டவர்களிடையே இருந்தால்தான் தேசியக் கட்டுப்பாடும் சமூக வளர்ச்சியும் ஏற்படும். (3) தனியார் துறையில் அரசினர் சட்டமிடுவது, கட்டுப்பாடு கொண்டுவருவது இவைகள் அவர்களுடைய பொருளாதாரம் சுதந்திரத்தைப் பறிக்க முயலுவதாகும். இன்றுள்ள சமுதாயத்தில் இந்த எடுகோள்கள் உண்மையல்ல. இவை உண்மையாகவே எடுகோள்களாக அமைந்த அந்தச் சமுதாயத்திலும்கூட, 'பொருளாதார அசையாநிலை' என்ற விளக்கம் கொடுப்பார்கள். ஆனல், மாறும் சமூகத்தைப்பற்றி ஒன்றும் கூற முடியாது. இந்தியாவை நோக்குங்கால் இந்த எடுகோள்களனைத்தும் தவருனவை. இவற்றின் அடிப்படையில் கொள்ளப்படும் இந்தியப் பொருளாதாரம் தவருன கருத்துகளையே பரப்பிவரும் எனலாம். தங்கு தடையற்ற வர்த்தகம் இங்கிலாந்திற்குப் பொருத்தமானது. ஆயினும் இந்தியாவிற்குக் கட்டுப்பாடுள்ள வர்த்தகம்தான் தேவை. ஓரிடத் தொழிற் செறிவு என்ற பாகுபாட்டின்கீழ் இந்தியா எக் காலத்தும் மூலப் பொருளை உற்பத்தி செய்து வரவேண்டு போக்குவரத்து முதலிய மூன்றும் முறைத் தொழில்களை மிக முன்னேற்றமடைந்த நாடுகளிடையே விடவேண்டும் என்ற கொள்கைகள் பிற்போக்கானவை. இன்றும் இதைக் குறித்துப் பல விவாதங்களிலும் திரு. ரானடே பொருளாதாரக் கோட்பாட்டுக்காக 'உலக மயமும், நிரந்தரத் தன்மையும்' என்ற பழங்காலக் கோட்பாட்டைத் தாக்கி, வரலாற்றுக் கொள்கையினரைப் (Historical School) பின்பற்றினர்.

பழங்காலக் கோட்பாட்டைத் தழுவி, அதையே கொள்கைகளாகப் பரப்பிவந்த ஆங்கில அரசினரின் கொள்கைகளை ரானடே வன்மையாகக் கண்டித்தார்; மறைமுகமாகப் பிரிட்டிஷாரின் காலனிக் கொள்கை நிறைந்த பிரிட்டிஷ் அரசினர் கொள்கையை முன்னுக்குப் பின் முரணுனது என நையாண்டி செய்தார். ஆங்கிலேயர் துவக்கத்தின்போது இங்கிலாந்தையே ஓர் எடுத்துக்

காட்டாக வைத்துக்கொண்டு, இந்தியாவை மாற்றியமைக்க விரும்பினார்கள். நேருக்கு நேர் வந்தபோது அதே மாற்றங்களைக் கொண்டு வந்தனர். தனியார் துறையில் நிலச் சட்டம், நிலம் தனிப்பட்ட நபருக்கு உண்டென்று இங்கிலாந்தில் உள்ளது. ஆயினும் இந்தியாவில் சோஷலிஸ முறையை அமைத்தனர். இங்கிலாந்தில் நிலம்பெற்ற பிரபுக்கள் வரி கட்ட வேண்டியதில்லை எனச் சட்டம் இருந்தது. ஆயினும் இந்தியாவிலோ நிலத்தில் நிலவருமானம் உள்ளதாய் அல்லாத நிலங்களின் பேரில் வரி தண்டினார்கள். ஆங்கிலச் சமூக அமைப்பில் நிலைமையும் வழிகளும் மேம்பாடாக உள்ளன. ஆயினும் இந்தியாவில் அரசினருக்கும் வரி கொடுக்கும் ஏழை மக்களுக்கும் இடையே ஒரு சமூகமும் இல்லை.

குறிப்பாக ரானடேயின் கண்டனங்களைப் பார்க்கின் அவர் கூறுவது, இந்தியாவின்மீது அநேக சுமைகளைத் [திணித்து, எந்த வகையிலாவது இந்தியாவைப் பொருளாதார முறையில் பின்னடையச் செய்து, இந்திய மக்களின் நலனைக் கோராது இடையூறு செய்து, இங்கிலாந்தின் ஆதிக்கத்தின்கீழ் இந்தியாவை வைப்பதே எனலாம்.

### 3. பொருளாதார இயலும் இந்தியப் பொருளாதாரமும்

வரலாற்றுக் கொள்கையினர் பயனற்றவைகளைத் தவிர ஏனைய பொருளாதாரக் கொள்கைகளைத் திரு. கோவிந்த ரானடே ஏற்றுக் கொள்ள மறுத்தார். ஆயினும் ரானடே கொண்ட எண்ணத்தை நாடு அடைந்த மாறுபாடான சூழ்நிலையில் மாற்றிக்கொள்ள வேண்டி ஏற்படுகிறது.* வரலாற்றுக் கொள்கையினர் எதிர்க்கும் அந்த உலக ஆளுகையும் முழுமையும் உள்ளது. பொருளியல் என்ற கோட்பாடு இப்போது இல்லை. இணையான கொள்கையை அது ஆமோதிக்கின்றது. வரலாற்றுக் கொள்கையினர் கூறும் எல்லாக் கோட்பாடுகளையும் அது முழுமனத்தோடு ஏற்றுக் கொண்டது. இதுதான் சரியான முறை; இது தவறான முறை என்று முன்போல் கூறுவதில்லை. இடத்திற்கேற்பப் பொருளிற் கேற்ப எம்மாதிரிக் கொள்கைகள் தேவைப்படும் என்றெல்லாம் ஆராய்ந்து, இதுதான் சரி, இதுதான் தவறு என்று கூற இயலுவதில்லை. இன்று நம் நாட்டிலுள்ள நிலைமையிலிருந்து நோக்கின் அநேகப் பிரச்சினைகள், எடுத்துக்காட்டாக நவீன பெரிய தொழில்கள், தொழிலாளி முதலாளி உறவுகள், போக்குவரத்து,

* நாம் 'மேனாட்டுப் பொருளாதாரம்.' எனக் கூறுவது சரியே. இதை உருவாக்கியவர்கள் மேனாட்டுச் சிந்தனையாளர்கள் (அமெரிக்கர் உள்பட). இதில் இந்தியருக்குப் பங்கில்லை; எந்த இந்தியச் சிந்தனையாளரும் இதில் ஈடுபடவில்லை.

உலக வியாபாரம், வேலையின்மை, நாணயச் செலாவணி, நிதி, வரிவிதிப்பு ஆகியவை மேனாட்டுப் பொருளாதாரத்தைப் போன்றுள்ளன.

காலப் போக்கில், புதுமைகளை ஏற்றுக்கொள்வதில் முன்னேறும்போது, நம்முடைய நாட்டுப் பொருளாதாரம் மேன்மேலும் மேனாட்டுத் தோற்றத்தைப் பெறுகிறது.‡ அண்மையில் பொருளியலார்கள் வளர்ச்சியடையாத நாடுகளின் பொருளியல் பிரச்சினைகளை நன்கு ஆராய்ந்து அதன் முடிவுகளை நடைமுறைப் பொருளாதாரக் கோட்பாடுகளின் ஒரு பகுதியாகச் சேர்த்துள்ளனர். அவை நமக்கு நன்கு பயன்படுகின்றன. பொருளாதாரக் கோட்பாடு, குறிப்பிட்ட நிகழ்ச்சிகளைப் பற்றிய முக்கியக் கேள்விகளைப் போடவும், அந் நிகழ்ச்சிகளை நன்கு ஆய்ந்து அவைகளினின்றும் சரியான முடிவுகளைப் பெறவும் உதவுகின்ற ஒரு சிறந்த கருவி என்று இப்போது கருதப்படுகிறது: (ஜே. எம். கேயின்ஸ்)

‡ நவீன பொருளாதாரக் கோட்பாட்டின் சில முக்கியப் பகுதிகளை விளக்குவதற்கு இந்திய எடுத்துக்காட்டுகள் பெருமளவில் பயன்படுகின்றன என்ற செய்தி நம்முடைய பொருளாதார வாழ்க்கை மேனாடுகளைப் போன்றுள்ளது என்பதைக் காட்டுகின்றது.

திட்டக் கமிஷன் பயிற்சி பெற்ற நிர்வாக அலுவலர்களைத் தேர்ந்தெடுக்க நடைமுறையிலுள்ள ஏற்பாடுகளுடன் சேர்ப்பதற்குக் கொடுத்த திட்டத்தில், நம்முடைய பிரச்சினைகளைக் கையாளுவதில் பொருளாதாரக் கோட்பாட்டைப் பயன்படுத்துவதைப் பாராட்டியுள்ளது. உயர்ந்த கல்வி அல்லது பொருளாதாரத் துறையில் சிறந்த பயிற்சியுடையவர்களையே தேர்ந்தெடுக்கவேண்டும் என்று சிபாரிசு செய்தது (முதல் ஐந்தாண்டுத் திட்டம்: பக்கம் 129). நம் அரசியல் தலைவர்களும் கொள்கைகளை உருவாக்குபவர்களும் பொருளாதாரக் கோட்பாட்டின் அடிப்படைகளை அறிந்திருப்பது நலம். அவர்கள் ஒழுங்கற்ற முறையிலும் தர்க்க ரீதிக்குப் புறம்பான வகையிலும், தெளிவற்ற முறையிலும் மறைபொருளாகவும் பொது மேடைகளில் பேசுவது நாட்டிற்கே தீங்கிழைப்பதாகும்.

நவீன பொருளாதாரக் கோட்பாடு இந்திய அரசியல்வாதிக்கும் மாணவனுக்கும் மிகவும் பயன தருவதாகும். இச் சூழ்நிலையில் எனடேயின் போக்கு சரியான தென்றோ பொருத்தமான தென்றோ கூறமுடியாது. ஒவ்வொரு பிரச்சினையின் மீதும் எடுக்கப்பட்ட பொருளாதாரக் கோட்பாட்டு முடிவுகள் சில எடுகோள்களின் அடிப்படையில் அமைந்தவை. நடைமுறையில் இம்முடிவுகளைப் பயன்படுத்துவதால், இவ் வெடுகோள்களும் அவற்றினின்று பெறப்பட்ட முடிவுகளும் எந்த அளவுக்குச் செல்லத் தக்கவையென்று ஆய்ந்து பார்த்தல் ஒரு நல்ல பழக்கமாகும். இந்திய நடைமுறைக் கொள்கைகளைப்பற்றி வெளியிடங்களிலிருந்து வரும் அறிவுரைகள் சார்பெண்ணங்களால் அறிந்தோ அறியாமலோ களங்கப்படுத்தப்பட்டவைகளாக விருப்பதால், அவ் வறிவுரைகள் உண்மையிலேயே நாட்டிற்கு நலந்தருபவைகளா என்பதை நன்கு ஆராயவேண்டும்.

# 2. நில அமைப்பும் இயற்கை வசதியும்

## 1. பரப்பும் நில அமைப்பும்*

ஆசியாக் கண்டத்திலிருந்து வெளியே கடலை நோக்கி நீட்டிக் கொண்டுள்ள கோணலான தீபகற்பங்கள் மூன்றில் நடு மையமாய் உள்ளது இந்தியா. வடக்குப் பகுதியில் இமய மலையாலும், முப்புற மும் கடல்களாலும் சூழப்பட்டு, வங்காள விரிகுடா, அரபிக் கடல் இவைகளுக்கு நடுவே, இந்துமகா சமுத்திரத்தில் தெற்கே வரவரக் குறுகிவிடுகின்றது. குமரிமுனை தெற்குக் கோடியில் 8°5" அக்ஷ ரேகையில் அமைந்துள்ளது.

இந்திய யூனியனின் பரப்பளவு 12,69,640 சதுர மைல்கள். இதில் புதியதாகச் சேர்க்கப்பட்ட 92,780 சதுர மைல் பரப்புள்ள ஜம்மு-காஷ்மீர் இராச்சியமும், ஆந்திரமும் சேர்ந்து 29 இராச்சியங் கள் உள்ளன. அந்தமான் நிக்கோபர் தீவுக் கூட்டங்கள் வங்காள விரிகுடாக் கடலில் உள்ளன. இது 8,200 மைல் நீளமுள்ள நில எல்லையும் 3,500 மைல் நீளமுள்ள கடல் எல்லையும் உடையது. நிலப்பரப்பின் அளவில் நோக்கின், உலகின் 7ஆவது பெரிய நாடு என்றும், இங்கிலாந்தைப்போல் 13 மடங்கு அதிகமும், ஜப்பானைப் போன்று 8 மடங்கு அதிகப் பரப்புமுள்ள நாடு. இது கனடாவில் மூன்றில் ஒரு பங்கு; ரஷ்யாவில் 7-ல் ஒரு பங்கு; உலக நடுக் கோட்டின் வடக்கில் 8°-லிருந்து 37° வரை பரந்துகிடக்கின்றது. தீர்க்க ரேகைகள் 68° முதல் 97° கிழக்கிலும் உள்ளது. தென் வட லாக இதன் தூரம் 2,000 மைல்கள்; கிழக்கு மேற்காக 1,700 மைல்கள்.

## 2. முக்கியப் பகுதிகள்

நன்கு விளக்கம் கொடுக்கப்பட்டதும், தனியே அமைந் துள்ளதுமான மூன்று பகுதிகளாவன: (i) பெரு மலைப்பகுதியான

* *இந்தியா, 1955—பக். 1—2.*

இமயமலைப் பிரிவு, (ii) தீபகற்பத்திலுள்ள பீடபூமிப் பகுதி (iii) இந்து - கங்கை தாழ்ந்த சமவெளி. இமயமலைத் தொடர் மூன்று அடுத்துச்செல்லும் மலைத் தொடர்கள். இவற்றிற்கிடையே பீடபூமிகளும் காஷ்மீர், குளு போன்ற கண்கவர் இயற்கை வனப்புப் பொருந்திய பகுதிகளும் உள. இம் மலைத்தொடரில் உலகிலேயே மாபெரு முகடுகளாக உள்ளவை காணப்படுகின்றன. பாமீர் முடிச்சிலிருந்து அஸ்ஸாம் எல்லை வரை இம் மலைச் சுவர் 1,500 மைல் நீளமுள்ளது. கிழக்கில் இந்தியாவுக்கும் பர்மாவுக்கும் இடையில் உயரமற்ற மலைச் சரிவுகள் பல பெயர்களினுல் அழைக்கப்பட்டு, இமய மலை இந்தியாவின் தட்பவெப்ப நிலைக்குச் சாதகமாயும் இந்தியாவைப் பிற நாடுகளிலிருந்து பிரித்தும் அதன் பொருளாதார நிலையைச் செம்மையாக்கவும் உதவுகிறது. மூன்று பெரு நதிகள் இந்த மலையினின்று உற்பத்தியாகின்றன. அவை களாவன : சிந்து, கங்கை, பிரம்மபுத்திரா. இவை சமவெளியில் ஓடிக் கடலில் கலக்கின்றன. வரும்பொழுது அவைகள் நல்ல வண்டல் மண்ணைக் கொண்டுவந்து, சமவெளியில் பரப்பி, அவற்றை நல்ல செழிப்புள்ள நிலங்களுக்கு அடிகோலியாக விளங்கிச் சம தரை விவசாயத்தை ஏற்படுத்துகின்றன. இம்முறையான விவசாயம் உலகத்தில் ஒன்ருகும். இமயமலை இந்தியாவிற்குப் பாத்தியமானது போன்றே திபேத் நாட்டிற்கும் சொந்தமுண்டு. ஆயினும் இதில் தோன்றும் நதிகள் அனைத்தும் இந்தியப் பரப்பிற்கே வந்து இலாபத்தைத் தருகின்றன.*

1,500 முதல் 4,000 அடி உயரம் உள்ள மலைகளால் சிந்து, கங்கைச் சமவெளி முக்கோண வடிவம் உள்ள தென்னிந்திய தீபகற்பத்தைப் பிரிக்கிறது. அவற்றில் பெயர் பெற்ற மலைகளின் பெயர் வருமாறு: ஆரவல்லி, விந்தியா, சாத்பூரா, மெய்கால், அஜந்தா. இத் தீபகற்பத்தின் ஒரு பக்கம் 1,500 அடிக்கு மேல் உயரமுள்ள கிழக்குத் தொடர்ச்சி மலைகளால் அடைக்கப்பட்டும் இன்னொரு பக்கத்தில் 3,000 அடி உயரமுள்ள மேற்குத் தொடர்ச்சி மலைகளால் அடைக்கப்பட்டும் இருக்கிறது. சிற்சில விடங்களில் இம்மலைத் தொடரில் 9,000 அடி உயரமுள்ள முகடுகள் உள்ளன. உள் நாட்டுப் பீடபூமிப் பிரதேசம் சமன் அற்றும் 4,000 அடி உயரமுள்ளதாகவும் சிலவிடங்களில் உள்ளன. எடுத்துக்காட்டாக நீலகிரியையும் ஏலக்காய் மலையையும் கொள்ளலாம். இப் பீடபூமியில் நர்மதை, தபதி நதிகள் பாய்ந்து அரபிக் கடலில்

* கிங்ஸ்லி டேவிஸ் எழுதிய 'இந்தியாவிலும் பாகிஸ்தானத்திலும் உள்ள மக்கள்தொகை' பக். 9. இதில அவர் கேமரன் மாரிஸன் எழுதிய 'இந்தியப் புதும் புவியியலும் இலங்கையும்' என்பதில் புதிய நில நூலைக் குறிப்பிடுகிருர்.

விழுகின்றன. மகாநதி, கோதாவரி, கிருஷ்ணு, காவிரி முதலியவை கள் வங்காள விரிகுடாக் கடலில் சங்கமம் ஆகின்றன.

சிந்து கங்கைச் சமவெளி இமயமலைத் தொடர்க்கும் தெற்குப் பீடபூமிக்கும் இடையில் சுமார் 1,500 மைல்கள் வரை கிழக்குப் பாகிஸ்தானத்தின் மேற்குக் கரையோரமும், மேற்குப் பாகிஸ் தானத்தின் கிழக்குக் கரையோரமும் பரவி இருக்கிறது. கங்கை, யமுனை, கோக்ரா, கண்டகி, கோமதி நதிகள் இதில் பாய்கின்றன. பிரமபுத்திரா நதி இமயமலைக் கப்பால் உற்பத்தியாகி அதன் கீழ்க் கோடியில் திரும்பி, இந்தியாவிற்குள் பிரவேசிக்கிறது; அஸ்ஸாம், கிழக்கு வங்காளம் வழியாகப் பாய்ந்து பின்னர்க் கங்கையுடன் கலந்து, பின்னர் வங்காள விரிகுடாக் கடலில் விழுகிறது. ராவி, பியாஸ், சட்லெஜ் என்ற நதிகள் கீழ்ப் பஞ்சாபில் பாய்கின்றன.

### 3. தட்பவெப்ப நிலை

இந்நாடு பருவமழைகொண்ட வெப்பமண்டலத்தில் உள்ளது. ஆயினும் உள்ளூர் நிலைமையில் தட்பவெப்ப நிலைக்கு அனு சரித்து மாறுபாடுகள் தோன்றலாம். நாடு முழுமையும் காலா காலத்தில் வெய்யில், குளிர், மழை மாறி மாறி அடுத்து அடுத்து வரும். அக் காலங்கள் வருமாறு: (i) அக்டோபர் மாதம் முதல் பிப்ரவரி மாதம் வரை உள்ள வாடைக் காலம், (ii) மார்ச் மாதம் முதல் ஜூன் மாதம் வரை உள்ள வெப்ப காலம், (iii) ஜூன் மாதம் முதல் அக்டோபர் மாதம் வரை உள்ள மாரிக்காலம்.

வடகிழக்குப் பருவக் காற்றுக் காலத்தைக் கீழ்க்கண்டவாறு குறிக்கலாம் : (i) குளிர்கால மெனப்படுவது ஜனவரி முதல் பிப்ரவரி வரை (ii) மார்ச் மீ" முதல் ஜூன் மீ" வரை வெப்ப காலம். தென்மேற்குப் பருவக்காற்று (i) ஜூன் மீ" முதல் நடு செப்டம்பர் மீ" வரையுள்ள மாரிக்காலம்; (ii) நடு செப்டம்பர் மீ" முதல் டிசம்பர் மீ" வரை திரும்பும் பருவமழை. வாடைக் காலத்திற்குத் தக்க எடுத்துக்காட்டாகிய ஜனவரி மீ"-த்தில் இந்தி யப் பகுதிகளில் வடக்கு முதல் தெற்கு வரை வெப்ப நிலையில் அதிக ஏற்றத் தாழ்வுகள் காணலாம். பகல் நேரம் சற்று மிதச் சூடாகவும், இரவு குளிராகவும்இருக்கும் பஞ்சாப் பகுதிகளில் பகல் சூடு 55° பாரன்ஹீட்டும், கங்கைச் சமவெளியில் 60° பாரன் ஹீட்டும், சென்னையில் 75° பாரன்ஹீட்டுச்சூடும் இருக்கும். ஏப்ரல், மே மாதங்களில் சூரியன் செங்குத்தாக உள்ளபோது கடும் சூடான நிலைமையைக் காணலாம். மே மீ" மேற்கிந்தியாவில் சராசரி வெப்ப நிலை 100° பாரன்ஹீட்டுக்குக் குறைவதில்லை. கங்கைச் சமவெளியில் 85° பாரன்ஹீட்டும் மாரியில் தினவியாப்தி கூடுத

லாகவும் உள்ளது. பருவ மழை ஜூன் மீ" நடுவில் திடீரென வெடித்துப் பெரும் இடி மின்னலுடன் தோன்றுகிறது. இந்தியா வின் அதிகப்படியான பகுதிகளில் தென்மேற்குப் பருவக் காற்றால் மழையைக் கொடுக்கிறது. இங்கு ஜூன் மீ" முதல் செப்டம்பர் மீ" வரை மழைபெய்கிறது. சென்னைக் கடற்கரை ஒழிய இதரப் பகுதி கள் (90 சதவீதம்) தென்மேற்குப் பருவக் காற்றால்தான் மழை பெறுகிறது. வடகிழக்குப் பருவக் காற்றால் சென்னைக்கும் திருவாங் கூர் கொச்சிக்கும் மழை ஏற்படுகின்றது.

சில குறிப்பிட்ட காலங்களில்தான் மழை பெய்கிறது. அவை கள் பெரு வெள்ளம்போல் கரை புரண்டு ஓடி, நல்ல வண்டல் மண் உள்ளதையும் கொண்டுபோய் விடுகிறது. இந்நாடு விவசாயத் தில் பெரிதும் ஈடுபட்ட நாடு. விசித்திரமான பருவ மழையை எதிர்நோக்கியிருக்கவேண்டியிருப்பதால் நம் நாட்டுப் பொருள் நிலைமை மிகவும் சீர்கேடான முறையில் உள்ளது.

### 4. விவசாயத்திற்கான நிலம்

பெய்யும் மழையைப் பொறுத்தும் ஆவியாதலைப் பொறுத்தும் இந்தியாவில் உள்ள விவசாயத்திற்கு உரிய நிலங்களை மூன்று வகைகளாகப் பிரிக்கலாம்: (i) ஆண்டு முழுமைக்கும் பெய்யும் மழை அளவுக்கு மீறிப் பெய்து ஆவியாக விடாது. அதன் கார ணம் நிலத்திலுள்ள வேதிப் பொருள்களாலான உப்புச் சத்துகள் வெள்ளத்தில் அடித்துக்கொண்டு போகப்பட்டு, கடலில்போய் விழுந்து வீணாகிறது. இக் காரணத்தினால் நிலத்தில் வளம் குன்றி, ஒரு தொழிலுக்கும் உபயோகமில்லாமல் போகிறது. இவற்றின் கீழ் வரையறை செய்யப்பட்டவை திருவாங்கூர், அஸ்ஸாம், மேற் குத் தொடர்ச்சி மலையின் சில பகுதிகள், இமயமலைச் சரிவு, பீகார், வங்காளம் முதலியன. (ii) ஆண்டு முழுமையும் பெய்யும் மழை குறைவுபட்டு, ஆவியாதல் அளவிறந்து போகும். நிலங்கள் பெய்யும் மழை சிறிது சிறிதாக இருப்பதால் உடனே ஆவியாக மாறிவிடுகின்றன அல்லது தரை மட்டத்திலேயே உள்ள உப்பு களைக் கரைத்து, மேற்பகுதியை நல்ல உரமாக்குகிறது. அடிப் பகுதிகளில் பலன் ஏதும் ஏற்படுவதில்லை. நீர் உப்புக் கலந்துள்ள தாலால் நிலம் பயிரிடப் பயன்படுவதில்லை. இராஜஸ்தான் பகுதி கள், சௌராஷ்டிரம், உத்தரப் பிரதேசத்தின் சில பகுதிகள் இத்தகையன. (iii) வறண்டதும் ஈரப்பசையும் உள்ள காலங் கள் மாறி மாறி வரும் நிலப்பிரதேசம். அவ்வாறானவை பஞ்சாப், தென்கிழக்கு உத்தரப் பிரதேசம், சென்னை, பம்பாய், மத்திய இந்தியப் பகுதிகள்.

விவசாயக் குழுவினர் வகுத்த முறைக்கேற்ப நிலத்தை (1) வண்டல், (2) கறுப்பு, (3) செம்மண், (4) லேட்டரைட் (Laterite) என்று பாகுபாடு செய்யலாம். முதல் மூன்று வகைகளும் பொட்டாஷ் (Potash) உள்ளதும், சுண்ணும்புச்சத்து(Lime)உள்ளதும் ஆகும். ஆனுல், அவைகளில் இலைமக்கு (humus), பாஸ்பாரிக் அமிலம், நைட்ரஜன் இவைகள் இல்லை. லேட்டரைட் நிலத்தில் இலைமக்கு வேண்டிய அளவு உள்ளது. ஆயினும் வேதிப் பொருள் கொஞ்சம்கூட இல்லை. கங்கை சிந்து நதிச்சமவெளி நல்ல வண்டல் மண் படிந்த பிரதேசம். தீபகற்பத்தைச் சுற்றி வரம்பு போன்றும், வண்டல் மண் பகுதி உள்ளது. ஈரப்பசை உள்ளதும், ஒட்டிக் கொள்ளும் தன்மை படைத்ததுமான கறுப்பு மண் பிரதேசம் தக்கணப் பீடபூமியின் மேற்குப் பகுதியில் உள்ளது. அதனுடைய கிழக்குப் பகுதி லேட்டரைட் மண்ணுல் ஆனது. கிழக்கு மேற்குத் தொடர்ச்சி மலைச் சரிவு, மத்திய இந்தியா, அஸ்ஸாம் பகுதிகளில் லேட்டரைட் மண் காணப்படும்.

## 5. துறைமுகங்களும் கப்பல் தங்குமிடங்களும்

3;500 மைல் நீளமுள்ள கடற்கரை இந்தியாவிற்குள் உள்ளது. விரிகுடாக்களும், வளைகுடாக்களும் இல்லாமையால் பம்பாய், மர்ம கோவா போன்ற இயற்கைத் துறைமுகங்கள் ஒரு சிலதான் உள. மேற்குப் பகுதி மலைகள் நிரம்பியதால் கடற்கரை ஆழமாக உள்ளது. கிழக்குப் பகுதி மணற்பாங்காகவும் ஆழமற்றும் உள்ளது. ஆதலால் கிழக்குப் பகுதிகளில் உள்ள துறைமுகங்களுக்குச் செல்லும் கப்பல் கடற்கரைக்கு வெகு தூரத்திற் கப்பால் நங்கூரம் பாய்ச்சி இருக்கவேண்டி ஏற்படுகிறது. மேற்குப் பகுதிகளிலிருந்து கிழக்குப் பகுதி வரை உள்ள துறைமுகங்கள் வருமாறு : பெடிபந்தர், ஒக்கா, போர்பந்தர், சூரத், பம்பாய், மர்மகோவா, மங்களூர், கள்ளிக்கோட்டை, கொச்சி, ஆலப்புழை, கொல்லம், தூத்துக்குடி, தனுஷ்கோடி, நாகப்பட்டினம், காரைக்கால், கடலூர், புதுச்சேரி, சென்னை, மசூலிப்பட்டினம், காக்கிநாடா, விசாகப்பட்டினம், கல்கத்தா முதலியன. மர்மகோவா துறைமுகம் போர்ச்சுக்கல் தேசத்திற்குட்பட்டது. இதரத் துறைமுகங்கள் இந்திய நாட்டைச் சேர்ந்தன. கட்ச் பிரதேசத்தில் கண்ட்லா என்ற துறைமுகம் கட்டப்பட்டு வருகிறது. கண்ட்லா என்ற வளைகுடாவின் பகுதியில் இது இயற்கைத் துறைமுகமாக அமைந்துள்ளது. நல்ல நங்கூர வசதியும், ஆழமுள்ள விரிகுடாவும் இருப்பதால் பெரிய கப்பல்கள்கூட இங்குத் தங்கலாம். இந்திய சர்க்காரின் போக்குவரத்து இலாகாவினர் இதை 1950 ஆம் ஆண்டு ஏப்ரல் மீ 1உ ஏற்று எடுத்துக்கொண்டு கட்டிவருகின்றனர். கண்ட்லாவிலிருந்து

தீஸா என்ற ஊருக்கு மீட்டர் கேஜ் (Metre gauge) இருப்புப்பாதை ஒன்றை இணைத்து வருகிருர்கள்.

இந்தியாவின் ஐந்து பெரிய துறைமுகங்களில் (கல்கத்தா, பம்பாய், சென்னை, கொச்சி, விசாகப்பட்டினம்) இன்னும் வளர்ச்சிக்கு வேண்டிய இடம் இல்லை. கடல் வழியே நடக்கும் வியாபாரத்திற்கு ஏற்ப வசதிகள் அமையவில்லை. (i) தேசப் பிரிவினை காரணமாகக் கராச்சி பாகிஸ்தானத்தில் போனதால் அந்தப் போக்குவரத்துத் தேவைகளை ஏற்று நடத்தவசதி (ii) இருக்கும் துறை முகங்களில் நவீன இயந்திரங்கள் அமைத்து வசதியுள்ளவைகளாக மாற்றவும் (iii) பெட்ரோலியம் அதிகரிப்புச்செய்ய வசதிகள் செய்வதற்காகவும் வேண்டிய துறைமுகங்களைச் செப்பனிட வேண்டும் எனக் கருதி வருகிருர்கள். முதலாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் கண்ட்லா துறைமுகத்தைக் கட்ட 12 கோடி ரூபாயும், எண்ணெய்ச் சுத்திகரிப்புத் திட்டத்திற்காக 8 கோடியும், செப்பனிடவும், புதியமுறைகளை அமைக்க வேண்டியும் துறைமுக அலுவலகங்களுக்குக் கடனாக ரூ. 12 கோடியும் ஒதுக்கிவைத்துள்ளனர்.

திட்டத்தில் ஒதுக்கி வைக்கப்பட்ட ரூ. 33 கோடியில் 32 கோடி மத்திய சர்க்காருக்கும், 0·26 கோடி A பகுதி இராச்சியங்களுக்கும், 0·63 கோடி B பகுதி இராச்சியங்களுக்கும் கொடுக்கப் பட்டது.

### 6. காடுகள் *

இந்தியக் காடுகள் எல்லா விதமான கச்சாப் பொருள்களையும் கொடுக்கின்றன. குறிப்பாக மரம், மூங்கில், அரக்கு, பிசின், காதா (வீட்டு உபயோகத்திற்கும், தொழிற்சாலைகளுக்கும் உபயோகமுள்ளவை.) காட்டிலுள்ள தொழில்கள் அநேக மக்களுக்கு வேலை கொடுக்கின்றன. நாட்டின் பாதுகாப்பிற்கும் போக்குவரத்திற்குமான சாதனங்கள் காடுகளிலிருந்தே வருகின்றன. இங்கு ஆடு மாடுகள் மேய்ச்சலுக்கு விடப்படுகின்றன. காடுகள் நாட்டின் தட்பவெப்ப நிலையைச் சீராக்கி, மழையைக் கொண்டு வருகின்றன. நீர் விநியோகத்தைச் சீர்படுத்தியும் வெள்ளப் போக்கினைத் தடுத்தும் நிலம் பள்ளமாகி வீணுகிப் போவதையும் தடுக்கின்றன. அவை காற்றின் கடுமையைத் தாக்கி உடைத்தும், பயிர்களைக் காப்பாற்றி, மனிதரையும் மிருகங்களையும் காப்பாற்றி வருகின்றன. நிலப் பாதுகாப்பிற்கும், அதனுடைய வளமையை அதிகரிக்கவும் மேடான வெளிகளை அழிந்துபோகா

* முதல் ஐந்தாண்டுத் திட்டம்; புத்தகம் பக்க எண் 285.

வண்ணம் காக்கவும், காற்றினல் தாழந்த சமவெளிப் பிரதேசங்கள் வறண்டு போகாமலும், நாசமாக்கப்படாமலும் தடுக்க முயலு கின்றன. டல்ஹௌஸி பிரபு காலத்திற்கு முன்புவரை நம் நாட்டில் இருந்த காடுகளை அழித்து வந்தனர். இதன் அவசியத்தை அறிந்து டல்ஹௌஸி, காடுகளை அழிக்காது பாதுகாக்கத் திட்டம் வகுத்தார்; 1864 ஆம் ஆண்டில் தனிப்பட்ட காட்டிலாகா ஒன்றை நிறுவினர்கள். அன்று முதல் முன்னேற்றத் திட்டமமைந்த காட்டுக் கொள்கையை இந்திய அரசினர் கையாள ஆரம்பித்தனர்.

நம் நாட்டின் நிலப்பரப்பில் சற்றேறக்குறைய 22 சதவீதம் ‡ காட்டுப் பிரதேசம். இதர நாடுகளுடன் ஒப்பிடும்போது இது மிகவும் சொற்பமான விகிதம்தான் எனலாம். 1952 ஆம் ஆண்டில் மே மீ 12 ஆம் தேதியில் அரசினர் காட்டுக்கொள்கையைப்பற்றிய தீர்மானம் வருமாறு : ' இந்திய நாடு முழுமையும் அதன் பரப்பில் மூன்றில் ஒரு பங்கு காட்டிலாகா அமைத்துக் காக்கவேண்டும். நிலப்பகுதிகள் வீணுவதைத் தடுக்க வேண்டி இன்சூரன்சு போன்று 60 சதவிகித நிலப்பரப்பு காடாக இருக்கலாம். குறிப் பாக இமயமலைப் பகுதியிலும், தக்கணத்திலும், மலைச்சாரலின் அழி வைக் குறைக்கும் நோக்கத்துடன் காப்பாற்றப்பட வேண்டும். எங்கெல்லாம் சமவெளியில் நில அழிவு அவ்வளவு மோசமாக ஆவதில்லையோ, அங்கெல்லாம் 20 சதவீத அளவில் காடுகள் உற் பத்தி ஆக்கப்பட வேண்டும். விவசாயத்தின் ஈடுபாட்டையும் மனதிலிருத்தியே இந்த 20 சதவீத அளவு தீர்மானம் செய்யவேண் டும். எங்கெல்லாம் விவசாயம் பலன் தரவில்லையோ, அங்கெல்லாம் மரங்களை வளர்த்தும், ஆற்றோரங்களில் மரங்களை வளர்த்தும் விட வேண்டும். தீர்மானத்தில் கண்டிருக்கும் அவர்களுடைய குறிக் கோளுக்கும், நடைமுறையில் திட்டமிடப்பட்ட அமைப்புக் கும் இடையே பெரிய வேறுபாடு உள்ளது. மேலும், தற் போது உள்ள காடுகள் இமய மலை, விந்திய மலை, தக்கணம் இவைகளில்தான் உள்ளன. சிந்து கங்கைச் சமவெளி வெறும் வெற்றிடமாக உள்ளது. இப்போது இயல்பாக உள்ள காடுகளையடுத்துக் காலியிடங்கள் இருந்தால், விவசாயத் தேவை இல்லையெனில், அவற்றில் காட்டை அதிகரிக்க அனுமதி உண்டு. இதற்காகத் திட்டங்கள் வகுத்துள்ளனர். திட்டக் கமிஷன் இந் நாட்டிலுள்ள வெற்றிடங்கள் அனைத்தும் மேற்பார்வையிட்டுச் சீரிய முறையில் உபயோகப்படுத்துவதற் கான இரண்டு முறைகளைப் பரிந்துரைத்துள்ளனர். அவைக ளாவன : (i) ஒவ்வோர் இராச்சியத்துக்கும் காடுகள் அமைய வேண்டிய விகிதம் இவ்வளவு என்று முடிவு செய்யும். முன்னர்,

‡—1955 ஆம் ஆண்டில் இந்தியா—பக்கம் 177.

தேசியத் தேவைகள் இருக்கும் நிலப்பரப்பின் அமைப்பு, இராச்சியத்திற்கு ஏற்ப நிலத் தேவைகள் இவைகளை மத்தியக் காட்டு இலாகா போர்டைக் கலந்தாலோசித்த பின்னரே முடிவு செய்தல் வேண்டும் நிரந்தரமாக விவசாயம் செய்யவேண்டிய அவசியம் நேரிட்டால் அந்த இராச்சியத்தில் வேறு பகுதியில் புதிய காட்டை உண்டுபண்ணி, நடப்பில் உள்ள காட்டை அழிக்கலாம். (ii) களரிடமாகவும் பயனற்றதாகவும் உள்ள நிலப்பரப்பில் புதிய காடுகளை வளர்க்கத்தக்க முயற்சிகள் செய்தல் வேண்டும்.

நிகழ்ச்சி முறையில் முதன்மை இடம்பெற வேண்டியவைகள் விளக்கமாகக் கூறப்பட்டுள்ளன: (i) ஜமீன்தார், ஜாகீர்தாரி ஒழிப்பின் காரணமாகத் தனியார் கையில் இருந்த காடுகளையும் பெரும் பகுதியைச் சூழ்ந்துள்ள பெருங்காடுகளையும் செவ்வனே கண்காணிக்க ஒரு காட்டு நிறுவனத்தைச் சீரிய முறையில் அமைத்தலும், அவ்வாறு அமைத்ததைத் திடப்படுத்துதலும், (ii) யுத்தத்தின் தேவைகளைப் பூர்த்தி செய்வதற்காகத் தற்போதுள்ள காடுகளைச் செம்மைப்படுத்தி, மறுபடியும் பலன் உள்ளனவாகச் செய்தல் (iii) நில அழிவின் ஓட்டத்தைத் தடுக்க வேண்டிப் பெரிய அளவில் காடுகளை அமைக்க முயலுதல், (iv) காடுகளுக்குள் தொடர்பு கொள்ளும் முறைகளை அமைத்தல், (v) கிராமத் தோட்டக்கால் பயிர்களை அமைத்து, கிராமத்திற்கு வேண்டிய எரிபொருள் தேவையை ஈடுபடுத்துதலை இதுகாறும் பழகி இராத மர வகைகளைப் போதிய அளவு பதமாக்கி, ரசாயன முறையில் அவைகளைப் பாடமாக்கி(seasoning)வீடு கட்டுவதற்கு ஏற்ற மரங்களாகத் தயாரிப்பதற்கு வேண்டிய சாளவாய்கள் அமைத்தல்.

திட்டக் கமிஷன் எல்லா இராச்சியங்களிலும் உள்ள காட்டிலாகாக்கள் சீரமைந்த முறையில் மத்தியப் பொறுப்புகளுடன் வேலை செய்ய வேண்டும் எனக் கூறுகிறது. காட்டினைப்பற்றிய ஆராய்ச்சிகள் இந்தியத் தொழில்களுக்குப் பயனளிக்கும் முறையில் கால தாமதமேற்படும். காட்டாராய்ச்சியிலாகா செய்யும் அரிய சேவைகளை மத்தியப் பொதுஜனத் தொடர்பு நல்லுறவு அதிகாரி மூலம் திரைப்பட மூலம் பொதுமக்களுக்கு விளக்கம் செய்தும், அதன் மூலம் தொழிலுக்கு எவ்வாறு பயனுள்ளதென்றும் விளக்கலாம். செய்தித்தாள் உற்பத்திச் சாலைகளுக்கு வேண்டிய மரக்கூழும், நெசவினுக்குகந்த நார் போன்றதும், ரேயன் முதலியவற்றையும் உற்பத்தி செய்தல் வேண்டும் என்று திட்டக்கமிஷன் வற்புறுத்தியுள்ளது.

முதன்மையிடம் பெறவேண்டிய செலவினங்களைக் குறிக்கும் போது திட்டக் கமிஷன் இராச்சியங்கள் செய்யவேண்டிய செல

வினங்களை வருமாறு கூறுகின்றது: மத்திய அரசினர் செய்ய வேண்டிய 2 கோடி ரூபாய்க்கு மேலாகக் காட்டிலாகாவிற்காக 621·3 இலட்ச ரூபாய்; நிர்வாகச் செலவிற்காக 249·4 இலட்சம்; காட்டுத் தொழில்களுக்கு 49·5 இலட்சம்; கல்விப் பயிற்சிக்காக 39·3 இலட்சம்; ஆராய்ச்சித் துறைக்கு 10·0 இலட்சம். காட்டிலாகா வளர்ச்சிக்காக வேண்டி உள்ள திட்டங்களில் தனியார் காடுகளை வளர்க்க உதவி புரியவும், இராச்சிய சர்க்காரில் உள்ள வெற்றிடங்களை மேற்பார்வையிடவும் நில அழிவைத் தடுக்கும் முறைகளுக்காகவும் 39 இலட்சம்; ஊர்ப்புற மரம் நடும் பணிக்காக 29 இலட்சம்; காடுகளுக்குள் தொடர்பு உண்டாக்க 104 இலட்சமும் ஒதுக்கி வைத்துள்ளனர்.

### 7. கனிப்பொருள்கள்

அடிப்படை மூலப் பொருள்களாகிய நிலக்கரி, இரும்புத் தாது தொழில் வளர்ச்சிக்குப் பயனுள்ளதாக அமைந்துள்ளன. செம்பு, வெள்ளீயம், ஈயம், துத்தநாகம், கோபால்ட், மோலிப்டினம், டங்ஸ்டன், ஆன்டிமனி, கந்தகம், பெட்ரோலியம் பாஸ்பேட், பொட்டாஷ், பெல்ட்ஸ்பர், கிராபைட், ஆஸ்பெஸ்டாஸ் (கல் நார்) இவைகள் குறைந்துள்ளன. அலுமினியத் தாது, உலோகக் கற்கள் தேய்ப்புப் பொருள்கள் (Abrasives), சுண்ணும்புக்கல் இவைகள் வேண்டிய அளவு உள்ளன. டைடேனியம், தோரியம், அபிரகம், கிரோமியம், மெக்னீஷியம், பாரிடெஸ், கியாநைட், ஸில்லமநைட் முதலியன போதிய அளவு ரிஸர்வில் உள்ளன.

கொஞ்சகாலங்களுக்கு முன் இந் நாட்டில் எடுக்கப்பட்ட மூலத் தாதுக்கள் ஏற்றுமதி செய்யப்பட்டன. நாட்டின் தொழில் முன்னேற்றத்தில் ஈடுபடவில்லை. யுத்த காலத்திலும், சமாதான நிலைமையிலும் இவை தேவைப்படுதலாலும், எளிதில் தேயக்கூடிய சொத்தானதாலும் இத் தாதுப் பொருள்கள் சம்பந்தமாகச் சீரிய முறையில் திட்டம் வகுத்து, பயனுள்ள முறையில் எடுத்து நடத்தித் தேசிய முன்னேற்றத்திற்குப் பயன்படுத்திக் கொள்ளவேண்டும். அவ்வாறு நடத்த வேண்டிய கொள்கைகளைப்பற்றிய சில விவரங்கள் வருமாறு: (i) மூலப் பொருள்கள் இருக்கும் இடங்களைத் திட்டம் வகுத்துக் கண்டுபிடிக்கச் செய்யவேண்டிய முயற்சிகள்; (ii) தேர்ந்து அனுபவம் பெற்ற தொழில் வல்லுநர்களைக் கொண்டு சுரங்க வேலை செய்தல், தனிப்பட்டதும், குறிப்பிட்டதும் ஆன உயர்ந்த உலோகங்களை வெட்டி எடுத்தலைத் தற்காலம் நிறுத்தி வைத்தல். குப்பை கூளங்கள் கொட்டியுள்ள பொருள்களிலிருந்து உயர்ந்த ரக உலோகங்களைச் சேகரிக்க

ஏற்பாடு செய்தல். அநேக வகையான உலோகங்களின் ஏறிய அளவு இவ்வளவு என்று வறையறுத்துக் கூற, இரும்புத் தாது, மாங்கனீஸ் தாது, கிரோமேட், பாக்ஸைட் இவைகள் எடுக்கப்பட வேண்டிய திட்டத்திற்குத் தவிர அளவு இன்னதென்று மத்திய அரசு முடிவு செய்யவேண்டும்; (iii) கந்தகம், டங்ஸ்டன், வெள்ளீயத் தாது இவைகளின் தேக்கங்கள் எங்குள்ளன என ஆராய்ந்து ஆய்வு செய்ய வேண்டியது; (iv) மட்டரகமான தாதுப் பொருள்கள் எவ்வளவு என்றும், அவைகளைச் சுத்தமாக்கித் தொழிலுக்கு ஏற்ப அமைக்க ஏற்பாடுகள் செய்யவும்; (v) ஏற்று மதிக்குத் தகுதியான பொருள்களைச் செய்வினை முடித்த பண்டங்கள் என்றும் முடியாத பண்டங்கள் என்றும் பகுத்துவிடுதல்; (vi) இந் நாட்டிலும் இதர நாட்டிலும் உள்ள சுரங்கத் தொழிலினைப்பற்றிய புள்ளிவிவரங்களைச் சேகரித்து, சுரங்கத் தொழிலுக்கான மேற் கோள்களைத் தயாரித்தல் முதலியன.

வரும் பத்திகளில் இன்னும் அவசியமான சில தாதுக்களைப் பற்றிய விவரங்கள் கொடுக்கப்பட்டுள்ளன.

### 8. நிலக்கரி

இந்தியாவில் உற்பத்தியாகும் நிலக்கரிகளில் 82 சத வீதம் பீஹாரிலும் மேற்கு வங்காளத்திலும் வெட்டி எடுக்கப்படுகிறது. இதை உற்பத்தி செய்யும் இதர கேந்திரங்கள் மத்தியப் பிரதேசம், ஒரிஸ்ஸா, ஐதராபாத், அஸ்ஸாம் முதலியன. 1932-ல் செலவழிக்கத்தக்க நிலக்கரி எவ்வளவு எனக் கணக்கிட்டபோது 20,000 மிலியன் டன்கள் என்றும், அவற்றில் நல்ல ரசாயன நிலக்கரி 5,000 மிலியன் டன்கள் என்றும் கணக்கிட்டனர். அண்மையில் நடத்திய ஸர்வே பிரகாரம் ரிஸர்வில் கல்கரியாக மாறும் தன்மையுடைய நிலக்கரி 2,000 மிலியன் டன்கள் உள்ளன. சேமித்து வைத்தல், சுத்திகரித்தல், பதப்படுத்தல் (blending) இம் முறைகளைக் கையாண்டால் 1,600 மிலியன் டன் எடையுள்ள நிலக்கரி ரிஸர்வைப் பயனுக்கிக் கொள்ளலாம். 1949-ல் அமைக்கப் பட்ட தனிக் குழுவினரின் பரிந்துரைக் கேற்ப நடைமுறையில் உள்ள கல்கரியாக மாற்றும் தன்மைகள் செம்மையான முறையில் இல்லை என்றும், அளவுச் சீர்அமைத்தல் வேண்டுவதும் இன்றியமையாதது.

கடந்த 30 ஆண்டுகளுக்குள்ளாக நிலக்கரி உற்பத்தி நம் நாட்டில் இரட்டிப்பாகியுள்ளது. 1954ஆம் ஆண்டில் அதன் உற்பத்தி 37 மிலியன் டன். இதன் நுகர்வில் பங்கு

கொண்டுள்ளவர்கள் ரெயில்வே 31 சத வீதம், பொறியியல் தொழில்கள் 14·6 சதவீதம், பருத்தி கம்பளி நெசவாலைகள் 5·5 சதவீதம், எஃகு தொழிலில் 40 சத வீதமும், கனிப்பொருளான உலோகப் பற்றுள்ள நிலக்கரியில் 21 சத வீதமும் ரெயில்வேயினால் எடுத்துக்கொள்ளப்படுகிறது. மற்றப் பகுதி கப்பலுக்கும், இதரத் தொழில்களுக்கும் பயன்படுகின்றன. இரும்பு எஃகு தொழிலுக்கான நிலக்கரியை அதற்கென்றே நிறுத்திக்கொண்டு, இதரத் தொழில்களுக்குச் சாதாரண நிலக்கரியைக் கொடுக்க முயல வேண்டும். இம் முறையில் மாற்றம் செய்ய விழையும்போது அந்தத் தொழில்களுக்குத் தடங்கல் ஏற்படாது நடந்து வரவேண்டும். (i) நில அமைப்பின்படி மண் ஆராய்ச்சி சுரங்க இலாகாவுடன் தொடர்ந்து எடுத்து நடத்தி நிலக்கரி உள்ள எல்லாச் சுரங்கப் பகுதிகளையும் படம் எழுதுதல் வேண்டும். (ii) பீகார் வங்காள நிலக்கரிச் சுரங்கங்களை யடுத்துள்ள மணல் பகுதிகள் இவ்வளவு எவ்விடத்தில் சேகரம் செய்யமுடிவுமென்ற விவரத்திற்கான புள்ளி விவரம் தயாரிப்பது. (iii) கலோரி மதிப்பு, சூட்டுநிலை, தரம், குணம், கல்கரியாக மாற்றப்பெறும் அளவு இவைகளைத் தராதரமாக அமைத்தல். (iv) உற்பத்தி வழங்கு முறைகளைச் சீர்படுத்தி, விஞ்ஞான முறையில் அவற்றை அனுப்பியும், கோக் என்ற கல்கரியாகத் தருதலுக்குப் பதிலாக நல்ல நிலக்கரியைத் தருதல்; உற்பத்தியை அதிகரித்து இருக்கும் சுரங்கங்களின் உற்பத்தியைப் பெருக்க முயலுதல். (v) எரி பொருளாராய்ச்சி நிலையங்களில் கரியாக்கும் முறை (carbonization), கழுவுதல் (washing), பதப்படுத்தல் (blending), கந்தக நீக்கம் (de-sulphurization) இம் முறைகளைப்பற்றிய ஆராய்ச்சிகளை நிகழ்த்தவேண்டும்.

நிலக்கரிச் சுரங்கப் பாதுகாப்பும், சேமமும் என்ற 1952 ஆம் ஆண்டின் சட்டப்படி, சேமமுறைகளைக் கையாளவேண்டும் என்றும், அதற்காக வரி தண்டுதலும் கல்கரியாக மாற்றும் நிலக்கரியின்மீதும் வரி தண்டுதலும் அனுமதிக்கப்பட்டு இருக்கிறது. நிலக்கரி போர்டு ஒன்றை நிறுவியுள்ளனர். அதன்படி தீர்வை வசூலிக்கப்படுகிறது.

## 9. இரும்புத் தாது

பீகார், ஒரிஸ்ஸா, மத்தியப் பிரதேசம், மதராஸ், பம்பாய், கோவா, மைசூர் இவைகளில் நல்ல உயர்ந்த ரக இரும்புத் தாது கிடைக்கிறது. மேலெழுந்த வாரியாகக் கணக்கெடுக்கும் பட்சத்தில் 10,000 மிலியன் டன் ரிஸர்வில் நல்ல அயத் தாது உள்ளதெனத் தெரிகிறது. பெரிய இரும்பு எஃகு தொழிற்சாலை நடத்துபவர்கள் தங்கள்பால் உள்ள விவரங்களைக் கொடுப்

பது ஒன்றுதான் அறிகிறோம். இதரவிடங்களிலிருந்து ஒரு தகவலும் கிடைப்பதில்லை. திட்டத்தில் எங்கெங்கு அயத் தாது உள்ளது என்று கீழ்க்கண்ட இடங்களைக் குறிக்கிறது. ஒரிஸ்ஸா (போனும், கெவுன்ஜார்), மத்தியப் பிரதேசம் (துருக், சந்தா, பஸ்டார்), பம்பாய் (ரத்னகிரி, கோவா), சென்னை (ஸாண்டூர்.)

ஓர் ஆண்டில் அயத் தாது உற்பத்தி கடந்த சில வருடங்களாக 2 முதல் 3 மிலியன் டன்கள் ஆகியுள்ளன. இரும்பு எஃகு உற்பத்திக்கென 1·3 மிலியன் டன் இரும்புத் தாதும், 1·5 மிலியன் டன் நிலக்கரியும், 0·03 மிலியன் டன் மாங்கனீஸ் தாதும், 0·4 மிலியன் டன் சுண்ணும்புக் கல்லும் தேவைப்படுகின்றன என்று வரையறுத்துள்ளனர்.

கொஞ்ச காலமாகவே அயத் தாது ஏற்றுமதி அதிகரித்துக் கொண்டே வருகிறது. பன்றியிரும்பு (Pig-iron) உற்பத்தித் திட்டம் ஒன்றை ஏற்படுத்தி உள்ளனர். அதன் நிமித்தம் இறக்குமதியைத் தடுத்து, முடிந்தால் பிற நாடுகளுக்கு நாமே ஏற்றுமதிகூடச் செய்யலாம்.

## 10. மாங்கனீஸ் தாது

உலகில் இந்தத் தாது உற்பத்தியாளர்களில் இந்தியாவும் பெரிய இடத்தைப் பெற்றிருக்கிறது. முக்கியமாக மாங்கனீஸ் தாது மத்தியப் பிரதேசத்திலுள்ள சுரங்கங்களில் மிகுதியாகக் கிடைக்கிறது. மேலெழுந்தவாரியான மதிப்பீட்டின்படி நல்ல உயர்ந்த ரக மாங்கனீஸ் தாது 15 முதல் 20 மிலியன் டன்கள் உள்ளன என்றும், இதைவிட மட்டமான தாது இதைப்போல் மூன்று மடங்கு உள்ளன என்றும் கூறுகிறார்கள்.

சென்று நாற்பது ஆண்டுகளாக இதன் உற்பத்தியளவு 6 லட்சம் டன்கள்தாம் இவையனைத்தும் ஏற்றுமதியாக்கப்பட்டன. இப்பொழுதும்கூட அனைத்தும் ஏற்றுமதியாகின்றன. உள்ளூரில் இது உபயோகப்படுவதில்லை. குறிப்பாக எஃகுத் தொழிலில் இது பயன்படுகிறது. உயர்ந்த ரகத்தின் இருப்பு மிகவும் குறைவான காரணத்தால் பாதுகாப்பு முறைகளைக் கையாளவேண்டும். ஒரிஸ்ஸா, பம்பாய், சென்னை, மத்தியப்பிரதேசம், மைசூர் இவ்விடங்களில் உள்ள ரிஸர்வு இருப்பை ஆராயத் திட்டம் வகுத்துள்ளனர். இதன் முக்கிய கருத்து என்னவெனில் தாதுவைப் பெர்ரோ மாங்கனீஸ் (ferro manganese) ஆக மாற்றி ஏற்றுமதி செய்ய வேண்டியதுதான்.

## 11. க்ரோமைட் (Chromite)

சாதாரண அளவில்தான் இந்தத் தாது உள்ளது. இது உள்ள இடங்கள் முறையே, பீகார், மைசூர், பம்பாய், சென்னை, ஒரிஸ்ஸா. இவை மிகவும் உயர்ந்த ரகமாகையால், பெரும்பாலும் ஏற்றுமதி செய்யப்பட்டு வந்தன. 1948-ல் உயர்ந்த ரக க்ரோமைட் 10,000 டன்னுக அளவு செய்யப்பட்டது. பின்னர் 1951-ல் ஜூனுக்குப் பிறகு ஏற்றுமதி தடை செய்யப்பட்டது. திட்டத்தில் செய்யப்பட்ட பரிந்துரைகள் இந்நாட்டின்கண் உள்ள தாதுவின் இருப்பிடத்தினைக் குறிக்கும் படங்கள் எழுதி, தேசீய உலோக சம்பந்தமான ஆய்வுக்கூட (National Metallurgical Laboratory) சார்பில் சர்வே நில நூலாராய்ச்சியாள ருடன் நடத்தி மட்டரகமான க்ரோமைட்டைப் பயன்படுத்தும் முறைகளையும் சுரங்க இலாகாவுடன் செய்ய வேண்டியது.

## 12. இரும்பற்ற இதர உலோகங்கள்

முன்னர்க் கூறியதுபோல், இந்தியாவில் தாமிரம், ஈயம், துத்தநாகம் இவைகள் மிகக் குறைந்த அளவில் உள; வெள்ளீயம் இல்லையெனலாம். பீகாரில் உள்ள ஸிங்புமில் தாமிரம் கிடைக் கிறது. இங்கு 6,000 முதல் 6,600 டன்கள் வரை கிடைக்கிறது. உள்நாட்டுத் தேவைக்கே போதவில்லை. ஈயமும் துத்தநாகமும் ஸாவார் (ராஜஸ்தானம்) என்ற விடத்தில் கிடைக்கின்றன. இங்கு ஈயவேலை மட்டும் கவனிக்கப்படுகிறது. துத்தநாகத்தைச் சுத்திகரிப்பு வேலை செய்யப்படவில்லை. மேலே கூறிய எல்லா உலோகங்களும் எங்கெங்குக் கிடைக்கின்றன என்று ஆய்வு செய்தல் இன்றியமையாதது என்று திட்டம் உருவாகிறது.

## 13. பாக்ஸைட் (Bauxite)

பீகார், மத்தியப் பிரதேசம், பம்பாய் இந்த இராச்சியங்களில் கிடைக்கின்றது. 250 மிலியன் டன் மொத்த அளவில், உயர்ந்த ரகம் 35 மிலியன் டன் உள்ளது. 1940-44-ல் 15,000 டன் உற்பத்தி யிலிருந்து பெருகி, 1951-ல் 67,000 டன்களாயின. அலுமினிய உற்பத்தி பெருகித் திட்டத்தில் கண்ட தேவை 45,000 டன் களாக 1955-56-ல் ஏற்படும். இங்குள்ள பாக்ஸைட் இருப்பின் குணம், எடை இவைகளை ஆராயத் தொடங்கியுள்ளனர்.

## 14. மாக்னஸைட் (Magnesite)

சென்னை இராச்சியத்திலுள்ள சேலத்திலும் மைசூர் இராச்சியத் திலும் பெருமளவில் உள்ளது. சேலத்தில் ரிஸர்வில் மட்டும்

90 மிலியன் டன் உள்ளது. குரோமைட், மாக்னஸைட் கற்களை உலைக்கற்களாகப் பயன்படுத்த ஆராய்ச்சி நடத்தி வரத் திட்டத்தில் பரிந்துரைத்துள்ளனர்.

**15. மைக்கா** (Mica)

உலகின் தேவைகளில் 80 சதவீத அளவில் கொடுக்க வல்ல உயர்ந்தரக மைக்கா அல்லது காக்காப் பொன் நம் நாட்டில் உற்பத்தியாகிறது. இவை பீகார், ராஜஸ்தான், சென்னை முதலிய பிரதேசங்களில் கிடைக்கின்றன. இந்தியாவின் உற்பத்தியில் 60 சதவீதம் பீகாரிலிருந்து கிடைக்கிறது. பலர் பத்தாண்டுகளுக்கு வேண்டிய இருப்பு ரிஸர்வில் இருப்பதாகக் கணக்கிட்டிருக்கின்றனர். கழிந்த 10 ஆண்டுகளில் உற்பத்தி இரட்டிப்பாகி யிருக்கிறது. ஆண்டுதோறும் சராசரி ஏற்றுமதி 1940—47-ல் 1·5 கோடியிலிருந்து 1950-51-ல் 9·5 கோடி ரூபாய் ஆகியிருக்கிறது. ஏற்றுமதிக்கு உகந்ததானதால், இவற்றை வெட்டி எடுத்துப் பதம் செய்து வருகிறார்கள். உற்பத்தி பெருகினாலும்கூடப் பழங்கால முறையையே கையாண்டு வருகிறார்கள் சிறிய சிறிய சுரங்கங்களிலிருந்து வெட்டி எடுக்கின்றனர். தொழில் தெரிந்த நிர்வாகிகள் இல்லாமையால், மேற்பார்வைக் குறைவினால் பெருமளவு சேதமாகின்றது. ஏற்றுமதித் துறையில் தரப்படுத்துதலும் ரகவாரியாக அமைத்தலும் இன்றியமையாதவை. உயர்ந்த ரகமெனப்படுவது அனுபவத்தின் மூலம் ஆய்வுபடுத்திக் கூறுவதாகும். இந்தியத் தர நிறுவனம் (Indian Standards Institution) இம்மாதிரி மனோவேற்றுமைகளைக் கையாளாது விஞ்ஞான முறையில் தரம் பிரிக்க ஒரு முறையை வகுத்துள்ளது. இதை உலக முறையில் கொள்ளலாம். திட்டத்தின் பரிந்துரைகள் வருமாறு: (i) பீகார் சென்னையில் உள்ள இருப்பினைப் படமெழுதி அறிந்துகொள்ளுதல், ராஜஸ்தானத்தில் நிலப்பண்பு ஆராய்ச்சி நடத்தல், (ii) மைக்காவைப் பொடி செய்தலிலும் மைக்கனைட் தயாரித்தலிலும் தேசீய பௌதீக ஆய்கூட (National Physical Laboratory)த் துணைகொண்டும், சுரங்க இலாகாவின் மேற்பார்வையில் மைக்காவைத் தரம்படுத்தச் செய்தல், (iii) கூட்டுறவு மூலமாகச் சிறிய உற்பத்தியாளரை ஒன்று கூட்டுதல், (iv) மத்திய விற்பனை போர்டு ஒன்றை நிறுவி, இவர்களது மைக்காவை விற்பனைக்கு வழி செய்தல்.

**16. ஜிப்ஸம்** (Gypsum)

சிந்திரியில் உரத் தொழிற்சாலை தோன்றியவுடன் ஜிப்ஸத்தின் (gypsum) தேவை அதிகரிக்க ஆரம்பித்தது.

வேண்டிய அளவில் ராஜஸ்தானத்திலும், தென்னிந்தியாவிலும் இது கிடைக்கிறது. வடமேற்குப் பகுதிகளில் சொற்ப அளவில் கிடைக்குமா என்று ஆராய வேண்டியது இன்றியமையாதது. இருப்பில் உள்ள மதிப்பீடு 67 மிலியன் டன்; அதில் 50 மிலியன் டன்கள் ராஜஸ்தானத்தில் உள்ளது. 1945–48-ல், 65,000 டன் உற்பத்தியிலிருந்து 1950-ல் 2,06,000 டன்னாக அதிகரித்தது. ஆயினும், ஆண்டிற்கு இதன் நுகர்வு 8,70,000 டன் ஆகக்கூடும். உரத்தொழிற்சாலை சிமெண்டுத் தொழிற்சாலைகளுக்கு இவை தேவைப்படுகின்றன. உப்பளங்களிலிருந்து ஜிப்ஸத்தை எடுக்கும் முறைகளுக்கான ஆராய்ச்சி நடத்தும்படி திட்டம் கூறுகிறது.

## 17. கந்தகம் (Sulphur)

அதிக அளவில் கந்தகம் இந்தியாவில் இல்லை. இது பைரைட் (pyrite) உருவில் காஷ்மீர், சிம்லா, அம்ஜார் (பீகாரில்), பம்பாய், மைசூர் முதலிய இடங்களில் கிடைக்கின்றன. நிலக்கரியுடன் அஸ்ஸாம் விந்தியப் பிரதேசத்திலும் கிடைக்கின்றன.

தற்காலத்தில் நம் நாட்டில் ஆண்டுதோறும் 65,000 டன்கள் கந்தகம் தேவை. ஆயினும் 50,000 டன்களே உபயோகிக்கப்படுகின்றன. 1948-ல் 38,300 டன்களிலிருந்து 1950-ல் 55 ஆயிரம் டன்களாக இறக்குமதி அதிகரித்தது. அதன் மதிப்பு 61·65 இலட்ச ரூபாயிலிருந்து 110 இலட்ச ரூபாயாக அதிகரித்தது. 1955-56-ல் கந்தக அமிலம் (sulphuric acid) உற்பத்திக்காக 85,000 டன்கள் தேவைப்பட்டன. கந்தகம் உள்ள நிலக்கரியிலிருந்தும் தாமிரத்திலும் ஈயத்திலும் பொதிந்துள்ள கந்தகத்தைத் தக்க முறையில் அதிகச் செலவின்றி எவ்வாறு பிரித்தெடுக்கலாம் என்பதைப்பற்றித் தக்க ஆராய்ச்சிகள் நடத்தத் திட்டம் பரிந்துரைக்கிறது. எங்கெங்கு முடியுமோ அங்கெல்லாம் கந்தகத்திற்குப் பதிலாக அதை ஈடு செய்யக் கூடியதும் எளிதில் கிடைக்கக் கூடியதுமான தாதுப்பொருள் கிடைத்தால், கந்தகத்தை நீக்கி விடலாம் என்று கூறுகிறது.

## 18. கனிப்பொருள் வளர்ச்சிக்கான நிகழ்ச்சித் திட்டம்

இந்திய நிலவாராய்ச்சிக் குழுவினராலும் (Geological Survey of India) சுரங்க போர்டினராலும் தேசீய உலோக ஆய்கூட ஆராய்ச்சியாளர்களாலும் (National Metellurgical Laboratory) மத்திய, கண்ணாடி பீங்கான் ஆராய்ச்சிக் கூடத்தாலும் (Central Glass and Ceramic Research Institute) எரிபொருள் ஆராய்ச்சிக் கூடம் (Fuel Research Institute) இவைகளால் காலாகாலத்தில்

ஆராய்ச்சிகள் நடத்தத் திட்டத்தில் குறிப்பிடப்பட்டிருக்கிறது. அந்த நிகழ்ச்சிக் குறிப்பில் கீழ்க்கண்டவற்றைப் பற்றிச் சொல்லப் பட்டிருக்கிறது. (i) நில ஆராய்ச்சிக் குழுவினராலும் சுரங்க போர்டாராலும் ரிஸர்வுகள் எங்கெங்கு உள்ளன என்று சர்வே நடத்தி, அதற்கெனப் படம் வரைந்து, ஒருமுகமான முடிவை அடைய முற்படுவது, (ii) சுரங்க போர்டாரால் தக்க முறைப்படி புள்ளி விவரங்கள் சேகரித்து, மேற்படித் தொழிலில் ஆதாய, விரயங்கள் இவ்வளவென்று கணக்கிடுவது. (iii) பௌதிக இரசாயன முறைப்படி கனித்தொழிலை நன்குஆய்ந்து, நிலக்கரி எவ்வளவு தூரம் பரவியுள்ளது என்றும் கரியாக்கல் கழுவுதல் சேகரித்தல் எவ்வளவு சிக்கனமான முறையில் செய்ய முடியும் என்றும், எரி பொருள்கள் மூலம் பதமாக்குதலும் நீரக மாக்குதலும் எவ்வாறு இயலும் என்றும் முடிவு செய்தல் வேண்டும் (iv) தேசீய உலோக ஆய்கூடத்தின் மூலம் மட்டரகமான உலோகங்களை எவ்வகையில் பயனுள்ளதாக்கமுடியும் என ஆராய்ந்தும், இவ் ஆராய்ச்சியில் சுரங்க போர்டினரின் ஒத்துழைப் பும் தேவை. (v) ஆப்டிகல் கண்ணாடி பீங்கான் சாமான்கள், உலைகற்கள், இன்சுலேட்டர்கள் இவைகளைக் கண்ணாடி பீங்கான் ஆராய்ச்சிக் கூடத்தின் மூலம் உற்பத்தி செய்ய முயலுதல்.

## 19. கனிப்பொருள் வளர்ச்சிக்கான உறுதுணை நிலையங்கள்

கனி வளர்ச்சிக்கான முன்னேற்றத்தைக் குறித்து அரசினரின் நிறுவனங்கள் இங்கு தரப்பட்டுள்ளன: (i) புவி அமைப்பு ஆராய்ச்சிக் குழு, (ii) இந்தியச் சுரங்க இலாகா, (iii) தேசீய ஆய்கூடங்களாகிய எரி பொருள் ஆராய்ச்சிக்கூடம், தேசீய உலோக ஆய்கூடம், மத்தியக் கண்ணாடி பீங்கான் ஆராய்ச்சிக் கூடம் முதலியன. புவி அமைப்பு ஆராய்ச்சிக்குழுவினர் ஸர்வே நடத்தி, கனிப்பொருள்கள் எங்குள்ளன என ஆய்ந்து படமெழுதி யும், நீர்ப்பரிசோதனை செய்து தேக்கங்களைப் பற்றிய ஆராய்ச்சிகள் நடத்திப் பொறியியல் துறையில் புவியியலைப் பற்றி வேண்டிய தகவல் சேகரிப்பதுதான் இதன் தொழில். சுரங்க வேலைகளுக் குள்ள ஆய்ந்து உணரப்பட்ட முறைகளைக் கையாளுதல், கனிப் பொருள்களை வீணாக்காது சேமித்துவைத்தல், இருப்பில் உள்ள தாதுப் பொருள்களைக் குறித்து விவரங்கள் சேகரித்தல், புள்ளி விவரம் தயார் செய்தல், நிலத்தைக் குடைதல், அரசினருக்கு அவ்வப்போது இத்துறையில் ஆலோசனை கூறுதல், மட்டரகமான தாதுக்களை எவ்வகையில் பயனுள்ளதாக்கலாம் என்று ஆராய்ச்சி செய்தல், இன்னும் எவ்வகையான உப பொருள்களை எடுக்க முடியு மென ஆராய்தல் இவையனைத்தும் இந்தியச் சுரங்க இலாகாவின்

ரால் நடத்தப்படும். மூன்று தேசீய ஆய்கூடங்களாவன : எரி பொருளாராய்ச்சிக்கூடம், தேசீய உலோக ஆய்கூடம், மத்தியக் கண்ணுடி பீங்கான் ஆராய்ச்சிக்கூடம். இவையனைத்தும் உலோகத் தாதுக்கள் சம்பந்தமாக அவைகளுக்கான ஆராய்ச்சியை நடத்துகின்றன. இயற்கை வளமும் விஞ்ஞான ஆராய்ச்சிக்குமான அமைச்சகம் திட்டக் கமிஷனின் பரிந்துரையின் பேரில் தொழில் கூட்டமைப்பு நிறுவனம் ஒன்றை ஏற்படுத்தி, அதன் மூலம் முன் கூறிய நிறுவனங்களைக் கூட்டிப் பிணைத்து அதை அடிக்கடிச் சந்திக்கச் செய்து, இத்துறையில் எவ்வகையில் முன்னேற்றமடைந்திருக்கிறது எனவும் ஐந்தாண்டுத் திட்டங்களின்படி முன்னேற்றம் அடைகிறதா என்றும் கண்காணித்தலேயாம்.

## 20. நீர்வீழ்ச்சி மின்சாரம்

இந்தியாவில் நிலக்கரி இருப்பு ஒரு சில பகுதிகளில் மட்டும் தான் உள்ளது. அது மிகவும் குறைந்த அளவில்தான் பரந்துகிடக்கிறது. மேலும் சிற்சில இடங்களுக்கு— குறிப்பாகத் தொழிலிடங்களுக்கு இவைகளைக் கொண்டுபோக வியலவில்லை. நிலக்கரியுள்ள ஊர்களில் உஷ்ண முறையில் (thermal) மின் அமைப்பு ஏற்பட்டுள்ளது. அவை சிற்சில சமயங்களில் அதிகப்படி செலவுள்ளதாக இருக்கிறது. பெட்ரோல் இருப்பும் மிகக் குறைவாக உள்ளது. நீர் வீழ்ச்சியின் மூலம் பெருமளவில் மின்சாரம் எடுக்க வழியுள்ளது. இதை முழுவதும் சர்வே செய்யவில்லை. இந்தியாவின் மொத்த நீர்வீழ்ச்சி மின்சாரத்தின் அமைப்பு 40 மிலியன் கிலோவாட் எனக் கணக்கெடுத்துள்ளனர். முதல் ஐந்தாண்டுத்திட்டக் காலத்தில் விவசாயத்திற்கு முதலிடம் கொடுக்க வேண்டுமென்று திட்டக் கமிஷன் வற்புறுத்தியதன் பேரில் நீர்ப்பாசன வசதியை முன்னிட்டுப் பற்பல நீர்வீழ்ச்சித் திட்டங்களை எடுத்துக் கொண்டனர். மின்சாரத்தின் தேவை எல்லையற்றதாக இருப்பதாலும், நாளுக்கு நாள் கூடுதலாகி வருகிற காரணத்தாலும் மின்சாரம் அதிக அளவில் பெற அணைகளுக்கும் நீர்த்தேக்கங்களுக்கும் நிலைமைக்கேற்பத் திட்டம் உருவாக்கப்பட்டது.

முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் இத் திட்டங்களுக்கான செலவை 765 கோடி ரூபாயாக அனுமானித்தனர். திட்டக் கால வரம்பினுள் இந்த நீர்தேக்கத் திட்டங்களில் பெரிய முன்னேற்றம் ஏற்பட்டது. அதன்படி 8·5 மிலியன் ஏக்கர் நிலத்திற்கு நீர்ப்பாசனம் கிடைக்கும் என்றும், 1·1 மிலியன் கிலோவாட் மின்சாரம் கிடைக்கும் எனவும் கருதப்பட்டது. ஆயினும் இத் திட்ட முடிவில் 16·9 மிலியன் ஏக்கர் நிலங்களுக்கு நீர்பாய்ச்ச வசதியும், 1·4 மிலியன் கிலோவாட் மின்சார வசதியும் ஏற்பட்டன. நீண்ட கால

வளர்ச்சியின் அடிப்படைத் திட்டமாகக் கருதி ஐந்தாண்டுத் திட்டங்களில் புதிய திட்டங்கள் எவை என்றும், இன்னும் இருபதாண்டுகளுக்குள் 40 முதல் 45 மிலியன் ஏக்கர்களுக்கான நீர்ப்பாசன வசதியும், 7 மிலியன் கிலோவாட் மின்சாரமும் கிடைக்கும்படிச் செய்ய முயலவேண்டும்.

சில குறிப்பான நீர்ப்பாசன நீர்வீழ்ச்சித் திட்டங்கள் இங்கு விவரிக்கப்பட்டுள்ளன :

(i) உலகத்திலேயே உயர்ந்ததும் ஈர்ப்பு ஆற்றலுள்ளதும் செங்குத்தானதுமாக அமைந்தது கிழக்குப் பஞ்சாபிலுள்ள பக்ரா அணைக்கட்டு. இது 56 மைல் நீளமுள்ள ஒரு பெரிய ஏரியை உண்டாக்குகிறது. இந்த அணைப்பகுதியில் இரண்டு மின்சார நிலையங்கள் உள்ளன. 84,000 கிலோவாட் மின்கலங்கள் 12 இவற்றுள் வைக்கப்பட்டுள்ளன. நங்கல் நீர் ஓட்டக் கால்வாயை அடுத்து இரண்டு மின் விசை நிலையங்கள் உள. அவற்றில் 24,000 கிலோ வாட் சக்தியுள்ள மூன்று மின்கலங்கள் உள. பக்ரா நங்கல் திட்டத்தில் முடிவாக எதிர்பார்க்கக்கூடிய 100 சதவீதத்தில் இழுக்கும் சக்தி உள்ள மின்சாரம் 4,00,000 கிலோவாட் ஆகலாம். வெவ்வேறு இழுப்புச் சக்தியிருப்பினும் இந்தத் திட்டத்தில் 8,00,000 கிலோவாட் மின்சாரம் எளிதில் கிடைக்கலாம். இதன் முதல் அமைப்பு வரையில் நிறுவனம் செய்ய 126 கோடி ரூபாய் செலவாகும் என எதிர்பார்க்கப்படுகிறது. பிக்கானீர், பெப்ஸு (Pepsu), பஞ்சாப் இவற்றிலுள்ள 65 இலட்சம் ஏக்கர் நிலங்களுக்கு நீர்பாயும் வசதியுள்ளது. நீர் தேங்கிய பகுதிகளிலுள்ள நீரை எடுத்துவிட்டு, மிகவும் வறட்சியான பகுதிகளுக்கு வேண்டிய அளவு நீரைப் பாய்ச்சி நிலப்பரப்பில் உள்ள நீரை அளவில் வைத்தும், ஒரேயடியாக நீர்ப்போக்கைக் கண்டித்தும் இது அமைந்துள்ளது. சிறிது காலத்திற்குப் பின்னர் டெல்லி-அமிர்தசரஸிடையே போகும் ரெயில் போக்குவரத்தை மின்சார முறையில் அமைக்கத் திட்டம் போட்டுள்ளனர். டெல்லி, பஞ்சாப் இவைகளிலுள்ள ஒவ்வொரு சிற்றூருக்கும் வேண்டிய மின்சாரம் கிடைத்து அதனால் தொழில் வளர்ச்சி அதிகரிக்கக் கூடும்.

(ii) உத்தரப் பிரதேசத்தில் பாயும் ரிஹண்டு நதியின்மேல் உள்ள பிப்ரி (Pipri) அணையும் மின் விசை நிலையமும் 2,30,000 கிலோ வாட் மின்சாரம் கொடுக்கும் அளவில் ரூ. 29 கோடி செலவில் கட்டப்பட்டிருக்கின்றன. இன்னும் 6 ஆண்டுகளில் இவை கட்டி முடியக்கூடும். 1·8 மிலியன் கிலோ வாட் மின்சாரம்

50% இழப்பில் கிடைக்கும். இதன் செலவு மதிப்பு 90 கோடி ரூபாய். தென் சதாரா ஜில்லாவில் கர்ஹாட் என்ற ரெயில்வே நிலையத்திலிருந்து 40 மைல் தூரத்தில் அமைந்துள்ளது கொய்னு பள்ளத்தாக்கு மின்சாரத்திட்டம். இது பம்பாய் இராச்சியத்தில் அமைந்துள்ளது. இதில் பெரிய அளவு மின்கலங்களைப் பொருத்துவார்கள் என்று எதிர்பார்க்கப்படுகிறது. ரூ. 25 கோடி செலவில் 2,50,000 கிலோவாட் மின்சாரம் கிடைக்கும்.

துங்கபத்திரைத் திட்டம் சென்னைக்கும் ஐதராபாத்துப் பிரதேசத்திற்கும் உதவியளிக்கிறது. இது நீர்ப்பாசன வசதிகளுடனே 1,55,000 கிலோ வாட் மின்சாரமும் கொடுக்கும்.

காட்டுத் தன்மையுள்ள அடங்காத மகாநதியைச் சம்பல் பூருக்கு 9 மைல் மேற்கில் பெரும் அணைகட்டி அடக்கி, 3,50,000 கிலோவாட் மின்சாரமும் எடுக்க 92 கோடி ரூபாய் செலவாகும் என மதிப்பிட்டிருக்கிறார்கள்.

தாமோதர் நதி மேற்கு வங்காளத்தில் அதன் கிளைகளுடன் பாய்கிறது. இதை எட்டுப் பல்வகை உபயோகமுள்ள திட்டங்களாகப் பிரித்து, 'தாமோதர் பள்ளத்தாக்குக் கார்ப்பரேஷன்' என்ற பெயரின் கீழ் நடத்திவருகின்றனர். 8,000 சதுர மைல் பரப்பளவுள்ள எல்லையை இது கண்காணிக்கிறது. ரூபாய் 35 கோடி செலவில் இது 3,00,000 கிலோவாட் மின்சாரத்தைக் கொடுக்கும் டென்னிஸி வால்லி அதாரிட்டி (Tennessee Valley Authority) ஐப் போல இது ஒரு கார்ப்பரேஷன் ஆகும். இதற்காக உலக பாங்கு கடன் கொடுத்துள்ளது. இதில் நல்ல முன்னேற்றம் காணப்படுகிறது.

இந் நாட்டின் மின்விசை அமைப்பைக் கீழ்க்கண்டவாறு பாகுபாடு செய்யலாம்: தென்னிந்தியா—நீர்வீழ்ச்சி மின்சாரம்; பம்பாய்ப் பகுதி—பெரும் பகுதி நீர்வீழ்ச்சியும் சிறுபான்மை உஷ்ண மின்வகை; பீகார், வங்காளம்—நிலக்கரி அதனுல் உஷ்ண மின்வகை; ஒரிஸ்ஸா, ஐதராபாத், மத்திய பிரதேசம் உள்ள மத்திய இந்தியாவில்—உஷ்ண மின்சார வகை; பஞ்சாபும் உத்தரப் பிரதேசமும்—நீர்வீழ்ச்சி மின்சாரமும் கொஞ்சம் உஷ்ண மின்சாரமும். ஆகவே உஷ்ண மின்சாரமும் நீர்வீழ்ச்சி மின்சாரமும் கலந்தவாறே உள்ளன. அகில இந்திய மின்விசை இணைப்பினுக்காக வேண்டி இவைகளை ஒன்றுபடுத்த வேண்டும்.[1]

1. இந்தியா 1955—பக். 231.

அளவிற்கேற்ப ஒழுங்கான முறையில் மின்சாரம் வேகமாக உற்பத்தியாக்க, மின்சார (வழங்கு) சட்டம் 1948-ல் சட்ட மன்றத்தால் இயற்றப்பட்டது. இதற்கென மத்திய மின்சார நிறுவனம் ஒன்று துவக்கப்பட்டது. இதேபோல் ஒவ்வொரு இராச்சியத்திலும் இராச்சிய மின்சார போர்டு நிறுவப்பட்டது. 1950-ல் மத்திய மின்சார நிறுவனச் சட்டப்படி ஒரு தலைவரும் நான்கு உறுப்பினரும் நியமிக்கப்பட்டனர். மத்தியப் பிரதேசத்திலும், டில்லியிலும் இந்த இராச்சிய மின்சார போர்டு முன்பே அமைத்து விட்டார்கள்.

உட்புறங்களில் இன்னும் மின்சார விஸ்தரிப்புத்திட்டம் முன்னேற்றமடையவில்லை எனலாம். 200 கிராமங்களுக்கு 1 கிராமம் வீதந்தான் விஸ்தரிக்கப்பட்டுள்ளது. கிராமப் புறங்களில் இதை விஸ்தரிக்க ஐந்தாண்டுத் திட்டத்தில் ரூபாய் 27 கோடி ஒதுக்கி வைத்துள்ளனர். இதில் முக்கிய இடம் பெறுவன தென்னாட்டின் இராச்சியங்களான சென்னை, மைசூர், திருவாங்கூர், கொச்சி முதலியன. நாட்டின் இதர பகுதிகளில் அதிக மின்சாரம் கிடைத்தால் ஊர்ப்புற மின்சார விஸ்தரிப்புத் திட்டம் கண்டிப்பாக முன்னேறும். நீர் இறைக்க மட்டுந்தான் மின்சாரம் உபயோகப்படும் என முடிவு செய்யவேண்டாம். இதனால் விவசாயப் பொருள்களைப் பதம் செய்து, தேவைக்கு ஏற்றவாறு அமைக்கவும், கிராமக் கைத்தொழில்களுக்கும் சிறு தொழில்களுக்கும் பயனுள்ளதாக்கவும் முடியும். தொழிற்சாலைகளுக்கு வேண்டிய மின்சாரம் இழக்கும் தன்மையில் மூன்றில் ஒரு பங்குதான் விவசாயத்தில் பயன் பெறுவதால் விவசாயத்திற்கு மின்சாரம் தருவது எளிது. விவசாயத்தில் உள்ள யந்திரங்களை வெகு எளிதில் நம் நாட்டில் தயாரிக்கலாம் ஆதலால் மின்சாரத்திற்கு என உள்ள விவசாய சம்பந்தமான யந்திரத்தை எளிதில் கையாளமுடியும்; அதற்குப் பெரிய படிப்பும் தேவையில்லை.

## 21. மீன்கள்

உப்பில்லா நீர், கடல் நீர் இவைகளில் உற்பத்தியாகும் மீன்வகைகளை அதிகரிக்கத் திட்டம் வகுக்கலாம். நிலவில் மிகவும் குறைந்த அளவுதான் மீன் எடுத்து மக்களால் உபயோகிக்கப்படுகிறது. தனி ஒருவர்க்கு ஆண்டு முழுமைக்கும் 3·4 அவுன்சு மீன்தான் கிடைக்கிறது எனலாம். உள்ளூர் மீன் உற்பத்திக்கென நீர் நிலைகளுக்கான ஆராய்ச்சிக்கு முதலிடம் கொடுக்கவேண்டும். மீன் விதைகளைக் கொடுத்தும் புதிய நீர் நிலைகளில் அவற்றைப் பொரிக்கும்படியும் உப்பில்லா நீரில்

அவைகளை உற்பத்தி செய்ய முயலவேண்டும். விஸ்தரிப்பு நிறுவனங்கள் மூலமாகக் கிராம மக்களுக்கும் விவசாயப் பாடங்களிலும் செயற்கை முறையில் மீன் வளர்ப்புத் திட்டத்தைப் போதிக்கவேண்டும். கடல் மீன் வளர்ப்புக்காக முதன்மையிடம் கொடுக்கும்படித் திட்டக் கமிஷன் கூறுகிறது; அது பரிந்துரைக்கும் முறைகளாவன : (i) மீனவர்களுடைய இன்றியமையாத் தேவைகளைச் செய்து கொடுப்பது, (ii) பழங்காலப் படகுகளில் இயந்திரமமைத்தல் அல்லது புதிய இயந்திரமமைத்த படகுகளை அளித்தல், (iii) விற்பனைச் சந்தையமைப்பது, (iv) குளிர்ச் சாதனமும் ஐஸ் பெட்டிகள் வைத்து அவற்றின் மூலம் போக்குவரத்து வழி செய்வது, (v) டார்ப்பிடோ நீர்மூழ்கிக்கப்பல் இவைகளை நடத்தும் முறைகள், (vi) கரையினின்று வெகுதூரத்தில் மீன் பிடிக்கும் மீன் கப்பல் (trawlers) கட்டியும், வலையமைத்தும் (purse-seiners) கொடுத்தல், (vii) துறைமுக வசதிகளைச் செய்தல்.

முன் சொன்னபடி முதன்மை இடம் பெறவேண்டிய காரணங்களால் 140 மீன் பிடிக்கும் படகுகளும் 14 விசையமைக்கப்பட்ட பல உபயோகங்களடங்கிய படகுகளும், 2 தாய்க் கப்பல்கள் கண்காணிக்கவும், 2 பெரும்வலை வசதிகளும் வங்காள விரிகுடாக்கடல் அரபிக் கடலிலும் ஆழ்கடலிலும் மீன் பிடிக்க 3 மீன் பிடிக்கும் கப்பல்களும் கடற்கரையை ஆழமாக்கியும், 9 பனிக்கட்டித் தொழிற்சாலைகளையும் 9 குளிர் சாதனம் அமைத்த போக்குவரத்து உந்து வண்டிகளும் திட்டத்தில் ஏற்பாடு செய்யப்பட்டுள்ளன. சீரிய முறையிலும் திட்டப்படி முன்னேற்றம் காணவும் நிலப் பரப்பில் தக்க நிறுவனமும் அனுபவம் பெற்ற அலுவலர்களுமிருக்க வேண்டுவது இன்றியமையாதது. மீனவர்களுக்கு இயந்திரப் படகுகளையும் கப்பல்களையும் ஓட்டுவதற்குப் பயிற்சி கொடுக்கவும் திட்டமிடப்பட்டுள்ளது.

இத் தொழிலில் நடுவராக இருப்பவரைப் புறத்தாக்கக் கூட்டுறவு நிறுவனங்கள் மூலம் மீன் தேவைகளைப் பெற முயல வேண்டும் என்று பரிந்துரைக்கப்படுகிறது. திடீரெனப் பெருமளவில் கல்கத்தா, பம்பாய், கொச்சி முதலிய துறைமுகங்களில் மீன் பிடித்துவிட்டால் உடனே அவ்வளவு மீன்களை விற்க முடியாது; விலைக் குறைப்பு ஏற்பட்டு மீனவர் அவதியுறுவர். இச் சங்கட நிலையைச் சமாளிக்கக் கூட்டுறவுச் சங்கங்கள் மூலம் சந்தைகளுக்குக் கொண்டுபோய் விற்க ஏற்பாடு செய்யவேண்டுமென்று விளக்கம் செய்யப்பட்டிருக்கின்றது.

இவ்வாறெல்லாம் எதிர்பார்த்து, 1950-51-ல் 1 மிலியன் டன்னிலிருந்து 1955-56-ல் 1·5 மிலியன் டன்னுக (50% அதிகப்படியாக) உற்பத்தியாகியிருக்கிறது.

## 22. வளம் பெற்ற நாட்டில் வறிய மக்கள்

ஒரு புகழ்பெற்ற ஆசிரியர் இந்தியாவைக் குறிப்பிடும்போது தொழில் வளத்தில் உலகில் மூன்ருவது இடமும், விவசாயத்தில் இரண்டாவது இடமும் பெற்ற வளம் பொருந்திய நாடு எனக் குறிப்பிடுகிருர்.[1] இந்த வர்ணனை, பிரிவினை ஆகாத முன்பு இருந்த நிலையென்றும், பிரிவினைக்குப் பின் இந்த இரு நாடுகளில் எதுவும் இந்த நிலையை அடையவில்லை என்றும் கூறலாம். முன் குறிப்பிட்ட வர்ணனையை ஆராயுங்கால் இந்திய யூனியனில் உள்ள மூலப் பொருள்களும் தேக்கப் பொருள்களும் போதிய அளவும் விதவிதமான அமைப்புக்கும் ஏற்ற அளவில் பொருளாதார நிலையைக் கொடுக்கக்கூடும் எனலாம்.

மக்களே வாழாத ஒரு வெற்றிடம் என்று இந்தியாவை அனுமானித்துக் கொண்டு அதில் செல்வரான மக்கள் (இஸ்ரேல் நாட்டில் யூதர்போல) வந்து குடியேறிஞர்களானல், உடனே சில ஆண்டுகளுக்குள் அமெரிக்க ஐக்கிய நாட்டினைப்போல் இந்தியாவும் செல்வம் படைத்த நாடாகலாம். இற்றைய நிலையில் நாம் வெறும் கரும்பலகையை வைத்துக்கொண்டு எழுத முற்பட முடியாது. இந் நிலையில் பண்டைகாலப் பொருளாதார முறையில் திளைத்துத் திளைத்துப் பழங்காலப் பழக்க வழக்கங்களில் ஈடுபட்டு அம் முறைகளிலேயே விவசாயம், தொழில் இவற்றை நடத்தி முன்னேற்றத் தடையாயுள்ள பழங் கட்டுப்பாடுள்ள சமூகமும், அளவுக்கு மீறிய மக்கள் தொகையும், ஏழ்மையால் உருண்டு புரளும் மக்கட் குழாமுமமைந்த இந் நாட்டிற்கு நிகர் எந்த நாடும் அமையமுடியாது எனலாம்.

வறியவர் உள்ள வளமைபெற்ற நாடு என்று கூற விளக்கம் தேவையில்லை எனலாம். இந்தியாவின் செல்வத்தை எளிதில் பெற இயலாது. அந்தச் செல்வத்தைப் பயனுள்ளதாக்க இந்நாட்டுமக்கள் தங்கள் சுகத்தைத் தியாகம் செய்து, பழுதற்ற கடும் உழைப்பில் திட்டப்படி ஈடுபட்டால் மிகக் கிலேசத்துடன் கரும் பலகையில் எழுதியதை அழித்தும், படிப்போருக்கு ஆனந்தமும், செல்வமுமுடைய நாடு எனக் கூறும் திட்டத்தில் படமெழுதியுங் காட்டலாம்.

1. கிங்ஸ்லி டேவிஸ் எழுதிய 'இந்தியா பாகிஸ்தானில் மக்கள் தொகை'; பக். 8.

# 3. மக்கள் தொகை[1]

1. **மொத்த மக்கள் தொகை :** நமக்குச் சுதந்திரம் கிடைத்த பிறகு 1949ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் முதல் 1951 மார்ச்சு மாதம் வரையில் மக்கள் தொகைக் கணக்கு எடுத்தோம். சுதந்திரத்திற்கு முன்பெல்லாம் எடுத்த கணக்கும் அதன் பிறகு எடுத்த கணக்கும் பேதப்பட்டன. முன்பெல்லாம் ஜாதி, மதம், குலம் இவைகளைக் கொண்டு கணக்கெடுக்கப்பட்டது. இப்போதோ, தொழிலின் கணக்கை அளவாகக் கொள்ளுகிறோம். மக்களின் பொருளாதார நிலையைப் பரிசீலனை செய்யவே இம் முறையைக் கையாளுகிறோம்.

இந்தியாவின் மொத்த மக்கள் தொகை (ஜம்மு காஷ்மீர், B பகுதி இராச்சியங்கள், அஸ்ஸாமின் பழங்குடிகள் நீங்கலாக; இவர்களின் தொகை 4·41-ம் 0·56 மிலியனும்) 35,68,79,394 (சுமார் 36 கோடி). கடந்த பத்தாண்டுகளில் 1951 முடிய 44 மிலியன் அதிக மக்கள் தொகை ஏற்பட்டது. சராசரி 10 ஆண்டுக்கான ஏறிய விகிதம் எவ்வளவென்பது குறிக்கப்பட்டிருக்கிறது[2]. அதாவது 13·5 சதவீதத்திலிருந்து 13·2 சதவீத ஏற்றம் காணப்படுகிறது. 1941ஆம் ஆண்டில் மக்கள் தொகையிலிருந்து ஒப்பிட்டோமானால், மேற்கண்ட விவரங்கள் கிடைக்கின்றன. பஞ்சாப், அந்தமான், நிக்கோபார் இவைகளைத் தவிர ஏனைய இந்திய இராச்சியங்களில் மக்கள் தொகை 1941ஆம் ஆண்டின் தொகையைவிட அதிகரித்து இருக்கிறது. சராசரி விகிதத்திலிருந்து குறைவானவை பஞ்சாப் 0·5, அந்தமான் நிக்கோபார் 8·6; அதிகரித்தவை டில்லி 62·3, குடகு 30·5. கிட்டத்தட்ட எல்லா இராச்சியங்களிலும் மக்கள் தொகை ஏற்றம் 10 முதல் 22 வரை (பீகார், ஒரிஸ்ஸா, மத்தியப் பிரதேசம், பெப்ஸு நீங்கலாக) ஏற்றம் கண்டிருக்கின்றது. பின்னே சொல்லப்பட்டதில் 10-க்குக் கீழாகத்தான் அமைந்திருந்தது. பெப்ஸுவில் 2·6 அதிகம்; ஆயினும் அதுவே குறைந்த அளவு.

1. இந்தியாவின் மக்கள் தொகைக் கணக்கெடுப்பு 1951-இல் அறிக்கை பகுதி 1—A. வால்யூம்-1.

2. 10 ஆண்டுச் சராசரி அதிகரிப்பு விகிதம் இந்த இரண்டு கணக்கெடுப்பு முறைகளிலிருந்து தெரிகிறது. முன்பெல்லாம் எடுத்த கணக்கெடுப்புகளில் சதவீத பேதத்தைக் கணக்கிடப் புள்ளி விவரம் கொடுக்கப்பட்டது. சராசரி பத்து ஆண்டு அதிகரிப்புக்கு இரண்டு கணக்கெடுப்புகளில் சராசரி எடுத்துக்கொள்ளவேண்டும்.

### அதிக செறிவுள்ள உட்பிரிவுகள்

| உட்பிரிவின் பெயர் | மக்கள் தொகை (இலட்சம்) | செறிவு (1 சதுர மைலுக்கு எண்) | நிலப் பரப்பு (இலட்ச ஏக்கர் | நிலப் பரப்பு தலைக்கு (சென்டில்) |
|---|---|---|---|---|
| தாழ்ந்த கங்கைச் சமவெளி | 700 | 832 | 538 | 77 |
| உயர் கங்கைச் சமவெளி | 389 | 681 | 366 | 94 |
| மலபார்-கொங்கணம் | 238 | 638 | 239 | 100 |
| தென் சென்னை | 307 | 554 | 355 | 115 |
| வட சென்னையும் ஒரிஸ்ஸாக் கடற்கரையும் | 211 | 461 | 293 | 139 |
| மொத்தம் 5 உட்பிரிவுகள் | 1,845 | 660 | 1,791 | 97 |

### குறைந்த செறிவுள்ள உட்பிரிவுகள்

| உட்பிரிவின்[1] பெயர் | மக்கள் தொகை (இலட்சம்) | செறிவு (1 சதுர மைலுக்கு எண்) | நிலப் பரப்பு (இலட்ச ஏக்கர்) | நிலப் பரப்பு தலைக்கு (சென்டில்) |
|---|---|---|---|---|
| பாலைவனம் | 46 | 61 | 482 | 1,047 |
| மேற்கு இமாலயம் | 90 | 68 | 852 | 944 |
| கிழக்கு இமாலயம் | 124 | 118 | 674 | 542 |
| வடமேற்குக் குன்றுகள் | 104 | 163 | 409 | 394 |
| வடமத்திய குன்றுகளும் பீடபூமியும் | 138 | 164 | 537 | 389 |
| வடகிழக்குச் சமவெளி | 290 | 192 | 967 | 333 |
| மொத்தம் 6 உட்பிரிவுகள் | 792 | 129 | 3,921 | 495 |

*1. பாலைவனம்—ராஜஸ்தானின் மாவட்டங்கள்: கங்காநகர், சுரு, ஜோதிபுரி, பார்மர், ஜலோர், பாலி, நாகூர், ஜய்சால்மர்.*

*மேற்கு இமாலயம்—ஜம்மு காஷ்மீர்—கங்ரா, ஸிம்லா, இமாலயப் பிரதேசம், பிலாஸ்பூர், 5 உ.பி. மாவட்டங்கள்.*

*கிழக்கு இமாலயம்—அஸ்ஸாம், மணிபுரி, திரிபுரா, சிக்கிம், டார்ஜிலிங் மாவட்டங்கள், ஜல்பெய்குரி, கூச் பிகார்.*

*வடமேற்குக் குன்றுகள்—மத்திய பாரத் (பிந்த், கிர்த், மொரேனா பகுதி நீங்கலாக) தென்கிழக்கு ராஜஸ்தானத்தின் 8 மாவட்டங்கள்.*

*வட மத்தியக் குன்றும் பீடபூமியும்—5 உ. பி மாவட்டங்கள், விந்தியப் பிரதேசம், போபால், மத்தியப் பிரதேசத்தின் 7 மாவட்டங்கள்.*

*வடகிழக்குப் பீடபூமி—சோடா நாகபுரி, ஒரிஸ்ஸா (4 மாவட்டங்கள் நீங்கலாக) கிழக்கு மத்தியப் பிரதேசம்.*

மத்திய செறிவுள்ள உட்பிரிவுகள்

| உட்பிரிவின் பெயர் | மக்கள் தொகை (இலட்சம்) | செறிவு (சதுர மைலுக்கு எண்) | நிலப் பரப்பு (இலட்ச ஏக்கர்) | நிலப் பரப்பு தலைக்கு (சென்டில்) |
|---|---|---|---|---|
| அகண்ட கங்கைச் சமவெளி | 259 | 332 | 499 | 193 |
| தென் தக்கணம் | 315 | 247 | 8 7 | 259 |
| வட தக்கணம் | 239 | 246 | 621 | 260 |
| குஜராத்-கத்தியவார் | 161 | 226 | 456 | 283 |
| மொத்தம் 4 உட்பிரிவுகள் | 974 | 260 | 2,393 | 246 |

**2. மக்கள் தொகையின் செறிவு :** இந்தியாவின் சராசரி மக்கள் தொகைச் செறிவு சதுர மைலுக்கு 312 நபர் ஆகும். இதர நாடுகளுடன் ஒப்பிடும்போது ரஷ்யாவில் 23ம், அமெரிக்க ஐக்கிய நாட்டில் 50ம், சைனுவில் 134ம், ஜப்பானில் 579ம், பிரான்ஸ் நாட்டில் 193ம், இங்கிலாந்தில் 536ம், பிரேசிலில் 15ம் ஆக உள்ளன.

மித மிஞ்சிய செறிவு டெல்லி இராச்சியத்தில் அதாவது சதுர மைக்கு 3,000 நபர்களுக்கு மேலும், ஆளில்லாத அந்தமான் நிக்கோபார் தீவுகளில் 10 நபர்களுக்கும் குறைவாக உள்ளது. இதற்குப் புறம்பாக அதிக செறிவு உள்ள இராச்சியம் திருவாங்கூர். இங்கு 1 சதுர மைலுக்கு 1,015 பேர்கள் ; இதையடுத்து வங்காளம், பீகார், உத்தரப்பிரதேசம் முறையே 806; 573; 558 வீதத்தில் உள.

முன் பகுதிகளில் உள்ள அட்டவணைகளிலிருந்து நாம் அறிந்து கொள்ளக் கூடியது என்ன வெனில், மக்கள் தொகைச் செறிவிற்கும் அந்தஸ்திற்கும் எவ்விதமான சம்பந்தமும் இல்லை யெனலாம்.[1] தொழில் வளர்ச்சியில் மேம்பாடு ஏற்பட்ட போதிலும் இன்னும் நம் நாடு விவசாயமும் கிராமியமாகவும் உள்ளது. அதிகப்படியான மக்கள் தொகை எவ்வெவ்விடங்களில் விவசாயத்தை நடத்த முடியுமோ, அவ்வவ்விடங்களில் மக்கள் தொகை விவசாயத்தில் ஈடுபட்டிருக்கிறது. செம்மையான முறையில் விவசாயம் நடப்பதற்கு உறுதுணையானவை வருமாறு :

1. ஜாதர் ஆண்ட் பெரியின் 7-வது பதிப்பு பொருளாதாரம் என்ற நூலில், பக்கம் 94.

(i) சமவெளியில் உள்ள நிலம் (இது ஒன்றே முக்கியத் தேவை) (ii) உரமுள்ள நிலம் தேவையான அளவுநீர்[1] பயிர்களுக்கு எவ்வெப்பொழுது வேண்டுமோ அவ்வப்போது வரவேண்டியது, அல்லது நம்பத்தகுமளவில் வரக்கூடிய மழை அல்லது வசதியுள்ள நீர்ப்பாசன முறை, (iii) உடல் வளர்ச்சிக்கேற்பத் தட்ப வெப்பநிலை. மக்கட் தொகை யதிகமுள்ள வட்டாரங்களில் மேற்சொன்ன வசதிகள் அமைந்துள்ளன. ஆயினும் இவ்வசதிகளற்ற செறிவு குறைந்த இடங்களில் உள்ள மக்களைவிட இவர்கள் செல்வர்களாக இல்லை. நிலத்தின்மீது மக்கள் தொகையின் தேவை அளவிறந்ததாக உள்ளது. செழிப்புள்ள பகுதியானாலும் செழிப்பற்ற இடமானாலும் மக்கள் தேவையை ஈடுகட்ட விவசாயத்தில் காலம் கழிக்கின்றனர். இதன் காரணமாக அனைவரும் அதே அளவு வறுமையில் உழலுகின்றனர்.

3. **ஆண் பெண் விகிதம்:**[2] 1951 ஆம் ஆண்டின் மக்கள் தொகைக் கணக்கெடுப்பின்படி 1,000 ஆண்பாலருக்கு 947 பெண்பாலர் இந் நாடு முழுமைக்கும் ஏற்பட்டுள்ளனர். இந் நாட்டின் உட் பிரிவுகளிலும் பல்வேறு பகுதிகளிலும் விகித ஏற்றத் தாழ்வுகள் காணப்படுகின்றன. வடமேற்கு இந்தியாவில் 883 பெண்பாலரும் தென்னிந்தியாவில் 999 பெண்பாலரும் உளர். தென்பகுதியில் ஆணும் பெண்ணும் சரிநிகரான அளவில் உள்ளனர். வட இந்தியாவில் 910, மேற்கிந்தியாவில் 938, கிழக்கிந்தியாவில் 945, மத்திய இந்தியாவில் 973 பெண்கள் உள்ளனர்.

**ஆண்களைவிடப் பெண்பாலர் கூடுதலாக உள்ள விகிதப் பட்டியல்**

| உட்பிரிவு | இயற்கை மாவட்டம் | 1,000 ஆண் பாலருக்கு அமைந்த பெண்பாலர் |
|---|---|---|
| கிழக்கிந்தியா | ஒரிஸ்ஸா கடற்கரை | 1,040 |
| | மணிபூர் | 1,036 |
| | வட பீகார் சமவெளி | 1,013 |
| | ஒரிஸ்ஸா உள் நாடு | 1,007 |
| தென்னிந்தியா | மேற்குச் சென்னை | 1,054 |
| | திருவாங்கூர்-கொச்சி | 1,008 |
| | தென் சென்னை | 1,006 |
| | வட சென்னை | 1,001 |
| மேற்கிந்தியா | கட்சு | 1,079 |
| | பம்பாய்-கொங்கணம் | 1,047 |
| மத்திய இந்தியா | கிழக்கு மத்தியப் பிரதேசம் | 1,017 |

1. அநேகப் பயிர் வகைகளுக்கு 40" மழை வேண்டும் எனக் கருதப்படுகிறது.
2. மக்கள் கணக்கெடுப்பு அறிக்கை: 1951—பக்கம் 54-6.

விதிவிலக்கின்றி வட, வடமேற்கு இந்தியாவின் பகுதிகளில் 1,000 பேருக்குக் குறைவாகவே விகிதம் அமைந்துள்ளது. மற்றைய நான்கு உட்பிரிவுகளில் எண்ணிக்கையில் பெண்கள் ஆண் பாலரை மிஞ்சிவிட்டனர். முன் சென்ற அட்டவணையைக் காண்க.

பொதுவாக ஆண் பெண் விகிதத்தில் கிராமங்களைவிடப் பட்டணங்களில் பெண்பாலர் விகிதம் குறைவாக உள்ளது. நாடு முழுமையும் ஆண்பெண் விகிதம் கிராமங்களில் 966ம் நகரங்களில் 860 ந்தான் உள்ளது.

10 நகரங்களில் (நகரப் பிரிவு) உள்ள ஆண் பெண் விகிதங்களைக் கீழே கொடுத்துள்ளோம். அகண்ட பம்பாய், அகண்ட கல்கத்தாவின் விகிதங்களும் சென்னை, ஐதராபாத் விகிதங்களும் கவனிக்கத் தக்கவை.

| நகரப் பிரிவு | விகிதம் |
|---|---|
| அகண்ட கல்கத்தா | 602 |
| அகண்ட பம்பாய் | 596 |
| சென்னை | 921 |
| டில்லி | 750 |
| ஐதராபாத் | 989 |
| அகமதாபாத் | 764 |
| பங்களூர் | 883 |
| கான்பூர் | 699 |
| பூனை | 833 |
| லக்னோ | 783 |

பிறப்பின்போது பெண்பாலரின் எண்ணிக்கை குறைவென்பது உலகு அனைத்தும் உள்ள விளக்க இயலாப் புதிர். ஆயினும் இயற்கை அதைச் சரிப்படுத்துகிறது. முதலாண்டு நிறைவேறும் முன்னரே பெண் சிசுக்களைவிட எண்ணிக்கையதிகமான ஆண் சிசுக்கள் இறக்கின்றன. இதனால் ஆண் பெண் விகிதம் மாறுபாட்டை யடைகிறது. இந்த விகிதம் ஆண்டு தோறும் மாறிக்கொண்டே வருகிறது. சமனற்ற விகிதத்திற்குத் தக்க விளக்கம் கூற இயலாது. வெவ்வேறு பகுதிகளிலும் வித விதமான விகிதம் உள்ளதால் இவற்றிற்குத் தக்க நிலைமைகளை வரையறுக்க முடியாது. ஆயினும் வாழ்க்கையின் ஆரம்பத்தில் ஒரு நியதி உள்ளதுபோல் வாழ்க்கையின் முடிவிலும் ஒரு நியதி

தோன்றுகிறது. வயது மூத்தோர்களில் (வயதில் முதல் பருவத்தில் உள்ளபடி) பெண்களைவிட ஆண்களைச் சாவு வெகு விரைவில் அணுகுகிறது. அநேக மாறுபட்ட காரணங்களினால் ஆண்பெண் சாவு விகிதம் சமமாகவில்லை. எடுத்துக்காட்டாக பஞ்சம் பெரும்பாலான ஆண்களைக் கொன்றுவிடுகிறது;[1] தொத்து நோய் பெரும்பாலாகப் பெண்களைக் கொன்றுவிடுகிறது.

ஆண் பெண்பாலரின் விகிதத்தைப்பற்றி ஆராயப் புகுங்கால் ஒரு பகுதியில் அதிகப்படி விகிதமும் இன்னொரு பகுதியில் குறைவாகவும் அமைந்துள்ளதை நோக்கின் அது பிறநாட்டிலிருந்து வந்து குடியேறுதலாலும் அல்லது பிறநாட்டிற்குச் சென்று குடியேறுதலாலும் ஏற்படக்கூடும்.

4. **மக்கள் தொகையின் வளர்ச்சி:** 1891 ஆம் ஆண்டிலிருந்து 1951 ஆம் ஆண்டு வரையில் மக்கள் தொகையில் மாறுதலைக் காண்பிக்கும் அட்டவணை வருமாறு:[2]

| கணக்கெடுப்பு ஆண்டு | எண்கள் (இலட்சத்தில்) | அதிகரித்தலும்(+) குறைவுபடுதலும்(— சென்ற பத்தாண்டு எண்ணிக்கையுடன் ஒப்பீடு (இலட்சத்தில்) |
|---|---|---|
| 1891 | 2,3 9 | — |
| 1901 | 2,355 | —4 |
| 191· | 2,490 | + 135 |
| 1921 | 2,481 | —9 |
| 1931 | 2,755 | + 274 |
| 1941 | 3,128 | + 373 |
| 1951 | 3,569 | + 441 |

1891—1900-ல் இந்தியாவின் மக்கள் தொகை 0·2 சத வீதம் குறைந்து, 1901—1910-ல் 5·6 சதவீதம் அதிகரித்தது.[3] மறுமுறை

1. 1951-ஆம் ஆண்டின் மக்கள் தொகைக் கணக்கெடுப்பு அறிக்கை—பக்கம் 59—62. 7-ஆம எண்ணையும் பார்க்க.

2. மக்கள் தொகைக் கணக்கெடுப்பு 1951. இதில் வரும் எண்கள் இடத்திற்கு அனுசரித்ததுபோல மாற்றியமைக்கப்பட்டிருக்கிறது. (அறிக்கைப் பக்கம் 122).

3. கூடுதல், குறைவு ஏற்பட்ட காலங்களில் உள்ள சராசரி மக்கள் தொகையைக் கணக்கிட்டு, அதற்குச் சதவீத அமைப்பில் கூறப்பட்டுள்ளது.

1911—20-ல் 0·4 சதவீதம் குறைந்தது. ஆயினும் மூன்று பத்தாண்டுகள் முடிவுற்று, 1921-ல் நடத்திய கணக்கெடுப்பின்படி 1921—30 வரை 10·4 சதவீதம் ஏற்றமும், 1931—40 வரை 12·7 சதவீத அதிகமும், 1941—50-ல் 13 2 சதவீத ஏற்றமும் உள்ளது. இரண்டு முப்பதாண்டு சராசரிக் கணக்கெடுப்பில் 1891—1920 வரை 1·7 சதவீத ஏற்றமும் 1921—1950 வரை 12·0 சதவீத ஏற்றமும் ஒவ்வொரு பத்தாண்டுகளில் ஏற்பட்டுள்ளது.

1891—1900-ல் சராசரி இறக்கத்திற்குக் காரணம் கடும் பஞ்சங்கள் ஏற்பட்டு, நாடு முழுமையும் பரவியதுதான் 1901—10 வரையில் பஞ்சங்களுக்கிடையே வாந்தி பேதி, பிளேக் நோய், கருங்காய்ச்சல் என்னும் காலா அஜார் என்ற நோயும் தொத்து வியாதிகளைப்போல் பரவி மக்களைப் பெருமளவில் மாய்த்தது. கால நிலைமைகள் சௌகரியமாக அமைந்திருந்தன. இக் கால வரம்பு 'சாதாரண விவசாய முன்னேற்றம்' ஏற்பட்ட காலமெனக் கூறப்பட்டது. ஆயினும் பிளேக் நோய் பெரிய அளவில் முன் பத்தாண்டுகளைக் காட்டிலும் அதிக அளவில் கொன்றது. மத்திய, கிழக்குப்பகுதிகளான பஞ்சாப் பிரிவில் மலேரியா என்ற காய்ச்சல் நோய் அடித்துப் பெருமளவில் மக்களைக் கொன்றது. அதேபோல் உத்தரப் பிரதேசத்தில் உள்ள கங்கை யமுனை இரட்டை நதிச் சமவெளியில் (Doab) காய்ச்சல் சுரத்தில் பீடிக் கப்பட்டு இறந்தவர் எண்ணிலடங்காதவர். அடுத்த பத்தாண் டாகிய 1911—20-ல் முதல் ஆண்டில் பிளேக், வாந்தி பேதி, காய்ச்சல் முதலிய நோய்களால் மாண்டவர் அநேகர். அந்தப் பத்தாண்டின் முடிவின் மூன்று வருடங்களில் முதல் உலகப் போரின் காரணத்தால் பொருள் நெருக்கடி ஏற்பட்டு, அதை யடுத்து இரண்டு முறைகள் விளைச்சல் இல்லாத காரணங்களால் பயிரற்று மகசூல் இல்லாது போய்விட்டது. பிளேக்கும், வாந்தி பேதியும் இந்நாட்டின் பல பகுதிகளில் உண்டாகியிருந்தன. கால அஜார் அஸ்ஸாமிலும், காய்ச்சல் சுரம் வங்காளத்திலும் உயிர் கொல்லிகளாக அமைந்தன. புளூ (Flue) என்னும் இன்புளூ யென்ஸா (நச்சுக் காய்ச்சல்) என்ற சுரத்தினுல் ஏற்பட்ட தீங்கைப் பார்க்கும்போது மேலே கூறப்பட்டவை மிகச் சொற்பமானவை எனலாம். புளூவினுல் இந்தியா முழுமையும் பாதிக்கப்பட்டுச் சற்றேறக்குறைய 12 முதல் 13 மிலியன் மக்கள் இறந்தனர். இது தொன்மையான கணக்கின்படி அளவெடுத்தது எனலாம்.

1921-க்குப் பிறகு கணக்கெடுப்பில் கண்ட மாறுதலாகி வளரும் மக்கள் தொகையைக் காணலாம். பஞ்ச நிவாரண வேலைகளை அரசினர் எடுத்து நடத்தினர். போக்குவரவு முறைகளை

அமைத்து, இல்லாமை காரணமாக மக்கள் மடியாது இருக்க எல்லா முறைகளையும் அரசினர் எடுத்துக்கொண்டனர். தொத்து நோய்களையும் அடக்கி வந்தனர். 1921 முதல் 1941 வரையில் பெருமளவில் மக்கள் தொகை 110 மிலியன்களாகப் பெருகியது. இதனுடன் 1941—50-ல் 44 மிலியன் கூடியது. 1943-ல் வங்காளப் பஞ்சம் ஏற்பட்டும்கூட, நாடு முழுமையிலும் உணவுப் பற்றுக் குறை ஏற்பட்டும், வங்கப் பகுதியிலும் பற்றுக் குறை ஏற்பட்டும் கூட மக்கள் தொகை கூடுதலாகியது.

10 ஆண்டில் ஏறியுள்ள மக்கள் தொகையின் விகிதம் அமெரிக்கா வளர்ச்சி விகிதத்தை ஒத்தது. இது ஜப்பானின் 14%ஐ விடக் குறைந்தது ஆயினும், இங்கிலாந்தைவிட 4·4% விகித முறையில் ஒப்பிடும்போது மக்கள் தொகை யதிகரிப்பு மிகவும் சாதாரணந்தான் எனலாம். ஆனால் தனிப்பட்ட முறையில் எண்ணிக்கையைக் கொண்டு ஒப்பிடும்போது இந்தியாவின் மக்கள் தொகை அதிகம் என்று கூறலாம் ஆண்டுதோறும் 3 முதல் 4 மிலியன் மக்கள் சேருகிறார்கள். தொன்றுதொட்டு விவசாயத்தில் ஊறித் திளைத்து, ஆக்க அடைவு அற்று, நிரந்தரமாக வசித்துவரும் சமூகத்தில் இவ்வளவு மக்கள் தொகை பெருக ஆரம்பித்தால் வாழ்க்கைத்தரம் கண்டிப்பாகக் குறைய ஆரம்பிக்கும். இந்தியாவில் மக்கள் தொகை அதிகரித்ததற்குக் காரணம் உயரிய பிறப்பு விகிதமும், உயரிய மரித்தல் விகிதமும்தான். மேற்கு ஐரோப்பிய நாடுகளில் பிறப்பு விகிதமும் மரித்தல் விகிதமும் மிகவும் குறைவாக உள்ளன.

**5. இந்தியாவில் மண விகிதம்:** மணமானவர் விகிதம் மணமாகாதவர்களைவிட அதிகம். காரணம் என்னவென்றால் இந் நாட்டில் ஆண்பாலர் பெண்பாலர் இருவரும் இளவயதிலேயே மணமுடித்துக் கொள்கின்றனர். ஓர் இந்து தமது முறையின்படி மணம் முடித்துத் தனக்கு ஒரு மகனாவது சந்ததியாக வைத்திருக்க வேண்டும். 1929-ல் போடப்பட்ட குழவிமணத் தடுப்புச் சட்டம் 18 வயதுக்குட்பட்ட ஆண் மகனும் 14 வயதுக்குட்பட்ட பெண் மகளும் மணம் செய்துகொள்ள உரிமை இல்லை எனப்பட்டது. இச் சட்டத்தைப் பொதுமக்கள் அறிந்தும்கூட மீறுகிறார்கள். மதம், சமூக நிலை, அந்தஸ்து இவைகளைப் பொறுத்துள்ளது மணம் செய்யும் நிலை.[1] உலகின் முன்னேற்றமடைந்த நாடுகளில் மணமானவர் எண்ணிக்கையைவிட இந்தியாவின் மணமானவர்

1. 0·1 சதவீத 85 வயதுக்கு மேற்பட்ட பெண்கள் மணமாகாது உள்ளனர் மேனாட்டில 35 வயதுக்கு மேற்பட்ட மணமாகாதவர் அதிகம். அது ஒருபிரச்சினை.

எண்ணிக்கை கூடியுள்ளது. இதன் முக்கியக் காரணம் மணமாகத் தகுதியற்றவர்கள்கூட மணம் செய்துகொள்ளுகின்றனர்.

**6. மக்கள் தொகையும் உற்பத்தியும்:** 1921ஆம் ஆண்டிலிருந்து இடையரு மக்கள் தொகையின் ஏற்றத்தின் காரணத்தால் உற்பத்தியின் அளவை எவ்வாறு உள்ளது என்று ஆராயின், 1951ஆம் ஆண்டின் கணக்கெடுப்பு அறிக்கை மக்கள் தொகைக்கேற்ப அதற்கெதிர் மறையாக உற்பத்தி அமைந்துள்ளது எனக் கூறுகிறது. 1921லிருந்து தலைக்கு எவ்வளவு பரப்பு வெற்றுநிலம் குறைந்துள்ளது என்று கீழ்வரும் அட்டவணையில் கொடுக்கப்பட்டுள்ளது.

இந்த அட்டவணையில் கொடுக்கப்பட்டுள்ள புள்ளி விவரங்களைப் பார்க்கின், 1921லிருந்து சாகுபடி செய்யப்பட்ட நிலப்பரப்பு வரவரக் குறைந்து வந்து கொண்டிருந்தது. இருபோகப் பயிர் நிலப் பரப்பும் நீர்ப்பாசனப் பரப்பும் தலைக்கு விகிதம் குறைந்து வந்துள்ளது. இதை ஈடு கட்டுமளவு தொழில்களும், உத்தியோகங்களும் வளர்ச்சி பெறவில்லை. அதற்குப்பதிலாகப் பிறரை அண்டி வாழ்பவர்களுடைய விகிதமும், வேலையற்றோர் எண்ணிக்கையும் கூடிக்கொண்டே போகின்றன.

ஆள் விகிதத்தில் விவசாயக் குறைவு

| ஆண்டுக் கணக்கெடுப்பு | சாகுபடி நிலம் பரப்பளவில் ஆள் விகிதத்தில் (சென்டு)[1] |
|---|---|
| 1891 | 109 |
| 1901 | 103 |
| 1911 | 109 |
| 1921 | 111 |
| 1931 | 104 |
| 1941 | 94 |
| 1951 | 84 |

**7. இந்தியரின் பிறப்பு விகிதமும் மரித்தல் விகிதமும்:** இந்தியாவில் பதிவுப் புள்ளியியல் முறை செம்மையாக அமைந்திராத காரணத்தால் ஒவ்வொரு புள்ளி விவரப் பணியாளர் கூறும்

1. 100 சென்டுகள்—1 ஏக்கர்.

புள்ளி விவரத் தகவல்களும் சில வகைகளில் ஏறுமாறாக உள்ளன. கிங்ஸ்லி டேவிஸ்[1] அவர்களுடைய மதிப்பீடு வருமாறு:

| | மதிப்பிட்டது | தகவல் கொடுக்கப்பட்டது |
|---|---|---|
| 1881—91 | 49 | — |
| 1891—1901 | 46 | 34 |
| 1901—11 | 48 | 37 |
| 1911—21 | 49 | 37 |
| 1921—31 | 46 | 33 |
| 1931—41 | 45 | 34 |

1941—51 முடியும் பத்தாண்டுகளில் 1951ஆம் ஆண்டின் கணக்கெடுப்பின்படி 1,000 பேருக்குச் சராசரி 40 வீதம் ஆண்டுதோறும் உள்ளது. 1921ஆம் ஆண்டிலிருந்து பிறப்பு விகிதமானது குறைந்துகொண்டே வருகிறது. இதர நாடுகளுடன் ஒப்பிடும் போது இதன் பிறப்பு விகிதம் அதிகம் என்பதில் ஐயமில்லை. எடுத்துக்காட்டாக எகிப்தில் (1939-ல் 47-ம்) பாலஸ்தீனத்தில் (1931-5-ல் 49-ம்) மெக்சிகோவில் (1945-ல் 43·7) ஆகும். 1920-க்கு முன்னர் இந்தியாவின் மரித்தல் விகிதம் 1,000-க்கு 40-ம், 50-ம் ஆக இருந்தது 1921-க்குப் பிறகு குறைந்து வந்துள்ளது.

| | ஆண்டின் சாரசரி மரித்தல் விகிதம் (1,000 பேருக்கு) |
|---|---|
| 1911—21 | 48·6 |
| 1921—31 | 36·3 |
| 1931—41 | 31·2 |

அடுத்து வந்த கணக்கெடுப்பு அறிக்கையின்படி 1941—51-ல் 1,000 பேர்களுக்கு 27 பேராக மரித்தல் விகிதம் இருந்தது. பிறப்பு விகிதத்தைவிட மரித்தல் விகிதத்தில் விகிதம் குறைந்துள்ளது எனலாம். இரண்டு முக்கிய அம்சங்களால் இந்நாட்டின் மரித்தல் விகிதம் அதிகமாக உள்ளது. அவை (i) சிசுக்கள் எல்லையற்று மரிப்பது; (ii) பிள்ளைப் பேற்றின்போது மரித்தல். இந்த 1,000-ல் 27 பேர் மரித்தலில் 5 வயதுக்குட்பட்ட 11 சிசுக்கள் இறந்து படுகின்றன. 11 பேரில் 7 பேர்கள் 1 வயதுக்குட்பட்ட குழந்தைகள்[2] சிசுக்கள் இவ்வாறு மாண்டுபோவதின் காரணங்கள் பல உள்ளன.

1. இந்தியா—பாகிஸ்தான் மக்கள் தொகை—பக்-69.
2. 1951ஆம் ஆண்டில் கணக்கெடுப்பு அறிக்கை—பக்-188.

அவற்றில் மிகவும் பொதுப்படையாயுள்ளது ஏழ்மையே. நல்ல சக்தியைத் தரும் பால் இக் குழந்தைகளுக்குக் கொடுக்கப் பெற்றோர்களுக்கு வசதி கிடைப்பதில்லை. தொழிற்சாலைகளிலும், நிலங்களிலும் வேலை செய்யப்போகும் தாய் தந்தையர் குழந்தைகளுக்கு அபினைப் புகட்டிவிட்டுப் போய்விடுகிறார்கள். இதனால் அவர்கள் வேலை முடிந்து வருமளவும் குழந்தைகள் தொந்தரவு செய்யாது இருக்கும். பெண்டிரில் அடிக்கடி சாவு உண்டாகின்றது. இந்த விகிதம் அளவு கடந்துள்ளது. காரணம் இளவயதிலேயே கல்யாணம், அளவிற்கு மீறிக் குழந்தை பெறுதல், திறமையற்ற மருத்துவத்திற்கு உட்படுதல் பர்தாமுறை, பிரசவத்திற்குப் பின்னரோ அல்லது முன்னரோ வேலையினின்று ஓய்வின்றி உழைத்தல், பெண் உயிர் ஆண் உயிரைப்போன்று அவ்வளவு முக்கியமானதன்று என்ற தவறான எண்ணமும் கருத்தும் மக்களிடையே உலவி வருதல் ஆகிய இவைகளாம்.

8. **வாழ்வை எதிர் நோக்கி யிருத்தல்:** எதிர் நோக்கியிருக்கும் வாழ்வின் அளவு குறைவாக இருப்பினும், புள்ளி விவரப்படி கொஞ்சம் கொஞ்சமாக அதிகரித்துக்கொண்டே செல்கிறது என்பதையும் மரித்தல் விகிதம் மிகவும் அதிகமாக இருப்பினும் தொடர்ந்து குறைந்துகொண்டே வருகிறது என்பதையும் கீழ்வரும் விளக்கப்பட்டி காட்டுகின்றது.[1]

| | 1931—40 | 1941—50 | எதிர் நோக்கலில் அதிகரிப்பு |
|---|---|---|---|
| பிறப்பில்வாழ்க்கையை எதிர் நோக்கல் | 26 ஆண்டு 11 மாதங்கள் | 32 ஆண்டு 5 மாதங்கள் | 5 ஆண்டு 6 மாதங்கள் |
| 10 வயதிலிருந்து எதிர் நோக்கல் | 36 ஆண்டு 5 மாதங்கள் | 39 ஆண்டு | 2 ஆண்டு 7 மாதங்கள் |

9. **எண்ணிறந்த மக்கள் தொகை:** இதே அனுபவத்தின் பேரில் 1921—50-ல் ஏற்பட்ட அளவில் வளர்ச்சி பெற்றால் 1961-ல் 41 கோடியும், 1971-ல் 46 கோடியும், 1981-ல் 52 கோடி மக்களும் ஆவர்.[2] இதற்கேற்றபடி உற்பத்திப் பெருக்கமும் ஏற்படுமென்று கொள்ளுவோமானால் இதே வாழ்க்கைத் தரத்தைத்தான் பெற முடியும். முன்னேற்றம் காண்பதென்பது இல்லை. ஆகவே, மக்கள் தொகை யேற்றத்தைத் தடுத்துக் குறைத்து, உணவு உற்பத்தியைப் பெருக்க வழியுண்டா என முயலவேண்டும். இப்போதுள்ள நிலையில் மூன்றில் ஒரு பங்கு சாகுபடி அதிகம் செய்ய

1. 1951ஆம் ஆண்டில் கணக்கெடுப்பு அறிக்கை-பக்-187.
2. கணக்கெடுப்பு 1951 ஆண்டறிக்கை பக். 182.

இயலுமென்றும், அது 45 கோடி மக்களுக்குப் போதிய அளவு இருக்கும் என்றும் 1969-ல் 45 கோடி மக்கள் ஆவர். ஆயினும் 1951-க்கும் 1969-க்கும் உள்ள இடைக்காலத்தில் திட்டமிட்டுப் பிறப்பு விகிதத்தைக் குறைக்கப் பாடுபட்டு, நிரந்தரமாக, நிலைபெயராது 45 கோடியில் நிறுத்த முயலவேண்டும் என்று 1951ஆம் ஆண்டின் கணக்கெடுப்பு அறிக்கை[1] ஆலோசனையைத் தருகிறது. இதற்கான வழிவகைகளை ஆராய்ந்து இவ் வறிக்கை கூறுவதாவது: பொதுவாக இந் நாட்டில் பயனுள்ள மகப்பேறு ஏற்படுவதில்லை. முன்னரே மூன்றோ அதற்கு மேலாகவோ மக்களை ஈன்று, அவற்றில் ஒன்றாவது உயிருடன் உள்ள தாய்க்கு அடிக்கடி குழந்தைப்பேறு ஏற்படுகிறது. இதைத்தான் இலட்சிய மற்ற மகப்பேறு என இலக்கணம் கூறுகிறது. இதற்கென ஒரு தனி நிறுவனம் தோற்றுவித்து, நாடு முழுமையும் நல்ல பணியாளர்களை நியமித்து, நட்பின் வழியே எல்லாத் தாய்மார்களையும் கண்டு, தக்க காலத்தில் அவர்களுக்கு அபிப்ராயங்களைக்[2] கூறவேண்டும். இதன் வேலைகளை இங்கு விவரிப்போம். தாய்சேய் நலத்தைக் கண்காணிப் பாளர்களையும், விவரங்களைக் கொடுத்தும், குடும்பக்கட்டுப்பாட்டுத் திட்டத்தின் குறிக்கோள்களை எல்லோருக்கும் போதித்தும் கருத் தடைமுறைகளை எவ்வாறு கையாள வேண்டுமென்ற விளக்கங்களை அவ்வப்போது கொடுக்கவேண்டும். நெடிதுநாள் இருக்கும் ஒரு தற்கால நிறுவனம் மத்திய ஆராய்ச்சித் தகவல் நிலையமொன்றை ஏற்படுத்த வேண்டும். குறிப்பிட்ட கால எல்லையுள்ள அந்த நிறுவனம் (i) விலை குறைந்ததும் எளிதில் உபயோகிக்க வசதியாக உள்ளதுமான கருத்தடை முறைகள் எவை என்று கூறுதல் (ii) மாற்று முறைகள் எவை என்றும், எவ்வகையான உள்நாட்டு மருந்துகளைக் கொள்ளலாமென்றும் மலடாக்கச் செய்யும் அறுவை முறை (sterilization) இன்னும் இது சம்பந்தமான திருப்தியுள்ள பரிந்துரைகள் பல.

'இந்தியாவில் தொழில், விவசாய வளர்ச்சி'[3] என்னும் நூலில் கோலின் கிளார்க்கு என்பார் விவாதிக்கும்போது இந்தியாவில் தொழில் வளர்ச்சி பெற்று முன்னேறினால் மூன்றாவது தொழில் களான போக்குவரத்து, வர்த்தகம்; வாணிகம், கல்வி, நிருவாகம் இவைகளில் ஆண்டுதோறும் $1\frac{1}{4}$ சதவீதம் அதிகமாகும். அதாவது

1. கணக்கெடுப்பு 1951 ஆண்டறிக்கை—பக். 216

2. பொது மக்களிடையே பல ஆண்டுகளாகப் பணியாற்றி வருபவர்கள் கூறுவதாவது: பிறப்பைத் தடுக்கும் முறைகளுக்குச் சமயத்தில் எவ்வித எதிர்ப்பும் இல்லை. ரோமன் கத்தோலிக்க வகுப்பினர் இதைக் கொள்கையில் எதிர்க்கின்றனர். கம்யூனிஸ்டு நாடுகள் கூட அல்வாறே. பிறப்பினைத் தடுக்கும் முறைகள் வெகு எளிதிலும் அதிகப் பணம் செலவின்றியும் செய்துகொள்ள முடியும் என்றால் இதை விரைவில் பரப்பி விடலாம்.

3. 'கேபிடல்'—(இணைப்பு) 17, டிசம்பர், 1953.

இந்தியாவின் மக்கள் தொகையின் வளர்ச்சி ஒரே நிலையில் இருக்கும் என்கிறார். இதர நாடுகளில் இத் தொழில்களில் 3 சதவீதம் உள்ளது. இந்தியா தனி முயற்சியால் உயர்ந்த விகிதம் அடைந்தால் இது 20 ஆண்டுகளுள் ஜப்பானையும் மீறிவிடலாம். மக்கள் தொகையை அடக்க முயலவேண்டியது இல்லை. வாழ்க்கைத்தரம் உயரவேண்டுமானால் பிறப்பு விகிதம் குறையவேண்டும் என்று திட்டக்கமிஷன் கருதிக் கிளார்க்கின் அபிப்பிராயத்தை ஏற்றுக் கொள்ளவில்லை. அரசினர் திட்டக்கமிஷனின் பரிந்துரையை ஏற்றுக்கொண்டு, குடும்பக் கட்டுப்பாட்டு முறையை ஐந்தாண்டுத் திட்டத்தில் சேர்த்தனர். உலகின் பற்பல தேசங்களிலும் அதிகார பூர்வமாகக் குடும்பக் கட்டுப்பாட்டு முறையை மேற்கொண்ட நாடு இஃது ஒன்றே. இந்தியா மிதமிஞ்சிய மக்கள்தொகையின் காரணத்தால் அவதியுறும் நாடு என்பது உலகத்தின் ஏனைய நாட்டவர்கள் கண்டறிந்த உண்மை. [1]மண விகிதமும் அளவிறந்தது. அதைத் தடுத்து மக்கள்தொகையைக் கட்டுப்படுத்தும் முறைகள் ஒன்றும் இந் நாட்டிலில்லை. இந்த நிலை தொடர்ந்து வந்தால் அளவுக்கு மிஞ்சிய மக்கள்தொகையே காண இயலும்; பொருள் வசதியின்மையால் அடுத்து மக்கள்தொகையில் பெருக்க மேற்படும். அவ்வாறான வசதிகளிருப்பின் சற்றுக் காலம்கடந்து ஏற்படக் கூடும். தொழிற்புரட்சி நடந்த இங்கிலாந்துடன் நம் நாட்டின் பொருள் வளர்ச்சியையும் அதற்கான ஈடுபாடுகளையும் ஒப்பிடுவது முறையன்று. நம் நாட்டில் உள்ள பிறப்பு விகிதத்திற்கு ஒப்பாக உலகில் எந் நாட்டிலுமில்லை. அதேபோன்று மரித்தல் விகிதமும் கூடுதலானதுதான். ஐயம் தெளிவுற மக்கள் உணவு காரணமாக உயிரோம்புகிறார்கள் எனத் தெரிகிறது. காப்பாற்றும் சக்தியளவுக்கு மேலான அளவில் குழந்தைகள் உற்பத்தியாகின்றன. காப்பாற்ற இயலாமையால் அவை மடிகின்றன. குழந்தை மணத்தைத் தடுத்தது மக்கட் பெருக்கத்தைக் குறைப்பதற்கே. ஆனால், எதிர்நோக்கியதற்கு மாறாக மக்கள் தொகை அதிகரித்துள்ளது. விதவை மறுமணம் புரியலாமெனச் சட்டம் அமுலாக்கியதாலும் அதிகப்படி மக்கட் பெருக்கம் தோன்றி

1. எக்காலமும், எவ்வகை வசதிகளிருப்பினும், குறைபாடுகள் தோன்றினும் ஒவ்வொரு நாட்டிற்கும் செம்மையாக அமைந்த மக்கள் தொகை இருக்கவேண்டும். இதையே உத்தம அளவை (Optimum) எனக் கூறலாம். உத்தம அளவையிலிருந்து கூடுதலாவது குறைவாவது ஏற்படின் மக்களது தேசிய வருமானம் தலைக்கு உள்ள அளவையில் கூடுதலாகலாம் அல்லது குறைபாடு தோன்றலாம். தவறற்ற புள்ளிவிவர முறையும் பொருளாதாரக் கணக்கெடுப்பும் இல்லாத காரணத்தால் நாட்டின் உத்தம அளவை நிர்ணயிக்க இயலவில்லை. ஏன், இதர நாடுகளிலும்கூட அவ்வாறேதான் உள்ளது. இப் பகுதியில் குறிப்பிட்ட பொது ஆய்வுகளை நாட்டில் ஈடுபடுத்தி அவற்றின் முடிவுகளிலிருந்து வருவனவற்றைக் கொள்ளத்தக்கனவாக ஏற்றுக்கொள்ளுகின்றனர் நடைமுறையில் நன்கு பரிசிலனை செய்யவேண்டுமானால் உட்பிரிவு, மதம், சாதி, தொழில், இனம் வாரியாகப் பிரித்து, அலசிவருதலே நலம் (ஜாதார் அவர்களும் பேரி அவர்களும் எழுதிய இந்தியப் பொருளாதாரம் என்ற நூலில் 9 வது பதிப்பில் 1 புத்தகம் பக். 56)

யுள்ளது. மருத்துவ உதவிகள், சுகாதாரமுறை இவைகளைச் செம்மைப்படுத்தியதால் மரித்தல் விகிதம் முற்காலங்களைவிட எதிர்பார்த்த அளவு குறைந்துள்ளது. ஆயினும் பிறத்தல் விகிதம் குறைவுபடவே இல்லை. தவறற்ற விவரமுள்ள தேசீய வருமானக் கணக்கை அமைப்பது துர்லபம். நாட்டின் திட்ட அமைப்புக் களினால் பொருளாதார முன்னேற்றம் ஏற்பட்டுள்ளது. முன்பெல் லாம் மக்கள் அவதியுற்றனர். உணவின்றி, ஆடையின்றி, இருக்க வசதியின்றி இருந்தனர். 1921 ஆம் ஆண்டின் பிறகு உற்பத்திப் பெருக்கம் ஏற்படவில்லை என முன்னரே கூறப்பட்டது. அதிக செறிவுள்ள மக்கள் தொகையினால் தொழில் வளர்ச்சிக்கு ஓர் இடைஞ்சலே அல்லாது தொழில் முறை செம்மையாகும் என்ற திரு. கோலின் கிளார்க்கு அவர்கள் கொள்கையை ஒத்துப்போவ தன்று. நாட்டில் நவீன காலத்தில் உள்ள போக்குவரத்து முறை, பெருந் தொழில்கள் இவைகளுக்கான தேவைகளையும் விஞ்சி யுள்ளது நம் நாட்டின் மக்கள் தொகை. இவர்கள் அனைவருக்கும் வேலை தேடித் தருவதால்மட்டும் நாட்டின் அவதி முடிவுபெறுது. அவர்களுடைய எண்ணிக்கையை எவ்வகையில் குறைவுபடுத்த முடியுமென்பதே நாம் செய்யவேண்டிய பணி. தொழிலாக்கத் தால் மக்கள்தொகையைக் குறைக்கமுடியும் என்பது தவறு. இங்கிலாந்திலே நிகழ்ந்தது போலத் தொழிற்புரட்சியின் முதற் கண் மக்கள் தொகை கூடியது. வாழ்க்கைத் தரம் உயர உயர மக் கள் தங்கள் குடும்பக் கட்டுப்பாட்டினால் வாழ்க்கைத் தரத்தை வீழ்த்தாது நிலைநாட்டி வைத்துக்கொள்ள முடிந்தது. பொருள் மேம்பாடு அடைந்தவர்கள் மக்கட்பேறு அடையும் அளவுக்கான உடல் வன்மை பெற்றிருக்கவில்லை. ஏழையோ விஞ்ஞான முறையைக் கைக்கொள்ளாது இருப்பதால் அதிகம் மக்கட் பெருக்கத்திற்கு ஊன்று கோலாகுன். மனித உடல் நூலின்படி இஃது எதிரிடையாகிறது. பொருள் மிகுந்தவர் வேண்டுமென்றே உடலிச்சைக்கு ஈடு கொடுக்காதது உடல் வன்மையைப் பெற்றிராததா லன்று. ஏழை மக்கள் கவ னிப்பு இன்றித் தான்தோன்றித்தனமாக நடந்தும், கருத்தடை முறைகளை அறியாதும், கருத்தடை முறைகளை அனுபவத்தில் கொண்டுவர வசதியில்லாத காரணத்தாலும் இம்மாதிரி நிலைக்கு இலக்காகின்றனர். ஆகையால் குடும்பக் கட்டுப்பாட்டிற்கு, அர சினர் உதவியும், அதற்கான பிரசாரங்களும் தேவை.[1]

1. அரசினர் இது சம்பந்தமாகக் குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்டத்தைக் கைக் கொண்டும்கூட நடப்பில் உள்ள மக்கள் தொகைப் பெருக்க விகிதத்தைக் குறைக்க முடியவில்லை. திட்டக்கமிஷன் இந்த ரிதம் (rhythm) முறையை அனுமதிக்க விரும்புவதில்லை. 'சமூகம் இயல்பாகவே கட்டுப்பாடுகளை உணர்ந்து அதனால் அடை யும பலனைப்போல் ரிதம் (rhythm) முறையில் காண இயலாது' என்கிறார்கள். ரிதம் (rhythm) முறை தக்க பலனைக் கொடுப்பதில்லை எனப் பலர் கருதுகிறார்கள். அயல நாடுகளில் உள்ள இதர முறைகளை நம் நாட்டிலும் அனுசரிப்பது நலம்.

**10. ஐந்தாண்டுத் திட்டத்தில் காணப்படும் சுகாதார முறைகள் :** மிகவும் கேடான உடல் வன்மையும் எளிய தேக அமைப்பும் உள்ள அந் நாட்டு மக்கள் எம் முறையிலும் பொருள் வளர்ச்சி பெறமுடியாது எனலாம். நோய்கள் பல இந்தியாவில் தோன்றி மக்களைக் கொன்றுவிடுகின்றன. எஞ்சிய பேர்கள் பலம் இழந்து, குருதியின்றிச் செயலற்றிருக்கிருர்கள். இந்தியாவில் ஏன் இவ்விதமான சுகாதாரக் குறைவு ஏற்பட்டுள்ளது என ஆராய முற்படின் துப்புரவுக் குறைவு, நல்ல சத்துள்ள உணவு கிடைக்காமையால் நோய்க்கு இலக்காகும் உடல், பொதுக்கல்வியின்மை, சுகாதாரக் கல்வி இன்மை, ஏழ்மையின் துன்ப நிலை இவைகளே யாம். சரியான மருத்துவ வசதியின்மையால் வேண்டிய அளவு மருத்துவ சுகாதார போதனு முறை அவசியம் என வற்புறுத்த வேண்டும். பொதுமக்களுக்கு உதவிபுரிய வேண்டிய அளவிற்குக் கூட மருத்துவ நிறுவனங்கள் இல்லை. 1949 ஆம் ஆண்டின் சராசரிக் கணக்கின்படி நகர் வாழ் மக்கள் 24,000-க்கும் கிராமப் புறங்கள் வாழ் மக்கள் 50,000-க்கும் ஒரே நிறுவனம் அமைந் திருந்தது.

சுகாதாரத் திட்டங்களில் முதலாவதாகக் கீழ்க் கண்டவைகளைக் குறிப்பிட்டுள்ளனர். (i) நீர் வழங்குதலும் சுகாதார முறைகளும், (ii) மலேரியாவைக் கட்டுப்படுத்துதல், (iii) சுகாதாரப் பிரிவுகள், சுற்றி வருகிற சுகாதாரப் பிரிவுகளின் உதவியால் கிராம மக்களுக்குத் தற்காப்பு முறைகளைப் போதித்தல், (iv) தாய் சேய் நலனைக் கோரி மருத்துவ உதவி, (v) சுகாதாரக் கல்வி, (vi) மருந்துகள், மருத்துவ முறைகள் இவற்றில் போதிய அளவு வைத்துக்கொள்ளுதல், (vii) குடும்பக் கட்டுப்பாடும் மக்கள் தொகையைத் தடுப்பு முறைகளும்.

சுகாதாரத் திட்டத்தின்படி முதல் ஐந்து ஆண்டுத் திட்டத்தில் முறையே மத்திய இராச்சிய அரசினர் ஒதுக்கிவைத்த தொகை ரூ. 99·55 கோடி. அதில் மத்திய அரசினர் பங்கு 17·87 கோடி. சில குறிப்பிட்ட திட்டங்களிலும், உயர் மருத்துவப்படிப்பு, ஆராய்ச்சி இவைகளில் மத்திய அரசினர் இராச்சிய அரசினருக்கு உதவி செய்வார்கள். மலேரியா சுரம் நாட்டின் பெருந்தலைவலி. இதைச் சுகாதாரப் பிரச்சினையாக்கக் கருதி இதற்கு முதலிடம் கொடுக்கப்பட்டிருக்கிறது. இராச்சிய அரசினர் தங்கள் திட்டங் களில் 7·04 கோடி ரூபாயை இதற்கென்றும், மத்திய அரசினர் இதற்கென 10 கோடி ரூபாயையும் ஒதுக்கியுள்ளனர். அடுத்த படியாக முக்கியமானது, எலும்புருக்கி நோய் (Tuberculosis). மத்திய, இராச்சிய அரசினர் இதற்கான தக்க முயற்சிகள் செய்து

இதைக் கட்டுப்படுத்தி வருகின்றனர். இதன் முக்கிய இயல்பு களாவன : உடல்நலம் பெறுமிடம் அமைத்தல், மருத்துவ மனை களில் அதிகப்படியான நோயாளிகளுக்கான இடம் கொடுத்தல், மருந்து கொடுத்தல்,பி.ஸி.ஜி.பால் வைக்கும் குழுக்கள் அமைத்தல். பிள்ளைப்பேறு, குடும்ப நலத் திட்டத்தின்கீழ் ஒவ்வொரு மருத் துவ மனையில் இதற்கென உள்ள பிரிவை விஸ்தரித்து, இது சம்பந்தமான உயர்படிப்புக்களை கல்கத்தாவில் உள்ள மருத்துவக் கல்லூரியில் திட்டப்படி நடத்தி வருகிறார்கள். இங்கு மருத்துவரும் செவிலியரும் நல்ல பயிற்சி பெறுகின்றனர். கிராம, நகர போதனா முறைக் கல்லூரிகளை நிறுவி, அவற்றின் மூலம் செவிலியருக்கும், மருத்துவச்சிகளுக்கும் பயிற்சி கொடுக்கப்படுகின்றது. சுகாதார வசதிகளில் மேம்பாடான முறையில் சமுதாய வளர்ச்சித் திட்டத் தின் கீழ் எல்லாப் பகுதிகளிலும் செம்மையான ஏற்பாடுகள் செய் யப்பட்டுள்ளன. மத்திய, இராச்சிய அரசினரின் திட்டங்களில் நல்ல அனுபவம் பெற்ற சுகாதார அலுவலரை நியமித்து நடத்த முதலிடம் கொடுக்கப்பட்டுள்ளது.

**11. குடும்பக் கட்டுப்பாடு :** மிதமிஞ்சிய மக்கள் தொகை யைக் கட்டுப்படுத்துவதோடல்லாது, தாயின் உடலோம்பலுக் கும், குழந்தைகளைச் செவ்வனே வளர்க்கவும் குடும்பக் கட்டுப் பாடும் தேவை. மற்றும் குழந்தை பிறந்த எவ்வளவு கால இடை வெளியில் மற்றொரு குழந்தை பிறக்கவேண்டும் என்ற நியதி தேவையானது. பொது நல சுகாதாரத்தில் இது ஒரு முக்கிய மான பகுதியாகும். குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்டங்களை ஈடேற்ற மத்திய சுகாதார இலாகாவின் திட்டப்படி 65 இலட்சம் ரூபாய் இதற்கென ஒதுக்கப்பட்டிருக்கிறது. இத் திட்டத்தில் (i) கலியாணமானவர்கள் கேட்க விரும்பினால் விளக்கம் கூற அரசினர் மருத்துவ மனைகளிலும் தனிச் சுகாதார விடுதிகளிலும் இதற்கென அதிகாரியை நியமித்தல், (ii) கள ஆராய்ச்சி கள் நடத்திக் குடும்பத்தின் அமைப்பு, தேவைகள், அவர்கள் இதை ஏற்றுக்கொள்ளும் தன்மை, இதனால் அந்த வட்டாரத்தில் உள்ள மக்கள் தொகை கூடுகிறது அல்லது குறைகிறது என்ற ஆராய்ச்சி இவைகளை நடத்துதல், (iii) இத் துறையில் மக்களுக்குப் போதனாமுறை செய்து, அவர்களை அதில் ஈடுபடச் செய்தல், (iv) இதில் ஈடுபடும் மக்களின் விருப்பம், அதில் உள்ள தரம், மாதிரி குடும்பத்தின் அளவு இவைகளைக் கண்ணுறல், (v) சமுதாயப் பொரு ளாதார மாறுதல்கள் மக்கள் தொகையை எவ்வாறு பாதிக்கின்றன, (vi) விஞ்ஞான முறையில் பரிசீலனை செய்து, தயார் செய்த புள்ளி

விவரங்களை ஒன்றுகச் சேர்த்து, அந்தத் தகவல்களைத் தொழிலில் ஈடுபட்ட அலுவலர்களுக்கு அவ்வப்போது கொடுத்தல்.[1]

12. **உணவு:** இந்திய உணவில் கீழ்க்கண்ட குறைபாடுகள் உள்ளன. (1) கலோரிச் சூடு குறைவு. அதாவது இயல்பானதைக் காட்டிலும் 24 சதவீதம் குறைவு. (2) சிலவற்றில் விட்டமின் சத்துக்களும் ஊட்டமளிக்கும் பொருள்களும் இல்லை எனக் கருதி யுள்ளனர். இவ் விரு குறைபாடுகளும் கண்டிப்பாக நீக்கப்பட வேண்டும். விஞ்ஞான முறையில் குணத்தைவிட எண்தான் கூடுதலானது எனக் கூறுவது சரியன்று. அவை யிரண்டும் ஒன்றை யொன்று ஒட்டியுள்ளன. குணக்குறைவினுல் ஏற்பட்டுள்ள தீங்குகளாவன இரவில் அந்தகனுகிவிடுவது, ரிக்கட்ஸ், பெரிபெரி என்ற நோய்கள் உடலில் தோன்றுவது, பித்த கோசம் (liver) கல் போன்று ஆகிவிடுதல் (cirrhosis). ஒரு பத்தாண்டுகளாக உணவு முறை வரவரச் சீர்கேடு அடைந்து வந்துகொண்டே இருக்கிறது. உணவுப் பங்கீடு நடை முறையில் உள்ளபோது நகரங்களிலும், பட்டணங்களிலும் வாழ்ந்து வந்த மக்களில் மத்தியதரக் குடும்பத்தினர், அவர்க்கும் சற்றுத் தாழ்ந்த வகுப்பினர் மிகவும் அல்லல் பட்டனர். அவர்கள் உண்ண நல்ல வகையான தானியமும் கிடைக்கவில்லை; அளவும் போதியபடி கிடைக்கவில்லை. உபரி விளைச்சல் உள்ள பகுதிகளில் அதிக சிரமம் ஏற்படவில்லை. தானியப் பங்கீட்டு முறையை அமலாக்காத இடங்களில்தான், அதாவது கிராமங்களில்தான் இதன் கடுமை வெகு அதிகமாக இருந்தது.

இராச்சியத்திற்கு இராச்சியம் உணவு முறைகள் மாறியுள்ளன. மேனுட்டு முறைப்படி அவை தரமற்றவை, திருப்தியற்றவை என்றுலும் கோதுமை, கம்பு உண்பவரைவிட அரிசி உண்ணும் பகுதியினர்தான் மிகவும் மட்டமான நிலையில் உள்ளனர். எங்கு அரிசி முதன்மையிடத்தைப் பெறும் உணவாக உள்ளதோ, அங்கெல்லாம் இதர பருப்புத் தானிய வகைகளையும் உடன் சேர்க்கவேண்டும், அரிசியை முறைப்படி பதப்படுத்தி அதன் சத்துக்குறையாது சமையல் செய்தால் அதன் தரம் குன்றுது; நல்ல பலனை யளிக்கும். இதில் மாவுப் பொருள் சர்க்கரைகளுடன் புரோடீன், இரும்பு, கால்ஸியம், பாஸ்வரம், நிணம், A, B விட்டமின்கள் இவை உள்ளன. கைக்குத்தல் அரிசியில் பாஸ்வரம், விட்டமின் B இவை

1 குடும்பக் கட்டுப்பாடுள்ள பெற்றோர்களுக்கு மான்யம் கொடுக்க அரசினரின் குடும்பக் கட்டுப்பாட்டு ஆராய்ச்சித் திட்டக் குழுவினர் பரிந்துரைக்கின்றனர். இதற்கான ஆய் கருவிகளுக்கும் தளவாடச் சாமான்களுக்கான ஒரு மான்யத் தொகையை ஒரே தடவை கொடுப்பது என்றும், குடும்பக் கட்டுப்பாட்டு அலுவலக வாடகை சம்பளம், இதர செலவு இவைகளுக்காக நிரந்தரமாக மான்யம் வழங்குதல் வேண்டும் என்றும் பிரசாரத்திற்கும் மான்யம் தரவேண்டும் என்றும் கூறுகிறது.

அதிகம் காணப்படுவதால் இவை ஊட்டமளிக்கின்றன. அரிசியின் மேற்புறத்தில் பாஸ்வரம் உள்ளது. அரிசி தூய வெண்மையாக இருக்கவேண்டும் என்ற நோக்கத்துடன் தீட்டத்தீட்ட இந்தப் பாஸ்வரம் வீணுகித் தவிட்டுடன் கலந்துவிடுகின்றது. இம்மாதிரி தீட்டப்பட்ட அரிசியின் மாதிரிகளை உற்று ஆராய்ந்தபோது 70 முதல் 88 சதவீதம் வீணுனதாகக் கருதுகிருர்கள். அரிசியின் வெளிப்பகுதிகளில் நல்ல விட்டமின் சத்துள்ளது. தவருன முறையில் சாதம் பக்குவம்செய்து அவற்றை இழந்துவிடுகிருர்கள். சத்தற்ற அரிசியை நிரந்தரமாக உபயோகிப்பதால் பெரி பெரி என்ற நோய் வருகிறது. பச்சரிசியைவிடப் புழுங்கல் அரிசிக்கு ஊட்டம் கொடுக்கும் சக்தி அதிகம் எனக் கருதப்படுகிறது. அரிசியைப் பல தடவைகள் கழுவிப் பின்னர் சமைக்கத் துவங்குவதில் அரிசியில் உள்ள ஊட்டமளிக்கும் சக்திகள் வீணுகிப் போகின்றன. இவ்வாறு வீணுகிப்போவது நீர் அளவையும், எத்தனைத் தடவை கழுவப்படுகின்றன என்பதைக் குறித்தும் ஏற்படக்கூடும். அரிசியைச் சமையல் செய்யும்போது அதில் உள்ள நீரும் வீணுக்கப்படுகிறது. இதைத் தடுக்க அதே நீரை அந்தச் சமையலில் சேர்த்துப் பொங்கியோ அல்லது சமைக்கவேண்டிய அளவு நீர் சேர்த்துக்கொண்டோ தவிர்க்கலாம். இவ் விவாதத்திஞல் அரிசியை முக்கிய உணவாகக் கொள்ளும் மக்கள் தங்கள் உணவு முறைகளைச் சரிவர மாற்றி அமைத்தால் நல்ல பலனைக் காணலாம் என்று கூறவே எழுதப்பட்டது.

திட்டமானதும் சமனுனதுமான ஓர் உணவு முறையைக் கையாள்வது கடினம். ஏனெனில் இந் நாட்டில் மரக்கறி உணவினைக் கொள்பவர் பெரும்பாலோர். அசைவ உணவைக் கொள்ள விரும்பும் மக்களுக்குத் தேவைக்கேற்ப மீன், மாமிசம், புலால், முட்டை இவைகள் இயல்பான விலைக்குக் கிடைப்பதில்லை. ஆதலால், மாமிச உணவின் விலை மரக்கறி உணவைவிட மிதமிஞ்சியது. நாடெங்கும் வறுமையும், ஏழ்மையும் தாண்டவமாடுகின்றன. ஆயினும் உணவு வகைகளில் வட இந்தியர் உட்கொள்ளும் உணவு தென்னிந்தியர் உட்கொள்வதைவிடத் தரத்தில் உயர்ந்தது. ஏழ்மையின் காரணத்தால் தவருன உணவு வகைகள் மிகவும் வேறுபாடு பெற்றுள்ளன. ஆதலால் விலையேற்றமின்றி மிகவும் வறியவர்கூட உண்ணத்தகும் சத்துள்ள உணவினை நாட்டில் ஈடுபடுத்த முயல வேண்டுவது இன்றியமையாதது. அண்மையில் இது சம்பந்தமான ஆராய்ச்சிகள் நடத்தப்பட்டன. இதில் ஈடுபட்ட ஆராய்ச்சியாளர்களான டாக்டர் ஆக்ராய்டு, ஸர், ஜான் மெகா, ஸர். ராபர்ட்மக்கரிஸின் இவர்கள் நீண்ட ஆராய்ச்சிகளின் பிறகு இந் நாட்டின் மக்களுக்குத் தேவை

யான அனுபவ முறைகளைக்கூறி, இப்போதுள்ள உணவினைப் பலப்படுத்தக் கூறியுள்ளனர். இந்த ஆராய்ச்சியின் முடிவினை நம் நாட்டு மக்களுக்குப் பயனுள்ளதாக்க வேண்டுமானுல் இன்னும் அநேக பணிகள் செய்யவேண்டும். நோயினைத் தடுக்கக் கூடியதும், போஷணை அளிக்கவல்லதுமான உணவு எவ்வகைப் படும் என்று மேற்கொள்ள ஆராய்ச்சியின் மூலம் அறிந்து, அதற் கான உணவுப் பொருள்களை உற்பத்திசெய்ய முயல வேண்டும். அரைப் பஞ்சத்திலும் உணவின்மையால் தவிக்கும் மக்களுக்கு அதிகப்படி உணவு தேவைதான் என்ருலும் ஒப்புயர்வற்றதும் சீரானதுமான உணவு வேண்டியது அவசியம்.

13. **கல்வி :** தொழிலாளி, கைவினைஞன், விவசாயி இவர்கள் தங்கள் தொழிலில் சிறப்புடன் வேலைசெய்யக் கல்வி எவ்வளவு இன்றியமையாதது என விளக்கத் தேவையில்லை. இந் நவீன உலகில் புதிய திறன், சந்தை நிலவரம், தேவையான கொள்கைகள் இவைகளை எழுதியே தெரிவிக்கின்றபடியால் படிப்பின் அவசியம் இங்கு வெள்ளிடை மலையாக ஒளிவிடுகிறது. நாட்டின் செயல்களில் புத்திக் கூர்மையுடன் பொதுமக்கள் ஈடுபடு வராகில் மக்களாட்சி உள்ள நாட்டின் முன்னேற்றம் அந்நாட்டின் கல்வியையே ஒத்து அமையும் என்று திட்டக் கமிஷன் கூறுகிறது. மேலும் திட்டத்தின் வெற்றி மக்களிடையே உள்ள நல்லெண்ணத்தின் காரணம் தோன்றும் கூட்டுறவாலும், ஒழுக்க மான மக்களும் அவர்களில் தலைமை தாங்க முன் வருபவரின் ஒற்றுமையாலுந்தான் எனக் கூறுகிறது. நம் கல்வியில் கண் கூடாகத் தெரியும் குற்றம் வெறும் இலக்கியமும் கொள்கை முறை களும் அமைந்துள்ளமையே. இவற்ருல் பெரும்பாலான மாணவர் களுக்குச் செய்ம்முறைப் பழக்கமின்றியும், தாமாகவே தனித்துச் செய்யும் இயல்பின்றியும், ஊக்கமின்றியும் எதையும் ஏற்றெடுத்து நடத்தும் சக்தியின்றியும் போய்விடுகிறது என்பதும் கூறப்படு கிறது. இது சம்பந்தமான குழுக்களும் அறிக்கைகளும் வருமாறு: அப்பெட்டும் உட்டும் தயாரித்த அறிக்கை (1937), திரு ஜாகிர் ஹுஸேன் அறிக்கை (1937), பம்பாய் அரசினரால் நிறுவப்பட போதனுமுறைக் கல்விக் குழுவினரின் அறிக்கை (1938). இவையனைத்தும் முன் சொன்னவற்றை வலியுறுத்துகின்றன. மகாத்மா காந்தியடிகளின் ஆதாரக் கல்விக்குத் திரு. ஜாகிர் உஸேனின் அறிக்கை முழு ஆதரவு கொடுத்திருக்கிறது. கல்வி போதனை, கைவினை கைத்தொழிலின் அடிப்படையில் இருந்தால் தான் பயனுள்ளதாக அமையும். பள்ளியில் இக் கைத்தொழில் இருந்தால் பிற்காலத்தில் உபயோகமான வேலை நடக்கும். இது சம்பந்தமாக நாடு முழுமையிலும் பரிசோதனைகள் நடத்தப்பட்டு

வருகின்றன. இதுவரையிலும் இவைகளால் கண்ட முடிவுகள் போற்றத்தக்கனவாக இல்லை எனலாம். இதன் பொருள் என்ன வெனில், முறைகளிலும் ஆசிரியர்களின் தரத்திலும் மாறுதல் ஏற்படவேண்டுமெனலாம். இந்தத் திட்டத்தையே கைவிட வேண்டுமென்பதில்லை. அடிப்படைக் கல்வித் திட்டம் துவக்கப் பள்ளிகளில் அநேக பாடபோதனைகளில் மிகவும் பயனுள்ளதாக அமையக்கூடும்; மற்றும் சில பயனற்றுப் போய்விடக்கூடும்.

முதியோர் கல்வியினால் எல்லாத் துறைகளிலும் முன்னேற்றம் ஏற்படும். மேலும் அறியாமையை அகற்றவல்லது முதியோர் கல் வியை இராப் பாடசாலைகளில் போதித்தலும் தொடர்ச்சி பள்ளிகள் மூலமாக நடத்தலுமாம். வெறும் ஏட்டுப் படிப்பினை மட்டும் கொள்ளாது நவீன முறைகளான ஒலிபெருக்கி, நிழற்படம், புகை வண்டி முதலிய சாதனங்கள் மூலமும் கற்பிக்க வேண்டும்.

சாதாரணப் படிப்பைப் போதிப்பதோடல்லாது தொழிற்கல்வி, கைவேலை சம்பந்தப்பட்ட படிப்பினையும், விவசாயப் படிப்பு, வர்த் தகப்படிப்பு இவைகளையும் சீரிய முறைகளில் கற்பிப்பது இன்றி யமையாதது. இவைகளைச் செம்மையாகக் கையாண்டால்தான் திட்டப்படி நாட்டின் முன்னேற்றத்தைப்பற்றிச் சிந்தனை செய்ய இயலும்.

நாடு திட்டப்படி முன்னேறுவதற்கெனத் திட்டக் குழுவினர் வகுத்த திட்டத்தில் எல்லாப் பகுதிகளிலும் முன்னேற்றங்களைக் கூறியுள்ளனர்.

நமது கல்வி அமைப்பைச் சீராக்கி மாற்றியமைத்தலும், அதன் பற்பல பகுதிகளைச் சீரிய முறையில் பிணைத்து, அதன் வெவ்வேறு பாகங்களை இன்னும் வன்மைப்படுத்தி விஸ்தரிப்புச் செய்ய வேண்டிய பகுதிகளில் விஸ்தாரப்படுத்துதலும், அடிப்படைச் சமுதாயக்கல்வியின் முக்கியத்தை வற்புறுத்துதலும், தற்போதுள்ள உயர்நிலைப் பள்ளி, கல்லூரி, பல்கலைக் கழகப் படிப்பு இவைகளைச் சிறப்புடன் மாற்றியமைத்தலும், நாட்டுப்புற மக்களுக்கான சூழ் நிலைக்குத் தக்கவாறு உயர்படிப்பினைக் கொடுத்தும், பெண் கல்விக் கான வளர்ச்சி முறைகளை வகுத்தலும், ஆசிரியைகளுக்கான போதனுமுறை வசதி கொடுத்தும், ஆதாரக் கல்வி ஆசிரியர்களைப் பயிற்றுவித்தும், சம்பள விகிதப்படி உயர்த்தியும், பணியாற்றும் கோட்பாடுகளை நலனுள்ளதாக்கி முடிவில் பின் அடைந்த இராச்சியங்களிலும் பகுதிகளிலும் அங்குள்ள மக்கள் தொகைக்கும் இதுகாறும் பெற இயலாத கல்வியைப் போதிக்க முயலுதலும் நம் நாட்டின் தற்கால இன்றியமையாத தேவைகள் எனலாம்.

**14. சமூக கல்வி :** எந் நாட்டில் பெரும்பாலான மக்கள் கல்வியறிவின்றி உள்ளனரோ, அந் நாட்டில் தேசீய வளர்ச்சிக்குச் சமூகக் கல்வி இன்றியமையாதது. மத்திய அரசினரின் திட்டப்படி ரூபாய் 7·5 கோடி சமூகக் கல்விக்கென ஒதுக்கி வைக்கப்பட்டுள்ளது. அநேக மக்கட் பகுதிகள் இதில் ஒத்துழைக்க, குறிப்பாகக் கிராமப் பஞ்சாயத்துக் கூட்டுறவுச் சங்கங்கள், தொழிற்சங்கங்கள் இவைகளின் ஒத்துழைப்புத் தேவை. ஒவ்வொரு பள்ளியும் கல்லூரியும் இச்சமூகக் கல்வியை அக்கம் பக்கங்களில் பரப்புவதற்குப் பாடுபட வேண்டும்.

**15. தொழிற் கல்வி :** இதன் பல பகுதிகளையும் பற்றித் திட்டத்தில் ஆராய்ந்துள்ளனர். அவர்களது பரிந்துரைகளில் சில வருமாறு : (i) இளைஞர் பட்டத்திற்கும் மேம்பட்ட கல்விக்கான வழியும் ஆராய்ச்சிக்கான சௌகரியங்களும், (ii) அச்சுத் தொழில், கம்பளம் நெய்யுந் தொழில், பட்டு நெசவுத் தொழில், தொழில் நிருவாகப்படிப்பியல் இவற்றுக்கான பாடத் திட்டங்களும் போதனு முறை நிறுவனங்களும் ஏற்பாடு செய்தல், (iii) அகில இந்தியத் தொழிற்கல்விக் குழுவினரின் சான்று அளிக்கும் பயிற்சிகளுக்கான வழிகள் செய்தலும், அதைத் தேசீய முறையில் நடத்தலும், (iv) கை வினைஞர், பயிற்சியாளர்களுக்கான போதனு முறைப் படிவங்கள் அமைத்துக் கொடுத்தல், (v) பிறிதொரு முறைப்பயிற்சி அளித்தல், (vi) நாட்டுப்புறக் கைவினைஞருக்குத் தக்க போதனைகளைக் கொடுத்து அவர்களை மேலும் வளர்ச்சியடையும்படிச் செய்ய நிறுவனம் அமைத்தல் முதலியன.

**16. பெண் கல்வி :** பெண்மணிகளுக்கு எவ்வெத்துறையில் ஆர்வம் அதிகம் உள்ளதென்பதைக் கண்டு அதற்கேற்பப் பாட வசதிகள் அமைத்தல். வீட்டிலேயே இருந்து கொண்டு உயர்படிப்பினைகளைப் பெறவும், உயர்தரக் கல்லூரித் தேர்வுகளை எழுதவும் வசதிகள் கொடுத்தல். கைவேலை, இயல்பான கல்வி இவைகளைக் குறுகிய காலப் பயிற்சிகள் மூலம் மகளிருக்குப் போதித்தல்.

**17. மாணவ மாணவிகளின் கைவேலைகளும் சமூக சம்பந்தமான வேலைகளும் :** தொழில் புரியவும், ஓய்வு நாட்களில் முகாம்கள் நடத்தி, அதில் வாலிப மாணவர்களுடைய சமூக மனப்பான்மையை வளர்க்கவும், திட்டத்தில் 1 கோடி ரூபாய் ஒதுக்கப்பட்டிருக்கிறது. 18 முதல் 22 வயது வரையுள்ள மாணவ மாணவிகள் ஒழுக்க முறையைக் கையாண்டு, தேசீய சேவை செய்தல் வேண்டும். இவற்ருல் நல்ல மேம்பாடடைந்த மக்களா

கவும் தொழிலாளர்களாகவும் அவர்கள் மாறக்கூடும். தொடக்கத்தில் சிறு சிறு எண்ணிக்கையில் இதைக் கையாள நோக்கமுண்டு. முதுகலைப்பட்டம் பெற விழையும் மாணவ மாணவியருக்கு மூன்று முதல் ஆறு மாதங்கள்வரை இம் மாதிரியான தேசீய சேவையைக் கட்டாயப்படுத்த முடிவு செய்துள்ளது.

**18. நகரங்களும் நாட்டுப்புறங்களும்**: இந்தியா பொதுவாகக் கிராமங்கள் நிறைந்த நாடு. 1951ஆம் ஆண்டில் நடத்திய கணக்கின்படி 5,58,089 கிராமங்களும் 3,018 நகரங்களும் இந்திய யூனியனில் உள்ளன என்று கூறப்பட்டது. இந் நாட்டின் மொத்த மக்கள் தொகையான 3,569 இலட்சத்தில் 2,950 இலட்சம் பேர் கிராமங்களிலும் 619 இலட்சம் பேர் நகரங்களிலும் வசிக்கின்றனர். இந்தியா முழுமைக்கும் நகர மக்கள்தொகை 17·3 *சதவீதம்*. இது *சுமார்* அறுவரில் ஒருவராகக் கணக்கெடுத்துக் கொள்ளலாம். ஆயினும் இந்த விகிதம் பிரிவுக்குப் பிரிவு மாறுபடுகிறது. மேற்கிந்தியாவில் 31·2 சதவீதம் அதிகரித்து கிழக்கிந்தியாவில் 11·1 சதவீதமாகக் குறைகிறது. இதர நான்கு உட்பிரிவுகளாவன: வட மேற்கு இந்தியா (21·4) தென்னிந்தியா (19.7), மத்திய இந்தியா (15·8), வட இந்தியா (13·6). கணக்கெடுப்பு அறிக்கை நகர வாழ் மாந்தரின் கணக்கினைக் கீழ்க் கண்டவாறு பாகுபாடு செய்து விளக்கியுள்ளது: (i) 1 இலட்சத்துக்கும் மீறிய மக்கள் தொகையுள்ள நகரங்கள், (ii) 20,000 முதல் 1,00,000 மக்கள் தொகையுள்ள பெரிய நகரங்கள், (iii) 5,000 முதல் 20,000 வரையுள்ள சிறிய நகரங்கள், (iv) 5,000க்கும் குறைவாகவுள்ள ஊர்கள்.

கீழ்க்காணும் அட்டவணை நகர்களிலும் கிராமங்களிலும் மக்கள் தொகையின் அமைப்பு (நகர்ப்புறம் உட்பட).

| கணக்கெடுப்பு ஆண்டு | மக்கள் தொகை (இலட்சம்) | | வளர்ச்சி (இலட்சம் கடந்த பத்தாண்டுகளில் | | கடந்த பத்தாண்டுகளில் வளர்ச்சியின் விகிதம் | |
|---|---|---|---|---|---|---|
| | கிராமம் | நகரம் | கிராமம் | நகரம் | கிராமம் | நகரம் |
| 1921 | 2,199 | 282 | — | — | — | — |
| 1931 | 2,420 | 334 | +221 | +52 | +10·1 | +18·4 |
| 1941[1] | 2,710 | 438 | +290 | +104 | +12·0 | +31·1 |
| 1951 | 2,950 | 619 | +240 | +181 | + 8·9 | +41·3 |

1. 1941ஆம் ஆண்டின் கணக்கெடுப்பு ஒரு மாறுதலுமின்றி அதே புள்ளி விவரம் கொடுக்கப்பட்டிருக்கிறது. மேற்கு வங்காளம பஞ்சாபிற்கு மக்கள் வந்து குவிந்து கணக்கிடப்படவில்லை.

இவ்வெண்களைக் கொண்டு கிராமங்களைவிட நகரங்களில் வளர்ச்சி விகிதம் அதிகமாக உள்ளதை அறியலாம். இதற்குத் தக்க காரணம் கிராம வாழ் மக்கள் நாடுபெயரும் தன்மையுடைய வராக இருந்து கிராமங்களைவிட்டு நகரங்களுக்கு வருகின்றமை.[1]

தொன்மையினின்று, பெரும் பட்டணங்களானவை தோன்றிய கால முதல் கீர்த்தி மிகுந்திருக்கப் பல காரணங்கள் உள்ளன. அவை (i) புண்ணிய தீர்த்தங்களான காரணத்தால் மக்கள் போய் வருகின்றனர். எடுத்துக்காட்டாக அலஹாபாத், காசி, கயா, நாஸிக், பூரி போன்றவை, (ii) நீதிமன்ற இருப்பிடமாகவும் ஓர் அரசின் தலைமை நகராகவும் அமைந்துள்ளதால் டெல்லி, லக்னோ, லாகூர், பூனா, தஞ்சாவூர், ஆற்காடு முதலியவைகளும், (iii) வர்த்தக வழியில் அல்லது வியாபாரத்தில் முதன்மையிடம் பெற்றுள்ளமையால் மிர்ஜாபூர், பங்களூர், ஹூப்ளி முதலியனவும் முதற் பிரிவின் கீழ்க் கூறப்பட்ட நகரங்களும் முன்போல் உள்ளன. ஆயினும் பம்பாய், கல்கத்தா போன்ற நவீன நகரங்கள் தோன்றிய பின்னர் இவைகளின் இன்றியமையாத தன்மைகள் குறைந்து விட்டன. இரண்டாவது பிரிவின் கீழ்க் கூறப்பட்ட நகரங்கள் முன் போன்று அரசினரின் இருப்பிடமாகவும், தலைமை நகரமாக வும் ஆட்சி நிருவாக கேந்திரமாகவும் உள்ளன.

19. **வருவாய் அமைப்பு 1951 :** 1951ஆம் ஆண்டறிக்கை இந் நாட்டு மக்கள் தொழில் வாரியாக எவ்வகையில் உள்ளனர் என்று பிரித்துக்காட்டுகிறது. 3,566 இலட்ச மக்கள் (அதாவது மொத்த மக்கள் தொகையினின்று பஞ்சாபில் வாழும் 3 இலட்சம் மக்களைப் பற்றிய தகவல்கள் தீக்கிரையானதால் தகவல்கள் கிடைக்கவில்லை). எவ்வகையான தொழிலில் ஈடுபட்டுள்ளனர் என்பதையும் 51ஆம் பக்கத்தில் காட்டுகிறது.

இவர்களில் 1,044 இலட்ச மக்கள் தாமாகவே உழைத்துத் தம் மைக் காப்பாற்றிக் கொள்ளுகின்றனர். (மொத்தத்தில் 29·3 சத வீதம் ஆகும்) மேற்கூறியவர்களில் 710 இலட்சம் (68·1 சதவீதம்) விவசாயிகள்; 334 இலட்சம் பேர்கள் (31·9 சதவீதம்) விவசாயத் தில் ஈடுபடாதவர்கள். விவசாயிகளை நான்கு பிரிவுகளாகக் கொண்டு விளக்கம் தரப்பட்டுள்ளது.[2]

545 இலட்சம் குடியானவர்களுக்கு உதவியாக 149 இலட்சம் உழவர்களே உளர். (இது சற்றேறக்குறைய நாலில் ஒரு பங்கு எனலாம்). இந் நிலக்கிழார்களில் தாங்களோ அல்லது தங்கள் குடும்பத்தினரோ வேலை செய்பவர் போக மேலும் உழவர்களை நியமிப்பவர்களின் எண்ணிக்கை மிகக் குறைவு என்பதை இது காட்டுகிறது. 334 இலட்சம் விவசாயமற்ற தொழிலில் ஈடு பட்டுள்ள பேர்கள் 4 பகுதிகளாகப் பிரிக்கப்பட்டுள்ளனர்.[3]

1. *1951ஆம் ஆண்டின் கணக்கெடுப்பில் அறிக்கை பக்கம் 152.*
2. *கணக்கெடுப்பு அறிக்கை 1951 பக்கம் 98.*
3. *„ „ பக்கம் 196.*

| பிழைக்கும் வகுப்புகள் | எண்ணிக்கை (இலட்ச | எல்லா விவசாயிகளின் சதவீதம் | தம்மைத் தாமே காப்பாற்றிக்கொள்ளும் மக்கள் தொகையின் சதவீதம் |
|---|---|---|---|
| தமக்கே உடைமையுள்ள அல்லது முக்கிய உடைமை பெற்ற நிலக்கிழார் | 457 } 545 | 64·4 | 43·8 |
| உடைமையற்ற நிலக்கிழார் | 88 | 12·3 | 8·4 |
| உழவர்கள் | 149 | 21·0 | 14·3 |
| தலத்திலில்லா நிலக்கிழாரும் மற்றும் இதர வாரம் பெறுபவர்களும் | 16 | 2·3 | 1·6 |
| மொத்தம் | 710 | 100·0 | 68·1 |

| பிழைக்கும் வகுப்பு | எண்ணிக்கை (இலட்சம்) | தாமே காப்பாற்றிக் கொள்பவரின் சதவீதம் (விவசாய மற்றவர்) | தாமே காப்பாற்றிக் கொள்வோரின் விகிதம் |
|---|---|---|---|
| வேலை கொடுப்போர் | 11 | 3·3 | 1·1 |
| தாமாக வேலை தேடிக் கொள் பவர் | 165 | 49·4 | 15·7 |
| தொழிலாளர் | 148 | 44·3 | 14·2 |
| இதர வருமானம் பெறுபவர், ஓய்வு கால ஊதியம் பெறுபவர், விவசாய மற்றவர் | 10 | 3·0 | 0·9 |
| மொத்தம் | 334 | 100·0 | 31·9 |

இந்த 334 இலட்ச மக்களில் வாடகை பெறுபவர்களின் எண்ணிக்கை 10 இலட்சமாகக் கணக்கிட்டாலும் மிகுதி 324 இலட்சம் பேர் உள்ளனர். இவர்கள் தாமாகவே உழைப்பவர்கள்; விவசாயமின்றித் தொழிலிலும் பணியிலும் ஈடுபட்ட விவரம் கீழே குறிப்பிடப்பட்டுள்ளது.[1]

| தொழிற் பிரிவு அல்லது பணியின் பிரிவு | எண்ணிக்கை (இலட்சம்) | சதவீதம் |
|---|---|---|
| இதர மூலத்தொழில்கள், சுரங்க வேலை, கற்சுரங்கங்கள், விவசாயம் நீங்கலாக | 24·0 | 7·4 |
| சுரங்கமும் கற்சுரங்க வேலைகளும் | 5·7 | 1·8 |
| உற்பத்தியும் பதப்படுத்தலும் - உணவுப் பொருள், துணி தயாரித்தல், தோல் முதலிய பொருள்கள் | 55·1 | 17·0 |
| உற்பத்தியும் பதப்படுத்தலும்-ரசாயனங்களும் அவற்றின் பொருள்களும் | 12·4 | 3·8 |
| இதர பகுதிகளில் விளக்கம் பெறு உற்பத்தியும் பதப்படுத்தலும் | 24·3 | 7·5 |
| கட்டுமானத் தொழிலும் பயன்பாடுகளும் | 15·9 | 4·9 |
| வர்த்தகம் | 59·0 | 18·2 |
| போக்குவரத்து, பண்டகம், தொடர்பு கொள்ளும் உதாரணங்கள் | 19·0 | 5·9 |
| சுகாதாரம், கல்வி, பொது நிருவாகம் | 32·9 | 10·2 |
| மூன் விளக்கமுறுப் பணிகள் | 75·4 | |
| மொத்தம் | 323·7 | 100·0 |

1. 1951ஆம் ஆண்டின் கணக்கெடுப்பு அறிக்கை, பக். 98.

கீழ்க்கண்ட அட்டவணையில் தானாகவே ஊதியம் பெற்றும் பிறரை அண்டிப் பிழைத்தும் வரும், மொத்தப் பிழைக்கும் வகுப்பினரின் எண்ணிக்கை[1]யைக் காணலாம் :

| பிழைக்கும் வகுப்பு | தானாகவே காப்பாற்றிக் கொள்ளுபவர் | அண்டிப்பிழைப்பவர் (சம்பாத்யம் இல்லாதவர் + உள்ளவர்) (இலட்சம்) | மொத்தம் | பொது மக்கள் தொகையில் சதவீதம் (அண்டியவர் உள்பட) |
|---|---|---|---|---|
| நிலக்கிழார்-விவசாயி | 457 | 1,001+215 | 1,673 | 46·9 |
| நில உடைமையற்றோர்-விவசாயி | 88 | 189+ 39 | 316 | 8·8 |
| உழவர்கள் | 149 | 247+ 52 | 448 | 12·6 |
| வாரம் பெறுபவர் | 16 | 33+ 4 | 53 | 1·5 |
| மொத்த விவசாயப்பிரிவுகள் | 710 | 1,470+310 | 2,490 | 69·8 |
| வேலை கொடுப்போர் | 122 | 223+ 32 | 377 | 10·5 |
| தானாகவேலை பார்ப்போர் | 59 | 145+ 9 | 213 | 6·0 |
| வேலை செய்பவர்கள் | 17 | 37+ 2 | 56 | 1·6 |
| வாடகை பெறுபவர் ஓய்வு ஊதியம் பெறுபவர் | 136 | 268+ 26 | 430 | 12·1 |
| விவசாயம் நீங்கலாக ஏனையோர் மொத்தம் | 334 | 673+ 69 | 1,076 | 30·2 |
| மொத்த மக்கள்தொகை | 1,044 | 2,143+379 | 3,566 | 100·0 |

இந்தியாவின் பிழைப்புத் தோரணையை அமெரிக்க ஐக்கிய நாட்டுடனும், இங்கிலாந்துடனும் ஒப்பிட்டு, 1951ஆம் ஆண்டின் கணக்கெடுப்பு அறிக்கை[2] கூறுவதாவது : இந்திய நாட்டில் அண்டிப்பிழைப்போரின் பளு எல்லையற்றதாக உள்ளது. எடுத்துக்

1. 1951ஆம் ஆண்டுக் கணக்கெடுப்பு அறிக்கை: பக்கம் 108.
2. ,, ,, ,, ,, 118—120.

காட்டாக 1,000 தாமாக உழைத்து வேலை செய்பவர் உண்டாயின் அவர்கள் தங்களைக் காப்பாற்றிக் கொள்ளுவதோடல்லாது 2,504 இதர மக்களையும் காப்பாற்ற வேண்டி ஏற்படுகிறது. இவர்களில் 373 பேர்கள் வருமானம் பெற்று அண்டிப் பிழைப்பவர். இதன் பொருளாவது முன் கூறிய 1,000 பேரின் வருமானத்தில் ஒரு பகுதியை எதிர்பார்க்கிறவர்கள். 26 பேர்கள் ஓய்வு ஊதியம் பெறுபவர்கள் அல்லது வாரம் அல்லது வாடகை பெறுகிறார்கள். இவர்கள் வீட்டிற்குச் சுமையெனக் கருதாவிட்டாலும் மேற்கூறிய ஆயிரம் பேரின் உழைப்பை எதிர் பார்த்திருக்கிறார்கள்.

நம் நாட்டின் 2,504 பேருக்கு நியூயார்க் அமெரிக்க நாட்டில் 1,547 பேர்களும் இங்கிலாந்தில் 1,207 பேர்களும் ஆவர்.

தாமாகவே உழைத்துக் காப்பாற்றிக்கொள்ளும் 1,000 பேர்களின் தொழில் வகைகளும் பணிவகைகளும் கீழ்க் கண்ட அட்டவணையில் காண்க:

| | இந்தியா | அமெரிக்க ஐக்கிய நாடுகள் | கிரேட் பிரிட்டன் |
|---|---|---|---|
| அ. விவசாயம், கால் நடை, மருத்துவம், காடு வளர்த்தல் —மீன் பிடித்தல் | 706 | 128 | 50 |
| ஆ. சுரங்க வேலை, உற்பத்தி, வர்த்தகம் | 153 | 456 | 555 |
| இ. இதர தொழில்களும் பணிகளும் | 141 | 416 | 395 |
| | 1,000 | 1,000 | 1,000 |

அ. பிரிவின்கீழ் உள்ள எண்கள் உணவு உற்பத்தியில் எவ்வளவு மனித சக்தி ஈடுபட்டுள்ளது எனக் குறிக்கிறது. 1,000 பேர்களில் 706 பேர்கள் தங்களுக்கான உணவினை உற்பத்தி செய்வதோடல்லாது இதர 294 பேர்களுக்கும் போதுமானதோ அல்லது போதாத அளவிலோ உணவுப் பெருக்கம் செய்கின்றனர்.

அமெரிக்க ஐக்கிய நாடுகளில் 128 பேர் உற்பத்தி செய்யும் உணவு, தங்களுக்கும் இன்னும் மற்றும் உள்ள 872 பேர்களுக்கும் தேவைக்கு மிகுதியாக வெளி நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப் படுகிறது. கிரேட் பிரிட்டனில் நிலைமையில் மாற்றம் உண்டு. இங்கு வெளி நாட்டவர்கள் தயாரித்த உணவை இவர்கள் பெறுகின்றனர்.

ஆ. இ. பிரிவுகளில் காணும் எண்ணிக்கைகளின் ஏற்றத் தாழ்வுகளிலிருந்து தொழிலாக்கம் பெற்ற நாடு எது என்றும், இந்தியா தொழிலில் பின்னேற்றமடைந்துள்ளதென்றும் விளங்கும்.

இந்தியா நாட்டுப்புறத் தன்மையது என்பதை வற்புறுத்த அகில இந்தியக் கிராமக் கடன் அறிக்கை இவ்வெண்ணத்தைப் பற்றிய விளக்கம் வருமாறு கூறுகிறது :

(i) இந்தியர் அறுவரில் ஐவர் நாட்டுப் புறங்களில் வாழ் கின்றனர். (ii) அவ்வாறு உள்ள ஐவர் தம்மைத் தாம் காப்பாற்றிக் கொள்வோர் கிராமங்களில் வசிக்கின்றனர். (iii) கிராமப் புறமுள்ள இந்தியாவில் 5 பேருக்கு 4 பேர்கள் கிராமங்களில் விவசாயிகளாக உள்ளனர். (iv) நகர்ப்புறங்களில் உள்ளவர்கள் எண்மரில் ஒருவர் விவசாயி (5-ல் 4 பேர்கள் நாட்டுப் புறத்திலுள்ளவர் என்பது நீங்கலாக) (v) பதின்மரில் ஏழு பேர் விவசாயத்தையே முழுவதும் நம்பி வாழ்பவர்கள். (vi) நாட்டின் மொத்த ஆக்கத்தில் அரைப் பகுதி விவசாயம், கால்நடை வளர்ச்சி, இன்னும் அதைத் தொடர்ந்துள்ள இதர தொழில்களால் ஏற்படுகிறது. (vii) கிராமங் களில் தாமாகவே உழைத்துக் காப்பாற்றிக் கொள்ளும் 5 நில உடைமையாளரில் தாமாகவே உழைத்துக் காப்பாற்றிக்கொள்ளும் உழவர் ஒருவர் ஆவர். வாரம் பெறுபவர் மிகவும் குறைவான படியால் இதர நால்வரில் அவர்கள் குடியானவர். நிலக்கிழார் என்றும் கூறப்படுகின்றனர். (viii) கிராமங்களில் உள்ள தாமாகவே காப்பாற்றிக்கொள்ளும் விவசாயமற்ற மக்கள் தொகையில் (இது நாட்டுப் புறத்தில் தானாக உழைத்துக் காப்பாற்றிக்கொள்ளும் தொகையில் 5-ல் ஒரு பங்கு எனலாம்.) கிராமத்தில் உள்ள விவசாயம் செய்யாத பதின்மரில் நால்வர் மூலத்தொழிலில் ஈடுபட்டும், கைத்தொழில், குடிசைத் தொழில், இன்னும் பால்பண்ணைத் தொழிலில் ஈடுபட்டுமுள்ளனர். இவர் களில் மூவர் அநேக பணிகளிலும் பொது நிருவாகத்திலும் வேலையிலுள்ளனர். இன்னும் மிகுதியுள்ள மூவர் சுரங்கவேலை, கல் உடைத்தல், வீடு கட்டுதல், வண்டி யிழுத்தல் முதலிய தொழில்களில் ஈடுபட்டுள்ளனர்.

**20. குணத்தைப் பற்றிய பிரச்சினை :** மக்கள் தொகையை அடுத்து எண்ணிக்கை எவ்வளவு முக்கியமோ அதே அளவில் குணமும் இன்றியமையாதது. சில குறிப்பிட்ட வகுப்பினை மாத்திரம் அதிகப்படி பெருக்கவோ அல்லது கட்டுப்படுத்தவோ வல்ல. அளவில் மனித வம்ச நூலில் நாம் மேம்பாடு அடைய வில்லை மனிதனின் எண்ணிக்கையைத் தரப்படுத்துவதுபோல் மனிதனின் மதிப்பை எளிதில் கணக்கிட முடியாது. மனிதவர்க் கத்தைச் சீராக்க மனிதனின் வமிச நூலின்படி சட்டம் வகுக்க இயலாது. உலகின் கண் உள்ள மக்கள் அனைவரும் தங்களுடைய பலவிதப்பட்ட மணச் சடங்குகளால் தங்கள் சந்ததியை இழக்காமல் நீடிக்கப் பாடுபடுகின்றனர். சந்ததியினரைப் பற்றி அறிந்து கொள்ளத் தக்க புலமையின்மையால் நமது கலியாண முறைகளும் வழிகளும் இருட்டில் தடவுதல் போன்றிருந்தன. ஒரு குறிப்பிட்ட உறவின் எல்லையுள் மணம் செய்வதற்குத் தடை விதிக்கப் பட்டுள்ளது. ஒரே கோத்திரத்தில் மணம்செய்தலும் அதே வமிச வழியில் வரும் ஆண் பெண் மணம் புரிதலும் கூடாதென விதிக்கப் பட்டது. இது விஞ்ஞான முறைக்கு மாறுனது. தமது வகுப்புக் குள் உள்ளவரைத்தான் மணம் செய்துகொள்ளலாமென்றும் தம் வகுப்பைவிட்டு வெளியிலிருந்து மணம் செய்தலைத் தடைசெய்தால் பின்வரும் சந்ததி உள்ளூர மெலிந்து நசித்துவிடும் என்பதும் உண்மையே. மேனுடுகளில் வமிசப் பரம்பரையாகப் பெறும் தீராத நோயில் அவதிப்படுபவரும், குற்றம் செய்யும் கொடிய சந்ததியைச் சேர்ந்தவரும் கட்டாயமாக மணம் செய்துகொள்ளக் கூடாதெனத் தடுக்கப்படுகின்றனர். அவர்களுடைய ஆண்மையும் அறுவை முறையில் அகற்றி விடப்படுகிறது. இம்மாதிரி முயற்சிகள் இந்தியாவில் கண்டிப்பாக அமைத்தல் வேண்டும். ஒவ்வோர் இராச்சியமும் மக்களுக்குச் சந்ததியின் விளக்கம், அதற்கான நியதிகளைப் போதிக்க ஏற்பாடு செய்தல் வேண்டும்.

விஞ்ஞான ஆராய்ச்சிகள் நடத்திக் கண்டதன் பேரில் முற்காலங்களில் கூறிவந்துள்ள சில வகுப்புக்கள், 'பிறப்பில் உயர்ந்தவர் தாழ்ந்தவர்' என்ற பாகுபாடு அர்த்தமற்றது எனத் தெற்றென விளங்கிவிட்டது. இனி நம் நாட்டு மக்கள் பொருளாதார முன்னேற்றமடைய இம்மாதிரி ஏதாவது தடங்கல் உண்டா என்று நாம் சிறிதும் ஆலோசிக்கத் தேவையில்லை. உலகின்கண் உள்ள இதர மேனுடுகளைப்போல் நாமும் முன்னே றலாம். எவ்விதமான இடர்ப்பாடு தோன்றினும் சாதி காரணமான ஏற்றத் தாழ்வு அதற்குக் காரணமாகாது.

**21. உள்நாட்டில் நாடு பெயர்வு :** இந்திய மக்கட்குழாம் என்றும் பெயராத் தன்மை வாய்ந்தது. 1931-ல் எடுத்த கணக்

கெடுப்பின்படி பிறந்த மாவட்டத்தை விட்டு வெளியில் வதிந்து வந்தவரின் சதவீதம் 9·8. தாங்கள் பிறந்த மாகாணத்தையோ இராச்சியத்தையோ விட்டகன்று வதிந்து வருபவரின் சதவீதம் 3·6. அமெரிக்க ஐக்கிய நாடுகளின் 1940ஆம் ஆண்டின் கணக்கின்படி 22·5 சதவீத மக்கள் தாங்கள் பிறந்த இராச்சியப் பகுதியை விட்டு வெளியிடங்களில் வதிந்தனர்.[1] இவ்விதமான பெயர்ச்சி இந்தியாவில் ஏற்பட்டால் அது குறைந்த தூரத்திடையே ஏற்படுகிறது. இவ்வாறு பெயர்ச்சி ஏற்படாக் காரணங்களை விளக்குவோம்: (i) விவசாயத்தின் முக்கியத்தால் மக்கள் தங்கள் நிலத்துடன் இருக்கும்படி நேரிடுகிறது, (ii) சாதி அல்லது வகுப்பு முறைகள், (iii) பிரிவினை ஆகாத குடும்ப முறை, (iv) இளம் பிராயத்திலே மணமான காரணத்தால் சுதந்திரத்தை இழந்து ஏற்க வேண்டாக் குடும்பப் பொறுப்பை ஏற்றுக் கொள்ளுதல், (v) கொடிய நோய்களில் அவதியுற்றுச் சக்தியிழந்து கிராமங்களை விட்டு வெளியேற முடியா நிலையை அடைதல், (vi) கடன் கொடுப்பவர் தம்மிடம் கடன் வாங்கியவர் தம்மையறியாது நிலத்தைவிட்டுப் போக முடியாது பார்த்துக் கொள்ளுதல், (vii) பல்வேறு பகுதிகளில் மொழி வேற்றுமை இன வேற்றுமையின் காரணம், (viii) புதிய வட்டாரத்தில் என்ன ஏற்படுமோ என அஞ்சி அறிவின்மையால் போகாதிருத்தல்.

1911ஆம் ஆண்டின் கணக்கெடுப்பின்படி கீழ்க்கண்டவாறு நாட்டினுள் நாடு பெயர்தல் நடந்து வந்தது: (i) **தற்செயலாக** அல்லது அக்கம் பக்கத்திலுள்ள கிராமங்களிலிருந்து போதல் வருதல். இந்து மதக் கோட்பாட்டின்படி ஓர் இந்து தன் மனைவியைப் பிற கிராமங்களுக்குச் சென்றுதான் தேடிக்கொள்ள வேண்டும். (ii) **தற்காலிகமாக** வியாபாரத்தின் காரணம் சுற்றுதல், தீர்த்த யாத்திரை புரிதல், கால்வாய், மராமத்து, ரெயில்வே ஊழியம் இவைகளில் தொழிலை வேண்டி இடம் பெயரும் கூலிக்காரர்கள். (iii) **காலப் பெயர்ச்சி** அதாவது காலத்திற்கேற்ப இடப்பெயர்ச்சி செய்தல். எடுத்துக்காட்டாக, கோதுமை விளைச்சலின்போது வடஇந்தியாவிற்குப் போவது, பர்மா, சுந்தர் வனங்களுக்குப் போவது முதலியன. (iv) **ஏறக்குறைய நிரந்தரமாகப் பெயர்தல்:** கடன் கொடுப்பவர், சர்க்கார் அலுவலர்கள், ஆலைத் தொழிலாளி இவர்கள் தங்கள் குடும்பங்களை விட்டுத் தற்காலிகமாகப் போய் வருதல் (v) **நிரந்தரமாகப் பெயர்தல்:** புதிய இடங்கள் ஏற்பட்டால் அவற்றில் நிரந்தரமாகக் குடியேறுவது புதிய நீர்ப்பாசன முறை ஏற்படுவதாலும் போக்குவரவுச்

1. கிங்ஸ்லி டேவிஸ்—பாகிஸ்தான் இந்தியாவில் மக்கள் தொகை: பக். 10.

சாதனங்கள் ஏற்படுவதாலும் இம்மாதிரிப் பெயர்ச்சியை எதிர்பார்க்கலாம்.

இந்தியாவின் வட பகுதிகளில் ஆண்களின் நாடு பெயரும் தன்மை கிழக்குப் பகுதியை நோக்கியமைந்துள்ளது. அஸ்ஸாம் தேயிலைத் தோட்டங்களுக்கும், வங்காளத் தொழில் பகுதிகளுக்கும் கல்கத்தாவைச் சுற்றியமைந்துள்ள ஆலைகளில் தொழில் தேடவும் போய்விடுகிறார்கள். அதேபோல் வட வங்கப் பகுதிகளிலும் அவ்வாறே வட இந்தியாவிலிருந்து பெண்கள் அதிகப்படியாக மேற்குப் பகுதிகளுக்கு நாடு பெயர்ந்து வந்தனர். இதன் அடிப்படைக் காரணம் அதிகப்படியான மகளிர் வேலை தேடிப் போகவேண்டி ஏற்படுகிறது. பம்பாய் இராச்சியத்திலுள்ள பம்பாயிலும், ஷோலாப்பூரிலும் வெளி இராச்சிய மக்கள் அதிகமாக வந்து கூடுகின்றனர். இந்தியாவின் வடக்குப் பகுதியில் உள்ளவர்கட்குப் பம்பாய் காந்தம் இழுப்பதுபோல உள்ளது. அதேபோல் இந்தியாவின் தென்பகுதியிலுள்ளவர்கட்கு ஷோலாப்பூர் காந்தம் இழுப்பதுபோல் உள்ளது. பம்பாய் இராச்சியத்தின் உள்ளேயே நாடு பெயரும் தன்மை உள்ளது. இங்குத் தொழில் நகரங்களில் வேலைதேடும் பொருட்டு மக்கள் வருகின்றனர்.

**22. வெளியேறுதல் :**[1] 1834-ஆம் ஆண்டிலிருந்து பிரிட்டிஷ் வல்லரசில் அடிமைத் தளையை நீக்கிய உடனேயே வெளிநாடுகட்கு இந்தியர்கள் வெளியேறிக் கூலித்தொழிலுக்கு ஆள் சேர்க்கப்பட்டுப் போனார்கள். 1834 முதல் 1932 வரையில் சற்றேறக்குறைய 28 மில்லியன் இந்தியர்கள் வெளிநாடுகட்குச் சென்றார்கள். அவர்களில் 22 மில்லியன் மக்கள் திரும்பிவிட்டனர். வெளிநாடுகளில் தங்கியவர் 6 மில்லியன் எனலாம். தற்போதைக்கு இந்தியர்கள் 4 மில்லியன் பேர்கள் வெளிநாடுகளில் வாழ்கின்றார்கள். (அவர்களில் 32,54,651 அதாவது ஆங்கிலக் காமன்வெல்த்தில் தென் ஆப்பிரிக்காவில் 3,65,524, இலங்கையில் 9,85,327[2], மலேயாவில் 6,40,709[3], சிங்கப்பூர் 83,624[3], மொரிஷஸ்ஸில் 3,22,972, கென்யாவில் 90,528, உகாண்டாவில் 33,767, டங்கநீகாவில் 56,499, ட்ரினிடாடிலும், டோபாகோவிலும் 2,27,390, பிஜித் தீவுகளில் 1,48,802-ம் ஆக உள்ளனர்). வெளிநாடுகளில் 7,00,000 இந்தியர்கள் பர்மாவில் உள்ளனர். டச்சு கயானாவில்

1. கிங்க்ஸ்லி டேவிஸ் - பாகிஸ்தான் இந்தியாவில் மக்கள் தொகை, அத். 13.

2. இந்திய தூதராலயக் கணக்கெடுப்பு மார்ச்சு 15, 1953-ல் இந்தியரும் பாகிஸ்தானிகளுமாக 18,500 பேர்கள்.

3. இதில் பாகிஸ்தானிகளும் சேர்க்கப்பட்டுள்ளனர்.

60,000 பேர் உள்ளனர்.[1] இவ்வாறு ஒப்பந்த முறைப்படி ஆளெடுப்பதை எதிர்த்து இந்தியாவில் பெரும் கிளர்ச்சி ஏற்பட்டது. 1920-ல் இம் முறை கைவிடப்பட்டுக் கங்காணி முறை அமலில் வந்தது. குறுகிய காலத்திற்குக் கூலிக்காரர்களை ஒரு கங்காணி அல்லது ஏஜென்டு போன்ற ஆள் அமர்த்தித் தோட்ட வேலைகளுக்கு அனுப்புவான். சிறிது காலத்திற்குப் பின்னர் இந்தக் கங்காணி முறையும் போய்த் தனியே அவரவர்கள் தங்கள் விருப்பப்படியே போய்க் கூலித் தொழிலாளிகளாக இருந்துவந்தனர். 1922-ல் ஏற்பட்ட சட்டப்படி வெளிநாடுகளுக்குக் கூலி வேலைக்குப் போவது ஒழுங்குபடுத்தப்பட்டுத் தேவையான அளவில்தான் அனுப்பப்பட்டு வந்தனர்[2].

இவ்வாறு வெளியேறிய கூலிக்காரர்களைத் தொடர்ந்து வர்த்தகர்கள், பாங்கு நடத்துபவர், கடைக்காரர், கண்டிராக்ட் வேலை எடுப்பவர், சுமைதூக்கி விற்பவர்கள் முதலியவர்களும் யாதொரு தடுப்புமின்றிச் சென்று இக் காலனிகளில் வியாபாரத்தில் தழைத்தோங்கிப் பெரும் பொருளீட்டினர்.

இந்தியர்களின் வெளியேற்ற எண்ணிக்கை இதன் மக்கள் தொகையில் மிகவும் குறைந்த சதவீதம் எனலாம். கழிந்த 20 ஆண்டுகளாக இந்தியர் வெளியேற்றம் குறைந்து வந்து கொண்டிருக்கிறது. வரவர இவ் வெளியேற்ற முறை காலத்தை யனுசரித்து யேற்பட்டுள்ளது. காமன்வெல்த்தில் உள்ள நாடுகளாயினும் சரி, இது காறும் குடியேறிவந்த இதர நாடுகளானலும் சரி, இவை யனைத்தும் இந்தியக் குடியேற்றத்தை எதிர்த்து வருகின்றன. மக்கள் தொகையின் பெருக்கத்தைத் தவிர்க்க இது எவ்வகையிலும் பயனுள்ளதாகத் தோன்றவில்லை.

வெளிநாடுகளில் போய்க் குடியேறிய இந்தியர்களுக்கு எவ்வகையான தொந்தரவுகளும் வஞ்சனைகளும் அந் நாட்டு அரசினரால் ஏற்படக் கூடாதென்றும், அவர்களைச் சீரிய முறையில் இதர நாட்டுக் குடியேற்ற மக்களைப்போல நடத்தவேண்டும் என்றும் இந்திய அரசு பெரிதும் கவலைகொண்டிருக்கிறது. இது ஓர் அரசியல் பிரச்சினையே அன்றி இந்தியர் பொருளாதாரப் பிரச்சினை அன்று.

1 இந்தியா 1955 பக். 29—32.

2. இந்தியர் கூலியாட்களை வெளிநாடுகளுக்குப் பொறுக்கி அனுப்பும் முறையைப் பற்றிய வரலாற்று ஆராய்ச்சி வெளியீடு: சி. கொண்டப்பி (C. Kondappi) எழுதிய இந்தியன் ஓவர்ஸீஸ் 1838 முதல் 1949 வரை அதிகாரம்-2 படிக்கவும்.

# 4. சமூகமும் சட்டமும் மதமும்

**1. சாதி முறை : தன்மையும் தோற்றுவாயும்**[1] **:** கழிந்த மூவாயிரம் ஆண்டுகளாகச் சாதிமுறை இந்து சமுதாயத்தின் அடிப் படைக் கொள்கையாகவும், இதற்கே உரித்தானதாகவும் வெறுக்கத் தக்க முறையில் அமைந்தது. இதனால் ஏற்பட்ட முக்கிய விளைவு என்னவெனில், இந்தியா பல்வேறு வகுப்புக்களாகப் பிரிக்கப்பட்டு. அப் பிரிவுகளில் உள்ளவர் அனைவரும் தங்கள் கோட்பாடுகளை விடாமலும், சம்பிரதாய முறைகளைத் தவறாமலும் நடத்திவருகிறார் கள். வகுப்புவிட்டு வகுப்பில் மணம்புரிதல் தடைசெய்யப்படு கிறது. 'இந்தியாவில் பிறப்பின் நிலையிலிருந்து மனிதனின் சமூக, குடும்பத் தொடர்பு தீர்மானிக்கப்பட்டு, அதற்கேற்ப வாழ்க்கை, உணவு, பானம், உடை, மணம் அல்லது மணமுறை இவை யனைத்தும் அவன் பிறப்பின் வகுப்பினைப் பொறுத்தவை' என்று இம்பீரியல் கெஜட்டியர் ஆப் இந்தியா (Imperial Gazatteer of India)வில் வால்யூம் 1, பக். 323-ல் கூறப்பட்டுள்ளது. இதைப் பொறுத்த அளவில் இதன் தோற்றுவாயைப்பற்றி அநேக ஊகங்கள் செய்து வந்தனர். ஆயினும் இதில் யாதொருவிதமான தெளிவும் ஏற்படவில்லை. 'மனவெழுச்சி யடைந்த தனி ஒருவன் முறைப்படி வேலைப்பிரிவினையை நிலைநாட்ட வேண்டி, சமூகப் பிரிவினையைத் தோற்றுவித்திருப்பான்' என ஜேம்ஸ் மில் கருது கிறார். ஆயினும் ஒரு வகுப்பினரை இன்னொரு வகுப்பினர் அடக்கி ஆள முயலுவதை அவர் அனுமதிக்கவில்லை. இம்மாதிரி ஏற்படு வதற்குரிய காரணத்தை அவர் கூறும்போது குறிப்பிடுவதாவது : இவ்வுலகின்கண் உள்ள பலம் குன்றிய சிறுபான்மையோர் தேவர் களின் பகைமைக்கு ஆளாக நேரிடும் என்று அஞ்சி நடுங்கி ஒடுங்கி அப் பகைமையை நீக்கமுடியும் என்று பாசாங்கு செய்யும் மற்றொரு வகுப்பினுக்கு அடிபணிகிறார்கள். ஆட்சி செலுத்த வேண்டும்

*1. இதைப்பற்றி வெகு அழகாகவும் சுருக்கமாகவும் விளக்கம் கூறப்பட்டுள்ள ஆராய்ச்சியைக் கிங்ஸ்லி டேவிஸ் எழுதிய 'இந்தியா, பாகிஸ்தான் மக்கள் தொகை' என்பதில் 18ஆம் அதிகாரம் பார்க்க.*

என்ற அதிகார வெறிபிடித்த குருமார்கள் வகுப்பு (priestly class) இதை ஏற்பாடு செய்கிறது எனலாம். அடுத்தபடியாகக் கடவுளின் பகைமை ஒழிந்த பின்னர், தம்மீது படையெடுத்துத் தம்மை நிர்மூலமாக்கிவிடுவரோ என அஞ்சி, அதனுல் இராணுவ வகுப்பினரிடம் பீதியடைந்து அஞ்சுவதால் அவர்கள் அடுத்தபடியாக க்ஷத்திரியர் என்ற அளவில் ஆளுகை புரிந்தனர். எந்த வகைகளில் சாதி வளர்ச்சி ஏற்பட்டதென்ற இதர கொள்கைகளை நாம் ஆராயவேண்டிய அவசியமில்லை. ஏனெனில் அவைகள் எங்கும் தோன்ருத இவ்வளவு கட்டுப்பாடு எவ்வாறு வந்தன என்று விளக்குவதில்லை. சாதிகள் தோன்றிய காலத்தில் கட்டுப்பாடு இல்லை எனலாம். பிற்காலத்தில்தான் அவை ஏற்பட்டிருக்கக்கூடும். முன்பெல்லாம் சாதி மாற்றமும் சமய மாற்றமும் உண்டாகியிருந்தன.

**2. சாதிமுறை இருப்பதற்கான வாதங்கள் :** தொன்றுதொட்டு வழக்கில் உள்ளனவான வாதங்களை விளக்குவோமாக : (i) தொழில் பிரிவினையின் அடிப்படையில் உள்ளதால் பொருள் வளர்ச்சிக்கு உறுதுணையானது எனலாம். இதனுல் எளிதில் பிரிக்கப்படக்கூடும் உடலுழைப்பின் அவசியம் கருதப்பட்டது. தகப்பனிடமிருந்து மகன் தொழில் தெரிந்துகொள்ளுகிருன். பின்னர், இது வமிச வழியாகப் பரவுகிறது, (ii) தொழிலின் அமைப்பில் தோன்றிய வகுப்புக்கள் ஒன்றுக்கொன்று உதவியுள்ளதாக இருந்தன. தொழில் கற்க விரும்புபவர்களுக்குத் தொழில் கற்பிக்கிறது; அவர்களுடைய வகுப்பினர் எவரேனும் இடர்ப்பட்டால் உடனே உதவி அளிக்க முன் வருகிறது. ஏதாவது வழக்குகள் நேரிடின் அவற்றைத் தீர்த்து வைத்துவிடுகிறது. ஐரோப்பிய நாடுகளில் ஆதியில் தோன்றிய குழுவினர் (guild) போன்றமைந்திருந்தது. சிற்சிலவற்றில் இவை ஐரோப்பியக் குழுவினர்களினும் வேறுபாடுகள் கொண்டிருந்தன. அங்கெல்லாம் குழுவில் உறுப்பினர் ஆவது விருப்பத்தைப் பொறுத்தது. ஆயினும் நம் நாட்டில் சாதிமுறையில் உறுப்பினர் என்பது பிறப்பைப் பொறுத்தது. சாதிமுறையில் எவ்விதமான கூடுதல் குறைவற்ற வரம்பு கொண்ட அமைப்பு—இதில் சேரவும் இருந்து வெளியேறவும் இயலாதது. ஐரோப்பியக் குழுக்களில் இம்மாதிரி குழுவிட்டுக் குழுவில் மணம்புரிய யாதொரு தடையும் ஏற்படவில்லை. சாதிக் கோட்பாட்டினுல்தான் இந்நாட்டின் தொழிலாளரின் கைத்திறனும் தொழில் முறையும் சீர்கேடடையவில்லை எனக் கூறுவது தவறு. இச் சாதிக் கோட்பாட்டினுல்தான் தொழிலாளர் வளர்ச்சியடையவுமில்லை. சூழ்நிலைக் கேற்பத் தங்களை அமைத்துக்கொள்ளவில்லை எனலாம், (iii) அரசியல் படையெடுப்புகளை எதிர்த்து ஈடு கொடுத்து வந்துகொண்டு

இருக்கிறது. இந்து சமுதாயம் என்ற வாதம் எவ்வாறு சரியானது எனக் கொள்ள இயலும்? சாதிக் கட்டுப்பாட்டினுல் பலவர்ண வகுப்புகள் ஏற்பட்டு, அரசியல் ஒற்றுமை குலைந்து, நாட்டின் வன்மைபோய் இதர படையெடுப்புக்களை எதிர்க்கப் போதிய பலமின்றிப் போய்விட்டது எனலாம். இன்று இந்திய சமுதாயத்திலே ஈர்த்து நிற்கவும் மனநிறைவும், போதுமென்ற எண்ணமும் தோன்றக் காரணமும் சாதிக் கோட்பாட்டினுல்தான் எனக் கூறப்படுகிறது. ஒரு குறிப்பிட்ட சாதியின் உறுப்பினரின் தகுதி, தொழில் இவை முன்னரே தீர்மானிக்கப்படுவதால், ஒரு வருக்கொருவருள் ஏற்படும் வேற்றுமைகளும் பொருமைக் குணங் களும் அற்றுப்போகும்.

3. **சாதி முறையினுல் ஏற்பட்ட தீங்குகள் :** சாதி முறையை ஆதரித்து எவ்வளவு அதிகமாகப் புகழினும், அதன் தீமைகளை நோக்கின், அது கொள்ளத் தகுந்ததன்று எனலாம். (i) ஒரே சந்ததி வழியில் தோன்றிய வமிசத்தினுடே எல்லா உறுப்பினரும் தோன்றி வருதலால் விஞ்ஞான முறைப்படி சக்தியற்றவர்களாக இருப்பார்கள். (ii) சில சாதிகளில் ஆண்கள் பெண்களைவிட அளவுக்கு மீறித் தோன்றுகின்றனர். இன்னும் சில இதர சாதிகளில் பெண்கள் ஆண்களைவிட அதிக அளவில் தோன்றி வுருகின்றனர். இதனுல் பல பகுதிகளில் சீதனம் கொடுக்கவேண்டி ஏற்படுகிறது. மற்றும் பல பகுதிகளில் பெண் குழவிகள் மரித்து வருகின்றன. (iii) சாதியே, தொழிலைத் தீர்மானிப்பதால் மனிதனின் இயல்பான தொழில் வன்மைக்கும் அவன் செய்யவேண்டிய பணிக்கும் சரியான தொடர்பு இல்லாது போய்விடுகிறது. சிலர் அவர்களுடைய சாதித்தொழிலுக்கு அரு கதையற்றவர்களாக இருப்பார்கள். ஆனுல், வேறு தொழில் நடத்த இயலாது போகும். (iv) சில சாதித் தொழில்களில் அள விறந்த மனித சக்தி கிடைத்து, இன்னும் சிலவற்றிற்கு ஆளே கிடைக்காது போகக்கூடும். (v) ஒவ்வொரு சாதியும் தன் வகுப்புக்கு ஏற்ப வாழ்க்கை அமைப்பு, உணவு, உடை இவைகளை வற்புறுத்துவதால் பலதரப்பட்ட தேவைகளை ஈடுகட்ட அநேக சரக்குகளின் உற்பத்தியில் பணவிரயம் ஏற்படுகிறது. (vi) மே லான வகுப்பு, தாழ்ந்த வகுப்பு என அர்த்தமற்ற முறையில் வகுப் பதால் சிலர் அகங்காரமாக நடப்பதும், மற்றும் சிலர் தம்மைத் தாழ்த்திக் கொள்ளுதலும் மனேதத்துவ முறைப்படி தவருனது எனலாம் ; சமுதாயத்திற்கும் இசைந்ததில்லை. (vii) சாதி முறை இடப் பெயர்ச்சியைத் தடைப்படுத்துகிறது. ஒரு சாதிக் கட்டுப் பாட்டின்கீழ் அமைந்தவன் பிறிதொரு பகுதிக்குச் சென்றுல் அந்தச் சாதியின் முறைக் கேற்ப ஒழுகல் வேண்டும். இதனுல், அவன் திரும்பி வந்தால் மறுபடி அவன் அதே சாதிப் பிரிவின்

கீழ்ச் சேர்த்துக்கொள்ளப்பட மாட்டான். அவன் சாதி முறைக்குப் புறம்பாக நடந்துகொண்டான் என்ற ஒரே காரணம் தான் கூறுவர். (viii) சாதிக்கட்டுப்பாட்டின் பெருந்தீமை என்னவெனில், சமூகத்தின் ஒற்றுமை குலைந்து, பற்பல சிறு பிரிவுகள் ஏற்பட்டு, ஒன்று மற்றொன்றை அயலான் போன்று நோக்கி, விரோத எண்ணத்தைப் புகுத்திவிடுகிறது. சாதிகளுள் தோன்றும் பற்று நிரந்தரமாகத் தேசீய ஈடுபாட்டினை எதிர்த்து விடுகிறது எனலாம். இது தேசீய ஒற்றுமைக்குப் புறம்பானது.

4. **சாதி முறையின் வன்மை :** சாதியின் வன்மையைக் கண்டிக்காமல், இதனுடைய சில குறிப்பானதும் பிற்போக்கானதுமான கொள்கைகளை நம் நாட்டின் வலிய சக்திகள் மாற்றியமைத்துள்ளன. சாதி அமைப்பின் சில பிற்போக்கான எண்ணங்களை ஒழித்துக்கட்ட நாட்டின் அரசியலில் மக்களாட்சியின் மூலமும், சட்டப்படி அனைவரும் சரி நிகர் சமானமென்று வலியுறுத்தியும் உள்ளனர். இதனால் பழைய கட்டுப்பாடுகளைத் தகர்த்துள்ளனர். இத்தகைய இதர முறைகள் மூலமாகவும் கலப்பு மணம் சட்டப்படி செல்லும் என்றும், தாழ்த்தப்பட்டோர்மீது சாதிக் கட்டுப்பாட்டைத் தகர்க்க இந்திய அரசியலமைப்பில் ஷரத்துக்கள் எழுதியுள்ளனர். குறிப்பாக 'தீண்டாமை' முறையைக் கைக்கொண்டால் அது தண்டிக்கப்படத்தக்க குற்றமென்றும், அஃது அறவே நீக்கப்படவேண்டும் எனவும் கூறியுள்ளனர்.[1] சாதி முறையினால் தீர்மானிக்கப் படாத அநேக முறைகளை தொழில் முறைகள் வகுத்துள்ளன. சாதிக்கேற்பத் தொழில் என்ற எண்ணம் நாளடைவில் மறைந்துகொண்டு வருகிறது. தொழிற் சாதியினர் இப்போது பல்வேறு தொழிலில் இறங்கிவிட்டனர். மேற்கு நாட்டின் கொள்கைகளைக் கையாள ஆரம்பித்த நாம், சாதிக்கெனத் தனிப்பட்ட ஆதாயத்தைக் கோரும்போது எதிர்க்க ஆரம்பித்துள்ளோம். இதனால் ஏற்படும் அநீதிகளையும் எதிர்க்கிறோம். சாதிக் கொடுமையினின்று விலக்குப்பெற நகரப் பக்கங்களுக்கு மக்கள் போகின்றனர். நகரப்பகுதிகளில் சாதித் திட்டங்களைக் கடைப்பிடிக்கத் தவறினால் தண்டனையுமில்லை. சமுதாயம் வெறுப்பதும் இல்லை. ரெயிலிலோ பஸ்ஸிலோ (bus) பிரயாணம் செய்ய வேண்டிய காரணங்களால் சாதிக் கோட்பாடுகள் தவிடு பொடியாகின்றன,[2] இச் சாதிக் கடுமையினின்று விதி விலக்குப்

1. 'சட்டமன்றங்கள் சட்டமின்றி, சமுதாயத்தின் வளர்ச்சியை மாற்றியமைக்க முடியும். ஆயினும் பண்டை முறைகளை மாற்ற இயலுமா?'—கே. எம். பணிக்கர்—ஹிந்து சொஸைடி அட் தி க்ராஸ் ரோட்ஸ் (பக். 57-58.)

2. ஆன போதிலும் சாதி விதியை எப்போதும் எக்காலமும் கைக்கொள்வது கடினம். சாதாரண சமயங்களில் அவைகளைத் திட்டமாக அனுஷ்டிக்க வேண்டுவது இன்றியமையாதது. ரெயில் பிரயாணம் போன்ற வகைகளில் சாதி வேற்றுமை யோ தனித்து இயங்கும் முறையோ வகுப்புப் பிரிவினையோ அறிவது இல்லை எனலாம்.

பெறுவது இந்து மதத்தைவிட்டு, கிறித்தவ, மகம்மதிய மதங்களைத் தழுவி விடுதலாம். இந்து மதத்தில் உள்ள தீவிரம் இப்போது சீர்குலைந்து வருகிறது. அதிகப்படியான மக்கள் இந்து மதத்தை விட்டு மதமாற்றிக் கொள்ளுவதால் சாதி முறையை மாற்றியமைப்பதா அல்லது கட்டோடு ஒழிப்பதா என்ற பிரச்சினை தோன்றியுள்ளது.

இம்மாதிரி சிலவகையில் திட்டம் வகுத்தாலும் சாதி முறையின் கட்டுப்பாட்டுத் தன்மையைக்குறைத்தும் கூடச் சாதிமுறை மாய்ந்து போகுமா என்பதை ஆராய்ந்தால் அதற்கு முடிவில்லை எனக் கூறி விடலாம். அதைப் புறக்கணிப்பதும் இயலாததெனலாம். எடுத்துக் காட்டாக, கலப்பு மணமும், சமபந்தி போஜனமும் இன்னும் நடப்பது வெகு துர்லபமாகத்தான் இருக்கிறது. அநேக சாதிகளில் ஒற்றுமை ஏற்படுவதும் கடினமாகத்தான் உள்ளது. இன்ன இனத்தான் இன்ன சாதிக்காரன் என்ற மனவெழுச்சிதான் நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டே வருகிறது. சாதி முறைகளை ஒழித்துக்கட்டி, அதன் கெடுதல்களைப் போக்கக்கொண்டு வரும் சட்ட திட்டங்களைப் பெற்று நன்மை பெறும் எண்ணத்துடன் சில வகுப்பினர் தங்களை ஒன்று சேர்த்துக்கொண்டு தனிப் பிரிவினராகத் திகழ்கின்றனர். சட்ட மன்றங்களில் இடம் பெறவும், அரசினர் பணியாளராகவும், கல்வி மன்றங்களில் சலுகைகள் பெறவும் வேண்டுமென்றே தங்களைப் பின்னடைந்த வகுப்பினர் இவர்கள் என்று கூறிக்கொள்ள விரும்புகின்றனர். 1

1. 'அருவருப்பும் வகுப்பினைப் பற்றிய தவறான எண்ணமும் தனிப்பட்ட ஆன்மீதோ அல்லது ஒருவகுப்பின் மீதோ காண்பது தவறு. தீண்டாமை என்பது தவறு. ஆதலால் அதை ஒழித்துக்கட்ட வேண்டியது இன்றியமையாதது. தீண்டாதோர் என்றவர்களுக்குப் பலவிதமான உரிமைகளைக் கொடுத்தும் நியாயமற்ற வசதிகளை அளித்தும் வருவதால் தீண்டாமையை அகற்றிவிடமுடியாது. தீண்டாதவரை ஒரு தனி வகுப்பாகப் பாவித்து, அவர்களுக்கு அரசியல், நிருவாகம், கல்வி, சமூக சேவை இவைகளில் வேண்டிய சலுகைகளைக் கொடுத்து வருவதால் தீண்டாமை நீக்கப்படுவதில்லை. அதற்குப் பதிலாகத் தீண்டாமை என்ற முறை நிரந்தரமாக நீடிக்கப்படுகிறது. இதுகாறும் தீண்டாதவர்கள் எனக் கூறப்பட்டவர் அதை வெறுத்து இதர வகுப்புகளுடன் சேர விழைந்து அதற்காகப் பாடுபட்டனர்;இச் சலுகைகளைக்கண்ட மாத்திரத்திலேயே அவர்கள் தீண்டாதவர்களாக இருக்க விரும்புகின்றனர். ஏனென்றால் அவர்களுக்கு தனிப்பட்ட உரிமைகளும் வசதிகளும் கிடைப்பதே காரணமாகும். தீண்டாமையைப் போக்கிக்கொள்ளக் கிறித்தவச் சமயத்தைச் சார்ந்தவருக்கு இந்த வசதி கிடைக்கவில்லை. அவர்கள் மறுபடி தீண்டாதவர்களாகப் பாடுபடுகிறார்கள். கிறித்தவப் பாதிரிகளும், குருமார்களும் சர்க்கார் கிறித்தவ மதத்தில் சேர்ந்த தீண்டாதோருக்கும் அம்மாதிரி சலுகைகள் கொடுக்க வேண்டும் என்று வலியுறுத்துகின்றனர். தீண்டாமை முன்பெல்லாம் ஒரு பாவமாக இருந்தது, ஆனால் இன்றோ அது ஒரு சொத்து எனலாம்' 'இந்திய வகுப்பு வேற்றுமையைப் பற்றிய கண்டனம்' (Critique of Group Prejudice) என்ற நூலில் பி. கோதண்டராவும் மேரி கேம்பெல்லும் எழுதியது (வெளியீடு நானாவதியும் வக்கீலும்) பக்கம். 33.34.

இந்தியாவில் மதமெனப்படுவது உலகமனைத்தும் பரவியிருப்பது. இது புகாத இடமே இல்லை யெனலாம். பிரம சமாஜம், ஆரிய சமாஜம் என்ற சீர்திருத்த வகுப்புக்கள் இன்னும் அதிகப்படியான வகுப்புக்களை உண்டாக்குகின்றன. சாதித்திட்டம் ஏற்றத் தாழ்வினை நிலை நாட்டுகிறது. இஸ்லாமும், கிறித்தவ சமயமும் சாதிக் கோட்பாட்டை ஒழிக்க முயன்று, முடிவில் சாதி வேறுபாட்டை நீக்க இயலாது அதில் ஒன்றிவிடுகின்றன. 1901ஆம் ஆண்டில் நடத்திய கணக்கெடுப்பில் மகம்மதிய மதத்தில் 133 வகுப்பிருந்தன. அவை முழுமையும் அரைகுறையாகவும் இஸ்லாம் கொள்கையில் ஈடுபட்டிருந்தன. இந்துக்கள் கிறித்தவ மதத்தில் சேர்ந்ததும் தங்கள் பழமையான வகுப்புக் கொள்கையை மாற்றிக் கொள்வதில்லை எனலாம். வகுப்பு பேதம் போவதில்லை.

சமூக சீர்திருத்த வாதிகள் இந்த வகுப்புப் பிரிவினையை ஒழித்துக் கட்ட முயன்றும், முடியாது அவதிப்படுகின்றனர். அரசினரும் தனியார்களுடன் இந்த முறையை மாற்ற நீண்ட உழைப்பை மேற்கொள்ள வேண்டும். இதில் காணும் அநீதிகளுக்கு எந்த நபரும் பொறுப்பில்லை. வரலாற்று வழியில் நெடுங்காலமாக வந்த சீர்கேடு இதற்கு எந்த மனிதரும் வகுப்பும் பொறுப்பில்லை எனக் கொள்ளுதல் வேண்டும். சீர்திருத்தம் நாம் விரும்பவேண்டியதுதான். ஆனால் அதற்காகப் பிற வகுப்பினங்களின்மீது வெறுப்புக் காண்பித்துத் தாக்குதல் செய்வது தவறானது. பண்டைக்கால முறைகளில் ஏற்பட்ட ஏற்றத்தாழ்வுகளில் பாதிக்கப்பட்ட பொது இனங்கள்மீது வன்மையாக எதையும் செய்ய விழைதல் தவறு. [1]

**5. கூட்டுக் குடும்ப முறை: அனுகூலங்கள்:** இந்திய முறையில் பொருளாதார முக்கியத்துவம் அமைந்துள்ளது கூட்டுக் குடும்பமுறை. இக் குடும்பத்தின் வயது முதிர்ந்த ஆண் மக்களுக்கு இக் குடும்ப காரியங்களைச் சரிவர நடத்த பூர்ண அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கிறது (அக் குடும்பத்தில் அநேக தலைமுறைகளும் அவற்றின் பிரிவுகளும் உண்டாகி, ஒன்றாக வசித்து வரலாம்.) இக் குடும்பத்தில் உள்ள எல்லா உறுப்பினரின் உழைப்பு, வருமானம் அனைத்தும் குடும்பத்தில் போடப்பட்டுக் குடும்பத்திற்குத் தேவைகளை அதனின்று எடுத்துக் கொள்வார்கள். இது பண்டைக் காலங்களில் இருந்த சூழ்நிலைக்கு ஏற்ப அமைந்திருந்தது. அக் காலத்தில் தக்க போக்குவரத்து வசதியில்லாமையால் தொழில் சம்பந்தப்பட்டதும் வர்த்தகம் சம்பந்தப்பட்டதுமான அநேக செயல்களைக் குறுகிய அளவில் வீட்டிலேயே நடத்தினர். கூலிக்கு ஆள் கிடைக்காத காலத்தில் வீட்டிலிருந்து எல்லா

1. திட்டக் கமிஷனின் அறிக்கை அதிகாரம் 11. பத்தி. 10.

ஆண்பாலரும் விவசாயத் தொழிலில் ஈடுபட்டனர். ஏனெனில் விவசாயம் இந்தியாவின் முக்கியமான தொழிலாக உள்ளது. பிறருக்குப் பயன்படும் வாழ்க்கை நடத்தவும் எல்லாவற்றையும் தானே கொள்ளுதல் என்ற தவருன எண்ணத்தைப் போக்கவும், ஊன்றுகோல் போன்று இலாபம் தருகிறது. அநேக மக்கள் ஒரே குடியின்கீழ் வாழ்தலால் பொருள் நுகர்வில் தக்க சுருக்கமான தன்மை ஏற்படலாம். நிலத்தைப் பிரித்துத் துண்டாடும் முறையைக் கூட்டுக் குடும்ப முறை கண்டிக்கிறது. கூட்டுக் குடும்ப முறை இல்லாததால் இன்று நிலத்தில் ஏற்படும் தொல்லேகள் பல உள.

**6. தீங்குகள்:** கூட்டுக் குடும்பத்தில் பங்கெடுக்கும் இதரர்களுக்கு உழைத்து முன்னுக்கு வரவேண்டுமென்ற ஊக்கம் குறைந்து போய் விடும். ஒருவன் வேலே செய்தாலும் வேலே செய்யாவிடினும் அவனுக்கு இக் குடும்பத்தினரால் போதிய உணவு அளிக்கப்படும். இந்திய மக்கள் இடம் பெயராது ஒரே இடத்தில் இருப்பது இந்தக் கூட்டுக் குடும்ப முறையினுல்தான் என்று கூறப்படுகிறது. இக் குடும்பம் அளித்து வரும் பாதுகாப்பும், வழியும் மனிதனே மந்தப் படுத்தித் தன் பிறந்த ஊரை விட்டு வெளியே போய்த் தொழில் தேட முயலாதபடி செய்துவிடுகின்றது. பிறருக்குப் பணிந்து நடத்தல் போதிக்கப்படுகிறது. தனிப்பட்டவனுடைய முனேப்பும் தொழில் துணிவும் அகற்றப்படுகின்றன.[1] குடும்பத் தலேவன் இம்மாதிரி செயல்களில் பிரவேசிக்க அஞ்சுகிருன். தொழில் துணிவு ஏற்படாது. அதில் ஏற்படும் இன்னல்களே நீக்கப் போதிய வன்மை இல்லே என விட்டுவிடுகிருன். பொதுச் சொத்தைக் கொண்டு, இம்மாதிரிச் செயல்களில் ஈடுபட அவன் தயாராக இல்லே. ஏனெனில் பொதுச் சொத்துக்கு அவன் பொறுப்பாளனுக உள்ள காரணத்தால் இம்மாதிரி செயல்களேப் புரிவதில்லே. சற்று மோசமான எண்ணமுடைய குடும்பத் தலே வனுக இருந்தால் கடும் செயல்களில் ஈடுபட்டுப் பொதுச் சொத்தை ஈடுபடுத்தி, அதனின்று வரும் ஆதாயத்தைத் தனக்கு எடுத்துக்கொண்டு, வரும் நட்டங்களே வீட்டில்போட்டு இதரர் களின் வெறுப்பிணைத் தேடிக்கொண்டு சண்டை சச்சரவுக்கு இடம் தேடுகிருன்.

1. ஈதலும் கொள்ளலும் ஒழுங்கு பெற அமைந்து, அதனுல் கண்ணியமான முறையில் கூட்டுக் குடும்பம் நடந்து வருகிறது. இதனுல் முனேப்பும் தொழில் துணிவும் மங்கி, இல்லாது போய்விடுகின்றன. ஒரு தனி மனிதன் முனேப்பை இழந்து விடுகிருன். ஆயினும், கண்ணியமான வாழ்க்கை வளர்ச்சியடைகிறது—ஸி. எப். ஆண்டுருஸ் (C F. Andrews) டிரு இந்தியா: பக். 251. இதைச் சந்திரசேகர் தமது ஹங்ரி பீப்பின் அண்ட் எம்ப்டி லாண்ட்ஸ் (Hungry People and Empty Lands) என்ற நூலில் கூறியுள்ளார். பக்கம் 174.

நவீன முறைகளில் கூட்டுக் குடும்ப முறை கொஞ்சம் கொஞ்சமாகச் சிதறிச் சின்னு பின்னமாகி வருகிறது. போக்குவரவுச் சாதனங்கள் செம்மையாக அமைந்த பிறகு மேலே வருதல் வேண்டும் என்ற எண்ணம் படைத்த சிலர் வெளியூர்களில் வேலை தேடிக்கொண்டு ஊரை விட்டுப் போய்விடுகின்றனர். பேரளவுத் தொழிலும் வெளி நாட்டினராலும் உள்ளூர் மூலதனம் கொண்டும் தோன்றியதால் கிராமக் கைத்தொழில்கள் செயலற்றுப் போய், அதில் ஈடுபட்ட அனைவரும் தொழிலற்றுக் கிராமங்களை விட்டுத் தொழில் தேடி வெளியூருக்கும் செல்ல ஆரம்பிக்கின்றனர். மக்கள் நெருக்கத்தின் காரணத்தால் கிராமத்தில் உள்ள நிலத்தில் விவசாயத்தில் அதிகப்படியான ஆட்களைத் தாங்க இயலாத காரணத்தினுல் மக்கள் நகரங்களுக்குச் செல்கின்றனர். ஆங்கிலச் சிவில் சட்டத்தின் அடிப்படையின் காரணத்தாலும் மேனுட்டின் கொள்கை பரவிய காரணத்தாலும் தனி மனிதன் தனக்கென வாழ விரும்பி, கூட்டுக் குடும்ப முறையைப் பெருக்கினுன். முன் கூறிய பல முறைகளால் கூட்டுக் குடும்பம் நசித்துப் போகிறது. கிராமங்களைவிட நகரங்களில் கூட்டுக் குடும்ப முறை நசித்து விடுவதைக் கண்கூடாகக் காணலாம்.

**7. சொத்துப் பேறு சட்டமும் சந்ததி முறைச் சட்டமும்:** இந்தியாவில் சொத்துப் பேறு முறையும் சந்ததி முறையும் இந்துக்களுக்கு இந்து சட்டப்படி மிதாக்ஷரக் கொள்கை, தாயபாக முறைக் கொள்கை என்னும் இரண்டனையும் தழுவி உள்ளது. மகம்மதியர்களுக்கு மகம்மதியர் சட்டத்தின்படி அமைந்துள்ளது. இம் மூன்று முறைகளிலும் வேறுபாடுகள் பல உள்ளன. இவை மூன்றும் தோற்றத்தில் ஒரே மாதிரி உள்ளன. இன்றைய நிலையில் குறிப்பாகச் சொத்தைப் பிரித்துக் கொடுக்க இவை விழைகின்றன.

தலைமகன் உரிமை முறை இந் நாட்டில் இல்லாத காரணத்தால் சொத்து, சிலரின் கையில் தங்கிவிடும் முறை இல்லை. சமத்துவக் கொள்கையை இந் நாட்டில் சமுதாயம் கடைப்பிடிக்கிறபடியால் சொற்ப வருவாய் உள்ள எண்ணிறந்த மக்கள் ஏற்படுவார்கள். எண்ணிறந்த அளவில் வருவாய் உள்ள சொற்ப எண்ணிக்கை உள்ள மக்கள் இரார். குறைந்த வருவாயுள்ள எண்ணற்ற மத்திய வகுப்பினர் தோன்றுவர். இதனுல் சமுதாய வளர்ச்சி சீராக அமையும். நிலப்பேறு முறையினுலும் சந்ததி முறையினுலும் நிலமானது (இந்தியாவில் இதே பெரும் சொத்தாகக் கருதப்படுகிறது). அநேக அளவிறந்த நிலக்கிழார்களிடையே பிரித்துக் கொடுக்கப்படுகிறது. அவரவர் அங்

பகுதியில் மிகவும் ஆழ்ந்த பற்றுதலுடன் பணியாற்றுவர். இது பொருள் துறையிலும் அரசியல் முறையிலும் சரி என்று கருதப் பட்டு வருகிறது. நிலக்கிழாரே நிலத்தில் பணியாற்றுவதால் அவர் தம் வருமானத்திற்காக நன்கு உழைத்துப் பாடுபட்டால் தான் முன்னுக்குவர முடியுமென்று கூறலாம். அரசியல் அமைப் பிலும்கூட நிலக்கிழார்கள் நாட்டின் பெரும் பகுதிகளாவர். திடீர் மாற்றங்களுக்கும், புரட்சிகரமான திட்டங்களுக்கும் அவர்கள் ஈடு கொடுக்கமாட்டார்கள். நாட்டின் சொத்தனைத்தும் இம்மாதிரி பெருமளவில் பலருக்குப் பிரித்துக் கொடுத்ததால் அநேகர் தங்கள் வாழ்க்கைக்கு வழிதேட அவசியம் ஏற்படுகிறது. பெருமளவில் நிலத்தையும் பிரித்துக் கொடுத்ததால் தனி மனிதனுக்குச் சொற்ப அளவில் கிடைக்கிறது. ஆயினும் அவன் உழைத்து முன்னுக்கு வர வேண்டும் என்ற கோட்பாடு பொதிந்துள்ளது. சந்ததி முறையிலும் நிலப்பேறு முறையிலும் வரும் செல்வம் போதாத காரணத்தால் அவன் சிரமமின்றி வாழ மேன்மேலும் உழைக்க வேண்டும் என்பது நியதி.

இம் முறையில் ஏற்பட்டுள்ள சிரமங்களையும் வேறொரு பக்கத் தில் இது தீட்டும் சித்திரத்தையும் காண்போம். சொத்து சிலர் கையில்மட்டும் சேர்ந்திருப்பது மெச்சத்தக்கதன்று. மேலும் இந் நாட்டின் சமத்துவம் என்ற கொள்கைக்குப் புறம்பானதாக இருக்கிறது. ஆயினும் ஒரு சிலர் கையில் சொத்து சேருவதால் அவர்கள் அதிக வரவினங்கள் பெற்று, பெரு மூலதனத்தை ஏற்படுத்திக்கொள்கிறார்கள். இதனால் நாட்டில் தொழில்முறைக்கு உதவி பெற இடமாகிறது. சொற்ப வருவாயுள்ள பெரு எண்ணிக் கையான மக்களால் தங்கள் வரவு செலவிற்கே போதிய அளவு பணமின்றிச் சேமிப்புச் செய்யவும் முடியாது போய், நாட்டில் மூலதனம் சேரச் சந்தர்ப்பம் கிடைப்பதும் இல்லை. வருமானத்தில் ஏற்றத்தாழ்வுள்ள நாடாக இருப்பின் அந் நாட்டின் அரசு வரிதண்டிச் சீராக முதலீடு செய்யலாம். ஆயினும் சீரான வருமான முள்ள சமுதாயத்தில் இம் முறை பயனற்றுப்போகும். அரசினரின் கையில் போதிய நிதியிருப்பின் எல்லாத் துறைகளிலும் முன்னேற்றம் காண இயலும்.

நிலப்பேறு முறையிலும், சந்ததிச் சட்ட முறையின்கீழும் எண்ணற்ற முறையில் நிலம் கூறு போடப்பட்டும், துண்டாடப் பட்டும் வருகின்றன. இதனால் விவசாயச் சீர்திருத்தம் செய்வது எளிதில் முடிவதில்லை. சோஷலிஸ சமுதாயமும் மக்கள் ஆட்சியும் கொண்ட எண்ண முறையில் ஏற்றத்தாழ் விற்கு இடம் கொடுக்கும் என்று கூற முடியாது, நிலவில்

உள்ள நிலப்பேறு சட்டத்தை அகற்றிவிடவும் முடியாது. முன்பே இயற்றப்பட்ட சட்டங்களை அமலில் இருத்தியும், தனிப்பட்ட முறையில் தோன்றும் தீங்குகளை விலக்க முற்பட வேண்டும். சம அந்தஸ்தினை உடைய சமூகத்தில்கூடத்தான் ஒரு பெரிய கூட்டுப்பங்கு கம்பெனி தனக்கு வேண்டிய மூலதனத்தைப் பெறுகிறது. அதேபோலக் கூட்டுறவுப் பண்ணை முறையின்கீழ் நாட்டில் உள்ள நிலப்பிரிவினைத் துண்டாடும் முறைகளை அகற்றி விடலாம்.

**8. மதத்தினால் கட்டுப்படுத்துதல்:** இந்தியா பொருள் துறையில் முன்னேற்றமடையாததற்கு மதம்தான் காரணம் எனக் கருதப்பட்டது. ஏனெனில் இந்நாட்டு மக்கள் அருள் நெறியில் ஈடுபடவும் உறுதுணையாக நின்றது. ஆதலால் மக்கள் பொருள் வேண்டாமென வாளா இருந்தனர் எனக் கூறத் தலைப்பட்டனர். ஆயினும் வரலாற்றின் வழியே நோக்குங்கால் அவ்வாறு எவ்விதச் சிக்கலும் ஏற்பட்டதாகக் காணவில்லை. பண்டைக் காலங்களில் நம் நாட்டவர் இதர நாடுகளில் குடியேறி, அவற்றை அடக்கி ஆண்டும், இந்திய அரசினை நிலைநாட்டினர் என்றால் மிகையாகாது. எல்லோராலும் போற்றத்தகும் நூல்களான கணிதம், வான நூல், மருத்துவ முறை, இந்தியக் கைத்திறன் பெற்ற பொருள் இவை உலகப் புகழ் பெற்று விளங்கின. பொருட்டுறையிலும் 18ஆம் நூற்றாண்டு வரையிலும் நம் நாடு இதர நாடுகளுடன் சீரிய முறையில் ஒப்பிடத் தக்க நிலையிலிருந்தது எனலாம்.

நடப்பில் உள்ள நிலைமையில் சிற்சில வகுப்பினர், எடுத்துக் காட்டாக மார்வாரிகள், பட்டியாக்கள் (Bhatias), மோமீன்கள் (Memons), போராக்கள், கோஜாக்கள் இவர்களுடைய மதக் கோட்பாடும் சடங்குகளும் மேற்கு நாடுகளின் நாகரிகத்தால் பாதிக்கப்படவில்லை. இவர்கள் வர்த்தக முறையில் ஆற்றல் படைத்துத் தழைத்தோங்கி வருகின்றனர். பொருள்தேடும் எண்ணம் மத வளர்ச்சி எண்ணத்தைப் போன்றது. அவை எப்போதும் முன்னேற்றப் பாதையில் செல்லும் என்று மார்ஷல் (Marshall) இயம்பியது இந்தியாவிற்குப் பொருந்தும். பொருளாதார முன்னேற்றத்துக்கு ஏற்பச் சூழ்நிலை யமைதல் வேண்டும். அரசியல் கொந்தளிப்பும், ஆர்ப்பாட்டங்களும், பாதுகாப்பு முறைகளின்றியும் நாடிருந்தால் முகலாய ஆட்சிக்குப்பின் 150 ஆண்டுகள் வரை நம் நாடு இருந்த நிலைமை ஏற்பட்டால் அன்றாடத் தேவைக்கான வருமானத்திற்கு மட்டும் உழைத்தும், கடவுளை நம்பித் தன் தலையெழுத்தின்படி நடக்கும் என்ற எண்ணத்தில் மனிதன் இருந்து விடுகிறான். ஏன் தேவைக்கு மீறி

உழைக்கிருய்? உன் சொத்தைக் கொள்ளைக்காரன் எடுத்துக் கொண்டு போவான் அல்லது கவரும் எண்ணமுடைய அரசு உன் சொத்தைப் பறிமுதல் செய்துவிடும் எனக் கோரக்கூடும். சட்டமில்லாத காலங்களில் மக்கள் எந்த மனோநிலையில் இருந்தனரோ, அதே நிலையில்தான் இன்னும் உள்ளனர். இன்னும் இந்நாட்டவர் இயற்கையின் கோரதாண்டவத்திற்கு இலக்காகினர். பஞ்சங்களும் தீராத தொத்து நோய்களும் அடிக்கடி தோன்றின. கொஞ்ச காலமாகத்தான் அவற்றைப் போக்க அரைகுறையாகவாவது நாம் பாடுபடுகின்ருேம். காலந்தோறும் பஞ்சம் வந்து மக்களைப் பாதிக்கும். தொத்து நோய்களும் பிணியும் தோன்றிக் கண் இமைப்பொழுதில் ஆயிரம் ஆயிரமாக மக்களுயிர்களைக் குடித்துச் சென்றன. மிகுதியுள்ளவர் பின்னர் அவற்றிற்கு இலக்காகினர். பஞ்சத்தின் காரணம் பட்டினியால் அவதியுற்று மக்கள் உடல் சக்தியிழந்து, தங்கள் ஞாபகசக்தியைப் போக்கிக் கொண்டு வெறுப்புக் கொள்வதற்கு இடம் கொடுத்துத் தங்கள் ஆற்றலை இழந்து அவதிப்படுகின்றனர். பல நூற்ருண்டுகளாக நமது சமுதாயம் தாழ்த்தப்பட்டோரெனப் பிரிக்கப்பட்ட அவர்கள் பஞ்சப்பிணியில் வாடிவதங்கிய கோலம் கண்கொள்ளாக் காட்சி எனலாம்.

கீழ்நாட்டு எல்லா மதங்களும் விதியின் கொள்கையை முழுமையும் நம்புகின்றன என்று திரு. வைக்கவுன்ட் ஸாமுவேல் கூறுகிருர்.[1] இஸ்லாம் என்ற வார்த்தையின் பொருளே கடவுளின் விருப்பத்திற்குக் கீழ்ப்படு என்பதாகும். கிறித்தவ மதத்தைச் சேர்ந்தவன் கடவுளைத் துதிக்கும்போது, 'தங்கள் எண்ணப்படி நான் நடப்பேன்' (Thy will be done) எனக் கூறுகிருன். எல்லா மதங்களும் பொருளை நீக்கிப் பற்றற்ற முறையில் வாழவேண்டுமெனப் போதிக்கின்றன. அதனுல்தான் மார்க்ஸ் (Marx) 'இது மக்களுக்கு அபினி போன்றது; இதை அகற்றவேண்டுவது இன்றியமையாதது' என்கிருர். இதே முறையில் ஸாமுவேல் அவர்களும் கிறித்தவ மதம் வரும் உலகத்தைப் பெற நடப்பில் உள்ள பொருள் கொண்ட உலகை இழக்கச் சித்தமாக உள்ளது. ஆத்ம சக்திக்கும் வாழ்வினுக்கும் உள்ள எதிர்ப்பைச் சுட்டிக்காட்டி, ஆத்மீக வளர்ச்சிக்கு உடல் இடம் கொடுத்து மரித்தல் நலம் எனக் கூறுகிருர்.

நம் நாட்டில் பொருள் முன்னேற்றம் ஏற்படாது மந்தப்பட்டு உள்ளதற்கு நம் நாட்டில் நாம் கைக்கொள்ளும் மதம் ஒன்றே

1. பிலீப் அண்ட் ஆக்ஷன் (Belief and Action), பக். 32-3.

இடையூருக உள்ளது எனக் கூறல் தவருனது. கால முழுமைக்கும் மதம் அசைவற்ற நிலையானதொன்று எனக் கூறமுடியாது. எல்லாவற்றிலும் மாற்றம் உண்டாவதுபோல் அதிலும் மாறுதல்கள் ஏற்படுகின்றன. சுற்றுப்புறம் சூழ்நிலைக்கேற்பப் புதிய கொள்கைகள் பழக்க வழக்கங்களையும் சேர்த்துக்கொள்ளுகிறது. தற்பொழுது புழக்கத்தில் இராத பழங்காலக் கோட்பாடுகளைக் கொண்ட மதநூல் கவனிக்கப்படாமல் தூக்கி எறியப்படுகிறது; அல்லது புதிய கொள்கைகளை அதில் எழுதப்பட்டும் அல்லது பழைய கொள்கைகளுக்குப் புதிய விளக்கம் கொடுத்துவரப்படுகிறது. இந்த நாடு விரைவில் பொருள் துறையில் முன்னேற்றம் காணவேண்டும் என்ற தீவிர மனேதிடத்துடன் முன்னேற்றப் பாதையில் சென்று கொண்டிருக்கின்றது. அநேக இடையூறுகளையும் தடங்கல்களையும் கடக்கவேண்டி நேரிடும்.[1] நம் மதம் பிறர் நினைக்கும்படி அவ்வளவு ஆன்மீக சக்தியுள்ளது எனக் கொள்ளுதல் தவறு. இதைப் பற்றித் திட்டக் கமிஷன் ஏதும் கூறியதில்லை.[2]

1. ஆன்மீக சக்தியுள்ளது எனத் தவருகக் கூறப்படுகிறது.

2. எம் மதமாயினும் சரி, அது நல்ல புத்திமதிகளைப் புகட்ட வேண்டியது இன்றியமையாதது. நல்ல உயர் நோக்குள்ள புத்திமதிகளைப் புகட்ட வேண்டுவது பற்றிக் கொள்ளப்படின் இதர நாட்டிலுள்ள மதங்களைப் போலன்றி நம் நாட்டு மக்களில் தனிப்பட்ட, பொதுவாழ்க்கையின் தரம் உயர்வானதால் ஆன்மீக வளர்ச்சியை வலியுறுத்தவில்லை.

# 5. விவசாயம்

**1. அடிப்படையில் விவசாயத்தின் இன்றியமையாத தன்மை :** இந்தியாவின் இன்றியமையாத தொழில் விவசாயம். இந் நாட்டின் மக்கள் தொகையில் 70 சதவீதம் இதில் ஈடுபட்டுள்ளனர். தேசீய வருமானத்தில் 48 சதவீதம் விவசாயத்திலிருந்து கிடைக்கிறது. நாட்டின் பெரிய தொழில்களுக்கான ஆக்கப் பொருள்களை, குறிப்பாகக் கூறின் சர்க்கரை, பருத்தி நெசவு, கொடுப்பதோடல்லாது ஏற்றுமதிக்குப் பெரும் பகுதி தயாராகிறது. சணல், பருத்தி நெசவுகளுக்கான ஆக்கப் பொருள்களை இது ஊற்பத்தி செய்ய முடிவதில்லை. மேலும் இங்குள்ள மக்களுக்குப் போதிய உணவுப் பொருள் உற்பத்தி செய்ய முடிவதில்லை.[1] 1930-ன் நடுப் பகுதியில் மக்கள் தொகை உணவு உற்பத்தியை மீறிவிட்டது. 1937-ல் பர்மா நம் நாட்டிலிருந்து பிரிந்தவுடனேயே தேவைகளுக்கும் வழங்குதற்குமிடையே ஏற்பட்ட இடைவெளி அதிகரிக்க ஆரம்பித்து, 1947-ல் நாடு பிரிக்கப்பட்ட காரணத்தால் கால்வாய்ப் பகுதிகள் உள்ள சிந்து சமவெளியில் பஞ்சாப்-பாகிஸ்தானில் போய்விட்டது. இதனுல் உணவுப் பற்ருக் குறை ஏற்பட்டது. சணல் உற்பத்தி குறைந்து, நீண்ட, குறைவுபட்டது சும்புள்ள பருத்தியும் கிடைப்பதரிதாயிற்று. நாட்டிற்குப் பொருளாதார முன்னேற்றம் எனப்பட்டது பல திக்குகளிலும் ஏற்பட வேண்டியது. விரிவாக விவசாயம், தொழில், வர்த்தகம், போக்குவரத்து முறை இவைகளிலும் ஏற்பட வேண்டும். இப் பிரிவுகள் அனைத்தும் ஒன்றையொன்று தொடர்ந்திருப்பதால் அவற்றைச் சீராகக் கவனித்தல் வேண்டும். பற்ருக் குறையை அகற்றி, நாட்டின் பொருள் நிலையை மேம்பாடான நிலையில் அமைத்து, அதன் காரணத்தால் நிலத்தைப் பயனுள்ளதாக்கியும், நிலத்தில் வேலை செய்பவருடைய உழைப்பைச் செம்மையான முறையில் நாட்டுக்குப் பயன்படுத்திக் கொளல் இன்றியமையாதது.

1. தற்போதுள்ள உணவு நிலையின் மேம்பாட்டிலிருந்து இம் மாதிரி நிலவி வரும் என்று முடிவு செய்வது தவறு. தொடர்ந்து நல்ல பருவ மழைகள் பெய்ததால் உணவு உற்பத்தி சிறப்புடன் நடந்துவருகிறது.

**2. இந்தியக் கிராமம் :** விவசாயத் தொழிலின் அடிப்படையில் ஓர் இந்தியக் கிராமம் எவ்வகையில் அவசிய முள்ளதென்பதை நாம் அறிவோம். ஆக, இக் கிராமத்தைப் பற்றிய விளக்கத்தை இங்குக் குறிப்பிடுவோம். இத்தியக் கிராமம் எனப்படுவது உழுது பண்படுத்தப்பட்ட நிலங்கள் கொண்டது. இவைகளையடுத்துப் பயனற்ற களர்நிலப்பகுதி இருக்கக்கூடும். இதில் வீடுகளும் குடிசைகளும் ஓரிடத்தில் கூட்டமாக அமைந்திருக்கக்கூடும். வட்டவளைவுகள் போன்று நிலங்கள் அவற்றைச் சுற்றியமைந்திருக்கும் இன்னும் சிற்சில வட்டாரங்களில் நிலத்தில் வீடுகளும், தானிய அறைகளும் தனித்தனியே அமைந்திருக்கும். நல்ல பாதுகாப்பின் நிமித்தம் உழவர் நிலத்திலேயே வீடு கட்டிக்கொண்டு வாழ்கிறார்.

கிராமத்தில் வாழும் மக்களை மூன்று பிரிவுகளாகப் பகுக்கலாம்: (i) நிலத்தில் உழைப்பவர்கள், (ii) கிராம அதிகாரிகள், (iii) கிராமக் கைவினைஞர்களும் கூலி வேலை செய்பவர்களும். நிலத்தில் உழைப்பவர் எனக் கூறப்பட்ட வகையில் நிலக்கிழார், நிலக் குத்தகை அல்லது வாரப் பயிர் இடுபவர் இவர்கள் மிகவும் முக்கிய பகுதியினராகக் கருதப்படுகின்றனர்.

ஒவ்வொரு கிராமத்திற்கும் அதற்கென அதிகாரிகள் உள்ளனர். இன்று இந்திய நிருவாகத்திற்கு அடிப்படையுறுப்பாக உள்ளது கிராமம். ரயத்துவாரி முறை (ryotwari system)யின்படி கிராமத் தலைமை அதிகாரிக்குப் படேல் அல்லது கிராமத் தலைவன் என்று பெயர். இது வமிச பரம்பரை பாத்யமுண்டாதலால் கிராம அதிகாரி வரி தண்டுவார். ஊரில் மக்கள் சமாதானத்துடன் சட்ட வரம்பினுள் நடக்க ஏற்பாடு செய்வார். சிற்சில சமயங்களில் கிராமச் சச்சரவுகளில் ஈடுபட்டு மாஜிஸ்திரேட்டின் பணியாற்றுவர். இம்மாதிரியான பணிகளுக்காக அவருக்கு வடன் (vatan) நிலங்கள் கொடுக்கப்படும். கிராமக் கணக்கருக்குக் குல்கர்ணி என்று பெயர். அவர் கிராமப் பதிவுக் கட்டுக்களையும் கணக்கினையும் சரியான முறையில் வைத்துக்கொள்வார். கிராமக் காவல்காப்போனாக உள்ளவனது பெயர் சௌகிதார் (chowkidar). அவ்வப்போது கிராமத்தில் நடக்கும் குற்றங்களை விவரமாகத் தகவல் கொடுத்து குற்றம் செய்பவர்களைப் போலீஸ் வசம் ஒப்புவிப்பது இவன் கடமையாகும். தக்காணப் பகுதிகளில் இவர்களை 'அலூடீஸ், (alutes) என்று கூறுவர். கிராமத்தின் இதர வேலைக்காரர்களையும் கைவினைஞர்களையும் பலூடீஸ்' (balutes) என்று வேற்றுமைப் படுத்திக் கூறுவர்.

ஒவ்வொரு கிராமத்திலும் அதற்கெனக் கைவினைஞர்கள் உள்ளனர். குறிப்பாக, தச்சர், கொல்லர், குயவர், நாவித அறுவை

வைத்தியர், சக்கிலியர், வண்ணார், பொற்கொல்லர் முதலியோரும், பெரிய கிராமங்களாக இருப்பின், சேணியரும் கடன் கொடுப்பவரும் உள்ளனர். கடன் கொடுப்பவர் கிராமத்தின் மொத்தத் தானியக் கொள் முதல் செய்பவராகவும் இருக்கக் கூடும். கைவினைஞர் அனைவருமே கிராம மக்களின் வேலைக்காரர்களானபடியால் இவர்கள் வமிச வழியாகப் பாத்தியதை கொண்டவர்கள். இவர்களுடைய தொழிலுக்கு அவ்வப்போது பணம் கொடுக்கப்படுவதில்லை; இவர்களுக்கு மானியமாக நிலமோ வீடோ கொடுக்கப்படுகிறது. ஆண்டு முடிவில் அறுவடையின்போது இவர்களுக்குத் தானியம் கொடுக்கப்படுகிறது. தனித் தனியே தொழிலுக்காக அவ்வப்போது ஊதியம் கொடுக்கப்படுவதில்லை. இந்தத் தொழிலாளர்களுடைய வேலையைக் கோரி, அவ்வப்போது தனியே ரொக்கமாகவோ, வண்டி, கரும்பாலை போன்றவற்றையோ கொடுத்து விடுவார்கள். கிராமக் கூலிக்காரன் தனியே பணம் பெறக்கூடும்.[1]

| பயிர் வகைகள் | சராசரிப் பரப்பு (000 ஏகரில்) 1954—55[2] | சராசரி உற்பத்தி (C00 டன்களில்) 1954—55 |
|---|---|---|
| அரிசி | 77,424 | 24,209 |
| ஜோவர் (jowar) | 43,456 | 9,092 |
| சாமை (Bajra) | 27,350 | 3,555 |
| மக்காச்சோளம் | 9,325 | 2,944 |
| கேழ்வரகு | 5,747 | 1,778 |
| சிறு கம்பு | 13,680 | 2,424 |
| கோதுமை | 26.842 | 8,539 |
| பார்லி | 7,999 | 2,786 |
| பயறு | 20,991 | 5,125 |
| கரும்பு | 3,939 | 5,464 |
| உருளைக்கிழங்கு | 639 | 1,600 |
| புகையிலை | 837 | 871 |
| எள் | 6.460 | 592 |
| வேர்க்கடலை | 12,647 | 3,823 |
| எள், கடுகு | 5,665 | 962 |
| ஆளி விதை | 3,290 | 388 |
| ஆமணக்கு விதை | 1,-73 | 112 |
| சணல் | 1,273 | 3,153[3] |
| பருத்தி | 18,346 | 4,298[4] |

1. லாண்டு ரெவின்யூ அண்டு டென்யூர் இன் பிரிட்டிஷ் இந்தியா. பக். 66-9.
2. அரசினரின் மதிப்பீடுகள்—காமன்ஸ் ஆன்யுவல் 1957 டிசம்பர் பக். A-97.
3. 400 பவு. கொண்ட 1000 பேல்கள்.
4. 392 பவு. கொண்ட 1000 பேல்கள்.

**3. பரப்பளவு, பயிர்வகை, விளைச்சல் :** 74ஆம் பக்க அட்டவணையில் பரப்பளவு, பயிர்வகைகள், அவற்றின் விளைச்சல் முதலியன குறிக்கப்பட்டுள்ளன.

மொத்த விளைச்சலில் அரிசி 22·9 சதவீதமும், கோதுமை 7·5 சதவீதமும், இதர தானிய வகைகள் 30·4 சதவீதமும், பருப்புகள் 15·2 சதவீதமும், மணிலா 3·4 சதவீதமும், எண்ணெய் வித்துக்கள் 5·2 சதவீதமும், சர்க்கரை 1·5 சதவீதமும், பருத்தி 4·6 சதவீதமும், சணல் 0·5 சதவீதமும், இதர பயிர்கள் 8·8 சதவீதமுமாக உள்ளன.[1]

**4. பிரதான பயிர் வகைகள்: உணவுப் பயிர் வகைகள் (ii) அரிசி :** இந்நாட்டில் ஆண்டுதோறும் சாகுபடி ஆகும் நிலங்களில் 23% அரிசி சாகுபடிக்கு ஏற்பட்டதெனலாம். 24 மிலியன் டன்கள் உற்பத்தியாவதால் ஆண்டிற்கு ஏக்கர் ஒன்றுக்கு சராசரி 791 பவுண்டு உற்பத்தியாகிறது. இன்று நுகர்வு உற்பத்தியை மீறிப் போவதால் 8 முதல் 10 சதவீதம் வரை பற்றுக் குறை ஏற்பட்டுவருகிறது. இப் பற்றுக் குறையை ஈடுகட்ட இரண்டாம் உலகப்போரின் முன்னர் இதன் கிழக்கு ஆசிய நாடுகளினின்று குறிப்பாகப் பர்மாவிலிருந்து இறக்குமதி செய்யப்பட்டு வந்தது. யுத்தத்தின் பிறகு ஏற்றுமதிக்கான அளவு உற்பத்தியில் மீதம் ஏற்படாதுபோயிற்று. பாகிஸ்தானத்திற்கு நல்ல விளைச்சல் நிலங்கள் சேர்ந்துவிட்டதால் உணவுத் தானியம் நம் நாட்டின் உற்பத்தியில் குறைந்தது. மழைக் கோட்டிணைப் பொறுத்து உணவுத் தானியப் பயிர்கள் சாகுபடியாகின்றன. 80″ க்கு மேற்பட்ட மழைச்சாரல் பிரதேசங்களில் அரிசி சாகுபடி மேம்பாடாக நடக்கிறது; 30″ முதல் 80″ வரையிலும் அரிசி முக்கியமாகப் பயிராகிறது. 30″ க்குக் கீழ்ப்பட்ட இடங்களில் நீர்ப்பாசன உதவியால் உற்பத்தி செய்யப்படுகிறது.

1932ஆம் ஆண்டிலிருந்து இந்திய விவசாய ஆராய்ச்சிக் குழுவினர் சங்கிலி போன்று பல்வேறு இடங்களுக்கு மானிய முறையில் ஆராய்ச்சி நடத்துகிறார்கள். அதன்படி விதவிதமான ரகங்களை ஆராய்ந்து கண்டுபிடித்துள்ளார்கள். பீகாரில் வெள்ளத்தையும் மீறிப் பயிராக்கக்கூடிய வகைகளையும் தோற்றுவித்துள்ளனர். அரிசி உற்பத்தியைப் பெருக்கும் நோக்கத்துடன் 1946ஆம் ஆண்டில் கட்டாக்கில் மத்திய அரிசி ஆராய்ச்சி நிறுவனத்தைத்

1. தகவல் கிடைத்துள்ளதும், கிடைக்காத இடங்களுக்கும் எழுதிடப்பட்ட மதிப்பீடுகள் தானியங்களுக்கும், பயருக்குமே பொறுத்தது. இதர பயிர்கள் தகவல் கொடுத்த இடங்களைப் பொறுத்தவை. ஆதலால் மொத்தப் பயிர் செய்த பகுதிகள் அதிகம்,

தொடங்கியுள்ளனர். ஜப்பான் முறையில் பயிரிடும் வகைகளை நடைமுறையில் கொண்டு வரவேண்டும் என்று எல்லா இராச்சிய சர்க்கார்களுக்கும் தாக்கீது செய்துள்ளனர்.

இராச்சிய விவசாய இலாகாவினர் சூழ்நிலைக் கேற்ப 300 வகையான உயர்ந்த ரகங்களை உண்டு பண்ணியிருக்கிறார்கள்.

(ii) **தானியங்கள்** : மழை பெய்யும் நிலங்களில் இவை தோன்றுகின்றன; ஏழை மக்களுக்கு உணவாகவும் கால்நடைகளுக்கு வைக்கோலாகவும் பயன்படுகின்றன. மிகவும் பெயர் பெற்ற வகைகள் ஜோபாரும் பாஜ்ராவும். (உற்பத்தி, பரப்பு இவைகளையறிய 74ஆம் பக்கத்திலுள்ள அட்டவணையைக் காண்க.)

ஜோவார்களுக்கு நிலம் செழிப்புள்ளதாக அமைதல் வேண்டும். பாஜ்ராக்களுக்கு அவ்வளவு செழிப்பான நிலம் தேவையில்லை. இவ்விரண்டும் நிலவளத்தை யொட்டிப் பயிராகியுள்ளன.

(iii) **பருப்புகள்:** மரக்கறி உணவு கொள்பவருக்கு வேண்டிய புரதப்பொருள் (protein) பருப்பு வகைகளிலிருந்துதான் கிடைக்கிறது. சில வகைப் பருப்புகள் நல்ல மாட்டுத் தீவனமாக அமைகின்றன. இன்னும் சில நிலத்திற்குப் பசுமையுரமாகப் பயன்படுகின்றன. 1943-லிருந்து இந்திய விவசாய ஆராய்ச்சிக் குழுவினர் மானியம் அளித்துப் பருப்பு வகைகளைப் பற்றிய ஆராய்ச்சியைப் பல இராச்சியங்களில் நடத்தி வருகின்றனர். அவை உளுந்து, துவரை, பச்சைப் பயிறு, கடலை முதலியன.

(iv) **கோதுமை :** மொத்த சாகுபடி ஏக்கர்களில் 7·5% கோதுமை பயிராகும் நிலங்கள். வட இந்தியாவில் இதுதான் விளைச்சலாகப் பயிராக்கப்படுகிறது. 'துரு' என்ற கடும் வியாதியினால் இதுபெரிய அளவில் பாதிக்கப்படுகிறது. 1930-லிருந்து இவ் வியாதியை எதிர்த்துத் தழைத்தோங்க வல்ல ரகங்களை இந்திய விவசாய ஆராய்ச்சிக் குழுவினர் கண்டுபிடித்து வருகின்றனர்.

(v) **கரும்பு :** உலகில் எந் நாட்டினைக் காட்டிலும் இந்நாட்டில் கரும்புச் சாகுபடி செய்யப்படுதல் மிக அதிகம். 1932 முதல் 1950 வரையிலும் அரசினர் இதற்குப் பாதுகாப்பு வசதி அளித்ததால் பெருமளவில் இது செழித்து வளர்ந்தது. இந்தியாவின் தொழில்களில் இரண்டாவதாக அமைந்து 160 சர்க்கரை ஆலைகள் வேலை செய்து வருகின்றன. 2 மிலியன் பேர்கள் இதில் ஈடுபட்டு, ஓர்

ஆண்டில் ரூ. 120 கோடி மதிப்புள்ள சர்க்கரை உண்டாக்குகின்றனர்.

பீகாரும் உத்தரப் பிரதேசமும் 73% உற்பத்தியைச் செய்தும், இதர இராச்சியங்களான ஒரிஸ்ஸா, பஞ்சாப், ஆந்திரா, சென்னை, பம்பாய் இவை மீதியைத் தயாரிக்கின்றன 1952-ல் பம்பாய் இராச்சியத்திலுள்ள அகமது நகர் மாவட்டத்தில் முதன் முதலாகக் கூட்டுறவு முறையில் சர்க்கரை ஆலை துவக்கப்பட்டது.

தலைக்குப் படிக சர்க்கரை 8·52 பவுண்டு வீதம் கணக்கெடுத்து 1955-56-ல் 15 இலட்சம் டன் சர்க்கரை உற்பத்தி செய்தல் வேண்டுமென்று திட்டக்கமிஷன் வகுத்துள்ளது. இந்த இலக்கினையடைய செறிந்த வேளாண்மை முறையைக் கடைப்பிடிக்க வேண்டும். இதற்கான செயல்களை நடத்த இராச்சிய சர்க்காரும் மத்திய அரசும் பணச் செலவு செய்யும். விவசாய இயலில் (agronomy) சில முக்கியப் பகுதிகளை ஏற்படுத்தியுள்ளனர். அவைகளாவன: (i) விவசாயப் பொறியியல் முறை, (ii) கரும்பில் வரும் பூச்சியினங்களைப் பற்றி ஆராயும் இயல், (iii) கரும்பினைப் பற்றும் காளான் ஆராய்ச்சி ஆகிய இவைகளுக்கான முயற்சிகள் எடுக்கப்படுகின்றன. நீர்ப்பாசன வசதிகளுக்கான ஏற்பாடுகள் எல்லா இராச்சிய அரசினராலும் செய்யப்பட்டு வருகின்றன.

சுத்தமான சர்க்கரையின் அடக்க விலையைத் தீர்மானம் செய்யக் கரும்பின் விலை இன்றியமையாத ஒரு படி.

கரும்பின் விலையைக் கட்டுப்படுத்த வேண்டிய கட்டாயம் தோன்றியது. தொழில்கள் (வளர்ச்சியும் கட்டுப்பாடும்) என்ற 1951ஆம் ஆண்டின் மத்திய சட்டத்தின்கீழ் கரும்பினை மத்திய சர்க்கார் கட்டுப்பாடு செய்யும் பொருள்களின் பட்டியலில் சேர்த்துக் கொண்டனர். இதன் உற்பத்தியில் உண்டாகும் உபவஸ்துக்களைக் குறிப்பாக, 'பேகேஸ்' (Bagasse) என்ற நீர் எடுக்கப்பட்ட கழிகள், மெலாஸஸ், அழுத்தப்பட்ட மண் இவைகளை எவ்வாறு பயனுக்குவது என்றும், இவையனைத்தையும் எவ்வாறு நடத்துவது என்றும் தீர்மானித்தனர். தோட்டப் பயிர் முறை போன்று இதை விஞ்ஞான முறையில் நடத்த விழைந்தனர்.

78ஆம் பக்க அட்டவணையில் கரும்பினைப் பற்றிய பயிர், பரப்பு, உற்பத்தி, விளைச்சல் இவைகள் கொடுக்கப்பட்டுள்ளன.[1]

1. 'ஓவர்சீஸ் எகனமிக் ஸர்வேஸ்'—இந்தியா 1952, பக். 182.

சராசரிக் கரும்பு ஓர் ஏக்கருக்கு ஆகும் சாகுபடி 13டன்களாகும். ஜாவாவில் 56 டன்கள் உண்டாகின்றன (11·5% சர்க்கரை கிடைக்கிறது). ஹவாயில் 62 டன்கள் (10·6% சர்க்கரை உண்டாகிறது). 1950-51-ல் ஆஸ்திரேலியாவில் கிடைத்த மிக அதிகப்படியான சர்க்கரை 14·3, கியூபாவில் 12·3%-ம், மொரிஷஸில் 12·1 சதவீதமும் கிடைத்தன.

பீகாரும் உத்தரப் பிரதேசமும், கரும்பிற்குரிய குறைந்த விலையைச் சட்டப்படி இவ்வளவென்று முடிவு செய்து, கரும்புச்சாகுபடி செய்வோர்களுக்கு ஆலைகள் கொடுக்கவேண்டுமென்று வற்புறுத்தின. இருதரப்பினருக்கும் இது சம்பந்தமான மனத்தாங்கல்கள் ஏற்பட்டு வருகின்றன. சர்க்கார் இந்த விவாதத்தில் தலையிட்டுக் கரும்பு விளைவிப்போர்களுக்கே சாதகமாக முடிவு செய்கிறது. ஏனெனில் அது கரும்புச் சாகுபடியில் அதிக அக்கரை

| ஆண்டு | கரும்பு சாகுபடி பரப்பு (மிலியன் ஏக்கர்) | உற்பத்தி அளவு ஆலைப் பொருள் சர்க்கரை (மிலியன் டன்) | ஆலைகளில் பிழியப்படும் கருப்பங்கழி (மிலியன் டன்) | கரும்பிலிருந்து கிடைக்கும் பொருள் (100க்கு) | ஆண்டுதோறும் சராசரிக் கரும்புச்சாகுபடி ஏக்கருக்கு (டன்) | ஏக்கருக்குச் சராசரி சர்க்கரை கிடைத்தது(டன்) |
|---|---|---|---|---|---|---|
| 1949-50 | 3·6 | 4·93 | 9·9 | 9·88 | 13·5 | 0·81 |
| 1951-52 | 4·7 | 5·89 | 11·0 | 9·57 | 13·3 | 1·2 |
| 1953-54 | 3·5 | 4·6 | 9·9 | 10·08 | 12·5 | 1·3 |

காட்டுகிறது. உத்தரப் பிரதேசத்திலும் பீகாரிலும் கரும்பு வரியைக் கொஞ்சம் கொஞ்சமாக அதிகப்படுத்தி, இத்துறையில் ஆராய்ச்சி செய்யும் நிறுவனங்களுக்குப் பண வசதியளிக்கின்றனர். ஆயினும் உண்மையில் இம்மாதிரியான அதிகப்படி வருமானம் இராச்சிய வருமானத்தை ஆதரிக்க வேண்டுமென்ற நோக்கத்துடன் அதிகரிக்கப்பட்டது என்று கருதப்படுகிறது.

கரும்பிலிருந்து கிடைக்கக் கூடிய சர்க்கரையின் அளவு மிகக் குறைவானபடியாலும் சர்க்கரை ஆலைத் தொழில் இதர நாட்டுச்

சர்க்கரை ஆலைத் தொழிலினைக் காட்டிலும் மட்டமான முறையில் நடத்தப்படுவதாலும் இந்தியாவில் உற்பத்தி செய்யப்படும் சர்க்கரை விலை அதிகமாகிறது. மேலும் உத்தரப் பிரதேசத்திலும் பீகாரிலுமாக 80 பயனற்ற சர்க்கரை ஆலைகள் உள்ளன. அவற்றைத் தக்காணத்தில் அமைத்தால் அவை பயனுள்ளன வாகும். இந்தப் பயனற்ற ஆலைகளுக்கு அரசினர் தனி உதவி கொடுப்பதால், அது நுகர்வோரின் நன்மைகளைப் புறக்கணிப்பதாகும்.[1]

II. **உணவுப் பயிர்வகைகளும்[2] எண்ணெய் வித்துக்களும் :** எண்ணெய் கொண்டுள்ள கொட்டைகளும்—மணிலாக் கொட்டையும் கடலெண்ணெயும் :—சற்றேறக் குறைய 13 மிலியன் ஏக்கரில் 3 மிலியன் டன் மணிலாக்கொட்டை பயிராகிறது. உலகில் இதே முன்னிலையில் உள்ளது. கழிந்த 3ஆண்டுகளின் உற்பத்தி விவரம் காண்க[3] :

| | சாகுபடிப் பரப்பளவு (1000 ஏக்கர்கள்) | | | கொட்டை உற்பத்தி (1000 டன்கள்) | | |
|---|---|---|---|---|---|---|
| | 1952 | 1953 | 1954 | 1952 | 1953 | 1954 |
| மொத்தம் | 12,152 | 11,850 | 11,356 | 3,142 | 2,884 | 3,772 |

விலையேற்ற இறக்கத்தாலும் தட்பவெப்ப நிலையினால் ஏற்படும் மாறுதல்களாலும் பயிர் செய்யப்படும் அளவில் மாற்றம் காணலாம். 1953-ல் நிலக்கடலை உற்பத்தி குறைந்துவிட்டது. ஆயினும் 1954-ல் சாகுபடிப் பரப்பளவு குறைந்தபோதிலும் உற்பத்தி அதிகரித்தது எனக்காணலாம். நிலக்கடலை வித்தும் எண்ணெயும் அதிக அளவில் அயல்நாட்டுச் செலாவணி பெறக்கூடும். 80ஆம் பக்க அட்டவணையில் உள்ள புள்ளி விவரத்தைக் காண்க.[4]

1. பம்பாயிலுள்ள தக்காணப் பகுதியில் 1 ஏக்கருக்கு 58 டன் கரும்பு கிடைக்கிறது. ஆயினும் வட இந்தியாவில் 13 டன்கள்தான் கிடைக்கின்றன.
2. ஓவர்ஸீஸ் எகனமிக் ஸர்வேஸ்—இந்தியா 1952 பக். 169-81 ஐப் பார்க்க.
3. இந்தியா 1955 பக். 165-6.
4. அயல்நாட்டு வர்த்தகத்தைப் பற்றிய கணக்கு (Accounts Relating to Foreign Trade) மார்ச் 1954, மார்ச் 1955.

| | அளவு | | | விலை மதிப்பு (லட்சம் ரூபாய்) | | |
|---|---|---|---|---|---|---|
| | 1951-2 | 1953-4 | 1954-5 | 1951-2 | 1953-4 | 1954-5 |
| நிலக்கடலை (டன்) | 19,744 | 5,326 | 22,802 | 234·7 | 62·9 | 251 |
| கடலை எண்ணெய் (1000 காலனில்) | 5,118 | 360 | 22,693 | 431·7 | 24·7 | 1,187·9 |

(vii) **தேங்காயும் தேங்காயெண்ணெயும்** :—தென்னை சாகுபடி இந்நாட்டில் 15,32,000 ஏக்கர் பரப்பில் உள்ளது. இது உற்பத்தி செய்யும் தேங்காய் 2,22,373 டன்கள் உள்நாட்டு நுகர்வுக்குக்கூடப் போதவில்லை. இறக்குமதி அட்டவணையைக் காண்க:[1]

| | அளவு | | | மதிப்பு (இலட்சம் ரூபாயில்) | | |
|---|---|---|---|---|---|---|
| | 1951-2 | 1952-3 | 1953-4 | 1951-2 | 1952-3 | 1953-4 |
| தேங்காய் (எண்ணிக்கை) | 10,88,124 | 15,89,153 | 2,22,373 | 3 | 3·9 | 0·5 |
| தேங்காய் எண்ணெய் (காலன்) | 69,93,766 | 67,00,691 | 57,61,500 | 568 | 368 | 390 |

ஏற்றுமதி மிகக் குறைவு

1. *அயல்நாட்டு வர்த்தகத்தைப் பற்றிய கணக்கு* : (Accounts Relating to Foreign Trade) *மார்ச் 1954, மார்ச் 1955.*

(viii) **ஆளிவிதை :** ஆளிவிதை நாடு முழுமையும் பரவி யுள்ளது. இது பயிரிடப்படும் பரப்பும், அதிலிருந்து கிடைக்கும் அளவும் வரும் அட்டவணையில் காண்க :

| பயிராக்கப்பட்ட பரப்பளவு (1,000 ஏக்கரில்) | | | விளைச்சல் (1,000 டன்கள்) | | |
|---|---|---|---|---|---|
| 1949-50 | 1950-51 | 1951-52 | 1949-50 | 1950-51 | 1951-52 |
| 3,759 | 3,447 | 3,298 | 411 | 361 | 328 |

1949-50, 1950-51ஆம் ஆண்டுகளில் சாகுபடி எடுத்துக் காட்டாகக் கொள்ளத்தகு முறையில் கணக்கிடப்பட்டுள்ளது.

| | டன்கள் 1949-50 | டன்கள் 1950-51 |
|---|---|---|
| பயிரிட உகந்த விதை | 5% | 5% |
| நிலக்கிழார் வீட்டின் உபயோகத்துக்கு உள்ளது | 5% | 7% |
| எண்ணெய் எடுக்க | 56% | 76% |
| ஏற்றுமதிக்கான அதிகப்படி | 34% | 12% |

ஆளிவிதைக்கு உள் நாட்டுத் தேவை அதிகம்; வர்ணப் பூச்சுத் தொழில் ஒன்றுக்கே இதன் தேவை அளவிறந்தது. இதன் ஏற்றுமதி விவரம் 82 ஆம் பக்கம் பார்க்க. [1]

கான்பூரிலும் ஹார்கேட் பட்லர் தொழில் கல்வி நிறுவனத்தில் ஆளி விதைக் கோலிலிருந்து ஒருவகை நார் எடுக்க முயன்று வருகின்றனர்.

(ix) **பருத்தி விதை :** இத் தொழில் கைவிடப்பட்ட நிலையில் உள்ளதென்பதில் ஐயமில்லை. இதைக் கால் நடைகளுக்கு உணவாக வைப்பார்கள் அல்லது இதைக் கரைந்து விடுவார்கள்

1. *அயல்நாட்டு வர்த்தகத்தைப் பற்றிய கணக்குகள்* (Accounts relating to Foreign Trade), *மார்ச், 1954, மார்ச், 1955 காண்க.*

இவ்விதையை எம் முறையில் பயன்படுத்தி, தொழில் அமைப்பிற்கு வழிசெய்யலாமென்று அரசினர் ஆராய்ச்சிகள் நடத்தி வருகின்றனர். கால்நடைகளுக்குப் பருத்திப் பிண்ணுக்கும் பட்டைப் பஞ்சும் உண்டாக்க முயற்சி செய்கின்றனர்.

| | அளவு (டன்களில்) | | | மதிப்பு (இலட்சம் ரூபாயில்) | | |
|---|---|---|---|---|---|---|
| | 1951-2 | 1952-3 | 1953-4 | 1951-2 | 1952-3 | 1953-4 |
| மொத்த ஆளிவிதை ஏற்றுமதி | 32,340 | 3,729 | 9,826 | 636·3 | 53·9 | 112·6 |

**(x) ஆமணக்கு விதையும் ஆமணக்கு எண்ணெயும் :** 1954-55-ல் ஆமணக்கு விதை உற்பத்தியின் அட்டவணையைக் காண்க :[1]

| ஆண்டு | விதைக்கப்பட்ட பரப்பு (ஏக்கரில்) | உற்பத்தி (டன்களில்) |
|---|---|---|
| 1954—55 | 12,73,000 | 1,12,000 |

ஆமணக்கு எண்ணெய் இந்தியாவின் ஆண்டு ஒன்றுக்கான தேவை 13,000 டன்கள். வித்துக்கள் சுமார் 36,000 டன்கள் ஆகும். சற்றேறக்குறைய 70% வித்துக்கள் ஏற்றுமதிக்குக் கிடைக்கின்றன. கடினச் செலாவணிப் பகுதிகளுக்கு இதை ஏற்றுமதி செய்ய இந்திய அரசாங்கம் விரும்புகிறது. இந்திய எண்ணெய் பிழியும் தொழில் வளர்ச்சிக்காக வேண்டிய ஆமணக்கு விதை ஏற்றுமதியைத் தடை செய்து வருகிறார்கள்.

**(xi) எள் :** உலகின் எள் உற்பத்தியில் சுமார் 32% இந்தியாவில் உள்ளது. 1954-55-ல் இதன் உற்பத்தி 5,92,000[2] டன்கள்.

1. காமர்ஸ் ஆன்டுவல் : டிசம். 1955 பக். A 97.
2. ,, ,, ,, ,,

சென்னையும் உத்தரப் பிரதேசமும் அதிக உற்பத்திப் பகுதிகள். இவற்றை யடுத்து ராஜஸ்தான், ஐதராபாத், மத்திய பாரத் இவைகள் இதன் உள் நாட்டுத் தேவை உற்பத்தியையும் மீறுகின்ற காரணத்தால் ஏற்றுமதி செய்ய இயலவில்லை.

(xii) **சீரகமும் கடுகும் :** இந்திய நாட்டில் உற்பத்தியாகும் சீரகமும் கடுகும் பாதிக்கு மேல் உத்தரப் பிரதேசத்தில் வளர்கின்றன. இதர உற்பத்தி இடங்கள் பீகார், பஞ்சாப், அஸ்ஸாம், ராஜஸ்தான்.

(xiii) **பருத்தி :** இந்தியாவில் உள்ள தும்புப் பயிரில் (fibre crop) முதன்மை இடம் பெறுவது பருத்தி. இது உலக உற்பத்தியில் அமெரிக்க நாட்டிற்கு அடுத்தபடியாக வளருகிறது. 1 அங்குலம் நீளம் அல்லது அதற்கு மேற்பட்ட நீளமுள்ள துசும்புள்ள 50,000 சிப்பங்களுக்குக் குறைவாகவே இந்தியா உற்பத்தி செய்கிறது. $\frac{1}{16}$ அங்குல நீளம் துசும்புள்ளது பருத்தியில் 30 சதவீத அளவில் உள்ளது. இந்திய ஆலைகளுக்குத் தேவையான அளவு பருத்தியை இந்தியா சாகுபடி செய்கிறது. 1 அங்குல நீளத்திற்கு மேற்பட்ட பருத்தி அயல்நாட்டு வகை எனலாம். $\frac{7}{8}''$ முதல் 1″ வரை நீளமுள்ள பருத்தியின் தேவையைப் பாகிஸ்தான் பிரிவினைக்குப் பிறகு வெளி நாடுகளிலிருந்து இறக்குமதி செய்து பெறுகிறது. பாகிஸ்தானத்துடன் செலாவணி முறைகளில் இடர்ப்பாடேற்பட்டதால் வர வரக் கிழக்காப்பிரிக்கா, அமெரிக்கா நாடுகளிலிருந்து இறக்குமதி செய்ய ஆரம்பித்துள்ளோம். மைசூர், சென்னை, கிழக்குப் பஞ்சாப் வெளிகளில் நீண்ட துசும்புள்ள பருத்தியை வளர்க்க முயற்சிகள் நடைபெற்றுவருகின்றன.

(xiv) **சணல் :** இந்தியாவின் ரொக்கப் பயிர்களில் இது முக்கியமானதொன்று. 1948 முதல் 1954 வரை இந்திய

| ஆண்டு | பரப்பு (ஏக்கர்) | சிப்பங்கள் எண்களில் இதன் உற்பத்தி |
|---|---|---|
| 1948 | 8,34,000 | 20,56,000 |
| 1949 | 11,58,000 | 31,17,000 |
| 1950 | 14,54,000 | 33,01,000 |
| 1951 | 19,51,000 | 46,77,000 |
| 1952 | 18,20,000 | 46,05,000 |
| 1953 | 11,96,000 | 31,28,000 |
| 1954 | 12,73,000 | 31,53,000 |

யூனியனில்1 இதன் பரப்பளவு, சாகுபடி விளக்கங்கள் 83ஆம் பக்கத்தில் கொடுக்கப்பட்டுள்ளன :

பாகிஸ்தானை நம்பியிருக்க வேண்டாமென்று நம்நாட்டில் திருவாங்கூர், சென்னை, உத்தரப் பிரதேசம் இவைகளில் இதை வளர்ச்சி செய்ய முயலுகின்றனர். மேலும் பிரிவினையாக இந்தியாவில் முக்கால் பங்கு பாகிஸ்தான் பகுதியில் சேர்ந்ததால் இந்த அவதியேற்பட்டது. இதற்குப் பதிலாக மெஸ்டா (mesja) அல்லது பிமிலி (bimili) என்ற நார் இனங்களை உபயோகிக்க முயலுகின்றனர். இந்திய மத்திய சணல் குழுவினர் 1936 முதல் சணல் அல்லது சணலால் ஏற்படும் இதர பொருள்களுக்கான ஆராய்ச்சி நடத்தி வருகின்றனர்.

(xv) **புகையிலை** : உலகில் சீனு, அமெரிக்கா முதலிய இரண்டு நாடுகளை யடுத்து மூன்றுவதாக இந்தியா புகையிலை உற்பத்தி செய்கிறது. இந் நாட்டில் 5 புகையிலைப் பிரிவுகள் வர்த்தக முக்கியத்வத்தினுல் உண்டாகியுள்ளன. அவை, (i) வடபீகாரும் வங்காளமும், (ii) சாரோதார் (குஜரத்) வட்டம், (iii) நிபாணி (கர்நாடக) வட்டம், (iv) குண்டூர் (ஆந்திரம்), (v) தென் சென்னை, புகையிலை தயாரிப்பாளர் சிகரெட்டு, சுருட்டு, பீடிகள், ஹுக்கா, வாயிலிட்டு மெல்லுவதற்கும் மூக்குத் தூளிற்கும் உரிய புகையிலை இவையனைத்தும் உற்பத்தி செய்கிருர்கள். சிகரெட் உற்பத்தி தவிர ஏனையவை அனைத்தும் குடிசைத்தொழிலாக நடைபெறுகின்றன.

1950-51 புகையிலையின் உற்பத்தி ரூபாய் 71 கோடி. ரொக்கப் பயிர்களில் கரும்பு, நிலக்கடலை, பருத்திக்கடுத்து நான்காவது இடத்தைப் பெறுகிறது. 1949-50-ல் ரூ. 241 இலட்சம் பெறுமான மூள்ள புகையிலை இறக்குமதி செய்யப்பட்டது. அவ்வமயம் உள் நாட்டு உற்பத்தி 34% குறைந்திருந்தது. 1954-55-ல் இந்தியாவிலிருந்து ஏற்றுமதி ஆன புகையிலையின் மதிப்பு ரூ. 76·4 இலட்சம் ஆகும். இதர பண்டங்களுடன் ஒப்பிடும்போது இது எட்டாவது இடத்தைப் பெறுகிறது.

III. **தோட்டப் பயிர்கள்** : (xvi) **தேயிலை** : உலகிலேயே அதிகப்படியாகத் தேயிலை உற்பத்தி செய்யும் நாடு இந்தியாதான். இந்தியாவின் உற்பத்தி 82% அஸ்ஸாம், துவார் பகுதிகளிலிருந்து தான் வருகின்றன. கச்சாப் பொருளும் உற்பத்தி பொருளுமான சணல், பருத்தி இவைகளுக்கடுத்தபடியாகச் செலாவணி ஆகக்

*1. டைம்ஸ் ஆப் இந்தியா டைரெக்டரி அன்ட் இயர் புக், 1955—பக். 174.*

கூடியது தேயிலை, நீண்டகாலமாகத் தேயிலைக்கு இவ்வளவு மேன்மையான நிலை உள்ளதற்குக் காரணம் கிரேட் பிரிட்டனின் சந்தையே எனலாம். இதனால் செலாவணியில் சற்றேறக்குறைய ரூ. 102 கோடி கிடைக்கிறது. உள் நாட்டு வரியும் ஏற்றுமதி வரியும் மத்திய அரசுக்கு ரூ. 14 கோடி கிடைக்கிறது.

(xvii) **காப்பி (Coffee):** இது உலக உற்பத்தியில் 1 சதவீதம்தான் உற்பத்தியாகிறது. வெளிநாட்டுச் சந்தைகளில் நம் நாட்டுச் சரக்குக்கு மிக்க கிராக்கி இருந்தபோதிலும், உள்நாட்டுத் தேவையைக்கூடச் சரிக்கட்ட முடியவில்லை. தென்னிந்தியாவின் உயரமற்ற குன்றுகளின் சரிவிலும், ஒரிஸ்ஸாவின் சில இடங்களிலும், அஸ்ஸாமிலும் மத்தியப் பிரதேசத்திலும் இது பயிராக்கப்படுகிறது. மொத்த ஏக்கரில் 50 சதவீதம் மைசூரிலும் 25 முதல் 30 சதவீதம் சென்னை இராச்சியத்திலும் 20 முதல் 25 சதவீதம் வரை குடகிலும்; 4 சதவீதம் திருவாங்கூர்-கொச்சியிலும் அமைந்துள்ளன.

(xviii) **கச்சா ரப்பர் (Raw Rubber):** 1952-ல் உலகின் உற்பத்தி 1·7 மிலியன் டன்கள். இதில் இந்தியா 0·1 சதவீதம் உற்பத்தி செய்துள்ளது. 1951-52-ல் மொத்த உற்பத்தியின் மதிப்பு ரூ. 488·1 இலட்சம் ஆகும். ரப்பர்த் தோட்டங்கள் சிறிய சிறிய நிலங்களாகத் தனிப்பட்டவர்களின் பராமரிப்பில் நடந்து வருகின்றன. காப்பி, தேயிலையைவிட இது சற்று மட்டமான முறைகளில்தான் கவனிக்கப்படுகிறது. 1945 முதல் உற்பத்தி நாளுக்கு நாள் குறைந்துகொண்டே வருகிறது. பலனற்ற விலைகளின் காரணத்தால் ரப்பர் எடுக்கப்படுவது குறைந்து வருகின்றது.

(xix) **மிளகும் வாசனைத் திரவியமும்:** 1954-55-ல் சற்றேறக் குறைய 20 கோடி ரூபாய் மதிப்புள்ள டாலர் சம்பாதித்துக் கொடுக்கும் கருப்பு நிறமுள்ள மிளகு 13,689 டன்கள் ஏற்றுமதியாயின. இது விளையும் பூமியின் பரப்பளவு 2,09,000 ஏக்கர்கள். மிளகு, ஏலம், வாசனைத்திரவியம் இவை அனைத்தும் தென் மேற்குச் சமவெளிப் பொருள் நிலையில் உச்சத்தில் அமைந்துள்ளன. முன்னரே பார்த்ததுபோலத் தோட்டப் பயிர்கள் அனைத்தும் அயல் நாட்டுச் செலாவணி தேடிக்கொடுப்பன. 1954-55-ல் தேயிலை மட்டும் ரூ. 147 கோடி அயல்நாட்டுச் செலாவணியாகத் தந்தது. உள் நாட்டிலேயே அதிக அளவில் ரப்பரும் காப்பியும் உபயோகிக்கப்படுகின்றன. 1954-55-ல் இந்தியா 10 மிலியன் பவுண்டு எடையுள்ள ரப்பருறை இறக்குமதி செய்தது. நம்

நாட்டுப் பாதுகாப்பிற்கு உலகச் சந்தையில் என்றும் நிரந்தரமான நிலையில்லாமையால், தேவைக்கு அயல்நாட்டினரை எதிர் பார்ப்பது முறையன்று.

5. **பிரதேசப் பங்கீட்டுப் பெரும் பயிர்கள் :** சிறப்பான உணவுப் பயிர்களும் ரொக்கப் பயிர்களும் கீழ்க் கண்டவாறு அமைந்துள்ளன. அரிசி கிழக்கு உத்தரப் பிரதேசத்திலும், மத்தியப் பிரதேசத்திலும் பீகாரிலும், மேற்கு வங்காளத்திலும், அஸ்ஸாமிலும், மேலும் கடற்கரைப் பகுதிகளான சென்னை, ஆந்திரம், ஒரிஸ்ஸாவிலும், மேற்குக் கடற்கரைப் பகுதியிலும் உற்பத்தியாகின்றது. கோதுமை, பஞ்சாப், பெப்சு, மேற்கு உத்தரப் பிரதேசம், மத்தியப் பிரதேசத்தின் சில பகுதிகள், கிழக்கு உத்தரப் பிரதேசம், மத்திய பாரதத்தின் சில பகுதிகள், பம்பாய், பீகார் இவைகளில் சாகுபடி ஆகிறது. இதர தானிய வகைகள் பெருமளவில் தக்காணப் பீடபூமிப் பகுதிகளான சென்னை, ஐதராபாத், பம்பாய் இராச்சியங்களிலும், மத்தியப் பிரதேசத்திலும், கிழக்கு உத்தரப் பிரதேசத்திலும், மத்திய பாரதத்திலும், ராஜஸ்தானிலும் பயிரிடப்படுகிறது. மக்காச் சோளம் பீகார், பஞ்சாப், உத்தரப் பிரதேசம், பம்பாய் இராச்சியங்களிலும், பருப்பு வகைகள் பீகாரிலும், மத்தியப் பிரதேசத்திலும், மத்திய பாரதத்திலும், உத்தரப் பிரதேசம், ராஜஸ்தான், பஞ்சாப் பகுதிகளிலும் பயிராக்கப்படுகிறது. ரொக்கப் பயிர்களில் பருத்தி குஜரத், கத்தியவார், தக்காணப் பீடபூமிப் பகுதிகளாகிய பம்பாய், சென்னை, ஐதராபாத், மத்தியப் பிரதேசம் இவைகளிலும், சணல் மேற்கு வங்காளம், அஸ்ஸாம், பீகார்ப் பகுதிகளிலும, புகையிலை ஆந்திராவிலுள்ள குண்டூர் மாவட்டத்திலும், பம்பாயிலுள்ள பெல்காம், கெய்ரா மாவட்டங்களிலும் பயிராக்கப்படுகின்றன. எண்ணெய் வித்துக்கள் தென் தக்காணப் பகுதிகளான சென்னை, மைசூர், ஐதராபாத், பம்பாய் இராச்சியங்களிலும், இவற்றை யடுத்துள்ள உத்தரப் பிரதேசம், சௌராஷ்டிரம் மத்தியப் பிரதேசங்களிலும் பயிராக்கப்படுகின்றன.

6. **குறைவான விளைச்சல் :** நம் நாட்டின் சாகுபடி எவ்வளவு குறைவானது என்பதை அயல் நாட்டு உற்பத்தியுடன் ஒப்பிட்ட பின்னர்தான் அறிகின்றோம். நம் நாட்டின் விவசாய உற்பத்தி நிலை எவ்வளவு திருப்தியில்லாத நிலையிலுள்ளதென்பதற்கு வேறு சான்று கூட வேண்டுமா ? 1948-ஆம் ஆண்டில் எடுக்கப்பட்ட புள்ளி விவரம் 87ஆம் பக்கத்தில் கொடுக்கப்பட்டுள்ளது :

| | | ஏக்கர் ஒன்றுக்கு விளைச்சல் (பவுண்டு) |
|---|---|---|
| அரிசி (நெல்) | இந்தியா | 87 |
| | எகிப்து | 540 |
| | அமெரிக்க ஐ. நாடு | 312 |
| கோதுமை | இந்தியா | 593 |
| | ஆஸ்திரேலியா | 909 |
| | அமெரிக்க ஐ. நாடு | 1,079 |
| | பிரான்ஸ் | 1,610 |
| கச்சா சர்க்கரை | இந்தியா | 3,063 |
| | கியூபா | 4,567 |
| | மொரிஷஸ் | 6,132 |
| | அமெரிக்க ஐ. நாடு | 3,701 |
| கொட்டை நீக்கிய பஞ்சு | இந்தியா | 87 |
| | எகிப்து | 590 |
| | அமெரிக்க ஐ. நாடு | 312 |

இப்படி ஒத்திட்டுக் காண்பிக்கப்பட்ட புள்ளி விவரங்களைக் கொண்டு நாம் முடிவான முறையில் நம் நாட்டைத் தாழ்வாகக் கருதக் கூடாது. இதர நாடுகளின் உற்பத்திப் பெருக்கினை நாம் குறிக்கோளாகக் கொண்டு முன்னேற முயல வேண்டுமென்பதற்காகவே இந்த அட்டவணையை நாம் இங்குப் பயன்படுத்துகிறோம். நமக்குப் போதிய அளவில் பிற நாடுகளைப் போல் கிடைக்காமலிருக்கக் கூடும். இன்றும் ஏனைய நாடுகளில் நிலத்தினை பயனற்றதாக்கும் வரை விளைச்சல் அதிகரித்து, அதனால் உடனே பலன் பெறுவதற்காக நீண்ட காலம்வரை உள்ள கேட்டினை உண்டாக்கிக் கொள்வது விரும்பத்தக்க தன்று.

இவ்வெண்ண அலைகள் ஒரு புறமிருக்க நம் நாட்டின் விவசாய உற்பத்தி மிகவும் குறைவென்பதை ஐயப்பாடின்றி வலியுறுத்தலாம். இதற்குக் காரணமாகக் காட்டப்படுவது பருவமழையின் விபரீதப் போக்கே. இக் குறையையும் நீர்ப்பாசன முறைகளைக் கையாண்டு போக்கிவிடலாம்.

இந் நாட்டின் நிலங்கள் நாளடைவில் பயனற்று வீணாகிப் போகின்றனவா என்ற பிரச்சினைக்கு அரசியலாரின் பதில், இல்லை என்பதாம். விவசாயக் குழுவினருக்கு (Agricultural Commission) டாக்டர் க்ளவுஸ்டன் (Dr. Clouston) தம் குறிப்பில் கூறியுள்ளது வருமாறு: 'இந்திய நாட்டின் நிலங்களில் பெருமளவு நூற்றுண்டுகளாக எல்லையற்ற அளவில் பயனற்றுப் போய் விட்டன. இவ்வளவும் பல நூற்றுண்டுகளாக உரமிடாது சாகுபடி செய்யினும்கூட அவை வீணுகா.' [1] இந் நிலங்கள் இனிப் பாழடைந்து போகா என்று நாம் மன மகிழ்ச்சியுடனும் இருக்க முடியாது. இந் நாட்டின் விவசாய உற்பத்தி விகிதம் இதர உலக நாடுகளைவிட மிகவும் குறைவாக உள்ளது என்று நாம் மனம் இடிந்துபோய் இருக்கவேண்டியதில்லை. உற்பத்திப் பெருக்கம் செய்தல் வேண்டும் என்பது உலக முழுமையும் ஒப்புக் கொள்ளப் பட்ட உண்மை. இதைக் கூடச் செய்யத்தக்க தருணத்தில் சீரிய முறையில் இயல்பான அளவில் உரமிட்டு நிலத்தின் செழிப்பை அதிகரிக்க முயலவேண்டும்.'

1. விவசாயக் குழுவினரின் அறிக்கை, பக்கம் 77,

# 6. உட்பிரிவுப்படுத்தலும் சிதற விடுதலும்

1. **காரணங்கள் :** இதன் முக்கிய காரணங்களாவன : (i) வளரும் மக்கள் தொகையும், தொழில் வளர்ச்சியின்மையும், தொழில் வளர்ச்சியின்மையால் மக்கள் நிலத்திலிருந்து பிரிக்கப் பட்டுத் தொழிலில் சேராமையும், (ii) கூட்டுக் குடும்ப முறை நசித்துப்போய் அதன் காரணத்தால் சந்ததி முறையும் நில பாத்யதைச் சட்டப்படி நிலப் பிரிவினையடைதலும் 100 ஏக்கர் நிலங்களை 4 பேர்களுக்குச் சமமாகப் பிரிவினை செய்தால் ஒவ்வொருவருக்கும் 25 ஏக்கர் நிலம் கிடைக்கும். இதை உட்பிரிவுப்படுத்துதல் (Sub-division) எனலாம். முன் கூறிய 100 ஏக்கர் நிலங்களனைத்தும் நான்கு இடங்களில் துண்டுகளாக (fragments) 25 ஏக்கரளவில் இருந்தால் அதைப் பிரிவினை செய்வதற்கு உட்பிரிவுப்படுத்தல் என்று பெயர். ஆயினும் துண்டாடப்படுவதில்லை எனக் கூறலாம். அதற்குப் பதிலாக ஒவ்வொரு உடைமை கேட்போரும் ஒவ்வோர் 25 ஏக்கர் நிலத்தில் தமக்கு 4-ல் ஒரு பகுதி கொடுக்கப்பட வேண்டும் என்று வற்புறுத்தினுல், அந்த 100 ஏக்கர் நிலப்பகுதியைத் துண்டாக்கி, பின்னர் 25 ஏக்கர் நிலத்தையும் 4 கூறுகளாகப் பிரித்து, $6\frac{1}{4}$ ஏக்கர் பெறுமானமுள்ள துண்டுகளாக்க வேண்டும். இதன்படி இரண்டாவது திட்டத்தில் கூறியுள்ளபடி எவ்வளவு பங்கீடுகள் செய்ய வேண்டும், சந்ததிக்குப் பின் சந்ததியாக நிலம் வரவரத் துண்டுகளாகப் பிரிவினைப்பட்டு விவசாயம் செய்யச் சிக்கனமாக இராது போய்விடக்கூடும்.

பெரிய பண்ணையார்கள் நேரடியாக விவசாயத்தைக் கவனிக்க இயலாது போக, சிறு துண்டுகளாக்கி அநேக குத்தகையாளர் நியமித்து, குடி வாரத்திற்கு விடப்படும். விவசாயம் இலாபகரமாக அமையவேண்டுமானுல் சீரிய அளவில் நிலம் அமைதல் வேண்டும். ஆயினும் இந்தியாவில் நில உடைமைகள் வெகு

சிறிய அளவில் அமைந்துள்ளன. மேலும் அவை பல பகுதிகளில் சிதறிக் கிடக்கின்றன. இம்மாதிரியான சூழ்நிலையில் குறிப்பிடத்தக்க மாறுதல்கள் விவசாயத்தில் ஏற்படுவது கடினமெனலாம். அளவையியலின்படி கேட்கவேண்டிய கேள்வி சராசரி ஒவ்வொருவரும் பெற்றுள்ள நிலம் எவ்வளவு என்பதல்ல.[1] அதற்குப்பதிலாக எவ்வளவு அளவுள்ள நிலம் விவசாயத்தில் பயன்படுகிறது என்பதாம்.[2] பொதுவாக இந்நாட்டில் யாரார் உழுது பயிரிடுகிருர்களோ, அவர்களே நிலக்கிழார்கள். ஆகவே, உட்பிரிவுப்படுத்தலும் துண்டாடலும் அந்த நிலங்களைக் குறிப்பிடுவதால் பயிரிடலும் விவசாயமும் இம் முறையில் நடக்கின்றது.

**2. உட்பிரிவுப்படுத்தலால் விளையும் தீங்குகள் :** (i) எவ்வளவு வறிய விவசாயி ஆனுலும்கூட விவசாயத்திற்கான கருவிகள், குறிப்பாகக் கலப்பையும் இரு எருதுகளும் உடையவன் கூடச் சிறிய அளவுப் பண்ணையில் இவற்றை உபயோகித்துச் சிக்கன மற்ற முறையில் வாழ்வான். செலவினத்துக்குத் தக்க அளவில் வருவாய் கிடைக்கும் எனக் கூறயியலாது. (ii) ஓர் எல்லை வரையிலும் பண்ணையை விரித்துக்கொண்டு போவதால் பலனுண்டு. மிதமிஞ்சி விஸ்தரிப்பு செய்வதால் நஷ்டம்தான் ஏற்படும். ஏனெனில் செலவு செய்ய முயன்ருல் வேலி அமைப்பதும், அதனுல் பரப்பளவு கூடுதலாகும் வரை வேலி அமைக்கும் செலவும் செய்ய வேண்டும். மேலும் இதனுல் கூடுதலாகக் கிடைக்கும் வருமானமும் எதிர்நோக்கிய அளவு வரை கிடைக்கும் என வரையறுத்துக் கூற இயலாது. (iii) பிரிக்கப்படும் பண்ணைகள் அளவிற் சிறியனவாக இருப்பின் நடைபாதை, வரப்பு, வேலி இவைகளே பெரும்பகுதியை அடைத்துக்கொண்டு பயிரிடப் போதிய இடமில்லாமல் செய்துவிடும். சிறிய நிலப்பகுதிகளுக்கு வேலி கட்டி, அதனுல் அதிக செலவு செய்வது வீண். இதன் பொருள் என்னவெனில் அக்கம் பக்கத்திலுள்ள நிலங்களைப் போன்றே இந்த நிலமும் பயிரிடப்பட்டது. அதைப் பிரித்துக் காட்டும் வகையில் இவ்வாறு ஏற்படக்கூடும். ஒரே ஒரு

*1. பெரிய நில உடைமைகள் மூலம் பெரிய விவசாயம் நடப்பவையல்ல; அதிக அளவில் நிலங்களைப் பெற்றதால் சிறிய அளவில் விவசாயம் என்பது மல்ல. பெரிய பண்ணை சிறியதாக்கி விடப்படும். பெரிய விவசாயி பல உடைமைகளைக் குத்தகையில் எடுத்திருக்கவும் கூடும்.—ஜெ. எஸ். நிக்கல்சன் பிரின்ஸிபிள்ஸ் ஆப் பொலிடிகல் எக்காணுமி பகுதி I. பக்கம் 149.*

*2. 'பயிரிடுபவர்', 'உரிமையாளர்' என்ற பதங்களை விவசாயக் குழு உபயோகிக்கின்றது. உரிமையாளர்கள் என்று கூறப்படுபவர் நிரந்தரமாகத் தலைமுறை தலைமுறையாக நில உரிமை பெற்றவர் ஆவார். இவர்கள் சட்டப்படி சொந்தக்காரர்களாக இருக்கலாம். இருப்புரிமை அல்லது அனுபவ பாத்தியதை பெற்றிருக்கலாம் அல்லது பட்டாதாரராகவும இருக்கலாம்.*

நிலத்தில் மட்டும் பயிர் உள்ளது. சுற்றியுள்ள நிலம் பயிர் இன்றிக் கரம்பாக உள்ளது. பயிராகியுள்ள நிலத்தை அடைக்க வில்லையானால் மேயும் கால்நடைகளால் அது பாழாக்கப்படும்; தலையிடுபவர்களாலும் வீணாக்கப்படும். (iv) அளவில் பெரியதாக அமைந்த நிலங்கள் செய்யக்கூடிய பெரிய செலவுகளைச் சிறிய நிலங்களில் செய்வது வீணாகும். குறிப்பாகச் சிறிய நிலத்துக்கெனக் கிணறு தோண்டுவது, அதற்கென வேலியடைப்பது அல்லது யந்திரக் கலப்பை அல்லது யந்திர ஒப்படி முறை (threshers) இவைகள் செய்ய இயலாத நிலம் சரியான அளவில் அமைந்திருந்தால் அநேக வீண் செலவுகளைப் போக்கியிருக்கலாம். நல்ல முறையில் திட்டமிட்டுத் தக்க பயிரை விளைவிக்க முயற்சி செய்தும் மாற்றுப் பயிர் முறையை அமைத்தும், மண்வளப் பாதுகாப்பு முறைகளைக் கையாண்டும், புதிய முறையில் உழுதல் முறையை அமைக்கவும் இயலும்.

3. சிதற வைப்பதால் ஏற்படும் தீமைகள் : இலாபமான முறையில் விவசாயம் செய்யத்தகு முறையில் நிலம் அமையவில்லையானால் அதுவே பெரிய இடர்ப்பாடாகும். அவ்வாறு அளவில் மிகவும் குறைவுப் பரப்புள்ள நிலமும் பற்பல விடங்களில் சிதறிக் கிடப்பின் அதன் நிலைமை இன்னும் மட்டமாக இருக்கும் என்பதை இங்கு விளக்கத் தேவையில்லை. எடுத்துக்காட்டாக ஓர் அளவிலும் வசதியிலும் சுருக்கமுள்ள ஒரு குடியானவருடைய நிலையை இங்கு விளக்குவோமாக : ஒரு கலப்பையும் இரண்டு எருதுகளுமுடைய அவரது குடும்பத்தில் இரண்டல்லது மூன்று பேர்கள் உண்டாகியிருக்கலாம். நல்ல செழுமையான முறையில் அவர்கள் 20 ஏக்கர் நிலத்தை நன்கு பயிரிடலாம். ஆயினும் அந்த நிலம் 10 ஏக்கராவாக இருப்பின் அவர்களுக்கு உழைப்பினுக்கு ஏற்ப ஊதியம் கிடைக்காதெனலாம் மேற்கூறிய 10 ஏக்கர் நிலங்கள் 2 ஏக்கர் பிரிவுகளாக வெகு தூரத்தில் சிதறிக் கிடப்பின் அவற்றைப் பயிர் செய்வதில் எவ்விதமான ஆதாயமும் ஏற்படாது. இடர்ப்பாடே அதிகமெனக் கூறலாம். ஒவ்வொரு பாத்தி அல்லது கழனியும் தனித் தனியே பயிரிடப்பட வேண்டுமானால் உட்பிரிவுப்படுத்தலின் கடுமை இங்கு வெள்ளிடை மலையாகக் காணக்கிடக்கிறது. ஒரு வயலை விட்டு இன்னொரு வயலுக்கு விவசாயி தன் கருவிகளுடன் அவ்வப்போது போக வேண்டி ஏற்படுகிறது. இதனால் விவசாயச் செலவு கூடுதலாகியும் அதிக இடைஞ்சலுள்ளதாகவும் நேரிடுகிறது. இவ்வாறு விவசாயி தன் உழவுக் கருவிகளுடனும் இன்னும் எருதுகளுடனும் பிறருடைய பரப்பின் வழியே போக நேரிடுகிறது.

இதனுல் மனவலியும் சண்டை சச்சரவுகளும் ஏற்படக்கூடும். இவற்றின் காரணங்கள் எவை இருக்கக்கூடும் என்ருல் ஒருவருடைய வயல் வெளிகளும் பரப்புகளும் இதரருடைய வயல் வெளிகளுக்கும் பாத்திகளுக்கு மிடையே அமைந்து இருக்கக்கூடும். அவற்றின் வழியே நீர் செலுத்த வாய்க்கால்கள் கட்ட இயலாது. போகவர வழி ஏற்படாது. ஜப்பானிலோ அல்லது சைனுவிலோ அமைந்துள்ள முறையின்படி ஒரே ஒரு வயலில் செறிந்த வேளாண்மை முறையைக் கையாண்டு வருவதால் இந்த இடர்ப்பாட்டைப் போக்க முடியும். ஆயினும் பலவிடங்களில் சிதறிக் கிடக்கும் பல வயல்களில் இம்மாதிரி செறிந்த வேளாண்மை முறையைச் செய்வது கடினம். ஆதலால் அது வேண்டற்பாலது.

உட்பிரிவுப்படுத்தல் முறை, சிதறவிடும் முறை இவற்றினுல் ஏற்படும் தீமைகளைச் செம்மையான முறையில் எடுத்துக் காட்டி டாக்டர் எச். எச். மேன் அழகுபெறக் கூறியுள்ளது வருமாறு: "இது தொழில் துணிவை நாசப்படுத்தி விடுகிறது. தொழிலுழைப்பைப் பயனற்றதாகச் செய்கிறது. வரையறை எல்லைக் கோடுகள் இவைகளை இடுவதால் அதிகப்படியான நிலங்களும் வயல்களும் விவசாயத்திற்குப் பயனற்றுப் போகின்றன. செறிந்த வேளாண்மை முறையையும் கையாளுதல் கடினம். அயலாரை அதிகப் பண அளவில் குத்தகைக் குடியானவராகவோ அல்லது நிலக் கொள் முதலாளராகவோ அழைப்பது கடினம்.[1] முன் கூறியது போலச் சொத்து உரிமைச் சட்டமும் சந்ததியார் சட்டமும் அனுசரித்து உட்பிரிவுப்படுத்தும் முறை இவைகளால் அதிக அளவில் நிலக் கிழார்களைத் தோற்றுவித்து, அதன் மூலம் சமூகத்திற்குப் பக்கபலமாக ஏற்படும் எனக் கூறப்படும் வாதம் சரியானதாகக் கொள்ள இயலாது. வேளாண்மை செய்யத் தகும் அளவில் போதிய அளவு வருவாய் அளிக்க இயலாத அளவு நிலமிருந்து என்ன பயன்? அவ்வாறு அநேக நிலக் கிழார்கள் தோன்றுவதால் நாட்டிற்கும் சமூகத்திற்கும் ஏற்படும் ஒற்றுமை குறைந்து, பலமிழந்து காணப்படும். இச் சிதறல் நிலக் கொள்கையை ஆதரித்து, அதனுல் ஏற்படும் அனுகூலங்களைக் கூறும்போது, ஒரு விவசாயி பலவகை மண்ணுள்ள நிலப் பிரிவுகளைப் பெறுவதால் பலவிதமான பயிர்வகைகளைச் சாகுபடி செய்யலாம். குறிப்பாகப் பசும்புற்றரை, நெல் விளைச்சல் நிலம், கோதுமை சாகுபடி செய்யும் வயல் என்றும் அதனுல் பற்பல சிக்கல்களையும் ஆபத்துக்களையும் போக்கிக் கொள்ள முயலக் கூடும். குறிப்பாக நெல்லறுவடையில் கண்ட நட்டத்தைக்

1 லேண்ட் அண்ட் லேபர் இன் எ டெக்கான் வில்லேஜ், (Land and Labour in a Deccan village) பகுதி 1, பக். 154.

கோதுமைப் பயிர் மூலம் நல்ல ஏற்ற விலையில் விற்றுப் போக்கிக் கொள்ளலாம். மேற்கூறிய அவ்வளவு வாதங்களும் ஒருதலையானவை; தவருன அடிப்படையில் பிரச்சினையை நோக்குகின்றன எனலாம். ஒரு வகையில் பார்க்கப் போனுல் பலரகமான மண் வகைகளில் நிலப் பகுதிகளும் வயல் வெளிகளும் இருப்பது நலமே. இந்த எண்ணத்தில்தான் சிதறல் முறை ஏற்றுக் கொள்ளக் கூடும். ஆயினும் மண் வகைக் கேற்ப, பொருத்தமான அளவில் நிலப்பகுதிகள் ஒன்றையடுத்து மற்ருென்ருக ஒருங்கே அமைவதில்லை. சிதறல் முறைக் கொள்கையை நாம் வெட்டிப் பேசும்போது ஒரே வகை மண்ணுள்ள நிலப் பகுதிகளையும் அதே வகையான பயிர் விளைவிக்கும் நிலமென்ற வயற் பகுதிகளையும் மனத்திற் கொள்ளுகிருேம்.

**4. எடுத்துக் காட்டெண்கள்.**[1] **(i) உட்பிரிவுப்படுத்தப் பட்ட நிலங்கள் :** இங்கு மங்குமாகச் சில புள்ளி விவரங்கள் உட்பிரிவுப்படுத்தலைப் பற்றியும் சிதறுதலைப் பற்றியும் தயாரிக்கப் பட்டுள்ளன. பிரிவினை ஆகாத பஞ்சாபில் கணக்கெடுப்பு நடத்திய போது 2,397 கிராமங்களில் 17·9% 1 ஏக்கர் நிலம் படைத்த நிலக் கிழார்களின் நில எண்ணிக்கையும், 25·5% 1 முதல் 3 ஏக்கர் நிலம் படைத்தவர்களின் விவரமும், 14·9% 4 முதல் 5 ஏக்கர் நிலம் உள்ளவர்களின் கணக்கு விவரமும், 18% 5 முதல் 10 ஏக்கர் நிலம் உள்ளவர்களின் கணக்கும் கிடைத்துள்ளன. 1927-ல் சர் சுன்னிலால் மேத்தா, பம்பாய் மாகாணத்தைப் பற்றிய நிலைமையை விளக்கும்போது நாளுக்கு நாள் நில உடைமை அதிகரித்து வருகின்றதென்றும், அதுவும் குறிப்பாக 5 ஏக்கரும் அதற்குக் கீழுமுள்ள நிலங்களில் இத் தொல்லை உண்டாகிறதென்றும் கூறுகிருர்.

**(ii) வேளாண்மை முறையில், உட்பகுப்பு:** (அ) பீகாரிலும் ஓரிஸ்ஸாவிலும் சராசரி அரை ஏக்கருக்குக் குறைவாகவே வாரப் பயிர் அல்லது குத்தகையாளர்கள் பெறுகிருர்கள். வங்காளத்திலும் அஸ்ஸாமிலும் 3 ஏக்கருக்குக் குறைவின்றியும், உத்தரப் பிரதேசத்தில் 2·5 ஏக்கருக்குக் குறைவின்றியும் பெறுகிருர்கள். (ஆ) பஞ்சாபில் குத்தகை அல்லது வாரத்தில் பயிரிடுபவர்களுக்கு 1 ஏக்கருக்கும் குறைவாக நிலம் உடையவர் 22·5% என்றும், 1 முதல் 2·5 ஏக்கர் நிலம் வேளாண்மை நடத்துபவர் 15·4%, 2.5 முதல் 5 ஏக்கர் நிலம் பயிரிடுபவர் 17·9%; 5 முதல் 10 ஏக்கர் நிலம் பயிர் செய்பவர் 20·5% எனவும் கணக்கிடப்பட்டுள்ளது.[1] (இ)

1. இவ் வதிகாரத்தின் முடிவில் கொடுக்கப்பட்டுள்ள அனுபந்தத்தில் அண்மையில் நில உரிமையைப் பற்றிய புள்ளி விவரங்கள் திட்டக் கமிஷனின் அறிக்கையிலிருந்து எடுத்துப் போடப்பட்டுள்ளன. பக். 199-200.

சிதறவிடல்: இதைப் பற்றிய விளக்கத்தை டா. எச். எச். மேன் தக்க சான்றுடன் பிம்ப்ளா சௌதாகர் என்ற பம்பாய்-தக்கணத்தைச் சேர்ந்த கிராமமொன்றில் உள்ள நிலையை எடுத்துக் காட்டியுள்ளார். அங்கு 156 நில உரிமையாளர்கள் 729 வயல்களைப் பெற்றிருந்தனர் என்றும், அவற்றில் 463 வயல்கள் 1 ஏக்கரை விடக் குறைவானதென்றும், 211 வயல்கள் கால் ஏக்கரினும் சிறியனவாக உள்ளன என்றும் குறிப்பிட்டுள்ளார். சிதற விட்ட நில வேளாண்மையைப் பற்றி எடுத்துக்காட்டாக வேளாண்மைக் குழு (Agricultural Commission) திரு. ராம்லால் பல்லா என்பவர் பஞ்சாபில் உள்ள பைராம்பூர் கிராமத்தில் எடுத்த கணக்கினை இங்குக் கூறியுள்ளார். அவற்றில் 34·5% உழவர்கள் ஒவ்வொருவரும் 25 சிதறிய துண்டு வயல்களைப் பெற்றிருந்தனராம்.

**5. செட்டான நிலத்தைப் பற்றிய இலக்கணம்:** செட்டாகவும் சிக்கனமான முறையிலும், அமைந்துள்ள நிலத்தைப் பற்றிய இலக்கணம் பலர் அவ்வப்போது குறிப்பிட்டது இங்குக் காண்பிக்கப்பட்டுள்ளது. (i) 'தானும் தனது குடும்பமும் செலவு செய்து கொண்டும், எல்லா வகைச் செலவினங்களையும் கொடுத்த பின்னர் கையில் மிகுதியுள்ளதைக் கொண்டு சிரமமின்றிக் காலங் கழிக்கப் போதிய அளவு நில எல்லையைத்தான் செட்டான நிலம் எனலாம்.' (கீடிஞ்) அல்லது (ii) ஒரு சாதாரண குடும்பத்திற்கு எவ்வளவு குறைந்த பட்ச வாழ்க்கைத்தரத்திற்கு வேண்டியவற்றைத் தருமோ அதுதான் போதிய அளவான நிலம் (பி. எச். எச். மேன்) அல்லது (iii) குடியானவனுக்கு உயர்ந்த வாழ்க்கை தரத்தைக் கொடுக்கக் கூடிய நிலம் (ஸ்டான்லி ஜிவான்ஸ்); அல்லது (iv) சாதாரண வேளாண்மைக் குடும்பத்திற்கு உதவி செய்யத் தக்கதும் முதலாளிக்கும் உழைப்பாளிக்கும் இலாபகரமான தொழிலையும் உயர்ந்த பலனையும் தரத்தக்கதும் ஆகிய நிலம்.

மேலே கூறிய இலக்கணங்கள், மயக்கும் ஒரு கலைச் சொல்லுக்குச் சரியான பொருளைக் கொடுப்பதற்காக பலரால் மேற்கொள்ளப்பட்ட, ஏறக்குறைய வெற்றிகரமான முயற்சிகளின் விளைவே. ஆயினும் அவை அனைத்தும் சரி எனக் கொள்ள இயலாது. செட்டான நிலம் எது என்ற கேள்விக்குப் பல பதில்களைக் கண்ணுற்று, முடிவில் சரியானது எது என்று கொள்ளுதல் வேண்டும். போடப்பட்ட மூலதனம் எவ்வளவு? உற்பத்தி முறைகள் எவ்வகையில் உள்ளன? காலா காலத்தில் பொழியும் மழை எவ்வளவு என்பது, நீர்ப்பாசன வசதியுள்ளதா இல்லையா? பயிரிடப்படும் பயிர்களின் வகை இவைகள் அனைத்தும் கருதிய

பின்னர்தான் செட்டான நிலம் அல்லது செட்டற்ற நிலம் எனக் கொள்ள வேண்டும். நல்ல மேதை ஒருவன், தன் பழைய அனுபவத்தைக் கொண்டு செய்யும் முறையில் தொழில் நடத்தி, இதன் விளைவாகத் தான் கொண்ட நிலம் எவ்வகையைச் சேர்ந்துள்ளது எனச் சுமாராகக் கூற இயலும். கீடிஞ்ஜின் கொள்கையின்படி தக்கணத்தில் 40 முதல் 50 ஏக்கர் நிலம் ஒருங்கமைந்தால்[1] அது செட்டானதாகக் கருதப்படும். சூரத் மாவட்டத்திலுள்ள ஒரு தோட்டக்காரர் மூன்று ஏக்கர் அளவில் தோட்டம் வைந்திருத்தால் அதைக்கொண்டு செம்மையாகக் குடும்பத்துடன் வாழலாமென்றும், தக்கணத்தில் வறட்சி மிகுந்ததால் 30 ஏக்கர் நிலம் பெற்றிருந்தால்கூடப் போதாது எனலாம்.[2]

**6. பரிகார முறைகள் :** உட்பிரிவுப்படுத்தலையும் சிதறுதலையும் போக்க எவ்வகையான முறைகளை நாம் கையாள இயலும் என இங்கு விளக்குவோம் : சிதறுதல் முறையைப் பற்றி விளக்கம் செய்யும் போது[3] இதை எவ்வாறு நீக்க இயலும் என்பதற்குச் சான்றுகக் கூட்டுறவு இலாக்கா 1920-21 முதல் பஞ்சாப் மாகாணத்தில் எம்முறையைக் கையாண்டது எனக் கவனிப்போம். சிறிய சிறிய நிலப் பிரிவுகளை ஒன்று திரட்டி, ஜூலை 1943-ல் கூட்டுறவு நிலத்திரட்டுச் சங்கங்கள் முறையின் கீழ் ஏறக்குறைய 1,807 தோன்றின. அவற்றின் மொத்தப் பரப்பளவு 1·45 மிலியன் ஏக்கர்கள் (1947-48-ல் இந்த விவரம் 1·573 மிலியன் ஏக்கராக மாறியது.) 1936-ஆம் ஆண்டில் இயற்றப்பட்ட நிலத்திரட்டல் சட்டத்தின்படி ஒத்துவராத சிறுபான்மையோரைக் கட்டாய முறையில் ஒன்று சேர்க்க அனுமதி அளிக்கப்பட்டது. பஞ்சாபில் இது வெற்றிகரமாக அமையப் பல சிறப்புக் காரணங்கள் உள்ளன. மேலும் நிலம் ஒரே தன்மையுள்ளது. ஒரு வயலுக்கு மற்றொன்றை மாற்றிக்கொள்ளுவதால் யாதொரு தவறும் ஏற்படாது. கால்வாய்களையொட்டிய குடியேற்ற நிலங்களில் உழவுத் தொழில் அண்மையில்தான் நடத்தினர். அதனுல் நிலச் சிதறல் முறையைக் கட்டோடு ஒழித்தனர். நிலக்கிழார் தமக்குக் கீழ், பல வாரகுத்தகை முறைகளைக் கையாள முடியாது போனதால் இப் பகுதி

1. கீடிஞ் இவ்வாறு விளக்கும்போது அந் நிலம் ஒரே அமைப்பில் இருக்க வேண்டுமென்றும் அவை சிதறுமல் இருக்க வேண்டும் என்றும் கருதியுள்ளார்.

2. ப்ரோக்ரஸ் ஆப் அக்ரிகல்சர் இன் வெஸ்டர்ன் இந்தியா (Progress of Agriculture in Western India) பக். 52-53.

3. நிலத் திரட்டல் முறை என்பது ஒருவரது நிலங்கள் சிதறிக் கிடத்தலை ஒரே இடத்தில் அமையச் செய்வது. இது கட்டாயப்படுத்தியோ அல்லது தாமாகவோ நிலத்துண்டுகளை மாற்றிக்கொள்ளும் முறை. இதை அரசினரோ அல்லது கூட்டுறவுச் சங்கங்களோ செய்யலாம்.

யில் நிலக்குடி முறைச் சட்டம் நன்கு அமைந்திருந்தது. ஆயினும் இதர மாகாணங்களில் குடிமுறை மிகவும் இடர்ப்பாடுள்ளதாகவே இருந்தது. இதர மாகாணங்கள் பஞ்சாபின் முறையைக் கையாண்டு ஓரளவு வெற்றி காண முயன்றனர். மத்தியப் பிர தேசத்தில் கூட்டுறவுச் சங்கங்கள் மூலமாகவும் நிலத்திரட்டு முறை (1928)ச் சட்டத்தின் கீழுமாக இவற்றைத் திரட்டினர். இச் சட்டம் முதன் முதலாக, சாடிஸ்கார் பகுதியில் அமலாக்கப்பட்டது. ஒரு கிராமத்தின் பரப்பில் உள்ள நிலத்தில் $\frac{2}{3}$ பகுதியைச் சொந்தமாகக் கொண்ட நிலக்கிழார் இதரர்களுடன் சேர்ந்துகொண்டால் அது அனைவரையும் கட்டுப்படுத்தும் என்பதாம். சாடிஸ்கார் பகுதியில் 5,00,000 ஏக்கர் நிலங்கள் 2,436 கிராமங்களில் ஒன்று திரட்டப் பட்டன.

உ. பி.யில் 1939-40-ல் 182 கூட்டுறவு நிலத்திரட்டுச் சங்கங்கள் நிறுவப்பட்டன. அவை மூலமாக 77,672 சரியான நிலங்கள் திரட்டப்பட்டன. 1947-ல் இந்தப் பரிசோதனை பலனற்றுப் போகவே கைவிடப்பட்டது. அதே ஆண்டில் சென்னையில் 1939-40-ல் 22 கூட்டுறவு நிலத்திரட்டுச் சங்கங்கள் நிறுவப்பட்டன. அவை தோல்வியுற்றன என அரசினரால் ஒப்புக்கொள்ளப்பட்டன.

பம்பாய் நிலச்சிதறல் தடுப்பு முறையும் நிலத்திரட்டல் முறைச் சட்டமும் 1947-ல் உருவாயின. இதன்படி ஒரு திட்டப் பரப்பளவு அதாவது இலாபமான முறையில் வேளாண்மை புரிய எவ்வளவு நிலம் வேண்டும் என்பது கூறப்படுகிறது. திட்ட அளவினும் சுருங்கிய நிலப்பகுதியாயின் அவற்றைச் சிதறிய நிலமெனக் கூறி, உரிமைப்பதிவேட்டில் (Record of Rights) பதிவாக்கப்படும். விற்பனை, பட்டா மாற்றம், அல்லது வாரக்குத்தகை முறை எதுவாயினும் அதன் விளைவாகச் சிதறவிடுவது தடுக்கப்படுகிறது. ஆயினும் ஒரு குறிப்பான சர்வே எண்ணுடன் உட்பிரிவாகச் சேர்வதானால் அதைத் தடுப்பதில்லை. பஞ்சாபில் 1948-லும் பெப்சு (Pepsu)வில் 1950-ல் இம்மாதிரியான சட்டங்கள் இயற்றப்பட்டன. பரோடாவிலும் நிலச்சிதறுதல் முறைத் தடுப்பும் நிலத்திரட்டல் முறைச் சட்டமும் 1933-ல் கொண்டுவரப்பட்டன. அதன்படி பெரிய நிலக்கிழார்களும் உரிமையாளர்களும் அக்கம் பக்கத்திலுள்ள சிறிய நிலங்களை வாங்கிக்கொள்ள உரிமை பெற்றிருந்தனர். சொத்துரிமைப் பாக வினைச் சட்டப்படி சொத்தை ஓர் அளவினுக்குக் கீழாகப் பிரித்தல் கூடாது என வரையறுத்தனர்.

பஞ்சாபிலும், மத்தியப் பிரதேசத்திலும் பம்பாயிலும் இம்முறைகள் அமலாக்கிய அனுபவத்தை நம் நாட்டில் இன்று காண்கிறோ

என்று திட்டக் கமிஷன் தனது அறிக்கையில் குறிப்பிட்டிருக்கிறது. நிலத்திரட்டு முறையை இந் நாட்டு வேளாளர் நன்கறிந்துள்ளமையாலும், இதற்காகும் செலவு,சிரமம் முதலியவற்றிற்கு ஈடுகொடுக்கத் தயாராக உள்ளமையாலும், இதற்கான திட்டங்களை அமைக்க வேண்டும் என்று கூறியுள்ளது. ஒரு குறிப்பிட்ட அளவிற்குக் குறைவாக நிலம் உட்பிரிவு செய்தல் கூடாதென்று உத்தரப் பிரதேசம், பம்பாய் இவைகளில் தீர்மானம் செய்த அளவு சரியானதா என்று திட்டக் கமிஷன் ஆய்வு செய்யவில்லை. இம் முறைகள் அடிப்படையில் செம்மையாக உள்ளபடியால் ஆய்வு இன்றியே நியமமாகக் கொள்ளலாம்.[1]

**7. கூட்டுறவுப் பண்ணை முறை:** சிறப்பான முறையில் விவசாயத்தில் பலன் காண ஒரு மாதிரி அலகு இவ்வளவாக இருக்க வேண்டுமென்று சட்ட முறையை அமைக்க முயன்று வருகின்றனர். யார் எவ்வளவு அளவு நிலம் பெற்றிருக்கிருர் ; அவர் அதை எவ்வகையில் சாகுபடி செய்கிருர் என்பதன்று நம் பிரச்சினை, கூட்டுறவுப் பண்ணை முறையிஞல் பயன்பெறுதல் கூடும். நில உரிமையை இழக்காமலும், தொழில் வளர்ச்சிக்கு உறுதுணையாகவும், பெரிய தொழில் முறையில் கிடைக்க வேண்டிய நன்மைகளை அவ்வாறே பெற இது ஒன்றே சீரிய முறை எனலாம். ஒரு கிராமத்தின் மொத்த நிலப்பரப்பில் அரைப்பகுதி நிலம் படைத்த அனைவரும் கூட்டுறவு முறைப் பண்ணையை விரும்பிஞல் எல்லா விவசாயிகளும் கூடி அந்த கிராமத்திற்கான கூட்டுறவு முறை விவசாயத்தை அமைக்க வேண்டியது இன்றியமையாதது. இம் முறையின்படி கிராம முழுமையும் ஒரே அலகாகக் கணக்கிட்டு, அது செம்மையான முறையில் பயிரிடப்படும். இதற்காக அமைக்கப்படும் கூட்டுறவுச் சங்கங்கள் கீழ்க்கண்ட நியமனங்களுடன் ஏற்படுத்தப்படவேண்டும். அவையாவன : (i) சூழ்நிலையை ஒத்து அதன்படி இதன் பரப்பளவு இவ்வளவென்று நியமனம் செய்த அளவுக்கும் கீழாக எந்தக் கூட்டுறவுப் பண்ணைச் சங்கமும் இயங்கக்கூடாது. (ii) சந்தை வசதி, நிதி வழங்குதல், தொழில் சம்பந்தமான நுணுக்கங்கள் இவைகளைப் போன்றவற்றை இம்மாதிரிச் சங்கங்களுக்கு முதற்சலுகையான அளவில் உதவி செய்ய வேண்டும். மேலும் அரசினரின் புறம்போக்கு நிலங்களையும், வேளாண்மை செய்யாத நிலங்களையும் இச் சங்கங்களுக்கு உரிமையாக்க வேண்டும். இவ்வாருன நிலங்களை விளைச்சலுக்கு ஏற்றவாறு அமைத்துக்கொடுக்கவும் முன்வரவேண்டும்.

1. திட்டக் கமிஷனின் அறிக்கை, பக். 191.

நிலங்கள் அனைத்தும் விழுமியதாக ஒரே கூட்டுறவு நிருவாகத்தில் கொண்டு வரப்படுகின்றன. இதனால் ஏற்படும் விளைச்சலை எந்த முறையில் இதில் ஈடுபட்ட விவசாயிகள் பிரித்துக் கொள்ள வேண்டுமென்ற பிரச்சினை இன்னும் தீர்ந்தபாடில்லை. கொள்கையளவில் இது வெகு சுலபமாக முடிவுசெய்யக் கூடியது. இராச்சியத்தின் குடிவாரச் சட்டத்திற் கேற்ப, விளைச்சல் நிலங்களின் பரப்பளவு, அவற்றின் செழுமைக் கேற்ப வாரத் தொகை இவற்றினை நிலக்கிழார் அடையக்கூடும். இவர்கள் நிலத்தில் இதர கூலியாட்களைப்போல் வேலை செய்தால் அந்தக் கூலியாட்களுக்குக் கிடைக்கும் அதே அளவு கூலியையும் பெறலாம்.

கூட்டுறவுப் பண்ணை முறையால் விளைச்சல் கூடுதலாகக் கிடைக்கும். ஏனெனில் விஞ்ஞான முறைகளைப் பயன்படுத்தப் பெரிய அளவிலும் பயிரிடலாம். அதிகப்படியான முதலீடும் இதில் இடுவதற்கு வழியுள்ளது. பண்ணை முறையற்றவைகளுக்கும் கூட்டுறவு முறைகளைப் பயன்படுத்த வேண்டும். இவ்வாறு செய்வதால் கிராமத்திலுள்ள வளப் பொருள் அனைத்தும் உற்பத்திப் பெருக்கில் ஈடுபடுத்தவும், நிலங்கள் முழுவதையும் ஒரே நிர்வாகத்தில் கொணர்ந்தும் கிராமச் சமூகத்திற்குப் பலனளிக்கத் தக்க முறையில் நடத்தலாம். ருசிய நாட்டில் எதேச்சாதிகார முறையில் கூட்டு முறையாக்கல் (collectivization) திட்டத்தின்கீழ் நிலமனைத்தும் பயனுக்க வழி தேடியுள்ளனர். தனியார் நில உடைமை பெற்றிருத்தலைஅறவே நீக்குவதோடல்லாது வற்புறுத்தலின் பேரில் நிலம் கூட்டப்படுகிறது. இதனால் உற்பத்திக் குறைவு ஏற்பட்டாலும் கூட அதை அவ்வளவாகப் பாராட்டுவதில்லை. இவ்வெண்ணம் எவ்வளவு தவறாக இருந்தபோதிலும் இதற்கு உள்ள எதிர்ப்பு மிகவும் கடுமையாக உள்ளது. இவ்வாறான மன நிலையை மாற்ற வேண்டிய பிரசாரங்களைச் செய்து மக்களின் கொள்கையை மாற்றிக் கொள்ள வழிகாட்ட வேண்டும். இம் முறையில் தீர்வு காண இயலவில்லை என்றால் கட்டாய முறையைக் கையாள வேண்டிவரும். சட்டத்திற்கு விரோதமாக நடப்பவர்களை வற்புறுத்தி அது சரியான பாதையில் செல்ல ஏற்பாடு செய்கிறது. அந்தச் சட்டத்தை இயற்றுபவர் பொதுமக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட சீரிய மன்றத்தவர் அமைந்துள்ள அரசு. எதேச்சாதிகாரியால் சட்டம் இயற்றப்படவில்லை. மக்களரசில் பொது மக்களின் கூட்டுறவு முறையால் நாட்டைச் செம்மையாக நடத்த முடியம்; எதேச்சாதிகார ஆட்சியின் அவதூறுகள் எவையும் இவற்றில் ஏற்படுவதில்லை.

**8. இந்தியாவில் நீர்ப்பாசன முறையின் அவசியம்:** [1] இந்தியாவின் பெருந்தொழிலாக விளங்குவது விவசாயம். இது எச் சமயமும் பருவகால மழையை எதிர்நோக்கியிருப்பது. ஆயினும் பருவக் கால மழையோ கட்டுக்கதைகளில் தோன்றும் நிலையற்ற மனத்தினையுடைய கீழ்நாட்டு அரசனை யொத்துள்ளது. எக் காலமும் மழையை எதிர்நோக்காதிருக்கவும், நாட்டின் வேளாண்மையைப் பயனுள்ளதாகச் செய்யவும் நீர்ப்பாசன முறை இன்றியமையாதது நாட்டின் பெருவாரியான மக்கள் நலமுடன் வாழவும் போதிய உணவு பெறவும் விவசாயப் பொருள் முறையில் முன்னேற்றம் காணவேண்டும். இந் நாட்டின் உணவுத் தேவையை இந் நாட்டிலிருந்தே பெற விழைவதால் அதற்கேற்ப உற்பத்தியைப் பெருக்க நீர்ப்பாசனம் வேண்டியிருக்கிறது. வறண்ட பிரதேசங்களான இராஜபுதனத்திலும், பம்பாய் தக்காணத்திலும், மழையின்மையால் நீர்ப்பாசன முறையை ஏற்படுத்தவேண்டியிருக்கிறது. கரும்பு, நெல் சாகுபடிக்கு எக் காலமும் போதிய அளவு நீர் தேவைப்படுகிறது. அதற்கு ஏற்றவாறு அமைய மழையை எதிர் நோக்கியிருப்பதற்குப் பதிலாக நீர்ப்பாசனத்தைக் கொள்ளலாம். செறிந்த வேளாண்மையை நடத்தவும், வேளாண்மைத் தொழிலில் வேலையின்மையைப் போக்கவும் நீர்ப்பாசன முறை இன்றியமையாத தெளிவாம். இந்தியாவில் தொன்று தொட்டு நீர்ப்பாசன முறை இருந்து வருகிறது. தென்னாட்டில் மழைநீரைத் தேக்கிக் குளங்களிலும் ஏரிகளிலும் வைத்துள்ளனர். வட நாட்டில் ஆறுகளிலிருந்தும், கிணறுகளிலிருந்தும் இறவைப் பாசன முறை (lift irrigation)யால் நீர் பாய்ச்சுகின்றனர். பிரிட்டிஷ் ஆட்சியில்தான் ஒவ்வொரு இராச்சியத்திலும் பெரிய அளவில் நீர்த்தேக்கங்களையும், நீர்த் திருப்பக் கால்வாய்களையும் அமைத்தனர். சிறு நீர்ப்பாசன முறைகளான கிணறு, ஏரி, குளம் மூலம் சேகரித்துப் பாய்ச்சப்படும் நீர் அளவு பெரிய நீர்ப்பாசனக் கால்வாய் முறைகளைவிட அதிகம் எனக் கூறலாம்.[2] உலகிலே எந்த நாட்டினைக் காட்டிலும் அதிகப்படியாக நீர்ப்பாசன முறையைக் கையாள்வது நம் நாடு ஒன்றே. சாகுபடியாகும் அளவில் ஐந்தில் ஒரு பங்கு மட்டுந்தான் நீர்ப்பாசன முறையால் சாகுபடியாகிறது.

இந்திய ஆறுகளின் வழியே பாயும் நீரின் பரப்பு 1,356 மிலியன் ஏக்கர்-அடி. அது இந் நாட்டின் ஆண்டுச் சராசரி மழையில் 49 சதவீதமாகக் கணக்கிடலாம். இதில்

1. *இந்தியா, 1955 பக். 233—47.*

2. *சராசரி, பலவித முறையால் நீர்ப்பாசனம் செய்யப்படும்; சதவீதம் வருமாறு: கால்வாய்க்கால்கள் 53%; குளப்பாசனம் 11%; கிணறு 25%; இதர முறை 11%.*

சுமார் 76 மிலியன் ஏக்கர்-அடி நீரே நீர்ப்பாசன முறைக்கும், மின்சாரம் எடுக்கவும் உபயோகிக்கப்படுகிறது. இது மொத்தத்தில் 5·6%. எஞ்சிய 94·4%, கேட்பாரற்று வீணுக வெள்ளமாக ஓடி மக்களுக்குச் சொல்லொணுத் துன்பத்தை விளைவித்து, முடிவில் கடலில் கலக்கிறது.[1] இப்போது கட்டி வருகிற நீர்வீழ்ச்சி மின்சாரத் திட்டங்கள் உருவாகியவுடன் 13·6 சதவீதம் ஆற்று நீரையே உபயோகிப்பார்கள்.

ஆறுகளில் ஓடும் நீரை வாய்க்கால்கள் வழியே நீர்ப்பாசன முறையாக அமைத்தனர். இம் முறைகள் அனைத்தும் முடிவு பெற்றன. வருங்காலத்தில் பருவ மழையின் போது, நீரைத்தேக்கி வெய்யில் காலத்தில் அதனைப் பாசனத்திற்குப் பயன்படுத்த முடிவு செய்தனர். இதற்காக நீர்த் தேக்கங்களைப் பாசன முறைக்கு ஒவ்வாத இடங்களிலும், ஏற்றத்தாழ்வான நிலப்பரப்பிலும் தக்க இடம் பார்த்துக் கட்டி அமைக்க முயன்று வருகின்றனர். இவ்வாறன பகுதிகளில் பொறியியல் முறையில் நீரை மேலிழுத்துப் பாய்ச்சவேண்டிய அவசியம் ஏற்படுகிறது. இம்மாதிரி முறையில் செலவு எல்லையற்றதாகிறது. இதைத் தவிர வேறு வழியும் கிடையாது. குழாய்க் கிணறு திட்ட முறையிலும் இதர கிணறு முறையிலும் நல்ல பலன் கிடைக்கிறது. ஆதலால் நீர் ஏற்றி எடுக்கும் முறை இப் பாசனத் திட்டத்தில் தவிர்க்க இயலாத பாகம் ஆகும்.

**9. நிருவாகம் :** 1921-ல் மான்டேகு-செம்ஸ்போர்ட் சீர் திருத்தங்கள் வருமுன்னர் நீர்ப்பாசன முறைகள் நிதி சம்பந்தப்பட்ட வகையில் மத்திய அரசின் பிடியிலிருந்தது. அதை எடுத்து நடத்துவது முழுமையும் மாகாண ஆட்சியின்கீழ் அமைந்திருந்தது. புதிய திட்டங்கள் அமைக்கவோ அல்லது உள்ளவற்றைப் பெருக்கவோ மத்திய அரசிடமிருந்து அதற்கான தொகையைப் பெற்று வேலையைச் செய்யவேண்டும். இதர மாகாண அரசினருடன் மத்திய அரசினரும் இதில் வரும் வருமானத்தில் பங்கு பெற்று வந்தனர். 1906 ஆம் ஆண்டில் நீர்ப்பாசனத் தலைமை ஆய்வாளர் பதவி ஒன்றை ஏற்படுத்தினர். 1923-ல் இஞ்ச்கேப் குழுவினரின் (Inchcape Committee) அறிக்கையின் பேரில் இந்தப் பதவியை நீக்கிவிட்டு, நீர்ப்பாசனத்தை மான்டேகு-செம்ஸ் போர்டு சீர்திருத்தத்தின்கீழ் இராச்சிய அல்லது மாகாணத் துறைக்குக் கொண்டுவரப்பட்டது. ஆனபோதிலும் மத்திய அரசு அவ்வப்போது பெரிய நீர்ப்பாசனத் திட்டங்களுக்குப் போதிய நிதி உதவி அளித்து வந்தது. சீர்திருத்தங்கள் வந்த ஆரம்ப காலத்தில் இம்மாதிரி விளக்கமற்ற முறையில் மத்திய அரசு செய்த உதவி

1. முதல் ஐந்து ஆண்டுத் திட்டம், பக். 326.

களின் காரணத்தால் சில இடையூறுகள் ஏற்பட்டன. நிலைமையைச் சீர்திருத்த 1926-ல் நீர்ப்பாசன மத்திய போர்டு ஒன்று நியமிக்கப்பட்டது. நாட்டிலுள்ள நீர்ப்பாசனத் திட்டங்களைப் பரிசீலனை செய்வதும், மின்சார நீர்வீழ்ச்சித் திட்டமாயின் அவற்றைப் பற்றி ஆய்வு செய்து, மத்திய அரசின் விருப்பத்திற்கிணங்க தக்க முடிவு செய்தலும் ஆகியவை இந்தப் போர்டிடம் ஒப்படைக்கப்பட்டன. தொழில் நுட்பத்தைப் பற்றியும், நீரைப் பயனுக்கும் முறையையும் வெள்ளத் தடுப்பு முறையைப் பற்றியும் மாகாண அரசினருக்கும் மத்திய அரசினருக்கும் அவ்வப்போது முடிவுகூற வேண்டியது; இது சம்பந்தமான ஆராய்ச்சிகளை நடத்தி, அவ்வப்போது கண்ட முடிவுகளைப் புத்தக வடிவில் வெளியிட வேண்டும்.

1937 ஏப்ரல் மாதம் 2-லிருந்து மாகாணத் தன்னாட்சி ஏற்பட்டவுடன் அந்தந்த மாகாணத்திற்குள்ள நீர் நிலைகளைப் பற்றிய நிர்வாகம் அந்த மாகாணச் சட்ட மன்றங்களின் மூலமாகவும் நிர்வாக முறை மூலமாகவும் கவனித்து வரப்பட்டன.

மத்திய நீர்நிலை, பாசன, நாவாய்க் குழு (The Central Waterways Irrigation and Navigation Commission) ஒன்று 1945-ல் அமைக்கப்பட்டது. நாடு முழுமைக்கும் உள்ள தகவல்களைச் சேகரிக்கவும், திட்டமிடவும், இதர துறையினருடன் கூட்டாக வேலை செய்யவும், நீர்த்தேக்கக் கட்டட வேலைகளை எடுத்து நடத்தவும் இதற்கு அதிகாரம் கொடுக்கப்பட்டது. அண்மையில் இது மின்சாரக் குழுவுடன் இணைக்கப்பட்டு மத்திய நீர் மின்விசைக் குழு (The Central Water and Power Commission) என்ற பெயருடன் இயங்கி வருகிறது.

**10. ஆற்றுப் பள்ளத்தாக்குத் திட்டங்கள்:** நீண்ட கால முயற்சியின் பயனாகவும், உணவுப் பற்றுக் குறை நிலையைப் போக்கவும் இந் நாட்டின் பொருளாதார நிலையை உயர்த்தவும் ஒரு முடிவான வழி இது ஒன்றேயாகும். பல்வகைப் பயன் பெறு ஆற்றுத் திட்டங்களின் (Multi-Purpose Projects) மூலம் நாட்டின் வறுமையைப் போக்கலாம்; பல்வகைப் பயன்பெறு திட்டங்கள் எனக் கூறுவதால் அவை பல்வேறு தேவைகளைப் பூர்த்தி செய்கின்றன. வர்த்தக உணவுப் பொருள்களைக் கூடுதலாக விளைவிக்கப்போதிய நீர்ப்பாசன வசதி செய்து கொடுப்பதோடல்லாது, வெள்ளம் கட்டுப்படுத்தப்பட்டு, அதனால் உயிர், சொத்து, பயிர் இவைகள் நாசமடையாமல் காப்பாற்றப்படுகின்றன. பெருமளவில் மின்விசை நிலையங்களை அமைத்து, மின்சார வசதி பெறலாம். உள்நாட்டு நாவாய் முறை அதிகரிக்கிறது. இதனால் ரெயிலில்

ஏற்படும் சுமை குறைகிறது. நிலக்காப்பு முறைகள் கையாளப் படுகின்றன. காட்டு வளர்ச்சியும், நந்தவனத் தோட்ட அமைப்பும், குடிநீர் வசதியும் மற்றும் ஆற்றோரங்களில் பொழுது போக்கு வசதிகளும் ஏற்படுகின்றன. முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் இதற்கு முதலிடம் கொடுத்ததிலிருந்து நாட்டின் பொருளாதார முன்னேற்றத்திற்கு இது எவ்வளவு இன்றியமையாதது எனத் தெரிகிறது. (இரண்டாம் அதிகாரத்தைப் பார்க்கவும்.)

இந்தியாவின் இயற்கையான நீர்வளம் சுமாராகவும், பரவலாகவும் ஒரே மாதிரியாக அமைந்துள்ளது. மேலெழுந்தவாரியாக இந்தியாவின் நீர்வளத்தை ஸர்வே செய்தபோது இன்னும் 15 முதல் 20 ஆண்டுகளுக்குள்ளாக இப்போதுள்ள நீர்பாய்ச்சப்படும் பரப்பளவினை இரட்டிப்பாக்கலாம். அநேக நூறு மைல்கள் நாவாய் செலுத்தப் பயனுள்ளதாக்க நீர் நிலைகளை ஏற்படுத்தலாம். மேலும் 30 முதல் 40 கிலோவாட் மின்விசை அதிகம் எடுத்துப் பயன் பெறலாம் எனத் தெரிவித்தது.

பிரிட்டனின் ஆளுகையின்போது ரெயில்வேக்களின் வளர்ச்சியைக் குறித்து உள்நாட்டுப் பாசன முறைகளை எடுத்து அமைக்கவில்லை. 1901-ல் நீர்ப்பாசனக் குழுவினர் 1880-ல் பஞ்சக் குழுவினரின் பரிந்துரையில் கூறியவண்ணம் பஞ்சத்தைப் போக்க ரெயில் வசதி அமைப்பதோடல்லாது நீர்ப்பாசன வசதியமைத்துப் பஞ்சத்தைக் குறைக்கலாம் என்று ஆதரித்துப் பேசினர். பஞ்ச நீக்கலுக்கான இன்சூரன்ஸ் போன்று நீர்ப்பாசன முறை அமையக் கூடுவதாலும் உணவு உற்பத்திப் பெருக்க மேற்படவும் செய்யக்கூடும் என்று எடுத்துக் காட்டப்பட்டது. பின்னர் எடுத்து அமைத்த நீர்ப்பாசனத் திட்டங்கள் இவ் வடிப்படை எண்ணங்களில் அமைந்தன எனலாம். வெகு தீவிரமான கொள்கையை ஏற்றுக்கொண்டு 1902-க்குப் பிறகு அரசினர் பல்வேறு நீர்ப்பாசன முறைகளை அமைத்தனர். தற்போதுள்ள அரசினரின் முதல் எண்ணிக்கையுள்ளது நீர்ப் பாசன முறை. இதைத் திட்டத்துடன் கூட்டியே வகுத்துள்ளனர். முதல் ஐந்தாண்டுத் திட்டம் வரையிலாவது இம் முறை உள்ளதெனக் கூறலாம்.

**11. நிலக் காப்பு முறை :** இந்திய விவசாயத்தில் வெகு கடுமையான பிரச்சினை நில அழிவு ஆகும். நில அரிப்புத் தன்மையால் எப்படிப்பட்ட பரந்த பூமிகளும் விளைச்சலுக்குப் பயனற்று வீணாகிப் போய்விட்டன. காடுகள் அழிக்கப்பட்டதாலும், சரிவுள்ள நிலப் பகுதிகளில் தோன்றிய தாவ

வர்க்கத்தை நீக்கியதாலும், பாலையின் வரம்பில் உள்ள பயிர் பச்சைகளைப் போக்கியதாலும், நில அரிப்பு ஏற்படுகிறது. மழையினுல் மண்ணை நீர் அரித்து (Sheet erosion) மேல்தரை அரிப்பினுல் மண்ணில் சத்துள்ள மேல் பகுதி அடித்துக்கொண்டு போகப்படுகிறது. இது சாதாரணமாகச் சரிவுகளில் ஏற்படுவது இயல்பே. ஓடை நீர் அரிப்பு நாளுக்கு நாள் வளர்ந்துகொண்டே வந்து, நிலத்தை ஒன்றுக்கும் உதவாத முறையில் வைத்து விடுகிறது. மேல் தரை அரிப்பின் காரணத்தால் தான் இவ்வாருன ஓடை நீர் அரிப்பு ஏற்படுகிறது. இந்தியாவின் வறண்ட மேற்குப் பகுதிகளில் காற்றுச் செயலினுல் அரிப்பு ஏற்படுகிறது. இராஜஸ்தானத்துப் பாலைவன மணல் காற்றில் கொண்டு போகப் பட்டு அதைப்பற்றி வரம்பிலுள்ள பயிர் நிலங்களை மணல் மூடி விடுகிறது. திட்டக் குழுவினர் நில அரிப்பைத் தடுக்கக் கொடுத்துள்ள பரிந்துரைகளாவன : (i) நிலப் பயன்பாட்டு, காப்பு முறைக் குழு ஒன்றை நியமனம் செய்து நிலக் காப்பிற்கான வழிகளை அமைக்க ஏற்பாடு செய்தல் வேண்டும். இதற்கான நிலக் காப்புச் சட்டங்களைச் சட்ட மன்றங்கள் இயற்றவேண்டும். ஒவ்வோர் இராச்சியமும் தன் பகுதியில் உள்ள நிலங்களை மறுமுறை பார்வையிட்டு, அவற்றில் அரிப்பு அடைந்த பகுதி எது எனக் கோடிட்டு, அக் கோடிட்ட பகுதியில் குறிப்பாக எந்த வட்டாரத்தில் திட்ட காலத்தினுள் நிலக் காப்பு முறைகளைக் கையாள்வது என முடிவு செய்ய வேண்டும். நிலக் காப்பு முறைகளுக்கென உதவியளிக்க மத்திய அரசு 2 கோடி ரூபாயை ஒதுக்கி வைக்க வேண்டும். (ii) மத்திய அரசின்கீழ் நிலப் பயன்பாட்டையும் காப்பு முறைகளையும் கவனித்துக் கொள்ளவும், இதர இராச்சிய நிறுவனங்களின் வேலைகளை மேற்பார்வை செய்யவும் உணவு விவசாய இலாகாவில் இணைத்து இயங்க ஒரு குழுவினரை நியமிக்க வேண்டும். நாடு முழுவதும் பரவியுள்ள நிலக் காப்பு முறைகளைக் கண்காணிப்பதோடும் அவ்வப்போது ஏற்படும் நில அரிப்புப் பிரச்சினையை ஆய்ந்து, அதற்கெனப் பரிகாரத்தைக் கூறியும், இராச்சிய திட்டங்களில் உள்ளவற்றை ஆய்ந்தும், நிலக் காப்புக்கான செய்ம்முறைகளை இராச்சிய போர்டுகள் கூட்டுடன் செய்து காண்பித்து வரவேண்டும். (iii) டேராடூனில் உள்ள காட்டு ஆராய்ச்சி நிறுவனத்தில் நிலக் காப்பு ஆராய்ச்சியும் அமைக்கப்பட வேண்டும். மண்கள் நில உபயோகத்தைப் பற்றிய சர்வே திட்டம் அதில் ஏற்படுத்தப்பட வேண்டும். இந்திய விவசாய ஆராய்ச்சி நிறுவனத்தாரால் நிலத்தின் செழிப்பினைப் பற்றியும் உரத் தேவையைப் பற்றியும் நடத்தப் படும் ஆராய்ச்சிகளுடன் இவைகள் இணைக்கப்படவேண்டும்.

(iv) வறண்ட பகுதிகளிலும், மலைப்பாங்கான பகுதிகளிலும் உள்ள ஆற்றுப் பள்ளத் தாக்குத் திட்டங்களிலும், சமூக சேவைத் திட்டப் பகுதிகளிலும் உள்ள நீர் வடிகால் பரப்பில் தக்க ஆராய்ச்சிகள் நடத்தி, நில அரிப்பினைத் தடுத்து, நிலக் காப்பு முறைகளைத் தனிப்பட்ட முறையில் அமர்த்தவேண்டும். (v) முதற்படியாக இராஜஸ்தானத்துப் பாலைவனத்தைப் பரவ விடாமல் தடுக்க ஜோதிபுரியில் ஓர் ஆராய்ச்சிக்கூடம் அமைத்துப் பயிர் வளர் (பிராந்தியம்) மண்டலங்களை உண்டுபண்ணியும் நிலத்தைப் பயனுள்ளதாக்கவும் முயன்று வருகின்றனர். மத்திய நிறுவனங்களுடைய அபிப்ராயத்தின் பேரில் இராச்சிய அரசினர் ஒன்று கூடிக் கூட்டு முறையில் செம்மையான திட்டமிட்டு இதை நடத்தக் கூடும்.

பல வகைப்பட்ட நில அரிப்பு முறைகளை ஆராய்ச்சி செய்ய டேராடுன், கோட்டா, ஜோதிபுரி, பெல்லாரி, உதக மண்டலம் இவற்றில் ஆராய்ச்சிக் கூடங்கள் அமைக்கப்பட்டன. 1986-ல் 200 மிலியன் ஏக்கர் நிலங்கள் காப்பு முறைகளைப் பெறலாம். இடைக் கால இலக்குகள் வருமாறு : 1961-ல் 4 மிலியன் ஏக்கர், 1966-ல் 11·5 மிலியன் ஏக்கர், 1971-ல் 20 மிலியன் ஏக்கர் என முடிவு செய்துள்ளனர். இதன் செலவு ரூ. 1,200 கோடி என அனுமானித்துள்ளனர்.

## அனுபந்தம் (நிலங்களின் பருமன்)

(உரிமையாளரும் குடிவாரப் பயிரிடுபவர்களும்)

| பருமனின் தொகுப்புக்கள் (ஏக்கரில்) | நிலங்களின் எண்ணிக்கை (1,000) | சதவீத அளவில் நிலங்கள் | பரப்பளவு (1000) ஏக்கர் | பரப்பளவின் சதவீதம் | குறிப்புக்கள் |
|---|---|---|---|---|---|
| உத்தரப் பிரதேசம் | | | | | மொத்தம் வசமுள்ள பிரதேசத்தில் இணைப்புக்குமுன் (இப்போதுள்ள பிரதேசத்தில் 90%) இருந்த பகுதியையும் விசாரணையின்போது சேர்த்துக்கொள்ளப்பட்டது. |
| 0— 5 | 9,971 | 81·2 | 16,024 | 38·8 | |
| 5—10 | 1,563 | 12·7 | 10,824 | 26·1 | |
| பம்பாய் | | | | | இணைப்புக்கு முன் உள்ளாயத்து வாரிப் பிரதேசத்தைக் காட்டுகிறது. |
| 0— 5 | 1,313 | 52·31 | 3,672 | 14·00 | |
| 5—15 | 707 | 28·18 | 6,548 | 24·95 | |
| மத்தியப் பிரதேசம் | | | | | இதில் காணும் புள்ளி விவரத்தில் 77% பாக்கி 23% விசாரணையின் போது சேர்க்கப்படவில்லை. இது இணைப்புப் பகுதியில் உள்ளது. |
| 0— 5 | 1,296 | 51·5 | 2,856 | 10·0 | |
| 5—10 | 493 | 19·5 | 3,528 | 12·0 | |
| ஒரிஸ்ஸா | | | | | மாதிரி ஸர்வே செய்யப்பட்டு, அதன் பேரில் சேகரித்த புள்ளி விவரம் மொத்த ஸர்வே செய்த பரப்பு 60,230 ஏக்கர். |
| 0— 5 | த.இ. | 74·2 | த.இ. | 30·1 | |
| 5—10 | த இ. | 15·5 | த.இ. | 22·0 | |
| பீகார் | | | | | பொது நிலைமையைக் காட்டும் புள்ளி விவரம் மாதிரி ஸர்வே செய்தது; இது போதுமானதாகக் கணக்கிடப்பட்டது. |
| 0— 5 | த.இ. | 83·3 | த.இ. | த.இ. | |
| 5—10 | த.இ. | 3·4 | த.இ. | த.இ. | |
| அஸ்ஸாம் | | | | | 5,295 நிலப்பகுதிகள் உள்ள 26,000 ஏக்கர் மாதிரி ஸர்வே செய்யப்பட்ட விவரத்தைக் குறிக்கும். |
| 0— 5 | த.இ. | 66·1 | த.இ. | 26·0 | |
| 5—10 | த.இ. | 22·5 | த.இ. | 32·9 | |

த.இ.—தகவல இல்லை.

| பருமனின் தொகுப்புக்கள் (ஏக்கரில்) | நிலங்களின் எண்ணிக்கை (1,000) | சதவீத அளவில் நிலங்கள் | பரப்பளவு (1000 ஏக்கரில்) | பரப்பளவு சதவீதம் | குறிப்புக்கள் |
|---|---|---|---|---|---|
| சென்னை நிலப்பகுதிகள் வரி விதிப்புத் தரத்தில் | | | | | இதில் காட்டப்படும் விவரங்கள் ரயத்து வாரிப் பகுதிகளாகும். |
| ரூ. 10க்கும் கீழ் | 5,906 | 82·2 | 11,356 | 41·2 | இவைகள் பட்டாவாகக் கணக்கிடப் பட்டு மொத்தத்தில் 82 சதவீதம் உள்ளன. |
| 10க்குமேல் 30க்குக் குறைவு | 822 | 11·4 | 7,504 | 27·2 | |
| 30க்குமேல் 50க்குக் குறைவாக | 264 | 3·7 | 2,826 | 19·2 | |
| மைசூர் | | | | | இராச்சியப் பகுதிகளைத்தும் விசாரணைக்குக் கொண்டு வரப் பட்டன. |
| 0— 5 | 820 | 66·2 | 2,061 | 25·3 | |
| 5—10 | 265 | 21·2 | 2,002 | 24·0 | |
| திருவாங்கூர் கொச்சி | | | | | |
| 0— 5 | 1,541 | 94·1 | 1,322 | 44·0 | |
| 5—10 | 56 | 3·4 | 368 | 13·0 | |
| பெப்சு | | | | | |
| 0— 5 | 239 | 45·4 | 518 | 8·2 | இராச்சியப் பகுதிகளைத்தும் விசாரணைக்குக் கொண்டு வரப் பட்டன. |
| 5—10 | 93 | 17·6 | 680 | 10·7 | |
| டில்லி | | | | | |
| 0— 5 | த.இ. | த.இ. | த.இ. | த.இ. | |
| 10—20 | 30 | த.இ. | 10 | த.இ. | |
| இமாலயப்பிரதேசம் | | | | | |
| 0— 5 | 69 | 95·0 | 83 | 71·0 | இப் புள்ளிவிவரத்தில் சாம்பா மாவட்டம் மட்டுமே உள்ளது. |
| 5—10 | 2 | 3·0 | 13 | 11·0 | |
| 10—15 | 1 | 2·0 | 12 | 10·0 | |
| 15க்குமேல் | 1 | 0·1 | 1 | 8·0 | |
| குடகு | | | | | |
| 0— 5 | 42 | 76·0 | 128 | 30·0 | இராச்சியப் பகுதிகள் அனைத்தும் சேர்க்கப்பட்டுள்ளன. |
| 5—10 | 7 | 12·0 | 54 | 13·0 | |
| 10—15 | 3 | 5·0 | 31 | 7·0 | |

த.இ.—தகவல் இல்லை.

### அனுபந்தம் (தொடர்ச்சி)

| பருமனின் தொகுப்புக்கள் (ஏக்கரில்) | நிலப் பருமனுக்கு ஏற்றவாறு குடியானவர்களின் சதவீதம் | |
|---|---|---|
| | ஃப்ளௌவுட் குழுவினரின் அறிக்கையின்படி (%) | 1951ஆம் ஆண்டுக் கணக்கெடுப்பின்படி (%) |
| மேற்கு வங்காளம் | | |
| 0—2 | 41·9 | 34·4 |
| 2—4 | 20·6 | 27·6 |
| 4-க்கும் அதிகம் | 37·5 | 38·0 |

இதில் காணும் எண்களைத் திட்டக் கமிஷனின் அறிக்கை தவறென எடுத்துக் காட்டுகிறது. அவையாவன: (i) அண்மையில் ஏற்பட்ட மாறுதல்களையும் நடுவர்களின் உரிமை பறிக்கப்பட்டதும், புதிய பகுதிகள் இணைப்புச் செய்ததையும் நில உரிமைச் சட்ட மியற்றிய பின்னர் ஏற்பட்ட மாறுதல்கள் இவற்றில் சேர்க்கப்படவில்லை. (ii) பயிரிடப்பட்ட, பயிரிடப்படாத நிலங்கள் என்றும், நீர்ப்பாசனம் செய்யப்பட்டவை, செய்யப்படாதவை யென்றும் பிரித்து விவரமாகக் குறிப்பிடவில்லை. (முதல் ஐந்தாண்டுத் திட்டம், பக். 199-202).

# 7. விவசாய சம்பந்தமான இதர பிரச்சினைகள்

**1. ஈடுபடும் மக்கள். (i) பயிரிடுபவர்:** 1889-ல் டாக்டர் ஒயெல்கர் (Dr. Voelcker) என்ற புகழ்பெற்ற ஆலோசனை கூறும் ரசாயன சாஸ்திரியை அரசினரின் விவசாயக் குழுவினர் இங்கு அனுப்பி, இந் நாட்டு விவசாயத்தைப் பற்றி ஒரு வெளியீட்டைக் கொடுக்கச் சொன்னார்கள். டாக்டர் ஒயெல்கர் அவ்வண்ணமே நன்கு ஆய்ந்து தம் அறிக்கையில் இந்திய வேளாளரைப் பற்றி உயரிய முறையில் கூறியுள்ளார்: அதாவது, 'இந்திய விவசாயியின் கவனமான வேளாண்மை முறை' என்ற தலைப்பின் கீழ், இந்திய விவசாயி கடும் உழைப்பும், தளரா முயற்சியும், மேன் மேலும் பலன் தரும் அளவில் வேலைத் திறனும் படைத்தவன்' என்று கூறுகிறார். இவ்வாறான புகழ்ச்சி எல்லா விவசாயிகளுக்கும் பொருந்தாது எனலாம். வேளாண்மைக்கு ஏற்ப நில அமைப்பும் வார, குத்தகை அமைப்பும் இட வசதியும், மழையின் காலா காலத்தின் வருகையும், பாசன வசதியும் அமைந்துள்ள விவசாயிக்கே இச் சிறப்புரைகள் பொருந்தும். பொதுவாகக் குற்றமற்ற நோக்குடன் கவனித்தால் நம் நாட்டு வேளாண்மை முறையில் ஒரு சாதாரண விவசாயி நடத்தும் விவசாயத் தொழிலில் எவ்வளவு தவறுகள் உள்ளன என்றும், அவனுடைய உயரிய குணங்கள் இத் தவறுகளின் மிகுதியால் மறைக்கப்பட்டு விடும் என்றும் அறிகிறோம். அவனது விவசாய முறை மிகவும் மேம்பாடானது எனக் கொள்ளினும், ஐரோப்பிய அமெரிக்க நாட்டு விவசாயிகளுக்கு ஈடு ஆகாத நிலையில் தான் உள்ளான். அதற்குக் காரணம், இந்திய விவசாயி கல்வி, புதுக் கருத்துக்கள், தொழில் நுணுக்கம் முதலியவற்றினை அறியாதிருத்தலே. புது எண்ணங்களையும் கொள்கைகளையும் அவனிடம் எவ்வாறு புகுத்த இயலும்? புதிய யந்திர முறைகளை அவன் அறிந்து கொள்ளப்

போதிய ஞானம் வேண்டும். விவசாய முன்னேற்றத்திற்கு அடிப்படையாக அமையவேண்டியது விவசாயியின் அறியாமையின் நீக்கமே. விவசாயி அறியாமையை அகற்றிக் கல்விப் பயிற்சி பெற்றுல் பல துறைகளிலும் முன்னேற்றம் காணலாம். இது உடனே எடுத்துக் கவனிக்கவேண்டிய பிரச்சினை. எல்லையற்ற வறுமையினுலும், அறியாமையின் விளைவாலும் சமூகத்தில் உள்ள இடர்ப்பாடுகளாலும் பொருளாதாரத் துறையில் உள்ள சிக்கல்களாலும் இந்திய விவசாயியின் நிலைமை பரிதாபமாக உள்ளதோடல்லாது அவன் தவருன வழிகளையும் பின் பற்றும்படி நேர்கிறது சத்தற்ற உணவு புசிப்பதாலும், காலம் தவறி உண்ணுவதாலும் உடன் தேவைக்கான அளவு உணவு உண்ணுத காரணத்தாலும் அவன் மெலிவுற்று மலேரியா, விஷ ஜுரம், காலரா முதலிய நோய்களுக்கு இலக்காகிச் சக்தியற்று இருக்கிருன். அவனது பழைய காலக் கொள்கைகளையும், கட்டுப்பாடு போன்ற தொன்மையான முறைகளையும் எள்ளி நகையாடுதல் சரியன்று. அவ்வாறு பழிப்பது நம்முடைய அறியாமையைச் சித்திரித்துக் காட்டுகிறது. தொன்று தொட்டு வரும் பழக்க வழக்கங்கள் தவறென்று நிரூபிக்க முடியவில்லை. அவற்றைத் தவறெனக் கொள்வது சரியாகாது. மேலும் இம்முறையில் ஏதோ அடிப்படைத் தத்துவம் உண்டென்றே நம் முன்னேர்கள் வழி வழியாக இவ்வாறு அமைத்தனர் எனலாம். ஆயினும் நமது விவசாயி கையாளும் முறைகள், கொண்ட கருத்துக்கள், இவற்றை மாற்றியமைக்கவேண்டியது அவசியமே. எழுத்தறிவு இல்லாததால் மூலக் கொள்கைகளுக்கும் விருப்பு வெறுப்பு இவைகளுக்கும் விவசாயி இலக்காகிருன். திருமணம் முதலிய குடும்ப வைதீகச் செயல்களில் ஏராளமான பணச் செலவு செய்யவேண்டிய நிலை வருகிறது. அது எப்போதாவது ஏற்படும் என்ருலும் அவன் கடனாளியாக மாறுவதற்கு அதுவே காரணம் எனலாம். நீதி மன்றங்களுக்கு வழக்கெடுத்துச் சென்று வாதாடுவதில் அவனுக்கு நிகர் அவனே. இது ஒரு எதிர்பாராத தலைவிதி எனக் கூறலாம். அரசினரின் தயவையோ அல்லது இதரரின் தயவையோ நாடுபவன் தன் சக்தியில் நம்பிக்கையற்று இருப்பான். பொதுவாக அவன் எவற்றிற்கும் சக்தியின்றிச் செய்கையின்றி இருப்பான். இவ்வாருன காரணங்களால் அவனுக்கு அவனுடைய சுற்றுப் புறங்களைச் செவ்வையாக அமைத்து, அவனுக்கு வசதிகள் அளிக்க வேண்டுவது இன்றியமையாதது.

**(ii) நிலக்கிழார்:** போர், தொத்து நோய், பஞ்சம், இவற்றுக்கு அடுத்தபடியாக அமைவது நிலத்தைப் பயிரிடாத நிலக்

கிழார்கள் என்ற வகுப்பு [1] இந்தியக் கிராமப் பொருளாதார முறையின் வளர்ச்சிக்கு இவர்கள் எவ்வகையான உதவியும் புரிந்ததில்லை. நாட்டின் மாற்றங்களைக் குறிப்பறியாது இவர்கள் தங்களுடைய போக்கை ஒட்டி நடந்தனர். இதனால் அரசினர், நிலம் உழைப்பவருக்கே என்ற கொள்கையில் நிலக்கிழாரைக் கொஞ்சம் கொஞ்சமாக நீக்கம் செய்து வருகின்றது.

(iii) **விவசாயத் தொழிலில் ஈடுபட்டவர்:** நிலக்கிழார் வேளாளர் போன்றே விவசாயத்தில் ஈடுபட்ட கூலிக்காரர்களும் பழைய கொள்கைகளையும் பழக்க வழக்கங்களையும் பெற்றுள்ளனர். இவர்களது கூலி அண்மையில் விலை ஏற்றத்தினால் கூடிய போதிலும் வாழ்க்கைத் தரம் நிலக்கிழாரைவிட வரவரக் குறைந்து கொண்டே வந்துள்ளது. 1951-ஆம் ஆண்டுக் கணக்கெடுப்பின்படி கிராமங்களில் உள்ள 295 மிலியன் பேர்களில் 249 மிலியன் பேர்கள் விவசாயத் தொழிலில் உள்ளனர் என்று தெரிகிறது. அவர்களில் 18 சதவீதம் பயிரிடும் தொழிலாளர்கள் எனக் கணக்கிடப்பட்டுள்ளது. இவர்களிலும் இரு பகுதியினர் உள்ளனர். ஒரு வகையினர் தற்செயலாக (casual) வேலை செய்பவர் என்றும் மற்றொரு வகையினர் நிலத்துடன் ஒட்டிக்கொண்டிருப்பவர் என்றும் கூறலாம். அவ்வப்போது தேவைக்கேற்ப வேலை புரிபவர் 89 சதவீதம் என அனுமானித்துள்ளனர். கிராமத் தொழில்கள் அழிவு பெற்றவுடன் அவற்றில் ஈடுபட்டு இருந்தவர் இத்தொழிலில் பகுதி நேர வேலைக்கு வந்தனர். அநேக கைவினைஞரின் நிலையும் இவ்வாறாகியது. நிலப்பிரிவினையினால் உட்பிரிவு ஏற்பட்டதாலும், சிதறல் ஏற்பட்டதாலும் நிலக்கிழார் அநேகர் தற்செயலான தொழிலில் ஈடுபட்டனர். பெரிய பண்ணைகள் பல சிதறுண்டுபோகவே இப் பிரச்சினை வரவரக் கடுமையாகியது. அதிக அளவு நில வேலையில் ஈடுபட்டுள்ளவர்கள் இருப்பதாலும், அவர்கள் நிரந்தர வேலையற்றுள்ளதாலும் சமூகத்தில் அவர்களுக்கு உள்ள சில தடங்கல்களிலும், அவர்களது இருப்பு, விவசாய முறையில் மிக்க பலவீனமாகவும் நிலையற்றும் உளது.

உழவர்களுக்கு முழு வேலைக்காக விவசாய முன்னேற்றம், நிலச் சீர்திருத்தங்கள், விவசாய உற்பத்திப் பெருக்கம், கிராம முறையைக் கூட்டுறவு அடிப்படையில் மாற்றியமைத்தல், கிராமத் தொழில்களைத் துவக்குதல் மற்றும் நீர்ப்பாசனத் திட்டங்கள் இவைகளை ஏற்பாடு செய்ய ஐந்தாண்டுத் திட்டங்களில் வரைந்துள்ளனர். பிற்போக்கான வகுப்பினரை முன்னேறச் செய்ய அவர்களுடைய நலனுக்காக வேண்டிப் பெரும் தொகையைத்

1. டி. என். கார்வர் பிரின்ஸிபிள்ஸ் ஆப் ரூரல் எகனாமிக்ஸ், பக். 377.

திட்டத்தில் ஒதுக்கியுள்ளனர். நிலமற்ற குடியானவர்களுக்கு இடவசதியும் நில வசதியும் அளிக்க மத்திய அரசு 2 கோடி ரூபாயை ஒதுக்கிவைத்துள்ளது.

நாட்டின் பெரும் பகுதிகளில் குறைந்த கூலிச்சட்டம் உருவாக்கப்பெற்று அமலில் இருந்து வருகிறது. குறிப்பாக, எந்த எந்தப் பகுதிகளில் பெரும் பண்ணைகள் உள்ளனவோ, அங்கெல்லாம் குறைவான கூலி கிடைப்பதால் அதைத் தடுத்து வேலைக்குத் தக்க கூலி கிடைக்கச் செய்ய இராச்சிய அரசுகள் முயன்று வருகின்றன. இதை வற்புறுத்தி முறைப்படி கொண்டு வருவதில் பல இடையூறுகள் உள்ளன. இக்காலத்தில் நிலங்களில் வேலை செய்பவர்களில் 89 சதவீதம் தற்செயலாகப் பணியாற்றுபவர். அநேகர் பகுதி நேர வேலைக்காரர்கள். மேலும் அவர்களிடையே ஒரு நிறுவனம் போன்று ஏதும் இல்லை. தொழிற்சாலைகளில் உள்ளவர் போன்று அவர்களுள் ஓர் இயக்கம் தோன்றவில்லை. நாடு முழுமையும் அவர்கள் சிதறிக்கிடக்கின்றனர், அதே போன்று ஆட்சி முறையிலும் சட்ட திட்டங்களையும் கண்டிப்பாகச் செயலில் காட்ட இயலாது.

**2. எருக்களும் உரவகைகளும்:** இந்தியாவிலுள்ள பலவகை மண்களைப் பற்றிய திட்டமான ஸர்வே சரியான முறையில் நடத்தப்படவில்லை. இந்திய மண்ணில் பாஸ்பேட்டுகள், நைட்ரஜன், தாவரப்பொருள் இவைகள் குறைந்து காணப் படுகின்றன.

பயிர் உற்பத்தியில் முக்கியமாக நைட்ரஜன் என்ற வாயு முதல் இடத்தைப் பெறுகிறது. அடுத்தபடியாக வேண்டியது பாஸ்பேட்டுகள். தாவரங்கள் மண்ணில் உள்ள பாஸ்பேட்டுகளை எடுத்துக் கொள்ளுகின்றன. மிருக, மனிதக் கழிவு நீர்களாலும், மக்கிப்போன தாவரங்களாலும் இறந்த மிருகங்களின் எலும்புகளிலும் மறுபடியும் பாஸ்பேட்டுகள் நிலத்தில் வந்தடைகின்றன. இந்திய மண்ணில் நைட்ரஜனும் பாஸ்பேட்டும் மிகவும் குறைவே. ஆயினும் பொட்டாஷ் வளம் அதிகமாக உள்ளது.

எருக்கள் இரு வகைப்படும். அவையாவன: (அ) தாவரப் பொருள்கள் (ஆ) தாவரமல்லாத இதர பொருள்கள். தாவரப் பொருள்களை மறுபடியும் இரு வகைகளாகப் பிரிக்கலாம். அவையாவன: (i) பெருஞ்சுமையளவில் உள்ள தாவரப் பொருள், (ii) அடர் தாவரப்பொருள் (concentrated organic-matter) பெருஞ்சுமைத் தாவரப் பொருள்களாவன: பண்ணையிக்

சேரும் உரம், கம்போஸ்ட் உரம், மலம், சாணம் மற்றும் பசுந்தாள் உரம் இவைகளாம். அடர் தாவரப் பொருள்கள் எண்ணெய்ப் பிண்ணுக்கு, எலும்புச் சத்துக்கள், வற்றிய குருதி, கொம்புகள், குளம்புகள் முதலியன. வெப்ப மண்டல நிலங்களில் அழிவு பெற்ற தாவரச் சத்து இல்லை. பெருமளவில் உள்ள நிலை தொழு உரம் தாவரச் சத்துள்ளது. கால் நடைகளையும் எருதுகளையும் கொண்ட தொழுவத்தில் இது உண்டாகிறது, இதனுல் நிலத்தில் நீர் தங்கும் வசதி ஏற்பட்டு, நிலப் பரப்பில் காற்று உட்புகுந்து வரவும், அதிலுள்ள சத்துப் பொருள்களைச் சிதைத்துப் பயிர்களுக்குக் கிடைக்கும்வண்ணம் செய்கிறது. இந்த உரத்திஞல் ஏற்படும் நன்மைகளாவன : (i) நீண்டகாலப் பலன் கிடைக்க ஏற்பாடு செய்கிறது ; (ii) இவற்றில் தங்கும் காரணத்தால் அடுத்து வளர்ச்சிக்கு உள்ள பயிர்வகை செழித்தோங்கும் ; (iii) பாதகமான வானிலையிலும் ஈடுபடக் கூடிய தன்மை ஏற்படும்.

1951-ல் நடந்த கால்நடைக் கணக்கெடுப்பின்படி சாணத்தின் மொத்த உற்பத்தி 800 மிலியன் டன் எனப்பட்டது. இவையனைத்தும் அப்படியே நிலத்தில் உரமாக இடப்படுவதில்லை. இதில் பெரும்பகுதி சற்றேறக்குறைய 50 சதவீதம் குடியானவர்களால் எரி பொருளாக உபயோகப்படுத்தப் படுகிறது. இவர்களுக்கு வேறு[1] எரி பொருள் வழி செய்து கொடுத்தால் சாணத்தை எருவாகப் பயனுக்கலாம். ஆயினும் கால்நடைகளின் சிறுநீர் இதில் கணக்கிடப்படவில்லை. அது நைட்ரஜன் சத்துள்ளது. ஆயினும் அதிகமாக வீணுகி வெளியே போகிறது.

பாஸ்பரஸும், நைட்ரஜனும் தாவரப் பொருளுமுள்ள மனிதனது கழிவுப் பொருள்களும் சிறுநீரும் பயனுடையவை. சீனு, ஜப்பான் நாடுகளில் இவை பெருமளவில் மாற்றமின்றி நிலத்தில் பயன்படுத்தப்படுகின்றன. இவற்றில் உள்ள கொடிய கிருமிகள் பயிர் பச்சைகளைக் கெடுப்பதுடன் அவற்றில் உண்டாகும் உணவுப் பண்டங்களையும் நாசமாக்கி, மனிதருக்கு நோயைக் கொடுக்கும். ஆயினும் நம் நாட்டில் இவை கம்போஸ்ட் உரமாக மாற்றப்பட்டு, அதன் பின்னரே நிலங்களுக்கு எருவாகப் போடப்படுகின்றன.

*1. பசுச் சாணத்திஞல் வெண்ணெயை உருக்கி நெய்யாக்கப் பயன்படுத்துகிருர்கள். இதை மாற்ற இயலாது. மக்கள் தொகை செறிவுள்ள உத்தரப் பிரதேசத்தின் சில பகுதிகளில் ஒவ்வொரு அங்குல நிலம்கூட வசமாக்கப்பட்டது. அங்கு விறகு போன்ற இதர எரிபொருள் வளர்ச்சி செய்வது கடினம். ஆக இவ்வாருன பகுதிகளில் பசுச் சாணத்திற்குப் பதில் செயற்கை உரம்தான் இடவேண்டும்.*

நகர்ப் புறங்களிலும் பட்டணங்களிலும், ஆட்களால் எடுக்கப்படும் மலம் ஊர்ப்புறங்களில் எறியப்படும் குப்பைகளுடன் சேர்க்கப்பட்டு, விவசாயிகளுக்கு விற்கப்படுகிறது. அநேக இராச்சிய அரசினர் தங்கள் நகராட்சிகள் தங்கள் பிரதேசங்களில் உள்ள மலத்தை இவ்வாறு விற்பனை செய்தல் வேண்டும் என்று சட்ட மியற்றியுள்ளனர். 3,000 நகரங்களில் உள்ள நகராட்சிகளில் 1,684-ல்தான் கம்போஸ்ட் உரம் தயார் செய்யப்பட்டது. 17 இலட்சம் டன் ஆண்டுதோறும் உற்பத்தியாகியது. இதர பட்டணங்களில்கூடக் கம்போஸ்ட் உரம் ஏற்பாடு செய்யத் திட்டமிடப்பட்டிருக்கிறது; சுமார் 30 இலட்சம் டன்கள் இனிக் கிடைக்கக்கூடும்.

மலம், சாணம் இவற்றை விட மனித, மிருக, சிறுநீர் இவை உரமாகி அதிகப் பலன் கொடுக்கும் வகையில் பயன்படுத்தலாம். இவற்றில் அதிகப்படியான நைட்ரஜன் உள்ளன என்றும், இது சம்பந்தமான அடிப்படை வேலை இந்திய விவசாய ஆராய்ச்சி நிறுவனத்தில் 'அக்ரிஸான்' (Agri San) என்ற சிறுநீர் உற்பத்தி செய்யப்படுகிறது. பஞ்சாபில் உபயோகத்துக்குள்ள சிறுநீர் சேமிப்பு இடங்களில் இவற்றைக் கூட்டி எருவாகப் பயன்படுத்துகிறார்கள். நிலப்பரப்பின் அடியில் சாக்கடை வசதியற்ற ஊர்களில் இம்முறை அமலிலிருக்கிறது.

நாட்டுப்புறங்களில் மலமும் சிறுநீரும் உரமாகப் பயன்படுத்த முடிவதில்லை. ஆகவே கிராமங்களில் பொதுக் கழிப்பிடமும் சிறுநீர்ச் சாலைகளும் அமைத்து இவற்றைப் பயன்படுத்தலாம். அண்மையில் செய்த ஆராய்ச்சியில் மனித மிருகக் கழிவுப் பொருள்களைப் புளிக்கவைத்தால் (fermentation) அதிலிருந்து எரிவாயு உண்டாக்கலாம். அதினின்று நைட்ரஜன் மற்றும் தாவரப் பொருள் வீணாகாது உரமாகப் பயன்படுத்தலாம். இம்முறையால் சாணத்தை எரி பொருளாக உபயோகிப்பது நிறுத்தப்படும். இதனால் தாவரப்பொருள் உரம் அதிகமாகப் பயன்படலாம். கிராமத்தில் உள்ள பசுச் சாணத்தை உரமாகப் பயனாக்க அப்பகுதிகளில் காட்டிலாக்காவினாலும் பஞ்சாயத்துக் குழுவினாலும் மரங்களை வளர்த்து விறகாக உபயோகிக்க ஏற்பாடு செய்ய வேண்டும். காட்டு வளர்ச்சியின் அடிப்படைத் தத்துவம் விறகு பெற வழி உண்டாகுவதே. விறகு அனுப்புதலில் ரெயில்வே கட்டணத்தில் சலுகை காட்டவேண்டும். பீன்ஸ், பட்டாணி போன்ற தாவர வகைகளை வளர்த்து அவற்றை மண்ணில் புதைத்து நிலத்திற்கு உரமாகப்போடுவார்கள். பெருநிலக்கிழார் அதிக அளவில் பசுந்தாள் உரமிட்டு நிலத்தின் வளத்தைச் சரிப்படுத்துகிறார்கள்.

சிறிய நிலங்களில் கூட நிலத்தில் பயிர் மாற்ற முறை (rotation of crop)யை அனுசரித்துப் பருப்புவகைகளைப் பயிரிட்டுப் பாஸ்பேட் (phosphate) உரத்தையும்கூடச் சேர்த்து நிலத்தை உழுதால் நைட்ரஜன் (nitrogen) சத்து அதிகரிக்கும். இப் பயிர்களால் நாட்டின் உணவுப் பொருளில் புரதப் பொருள் (proteins) சத்துக் கூடுதலாகும். அத் தாவரங்களின் பசுஞ் செடிப் பகுதிகள், வைக்கோல் முதலியன கால் நடைகளுக்கு ஏற்ற உணவாகவும் அமையும். உண்ண அருகதையற்ற எண்ணெய்ப் பிண்ணாக்குகளை நிலத்திற்கு உரமாக இடுவது இலாபகரமானது. குருதி உணவு (blood-meal), கொம்புகள், குளம்புகள், இறைச்சி உணவு (meat meal) இவைகள் கால்நடை வெட்டுமிடங்களிலிருந்து (slaughter-houses) கழிக்கப்படுகின்றன. அவற்றை நிலங்களில் எருவாக இட்டு, நிலத்தின் வளத்தை அதிகரிக்கலாம். கால்நடை வெட்டுமிடங்களிலிருந்து 10,000 டன்கள் வறண்ட குருதியைச் சேகரிக்கலாம் என்று கணக்கிடப்பட்டுள்ளது. கால்நடை வெட்டுமிடங்களிலிருந்து கழிக்கப்படும் பொருள்களான தோல் துண்டுகள், கழிக்கப்பட்ட இறைச்சி, இவற்றை ஒன்ருக்கிப் பதம் செய்து 'டாங்கேஜ்' (tankage) என்ற வர்த்தகப் பெயரில் விலையாக்கப்படுகிறது. குருதி சேமிப்பு, டாங்கேஜ் இவற்றைச்சீரான முறைகளில் தயார் செய்தால் நம் நாட்டிலுள்ள நகராட்சிகளுக்கு அதிகப்படி வருமானம் வரக்கூடும். பழ பூச்செடிகளின் வளர்ச்சிகளுக்கு இவை நல்ல எருவாகும். இதை வியாபாரம் செய்தால் மிக்க பலனளிக்கும் என்பதில் ஐயம் இல்லை.

எலும்புச் சத்தில் (bone-meal) பாஸ்பேட் (phosphate) நைட்ரஜன் (nitrogen) தாவரப் பொருள் அடங்கியுள்ளன. எலும்புகளைச் சேகரித்து 75 சதவீதம் வெளி நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யப்படுவதால் மிகுதி உள்ள எலும்பே நம் நாட்டில் உரமாகப் பயனுக்கப்படுகிறது. இதன் ஏற்றுமதியைத் தடை செய்ய வேண்டுமானுல் எலும்பிலிருந்து பிரித்துப் பல உப தயாரிப்புக்களான வஜ்ஜிரம் (glue), ஜிலடீன் (gelatine) இவற்றை இந்தியாவில் உண்டாக்க ஏற்பாடு செய்ய வேண்டும். நைட்ரஜன் (nitrogen) சம்பந்தப்பட்ட உரங்களில் ஒப்பற்றவை பாஸ்பேட் உரமும், அமோனியம் சல்பேட் (ammonium sulphate) உரமும் சூபர் பாஸ்பேட் உரமும் (super phosphate) ஆகும். அவைகள் நடப்பில் உபயோகத்திலுள்ளன. அமோனியம் சல்பேட் உரம் தயாரிக்க ஜிப்ஸம் (gypsum) பெருமளவில் தேவைப்படுகிறது. ஜிப்சம் வெகு தொலைவிலிருந்து கொண்டுவர வேண்டிய ஏற்படுகிறது. சூப்பர் பாஸ்பேட்டுக்களைத் தயாரிக்க இறக்குமதியாகிறக்கல் பாஸ்பேட், கந்தகம், கந்தகக் காடி (sulphuric acid) இவை

களைப் பயன்படுத்த வேண்டும். இந்திய யூனியனில் போதிய அளவு கந்தகமின்மையாலும், உலகனைத்தும் அது கிடைப்பது அரிதானதாலும், சூப்பர் பாஸ்பேட்டுக்கள் தயாரிப்பது கடினம் எனலாம். ஆக, இந்நாட்டில் அமோனியம் சல்பேட் உரம் உற்பத்தி செய்வதற்கான வழிகளை ஆராய வேண்டும். தொடர்ந்து இரசாயன உரங்களை அடுத்தடுத்துப் பயன்படுத்துவதாலும், பெரிய அளவில் தாவர உரத்தை நிலத்தில் போடாத காரணத் தாலும், நிலத்தின் வளம் குறைவதோடல்லாது, உற்பத்தி நாளடைவில் சுருங்கி விடுகிறது என்பது பொதுவாகத் தெளிந் ததே. இப்போது நோக்கிற் தேற்ப அமோனியம் சல்பேட் உரத் துடன் பெருமளவில் தாவர எருச்சத்தினைக் கலந்து, நிலைக்கேற்ப உபயோகிக்கச் செய்தல் இன்றியமையாதது எனலாம். இன்று, உரத்திற்கு ஏற்பட்ட அளவு கடந்த தேவைகளினின்று இந் நாட்டு உழவர் அனைவரும் உரத்தின் இன்றியமையாத தன்மையை அறிந்துள்ளனர் என்பதற்கு வேறு சான்றும் வேண்டுமோ? அண்மையில் இவ் வுரங்களின் விலை மிகவும் அதிகரித்தது. இவ் விலையேற்றத்தின் காரணத்தை ஆராயப் புகின், உணவுப் பயிர் களுக்கு இடவேண்டிய உரம் வர்த்தகப் பயிர்களுக்குப் பெரு மளவில் இடப்பட்டதே எனக் கொள்ளலாம். உணவுப் பயிர் வேளாண்மை செய்பவர்களுடைய வாங்கும் திறனுக்குள், உரங் களின் விலை அமைந்திருந்தால்தான் பெருமளவில் உணவுப் பயிர் களுக்கு உரம் இட முடியும்.

3. **கால்நடைகள் :** இந்திய விவசாயிக்குக் கால்நடைகள் எவ்வளவு இன்றியமையாதவை என்பதைப் பற்றி, சர் மால்காம் டார்லிங் (Sir Malcolm Darling)கின் கூற்றை இங்கு விவரிப் போம்: 'கால்நடைகளின்றி உழவனுடைய நிலங்கள் உழவின்றிக் கிடக்கின்றன. கிடங்கும் பண்டக அறைகளும் பொருளின்றி உள்ளன. உணவும் பானமும் ருசியிழந்திருக்கும்; குறிப்பாகச் சைவ உணவைக் கொள்வோர் வாழ்கின்ற நாட்டில் பால், வெண் ணெய், நெய்[1] இவைகள் இல்லையென்றால் அதைவிட அவலமான நிலை வேறொன்றும் இல்லை. இந்தியாவில் நடைமுறையில் இயக் கும் சக்தியையும் விவசாயத்திற்கான நில, உரத்தையும் கால்நடை களைக் கொண்டே பெறுகிறோம். கிராமங்களில் உள்ள முக்கிய தொழில்களில் கட்டைவண்டி ஓட்டுதலும் ஒன்றாகக் கருதப் படுகிறது. ஆகையால் வண்டியை இழுக்க வல்ல வன்மையுள்ள கால்நடைகள் தேவை என்பதில் ஐயமில்லை. பால் பண்ணைத் தொழில் விவசாயத்துடன் தொடர்பு கொள்ளுவதற்கான வாய்ப்புக்

1. தி பஞ்சாப் பெசன்ட் இன் ப்ராஸ்பெரிடி அண்ட் டெட். (The Punjab peasant in prosperity and debt), பக். 30

கள் பல உள. இந்தியாவில் எண்ணில்லாத கால்நடைகள் உள்ளன. ஆயினும் அவை போதிய உணவற்றும் மெலிந்தும் இரங்கத் தக்க நிலையில் காணப்படுகின்றன. இதனுல் இந்தியாவின் கால்நடை வளம் கடுமையான நிலையில் பற்ருக் குறையாக உள்ளதெனலாம். சற்றேறக்குறைய இந் நாட்டுக் கால்நடைகளில் 10 சதவீதம் பணிக்கொவ்வாததும், நேரிடை இலாப மற்றதுமாயுள்ளன. எகிப்து[1] நாட்டில் மூன்று பிராணிகள் செய்யும் பணி இந்தியாவில் 22 காளைகளைக்கொண்டு செய்யப்படுகிறது. 1928 ஆம் ஆண்டில் வந்த விவசாயக் குழு (The Agricultural Commission)வினர் இந் நாட்டுக் கால்நடைக் கணக்கெடுப்பின் புள்ளி விவரம் மிகவும் தீய சமூக வட்டாரத்தில் அமைகிறது என்று எடுத்துக் கூறியுள்ளார்கள். ஒவ்வொரு மாவட்டத்திலும் உள்ள எருதுகளின் எண்ணிக்கை ஆங்காங்கு ஏற்படும் தேவைகளைப் பொறுத்துக் கட்டுப்படுத்தப்பட்டு அமைகிறது. மிதமிஞ்சிய அளவில் கால்நடைகளைப் பாதுகாத்தலால் அவற்றைப் பராமரிக்கும் நிலை படுமோசமாகிவிடுகிறது. பசுக்கள் வலிமையற்றும் பயனற்றும் இருந்தன. அவற்றின் கன்றுகளோ குள்ளமாகவும் வளர்ச்சி குன்றியும் எவ்விதப் பணிக்கும் உபயோகமின்றியும் இருந்தன. விவசாயிகள் தங்கள் உழவுத் தொழிலுக்கு எருதுகள் தேவைப்படுதலால் கால்நடையை அதிகப்படியாக வளர்க்க முன்வந்தனர். இவற்றின் எண்ணிக்கை அதிகப்படுதலினுலும், வேளாண்மைக்குரிய நிலம் கூடுவதாலும் மேய்ச்சல் வெளிப் பிரதேச மனைத்தும் உழவுக்கு எடுத்துக்கொள்ளப்பட்டு, அதன் காரணத்தால் பசு முதலிய கால்நடைக்குப் போதிய உணவின்றி, அவை நாளடைவில் ஒரு செயலுக்கும் உதவியின்றி வீணுகி, முடிவில் வங்காளத்தில்[2] உழவிற்கென இதர மாகாணங்களிலிருந்து ஆண் எருமைகளைக் கொண்டுவரும் முறையை எங்கும் கையாள நேரிடுகிறது. இதை நீக்க நம் நாட்டுக் கால்நடை வளத்தைப் பலனளிக்கும் வகையில் செய்ய, சென்னையிலிருந்த கால்நடை மருத்துவப் பணியாளர் திரு. எச். ஜே. ஹர்லி (H. J. Hurley) சிலவற்றைக் குறிப்பிடுகிருர்கள். தாய்ப் பசு கன்று ஈனுவதற்கு ஆறு வாரங்கள் முன்னும் கன்று ஈன்ற பின்னர் இரண்டு மாதங்கள் வரையிலும் அதற்கு அப்படி வேலை கொடுத்து, அதை வற்புறுத்தக் கூடாதென்ருர். இவ்வாருன முறைகளைக் கையாளுவதால் பசுக்கள் திடமாகவும் வன்மையுள்ளனவாகவும் அதிக அளவில் பால் கொடுக்கக் கூடியனவாகவும் இருக்குமெனலாம். இவை பார்வையிலும் கண்காணிப்பிலும் இருப்பதால் இவற்றின் வளர்ப்பு முறை

1. டாக். எஸ். டட்டா, ஜெனிடிக்ஸ் அண்ட் அனிமல் ஹஸ்பண்டரி—ரூரல் இண்டியா, 'Genetics and Animal Husbandry', ஜனவரி 1952.

2. விவசாயக் குழுவினரின் அறிக்கை, பத்தி, 88.

சரிவர இருக்குமெனலாம்.[1] பசுக்களை மிகவும் கண்ணியமாக வளர்ப்பதற்குப் பதிலாக பட்டினி போட்டு எருதுகளைவிட அதிகப் படியாக வேலை செய்ய வைக்கின்றோம்.[2]

இந்தியாவிலுள்ள விவசாயி தன் கால்நடைகளுக்கு வேண்டிய வைக்கோல் கிடைக்க ஒரு பொழுதும் முயற்சி செய்வதில்லை. இந் நாட்டு மக்கள் அறிந்துகொள்ள வேண்டிய பாடம் என்னவெனில் கால்நடைத் தீவனப் பயிர்களை உற்பத்தி செய்வது பெரிதன்று;அவ்வாறு உற்பத்தி செய்ததைச் சுகாதார முறையில் சேமித்து வைத்துச் சேதாரமின்றிச் சிக்கனமாகப் பயன்படுத்தலே மேல் என்று திரு. கீடிஞ்ச் (Keatinge) கூறுகிருர். குறிப்பாக, 'கால்நடைத் தீவனம் கிடைப்பது அரிதான காலத்தில், இந் நாட்டுக் காடுகளினின்று மேற்படி பண்டங்கள் தொடர்ந்து போதிய அளவு கிடைக்குமா வென்பதை நன்கு ஆய்ந்தோய்ந்து பார்க்கவேண்டும். வைக்கோல் போன்ற தீவனப் பொருள்களை ஒருக்காலும் வீணுக்கக் கூடாது. அவற்றைக் குழிகளில் இட்டுச் சேமித்து வைக்க வேண்டும். தனித்தனியே தீவனத்தைக் கால்நடைகளுக்கு இடாது, தொழுவத்திலேயே அவைகள் உண்ணும்படிச் செய்வது சிறந்த முறை எனக் கருதப்படுகின்றது. இந் நாட்டுத் தீவன உணவுப்பயிர் இருப்பு மிகவும் குறைவாக இருப்பதனுலும், தேவையை முழுவதும் ஈடுகட்டப் போதிய இருப்பு இல்லாததாலும் முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் 160 கோசதன் (கால்நடைப் பராமரிப்பு நிலையம்)களை ஒரு கோடி ரூபாய்ச் செலவில் அமைப்பதென்றும், அதிகப்படியாக மேய்ச்சல் நிலங்கள் உள்ள இடங்களை அடுத்து வேலை செய்ய அருகதையற்ற கால்நடைகளையும், முதிர்ந்த கால்நடைகளையும் பராமரிப்பதென்றும் முடிவுகட்டியுள்ளனர். இம் முறைகளின் கீழ் எவ்வாறு இந் நாட்டின் தீவனப் பொருள்களின் தேவை இருப்புக்குத் தக்கவாறு ஈடுகட்டும் என்று விளங்கவில்லை.

எவ்வகையினும் பயனற்ற பிராணிகளை வலியேற்படாமல் கொன்று விடுவதே நன்முறை எனலாம். பொதுமக்களின் கருத்து இதற்கு வேறுபாடாக அமைந்திருப்பின் அவர்களுக்கு இத்

1. சென்னை கால்நடை மருத்துவ இலாகா துண்டுப் பிரசுரம் எண் 34 (1946).

2. இந்திய மக்கள் தொகையும் கால்நடை எண்ணிக்கையும் கிட்டத்தட்ட ஒரே அமைப்பில் உள்ளன. இவற்றைப் புகழ இயலாததுபோல மனக் கிலேசத்தைத் தரக்கூடிய நிலையில் உள்ளன எனின் மிகையன்று. அவை எண்ணிக்கையில் முற்போக்காகவும் உழைப்பு வன்மையில் பிற்போக்காகவும் இருக்கின்றன. ஆண்களின் எண்ணிகை அதிகம். பெண்கள் கவனிப்பாரற்று நசித்துப் போகின்றனர். வன்மையான சந்ததி முறைகளைக் கையாளாது அளவின்றித் தவறான சந்ததி வளர்ச்சியில் ஈடுபடுதல் வழக்கமாகிவிட்டது எனலாம். (வன்மையற்ற காளைகளை நோயால் வாடிய பசுக்களுடன் சேரும்படி வைக்கிருர்கள், ஓ. எச். கே. ஸ்பேட், இந்தியா-பாகிஸ்தான்—ஏ. ஜெனரல் அண்ட் ரீஜனல் ஜியாக்ரபி, 1954 பக். 229).

துறையில் தக்க விளக்கங்கள் கொடுத்து, மனமாற்றம் தோன்றும் வகையில் புரியவைத்தல் இன்றியமையாதது எனலாம்.

3 கோடி ரூபாய்ச் செலவில் கிராமக் கால்நடை அபிவிருத்தித் திட்டமொன்றை உருவாக்கி, அதன் மூலம் நாட்டின் கால்நடை வளர்ச்சியை மேம்பாடான முறையில் நடத்த ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. மூன்றல்லது நான்கு கிராமங்களமைந்துள்ள 600 கேந்திரங்களைத் திட்டமிட்டு, அவற்றுள் 500 கறவைப் பசுக்களையும் நாட்டின் பல்வேறு பகுதிகளிலிருந்து கொண்டுவரத் திட்டமிடப்பட்டுள்ளது. வலிமையற்றும் நோய்வாய்ப்பட்டும் உள்ள காளைகளின் பொலியும் தன்மையை அறுவை முறையில் விதையை நீக்கி (castrated) விட முயலுகின்றனர். இதனால் வளமுள்ள கால்நடை வளர்ச்சியேற்படும் அளவில் நாம் முன்னேற்றம் காணலாம். தேர்ந்தெடுக்கப்பட்ட ஜாதிக் காளைகளையும் உயர்தர வகைக் கறவைகளையும் கொண்டும் மேம்பாடான கால்நடை இனங்களைத் தோற்றுவிக்கலாம். இவை சம்பந்தமான ஆவணங்கள் நடப்புத் தகவலனைத்தும் கொண்டவகையில் எழுதப்பெறும். இவ் வட்டாரங்களில் செயற்கைக் கருத்தரிப்புத் தொழில் நுட்பங்களமைத்துவரத் திட்டமிடப்பட்டிருக்கிறது. உள்ளூர்த் தீவன வசதியைப் பெருக்க முயற்சிகள் எடுக்கப்படுகின்றன. சமுதாயத் திட்டப் பகுதிகளில் (13ஆம் எண்ணுள்ள விவரத்தைக் காண்க.) பருப்பு வகைப் பயிர்களான பெர்ஸீம் (berseem) லியுஸர்ன் (lucerne) பசுவிற்கு இடப்படும் பட்டாணி, நிலப் பட்டாணி இவைகளைப் பயிரிட ஊக்கமளிக்கப்படும். மாற்றுப்பயிர் முறையின்கீழ் நிலத்தின் வளத்தை அதிகரிக்க மேய்ச்சலுக்கான புற்றரைகள் வளர்த்தல் இன்றியமையாதது.

கால்நடை மருத்துவச் சாலைகளும், மருந்தகங்களும் 2,000 லிருந்து 2,600க்கு அதிகரிக்கத் திட்டத்தில் வசதி செய்யப் பெறும். கோமாரியை ஒழித்துக்கட்ட மத்திய அரசினரின் திட்டமும் இதில் கூட்டப்பட்டுள்ளது.

**4. கிளைத் தொழில்கள் :** பருவப் பயிர்த் தொழிலாக அமைந்த காரணத்தால் கிராமங்களில் விவசாயத் தொழிலாளர்களின் உழைப்பு வீணாகிறது. 1921ஆம் ஆண்டின் மக்கள்தொகை அறிக்கையில், எடுத்துக்காட்டாக உத்தரப் பிரதேசத்தில் விவசாயிகள் இரு நடவுகள், அறுவடைகள், மழையின்போது களையெடுத்தல். குளிர்காலத்தில் மும்முறை நீர் பாய்ச்சல் இவைகளில் சுருங்கிய காலம்தான் செலவிடுகின்றனர். இதர காலம் வேலையின்றிக் காலம் கழிக்கின்றனர். உ. பி. பாங்கிங் விசாரணைக்

குழுவினர் எடுத்த கணக்கெடுப்பில் விவசாயத்தில் ஈடுபடுபவர் ஆண்டில் 200 நாட்களே வேலை செய்கின்றனர். தென்னிந்தியா வில் 12 மாதங்களில் 5 மாதங்கள் வரையிலும்தான் வேளாண்மைத் தொழில் உள்ளது எனலாம். வங்காளத்தில் விவசாயி நெல்லை மட்டும் பயிரிடுவதனுல் மூன்று மாதங்கள்மட்டும்தான் வேலை உள்ளது. இதர 9 மாதங்களுக்கு அவன் படியாளாகிப் பணியின்றி உள்ளான். அவன் நெல்லுடன் சணலையும் பயிரிட்டானுகில் இன்னும் 6 வாரங்கள் வேலை கூடுதலாக அமையும். ஆண்டு முழுவதும் வேலையில்லை. பம்பாய் தக்காணத்தில் 180 முதல் 190 நாட்கள் விவசாய வேலையும், பஞ்சாபில் 150 நாட்கள் விவசாய வேலையும் உள்ளன. விவசாயமற்ற காலங்களில் தொழிற்சாலை களுள்ள பட்டணங்களில் வேலைக்குப் போகிருன். அரசினரின் மராமத்து இலாகாவில் கூலிவேலை செய்யப் புறப்படுகிருன். இல்லை யெனில் தன் கிராமத்திலேயே கட்டை வண்டி ஓட்டி வாடகை பெறுகிருன். ஆண்டு முழுமைக்கும் விவசாயிக்கு வேலை கண்டு பிடிப்பது என்பது பெரும் பிரச்சினைதான். அநேக முறைகளில் விவசாயிக்குப் பகுதிவேலை கொடுப்பதைப் பற்றிய கருத்துரைகள் பல உள்ளன. எடுத்துக்காட்டாகப் பால்பண்ணை முறையினுல் பொழுதுபோக்கு நேரங்களில் தக்க தொழிலில் ஈடுபடுகிருன்; அது ஆதாயமாகவே அமைகிறது எனலாம். ஆயினும் பராமரிப்புக் குரிய பிராணிகள் சீராயுள்ளனவா என்றும், விஞ்ஞான முறையில் வளர்த்து வரப்பட்டனவா என்றும் கண்டுகொள்ள வேண்டியது இன்றியமையாததாகும். கால்நடைகளைப் பெருக்குவதிலும் பரா மரிப்பதிலும் கீழ்க்கண்ட இடையூறுகள் உள: (1) கிராம இல்லங் களில் மனிதருடன் இப் பிராணிகளும் ஒன்ருக வாழ்கின்றன. (2) போதிய மேய்ச்சல் நிலம் அமையாமலும், தீவனப் பொருள்கள் கிடைக்காமலும் உள்ள நிலை. முயற்சி செய்து வளம்பெற்ற தன்மையுள்ள கிராமத் தொழில்களைப் பெரிய அளவில் பட்டியல் போட்டுக் கணக்கிட்டுக் கூறலாம். ஆயினும் வட்டாரச் சூழ் நிலைக்கு ஏற்றவண்ணம் அமையுமா என்பது தனியாகக் கவனிக்க வேண்டும். எந்தச் சூழ்நிலைக்கு ஏற்ப எந்தத் தொழில் நடத்த லாம் என்பதற்கான சர்வேக்களும் ஆராய்ச்சிகளும் நடத்த வேண்டும். தட்ப வெப்ப நிலை, சந்தைக்கு அண்மை, மதக்கோட் பாடு இவைகளையும் கருதித்தான் எத் தொழில் எவ் வாய்ப்புடன் எங்கே அமையலாம் என முடிவு கட்டலாம். பஞ்ச விசாரணைக் குழு (Famine Enquiry Commission) விவசாயத்தொழில் (Agro-Industry) என்ற ஒரு முறையைப் பரிந்துரைத்துள்ளனர். விவ சாயத் தொழிலேற்று எடுத்து நடத்தும் ஒரு நிறுவனம் கிராமக் கைத்தொழிலைப் பற்றியது அன்று எனலாம். இதைக் கிராம் அல்லது நாட்டுப்புறங்களில்தான் வெகு எளிதில் நிறுவ முடியும்.

பெரும் பண்ணையில் உண்டான பொருள்களைப் பதப்படுத்தப் பெரிய தொழிற்சாலைகள் ஏற்பட்டுள்ளன. இவற்றின் கீழ்க் கூட்டுறவுச் சங்கங்களும் சிறிய உற்பத்தியாளர்களின் வகையும் அமைகின்றன. நிலத்தில் வேளாண்மை புரிபவர் வேலையின்றி முடங்கிக் கிடக்கும் பருவங்களில் கிராமத்தைச் செப்பனிடும் வேலைகளை மேற்கொள்ளலாம். கிராமத்திலுள்ள மக்களுக்குக் கைராட்டினத்தால் நூல் நூற்றலே மிகவும் மேம்பாடான தொழில் என்று காந்தியடிகள் தீவிரமாக எண்ணினார். கதர் உற்பத்தி மற்றும் இதர கிராமத் தொழில்களைப் பற்றி இன்னொரு அதிகாரத்தில் விளக்குவோம்.

நிலத்தில் வேலையில்லாத காலங்களில் சிலர் தங்கள் வண்டிகளை வாடகைக்கு ஓட்டிச் செல்வார்கள். இதை ஒரு பகுதிநேரப் பணியணியாகக் கருதலாம். நமது நாட்டுப் புறங்களில் சற்றேறக் குறைய $8\frac{1}{2}$ மிலியன் மாட்டு வண்டிகள் உள்ளன. நல்வழியான நெடுஞ்சாலை உள்ள விடங்களில் இவ் வாடகை வண்டி ஓட்டுபவர்கள் பொதியேற்றிக்கொண்டு 25 மைல்கள் வரையிலும் செல்வர். இதர பகுதிகளில் மாட்டு வண்டியே உயரிய போக்குவரத்துச் சாதனம் எனலாம். ஒரு நகரத்தை யடுத்த கிராமத்தில் உள்ள வண்டியானால் அதனால் வேறு வருமானம் கூடுதலாகக் கிடைக்கக் கூடும். நகரத்திற்கு வெகு தொலைவில் உள்ள கிராமமானாலும், அதிகப்படியான சாலைகள் இல்லாமல் இருப்பினும் அம்மாதிரி கிராமங்களில் உள்ள வாடகை வண்டிகளுக்குப் போதிய வருமானம் கிடைப்பதில்லை.

5. **விவசாயக் கருவிகளும் இயந்திரங்களும் :** ஒரு சாதாரண விவசாயி நடைமுறையில் உபயோகிக்கும் கருவிகளுக்குத் தேவை மிகவும் உண்டு. அவை மிகவும் இலேசானவை ; எளிதில் எடுத்துச் செல்லப்படுபவை ; விலையும் குறைவு ; நிலங்கள் வெவ்வேறு இடங்களில் சிதறியுள்ள காரணத்தால் இம்மாதிரியான கருவிகள் மிகவும் பயனுள்ளவை. எக் காலமும் பயன்படும் எருதுகளைப் பெற்ற விவசாயி இந்தக் கருவிகளை உடனுக்குடன் பழுது பார்க்கிறான். ஆயினும் இவைகளை இன்னும் பயனுள்ளனவாக்க முயலலாம். விவசாய இலாக்காக்கள் இப் பிரச்சினையை நன்கு கவனித்து வருகின்றன. இரும்புக் கலப்பை, கரும்பு பிழியும் உருளைகள், சிறிய பம்புச் செட்டுகள், நீர் தூக்கிகள் (water-lifts), பரம்படிக்கும் சட்டம், களைக் கொட்டுகள் (hoe), தீவனம் வெட்டும் கருவிகள், விதையிடத் துளைபோடும் கருவி (drills) இவைகளை மேலும் செம்மையாக்கியுள்ளனர். மொத்தத்தில் விவசாயப் பொறியியலையும் நாட்டுப்புறக் கருவிகளையும் சீர்திருத்தம் செய்யாது விட்டு

விட்டனர். இந்திய விவசாய ஆராய்ச்சி நிறுவனத்தில் விவசாயப் பொறியியலையும் 1945-ல் இணைத்ததால் இனி வருங்காலத்தில் இத் துறையில் தக்க முயற்சிகள் செய்யலாம் என எதிர்பார்க்கலாம். இந்தப் பொருள் பற்றித் திட்டக் கமிஷனின் பரிந்துரைகளாவன: (i) நாட்டு விவசாயக் கருவிகளையும் சாதனங்களையும் பற்றி முழு நேர ஆராய்ச்சி நடத்த ஓர் அதிகாரியை விவசாயப் பொறியியல் பகுதியில் நியமிக்க வேண்டும்; (ii) இந்திய விவசாய ஆராய்ச்சி நிறுவனத்திலும் அவ்வாறே முழுநேர அதிகாரி ஒருவர் நியமனம் செய்யப்பட வேண்டும். மத்திய இராச்சிய அரசாங்கத்தில் இவ் வாறு நியமிக்கப்பட்ட ஒரு பகுதிக்கு ஆராய்ச்சிகளையும் பரிசோதனை களையும் நடத்தப் போதிய வசதிகள் ஏற்படவேண்டும். மத்திய அரசின் நியமனம் பெற்ற அதிகாரி நாட்டுக் கருவிகளையும் சாதனங்களையும் ஆராய்வது போல அயல்நாட்டிலிருந்து இறக்கு மதி செய்யும் கருவிகளையும் நம் நாட்டின் விவசாயத்தை ஒட்டி ஆராய்ச்சி நடத்த வேண்டும். நாட்டின் பல்வேறு பகுதிகளில் நடக்கும் ஆராய்ச்சிகளை ஒருங்கிணைத்து முடிவில் வழியாக்கப்பட்ட கருவிகள் இன்னவையென எடுத்துரைக்க வேண்டும். வர்த்தக முறையில் உற்பத்திக்கான தகவல்களுக்கு இவ் வாராய்ச்சியின் முடிவுகளைத் தெரிவிப்பது அவரது கடமை; (iii) நிலம், மண், பயிர் இவைகளுக்கேற்ப, கருவிகள் அமைக்க வேண்டியிருப்பதால் இராச்சியங்களுக்கு ஏற்றவாறு ஆராய்ச்சிகள் செய்து முடிவு காணுதல் அவசியம். இந்திய விவசாய ஆராய்ச்சிக் குழுவினர் ஒவ்வொரு பிரதேசத்திலும் வட்டாரக் குழு ஒன்றை அமைத்து, அதில் தொழில் நுட்பவல்லுநர்கள், விவரம் அறிந்த வேளாளர், இராச்சிய அரசினரின் அலுவலர், பொறி செய் உற்பத்தியாளர்; மற்றும் விற்பனையாளர் இவர்களை உறுப்பினராக அமைப்பார்கள்; (iv) இராச்சிய அரசினரால் திட்ட முறைகள் வகுக்கப்பட்டு, வட்டாரக் குழுவினரால் அனுமதிக்கப்பட்டு, இந்திய விவசாய ஆராய்ச்சி நிறுவனத்தால் பணவசதி யளிக்கப்பட்டு, இவற்றை முதல் செயலாகக் கொள்ளவேண்டும். எல்லா இராச்சியங்களிலும் இவை சம்பந்தமான ஆராய்ச்சிகள் நடத்தப் போதிய தொழில் நுட்ப விவரங்களை அவ்வப்போது தெரிவிப்பார்கள்; (v) ஒவ்வோர் இராச்சியத்திலும் நியமிக்கப்படும் தனி அதிகாரி ஆராய்ச்சியைக் கவனிப்பதோடு சீர்திருத்தப்பட்ட கருவிகளை மக்கள் அறியும்படிச் செய்யும் கடினமான வேலையும், அக் கருவி விற்பனையாவதற்கு ஏற்பாடு செய்தலும் வேண்டும். இது அந்த அதிகாரியின் பொறுப்பு எனலாம்; (vi) இவ்விதமான அமைப்புக்களையும் மாதிரிகளை (model)யும் கட்டுகிறவர்களுக்கு மாதிரி போலக் காட்டி வர்த்தகத்தைப் பெருக்க உதவவேண்டும். சிறுகட்டு வேலை (fabrication) நிறுவனங்களை அமைத்து அவற்றில் கிராமக்

கைவினைஞர்களுக்கு வேலை கொடுத்து அவ்வாறான உற்பத்திப் பொருள்கள் சரியான முறையில் உள்ளனவா என்று இராச்சிய அதிகாரிகள் பரிசீலனை செய்த பின்னர்தான் அவற்றை வாங்க விவசாயிகளுக்கு ஆலோசனை கூறலாம். விவசாயக் கருவிகள், சாதனங்கள் இவைகளைப் பழுதுபார்க்கவும் புதுப்பிக்கவும் ஏற்ற வசதியான இடங்கள் இங்கில்லை உள்ளூர்த் தச்சருக்கும் கொல்லருக்கும் தக்க பயிற்சி இன்மையே இதன் அடிப்படைக் காரணம். அவர்களுக்குக் குறைந்த கால அளவில் தக்க இடங்களில் பயிற்சி அளிப்பது இன்றியமையாதது. நியாயமான விலையிலும் குறைந்த ஊதியத்திலும் கட்டுவேலை செய்தும், பழையனவற்றைப் புதுப்பித்தும் மற்றும் உற்பத்தி வேலைகள் செய்யவும் கூட்டுறவு நிறுவனங்களை ஏற்படுத்துவது அவசியம். மத்திய, இராச்சிய அரசினரால் நிறுவப்பட்ட யந்திரக் கலப்பை நிலையங்களிலும் நாட்டு விவசாயக் கருவிகளையும் சாதனங்களையும் செப்பனிட வழியமைத்தல் வேண்டும். இவ்விடங்களிலும் கூட்டுறவு நிறுவனங்களிலும் இவற்றிற்கான புதுப்பிக்கப்பட வேண்டிய கருவிகளின் பகுதிகள் கைவசம் (இருப்பில்) வைத்துக் கொள்ள வேண்டும்; (vii) சில விவசாய இயக்க முறைகளுக்கு இயந்திரக் கலப்பைதான் நலம் எனக் கருதி வருகிறோம். அவையாவன : (அ) களைபிடுங்க இயலாதவையாகவும் கரம்பாகவும் உள்ள நிலங்களை உழலாம் ; (ஆ) அதிக மக்கள் தொகை இல்லாத பகுதிகளில் தொழிலாளர் கிடைப்பது அருமையாதலால் இயந்திரக் கலப்பையைப் பயன்படுத்த வேண்டியேற்படும் ; (இ) நீர்ப்பாசன வசதியும், நிலப் பாதுகாப்பிற்காகக் கான்ட்டூர் முறையில் (contour) வரப்பு எழுப்பவும், உயர்மாடி அமைக்கவும் (terracing) சிறுகுன்று போன்று கட்ட (ridging) வும் இன்னும் பல வகைகளில் உதவியாக உள்ளது. 98 மில்லியன் ஏக்கர் பயனற்ற நிலம் எனக் கருதப்படுவதில் உடனே அடுத்து 11 மிலியன் ஏக்கர் நிலங்களைச் சீர்படுத்திப் பயிரிடத் தக்க முறையில் செய்ய முடியும் என நம்பப்படுகிறது. திட்டத்தில் 2·62 மிலியன் ஏக்கர் நிலங்களை மீட்சி செய்ய இயலும் எனக் குறிப்பிட்டுள்ளனர். நாட்டின் மக்கள் தொகை அதிகமாக இருப்பினும் இராஜஸ்தான், மத்திய பாரத், விந்தியப் பிரதேசம் இவைகளில் மக்களின் எண்ணிக்கை மிகக் குறைவு. ஆதலால் இங்கு விவசாயப் பணிக்கேற்ப வேளாளர் கிடைப்பது கடினம். ஆகவே இப் பகுதிகளில் இயந்திரக் கலப்பை அமைப்பது இன்றியமையாதது. பெரிய பகுதிகளில் இராச்சியப் பண்ணைகளையும், கூட்டுறவுப் பண்ணைகளையும் நிறுவி நிலமற்றவர்களை அவற்றில் பணிபுரிய வைக்க இயந்திரக் கலப்பை தேவைப்படுகிறது. இதர பகுதிகளில் இயந்திரக் கலப்பைகளைப் பயன்படுத்துவதால் பெருவாரியான

மக்களுக்குத் தொழில் இல்லாது போகும் பிரச்சினையையும் கவனிக்கவேண்டும். சிறிய நிலப் பகுதிகள் அமைந்ததாலும், விவசாயம் நீங்கலாக வேறு வேலைகளுக்கான வாய்ப்புகள் இன்மையாலும், எரி எண்ணெய்கள், இரும்பு, எஃகு இவை இல்லாத காரணங்களாலும் நம் நாட்டில் இயந்திரக் கலப்பையைப் பெருமளவில் பயன்படுத்த இயலாமல் உள்ளோம். ஆதலால் நீண்ட காலம் வரை இந்திய விவசாயம் பிராணிகளின் உதவியைக் கொண்டுதான் நடைபெற வேண்டியிருக்கிறது.

6. **தாவரப் பாதுகாப்பு முறையும், தொத்து நோய் பரவியவைகளை ஒதுக்கி வைத்தலும் சேமிப்பும்:** தொத்து நோய் பெருமளவில் தோன்றினால் அதைத் தடுத்துத் தாவரங்களுக்கு இடையூறு நேராவண்ணம் காப்பதே மத்திய அரசின் தாவரப் பாதுகாப்பு நிறுவனங்களின் (Plant Protection Organisation) முதற்கடமையாகும். தொத்து நோய் பரவியவுடன் குறுகிய கால முன்னறிவிப்புக் கிடைத்தவுடனேயே, இந்த நிறுவனம் தங்களுடைய முழு இயக்கக் கருவிகளுடனும் சாதனங்களுடனும் செயலாற்றுபவர்களுடனும் நோய் பீடித்த பிரதேசங்களுக்கு விரைந்து சென்று பணிபுரிய ஆரம்பிக்கும். இதன் இரண்டாவது கடமையாவது தாவரங்களில் தோன்றும் நோய்கள் இன்னவை என்று ஆராய்ந்து, அவை பீடித்துள்ள காலத்தில் தாவரங்களின் நிலையையும் அவற்றைப் போக்கக் கையாள வேண்டிய முறைகளையும் விளக்கிக்கூறல். இப் பிணிகளைப் போக்கத் தேடும் பரிகார முறைகள் உள்ளூரின் நிலைமைக்கு ஏற்ப அமைதல் நலம்.

நோய்ப் பூச்சிகளாலும், இதர தொத்து நோய்களாலும் பயிர்களுக்கு ஏற்படும் சேதத்தைப் போக்க மேற்கொண்டுள்ள கட்டுப்பாட்டு முறைகளை நான்கு பகுதியாகப் பிரிக்கலாம்: (i) நோயினால் பீடிக்கப்பட்டவைகளை ஒதுக்குப்புறமாக வைத்தல், (quarantine), (ii) உயிரியல் (biological) முறையில் கட்டுப்பாடு, (iii) விவசாய முறை, (iv) இரசாயன முறை. நோயினால் பீடிக்கப்பட்டவற்றை ஒதுக்குப்புறமாக வைக்கும் செம்மையான செயலாவது புகை போட்டு நச்சு நுண்மத்தைத் தடை செய்யலாம். நவீன சாதனங்களமைந்த புகை யூட்டும் நிலையங்களை (fumigatorium) பம்பாய், சென்னை, கல்கத்தா முதலிய பெரு நகரங்களில் திறக்கத் திட்டத்தில் ஒதுக்கீடு செய்யப்பட்டுள்ளது. நில எல்லைகளிலும் வானூர்தி நிலையங்களிலும் தொத்து நோய்ப் பூச்சிகள் வராது தடுக்கத்தக்க ஏற்பாடுகள் செய்து வர வேண்டும்.

உயிரியல் முறையில் செய்யப்படும் கட்டுப்பாடாவது ஒரு வகை நச்சுப்பூச்சியை அடக்கிப் பயனற்றதாக்க இன்னொரு முறை உயிருள்ள பூச்சியை வளர்த்தல். மிகவும் தொன்றுதொட்ட காலம் முதல் நாகதாளி (prickly pear)யைக் கொல்ல உள்ள தம்பளப் பூச்சி (cochineal) யை வளர்ப்பது ஒரு முறை ; கரும்பில் தோன்றும் துளையிடும் பூச்சிகள் (borers) தென்னாட்டில் தென்னை மரங்களில் வேர்ப்புழுக்கள் (nephanthes) இவைகளைக்கூட அடக்க உயிரியல் முறையைக் கையாளுகிறார்கள். இந்திய விவசாய ஆராய்ச்சிக் கூடங்களில் உயிரியல் முறைகளின் மூலம் இவற்றை அடக்க முயற்சிகள் செய்யப்படுகின்றன. விவசாய முறைகளிலும் இத் தொத்து நோய்களை யகற்ற முயலுகின்றனர். பயிர் மாற்ற முறைகளையும், விதை விதைக்கும் பருவத்தை மாற்றியும், நோயை எதிர்த்து ஈடு கொடுக்கும் நல்ல விதைகளை உபயோகப் படுத்தியும், ஆழமாகப் பயிரிட்டும் மேலெழுச்சியாக (shallow), வும் பயிரிடப்படும் நீர்ப்பாசனத்தைக் கட்டுப்படுத்தியும் அல்லது அதிகரித்தும் இப் பயிர்களில் நோய் பரவாது தடுக்கப்படு கின்றது.

கொஞ்ச காலமாக நோய்ப் பூச்சிகளை அழிக்கும் மருந்து களையும் டி.டி. ட்டி (D.D.T.), பி.எச்.ஸி (B.H.C.) இவை போன்ற ரசாயனங்கள் அதிக அளவில் உபயோகிக்கப்படுவதால் திட்டத்தில் டி.டி. ட்டியும், பி.எச். ஸியையும் உற்பத்தி செய்ய ஒதுக்கீடு செய்யப்பட்டுள்ளது.

அநேக பூச்சி மருந்துகள் பெரிய அளவில் வர்த்தக முறையில் விற்கப்படுகின்றன. இவை மிகவும் மேலானவை எனக் கூறிய போதிலும், அரசினரால் இவை பரிசீலனை செய்யப்பட்டு, அவர் களின் நன்மதிப்பைப் பெற்று விற்கப்படவில்லை எனலாம்.

இந்திய விவசாய ஆராய்ச்சி மன்றம் (Indian Council of Agriculture & Research) இந் நாட்டின் நிலங்களில் உண்டாகும் களை (weed) களை அப்புறப்படுத்த வேர் போக்கும் மருந்தை (Herbicides) யும் புல்பூண்டு நீக்கும் (weedicides) மருந்தையும் ஆராய்ந்து கொண்டுள்ளனர். இயந்திர முறையாலும் விவசாய முறையாலும் புல்பூண்டுகளைக் களைய முயல வேண்டியது இன்றிய மையாதது.

இந்த நூற்றாண்டில் ஐந்து தடவைகள் வெட்டுக் கிளியின் படையெடுப்புக்கள் ஏற்பட்டன. இராஜஸ்தான், பஞ்சாப், பெப்ஸு, சௌராஷ்டிரம், கட்ச், பம்பாயின் சில பகுதிகள் இவை

களில் வெட்டுக் கிளிகள் பெருமளவில் தோன்றிப் பயிர் பச்சைகளை நாசமாக்கிச் சென்று விட்டன. இந்திய அரசினர் மத்திய வெட்டுக் கிளி நிறுவனம் (Central Locust Organisation) ஒன்றை ஏற்படுத்தி இப் படையெடுப்புக்களைத் தடுத்து வருகின்றனர். இந்த நிறுவனம் பாலைவனப் பிரதேசங்களில் வெட்டுக் கிளிப் படையெடுப்பை அடக்கி வருகின்றது. பயிரிடப்பட்ட பகுதிகளில் இராச்சிய அரசினர் தற்காப்பு முறைகளைக் கையாளுகின்றனர்.

மேய்ந்து திரிகின்ற கால்நடைகளாலும் பயிர்களுக்குச் சேதம் விளைகிறது. இந்தக் கால்நடைகள் தாமாகவே கவனிப்பற்று வெளியே திரியும்; அல்லது வேண்டுமென்றே சமூக விரோதிகள் சிலர் தங்கள் கால்நடைகளைக் கட்டவிழ்த்து விட்டுவிடுவர். இந்தத் தொல்லையைப் போக்கத் தக்க தண்டனை கொடுத்தும் வழக்கமாக இவ்வாறு குற்றம் புரிபவர்களைக் கடுமையாகத் தண்டித்தும் பிறர் இவ்வாறு செய்யாதிருக்க முயல வேண்டும். கால்நடைகள் உட்புகுச் சட்டம் (The Cattle Trespass Act) என்ற சட்டத்தின் முக்கிய ஷரத்துக்களைத் தக்கவாறு மாற்றியமைக்க வேண்டும். விலங்குகளாலும் கொடிய பிராணிகளாலும் சில பகுதிகளில் பயிர்களுக்குச் சேதம் ஏற்படுகிறது. இப் பேராபத்தை நீக்கத்தக்க முறையில் நிறுவனம் ஏற்படுத்தித் தனி மனிதர் எதிர்ப்பதைவிடப் பொதுக் கூட்டாக இதை நீக்கலாம். துப்பாக்கிக் குழாம் (Gun Clubs), நீண்ட ஆழமான பள்ளங்கள் இவைகளை அமைத்துக் கொடிய விலங்குகளினால் ஏற்படும் ஆபத்தை நீக்கலாம்.

பண்டங்களைச் சேமிப்பதால் அதிகப்படியான பொருள் சேதாரமாகிறது. குறிப்பாகச் சந்தைகளிலுள்ள பண்டக் கிடங்குகளும் சேமிப்பு நிலையங்களும் மிகவும் கவனிப்பற்ற முறையில் வைக்கப்பட்டுள்ளன. பூச்சி ஒழிப்புமுறை, புகையிடல், அளவுக்கு மீறிச் சூடேற்றுமுறை, பூச்சி ஒழிப்பு மருந்துகளைப் பெருமளவில் பயன்படுத்தல் ஆகிய இவைகளை மேற்கொண்டு சேதங்களை நீக்கலாம்.

7. **விவசாயச் சந்தை :** [1] பருவத்தையனுசரித்து நம் நாட்டில் விவசாயம் நடைபெறுகிறது. குறைவான காலத்தில் அறுவடை நடைபெற்று, ஆண்டு முழுவதும் அது நிதானமாக நுகரப்படுகிறது. பருத்தி, நிலக்கடலை இவைகளைச் சேமித்து வைக்க அதிகப்படியான பரப்புள்ள காப்பிடம் தேவை. ஆயினும் சாதாரண விவசாயி இவைகளைச் சேமித்து வைக்க இடம்

1. திட்டக் கமிஷன் அறிக்கை, அதிகாரம். 17.

இல்லாமல் அவதிப்படுகிறன். பழம், காய்கறி, கரும்பு இவைகள் அதிவிரைவில் பயனற்றனவாகிவிடும். ஆகவே விவசாயி தனது கிராமத்திலோ அல்லது அடுத்துள்ள மண்டி (mandi) யிலோ இவைகளை உடனே விற்கவேண்டியே ஏற்படுகிறது. சிறிய விவசாயிகளுக்கிடையே நேரும் போட்டியின் காரணமாகச் சந்தையில் பண்டங்கள் வந்து குவிந்து, கேட்பாரின்றி மலிந்து கிடக்கும்; அல்லது ஒரு சில காலத்தில் சரக்கின்றிச் சந்தையில் மிகவும் கிராக்கியாகவும் இருக்கும். விவசாயிகள் தங்கள் குடும்பச் செலவைப் பழைய கடன் பாக்கியை முன்னிட்டும் கையில் ரொக்கம் கிடைக்கவும் வேண்டி, பருத்தி, சணல், கரும்பு, எண்ணெய் வித்துக்கள் இவைகளைக் காலங்கடத்தாது உடனே சந்தைக்கேகி விற்பனை புரிய முயலுகின்றனர். இயல்பான நிலைமைகளில் விற்பனைக்கான பண்டங்கள் வட்டாரத்திற் கேற்பவும் பயிரின் தரத்திற்கேற்பவும் விவசாயியினது தேவையை எடுத்துக்கொண்டபின், நிகர உபரிசதவீதம் மாறி வருகிறது ஆயினும், அது சராசரி 20 முதல் 30 சதவீத அளவில் இருக்குமெனலாம். விவசாயத்தை நம்பி வாழும் இந்திய நாட்டிலும்கூட விற்பனைக்கு வரும் பண்டங்களின் தொகை மொத்த உற்பத்தி எண்ணின் பெரிய அளவு என்றால் மிகையாகாது.

விவசாயப் பொருள்களை விற்பனை செய்ய நேரிட்டால் அதற்கான அநேக கடமைகள் உள்ளன. அவையாவன: சேமிப்பு, விற்பனை, கொள் முதலுக்கான பணம் தேவைப்படுதல். இவைகளை ஓர் எளிய குடியானவன் முறைப்படி அறிந்து கொண்டிருக்க முடியாது. அநேகர் இச் செயல்களை விவசாயிக்கெனப் பணியாற்றி நிறைந்த ஊதியத்தைப் பெறுகின்றனர்.

கிராமக் கடன் கொடுப்பவர் அல்லது தரகு மண்டி (mandi Arhatiya) வர்த்தகர் விவசாயிகளுக்கு முன் பணமாகக் கடன் கொடுத்து உதவுகிறர்கள். இதைக் கொண்டுதான் விவசாயி தன் நிலத்திற்குத் தேவையான எரு, விதை இவைகளையும் மற்றும் இதர செலவுகளையும் செய்கிறன். கடன் கொடுக்கும்போதே தரகு மண்டி வர்த்தகர்கள் அறுவடைப் பொருள்களைத் தங்களுக்கோ அல்லது தங்களது உத்தரவு பெற்றவர்களுக்கோ விற்க வேண்டும் எனக் கண்டிப்பாகப் பேசி முடிவாக்கிக் கொள்ளுகிறர். அல்லது விவசாயியே தனக்குச் சமயத்தில் கடனுதவி செய்த காரணத்தால் கடமை யென்றெண்ணிக் கேட்ட விலைக்கு விற்று விடுகிறன். விற்பனைக் காலத்தில்தான் கிராமப் பாங்கு வணிகரின் கைத்திறனைக் காணலாம். மிகவும் சரிந்த விலையில், பண்டங்களைத் தவறன எடைக்கல் கொண்டு அளவையிட்டுத்

தம் விருப்பத்திற்கேற்பக் காலம் தாழ்த்திக் கணக்கை முடிக்கின்றனர். சந்தையிலுள்ள மண்டிகளின் மூலமாகவோ தரகர் வழியாகவோ விற்பனை செய்யப் புகின் அவர்களை மீற முடியாது. அநேக நியாயமற்ற பிடித்தங்களைத் தன் விற்பனைத் தொகையினின்று கொடுத்து விவசாயி சொற்பத் தொகையுடன் திரும்புகிறான். விவசாயக் குழுவினர் இதைப்பற்றி விளக்கும்போது கூறுவதாவது :[1] வினியோகஸ்தர்களோடும் நுகர்வோர்களோடும் ஒரு விவசாயியை ஒத்திட்டுப் பார்க்கும்பொழுது அவன் ஒரு சிறிய பொருள்போல் காணப்படுகின்றான். ஆண்டுதோறும் வினியோகஸ்தர்களும் நுகர்வோரும் தங்களை ஒருங்கமைத்துக் கொண்டு தக்க நிறுவனம் போன்று பணியாற்றி வருகின்றனர்.

மொத்தச் சந்தைக் கடைகளிலும், ஒழுங்குபடுத்தப்பட்ட சந்தைக் கடைகளிலும்கூடச் சில காலங்களில் அநேக ஒழுங்கீனச் செயல்கள் நடைபெறுகின்றன. 1947ஆம் ஆண்டில் தேசீயத் திட்டக் குழுவினர் (National Planning Committee) 'கிராம (விற்பனை)ச் சந்தை முறையும் நிதியும்' என்ற தலைப்பின் கீழ் விடுத்துள்ள அறிக்கையில் அநேக ஒழுங்கீனச் செயல்களைச் சுட்டிக் காட்டியுள்ளனர். அவை (i) விற்பனையாளர்க் கெதிராக அதிக அளவில் கொள்முதல் செய்து குறைவாக வாங்கியதாகக் காட்டும் பிசகான எடைகளையும் தராசினையும் உபயோகித்தல்; (ii) தருமம், மதம் இவற்றின் பெயரால் தம் மனம் போன போக்கில் பிடித்தம் செய்தல்; (iii) மாதிரி பார்ப்பதாகக் கூறி அதிக அளவு பண்டங்களை எடுத்துக்கொள்ளுதல்; (iv) அங்காடி அல்லது ஹாதா (hatha) முறையில் விற்பனைத்தரகனும் கொள்முதல் வியாபாரியும் திரை மறைவில் தங்களது குழுக்குறியில் பேசித் தீர்வுகாணுவார்கள். ஆனால் அறியாமையில் ஆழ்ந்துள்ள விவசாயிக்கு ஒன்றும் புலப்படாது; (v) விற்பனைக்கு வந்த விவசாயியின் தரகன் கொள் முதல் புரியும் வர்த்தகனைத் தினமும் காண்கிறான். அவனுடன் அளவளாவுகிறான். ஆனால் விவசாயியை ஆண்டிற்கு ஒரு தடவை அதாவது இந்த விற்பனையின்போதுதான் முதன் முதலாகக் காண்கிறான்; (vi) விற்பனையில் ஏதாவது தகராறு மூண்டு, அதனால் ஏற்படும் சச்சரவினின்று விவசாயி தன்னைக் காப்பாற்றிக் கொள்ள முடியவில்லை. எடுத்துக்காட்டாகக் காந்தேஷ் (Khandesh) வட்டாரத்தில் ஒழுங்கற்ற முறையில் நடைபெறும் பருத்தி விற்பனையைப் பற்றி இவ்வறிக்கை விளக்குகிறது. முதல் பேச்சு வார்த்தைகள் (preliminary negotiations) முடிந்தவுடன் பருத்தி வண்டிச் சந்தைக் கடைகளுக்கப்பாலுள்ள பஞ்சாலைகளில் வியாபாரம்

1. அறிக்கை, பத்தி. 320.

முடிவாக்க அனுப்பப்படுகிறது. பஞ்சாலைகளில் விற்பனையாளரின் தரகரும் வாங்குபவரும் தொடர்ந்து பேசி முடிவாக்குகின்றனர். உண்மையில் பேரம் பேசுவது சந்தைக் கடைகளுக்கப்பால் நடப்பதால் சந்தை அரிகாரிகள் எவ்வகையேனும் உற்பத்தி யாளரைக் காப்பாற்ற நினைப்பினும் செயலற்றுப் போவார்கள் எனலாம்.[1]

விவசாயிகளுக்கு இம்மாதிரியான இடர்கள் சந்தைகளில் ஏற்படுவதைக் கண்ணுற்று, அவைகளை அறவே ஒழித்துக்கட்டவே பம்பாய், சென்னை, பஞ்சாப், ஐதராபாத், மைசூர், பெப்சு, மத்தியப் பிரதேசம் ஆகிய இராச்சியங்களில் ஒழுங்குபடுத்தப்பட்ட சந்தைகளை நிறுவியுள்ளனர். அனுமதியற்ற பிடித்தங்களைத் தடை செய்தும், எடைபோடுபவர், தரகர் இவர்களின் ஊதியத்தைக் கட்டுப்படுத்தியும் மற்றும் பல பகுதிகளில் பொதுவாக ஏல முறையைக் கையாண்டும் விவசாயிக்குத் தக்க ஆதாயம் வருமளவில் சீர்படுத்தியுள்ளனர். உத்தரப் பிரதேசம், மேற்கு வங்காளம், பீகார், ஒரிஸ்ஸா முதலிய இராச்சியங்களில் ஒழுங்கு படுத்தப்பட்ட சந்தைகள் இல்லை எனலாம். விவசாயப் பொருள் விற்பனைச் சட்டத்தின்கீழ்ப் பல இராச்சியங்கள் தங்கள் பகுதிகளில் எண்ணிலடங்காச் சந்தைகளைத் திறந்துள்ளன. ஆனால் அவைகள் கட்டுப்பாடின்றி நடக்கின்றன. இந் நாட்டிலுள்ள முக்கியமான சந்தைகளைக் கட்டுப்பாட்டின்கீழ்க் கொண்டுவருதல் இன்றி யமையாதது. இவைகளைக் கண்காணிக்கத்தகும் சந்தைக்குழுவில் பயிரிடுபவர்களும் உறுப்பினராகித் தற்போதுள்ளதைக் காட்டிலும் சீரிய முறையில் நடத்தவேண்டும்.

**8. கூட்டுறவுமுறை விற்பனையில் முன்னேற்றம் :** ஒழுங்கு படுத்தப்பட்ட சந்தைகளினால் பெறக்கூடிய பலன் நாடு முழுமையும் பரவவில்லை. சந்தையின் முறையே மாற்ற மடைந்தாலொழியத் தரகரின் பெரு ஊதியமும் மிதமிஞ்சிய செலவையும் கட்டுப்படுத்த இயலாது. இத் துறையில் முன்னேற்றம் காணப் பல இராச்சியங்களில் கூட்டுறவு விற்பனை நிறுவனங்களை அமைத்துள்ளனர்.

கடந்த சில ஆண்டுகளில் உத்தரப் பிரதேசத்தில் ஒரு மிலிய னுக்கு மேற்பட்ட கரும்பு பயிரிடும் விவசாயிகளை உறுப்பினராகக் கொண்ட 1,600 கரும்புக் கூட்டுறவு யூனியன்களைத் தோற்றுவித்தும், மற்றும் இதர கூட்டுறவுச் சங்கங்களையும் ஏற்படுத்தியுள்ளனர். சர்க்கரை ஆலைகளுக்கு வழங்கப்பெறும் கரும்பில் 85 முதல்

1. ஆல் இண்டியா ரூரல் க்ரெடிட் ஸர்வே அறிக்கை, பக். 104.

90 சதவீதம் கூட்டுறவு யூனியன் மூலம் நடைபெறுகிறது. சர்க்கரை ஆலைகள் கட்டுப்பாட்டுச் சட்டத்தின்படி ஒவ்வொரு கரும்பு பயிரிடும் விவசாயியும் கூட்டுறவு யூனியன் மூலம் ஒரு குறிப்பிட்ட எடையின் பேரில் கரும்பினை வழங்கிவிட வேண்டும். அதற்கான குறைந்த அளவில் விலையைக் கரும்பாலைகள் கொடுத்துவிடும். கூட்டுறவுச் சங்கங்கள் ஆற்றும் அரும்பணிக்கெனத் தரகாக டன்னுக்கு ரூ. 1·25 ஆகக் கணக்கிட்டுக் கரும்பாலைகள் கொடுக்கின்றன. சர்க்கரையின் விற்பனை விலையை முடிவு கட்டும்போது இத் தரகும் எடுத்துக்கொள்ளப்படுகிறது. விற்பனையை ஏற்பாடு செய்வதோடல்லாமல் கடன் வசதி, சந்தை முறை இவற்றையும் ஒன்றுபடுத்தக் கூட்டுறவுச் சங்கங்கள் முயல்கின்றன. மேலும் பயிரிடலுக்கு உறுதுணையாக விதையளித்தல், உரத்திற்கான வசதி செய்து வழங்கல், மற்றும் இதர தேவைகளையும் இச் சங்கம் பூர்த்தி செய்து உதவுகிறது. கிராமப் பொதுநலச் செயல்களிலும் கூட்டுறவு யூனியன்கள் ஈடுபடுகின்றன எனக் கூறவும் வேண்டுமோ ?

கூட்டுறவு முறையில் பருத்தி விற்பனையை எடுத்து நடத்தப் பம்பாயில் முயற்சிகள் நடந்தன. கர்நாடகப் பகுதியில் உள்ள சங்கங்கள் தங்களுடைய உறுப்பினரின் பருத்தியைத் தனி மனிதர்களுக்கு விற்பனை செய்தனர். ஆயினும் குஜராத் பகுதியில் உள்ள சங்கங்களோ, பருத்தி அனைத்தும் ஒன்று திரட்டி மொத்தமாக விற்றன. கூட்டுறவு முறையில் பஞ்சாலைகளும் அழுத்து ஆலைகளும் உள்ளன. சென்னை இராச்சியத்திலுள்ள உற்பத்தியாளர் நுகர்வாளர் சங்கங்கள் விற்பனைச் சங்கங்களாக மாற்றியமைக்கப் பட்டன. இதர இராச்சியங்களிலும் கூட்டுறவுத் துறையில் நல்ல முன்னேற்றமேற்பட்டுள்ளது.

கடனையும் விற்பனையையும் ஒன்றிணைத்தும், உத்தரப் பிரதேசத்தில் கூட்டுறவுச் சங்கங்களுக்கு விற்பனைத் தரகு கொடுத்துங்கூட இத் துறையில் முன்னேற்றம் காணவில்லை. பயிரிடுவோருக்கு நலமளிக்கவும், பொருள் வசதியேற்படும்படிச் செய்யவும் உரிமையனைத்தும் கூட்டுறவு முறையில் மாற்றி, நுகர்வுப் பொருளை அதற்கேற்பப் பதனப்படுத்தும் முறை இவையனைத்தும் கூட்டுறவின் உதவியால்தான் எளிதாகச் செய்ய இயலும். பதனப்படுத்தல் அளவிறந்ததாக இருப்பின், அதை விவசாயிகளிடம் ஒப்படைத்து ஊக்க மேற்படும் வகையில் கூலி கொடுப்பின் அவர்களுக்கு வருமானம் அதிகரிப்பதோடல்லாமல் தொழிலும் முன்னேற்ற மடையும். இம் முறையில் பணியாற்றும் கூட்டுறவு நிறுவனம் பயிரிட முன்னதாகவே திட்டமிட்டு, நல்ல

முதிர்ந்து தேர்ந்த விதைகளைக் கொடுத்தும், தொழில் நுட்ப உதவி யளித்தும் சமயத்தில் பண உதவி செய்தும்கூட விவசாயியின் நிலையை உயர்த்த முன்வரலாம்.

பெரும் பதன முறைகளின்றிச் சிற்சில பொருள்களை விற்பனைக் கேற்ப அமைத்துவிடலாம். அம் மாதிரி நிலையில் நுகர்வாளர் கூட்டுறவுச் சங்கங்களுடன் விற்பனைக் கூட்டுறவுச் சங்கங்கள் நேர் முகத் தொடர்பு கொள்ளுதல் இன்றியமையாதது. கோதுமை, பருப்புகள், பழம் காய் வகைகள் இவைகள் இராச்சியங்களுக்குள் பெருமளவில் விற்பனை ஆகின்றன. மேலும் இராச்சியத்தினூ டேயும் விற்பனை நடைபெறுகிறது. இதர இராச்சியங்களிலுள்ள கூட்டுறவுச் சங்கங்களுடன் தொடர்பு வைத்துக்கொண்டு ஏற்றுமதி இறக்குமதிக்கான வசதிகளையமைத்துக் கொள்ளவேண்டும். இம் மாதிரியான வசதிகளை இராச்சியத்தினுள் செய்துகொள்ளக் கூடும்.

போதிய மூலதனம் இல்லாமல் அநேக கூட்டுறவுச் சங்கங்கள் அமைந்திருக்கின்றன. கூட்டுறவு நிறுவனங்களுக்குக் கடனுதவி அளிக்க முன்வரும் இராச்சியக் கூட்டுறவுப் பாங்கும் ரிஸர்வ் பாங்கும் ஒவ்வொரு கூட்டுறவு நிறுவனத்தின் ஆஸ்திகளையும் மூலதனத்தையும் ஒட்டித்தான் கடன் தொகை இவ்வளவு என வரையறுக்கின்றன. ஆகவே, கடன் வழியை அனுசரித்துத்தான் அதன் வியாபாரத்தின் ஏற்றத்தாழ்வினைக் கணக்கிடலாம். ஆகவே விற்பனைக் கூட்டுறவுச் சங்கங்கள், அதுவும் தலைமைச் சங்கமாக இருப்பின் தங்கள் உறுப்பினரிடமிருந்து போதிய மூலதனம் பெறுதல் இன்றியமையாதது.

விற்பனை ஒரு கலையே. அதற்கெனத் தொழில் நுட்பமும் தனிப் பட்ட அறிவும் தேவை. பல கிராமங்களை இணைத்து உருவாக்கப் பட்ட விற்பனைச் சங்கங்கள் இம்மாதிரி விற்பனை வல்லுநர்களைத் தொழிலில் அமர்த்துவது இயலாது. ஆகவே விற்பனைச் சங்கம் ஒரு பெரிய வட்டார முழுமைக்கும் சேர்த்து அமைந்திருப்பின், போதிய விற்பனை செய்ய இயலும். அதன் நிமித்தம் பெரிய ஊதியம் கொடுத்து வல்லுநர்களை நியமனம் செய்யலாம்; தனிப் பட்ட பொருளுக்கென விற்பனைச் சங்கம் நிறுவுவது தகர்க்கப்பட வேண்டும். ஆதாரச் சரக்குகளுக்குமட்டுமே அவ்வாறான சங்கங்கள் நிறுவப்படவேண்டும்.

**9. சேமிப்பும் கிடங்கு முறையும் :** இக் கூட்டுறவுச் சங்கங் களுக்குச் சேமித்து வைக்கப் போதிய வசதிகள் இல்லையெனலாம்.

எல்லாப் பொருள்களும் மண்டியில் சேமிக்கப்பட்டு விற்பனை செய்யப்படுகின்றன. இம் மண்டி, பொதுவாகப் பாங்கு, ரெயில் வசதிகள் உள்ளவிடத்திலும் நெடுஞ்சாலைப் போக்குவரத்து உள்ள இடத்திலும் அமையும். மண்டியில் உள்ள பண்டத்தின் ஈட்டின் பேரில் பாங்குகள் கடன் கொடுக்கின்றன. கிடங்குகளிலிருந்து அவ்வப்போது சாமான்களை நேர்முக விற்பனையாகவாவது சரக்கனுப்பு முறையிலாவது நடத்திக் கிராமங்களிலிருந்து பண்டங்களை அனுப்புவதைவிட மண்டிகளிலிருந்து உடனுக்குடன் அனுப்புவது நலம். மண்டிகளில் கிடங்குகள் நிரந்தரமாகவோ தற்காலிகமாகவோ அல்லது பகுதி நிரந்தரமானவையாகவோ இருக்கும். இந்தக் கிடங்குகளின் பொருட் பாதுகாவலுக்கான வசதிகளே இல்லையெனலாம். ஈரத்தினால் ஏற்படும் மடிசலையும், அந்து போன்ற பூச்சிகளாலும், எலிபோன்ற பிராணிகளாலும் சேதாரம் ஏற்படுவதையும் தடுக்க எவ்வளவு வசதியும் இல்லை. இவ்வாறான கிடங்குகளுக்கு மிகவும் அதிகமான குடிக்கூலி வேறு கொடுக்கவேண்டிய நிலை யேற்படுகிறது. கூட்டுறவு விற்பனை நிறுவனங்கள் தங்களுடைய வழிக்கெனத் தனியே கிடங்குகள் ஏற்படுத்திக் கொள்ளுதல் நலம். இதைக் கண்ணுற்ற சென்னை, ஒரிஸ்ஸா, பம்பாய் இராச்சிய அரசினர் கூட்டுறவு நிறுவனங்கள், தாங்களாகவே கிடங்குகள் கட்டிக் கொள்ள மான்யமாகவும் முன் பணமாகவும் கடனாகவும் கொடுத்து உதவுகிறார்கள்.

பண்டசாலைகளின் பற்றுச் சீட்டின்மையால் கடன் வாங்கும் பாங்குகள் தங்களுடைய உண்டியலுடன் துணையீடாக இதைக் கொடுக்க இயலாத காரணத்தால் ரிஸர்வ் பாங்கு, தங்கள் சட்டத்தின் 17வது பிரிவின் கீழ்க் கூட்டுறவுப் பாங்குகளுக்கும் ஷெட்யூல்டு பாங்குகளுக்கும் விற்பனைக்கான கடனுதவி செய்ய முடிவதில்லை. பம்பாய், சென்னை, மத்தியப் பிரதேசம், ஐதராபாத், திருவாங்கூர், கொச்சி முதலிய இராச்சியங்களில் இது சம்பந்தமான மசோதாக்கள் நிறைவேற்றப் பெறுகின்றன. இதர இராச்சியங்களும் இம்மாதிரியான முறையில் சட்டமியற்ற முன் வரவேண்டும். கூட்டுறவுச் சங்கங்களின் முயற்சியினாலும், அவைகளுக்குப் போதிய நீண்ட கால மூலதன உதவி கிடைக்க வாய்ப்பு உண்டானால்தான் இச் சட்டம் தோன்றக்கூடும். இராச்சிய அரசினரும், ரிஸர்வ் பாங்கும் இம்மாதிரியான பண்டகசாலை வைத்து விற்பனையைச் சரிவர நடத்திக் கொடுக்க முன்வரும் கூட்டுறவு நிறுவனங்களுக்குக் கடன் வசதி அளிப்பது சாலச் சிறந்தது எனலாம்.

**10. வருங்கால முன்னேற்றத்திற்கான அமைப்பு :** குறைந்த செலவில் பெரும் பணியாற்றி விவசாயிகளின் நன்மையைக் கோரும் ஒரே நிறுவனம் கூட்டுறவுச் சங்கங்களாதலால் அவைகளின் வருங் காலம் ஏற்றமும் போற்றத்தகு நிலையும் பெறும் என்பதில் ஐயமில்லை. இது விவசாயிகள் தங்களுடைய பதனப்படுத்தும் சாமர்த்தியத்தை யும் கிடங்கு வசதிகள் பெறும் நிலையையும், அவ்வப்போது பண வசதி பெறுவதையும், இவற்றிற்கெல்லாம் மேலாக, கண்ணியமாக வும் நேர்மையாகவும் நடப்பதையும் பொறுத்தேயுள்ளது.

பதனப்படுத்தும் இயந்திரங்களைக் கூட்டுறவு நிறுவனங்கள் தங்கள் சொந்தத்தில் ஏற்படுத்திக்கொண்டு, கட்டண முறையை அமைத்தும் இதர வகையில் இக் கூட்டுறவு நிறுவனங்களுக்கு வழி அமைத்துக் கொடுக்கவேண்டியது இராச்சிய அரசின் பொறுப்பு எனலாம். அம்மாதிரியான சங்கங்கள் தோன்றவில்லை யெனின் அவைகளை நிறுவி உதவியளித்து வர இராச்சிய அரசினர் முயல வேண்டுவது இன்றியமையாதது.

பண்டச் சந்தைகளில் கூட்டுறவு நிறுவனங்கள் நாளுக்கு நாள் வன்மையுடன் நிலைபெறத் தொடங்கிய காரணத்தால் ஒழுங்கு படுத்தப்பட்ட சந்தைகளையும் கூட்டுறவுச் சங்கங்களின் நிர்வாகத் தில் வைப்பதுதான் நலம். உடனடியாக ஒழுங்குபடுத்தப்பட்ட சந்தைகளின் நிர்வாகக் குழுவில் கூட்டுறவு உறுப்பினருக்கும் இடம் தருதல் வேண்டும்.

**11. தரப்படுத்துதல் :** *சீரான* தரத்தையும் செம்மையான பாகுபாடுகளையும் நிறுவச் செய்வது இராச்சியத்தின் செயல்களில் ஒன்ருகும். விவசாயியின் பயிர் வகைகளைத் தரப்படுத்தி ஒழுங்கு படுத்தப்பெற்ற சந்தையில் அவனது விளைச்சலுக்குத் தரத்திற் கேற்ப எவ்வளவு அதிகப்படியான தொகை கிடைக்கும் என முன்னதாகவே தெரிந்துகொள்ள வசதியாக இருக்கும். நல்ல தரமான பண்டங்களுக்கு உயர்வான விலை கிடைக்கும் என்ற நம்பிக்கையினுல் விவசாயி தனது பயிர் விளைச்சலில் முழு ஊக்கத் துடன் முதல் தரமான பண்டங்களை உண்டுபண்ண முயலுகிருன். பொதுத் தேக்க வசதிகளுக்கும், பொருளாதாரத் துறையில் தீர்வு காணவும் தரப்படுத்துதலும் பாகுபாடு செய்தலும் இன்றியமை யாதவை யெனலாம். இவ்வாறு தரப்படுத்திய பின்னரே பற்றுச் சீட்டினை எளிதில் வர்த்தகப்பேச்சு வார்த்தை நடத்திப் பொறுப் பினை மாற்ற இயலும்; நமது ஏற்றுமதி வியாபாரம் வரவரக் குறைவு படக் காரணம் நமது விவசாயப் பொருள் மிகவும் மட்டமான சரக் காக இருப்பதுதான் எனலாம். நம் நாட்டினின்று கப்பல் வழியே

அயல்நாடுகளுக்கு ஏற்றுமதியாகும் முந்திரி, மிளகு, மஞ்சள், கம்பளி இவைகளில் அதிப்படியான கலப்படம் இருப்பதாலும் மிகவும் மட்டமான சரக்காக அமைவதாலும் குறைவான அளவில் தான் பணம் கிடைக்கிறது. சில சமயங்களில் நமது சரக்கு மிகவும் ஏமாற்றத்தை உண்டுபண்ணுவதால் உடனே திருப்பியனுப்பப் படுகிறது. 'அக்மார்க்' என்ற தரப்படுத்தப்பட்ட-குணம் வாய்ந்த சரக்கு என முடிவு செய்யப்பட்டவைகள் சற்றுப் பலனுள்ள சரக் காகவே அமைகின்றன. குறிப்பாகப் புகையிலே, சன்ன என்ற வகைச் சணல் இவற்றில் இம்மாதிரியான குறைபாடுகள் ஏற்படுவ தில்லை. ஏற்றுமதி வர்த்தகத்தை அதிகரிக்கவும் இம்மாதிரி இடை யூறுகளைப் போக்கவும் கம்பளி, முட்கள் போன்ற அடர் உரோமம், அரக்கு, ஆட்டுத்தோல், வெள்ளாட்டுத் தோல், முந்திரிப் பருப்பு, எண்ணெய் வித்துக்கள், இலவம் பஞ்சு (kapok) இவற்ருல் நாட் டுப் பிரிவினையை அடுத்து 3 ஆண்டுகளில் சற்றேறக் குறைய 110 கோடி ரூபாய் ஆண்டுதோறும் கிடைத்துவரும் பொருள்களை இன்னும் சீரிய முறையில் அடுத்து வரும் 3 ஆண்டுகளில் தரப் படுத்த முயல்வர். அடுத்தடுத்து இவைகளைக் கட்டாய முறையில் தரப்பிரிப்பினை நடத்துவார்கள். நாட்டின் உடல் சுகாதாரத்தை முன்னிட்டு உள்நாட்டு வர்த்தகத்தில் ஈடுபடும் உணவுப் பொருள் களாகிய பால், நெய், எண்ணெய் இவைகளைத் தரப்படுத்துவது மிகவும் அவசியமாகும்.

**12. எடைகளும் அளவுகளும்:** எண்ணிறந்த அளவில் எடைமுறைகளும் அளவை முறைகளும் அமைந்துள்ள நாட்டில் இவற்றினைக் கண்ணுற்ற மாத்திரத்திலேயே நாம் துணுக்குற வேண்டிய நிலை ஏற்படுகிறது. பல்வேருன வகைப்பட்ட முறை களை ஒழுங்குபடுத்தித் தரப்படுத்த மத்திய அரசினர் தரப்படுத்தப் பட்ட எடைகள் சட்டமென்ருென்றை 1939-ல் பம்பாய், பஞ்சாப், பீகார், மைசூர், ஐதராபாத் முதலிய இராச்சியங்களில் அமலாக் கினர். ஆயினும் சென்னை, மத்தியப்பிரதேசம், உத்தரப் பிரதேசம், ஒரிஸ்ஸா இவைகளில் இவை நடைமுறையில் கொண்டு வரப்பட வில்லை. உற்பத்தியாளரின் நுகர்வோரின் நன்மையைக் கோரி இத் தரப்படுத்தப்பட்ட எடைகள் சட்டம் உடனே அமலாக்க ஒவ்வோர் இராச்சியமும் முயலுதல் அவசியம்.

**13. சமுதாய வளர்ச்சித் திட்டங்கள்[1]:** 1946ஆம் ஆண்டு முதல் கிராம வளர்ச்சியைத் தீவிரமான முறையில் அநேக பரி சோதனைகள் மூலம் பல்வேறு இடங்களில் நடத்தி வருகின்றனர். அவையாவன: மத்தியப் பிரதேசத்திலுள்ள சேவாக்கிராமத்திலும்

1. இந்தியா, 1955, அதிகாரம், 15.

(இப்போது மகாராஷ்டிரத்தில் உள்ளது), பம்பாயிலுள்ள சர்வோதய நிலையங்களிலும் பிர்க்கா வளர்ச்சித் திட்டத்தின் கீழ்ச் சென்னை இராச்சியத்திலுள்ள பல்வேறு பகுதிகளிலும், முன்னேடித் திட்டமாக (pilot project) உத்தரப் பிரதேசத்திலுள்ள எட்டவாவிலும் கோரக்பூரிலும் நடைபெறுகின்றன. திட்டக் கமிஷன் சமுதாய வளர்ச்சித் திட்டத்தை ஐந்தாண்டுத் திட்டங்களுடன் பிரிக்க இயலாவண்ணம் அமைத்ததாலும் இத் திட்டங்களின் செயலாற்றும் வன்மையில் மக்கள் ஊக்கமடைந்தனர். திட்டத்தில் சமுதாய வளர்ச்சிக்கென ரூ. 90 கோடியை ஒதுக்கி வைத்துள்ளனர். பல்வேறு இடங்களில் சமுதாய வளர்ச்சிக்கான வசதி செய்யவும் தேசீய விஸ்தரிப்புப் பணியாளர்களை நாடு முழுமையும் பத்து ஆண்டுகளுக்குள் நியமனம் செய்யவேண்டும் என்றும் முடிவு செய்யப்பட்டது. நிச்சயமாக மழை பெய்யும் பகுதிகளிலும், அல்லது நீர்ப்பாசன வசதியமைந்த பகுதிகளிலும் நிலத்தில் உடனடியாகப் பலன் காணத்தகு பிரதேசத்திலும்தான் இவ் விஸ்தரிப்பு முறை பரிசீலனைக்கு எடுத்துக்கொள்ளப்படும். ஆரம்பத்தில் எல்லா இராச்சியங்களிலுமாக 55 திட்ட இடங்களில் விஸ்தரித்துள்ளனர். இத் திட்டத்தின்கீழ் ஒவ்வொரு பகுதியிலும் 450 முதல் 500 சதுரமைல்கள் பரப்புள்ள 200 கிராமங்களிலும் அவற்றிலுள்ள 2,00,000 மக்களும் பயிரிடத்தகும் 1,50,000 ஏக்கராவும் உள்ளபடி அமைத்தல் வேண்டும். ஒவ்வொரு திட்டத்திலும் 3 வட்டாரங்கள் (block) உள்ளன. ஒவ்வொரு வட்டாரத்திலும் 5 கிராமங்கள் உள்ளன. இவற்றினைக் கண்காணிக்க, கிராம சேவக் (gram sevak) ஒருவர் நியமிக்கப்படுவார். கிராம வளர்ச்சித் திட்டத்திற்குமாத்திரமல்லாமல் மற்றும் மத்தியதரத் தொழிலும் சிறுபான்மைத் தொழிலும், நகர அமைப்பு முறைகளையும் எடுத்துக் கவனிப்புடன் நடத்தும் மேற்கு, கிழக்குப் பாகிஸ்தானிலிருந்து வந்த அகதிகளை மறுவாழ்க்கைக்கு வசதிபெற ஏற்பாடு செய்தல் முதலியன இதன் நோக்கமாகும்.

அமைப்பிலடங்கியுள்ள எம்முறையின் வழியேனும் விவசாய உற்பத்தியைப் பெருக்குவது என்ற அடிப்படைக் கொள்கையுடன் தேசீய வளர்ச்சித் திட்டம் உருவாகியுள்ளது. கிராமப் பகுதிகளிலிருந்து வேலையின்மையை அறவே அகற்றி, இதன் போக்குவரவு முறையைச் சீர்படுத்தி, அடிப்படைக் கல்வி, சுகாதாரம் இவைகளைக் கொணர்ந்தும், பொழுது போக்கிற்கு விளையாட்டு, காற்ரேட்டம், பூங்கா இவைகளை யமைத்தும், வீட்டு வசதிகளைச் சீராக்கியும், நாட்டுக் கைத்தொழில்களைப் புதுப்பித்தும் சிறுபான்மைத் தொழில்களை வளர்த்தும் கிராம நலனைப்பேணி வளர்க்க ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. இவைகளில் வெற்றி தோன்ற

வேண்டுமானல் கிராம மக்கள் தாமாகவே பங்கெடுத்து உழைத்தால்தான் நல்லது எனலாம். 'மடிதற்று முந்துறும்' மக்களின் உழைப்பினைப் பயனுடைய முறையில் வழி காட்டியாகவும் உறுதுணையாகவும் நின்று உதவியளிக்க அரசு என்றும் முன்னே நிற்கிறது எனலாம்.

ஒவ்வொரு திட்டப் பரப்பிலும் தகுதியாவதற்கு என வரையறை வகுக்கப்பட்டு, அதன்படித் தாமாகவே வரக்கூடிய உழைப்பின் விகிதம் இன்னதென்றும், பண விகிதம் இன்னதென்றும் கூறப்பட்டபடி, பண வசூலையும் உழைப்பையும் பெறுகிருர்கள். இத்திட்டங்களை உருவாக்குவதில் இராச்சிய அரசினர் பொருள் வசதியளிக்கின்றனர். ஆயினும் மொத்தச் செலவினை இராச்சிய, மத்திய அரசினர் விகிதப்படிப் பகிர்ந்து கொள்ள வேண்டியது. அவ்வாறு பகுப்பதில் மீளாச் செலவினமாயின் (non-recurring) 3 க்கு 1 ஆகவும் மீளும் (recurring) செலவினமாயின் சமமாகப் பகிர்ந்து கொள்ளவேண்டும். மூன்றுண்டுகள் கழிந்தவுடன் சமுதாயத் திட்டச் செலவனைத்தையும் இராச்சிய அரசினரே ஏற்றுக்கொள்ள வேண்டும். நகரப் பகுதி பற்றி அடிப்படைச் சமுதாய வளர்ச்சித் திட்டத்தின் அனுமானிக்கப்பட்ட செலவினம் ரூ. 65 இலட்சம். இது 3 ஆண்டுகளில் செலவிடப்படும். அவற்றில் ரூ. 6·53 இலட்சம் டாலர் செலவு எனலாம். நகரத்துண்டின் (unit) செலவு 11 இலட்சம். அவற்றில் 4·5 இலட்சம், டாலர் பகுதியாகும்.

**14. தேசீய விஸ்தரிப்புத் திட்டம்:**[1] இந்தியக் கிராம நலத்தை முன்னிட்டுப் பெருமளவில் ஏப்ரல் 1953-ல் போடப்பட்ட திட்டம்தான் தேசீய விஸ்தரிப்புத் திட்டம். எல்லா இராச்சியங்களிலும் 1953-ல் அக்டோபர் 2ஆம் தேதி இது தொடங்கப் பெற்றது. இதன்படி கிராம மக்கள் தொகையில் கால்பங்குத் திட்டக் காலத்தினுள் இவ் விஸ்தரிப்பின்கீழ் முன்னேற்றம் பெறவேண்டுமென்றும், பத்தாண்டினுள் இந் நாடு முழுமையும் உள்ள கிராமமாந்தரனைவரும் இதன் கீழ் நலமடைய வேண்டுமென்பது இதன் குறிக்கோள். தேசீய விஸ்தரிப்புத் திட்டமும் சமுதாய வளர்ச்சித் திட்டமும் ஒரே கொள்கையுடையனவாகையால் இவ்விரண்டினையும் பிணைத்து மத்திய இராச்சிய அரசினர் இவற்றை நடத்தி வருகின்றனர். விஸ்தரிப்புத் திட்டத்தின் அடிப்படையாவது விவசாயியின் வாயிலில் நவீன விவசாய முறைகளைக் கொணர்ந்து, அறிவூட்ட முற்படுவதாகும். இதர துறைகளிலும் மறுபயிற்சி அளிப்பதும் இதன் முக்கியக் குறிக்கோள்களில் ஒன்ருகும்.

1. இந்தியா 1955, பக். 203-05.

விஸ்தரிப்புத் திட்ட வேலைகளும் சமுதாய வளர்ச்சித் திட்ட வேலைகளும் ஒரே சமயத்தில் நடைபெறும். இவ் விரண்டினுடைய வேறுபாடுகளான முதற்கூறியதில் அதிகப்பணம் ஈடுபடுத்தப்படும். 1956-ல் இந் நாட்டின் கால்பகுதி இவைகளால் விஸ்தரிப்புப்பெறும். 1963-ல் நாடு முழுமையும் இத் திட்ட வேலையி லீடுபடும். முதலைந் தாண்டுத் திட்ட இறுதியில் 84,700 கிராமங்களில், 56 மிலியன் மக்களுள் 35,500 கிராமங்களும், 23 மிலியன் மக்களும் இதில் ஈடு படுவது திண்ணம். இவைபோக மிகுதியைத் தேசீய விஸ்தரிப்புத் திட்டம் கவனித்துக்கொள்ளும். இவ் விரண்டு திட்டங்களின் சேர்க்கையால் நாட்டில் உள்ள ஐந்து கிராமங்களில் ஒன்று வீதம் இவ் வசதிகளைப் பெறும். தேசீய விஸ்தரிப்புத் திட்டத்தின்கீழ்க் கொண்டு வரவேண்டுமானால் ஓர் இடத்து மக்களின் பிரதிபலிக்கும் தன்மை அப்பகுதிகளில் உள்ள மூலப்பொருள்கள் இவைகளைப் பொறுத்துள்ளன. ஆட்சிமுறைக்கும் செம்மையான முறையில் இருத்தவும், வட்டாரமாக அமைத்து, சப்கலெக்டர் பராமரிப்பின் கீழ் இருக்கும்.

முதல் ஐந்தாண்டுத் திட்டத்தின்படி மொத்தச்செலவு 101 கோடி ரூபாய் ஆகியது. அதில் 75 சதவீதம் மீளாச் செலவையும் மீளும் செலவில் 50 சதவீதத்தையும் இராச்சிய அரசினர் ஏற்றுக் கொண்டனர். திட்டம் முடிவடைந்த பின்னரும் தொடர்ந்து இருந்துவரும் பணியாளர்க்கான செலவில் 50 சதவீதத்தை மத்திய அரசு ஏற்றுக்கொள்ளும். இவ்வாறுகத் தொழில் நுட்பப் பணியாளர்களாகவும் பயிற்சி பெற்ற வினைஞர்களாகவும், சற்றேறக்குறைய 85,000 பேர் தொழிலில் ஈடுபட்டிருக்கின்றார்கள்.

பயிற்சி பெற்ற பணியாளர்கள் உள்ளனர் என்ற அனுமானத்துடனேயே இத்திட்ட விஸ்தரிப்பு முறைகள் வெற்றிகரமாக நடைபெறும் எனக் கருதலாம். பல்வேறு துறைகளில் பயிற்சிபெறத் தக்க கிராம சேவக்குகளுக்கு இந் நாட்டின் பல பகுதிகளிலுள்ள பயிற்சி நிறுவனங்களில் தேறிய முறையிலும் சீரிய முறையிலும் பயிற்சி அளிக்கப்படுகின்றது. 1953-ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதத்தில் சமுதாயக் கல்விப் பயிற்சி நிலையங்கள் அலகாபாத், காந்தி தாம், ஐதராபாத், நீலோக்கேரி, சாந்திநிகேதன் முதலிய இடங்களில் துவக்கப்பட்டன. இராச்சிய அரசினர்களால் அனுப்பப்படுபவர்கள் இவ் விடங்களில் சேர்த்துக் கொள்ளப்பட்டு, பயிற்சியளிக்கப்படுகின்றனர். பயிற்சிக்காலம் கழிந்தவுடன் இவ் வமைப்பாளர்கள் (organisers) தத்தம் இராச்சியப் பகுதிகளுக்குச் சென்று, களப்பணி (field-work) அலுவல்களை மேற்கொள்வர். கிராமப் புறங்களில் அடிப்படைக் கல்விப் பயிற்சி அளிக்க ஆசிரியர்களையும்

மற்றும் பல நோக்குக் கைத்தொழில்களைப் பயிற்றுவிக்கும் நிலையங்களையும் மத்திய அரசினரின் கல்வி இலாக்கா திறக்க முயன்று வருகிறது.

தனிப்பட்ட திட்டங்களுக்கெனத் தேவையான உழைப்பும், பணமும் பொது மக்களிடமிருந்தே பெறவேண்டுவது இத் திட்டத்தின் அடிப்படைக் குறிக்கோளாகும். பொது நன்மைக்கென மக்கள் தாமாகவே முன்வந்து பண உதவியும், உழைப்பும் கொடுத்தால்தான் இத் திட்டத்தின் குறிக்கோள் கைகூடும் எனலாம். தற்போதுள்ள நிலையில் மாற்றங் காண அவர்கட்குப் போதிய பயிற்சியளித்தும், மனமாற்றத்தை உண்டுபண்ணியும் இதில் தீர்வு காண இயலும். சமுதாய வளர்ச்சித் திட்டமும், தேசீய விஸ்தரிப்புத் திட்டமும் அமைதலால் விரைவிலும், வன்மையாகவும் சமுதாயத்தில் மாற்றங்கள் ஏற்படும் என்று கருதக்கூடும்.

இத் திட்டங்களை நடத்திவைப்பதில் பெரும் பகுதியான பொறுப்பு இராச்சிய அரசினருக்கே எனலாம். தேசீய விஸ்தரிப்புத் திட்டமும் சமுதாய வளர்ச்சித் திட்டமும் அந்தந்த இராச்சியத்தில் செம்மையாக நடத்தப்பட்டு வருகிறதா என்று கவனிக்கப் பொறுப்புடைய குழு ஒன்று நியமிக்கப்படுகிறது. இக் குழுவின் பெயர் இராச்சிய வளர்ச்சிக்குழு. இதன் உறுப்பினர்கள் இராச்சிய முக்கிய மந்திரி, சமுதாய வளர்ச்சித் திட்ட மந்திரி, மற்றும் இதர உத்தியோகஸ்தரல்லாப் பெருமக்கள். இக் குழு பொதுப்படையில் வளர்ச்சிக்கான கொள்கைகளை விளக்கிக் குறிப்பிடுகிறது. இக் குழுவின் செயலாளராகப் பணியாற்றுபவர் வளர்ச்சி ஆணையாளர் (Development Commissioner) ; இதர வளர்ச்சி இலாக்காக்களின் செயல்களை இவர் ஒருங்கமைத்து வருவார். மாவட்ட வளர்ச்சிக் குழுவிற்கு மாவட்ட ஆட்சித் தலைவரே (District Collector) தலைவராக இருப்பார். மாவட்டத்தின் இதர இலாக்காக்களின் முதல்வர்கள் இக் குழுவின் உறுப்பினராவர். மாவட்ட வளர்ச்சித் திட்ட அதிகாரி (District Planning Officer) இதன் செயலாளராக இருப்பார். ஜில்லா போர்டின் தலைவரும் உபதலைவரும்கூட மாவட்டக் குழுவில் உறுப்பினராக இருப்பார்கள். மாவட்டப் பிரிவுகளில் உள்ள கோட்ட ஆட்சியாளர் (Revenue Divisional Officer) இத்துறையில் உள்ள செயல்களைப் புரியத் தனியே உதவியாளர் ஒருவரை நியமித்துக் கோட்ட ஆட்சியாளரை நீட்சி அதிகாரி (Extension Officer) யாகப் பணியாற்றும்படி ஏற்படுத்தியுள்ளனர். இராச்சியம் முழுமையும் இம்மாதிரியான அடிப்படையில் இயங்கி வருகிறது. ஆயினும் உள்ளூரின் தனிப்பட்ட நிலைமைக்கேற்பக்

கொள்கையில் மாற்றங்கள் செய்யப்படுகின்றன. கிராம மக்களின் கூட்டுறவைப் பெறவேண்டி அரசியல் சார்பற்ற கட்சியாகிய பாரத் சேவக் சமாஜ் (Bharat Sevak Samaj) இவர்களை ஊக்குவிப்ப தோடல்லாமல் தானுகவே வந்தும் உதவியளிக்கின்றது. ஆகவே சமுதாய நலத் திட்டத்தில் இக் கட்சியினரின் உழைப்பும் போற்றத்தக்க தெனலாம்.

**15. ஆராய்ச்சியும் நீட்சியும் :** [1] 1880-ல் வந்த பஞ்ச விசாரணைக் குழுவின் பரிந்துரைகளின் பேரில் மத்திய விவசாயத் துறை இதர பகுதிகளுடன் நீட்டப்பட்டு, 1894-ல் எல்லா மாகாணங்களிலும் அமைப்புப் பெற்றது. இதற்கு முன்னரே 1889-ல் இந்தியா மந்திரியால் இந் நாட்டிற்கு விவசாயத்தை நவீன விஞ்ஞான முறைகளால் பலப்படுத்தி வைக்க உள்ள வழிகளை ஆராய டாக்டர் ஓயல்கார் என்பவர் அனுப்பப்பட்டார். 1891-ல் வெளிவந்த அவரது அறிக்கையின் ஆதாரத்தில்தான் இந்திய விவசாயக் கொள்கை உருவாகியது. 1905-ல் விவசாய ஆராய்ச்சியில் முன்னேற்றம் ஏற்பட்டது. அவ் வமயம் மத்திய விவசாய ஆராய்ச்சி நிறுவனம் (Imperial Agricultural Research Institute) ஒன்று புஸாவிலும் அகில இந்திய விவசாய போர்டும் (All-India Board of Agriculture) திறக்கப்பட்டன. அரசினர் விவசாயக் குழுவினரின் (Royal Commission on Agriculture) பரிந்துரை களின் பேரில் இந்திய விவசாய ஆராய்ச்சிக் குழு (The Indian Council of Agricultural Research) 1929-ல் துவக்கப்பட்டது.

இம் மன்றத்தின் யோசனை கூறும் போர்டில் பல்கலைக் கழக விஞ்ஞானக் குழுவினர், இராச்சிய வல்லுநர்கள் உள்ளனர். இதன் ஆட்சிக் குழுவில் (Governing Body) இராச்சிய விவசாய மந்திரி களும் பாராளுமன்ற உறுப்பினர்களும் வர்த்தகத்தில் ஈடுபட்டவர் களும் இருப்பார்கள். ஆராய்ச்சி, நீட்சி போர்டுகள் இந்த ஆட்சிக் குழுவிற்கு உதவிபுரிகின்றன.

இம் மன்றம் ஆராய்ச்சி வேலைகளில் ஈடுபட்டுள்ள அநேக இடங்களில் தெரிவிக்கும் முடிவுகளை ஒருங்கமைத்தும், அவ் வாராய்ச்சிகளுக்கான பண வசதியளித்தும், ஆராய்ச்சிகளை நடத்தி யும் வருகிறது.

1951ஆம் ஆண்டில் இம் மன்றத்தை மாற்றியமைத்தும் செயல் களையும் பொறுப்புகளையும் செவ்வனே மேற்கொள்ள வேண்டிய நிலை யேற்பட்டது. குறிப்பாக நீட்சி வேலையில் இம் மன்றம் பொது

1. இந்தியா 1955, பக். 181-2.

வாக ஈடுபடுகிறது. ஆராய்ச்சியாளர்களையும், விவசாயிகளையும் சந்திக்க வைத்து, அதன் மூலம் தேசீய ஒருங்கமைப்புக் கொள்கையைப் பரப்பலாம். முக்கிய பண்டங்களான பருத்தி, சணல், கரும்பு, எண்ணெய் வித்துக்கள், புகையிலை, தேங்காய், கமுகு இவைகளுக்குத் தனித்தனியே குழுக்கள் அமைத்து, அவற்றிற்கான உற்பத்தி, விற்பனை இவைகளைப் பாதுகாக்கின்றனர்.

உணவு விவசாய இலாக்காக்கள் இவைகளைக் கூட்டுவதோடு கூட ஆராய்ச்சிகளையும் நடத்துகின்றன. ஆராய்ச்சிக் கேந்திரங்களையும் கவனித்துக் கொள்கின்றன.

டெல்லியில் உள்ள இந்திய விவசாய ஆராய்ச்சி நிறுவனம் நிலத்தின் உரவசதி, தொத்துப் பூச்சி, மற்றும் மழையின்மை இவைகளை எதிர்க்கவல்ல சக்தி உடைய வித்துக்களை நன்கு ஆராய்ந்து, நாடு முழுமைக்கும் அமைக்க முயலுதல், பூச்சிக்கடி, தொத்து நோய் இவைகளைத் தடுக்கும் முறைகள் இவைகளைப் பற்றி ஆராய்ச்சிகளை நடத்தி வருகின்றது. அதேபோன்று கட்டாக்கில் (Cuttack) உள்ள மத்திய அரிசி ஆராய்ச்சி நிறுவனம் விவசாயப் பொருளியலுக்கான ஆராய்ச்சி நடத்தி வருகிறது. இன்னும் அரிசி சம்பந்தப்பட்ட வரையில்பூங்காளானியல் (mycology), பூச்சியியல் (entomology), தாவரவியல் மற்றும் இரஸாயனம் இவைகளில் ஆராய்ச்சி நடத்துகின்றது. அரிசி விளைச்சலை அதிகரிக்க எம் மாதிரி பசுந்தாள் உரம் தேவை, புதிய முறையில் நாற்று நடுதல் இன்னும் இது சம்பந்தமான செயல்களையும் ஆராய்ந்து வருகின்றது.

அதிக அளவில் பலன் தரத்தகு உருளைக்கிழங்கினை உற்பத்தி செய்யப் பூனாவில் மத்திய உருளைக்கிழங்கு ஆராய்ச்சி நிறுவனம் உள்ளது. உத்தம அளவில் உற்பத்தி விவசாயம், உரமிடல் இவைகளைப்பற்றிய ஆராய்ச்சியும் எந்த வகை மண்ணிற்கு எவ்வகையான உரமிடுவது என்ற ஆராய்ச்சியும், தட்ப வெப்ப நிலை, தொத்து நோய்த் தடுப்பு முறை, சேமிப்பதில் விளையும் சேதாரத்தைக் குறைத்தும், (fungal) பூஞ்சான்கள் போன்ற ஜீவ அணுக்கள் (bacterial) சம்பந்தமான தொத்து நோய்களையும் நீக்க வழிகளை ஆராய்கின்றனர்.

இந்திய நிலையை அனுசரித்து ஐரோப்பிய நாட்டுக் காய்கறி வகைகளை மாற்றியமைக்க இயலுமா என்ற ஆராய்ச்சி குலு என்னுமிடத்தில் மத்தியக் காய்கறி உற்பத்திக் கூடத்தில் நடைபெற்று வருகிறது.

1936-ல் கான்பூரில் இந்தியச் சர்க்கரைத் தொழில் நுட்ப நிறுவனம் திறக்கப்பட்டது. இந்திய மத்தியக் கரும்புக் குழுவினர் (Indian Central Sugarcane Committee) இதை நடத்தி வருகின்றனர். சர்க்கரைத் தொழில் நுட்ப சம்பந்தமான ஆராய்ச்சிகளை நடத்துதலையும் தொழிற்சாலைகளுக்குத் தொழில் நுட்ப சம்பந்தமான உதவி புரிதலையும், இன்னும் இத் துறையில் மாணவர்களுக்குப் படிப்பினை அளித்தலையும் இது செய்து வருகிறது.

1914-ல் டேராடூனில் காட்டாராய்ச்சி நிறுவனம் திறக்கப்பட்டது. இதில் வனநூலுக்கேற்ப மரம் வளர்த்தல் முறை (silviculture), காட்டுத் தாவரநூல், பூச்சியியல், மரத்தைப் பதனப்படுத்துதல், கெடாமல் பாதுகாத்தல் (preservation) மரத்தைப் பற்றிய தொழில் நுட்பம், மரத்தைப் பற்றிய யந்திரக்கம்மி முறை (timber mechanics), செலுலோஸ் (cellulose), மரக்கூழ் சம்பந்தமான இரசாயனம், காட்டினின்று கிடைக்கும் இதர பொருள்களின் விவரம், அதைப் பற்றிய புள்ளி விவரம்; இவையனைத்தும் போதிக்கப்படுகின்றன. மேலும் காட்டிலாக்கா அதிகாரிகளுக்கான பயிற்சியும் தரப்படுகிறது.

இஜ்ஜட்நகரில் இந்தியக் கால்நடை ஆராய்ச்சி நிறுவனம் 1890-ல் திறக்கப்பட்டது. துவக்கத்தில் இது பாக்டீரியா சம்பந்தமான ஆய்கூடமாக இருந்தது. தற்போது இந்த நிறுவனத்தில் ஆறு ஆராய்ச்சிப் பகுதிகளும், நான்கு உட்பகுதிகளும் உள்ளன. இவை மாணவர்களுக்குப் பயிற்சி அளித்தும், சீரங்களை (vaccines) உற்பத்தி செய்தும் வருகின்றன.

பங்களூரில் இந்தியப் பால் பண்ணை ஆராய்ச்சி நிறுவனம் உள்ளது. இங்குப் பால் பண்ணையைப் பற்றிய படிப்பினை மாணவர்களுக்குப் போதித்துத் தக்க பயிற்சி அளிக்கப்படுகிறது. பால் பண்ணையைப் பற்றிய பிரச்சினைகளில் ஆராய்ச்சிகள் நடைபெற்று வருகின்றன. இரண்டு கால்நடைப் பண்ணைகள் கர்னலிலும், கோவையிலும் ஏற்படுத்தப்பட்டுள்ளன. ஆனந்தில் கிரீம் (பால் ஆடை) தயாரிப்பு நிறுவனம் தோற்றமாகியுள்ளது.

அநேக இதர ஆராய்ச்சி நிறுவனங்களில் ராஞ்சியில் உள்ள அவலரக்கு ஆராய்ச்சி நிலையமும் (Indian Lac Cess Research Institute), மீன்கள் ஆராய்ச்சி நிறுவனங்கள் பாரக்பூர், பம்பாய், மண்டபத்திலும் ஏற்படுத்தப்பட்டுள்ளன. பருத்தி, புகையிலை, எண்ணெய்வித்துக்கள், கரும்பு, தேங்காய், கமுகு இவைகளுக்கெனத் தோன்றியுள்ள மத்தியக் குழுவினர்கள் பற்பல விடங்களில்

ஆராய்ச்சிக்கெனத் திட்டமிட்டும் அதற்கெனப் பண உதவி புரிந்தும் வருகின்றனர்.

**16. அதிகப்படியான உணவு வளர்ச்சி செய்யத்தகு பிரசார முறை :** *இந்திய விவசாயத்தை வளர்க்க இராச்சியங்களால் உருப்படியான திட்டம் ஏதும் 1943-க்கு முன்னர் செய்யப்படவில்லை.* அதிகப்படி உணவு வளர்ச்சி செய்யத்தகு பிரசார முறை முதன் முதலில் முரணான கொள்கையில் அமைந்து, அதனால் தீர்வு காணாது போயிற்று. நிலச்சட்டங்கள் போடப்பட்டும், ஆராய்ச்சிகள் நடத்தியும், நிலச்சேனையை உருவாக்கி உழைக்கும்படிச் செய்ய முயன்ற காரணத்தால் இந்தப் பிரசாரத் திட்டம் பரந்த அடித்தளத்தில் அமைந்து நாடு முழுமையும் வெகு விரைவில் பரவி வருகிறது.

1943ஆம் ஆண்டில் இத் திட்டம் துவக்கப்பட்டது. உணவு உற்பத்தியை அதிகரிக்க மத்திய அரசினர் இராச்சியங்களுக்கு மான்யம் வழங்கினர். மத்திய அரசினர் நடப்பில் கொடுக்கும் மான்யம் பொதுவாக அமையாது குறிப்பிட்ட முக்கியத் திட்டங்களுக்கெனக் கொடுக்கப்படுகிறது. இப் பிரசாரம் இருவகையாகும். ஒன்று வேலைகளுக்கான திட்டம்; மற்றொன்று வழங்குதற்கான திட்டம். முதலில் கூறியுள்ள திட்டப்படிக் கிணறுகள், குளங்கள், சிறிய நீர்த்தேக்கங்கள், வாய்க்கால்கள், குழாய்க் கிணறுகள் இவைகளையமைக்கவும், பழுது பார்த்து வரவும், மண்ணரிப்பைத் தடுக்கக் கான்டூர் வரப்பு முறைகளைக் கையாளவும் இதில் திட்டமிடப்பட்டுள்ளது. இத் திட்டத்தின் கீழ் எரு, உரம் மற்றும் விதைகள் இவைகளை வழங்க வசதியும் செய்யப்பட்டுள்ளது. 1951-52-ல் இத் திட்டத்தைச் செறிந்த முறையில் நடத்த ஆரம்பித்துள்ளனர். 1952-ல் நியமிக்கப்பட்ட விசாரணைக் குழுவினரின் பரிந்துரையாவது குறிப்பிட்ட வட்டாரங்களில் நீர் வசதி ஏற்படின், இதில் ஊக்கத்துடன் வளர்ச்சிக்கான செயல்கள் நடத்த வேண்டும்.

**17. மத்திய எந்திரக் கலப்பை நிறுவனம்:** அமெரிக்கப் படையினர் விட்டுச் சென்ற 200 எந்திரக் கலப்பைகளைக் கொண்ட இந்த நிறுவனம் 1947-ல் உருவாகியது. இதன் ஆரம்ப கால முதல் நாளது தேதி வரை ஆசியா முழுமையிலும் நில மீட்சி பெருமளவில் செய்துள்ளது இது ஒன்றே. நிலத்தில் வெகு ஆழம் ஊடுருவிப்போகும் வேர் உள்ள களை நிறைந்த கான்ஸ் (kans) நிலத்தில் இதன் வேலை பெரிய அளவில் நடைபெறுகிறது. காட்டையழித்தும், மரத்தை வீழ்த்தியும், நிலப்பரப்பினைச்

சமமாகவும் செய்து வருகிறது. 1951-ல் 240 புதிய எந்திரக் கலப்பைகளைக் கொள்முதல் செய்தனர். இதற்கான கடன் உலக பாங்கியிலிருந்து வாங்கினர். 1951 - 52 முடிய 3 ஆண்டு களில் மீட்கப்பட்ட நிலங்களைப் பற்றிய புள்ளி விவரம் வருமாறு :

| ஆண்டு | மீட்கப்பட்ட ஏக்கர் நிலம் |
|---|---|
| 1948 - 49 | 71,497 |
| 1949 - 50 | 79,346 |
| 1950 - 51 | 2,81,962 |
| 1951 - 52 | 1,55,367 |

அநேக இராச்சிய அரசினர்கள் தங்கள் வசமும் மற்றும் மேற்படி பகுதிகளிலுள்ள தனியார் வசமும் எண்ணிறந்த எந்திரக் கலப்பை வைத்துள்ளனர். இவற்றால் நில மீட்சி செய்வதோடல்லாது இயந்திர முறையில் விவசாயப் பணிக்கும் உதவுகிறது

**18. இணைந்த பயிர் உற்பத்தி :** அதிக அளவுப் பயிர் உற்பத்தித் திட்டத்தைப் பாதிக்காமல் 1950–51-ல் ஒருங்கமைந்த அல்லது இணைந்த பயிர்த்திட்டத்தை உருவாக்கினர். உணவு, பருத்தி, சணல், சர்க்கரை இவைகளில் சுய தேவையைப் பெற இத்திட்டம் போடப்பட்டது. அடுத்த ஆண்டில் இது முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் இணைக்கப்பட்டது. நில மாற்றத்தில் 10 ஆண்டுத் திட்டமாக இது அமைந்தது. விஞ்ஞான முறையிலும் சீரிய முறையிலும் நீண்டகால எல்லைக்குள் நீர், நிலம், கால்நடை இவைகளைப் பயன்படுத்தவே இத் திட்டம் எதிர்நோக்குகிறது. இதில் காணும் 5 முக்கிய வளர்ச்சித் திட்டங்களாவன : (i) 43 மில்லியன் ஏக்கர் நிலங்களைச் சீராக்கி நீர் வசதியளிக்கப் போதிய பண ஈடு செய்தல், (ii) 10 மில்லியன் ஏக்கர் களர் நிலமும், பயனற்றதாக உள்ளதுமானவற்றை மீட்டுப் பயிரிட முயலுதல், (iii) சற்றேறக்குறைய ஓர் இலட்சம் கிராமங்களிலிருந்து உழவரைக் கொண்டு பூமிசேனை என்னும் (Bhumi Sena) நிலப் படையை அமைத்தல், (iv) கோஸம்வர்தன் (Gosamvardhan) திட்டப்படி 60,000 பொலிகாளைகளை ஓராண்டில் கொணர்ந்து, கோமாரி நோயை அறவே ஒழிக்க முயலுவது, (v) தொடர்ந்து வன மஹோத்ஸவ (Vana-Mahotsava) த்தை நடத்தி அதன் மூலம் 300 மில்லியன் மரங்களை நட்டு வருதல் முதலியன.

# 8. நிலக்குடி முறையும் நிலவருவாயும்

**1. மூன்று வகைகளான நிலக்குடி முறை :** இந்தியாவில் மூன்று வகையான நிலக்குடிமுறை அமைப்புகள் உள்ளன. அவை (i) ஜமீன்தாரி முறை, (ii) கூட்டுக் கிராம முறை, (கூட்டுக்கிராமச் சமுதாயம் அல்லது மகால்வாரி), (iii) ரயத்வாரி முறைகளாகும். (i) ஜமீன்தாரி முறையின்கீழ்த் தனிப்பட்ட ஆள் அல்லது கூட்டாகவுள்ள நிலக்கிழார் என்ற பலவகையான குடிமுறைகளைச் சேர்த்துள்ளோம். வங்காளத்திலிருப்பது போல இதன் ஜமீன்தாரி எல்லைக்குள் உள்ள நிலம் அனைத்திற்குமுண்டான நிலவரியை ஒரு முழுத் தொகையாகச் செலுத்த இவர்களே பொறுப்பாளிகளாவர். (ii) மகால்வாரி முறையில் சிறுசிறு நிலப்பிரிவுகள் ஜமீன்தாரி முறையைப் போன்று அமைந்திருப்பினும் இதில் சில மாறுபட்ட அமைப்புக்கள் காணப்படுகின்றன. கிராமச் சமூகம் முழுவுடைமை பெற்றும் இதற்கான நிலவரியைத் தனித்தனியாகவோ கூட்டாகவோ கட்டவேண்டியது. இம் மாதிரியான பகுதிகளில் வரி வசூலிக்க ஒரு மேம்பாடான தலைவன் உள்ளான். (iii) ரயத்துவாரி முறையில் நிலம் தனித்தனியே உடைமையாகக் கொள்ளப்படும்; கூட்டாக அமைவதில்லை. இவர்கள் ஒரே கிராமத்தில் வசித்தாலும், அவரவர் நிலங்கட்கான நிலவரியைச் செலுத்துவதற்கு அவரவரே பொறுப்பாளிகளாவர். அரசினர்க்கும் இவர்களுக்கும் இடையில் நடுவினர் யாரும் இல்லை எனலாம்.

ரயத்துவாரிப் பகுதிகளில் (சென்னையிலும் பம்பாயிலும்) நிலம் பயிரிடுபவரே நிலக்கிழாராவர்.[1] குத்தகைக்கோ வாரப்பயிருக்கோ நிலம் விடப்பட்டால் ஒப்பந்தம் செய்துகொண்டு பயிரிடுகிறார்கள்.

1. பேடன்-பவல் எழுதிய லாண்ட் ரெவின்யு அண்டு டென்யூர் இன் பிரிட்டிஷ் இந்தியா, பக். 129.

ஜமீன்தாரிப் பகுதிகளிலும், கூட்டுக் கிராம முறையிலும் இந் நிலைமை சிறிது சிக்கல் நிறைந்ததாக வுள்ளது. ஏனெனில் நில உடைமையினர் தமக்குக் கீழ்ப் பல்வேறு கிளை உடைமை யினரை ஏற்படுத்தியுள்ளனர். மேலும் குடிவாரப் பயிர்முறை உரிமையையும் அமைத்துவிடுகிறார்கள். பேடன்பவல் கீழ்க் கண்ட அட்டவணையில் இந் நாட்டிலுள்ள பல்வேறு முறைகளான உடைமைகளையும் அவைகள் ரயத்துக்கும் அரசினருக்கும் இடையே எவ்வாறு இயங்குகின்றன என்றும் காட்டியுள்ளார்.

| ஒரே அக்கறை யுள்ளவர் | இரு அக்கறை யுள்ளவர்கள் | மூன்று அக்கறை காட்டுபவர் | நான்கு அக்கறை உள்ளவர்கள் | |
|---|---|---|---|---|
| 1. அரசினரே முழு உடைமை பெற்றுள்ளனர். | 1. அரசினர்<br>2. ரயத்து அல்லது சென்னை பம்பாய்போராரில் உள்ளது. போன்ற நிர்மானிக்கப் பட்ட (குடிவாரப் பயிர் இல்லை.) உரிமையையுடைய குடியானவன் | 1. அரசினர்<br>2. நிலக் கிழார் (தாலுக்தார் ஜமீன்தார்), அல்லது ஒன்றாகக் கருதப் பட்ட கூட்டுக் கிராமக் குழு.<br>8. நிலம் பயிரிடுபவர், கூட்டுப்பங்காளிகள் முதலியோர். | 1. அரசினர்<br>2, நிலக்கிழார்<br>3 இவரின் கீழ் உப அல்லது கிளைப்பொறுப்பாளர் அல்லது குடிவார ஆட்கள்<br>4. ரயத்து அல்லது குடியானவர் | 1. அரசினர்<br>2. முதல்வர் அல்லது உயர் நிலக்கிழார்<br>3. நியாயமான நில உடைமை உடையவர் (கிராமக் கழகம்)<br>4. நிலம் பயிரிடுபவர், கூட்டுப் பயிர் செய்பவர் முதலியோர். |

**2. உப அல்லது கிளை உரிமையாளர்:** உப அல்லது கிளை உரிமையாளர்களைப் பற்றிய உதாரணங்களை இங்கு எடுத்துக் காட்டலாம். (i) வங்காளத்தில் ஒரு சிலர் ஒரு குறிப்பிட்ட தொகையைக் கொடுத்து, சலுகை பெற்ற உப அல்லது கிளை உரிமையைப் பெறுகின்றனர். இது நிரந்தரமானது; சந்ததியாக நிற்கக்கூடியது; வேண்டும்போது மாற்றிவிடக் கூடியது. இவர்களுடைய அந்தஸ்தை விளக்குவதில் இடையூறு ஏற்பட்டதால் 1885-ல் போடப்பட்ட சட்டத்தின்கீழ் 100 பிகாக்களுக்குக் (bighas) குறைவுபட்ட நிலக்கிழார் அனைவரும் ஜமீன்தாரர்கீழ் அமைப்பிலுள்ள குடிவாரக்காரர் எனக் கூறப்பட்டனர். (ii) அடுத்தபடியாக உள்ளவர்கள் பட்டிதாரர்கள் (pattidars). இவர்கள் நிரந்தரக் குத்தகைக்கு ஜமீன்தாரரால் நிலம் விடப்பட்டவர்கள். இந்தப் பட்டிதாரர்கள், தாங்கள் குத்தகைக்கு எடுத்துக் கொண்ட நிலம் அளவில்பெரியதாக இருந்தமையால் தங்களுடைய

அதிகாரத்தின் கீழ், 'திர் பட்டிதார்கள்' (dir pattidars) என்ற வகையினரை நியமித்தார்கள். 1819-ல் ஏற்பட்ட வங்காள ஒழுங்குச் சட்டம் இத்தகைய உரிமைகளை அங்கீகரித்தது. (iii) கிளை உரிமையாளர்களன்றி மற்றுமோர் உரிமையாளர் குழுவு முண்டு. இவர்கள் தங்கள் தனிப்பட்ட அமைப்பினால் அரசுக்குச் சேரவேண்டிய வரியை மாத்திரம் கொடுப்பர். ஆனால் தங்களைக் கட்டுப்படுத்தும் தலைமை உரிமையாளர்களுக்கு ஒன்றும் செலுத்த வேண்டிய நிர்ப்பந்தம் இல்லை. மத்தியப் பிரதேசத்தில் செயற்கை நிலையில் மால்குஸார் (malguzars) என்ற வகுப்பு உண்டாகியது. இதனால் ஒவ்வொரு கிராமத்திலும் வரி வசூலிக்கும் பொறுப்பு ஒரு நிலக்கிழாரிடம் ஒப்படைக்கப்பட்டது. இவ்வாறு மால்குஸார் வகுப்பு ஏற்பட்டதால், அரசினர் கிளை அல்லது உப உரிமை யாளரின் அதிகாரங்களை அங்கீகரிக்கும் அவசியம் ஏற்பட்டது. (iv) அயோத்தியாப் பகுதிகளில் சிற்சில காலங்களில் கிராம மனைத்துமே தனி உரிமையைப் பெற்று விவசாயப் பணியைச் செய்து வரும். இம்மாதிரி சமயங்களில் தாலுக்தார் (taluqdar) என்ற தலைமைப் பிரபுவிற்குக் குறிப்பிட்ட குத்தகைத் தொகையைக் காணிக்கையாகச் செலுத்துவார்கள். அரசினருக்கும் தாலுக் தாருக்குமிடையே நிலவரி ஒப்பந்த மேற்பட்டு அதற்கான தொகையை அவர் கொடுத்துவிடுவார். உப ஒப்பந்தப்படி தாலுக் தாருக்கு ஒவ்வொரு கிராமத்திய உப உரிமையாளர் செலுத்த வேண்டிய குத்தகைத் தொகை தீர்மானிக்கப்பட்டது.

3. **வாரப் பயிரிடுபவரின் உரிமைகள் :** கிளை அல்லது உப உரிமையாளர்களைப் போல வாரப்பயிரிடுபவர்களும் பல வகைப் பட்ட உரிமை பெற்றவர்களாக உள்ளனர். ஆங்கில அரசினர் அவர்களுடைய உரிமைகளைக் குறித்துத் தக்க முறையில் விளக்கம் கொடுத்துள்ளனர். அவர்களின் உரிமைகளை அறிந்து இலக்கணம் கூறுவதில் அதிக இடையூறுகள் உண்டாயின. பண்டைக் காலத்தில் வாரப்பயிரிடுபவர் அனுபவித்து வந்த மேம்பாடான உரிமைகளுக்கான ஆவண விவரம் கிடைப்பது அரிதாக இருந்தது. பழைய உரிமைகளின் அடிப்படையில் வந்த முதலாளிகள் வாரப்பயிரிடுவோர் கிடைக்காத காரணத்தால் சில ருக்கு வார முறை வசதியளித்துப் பயிரிடச் செய்தனர். இம்மாதிரி நிலைமைகளில் இயல்பான வாரப் பயிரிடுவோர் இன்னுரென்றும் செயற்கை முறையில் சேர்ந்த வாரப் பயிரிடுபவர் இன்னுரென்றும் ஒதுக்கி விளக்கம் கூற நேரிட்டது. செயற்கை வார முறைப் பயிரிடு பவரின் சிக்கலைத் தீர்த்துவைக்க 12 ஆண்டுகள் வாரப்பயிரிடுபவர் என்ற காலவரம்புக் கொண்ட சட்டமொன்றை வங்காளம், ஆக்ரா,

மத்தியப் பிரதேசத்தின் குறிப்பான சில பகுதிகளில் இயற்றி அமலாக்கினர். 1859-ல் வங்காளத்திலும் ஆக்ராவிலும் அமலில் கொணர்ந்த வாரப்பயிரிடுவோரின் உரிமைச் சட்டப்படி ஒரே நிலத்தில் பன்னிரண்டு ஆண்டுகள் சேர்ந்தாற்போல் பயிர் செய்தால், அவர் வாரப்பயிரிடுபவர் என ஒப்புக்கொள்ளப் பட்டனர். 1885-ல் திருத்தப்பட்ட இச் சட்டத்தின்படி, ஒரே நிலத்தில் அல்லது அதே கிராமத்திலுள்ள நிலப்பகுதியில், பன்னிரண்டு ஆண்டுகள் தொடர்ந்து பயிரிட்டால், அக் குடியானவன் வாரப்பயிரிடுபவனுக ஒப்புக்கொள்ளப்பட்டான். 1928 ஆம் ஆண்டில் போடப்பட்ட வாரப்பயிரிடுவோர் உரிமைச் சட்டப்படி நிலக்கிழார் மாற்றுக் கட்டணம் பெற்று நிலவார முறையை மாற்றவும், ஒரு வாரப் பயிரிடுவோரை நீக்கவும் உரிமை கொடுக்கப்பட்டது.

ஜமீன்தாரி, மகால்வாரிப் பிரதேசங்களில் நிலக்கிழார்கள் தங்கள் முயற்சிகளால் வாரப் பயிரிடுவோரின் உரிமைகளைப் போக்கிப் பழைய கொள்கைகளைப் புறக்கணித்தனர். புதிய சீர்திருத்தச் சட்டங்கள் அவ்வப்போது அமலாக்கி, வாரப் பயிரிடுவோரை ஊக்குவித்தது. இதன்படி நியாயமான வாரத்தொகை, நிலை பெற்ற வாரப்பயிர் ஒப்பந்தம், நிலமாற்றக் கட்டணம் கோராமை ஆகிய மூன்று அரிய நன்மைகள் வாரப் பயிரிடுவோர்க்குக் கிடைத்தன. இவைகளை மூன்று 'நி'க்களில் மனதில் இருத்திக் கொள்ளலாம். ரயத்துவாரி முறையின்கீழ் நிலக்கிழார் பயிரிடுபவருக்குக் கிடைத்த அதே சலுகைகள் இவர்களுக்கும் கிடைத்தன.

1937ஆம் ஆண்டில் எட்டு மாகாணங்களில் காங்கிரஸ் ஆட்சி நிலைபெற்றவுடன் நில வார முறைகளுக்கு மிகப் பெரிய கண்காணிப்பு ஏற்பட்டது. அதுவும் ரயத்துவாரி, ஜமீன்தாரிப் பகுதிகளில் தீவிர முயற்சிகள் நடந்து வந்தன. பீகார் மாகாணக் குடிவாரமசோதா (1938), ஐக்கிய மாகாணக் குடிவாரச்சட்டம் (1939), வங்காளக் குடிவாரச் சட்டம் (1938), மத்திய மாகாணக் குடிவாரச் சட்டம் (1939), இவைகள் ரயத்துவாரி முறையில்லாப் பகுதிகளிலும் ஏற்படுத்தப்பட்ட குடிவாரம் சீர்திருத்தச் சட்டங்களாகும். ரயத்துவாரிப் பகுதிகளில் வாரப் பயிரிடுவோரின் எண்ணிக்கை அதிகரித்ததாலும், பயிரிடாதவர் கையில் நிலம் போய் வீணுகிய தாலும் வாரப் பயிரிடுவோரிடையே அதிகமான போட்டி ஏற்பட்டதாலும், (இதனுல் பணத்தொகை அதிகரிக்க வாரம்பித்தது.) இந் நிலைமைகளைக் கட்டுப்படுத்த ஜமீன்தாரி நிலப்பகுதியில் ஏற்படுத்தப்பட்ட சட்டம் போன்ற நடவடிக்கைகளைக் கைக்கொள்ள

வேண்டியதாயிற்று. 1939-ல் பம்பாய்க் குடிவாரச் சட்டம் இத் துறையில் மிகவும் மேம்பாடான முறையில் அமைக்கப்பட்டது. இதன்படி 1938ஆம் ஆண்டு ஜனவரி மாதம் முதல் தேதிக்கு ஆறு ஆண்டுகள் முன்பு வாரப் பயிரிடுபவராகச் சேர்ந்தவரை வெளியேற்றுவது தடுக்கப்பட்டது. அதன்படி அன்னாரைப் 'பாதுகாக்கப்பட்ட வாரப் பயிரிடுபவர்' எனக் கூறினர். நிலக் கிழார் இவர்களிடமிருந்து வரம்பு மீறி வாரத்தொகை பெறக் கூடாதென்றும், தீர்வை, வரி, தனி விதிப்பு இவைகளின் பேரில் பணம் கறக்கக் கூடாதெனவும் சட்டமியற்றப்பட்டது. நிலக்கிழாருக்கு வரியில் தள்ளுபடியோ, வரிவஜாவோ ஏற்பட் டால், அதே நிலையில் வாரப் பயிரிடுபவருக்கும் அம்மாதிரித் தள்ளுபடி அல்லது சலுகை காட்டவேண்டும். 1949-க்கு முன்னர் இயற்றப்பட்ட சட்டங்களை ஆய்ந்து நோக்கின், ஜமீன்தாரர் அல்லது நிலக்கிழாரின் கீழ்ப் பணியாற்றிவரும் பலவகை உழைப் பாளர்களின் அல்லலகன்று குணமடையவே இச் சட்டங்கள் இயற்றப்பட்டன என்பது அறியலாம். நில உடைமை அமைப்பு, மற்றும் அதன் பல்வேறு வகைகளை மாற்றியமைக்க அப்போது வாய்ப்புக் கிடைக்கவில்லை. சுதந்திர மடைந்த பிறகே இணைப்புப் பெற்ற சட்டங்கள் போடப்பட்டன. அவற்றைப்பற்றிய விளக் கங்கள் இந்த அதிகாரத்தின் பிற்பகுதியில் காணலாம்.

**4. நில வருவாய் நிர்ணயம்:** நிலத் தீர்வை, கீழ்க் கண்ட குறிப்புக்களைப் பொறுத்தே அமையும். அவை: (i) உற்பத்தி யாகும் விளைச்சல் அல்லது அறுவடையில் இராச்சியத்திற்குச் சேர வேண்டிய பகுதி அல்லது வாரப்பகுதித் தொகையும், (ii) இத் தொகையை அரசினர் வசம் சேர்க்கவேண்டிய பொறுப்புள்ளவர் அல்லது உள்ளவர்கள் இன்னாரென்றும், (iii) தனியார் உரிமை கள், இன்னவை என்றும் முதலில் தீர்மானிக்க வேண்டும். எங்கெங்கே நிலப்பிரபுத்வ முறை அமலில் உள்ளதோ அங்கங்கே படிப்படியாக உரிமையாளர் பலர் உண்டாகியிருப்பர். அவர் களின் உரிமைகளையும் அரசு நன்கு அங்கீகரித்து, அதற்கேற்ற முறையில் நிலத் தீர்வையிட வேண்டும். அரசினர் தமக்குரிய நிலவருவாய்ப் பங்கினை மதிப்பிடுவதைத் தீர்வையிடுதல் செய்யும் போது இயல்பான பருவ நிலையை அனுசரித்துத் தீர்வையிடுவர். ஆயினும் எதிர்பாராத காரணத்தால் பெரும் வெள்ளம், மற்றும் மழையில்லாமை போன்றவைகளால் பயிர் சேதமடைந்தால், இதனையொட்டி நிலவரியை ஒத்திப்போட்டோ, பகுதி அல்லது முழு வரி வஜா (தள்ளிவிடவும்) செய்தோ உதவி அளிக்கப்படும். அடுத்த அறுவடையின் தன்மையையொட்டி முன்னர் ஒத்திப் போட்ட வரியின் வசூலிப்போ, தள்ளி விடுதலோ தீர்மானிக்கப்

படும். அடுத்தடுத்த இரண்டாண்டுகளுக்கு மேல் விளைச்சல் மிகவும் குன்றிப்போனால் வரியின் ஒரு பகுதியையோ, வரி முழுவதையுமோ தள்ளி விடுவார்கள்.

**5. நிலவரியமைப்பு முறைகள்:** (i) நிலவரியமைப்பு இருவகைப்படும். வங்காளத்தின் பெரும் பகுதியிலுள்ளது போன்ற நிரந்தர நிலவரி யமைப்பு முறை (Permanent Revenue Settlement) (ii) தற்காலீகமாக அவ்வப்போது குறிப்பிட்ட கால அளவில் நிலவரியை அமைப்பது (Temporary Revenue Settlement). இக்கால அளவு பம்பாய், சென்னை, உத்தரப் பிரதேசம் இவைகளில் 30 ஆண்டுகளாகவும், மத்தியப் பிரதேசத்தில் 20 ஆண்டுகளாகவும், பஞ்சாபில் 40 ஆண்டுகளாகவும் உள்ளது.

உரிமை முறைகளை யனுசரித்து நிலவரி முறைகளை அமைப்பார்கள். மூன்று உரிமை முறைகளை யனுசரித்து மூன்று வகை நிலவரி முறைகள் அமைந்துள்ளன. அவையாவன: (i) தனி நிலக்கிழாரின் பொறுப்பிலுள்ள தனிப் பண்ணைகளுக்கான வரி விதிப்பு முறை. இதன் கீழ் (அ) வட சென்னை, வாரணாசி (காசி), வங்காளம் இப் பகுதிகளிலுள்ள ஜமீன்தாரி முறையில் ஈடுபட்ட நிரந்தர நில்வரித் திட்டம் (ஆ) வங்காளத்திலுள்ள இதர ஜமீன்தார்களைக் கட்டுப்படுத்தும் தற்காலீக நிலவரித் திட்ட முறை. (இ) அயோத்தியாவிலுள்ள தாலுக்தார்களைக் கட்டுப்படுத்தும் தற்காலீக நிலவரித் திட்டம் ஆகியவை அடங்கும். (ii) கூட்டுரிமை பெற்ற குழுவினர் பொதுவாக, கிராமச் சமுதாயம், இவைகளை மகால்வாரி முறைகள் எனக் கூறலாம். இவர்கள் தற்காலீக நிலவரித் திட்டத்தின் கீழ்ப் பாகுபாடு செய்யப்பட்டுள்ளனர். இவற்றின் வகைகளாவன: (அ) அயோத்தியா, ஆக்ரா போன்ற இடங்களிலுள்ள தாலுக்தாரர் இல்லா கிராமச் சமூகங்களுள்ள மகால்வாரி முறை; (ஆ) பஞ்சாப்பிலுள்ள மகால் வாரி முறை நிலவரி. (இ) மத்தியப் பிரதேசத்திலுள்ள மால்குஜாரி முறை. (iii) தனி மனிதர் கொண்டுள்ள நிலம் அல்லது தனியார் நில உடைமை; அதன் வகைகளாவன: (அ) ரயத்துவாரி முறையமைந்த சென்னை, பம்பாய், பேரார்ப் பகுதிகள் (ஆ) அரசினரால் அங்கீகரிக்கப்படாத ரயத்துவாரி முறையில் தனிப்பட்ட வகை அஸ்ஸாமிலும் குடகிலும் உள்ளதைப் போன்றது. ஆகவே, ஒவ்வொரு நிலவரித் திட்டமும் மூன்று பிரிவின்கீழ் ஏதாவதொன்றில், நிலவரி முறையிலாவது தற்காலீக நிலவரி முறையிலாவது அமையும்.

வங்காளமும், பீகாரும் நிரந்தர நிலவரி முறையின்கீழ் அமைந்துள்ளன. ஒரிஸ்ஸாவில் 44%ம், சென்னையில் 32%ம், அஸ்ஸா

யில் 11%ம் உத்தரப் பிரதேசத்தில் கிட்டத்தட்ட அதே சதவீத அளவிலும் நிரந்தர நிலவரிமுறை யுள்ளது. மத்தியப் பிரதேச முட்பட்ட இதர ஜமீன்தாரி வட்டாரங்களில் தற்காலீக நிலவரி முறையே உள்ளது.

**6. ஜமீன்தாரி நிலவரித் திட்டம்:** முகலாய ஆட்சி சரிந்த வுடன் தொன்மையான நிலவரி வசூல் முறைகள் மறைந்தன. அதுவும் குறிப்பாக அக்பர் அமைத்த நிலவரித் திட்டம் உருவின்றிச் சீரழிந்தது. ஜமீன்தாரர்கள் குடியானவரிடமிருந்து வஞ்சித்துப் பணம் பிடுங்கியும், சிற்றூரின் அரசுகள் அவ்வப் போது தீர்வையை விதித்துப் பெரும் பகுதியான விளைச்சலைக் கவர்ந்தும் வந்தனர். 1765 ஆம் ஆண்டின் பிறகு 'திவானி' முறையைக் கிழக்கிந்தியக் கம்பெனி கையாள ஆரம்பித்தது. அது முதல் தோன்றிய குழப்பங்கள் எண்ணிலும் ஏட்டிலுமடங்கா. இக் குழப்பத்தின் அடிப்படைக் காரணம் வருமாறு: முதலாவ தாக, கிழக்கிந்தியக் கம்பெனி தங்களது பங்குதாரர்களுக்குப் பெரிய அளவில் லாப ஈவுகள் கொடுக்க விழைந்தது. இரண்டா வதாக வங்காளத்திலும் மற்றும் இதர பகுதிகளிலும் வரி வசூல் செய்ய முடிவு கட்டியதே ஒழிய சரியான நாட்டாட்சி செய்ய அது முன்வரவில்லை. மேலும் நிலவரி வசூல் செய்யப் போதிய அனுபவம் பெறுத காரணத்தாலும், இதர செயல்களில் ஈடுபட்டி ருந்த காரணத்தாலும் இக் குழப்பம் நேரிட்டது எனலாம். இவை களைச் சீர்படுத்திச் செவ்வனே நிலவரி வசூல் முறையை அமைக்க 1786-ல் காரன்வாலிஸ் பிரபு இந்தியாவிற்கு அனுப்பப்பட்டார். மூன்றுண்டுகள் தொடர்ந்து விசாரணை நடத்தி முடிவில் ஜமீன் தாரர்களுடன் வரி வசூல் திட்டமொன்றை உருவாக்கினர். அதன் படி ஜமீன்தாரர்கள் முழு உரிமையாளர்களென்றும், அவர் களுடைய நிலப்பரப்பில் அவர்கள் வரி வசூலிக்க வேண்டிய தென்றும், அவர்கள் ஆங்கிலக் கிழக்கிந்தியக் கம்பெனிக்குக் கடமைப் பட்டனரென்றும் அவர்கள் வசூலிக்கும் வரிப் பணத்தில் $\frac{1}{11}$-ஐத் தாம் கொண்டு, மிகுதி $\frac{10}{11}$-ஐ அரசிடம் செலுத்தி வர வேண்டியது என்றும் முடிவாக்கினர். இம் முறையில் அவசர அடியாக நிலவரி நிர்ணயம் செய்தது சரியன்று. நிலசர்வே செய்யாது, நிலத்தின் உற்பத்தி இன்னதென்று ஆராயாது ஜமீன்தாரர்களை வரி வசூலிப்பவராக அமைத்ததோடன்றி அவர்களே நில உரிமை பெற்றவர்களென்று முடிவு கட்டியதும் தவறு. எனினும் தொன்றுதொட்டு நில உரிமை பெற்றவர்களை விலக்கி, அவ்விடத்தில் நிலவரி வசூல் செய்யும் ஜமீன்தாரர்களைப் பொறுப்பாக்குவது கிழக்கிந்தியக் கம்பெனியின் எண்ணமில்லை.

தொடர்ச்சியாக நிலவரி பெறவேண்டுமென்ற ஆர்வத்தில், கம்பெனி, உண்மையான நில உரிமையுள்ளவர்களுக்குப் பாதுகாப்புக் கொடுக்கவேண்டிய தேவையைத் தெரிந்திருந்தும் அவர்களுடைய உரிமை பறிக்கப்படாதிருக்கச் சட்டமொன்றும் செய்யவில்லை. முதன் முதலாக வருமானம் நிர்ணயம் செய்யப்பட்டதே மிகப் பளுவாகக் கருதப்பட்டது. அந்த விகிதத்தில் நிலவரி கொடுக்கத் தக்க வாரப் பயிரிடுபவர் முன் வரவில்லை. இம்மாதிரி குழப்பங்களுக்கிடையே கம்பெனியாருக்குச் சேர வேண்டிய வரி பாக்கிகளைக் கொடுக்கமுடியாத அநேக பண்ணைகளும் ஜமீன்களும் ஏலத்திற்கு வந்தன.[1] நாளடைவில் சமாதானம் ஒழுங்கு இவை ஏற்பட்ட காரணங்களால் பண்ணைகளின் விலை உயர்ந்தது. ஜமீன்தாரர்கள் அதிகப்படியான வருமானம் பெறலாயினர். நிரந்தர நிலவரித் தொகை ஜமீன்தாரர் பெறும் வருமானம் மிகவும் குறுகிய தொகையாக இருந்த காரணத்தால் அவர் பெரும் செல்வந்தரானார்.

நிரந்தர நிலவரித் திட்ட முறையைக் கிழக்கிந்தியக் கம்பெனி அமலாக்கியதால், அநேக இடையூறுகள் தவிர்க்கப்பட்டன. நிலத்தின் அளவு, அதன் உற்பத்திப் பெருக்கம், சர்வே, இவைகளைக் கண்காணிக்கத் தனிப் பயிற்சியுள்ள பணியாளர் தேவை. கம்பெனியின் ஆட்சியில் அம்மாதிரி ஆட்கள் இல்லை. மேலும் இடங்களனைத்தும் சுற்றிப் பார்த்துச் சர்வே புரிய வசதியான போக்குவரத்து முறைகள் இல்லை. மேலும் மிகவும் முக்கியமான சில வேலைகளில் கம்பெனி ஈடுபட்டிருந்ததால் நிலவரி முறையில் அதிக ஊக்கம் காட்ட இயலவில்லை. இத் திட்டத்தினால் நிலத்தில் பயிர் செய்வது அதிகரிக்குமென்றும் அதனால் கூடுதலான வரிப் பணம் கிடைக்குமென்றும் கருதினர். கம்பெனியின் நேராட்சியில் வந்த ஒவ்வொரு மாகாணத்திலும் எவ்வாறேனும் நிரந்தர நிலவரித் திட்ட முறையைப் புகுத்த முயன்றனர். அஸ்ஸாம், வாரணசி (காசி), வடசென்னை ஆகிய இடங்களில் இத் திட்டம் உருவாகியது. தென் சென்னையின் சில பகுதிகளில் பண்டைக் காலத்து அரசு வழி தோன்றிய ஆங்கில ஆட்சியை எதிர்க்காத தனி நிலக்கிழார்களை (பாளையக்காரர்) இத்திட்டத்தின்கீழ்க் கொண்டு வந்தனர். ஆங்கில ஆட்சியை எதிர்த்த அரச குடும்பத்தினரின் நிலங்களைப் பிடுங்கிக் கொண்டனர். நடுவரைக் கொண்டு வரி வசூல் செய்யும் அவசியமில்லா ரயத்துவாரி முறையுள்ள கிராமங்களே சென்னை இராச்சியத்தின் பெரும் பகுதியில் இருந்தன.

1. நிலம் அதிகப்படியாக இருந்த காரணத்தாலும், சரியான வாரக் குத்தகை. பயிரிடுபவர் கிடைக்காத காரணத்தாலும், அதிகவாடகை பெறுதலைத் தடைசெய்ய வேண்டிய அவசியமில்லாமல் போயிற்று. பின்னர், மக்கள் தொகை அதிகரித்த காரணத்தால், பயிரிடுபவர் நிலை மோசமாகியது.

வங்காளத்து ஜமீன்தாரி முறையை இங்கு மேற்கொள்ள இயலாது போய்விட்டது. ஐந்தில் ஒருபங்கு முதல், மூன்றில் ஒருபங்கு வரை நிரந்தர வரி முறையில் ஈடுபட்ட காரணத்தால், 1883-லிருந்து அரசினர் தங்கள் பழங் கொள்கையை மாற்றிக்கொண்டனர். நிரந்தர நிலவரிச் சட்டம் தங்களுக்குப் பாதகமானது என அறிந்தவுடன் அதைக் கைவிட்டனர்.

7. **மகால்வாரி முறை நிலவரித் திட்டம்:** [1] ஆக்ரா வட்டாரப் பகுதியில் ஒரு தனிப்பட்ட கிராமச் சமூக அமைப்பு தோன்றியது. அதை மகால்வாரி முறை எனக் கூறுகிறோம். இக் கிராமச் சமூகம் நில உரிமை பெற்றுள்ளது. ஆக்ராவின் பெரும் பகுதிகளில், ஒரு சில தாலுக்தாரர்களைத் தவிர, வேறு யாரும், கிராமச் சமூகத்தைவிட உயர்மதிப்புப் பெற்றிருக்க வில்லை. கிராமக் குழுவில் பொதுவாக எல்லாப் பங்குதாரர்களும் ஒன்றுகூடி, தங்களில் மிகவும் கண்ணியமும் மதிப்பும் உடையவரை வரிதண்டும் அதிகாரியாக நியமித்து அவரிடம் நிலவரியைக் கொடுத்தனர். அவ்வாறு நியமிக்கப் பட்டவர் நிலவரித் திட்டத்தை ஒத்துக் கொள்வதன் மூலம் பங்குதாரர்கள் தனிப்பட்ட முறையிலும் கூட்டாகவும் நிலவரி விதிப்பிற்குப் பொறுப்பேற்றுக் கொள்ளுகின்றனர்.[2] நிலவரிப் பொறுப்பு கிராமச் சமூகத்தை யொத்திருப்பினும், தனி நிலக்கிழாரோ, ஒரு பகுதியினரோ கிராமச் சமூகத்தினின்று முழுப் பிரிவினை செய்து கொண்டு விலகக்கூடும். இதனால், அவர்களது தனித்த நிலவரி தீர்மானிக்கப்படும். கிழக்கிந்தியக் கம்பெனியின் ஆரம்பத்தில் ஆண்டுத் தீர்வையில் 80 சதவீதம் மகால்வாரி முறையின் கீழ் இருந்தது. 1833-ல் இது 66 சதவீதமாகக் குறைக்கப்பட்டது. சாரன்பூர் (Sharanpur) நியமனத்தின் அடிப்படையிலே 1855-ல் இன்னும் 50 சதவீதமாகக் குறைந்தது. இவற்றின் சொத்துக்களாவன: (i) வசூலிக்கப்பட்ட வாரத்தொகை, (ii) தனி உரிமையாளர்கள் நடத்திய பயிரின் மீது வாரத்தொகையை உறுதி செய்து அதைத் தண்டியது, (iii) இதர சில்லறை வரவுகள், குறிப்பாக மேய்ச்சல் நிலங்களில் இருந்து கிடைக்கும் நில வாடகை முதலியன. மகால்வாரி முறைகளில் இடத்திற்கு இடம் மாறுதல்கள் இருந்தாலும், ஆக்ரா, அயோத்தியா, பஞ்சாப், மத்திய மாகாணம் ஆகிய இடங்களிலுள்ள பல்வேறுபட்ட மகால்வாரி முறைகளின் தீர்வைகளில் பொதுவாக இக் கொள்கைகளே இருந்தன.

1. *மகால் என்று குறிப்பிட்ட உள்நாட்டுப் பகுதி அல்லது ஒரு கிராமத்தின் பகுதிக்குண்டான வரித் திட்டம். எனவே இப் பெயர் பெற்றது*

2. *இது ரயத்துவாரி முறையினின்று வேறுபட்டது. ரயத்துவாரி முறையில் கூட்டுப் பொறுப்பு ஏதுமில்லை. ஒரு நிலக்கிழார் மற்றொருவருக்கென நிலவரி செலுத்துவது முறையல்லை.*

**8. உத்தரப் பிரதேசத்தில் மகால்வாரி முறை :** நிலவரி முறை தீர்மானமாகும் முன்னர், நிலவரி முடிவாக்கும் அதிகாரி ஒருவர், கிராமங்களையும் அதையடுத்த பகுதிகளையும் பார்வையிட்டு, அவை களை நில அமைப்பு, மண் தரம் என்ற பிரிவில், சம தீர்வை வட்டாரங்களாகப் பாகுபாடு செய்கிறார். அந்தந்தத் தரமுள்ள நிலத்திற் கேற்பக் கிடைக்கும் வாரத் தொகையைக் கேள்வியுற்று அதனடிப்படையில் நிலவரியை விதிக்கிறார். நில வாரத் தொகை பணமாகக் கொடுக்காமல் விளைச்சலில் கொடுத்தால், கிராமத்தில் அதனை யொத்த நிலங்கள் கொடுக்கும் வரியையோ, தன் வட்டாரப் பகுதிகளில் கொடுக்கும் வரியையோ ஆதாரமாகக் கொண்டு தீர்வையை அதிகாரிகள் முடிவு கட்டுவர்.

**9. அயோத்தியாவில் மகால்வாரி முறை :** அயோத்தியாவில் நிலவரி முறை ஆக்ராவிலுள்ளது போன்றே இருக்கிறதெனலாம். ஆயினும் அதிகப்படியாகத் தாலுக்தாரர்களுடனேயே ஒப்பந்தம் செய்யப்படுகிறது. மிகச் சிறிய அளவிலேயே கிராமச் சமூகத்துடன் நிலவரித் திட்ட ஒப்பந்தம் செய்துகொள்ளுவார்கள். கிராமச் சமூகங்கள் தங்கள் உரிமைகளை இழக்காவண்ணம் உட்புற நில வரி அமைப்பை (Sub-Settlement) மேற்கொள்ளுவர். அதாவது, தாலுக்தாரருக்குச் சேரவேண்டிய 10 சதவீதத்திற்குக் குறையாத ஆதாயமுடன் நிலவரிக் கணக்கை மேற்கொண்டு இக் கிராமச் சமூகங்கள் தங்கள் நிலவாரத் தொகையைக் கூட்டுடன் அமைக் கின்றன.

**10. பஞ்சாப்பிலுள்ள மகால்வாரி முறை :** பஞ்சாப்பில் அதிகப்படியளவில் பயிரிடுபவர்கள் இல்லை. என்றாலும் அவ்வாறு பயிரிடுபவர்கள் தங்கள் குத்தகைத் தொகைகளை அறுவடைப் பொருளாகக் கொடுப்பது வழக்கம். நிலவரி விதிப்பு அதிகாரி அதே பரப்புள்ள நிலம் ரொக்க முறையில் எவ்வளவு வாரத் தொகை கொடுக்குமெனக் கணக்கிட்டு, நிலத்தின் தரத்தை யனு சரித்து ஒரே விகிதத்தில் ரொக்க முறையில் கணக்கிடுவார். மொத்த நிலப் பரப்பும், மண்ணின் தரத்திற்கேற்பச் சிறு சிறு வட்டாரங்களாகப் பிரிக்கப்படும். ஒவ்வொரு வட்டாரத்திற்கும் ஒவ்வொரு வரி வீதம் விதிக்கப்படும். இவையே தீர்வையின் பொதுவான அடிப்படையாகப் பயன்படுத்தப்படும். கூட்டுப் பட்டிதார்களுடைய நிலத்தின் பேரில் வரி விதிப்புச் செய்யினும் தனித்தனியே பிரித்து ஒவ்வொருவருக்கும் தனித்தனியே வரி தண்டுகிறார்கள். இதனால் இது பம்பாய், சென்னைப் பகுதிகளி லுள்ள தனி நிலக்கிழாரிடம் வரி தண்டும் முறையை யொத்திருக் கிறது. பஞ்சாப் நிலவரி வருமானத் திருத்தச் சட்டத்தின்படி

(1929) இராச்சியத்தின் பங்கு விளைச்சலில் கால் பகுதி, எனத் தீர்மானிக்கப்பட்டது. நிலவரி விதிப்புக் காலமும் 40 ஆண்டு களாக நீட்டப்பட்டது. 1935-ல் புகுத்தப்பட்ட சரிவு அளவைக் கேற்ப (Sliding Scale) நிலவரி விதிப்பு அதிகமாயும் விவசாயப் பொருள்களின் விலை குறைவுபட்டும் இருப்பின் வரி தண்டலில் தள்ளுபடி செய்யக் கூடும். (வரி விதிப்பிற்கு எடுத்துக்கொள்ள வேண்டிய விலை பஞ்சமற்ற இருபது ஆண்டுகளின் சராசரி விலையை அடிப்படையாகக் கொண்டிருக்கவேண்டும்.)

**11. மத்தியப் பிரதேசத்திலுள்ள மால்குஸாரி நில வாரத் தீர்வை முறை :** இம் மாகாணத்திலும் நிலவரி முறை ஆக்ராவை யொத் திருந்தது. ஆயினும் இவற்றிடையே வேறுபாடும் இருந்தது எனலாம். இந்த இராச்சியத்தில் 'மால்குஸார்' (malguzars) என்போர் இருந்தனர். மராட்டியர் கால முதல் கிராம வரி விதிப்பு அவர்களுடைய பொறுப்பிலிருந்தது. அவர்களுடைய வழித் தோன்றல்களே இவர்கள். ஆங்கிலேய அரசினர் இவர்களுடைய தொன்மையான உரிமைகளை மதித்துக் கிராமத்தின் தலைவர் களாகக் கருதினர். கிராமத்திலுள்ள எல்லா நிலக்கிழாரும் பட்டா தாரர்களும் அவர்களுக்குக் கீழ்ப்பட்டனர் எனக் கருதித் தனிப் பட்ட நில உரிமையை அங்கீகரிக்கவில்லை. ஆதலால் நாளடை வில் தனிப்பட்ட நிலக்கிழார் மால்குஸாரின் வாரக் குத்தகைப் பயிரிடுபவராக[1] மதிக்கப்பட்டனர். நிலவரி விதிப்பு அதிகாரி, மால்குஸார்கள் எவ்வளவு வரி தர வேண்டுமென்று முடிவு செய்வதோடல்லாது அவரிடம் அண்டியுள்ள வாரக் குத்தகை யாளர்கள் எவ்வளவு தொகை தரவேண்டுமென்றும் வரம்புடன் அமைத்தார். இதற்கென நிலத்தின் தரம், விளைச்சல் முறை இவைகளைப்பற்றி விவரமான தகவல்களைச் சேகரித்து 'மண் துண்டுகள்' (soil units) என வகைப்படுத்தினர். இம்முறையினல் நிலத்தின் விளைச்சல் இவ்வளவு என வரம்பிட்டுக் கூற இயலும். நிலத்தின் வளத்தைப் பொறுத்து இதர நில வகைகளின் தரத்தை ஒப்பிட்டுக் கூறி, வளம் பெற்ற நிலத்தில் கிடைக்கும் ஊதியத்தின் அடிப்படையில் நில வருவாயை முடிவு செய்கின்றனர். நில வளத்தை மட்டுமின்றி நில இருப்பிடத்தை யனுசரித்தும் மதிப்பீடு செய்யப்படும்.

**12. சென்னையில் ரயத்துவாரி முறை :** ஒவ்வொரு கிராமத் திற்கு வேண்டிய சர்வே நடத்தி, அதற்கான படம் வரைந்து, வயல்

1. வங்காளத்தைப்போல் இங்கும் குறிப்பிட்ட சமூகத்திடையே பொறுப்பைக் கொடுப்பின் ஆங்கில அரசுக்குத் தக்க நன்றியுடையவராக இருப்பார்கள் என் றெண்ணினர்.

களின் இடத்தையும் எண்ணையும் பதிவுசெய்து கொண்டு அவற்றின் உற்பத்திக் கேற்ற முறையில் தரம் பிரித்து மிகவும் இயல்பான பயிர் வகைகளின் உற்பத்தியை அனுசரித்து விளைச்சலை ரொக்க முறையில் ஆய்வு செய்து, பஞ்சம் இல்லா 20 ஆண்டுகளில் உண்டான விளைச்சல் மதிப்பீடு செய்து, அவற்றினின்று பயிர்ச் செலவைக் குறைத்து, நிகரதொகை இவ்வளவு என்று முடிவு செய்யப்படும். இதில் பாதியை நிலவரியெனக் கணக்கிட்டனர். இதுவே அதிகப்படி நிலவரி எனலாம். பருவத்தையொட்டியும், வர்த்தகர்கள் இதில் பெறும் ஆதாயத்தையனுசரித்தும், சந்தையின் இருப்பிடத்தைப் பொறுத்தும் இந்த வரி நிலை மாறக்கூடும் எனலாம். தரத்தை (tarams) அனுசரித்து அதே தானிய வகைகளை மதிப்பீடு செய்வதும் உண்டு. ஆக, ஒரே சமனான வளமுள்ள நிலமாயினும் இதர பல்வேறு காரணங்களால் வரி விதிப்பு முறைகளில் மாற்றம் தோன்றுவது நியதி.

13. **பம்பாயில் ரயத்துவாரி முறை :** நிலவரி விதிப்பு முறையில் மூன்று முக்கிய கொள்கைகளைக் காணலாம். அவையாவன : (i) நிலங்களைத் தாலுக்கா அல்லது தாலுக்காவின் உட்பிரிவாகப் பிரித்து, கீழ்க்கண்ட முறையில் தொகுப்பர். நில அல்லது வயலின் அமைப்பு, தட்பவெப்ப நிலை, மழைச்சாரல், சந்தைகள், போக்குவரத்து வசதிகள், உழவின் தரங்கள், மக்கள் தொகை, தொழிலாளர் கிடைக்கும் நிலை, விவசாய வளம், கடந்த முப்பது ஆண்டுகளாக விவசாய முறைகளில் தோன்றிய மாற்றங்கள், கூலிகள், விலையமைப்பு, விவசாயத்திற்கென நில விற்பனை எனப் பிரித்து, இவைகளைப் பொறுத்து நிலவரி மதிப்பிடப்படும். (ii) மேற்சொன்ன முறைகளில் தீர்வு கண்டவுடன் தரத்திற்கேற்ப விகித நிர்ணயம் செய்வார்கள். நிலவரி மதிப்பீட்டிற்கு ஐந்து ஆண்டுகளுக்கு முன்னரிருந்த வாரத்தொகையில் 35 சதவீதத்திற்கு மேல் போகாதவண்ணம் நிலைப்படுத்திய விதிப்பு அமைத்தல் வேண்டும். தற்காலத்தில் நிலவாரத் தொகையைக் கணக்கிட்டு அதனடிப்படையில் வரி விதிப்பு செய்யப்படுகிறது. வாரத்தொகைக்கு இலக்கணம் கூறும்பொழுது நிலத்திற்கான தொகை கொடுத்தும், அல்லது கொடுக்க ஒப்புக் கொண்டும், விளைச்சலில் பங்குகள் பெற்றும் அல்லது தவணைக் கட்டணமாகக் கொடுப்பதை நிலத்திலிருந்து அவ்வப்போது, பயனுள்ள வகையில், வாரப் பணமாகக் கணக்கிட்டனர். (iii) மொத்த வரித் தொகையை இவ்வாறு கணக்கிட்டவுடன் தனி மனிதர் சர்வே பிரகாரம் நிலத்தின் வளத்தைக் கண்ணுற்று அதன் உட்பிரிவினைகளையும் தராதரப்படுத்தி மதிப்பிடுவர். இதையே அனுவாரி முறைப் (Annewari)

பகுப்பு என்று கூறுவர். எடுத்துக்காட்டாக 16 அணு மதிப்புள்ள நிலத்திற்கு வரித் தீர்வை ரூ. 3·00 ஆக முடிவு செய்தால் 8 அணு மதிப்புள்ள நிலத்திற்கு வரி, முன் சொன்ன வரித் தொகையில் பாதி யாகக் கணக்கிடுவார்கள். மதிப்பீடு செய்யும்போது அதிக அளவில் தீர்வை செல்வதைத் தடுத்து வரையறை செய்யப் பட்டுள்ளது. தீர்வை, ஒரு தாலுக்கா அல்லது ஒரு வட்டாரத்தின் மதிப்பீட்டில் 25 சதவீதத்திற்கு மேற்படக்கூடாது. கிராம அல்லது தனிப்பட்ட சர்வேயில் 50 சதவீதத்திற்கு மேற்படக் கூடாது; தனிப்பட்ட மனிதரின் நிலங்களுக்கு விளைச்சலை அதிகரிக்கச் செய்யப்படும் செலவுகளை மதிப்பீட்டின்போது கூட்டிக்கொள்ளக் கூடாது.

**14. அஸ்ஸாம் முறை:** அஸ்ஸாமில் நில உரிமையாளர் களனைவரும் நிரந்தர நிலவரி முறையின்கீழ் வங்காள மாவட்டத் தினின்று வந்தவர்கள். இவர்களும் மற்றும் சிலரும் 'நிலக்கிழார் கள்' என்று பட்டா பெற்றனர். ஏனெனில் இவர்கள் 1886ஆம் ஆண்டு ஒழுங்கு முறைச் சட்டம் வரப் பத்தாண்டுகளுக்கு முன்னரே நிலத்தை உடைமையாகப் பெற்றிருந்தனர். ஆண்டு தோறும் பட்டா மாற்றங்களும் 10 ஆண்டுகளுக்குட்பட்ட நிலப் பட்டா மாற்றமும் உண்டாயின. அஸ்ஸாமில் தரிசு நிலச் சட்டங்கள் மிகவும் சிறப்பு வாய்ந்தவை எனலாம். ஏனெனில் ஒவ்வொரு மாவட்டத்திலும் 25%க்குமேல் பயிராவதில்லை.

**15. நில உடைமை முறை:** நிலம் தனி மனிதரின் சொத்தா அல்லது இராச்சியத்தின் சொத்தா என வாதிப்பது பெரும்பாலும் கொள்கையே அன்றிச் செயல் முறையிலில்லை எனலாம். ஜமீன் தாரி முறையிலும் தனி மனிதர் பண்ணை முறையிலும் நில உடைமை தனியார் சொத்து என்பதை அனைவரும் பொதுவாக ஒப்புக்கொள்வர். அதேபோன்று தனிப்பட்ட மகால்களில் (khas mahal) அரசினருக்கு உடைமை உண்டு என்பது பீகாரிலும் வங்காளத்திலும் அரசினர் நேராட்சி புரிவதினின்று விளங்கும். இவ் வாதங்கள் அனைத்தும் ரயத்துவாரி முறையிலுள்ள நிலங்களைக் குறித்தே விவாதிக்கப்படுகின்றன. ஆங்கில அரசினர் நிலங்களைத் தங்கள் இராச்சியச் சொத்து எனக் கருதிய காரணத் தால்தான் தங்கள் விருப்பத்திற்கேற்ப நிலவரி முறையையும் விதிப்பும் செய்து வந்தனர் எனலாம். நம் அரசியல் தலைவர்கள் இப் போக்கிற்கு எதிராகக் கண்டித்துத் தனியார் துறையில்தான் நில உடைமை இருக்கவேண்டுமெனக் கூறினர். தனியார் துறையில் நில உடைமையிருப்பின் நிலவரி விதிப்பின் ஏற்றங் களுக்கு எதிராக ரயத்து அல்லது பயிரிடுவோர் காப்பாற்றப்படுவர்.

இந்து, முகம்மதிய ஆட்சிக் காலங்களில் இராச்சிய நிலங்களனைத்தையும் தங்கள் சொந்த சொத்தாக என்றுமே கருதியதில்லை எனச் சரித்திர வாயிலாக அறிகிறோம். இது பற்றிய பலத்த வாதங்களில் எழுப்பப்படும் கொள்கைகள் ஏற்றுக்கொள்ளத் தகுதியற்றவைகளாக உள்ளன எனலாம். ரயத்துவாரித் திட்டப்படி ஒரு நில உடைமையாளர் வரி கொடுக்கத் தவறினால் அரசு உடனே அவருடைய நிலங்களைப் பிடுங்கிக்கொள்ளும். இதனால் அம் மாதிரியான பொறுப்பை அரசினர் ஏற்றுக்கொள்ளுவதால் இது அரசினருடைய சொத்தாகும் எனக் கொள்ளலாம் வரியைக் காலாகாலத்தில் கட்டத்தவறினால் நிலங்களை 'ஜப்தி' செய்ய அரசினருக்கு அதிகாரம் உள்ளது. அதேபோன்று, இராச்சிய உடைமை பெறுவதிலும் எவ்விதமான குணமான வாதமும் கிடையாது. ரயத்துவாரி அல்லது ஜமீன்தாரி முறையின்கீழ் இராச்சியம் விரும்பினால் நிலத்தைத் திருப்பிக் கொடுத்துவிடலாம்.

இவையனைத்தையும்விட மிகவும் மேம்பாடான கொள்கை என்னவெனில் ஒரு நில உடைமையாளர் அரசினரின் வரி விதிப்பு முறையை ஏற்றுக்கொண்டு நிலவரி செலுத்திவிட்டாராயின், அவரது நிலத்தைப் பிடுங்கிக்கொள்ள அரசினருக்கு எவ்வித அதிகாரமும் இல்லை. சில இராச்சியங்களில் நிலத்தை விவசாய மற்ற எவ்வித இதர வகைகளுக்கும் பயனுடையதாக்க அனுமதியில்லை. அப்படி விவசாயமற்ற இதர செயல்களுக்குப் பயனாக்க விழைந்தால் அதற்கான நிலவரி விதிப்பு மிகவும் அதிக அளவில் ஏற்படும். இதற்கு அரசின் அனுமதி பெறவேண்டும். இம் மாதிரிக் கட்டுப்பாட்டு முறை இராச்சிய அல்லது நகராட்சிகளுக்குக் கொடுக்கப்பட்டுள்ளது. இவ்வாறு இருப்பின் தனியார் சொத்து என்பதில் யாதொரு பொருளுமில்லை. எடுத்துக்காட்டாக வீடு கட்டும் இடங்கள் சம்பந்தமாக நகராட்சிச் சட்டங்களுள்ளன. இச் சட்டங்களை யனுசரித்தே இந்த வீடுகட்டும் பணி அமைகிறது. நிலவரி, சாதாரண வரியினும் மாறுபட்டதென்று பலர் கருதுகின்றனர். இதை நில வாடகை எனக் கருதுகின்றனர். நிலவரி விதிப்பு ஆண்டுதோறும் மாற்றியமைக்க இயலாது. அவ்வாறு செய்ய முற்படின் அது பலனற்றும், பொருளாதார முறையில் அமையாது மிருக்கும்.

நிலம் அரசினருக்கு உடைமையுள்ளது என்பதைக் குறித்துப் பல வாதங்கள் செய்யப்பட்டன. தனியார் துறையில் நிலம் இருப்பதைப் பற்றிய எதிர் வாதங்களும் அரை குறையாகவும், ஒப்புக்கொள்ள முடியாமலும் அமைந்துள்ளன. 1886-ல் போடப்பட்ட வருமான வரிச் சட்டத்தில் நில வரும்படியைப் பொது வரும்படி

யுடன் கூட்டுவதில்லை. அதற்கு விதி விலக்கு அளிக்கப் பட்டுள்ளது. அதாவது, நிலவரி அளிப்பதால் நில வருமானத் திற்குத் தனியாக வருமான வரி கிடையாது. நிலத்தினின்று கிடைக்கும் ஊதியம், வாடகை போன்று இருப்பின் நிலக்கிழார் அதற்கும் சேர்த்து வருமான வரி கேட்கப்படுவார். இப்போது அனேக இராச்சியங்களில் நில வருவாயைக்கூட வருமான வரியில் சேர்க்கத் திட்டமிட்டு வருகின்றனர்.

கதம்பம் போன்ற குழம்பியுள்ள வாதங்களிலிருந்தும் எதிர் வாதங்களிலிருந்தும் முடிவான தீர்மானம் கிடைப்பது அரிது. பொதுவாக, அரசினர் உரிமையைவிட, தனி மனிதர் உரிமையை நிலை நாட்டப் போதுமான வாதங்கள் உள்ளன. தனியார் பெறத் தகும் உரிமைகளை அல்லது நன்மைகளை ரயத்தும், நிலக்கிழாரும் பெறக்கூடும். அவர் நிலத்தை விற்கவோ, குத்தகை அல்லது வாரத்திற்கு விடவோ, அடகுவைத்துக் கடன் பெறவோ, சொத்தைச் சந்ததி வழியே பெறவோ, சொத்துக்குத் தன் உடைமைப்பட்டம் வைத்துக்கொள்ளவோ வசதிகள் உள்ளன. பேடன் பவல், நிலவரி ஒரு வரி முறையா அல்லது வாடகையா என்ற வாக்குவாதத்தில் கூறும்போது, இதைப் பற்றிய பேச்சு பலனற்ற சொற்களின் போர் என்றுர். இதைப் பற்றிய சரியான முடிவைக் காண இயலாததால் இது பயனற்றது எனலாம். மேலும், நிலவரிக் கொள்கையைப் பற்றிய எந்தவொரு முக்கிய சிக்கல்பற்றியும் இவ்வாதம் குறிப்பிடுவதில்லை. சான்றுக, நிலவரிச் சுமையை எவர்மீது பொறுப்பாக அமைப்பது என்பது ஒரு முக்கிய சிக்கலாகும். அரசினரே நிலப் பொறுப்பினை ஏற்றுக்கொண்டால், நேர்மையான வரி விதிப்பு முறைக்கு எதிராக அரசினர் செல்வது சரியில்லை. வாடகை ஏற்றத்தை எவ்விதத் தில் தனி மனிதர் உடைமையில் கண்டிப்பாக எதிர்க்கிறுேமோ அதே போல் அரசினர் உடைமையிலும் அதிக வரி விதிப்பை ஒத்துக்கொள்வதற்கில்லை.

**16. நிரந்தர நிலவரி முறையும் தற்காலிக நிலவரி முறையும் —ஒற்றுமை வேற்றுமைகள் :** காரன்வாலிஸ் பிரபு காலத்தில் 1793-ல் வங்காளத்தில் இந்த நிரந்தர நிலவரித் திட்டம் அமைப்புப் பெற்றது. வருங்காலத்தில் தமது ஆட்சிக்கு எதிர்ப்பும் தாக்குதல் களும் வருவதைத் தடுக்கப் போதிய வன்மையுள்ள நில ஜமீன் தார்கள், செல்வத்துடனும் போதிய பக்க பலத்துடன் இருக்க வெண்ணிய கம்பெனியின் அரசினர், இம் முறையை முதலில் வங்காளத்தில் நிலை நாட்டினர். நாடு முழுமையிலுமுள்ள ஜமீன் தார்கள் நிரந்தர நிலவரித் திட்டத்தின் பலனைப் பெருவிட்டாலும்,

ஆங்கில அரசினர்க்கு உறுதுணையாக இருந்தனர். தமது பாது காப்பிற்கு வேண்டிக் கிழக்கிந்தியக் கம்பெனியார் புதிய ஜமீன் தார்களை ஏற்படுத்தி, தழைக்கவைத்து மிதமிஞ்சிய சலுகைகளைக் காட்டினர். ஆனால் இன்றைக்கோ மாறுபட்ட நிலைமையிலுள்ள எந்த அரசினரும் உழவருக்கு முதற் சலுகை அளித்த பின்னரே ஜமீன்தார்க்கு உதவிபுரிவர். ஜமீன்தார் வகுப்பினரின் சலுகை களையும் அனுகூலங்களையும் மேலும் தொடர்ந்து ஆதரிக்க வேண்டிய அவசியம் தற்போது ஏற்படவில்லை எனலாம். நிலத்தில் உழைப்பவருக்கே நில உடைமை தருதல் வேண்டு மென்பதும், ஜமீன்தார்களை நிர்மூலமாக்க வேண்டும் என்பதுமே இப்போதுள்ள கொள்கை ஆகும்.

நிரந்தர நிலவரித் திட்டத்தின்கீழ் ஜமீன்தார்கள் குறைவான தொகையையே அரசாங்கத்திற்குச் செலுத்தினர். ஆண்டுதோறும் அவர்கள் அதிகப்படியான இலாபத்தையே பெற்று வந்தனர். ஜமீன்தாரர்கள் தங்கள் செல்வத்தை மக்களின் முன்னேற்றத் திற்குச் செலவிட்டு, கலாசார வளர்ச்சியை அடிகோலிக் கிராமப் பகுதிகளில் விவசாய வளர்ச்சி, சமூக நலன்கள் உண்டாக்குவர் எனக் கருதப்பட்டது. இம்மாதிரியான மேலான எண்ணங்கள் பொய்த்துப் போயின. வங்காள நில வருமானக் குழுவினரின் அறிக்கையின்படி, 'நாட்டின் இதர பகுதிகளிலுள்ள பரந்த மனப்பான்மையுள்ள நல்ல ஜமீன்தார்கள்போன்று வங் காளத்திலும் உள்ளனர். ஆயினும் நிலத்திலில்லாமை, ஒரு சிறிதும் கருணையற்ற பதிலாட்களை அமைத்தல் அல்லது ஜமீன்தாரருக்கும், விவசாயிக்குமிடையேயுள்ள மனவேற்று மைகளால், பலவகைகளில் சரியான உறவின்மை, முதலியவை சிறப்பாகக் குறிப்பிடத்தக்க நிலையிலிருந்தன. நிரந்தர நிலவரித்திட்டம் ஜமீன்தாரருடைய இலாபத்தை அதிக மாக்கியதால், நில உடைமையில் பல உட்பிரிவுகள் தோன்றின. இதனால் முன்பிருந்த ஜமீன்தாரின் தொகையைவிட நடுவர் தொகை அதிகமாயிற்று என்று அறியலாம். எனவே, ஜமீன் தாருக்கும், உழவருக்குமுள்ள நேர்முகத் தொடர்பு அறுந்து போயிற்று. எனவே, காரன்வாலிஸ் பிரபு வங்காளத்தில், ஆங்கில முறைப்படி அமைக்க முயன்ற நிலத்திட்டம் பயனற்றதாகியது. முடிவில் நிலத்தைப் பற்றிய பொறுப்பு இன்னருடையது என வரையறுத்துக்கூற இயலாது போய்விட்டது. ஜமீன்தாரருக்கும், உழைக்கும் உழவனுக்குமிடையேயுள்ளவரில் யாருக்கு விவசாய நலனில் அக்கறை உள்ளதெனக்கூற இயலாது. இதர பகுதிகளில் உள்ளதுபோல் வங்காளத்திலும் அதிகப்படி வாரத்தொகை

கேட்பதும், சட்டத்திற்குட்படாத எல்லா வகையான விதிப்புகளும் மலிந்திருந்தன.

19ஆம் நூற்றுண்டின் இறுதியில் இந்தியாவின் மிகவும் பயங்கர மானதும், பாழடையச் செய்யக்கூடியதுமான பஞ்சப் பிணிகள் தோன்றின. ரோமேஷ் சந்திர டட் (Romesh Chandra Dutt) இதைப்பற்றிக் கூறுகையில், வங்காளத்தில் நிரந்தர நிலவரித் திட்டம் ஏற்பட்ட காரணத்தால்தான் பஞ்சத்தினுல் மக்கள் அவதிப்படவில்லை என்ற தவருன கொள்கையைக் குறிப்பிட்டார். உண்மையில் வங்காளத்திற்குக் கிடைத்துள்ள சில வசதிகள் இதர பகுதிகளில் இல்லை. குறிப்பாக நம்பத்தகு மழை, போக்கு வரவு வசதி இவைகள் இங்கு அதிகமுள்ளன. மேலும் நாட்டுப் பிரிவினைக்கு முன் இங்கு நடந்த சணல் உற்பத்தியின் காரணத்தால் வங்காளத்தின் செல்வ நிலை மற்றைய பகுதிகளைவிட மேலாகவே அமைந்திருந்தது.

வங்காள முறையின் சிக்கலால் நிலத் தகராறுகளும் உரிமைப் போராட்டங்களும் நிகழ்ந்தன. நிலம் பற்றிய ஆவணங்கள் தாறு மாருகவும், குழப்பமான நிலையிலும் வைக்கப்பட்டு இருந்தன. வாரத் தொகை வாங்கச் சரியான முறைகள் இல்லை. பல ஆண்டு களாக வாரத் தொகை பாக்கியாக நிலுவையில் நின்றன.

நிரந்தர நிலவரித் திட்டத்தின்கீழ்க் கிராமப் பொருளாதார முறையில் தடங்கல்கள் தோன்றுவதில்லை. நிலத்தில் பணியாற்றும் விவசாயியை அடிக்கடி தொந்தரவு செய்வதில்லை. எப்போதாவது பருவத்திற்கொரு முறை நில வாரத்தொகை முடிவு செய்யும் காலத் தில்தான் அம்மாதிரியான இடையூறுகள் தோன்றும். தற்கால முறைகளின்படி வரி மாற்றங்களைச் செய்யச் சீரான முறைகளை யமைத்துள்ளனர். பல ஆண்டுகள் அனுபவத்தின் அடிப்படையில் தான் இச் சீரான முறையைக் கையாள முடிந்தது எனலாம். ஒழுங்கான முறையிலமைக்கப்பட்ட நிலத் தகவலுள்ள ஆவணங்கள், நில அல்லது காணிக்கல் பாதுகாப்பு முறை, நிரந்தரப் பாகுபாடு இவைகள் மூலமாக நிலவரி விதிப்பு முறை தவறின்றி நடத்தப்பட்டு வருகிறது. மறு முறை நிலவரி விதிப்பு 20 முதல் 40 ஆண்டுகளுக் கொருமுறைதான் தோன்றும். இதை ஒழுங்கு பெறச் செய்யப் பொறுப்புள்ள உயர்தர அதிகாரிகளையே நியமனம் செய்கின்றனர்.

மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட அரசினர் நிலவரி விதிப்பில், நிலத்தில் பணியாற்றும் விவசாயியின்மீது அளவு மீறிய வரிச்சுமை

ஏருதிருக்கவும், வரியைத் தேவைக்கேற்பத் தற்காலீகமாக நிறுத்தியும், தள்ளுபடி செய்தும் உதவி புரிதல் வேண்டும். இம்மாதிரி சந்தர்ப்பங்களில் அரசினருக்கு நிலத்தினின்று கிடைக்கவேண்டிய நியாயமான வருவாயை இழக்க எவ்வித நியதியுமில்லை. அதே சமயத்தில் இந் நாட்டின் ஜமீன்தார்கள் தங்களது உழைப்பின்றியே, மக்கள் தொகைக் கூடுதல், வசதியாக அமைந்த போக்குவரவு முறைகள், விலையேற்றம் முதலியவைகளாலுண்டான பெருத்தலாபத்தை அடைந்தனர். இம் மேம்பாடான நிலையினும் அரசினர் தங்கள் பகுதிக்கென ஒன்றுமே கோரவில்லை. அனைத்தையும் அனுபவித்தவர்கள் ஜமீன்தார்கள்தான். வங்காள அரசினர் தாங்கள் எடுத்துக்கொண்ட நிலவரி மொத்த வாரத்தொகை 1793-ல் 90% லிருந்து 1927-'8-ல் 19% ஆகக் குறைந்து, பின் மேலும் குறைவுப்பட்டுப் போயிருக்கும் என்பது திண்ணம்.[1] எனவே வங்காள அரசினருக்குப் போதிய வருமான மின்மையால் இராச்சியத்தின் நலனுக்கும் மக்களது நன்மைக்கும் வழி செய்ய இயலவில்லை.

**17. நிலத் தீர்வை முறைகளின் ஷரத்துக்கள் :** நீண்ட அனுபவத்தின் பேரில் நிலத் தீர்வை விதிப்பு முறைகளைச் செம்மையாக்கினர். ஆண்டுதோறும் நிலத் தீர்வையை மாற்றுதலால் பலனுமில்லை. அதனால் எவ்வகைக் காரியமும் கைகூடும் என எதிர்பார்ப்பதற்கில்லை. குறுகிய காலத்தில் நிலவரித் தீர்வை விதிப்பதால் தன் உழைப்பின்றிப் பொது முன்னேற்றத்தால் நிலத்திலிருந்து கிடைக்கும் அதிக வருமானத்தை அரசினரும் மக்களும் பயன்படுத்திக் கொள்வர். ஒரு வேளை நிலைமை சற்று மோசமாயின், நிலவரி விதிப்பிலும் தள்ளுபடி ஏற்படக் கூடும். குறுகிய கால நிலவரித் தீர்வையினுல் நிலவரி படிப்படியாக அதிகமாகும். இதனுல் மக்களிடையே அதிருப்தி ஏற்படாது. ஆனுல் வெகு காலங் கழிந்த பின்னர் இந் நிலவரித் தீர்வை விவசாயிக்குப் பெரும் இடரையே உண்டுபண்ணக்கூடும். ஆனுல் நீண்ட கால நிலவரித் தீர்வை விவசாயிக்கு அதிக இடர் விளைப்பதில்லை. பம்பாய் நிலவரித் தீர்வைக் குழு நிலவரிக் காலத்தை 30 ஆண்டுகளாக முடிவு செய்தது. ஒரு விவசாயியின் சந்ததி சற்றேறக் குறைய 30 ஆண்டுகள் வரை நீடிப்பதாகக் கூறியுள்ளனர். விவசாயி அரசினர் நிலவரி விதிப்பை அதிகப்படுத்தித் தகவல் கொடுத்ததும், இந்த நீண்ட காலத்தினுள்ளாக ஆய்ந்து தன் விருப்பப்படி நிதானமாக ஒரு முடிவுக்கு வந்து நிலவரி விதிப்பிற்கேற்பத் தனது வரவு செலவை அமைத்துக் கொள்ளுவான். இந்த

1. பி. என். ட்ரைவர் எழுதிய ப்ராப்ளம்ஸ் ஆஃப் ஸமீன்தாரி அண்ட் லாண்ட் டென்யூர் ரிகன்ஸ்ட்ரக்ஷன், பக். 63.

வாதம் திருப்தியும் அளிக்கவில்லை; ஒத்துக் கொள்ளவும் ஏற்றதன்று. இருந்தாலும் நாட்டின் பல பகுதிகளிலும் 30 ஆண்டு முறையை ஏற்றுக் கொள்ளுகின்றனர்.

**18. வரி விதிப்பின் கொள்கைகள் :** நிலவரி விதிப்பின் முறை மாகாணத்திற்கு மாகாணம் மாறும் தன்மையுள்ளது. அநேக காரணங்களை அனுசரித்து, இம்மாதிரியான வேறுபாடு தோன்றலாம். நிலத் தீர்வை அதிகாரி தமது விருப்பத்திற்கேற்ப நிலவரியை முடிவு கட்டலாம். வேற்றுமைகள் பல இருப்பினும் மொத்த செலவுகள், அடக்க விலைகள் எவ்வளவு எனக் கண்ணுற்று, நிகர உபரிகள் எவ்வளவு என அறிந்து, அவ் வுபரியில் ஒரு பகுதியையே நிலவரியாக முடிவு செய்வர். பம்பாயில் வாடகை மதிப்பின் பேரில் நிலவரி விதிப்புச் செய்யப்படும் முறை அண்மையில் மேற்கொண்டுள்ளனர். இம் முறையில் வரி விதிப்பு செய்வதால் உண்மையான வாடகை மதிப்பை மேற்கொள்ளாது போட்டாபோட்டி வாடகையின் அளவை மேற்கொண்டு வரி விதிப்பு செய்வதால் அதிகப்படி வரி வசூல் செய்யக்கூடும் எனத் தோன்றுகிறது. இவ்வாறு அதிகப்படியாகத் தோன்றும் வாடகையில் கடனுக்கான வட்டியைக் கூடச் சேர்த்திருக்கக் கூடும். இதைப்பற்றிப் பர்தோலிக் குழுவினர் (Bardoli Committee) கீழ்க் கண்டவாறு கூறியுள்ளனர். 'மூலப் பொருளின் அதிகப்படியான ஏற்றத் தாழ்வுகளுக்கு அகன்ற அளவு ஒதுக்கம் செய்தும், நிலவரி விதிப்புச் செய்யுமுன் வாடகைபற்றிய புள்ளி விவரங்களை ஆராய்ந்து முடிவு செய்தபின் நிலத் தீர்வை விதிக்கவேண்டும். போக்குவரவு வசதி, சந்தையில் விலை நிலவரம், வட்டாரத்தின் பொருளாதார நிலை, பயிர்களுக்கான ஆய்வு முறை இவைகள் அனைத்தையும் கருதியே நிலவரி விதிப்புச் செய்தல் வேண்டும்.

வெகு காலத்திற்கு முன்பே ரானடே அவர்கள், வாடகையும் சம்பாதிக்கப் பெருத அதிகப்படி ஊதியமும் அல்லது பொருளாதார முறையின்கீழ் வாரத் தொகை இவ்வளவென்பதையும் ஏற்றுக் கொள்வதற்கில்லை என்ருர். சம்பாத்தியமற்ற அதிகப்படி ஊதியத்தைப் பற்றிய கொள்கை தொன்றுதொட்டு ஒரே குடும்பத் திற்கு அதே சந்ததியின் வழியாக நிலங்கள் தங்குமாயின் ஏற்றுக் கொள்ளக்கூடியது எனலாம். ஆயினும் விற்பனையின் காரணம் நிலம் கை மாறினுல் நிலத்தைக் கொள்முதல் செய்வோர் அப் போதுள்ள சந்தை விலைக்கு வாங்குகிருர். அவருக்கு இம்மாதிரி சந்தர்ப்பத்தில் சம்பாத்தியமற்ற அதிகப்படி ஊதியம் கிடைக்கா தெனலாம். நிலத்தினின்று கிடைக்கும் வருமானம் அவர் செய்த முதலீட்டிற்குக் கிடைக்கும் வாடகை போன்றதாகும். கடந்த

இருபது ஆண்டுகளாகப் பதிவு விவரங்கள் மொத்த நில விற்பனைக்கு இன்னதென்று காண்பிக்கிறது. ஒரு சந்ததியின் சொத்தானது கைமாறும்பொழுது புதிதாக வாங்குபவர்கள் இவ்வித சம்பாத்தியமற்ற அதிகப்படி ஊதியத்தைப் பெறுவதில்லை. அதற்குப் பதிலாக நிலத்தின் தனிப்பட்ட உற்பத்தித் திறனைப் பொறுத்தும் சுற்றுப்புறத்தைப் பொறுத்தும் கொள்முதல் செய்வோர் முழு விலை கொடுத்து நிலத்தை வாங்குகிறார்.

வரி விசாரணைக் குழுவினர் ஒரே சீரான முறையில் ஆண்டு மதிப்பை யொட்டி நிலவரி விதித்தல் நலம் என்றார்கள். அவர்கள் கூறியதாவது: மொத்த உற்பத்தியிலிருந்து விவசாயியும் அவனது குடும்பமும் செய்த உழைப்பிற்கு மதிப்பிட்டுக் கிடைக்க வேண்டிய ஆதாயத்திற்கு அறுதியிட்டு, இவை அனைத்தையும் உற்பத்திச் செலவாகக் கணக்கிட்டு, மொத்த உற்பத்தியிலிருந்து கழிக்கவேண்டும் என்றனர். பழக்க வழக்கத்தையும் குடிவாரத் திட்டத்தையும் அனுசரித்து எங்கு நிலவரித் தீர்வை அதிகாரியினால் முடிவு செய்யப்படுகிறதோ, அப் பகுதிகளில் ஆண்டுதோறும் கிடைக்கக் கூடிய வருமானம் அதுவே எனக் கொள்ளலாம். வரி விசாரணைக் குழுவினர் செய்த மற்றொரு பரிந்துரையாவது, நிலவரி ஆண்டுதோறும் கிடைக்கக்கூடிய மதிப்பில் 25%க்கு மேல் போகக் கூடாதென்றும் உள்ளூரில் நில விவரம் விகிதங்கள் நில வருவாயில் 25 சதவீதத்திற்கு மேற்படாமல் இருக்கவேண்டும் என்றும் இயம்பினர்.

**19. பஞ்சங்களும் பஞ்ச நிவாரணமும்:** இந்தியாவில் பஞ்சங்கள் தோன்றுவது மிகவும் இயல்பாகிவிட்டது. இந் நாட்டின் விவசாயம் பருவ மழையை எதிர்நோக்கி இருந்ததால் ஏமாற்றத்தின் அடிப்படையாகப் பஞ்சங்கள் தோன்றின. ஆங்கிலேய ஆட்சியில் கம்பெனியார் காலத்தில் 1770, 1784, 1802, 1824, 1837ஆம் ஆண்டு களில் பஞ்சங்கள் தோன்றின. கிழக்கிந்தியக் கம்பெனி பஞ்ச நிவாரணத்திற்கான உருப்படியான கொள்கை எதையும் அமைக்க வில்லை. அவ்வப்பொழுது முறையற்ற தற்காலிகமான முறைகளில் பஞ்சத்தைப் போக்க வர்த்தக விலைகளைக் கட்டுப்படுத்திப் பொது மராத்து வேலைகளை எடுத்துச் செய்தார்கள். 1858-ல் ஆங்கிலேயர் நேராட்சிக்கு வந்த உடனே அநேக செயல்முறைகளாலும் கொள்கைகளாலும் பஞ்ச நிவாரணத்திற்கான கொள்கையை நிலைநாட்டினர். அப்பொழுது இன்சூரன்சு முறையையும் அமைத்தனர். 1865-ல் சுமார் 10 இலட்சம் மக்கள் மடியக் காரணமாயிருந்தது ஒரிஸ்ஸா பஞ்சம். சர். ஜான் காம்பெல் தலைமையின் கீழ்ப் பஞ்சவிசாரணை நடத்தி எக் காரணத்தை

முன்னிட்டும் பஞ்சத்தின் அடிப்படையில் மக்கள் மடிவதை நிறுத்தவேண்டும் என்ற கொள்கையை அரசினர் ஒத்துக் கொண்டனர். 1876-78-ல் ஏற்பட்ட பஞ்சத்தில் 52 இலட்சம் மக்கள் உயிர் துறந்தனர். இதன் விளைவாகப் பஞ்ச விசாரணை குழு ஒன்று சர். ரிச்சர்ட் ஸ்ட்ராச்சி தலைமையின் கீழ் அமைக்கப் பட்டது. 1878-ல் இந்திய அரசினரின் பட்ஜெட்டில் ரூ. 1½ கோடி பஞ்ச நிவராண இன்சூரன்ஸாக ஒதுக்கப்பட்டது. அத் தொகையைப் பின்கண்டவாறு செலவு செய்ய ஏற்பாடு செய்தனர்: (i) பஞ்சம் தோன்றிய பகுதியில் நேரடியாகப் பண உதவி செய்வது; (ii) சாதாரண ஆண்டில் பொது மராமத்து வேலைகளைக் காப்புத் தன்மையுள்ள அளவில் செய்தல். மத்திய உத்தரவாத முறையில் (New Guarantee System) ரெயில்வே நிர்வான வேலையில்[1] ஈடுபடல் இவைகளாம். பஞ்ச நிவாரண வேலைகளைப் பற்றி இலக்கணங்கூற முற்படுகையில் உடல் வலுவுள்ளவர்களுக்கு வேலை கொடுத்து உழைப்பிற்குத் தக்க ஊதியம் கொடுத்து, அதற்கேற்ப வாழ்க்கை வசதியளித்தல், தமது உடலால் உழைக்கப் போதிய பலமற்றவர்களுக்கு அவரவர்களுடைய கிராமங்களிலேயே உணவு வசதி செய்து கொடுத்தல், அல்லது ஏழை இல்லங்களில் (poor houses) உணவு இடுதல், நிலம் பெற்றிருப்பவர்களுக்குத் தக்காவி (taccavi)க் கடன்களைக் கொடுத்து, நிலவரியைத் தள்ளுபடியோ அல்லது குறைவுபடுத்தியோ உதவியளித்தனர். பஞ்ச நியமனங்கள் (Famine Codes) எல்லா மாகாணங்களிலும் அமலாக்கப் பட்டன. பின்னர் நேரிடை அனுபவத்தையொட்டி அநேக மாறு தல்கள் கொண்டுவரப்பட்டன. 1896-97-ல் ஏற்பட்ட பஞ்சத்தை விசாரிக்க சர் ஜேம்ஸ்லயல் (Sir James Lyall) தலைமையின்கீழ் மற்றொரு குழு நியமனம் செய்யப்பட்டது. இக் குழு (i) மலை வகுப்பினருக்கும் நெய்தற்றொழிலில் ஈடுபட்டுள்ளவர்களுக்கும் தற்காலீக உதவி அளிப்பதென்றும்,(ii)தரும வழியில் ஈடுபட்டுள்ள நிறுவனங்களுக்கான நடைமுறை சட்டங்களை யமைத்தும், (iii)அதிகப்படியான இனம்களும் வசதிகளும் கிராம மக்களுக்குக் கொடுக்க வேண்டுமென்றும், மத்திய மேற்பார்வையற்ற உதவி வேலைகள் செய்வது தடைப்படுத்தப்பட வேண்டுமென்றும் கூறியது. 1900-ல் ஜெயபுரி மன்னர் 16 இலட்சம் ரூபாய் நன்கொடையாகக் கொடுத்து, அதை இந்திய மக்களின் பஞ்ச நிவாரண ட்ரஸ்ட் என்ற நிறுவனத்திற்கு முதலாக அமைத்தனர். 1901-ல் மூன்றுவது பஞ்சக்குழு சர். அந்தோணி மாக்டானெல் (Sir Anthony Macdonell) அவர்களுடைய தலைமையின் கீழ்

1. அதிகாரம் 17 ஐப் பார்க்கவும்.

அமைந்தது. மன உறுதியுடன் பஞ்சத்தை எதிர்ப்பது தேவை என்று இக் குழு முடிவு செய்தது. அதை அரசினர் தக்க முறையில் பண வசதி செய்தும், வரியைத் தள்ளுபடி செய்தும், தக்காவின் கடன்கள் கொடுத்தும் காலத்தை அனுசரித்துத் தீவிரமான முற்போக்குத் தேவை என்று கூறினர். அரசினரற்ற பொதுமக்களிடையே உதவி மனப்பான்மையுள்ள நிறுவனங்கள் தோன்றுவது இன்றியமையாதது எனக் கூறியுள்ளார். தீவனப் பஞ்சத்தையும் வைக்கோல் மற்றும் இதர கால்நடை உணவுப் பஞ்சத்தையும் பற்றி இக் குழு ஆராய்ந்து, அதற்கான ஏற்பாடு களையும் மற்றும் போதிய அளவு நீர்ப்பாசன வசதிகளையும் செய்து, பஞ்ச நியமனங்களில் கூறியுள்ளபடி கூட்டுறவுச் சங்கங்களையும் அமைத்து, அவற்ருல் இல்லாமையைப் போக்கியும் பஞ்சத்தை நீக்கியும் நாட்டில் செழுமையைப் பெறலாம் என்று பகர்ந்தனர்.

பழைய நாட்களில் தோன்றிய பஞ்சத்தின் வரலாற்றை ஆராய்ந்து, அதுனுடைய முடிவாக இருபெரும் கொள்கைகளைக் காண்கிரேம். அவை (i) நவீன அமைப்பில் புதுப்பிக்கப்பட்டும் விஸ்தரிக்கப்பட்டுமுள்ள போக்குவரவுச் சாதனங்களால் பற்ருக் குறைப் பகுதிகளுக்கு அவ்வப்போது உபரி உற்பத்திப் பகுதி களிலிருந்து உணவு கொண்டு செல்வது சுலபமாக இருந்தது. (ii) அரசினரின் ஆட்சி முறை வரவரச் சீர்ப்பட்டது. பண்டைக் காலங்களில் தோன்றியவை அனைத்து உணவுப் பஞ்சங்களே. ஒரு பகுதியில் பயிர் விளைச்சல் தவறிவிட்டால் இதர பகுதி களிலிருந்து உணவு வருவது மிகவும் கடினமானதால், மக்கள் பஞ்சத்தினுலும் உணவின்மையாலும் வாடி மடிவர். போக்கு வரவுச் சாதனங்கள் அதிகரிக்க அதிகரிக்க, இப் பஞ்சநிலை சற்றுத் தணிந்தது. ஒரு பகுதியில் உணவுப் பற்ருக்குறையாக இருப்பின், மற்றொரு பகுதியிலிருந்து அனுப்பி மக்கட் சாவைத் தடுக்க விழைந்தனர். இயற்கையே தற்காலீகக் கதவடைப்புச் செய்யின் அதை நீக்கப் பஞ்ச நிவாரணமுறையைக் கையாண்டு, போதிய அளவு வேலை கொடுத்துக் கூலியைக் கொடுத்துத் தற் காலீகமாக வேலையில்லாதவர்களைக் காப்பாற்ற முன்வந்தனர். ஆகவே பஞ்சமெனப்பட்டது 'பணப்பஞ்சமாக' இருந்ததென லாம். நாட்டில் மழையின்மை எனப்படுவது இயல்பாக நிலங்களில் பணியாற்றியும் உணவு வாங்கப் போதிய பணத்தைச் சம்பாதிக்க முடியாமையைக் குறிக்கிறது. அரசினர் இந் நிலையைச் சமாளிக்க அநேக மராமத்து வேலைகளை மேற்கொண்டும், கூலி கொடுத்தும், அதன்மூலம் அவர்கள் தங்களுக்கு வேண்டிய உணவு பெறும் வழிகளைச் செய்தனர். நிறைந்த

கூலி பெறும் காரணத்தால் உணவுப் பொருளை இதர பகுதிகளி லிருந்தும் பெற்றனர். நம் நாடு துண்டாக்கப்பட்டவுடன் இதர நாடுகளை யண்டி உணவுப் பொருளைப் பெற்று வருகிறது. நாடு முழுமையும் ஏற்பட்டுள்ள பற்றுக்குறையை முடிவுகட்ட நிரந்தர மாக உணவு ரிசர்வுகளைப் போதிய அளவில் அமைக்கவும், உள்ளூர் விநியோகங்களை வெளிநாடுகளிலிருந்து இறக்குமதி செய்து ஈடுகட்டவும் ஆரம்பித்தனர்.

வான நிலைத்துறைப் பஞ்ச முறையை அடக்க அவ்வப்போது வான நிலையைப்பற்றி நாட்டின் பல பகுதிகளில் உள்ளதைப் பதிவு செய்கிறது. இத்தகைய தகவல்களைக் கொண்டு வாயு மண்டலத் தின் மேல்தளத்திலிருந்து பருவமழை வருமா அல்லது வராதா என எளிதில் கூற இயலும். எப்போதாகிலும் ஒரே பருவ மழை தவறி ஞல் முன்னேற்பாடுகளுடன் நிலைமையைச் சமாளிக்கக் கூடும். பஞ்சத்திற்கு மற்ருெரு காரணமானது பெருமழையும் வெள்ளமும். இவை பயிர்களை நாசமாக்கிப் பஞ்சத்தை விளைவிக்கின்றன. வெட்டுக்கிளியாலும் இன்னும் இதர நோய்ப்பூச்சிகளாலும் பெரும் அளவில் சேதம் ஏற்படுவதை நாம் அறிவோம். அரசினரின் பூங்காளான் அறிஞர்கள் மற்றும் இதர அறிஞர்கள் இவற்றை ஒழித்துக்கட்ட அதற்கான பல துறைகளில் ஈடுபட்டுள்ளனர்.

**20. பஞ்ச இன்சூரென்சும் நிவாரண நிதிகளும்:** பஞ்ச இன்சூரென்ஸ் மான்யத்திலிருந்து அந்தந்த மாகாணமும் தனது தனிப்பட்ட தேவைகளுக்கேற்பப் பண நிதி பெற்றுக்கொள் கின்றன. மத்திய அரசினர் பஞ்ச நிவாரணச் செயலாற்றும் செல வில் மூன்றில் இரண்டு பகுதிகளைத் தாமாகவே ஏற்றுக்கொண்ட னர். 1819ஆம் ஆண்டில் ஏற்பட்ட சீர்திருத்தங்களை அனுசரித்து ஒவ்வொரு மாகாணமும் பஞ்ச நிவாரண இன்சூரென்ஸ் நிதியைத் தமக்கென ஒதுக்கி வைக்கவேண்டிய அவசியம் ஏற்பட்டது. பஞ்ச இன்சூரென்ஸ் நிதியில் செலவிடப்படாத் தொகைக்கான வட்டியை மத்திய அரசினர் கொடுத்தனர்; இத் தொகைகளைக் கொண்டு (i) பஞ்ச நிவாரணச் செயல் புரிதல், (ii) பஞ்ச நீக்கத்திற்கெனப் காப்புப் பணிகளை மேற் கொள்ளுதல், (iii) நில வேலையில் ஈடு பட்டவர்களுக்குத் தற்காலிக முன் பணவசதியளித்தல். ஒவ்வொரு மாகாண அரசினரும் தமது பகுதிகளுக்கான பஞ்ச இன்சூரென்சுக் கெனப் பண ஒதுக்கம் செய்யவேண்டும் எனக் கூறப்பட்டது அவ்வாறு செய்யப்பட வேண்டிய பண ஒதுக்கம் அந்தந்த வட் டாரங்களில் ஏற்படும் பஞ்ச நிலையை அனுசரித்து அமைய வேண் டும். நிதியாண்டு 1928-'9 முதல் பஞ்ச நிவாரண இன்சூரென்சுத் தொகை அமைப்பு அடிப்படையிலிருந்தே மாற்றியமைக்கப்

பட்டது. இதன் பிறகு இந்த நிதியைப் பஞ்ச நிவாரண நிதி (Famine Relief Fund) என அழைத்தனர். குறிப்பிட்ட எல்லைக்குள் இந் நிதி சேர்ந்தவுடன் இதர மாகாணத்துடன் நிதிகளுக்கு உதவியளிக்க இது பயன்படுகிறது. பழைய பஞ்ச இன்சூரென்ஸின் நிதியில் இருந்த நிதியை இப் புதுப் பஞ்ச நிவாரண நிதிக்கு மாற்றினர். ஆயினும் அஸ்ஸாம் மாகாணத்திற்கான நிதியை மட்டிலும் அந்த மாகாணச் செலவினங்களுக்கெனச் சேர்த்துவிட்டனர். 1937ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் முதல் தேதி முதல் மாகாண சுயாட்சி கிடைத்தவுடன் அந்தந்த மாகாணத்திற்கான நிதியை மத்திய அரசினர் பிரித்து மாகாணங்களுடைய பொறுப்பில் கொடுத்துவிட்டனர். அந்தந்த மாகாணத்துச் சட்டமன்றங்கள் அந்த நிதியை எடுத்து நடத்தி வந்தது; இயல்பான முறையில் அரசினரின் உதவி பெற விழையாத உயர்தர மக்கள் தாங்களாகவே இந்தியப் பஞ்ச நிவாரண ட்ரஸ்ட் (An India Famine Trust) ஒன்றை நிறுவினர்.

அகில இந்தியக் கிராமக் கடன் ஸர்வே நடத்திய ஆய்வுகளின் முடிவாக (i) இராச்சியப் பஞ்ச நிதிகள் துவக்கப்பட வேண்டும் என்றும், (ii) இதுகாறும் துவக்கப்படாத இதர இராச்சியங்களிலும் உடனே நடவடிக்கை எடுக்க வேண்டும் என்றும், (iii) மத்தியப் பஞ்ச நிதி ஒன்றை நிறுவி அதன் மூலம் கடனாக இதர இராச்சியங்களுக்குப் பஞ்ச நிவாரணப் பணிகளுக்காக உதவிபுரிய வேண்டுமென்றும், குறிப்பாக இயற்கையாக ஏற்படும் விபரீத சம்பவங்கள் குறிப்பாகப் பெருவெள்ளம் இவற்றின்போது உதவியளிக்க வேண்டும் எனவும் கூறியது.

**21. நிவாரணப் பணிகளின் விவரம் :** எவ் வகையான நிவாரணப் பணிகளைச் செய்யவேண்டும் என்பதற்கான விளக்கம் கீழே கொடுத்துள்ளோம் :

(i) பெரிய அளவில் நிலையான தயாரிப்புகளைச் செய்வது. வட்டாரத்தில் உள்ள பிறப்பு இறப்பு எண், மக்கள் தொகை, செய்யப்படும் விளைச்சல் வகை, பயிர் வகைகள், விலைகளின் நிலைமை, தட்பவெப்பநிலை, அப் பகுதியின் படம் வரைந்து எவ்வெப் பகுதிகளில் உடனடியாக நிவாரண வேலை தொடங்க வேண்டுமென்றும், எங்கெங்குக் கருவிகளும் உபகரணங்களும் வைக்கப்பட்டுள்ளன என்றும் கருதப்படும். (ii) மழை வந்ததும், விலைகள் ஏறுகின்றனவா என்றும் மக்கள் சோம்பித் திரிகின்றார்களா, அதிகப்படியான குற்றங்களும் சிறு திருட்டுக் குற்றங்களும் மலிகின்றனவா, தனியார் அளிக்கும் தரும காரியங்கள்

குறைவடைகின்றனவா என்றும் கூர்ந்து ஆராய வேண்டும். (iii) அரசினர் உடனடியாகத் தங்கள் பொதுக்கொள்கை இன்னதென்று உடனே இயம்பி, ஒவ்வொரு பகுதியிலும் மக்களைக் கூட்டிச் சொற்பொழிவுகள் நடத்திப் பொதுமக்கள் உதவிசெய்ய முன்வரின் அவர்களை ஒன்று திரட்டி, மனத் திடம் வேண்டும் என்ற முறையில் மக்களை ஊக்குவித்து, பகுதி பகுதியாகச் சென்று உதவி நாடுபவர்களின் ஒரு பட்டியலைத் தயாரித்து வருவார்கள். (iv) மாதிரிப் பணிகளைத் திறந்து அவற்றில் எவ்வளவு தொழிலாளரைச் சேர்த்துக்கொள்ள இயலுமோ, அவ்வளவு பேரையும் சேர்த்துக் கொண்டு, அப் பகுதிகளை நிவாரணப் பணியாக நியமனத்தில் உள்ளபடி கொள்ள வேண்டும். (v) டிசம்பர் மாதத்திற்குள்ளாக நிவாரண முகாம்கள் நிறுவப்பட்டு, கிராமங்களிலுள்ள உடல் வலிவு இல்லாதவர்களுக்கு இனமான உதவிகளை அளிக்க வேண்டும். நகரங்களில் ஏழை இல்லங்களைத் திறந்து, அவற்றில் ஏழைகளுக்கு உணவு அளிக்கவேண்டும். கிராமச் சமையலறைகளையமைத்துக் கிராமத்தில் வாழும் குழந்தைகளுக்கு வசதிகள் கொடுக்கவேண்டும். (vi) ஜூன் மாதத்தில் மழை பெய்ததும், நிவாரண முகாம்கள் மூடப்பட்டு, அதில் உள்ளவர்களை அவர்களுடைய கிராமங்களுக்கு அருகில் இருக்கும் ஊர்களிலுள்ள முகாம்களுக்கு அனுப்பி, இதனால் தொத்து நோய்கள் வாராது அவர்கள் கண்காணிக்கப்படுவர். உள்ளூரில் இனமாக உதவியளிக்கும் முகாம்கள் நடத்தப்படும்; விவசாயிகளுக்குக் கடன் வசதியளிக்கப்படும். இவற்றைக் கொண்டு விவசாயிகள் தங்களுக்கு வேண்டிய கால்நடை, ஏர், நுகத்தடி, விதை இவைகளை வாங்கிக் கொள்ளுவார்கள். அக்டோபர் மாதம் நடுப்பகுதியில் பஞ்சம் மறையும் எனலாம். இக்காலம் முழுவதும் தொத்து நோய் ஆகிய வாந்திபேதி, காலரா இவைகளை அடக்க மருத்துவப் பணியாளர் தயாராக உதவி புரிவர்.[1]

22 நிறுத்தங்களும் தள்ளுபடிகளும்[2] : நடைமுறையில் கிட்டத்தட்ட எல்லா இராச்சியங்களிலும்[3] வரி நிறுத்தங்களும் தள்ளுபடிகளும் கீழ்க்கண்ட கொள்கைகளின் (i) இயல்பாக நிவாரண வசதி யெனப்படுவது நிறுத்தங்களாகச் (வரி கொடுப்பதைக் கொஞ்ச காலம் கழித்துப் பெறும் நிலையில்) செய்வது.

1. இம்பீரியல் கெஜட்டீர் ஆப் இண்டியா: பகுதி III, பக். 447—81.

2. வரி விசாரணைக் குழுவின் அறிக்கை நூல் 3—பக். 188.

3. மிக ஏழையான ரயத்துக்கு மட்டுமே நிவாரண வசதி அளிக்கப்படும் எனச் சென்னை இராச்சிய அரசினர் முடிவு செய்துள்ளனர்.

விளைச்சலில் அரைப் பகுதிக்கு மேலாக முக்கால் பகுதிக்கும் குறைவாக வீணாகி விட்டால் இம் மாதிரியான நிவாரண வசதி யளிக்கலாம். (ii) வரியைப் பெறுதல் மிகவும் கடினமெனத் தெரிந்த பிறகுதான் வஜா அல்லது தள்ளுபடி செய்யவேண்டும். ஒரு வட்டாரத்தில் தொடர்ந்து 3 ஆண்டுகளாக நிலவரி கேட்கப் படாதிருப்பின் அங்குத் தண்ட முடியாது எனப் பொருள்படும். (iii) கால் பகுதிக்குக் கீழாகப் பயிர் விளைந்திருப்பின் முழுவரித் தள்ளுபடி செய்யவேண்டும். (iv) வரி நிறுத்தங்களோ அல்லது தள்ளுபடிக் கேற்ப நிலக் கிழார்தம் வாரப் பயிரிடுபவர்களுக்கும் இம்மாதிரியான வசதிகள் செய்தல் வேண்டும்.

# 9. நிலக் கொள்கை

**1. சமூகப் பொருளாதார அடிப்படைகள் :** விவசாயத்தின் பல்வேறு வகைகளைச் செம்மையாக்கி அவற்றில் மேம்பாடான முறைகளைக் கையாளுவதற்கான கொள்கைகளைக் கொண்டுதான் நம் நாட்டின் பொருளாதார வழியில் தீர்வு காண இயலும். திட்டக் கமிஷன் தனது அறிக்கையில் விளக்கம் கொடுக்கும்போது சமூக, பொருளாதார அடிப்படையில்தான் நம் நாட்டின் நிலக் கொள்கை அமையவேண்டும் எனக் கூறுகிறது.

**சமூக அடிப்படைகள் வருமாறு :** (i) செல்வம், வருமானம் இவற்றில் உள்ள ஏற்றத்தாழ்வுகளை நீக்க முயலுதல், (ii) பிறரைச் சுரண்டி வாழ்வு நடத்தும் முறையை ஒழித்துக் கட்டுதல், (iii) குடிவாரக்காரரும் தொழிலாளியும் நிலத்தில் நீடித்து வேலை செய்து வரவும், நிலையை ஈர்த்து அமைத்தும் கிராம மக்களிடையே தக்க சந்தர்ப்பங்களைக் கொடுத்தும் நிலத்தில் பொறுப்புள்ள வகுப்புக்களைப் பாகுபாடு செய்து, எவ்விதமான கொள்கையைக் கடைப் பிடித்தல் வேண்டும் என்ற தன்மையைத் திட்ட அறிக்கை வரும் தலைப்புக்களில் கூறுகிறது : (அ) இடையினர் அல்லது மத்திய தரகர், (ஆ) நிலத்தின் உடைமையாளர், (இ) சிறிய நிலக்கிழார், மத்தியத் தர நிலக்கிழார், (ஈ) குத்தகையாளர், (உ) நிலமற்ற குடியானவர்கள்.

**(அ) மத்தியத் தரகரின் உரிமை அல்லது இடையினர்களது உரிமை :** இதுகாறும் இராச்சியங்களில் இருந்து வந்த ஜமீன்தாரி, ஜாகீர்தாரி உரிமைகளையும் அதே போன்ற சில பல உரிமைகளையும் நாளடைவில் நீக்கி வருவதால் இராச்சிய அரசினர் நிலத்தில் உழைப்பவனுடன் நேருக்குநேர் தொடர்பு வைத்துக்கொள்ள

முடிகிறது.[1] இது சம்பந்தமாக இருபெரும் பிரச்சினைகள் எழுகின்றன. அவைகளில் (i) ஜாகீர்தாரருக்கும் ஜமீன்தாரர்களுக்கும் கொடுக்கவேண்டிய ஈட்டுத் தொகை, (ii) இவர்களை நீக்கிய பின்னர் அவ்விடங்களில் எவ்வகையான வருவாய்முறையாட்சி செய்யவேண்டும் என்பது. அநேக இராச்சியங்களில் இவ்விதமாகக் கொடுக்கப்படும் ஈட்டுத் தொகையைச் செலாவணியற்ற கடன் பத்திரங்களில் கொடுப்பது என ஆலோசனை செய்யப்பட்டுள்ளது. இதற்கான வட்டியை அவ்வப்போது கொடுத்துப் பின்னர் 40 ஆண்டுகளுக்குள் இவற்றைக் கொடுப்பது என்று முடிவாக்கப்பட்டுள்ளது. பொதுத் துறைத் தொழிலில் இந்த ஈட்டுத் தொகையைப் போட முயலவேண்டும். அவ்வாறுன பல திறப்பட்ட எண்ண அலைகளில் ஒன்ருவது இந்தக் கடன் பத்திரங்கள் மாற்ருத தன்மை பெற்றிருப்பினும் அவற்றைப் பங்கு ரூபமாக மாற்றி, அதில் மத்திய அரசும் இராச்சிய அரசும் கம்பெனிகளாக நடத்தலாம். ஜமீன்தாரி முறையை ஒழித்துக் கட்டியவுடன் அந்த வட்டாரங்களில் புதிய வருமான ஆட்சி முறையை அமைத்து, அதன் வழியே புதிய பொறுப்புக்களை ஏற்க வேண்டி நேரிடும். நிலச் சீர்திருத்தச் சட்டங்களை இம்மாதிரியான தற்காலீக முறையில் நிலக்குடி முறை அமைந்த இடங்களிலும், ஜமீன்தாரி முறையை அகற்றிய இடங்களிலும் உடனே அமலாக்கி அவற்றினைச் செம்மையான முறையில் பரிபாலிக்க வேண்டியது இராச்சிய அரசுகளின் பொறுப்பு.

(ஆ) நில உரிமையாளர்: இதன் அறிக்கையில் நிலத்தைப் பொறுத்த மட்டில் (பொருளாதார முறையில் இதர பகுதிகளை ஒட்டி) பொது நன்மையை அனுசரித்துத் தனிப்பட்டவர் எவ்வளவு

1. அநேகமாக எல்லா இராச்சியங்களிலும் உள்ள ஜமீன்தாரர், தாலுக்தாரர், ஜாகீர்தாரர், இனும்தாரர், மால்குஜார் மற்றும் இதர தனிப்பட்ட மத்திய முறைகள் அனைத்தும் நீக்கம் பெற்றன. பம்பாய், சௌராஷ்டிரம், சென்னை, ஐதராபாத, இமாசலப் பிரதேசம், உத்தரப் பிரதேசம் இவைகளில் குடிவார முறைப் பாதுகாப்புச் சட்டமியற்றியும், வாரத் தொகை இவ்வளவு எனத் தீர்மானித்தும், வருங்காலத்தில் புதிய நில ஆர்ஜிதத்தைக் கட்டுப்படுத்தியும் நிலக் குத்தகை முறையை அடக்கியும், பல்வேறு ரகமான தீர்வைகளை நீக்கியும், குடிவளததில் ஈடுபட்டவர்களுக்குச் சொந்த நிலமாக்கச் சட்டம் இயற்றப்பட்டுள்ளன.

நடுவர்களை நீக்கியதால் பயிரிடுபவர்களின் லாபப் பங்கு அதிகரிக்கிறது. ஆயினும், இவற்ருல் உற்பத்தி முறையை அதிகரிப்பதற்கு இயலவில்லை. உட்கோட்டப்படுத்துதலும் சிதறுதல் முறையும் பழையபடியே தொடர்ந்து நீடித்துவரும். குடிவாரச் சட்டத்திலும் மாறுதல ஏற்படாது. இது மறைமுகமாக நிலத்துண்டாடுதலையும் சிதறுதல் முறையையும் ஆமோதிக்கிறது. மேலும், பாத்தியதைமுறையையும் கோருகிறது. நடுவர்களைப் புறக்கணிப்பதற்கும் நிலச் சீர்திருத்தக் குடிவாரச் சட்டத்திறகும் வேற்றுமை உண்டு. முதலில் கூறப்பட்டது, 'ஒரே அடியில் பணியாற்றுவது, (a once-for-all operation) என்றும், பின்னர் இளம்பியது தொடர்ந்து நடப்பதும் சூழ்நிலைக்கேற்ப மாற்றி அமைத்துக் கொள்வதுமாம். (இந்திய விவசாயப் பொருளாதாரப் பதினைந்தாவது மாநாட்டுத் தலைமை உரையில் பேசிய திரு. பேராசிரியர் டி. ஆ. கட்கில். பக். 3-4).

அளவுக்கு நிலம் வைத்துக் கொள்ளலாம் என்பதும் அதன் உச்ச வரம்பு எவ்வளவு என்பதும், (i) வருங்காலத்தில் புதியதாக ஏற்றுக் கொள்ளும் நிலமும், (ii) நேரிடை விவசாயத்திற்கு எவ்வளவு இருக்கவேண்டும் என்பதும் இயம்பப்பட்டுள.

சுயமாகச் சம்பாதித்த நிலத்தினைப் பற்றிய இரு கூறுகளாவன: (i) தமது விருப்பப்படியே வாரப் பயிரிட விவசாயிகளை அமைக்கும் முறை, (ii) நிலக்கிழாரின் மேற்பார்வையில் பயிரிட உதவும் நிலம். தனது மேற்பார்வையில் பயிரிடப்படும் நில அளவு போக எஞ்சியுள்ளதை உடனே குடிவாரத்தின் கீழ்ப் பயிரிடும் விவசாயி களுக்குப் பிரித்துக் கொடுக்க வேண்டும் என்று அந்த அறிக்கை கூறுகிறது. இத் துறையில் முதற்படியாக வாரக் குடியானவர் களுக்கு வாரக்குத்தகைக் காலங்களில் நீடித்து நிற்கவும், அவர்கள் அதை ஏற்று நடத்த அதிகாரமும் கொடுக்கவேண்டும். மேலும் வாரத் தொகை சிறு தொகைகளாகப் (instalments) பல ஆண்டுகள் வரை கொடுக்க வழியாகவும் அதே நிலத்தின் உற்பத்திப் பெருக்கினை ஒத்து அமைவதாகவும் இருக்கவேண்டும். தாமாகவே எடுத்துப் பயிராக்கும் நிலங்களில் ஒரு தனி ஆள் எவ்வளவு நிலம் வைத்துக் கொள்ளலாம் என்ற வரையறை செய்தும், சட்டப்படி நில மேற்பார்வையும் உழைப்பும் அங்கு உண்டாக வேண்டும் எனவும் கூறுகிறது. ஒவ்வொரு இராச்சியத்தின் தற்கால நிலையை ஒட்டி உச்ச வரம்பை மீறின நிலச்சொந்தக்காரர்களைச் சட்டப்படி கட்டுப்படுத்த வேண்டும்.

இப் பிரச்சினைக்குத் தீர்வு காணவேண்டிச் செய்ம் முறையாகப் பெரிய அளவில் உள்ள தனியார் நிலங்கள் பெரும் பண்ணைகள் எவை யென்றும், அவை (i) செம்மையான முறையில் நடத்தப் பட்டு வருகின்றன. அவற்றைப் பிரித்தால் அதன் உற்பத்தித் தன்மை சீர்கேடடையும் என்றும், (ii) இந்த முறையில் அமையாத நிலம் அல்லது பண்ணை என்றும் பிரித்துக் கொள்ளவேண்டும். இரண்டாவதாகக் கூறப்பட்ட வகையில் வரும் நிலங்களை ஏற்று எடுத்துக் கொள்வதும், அவற்றை எவ்வாறு நடத்தப்பட வேண்டும் என்றும் அல்லது தனியார் உச்ச அளவுள்ள நிலத்தை மட்டும் விட்டுவிட்டு இதர பகுதிகளை நடத்த ஏற்பாடு செய்யவேண்டும். குறிப்பாக இம்மாதிரியான செயல்களில் கூட்டுறவுப் பண்ணைச் சங்கங்களுக்குத் தக்க சலுகை கொடுத்து, அவற்றின் மூலம் இவைகளை எடுத்து நடத்த விடவேண்டும்.

**(இ) மத்தியச் சிறிய நிலக்கிழார்:** ஒரு குடும்பவசதிக்கு ஏற்ப அமைந்த நிலக்கிழாரைச் சிறிய நிலக்கிழார் என்றும், அதற்கும்

அதிகப்படியான நிலங்களைப் பெற்று, ஆனால் தனியார் உச்ச வரம்புக்கும் தாழ்ந்த அளவில் நிலம் பெற்றவரை மத்திய நிலக்கிழார் என்றும் கூறலாம். இந் நிலங்களையும் கூட, அவை நேரடியான வேளாண்மை என்றும், தன் விருப்பத்திற்கேற்ப வாரக்குடி அமைத்தல் என்றும் இரு கூறுகளாகப் பிரிக்கலாம். முதலாகக் கூறப்பட்டது பணவசதி, தொழில்நுட்பத் துணை, கூட்டுறவுப் பணி அமைப்பு இவற்றைப் பற்றிக் கூறுகிறது. சிறிய அல்லது மத்திய நிலக்கிழார்களுக்கு அளிக்கும் வசதிகள் புரிவதற்கு எளிய நிலையில் அமையவேண்டும். மேலும் இது சம்பந்தமாக எழும் பிரச்சினைகளுக்கு மக்கள் தாமாகவே தீர்வு காணவேண்டும். இரண்டாவதாக இவர்களுக்கு அளிக்கும் காப்பு முறைகளால் இதரர் நிலங்களை விட்டு விட்டு வேறு தொழிலில் புகுந்தும் நகர்ப்புறத் தொழிற்சாலைக்குள் வேலை தேடிப்போகும் நிலையில் விடக்கூடாது. சிறிய அல்லது மத்திய நிலக்கிழார் தமது நிலங்களைக் குத்தகைக்கோ அல்லது வாரப் பயிர்செய்யவோ விட்டிருப்பின், இவர்களைப் பெரு நிலக்கிழார் போன்று மதித்து ஊரில்லா நிலக்கிழார் என்று[1] கருதுதல் தவறு.

**(ஈ) நிலக்கிழாரின் விருப்பத்திற்கேற்பப் பயிரிடுபவர் :** சிறிய மத்திய நிலக்கிழாரின் கீழ்ப்பணியாற்றும் பயிரிடுபவரின் உரிமைகளை விளக்கம் செய்யவேண்டிய நிலை யேற்படுகிறது. இவ்வாறு விடப்படும் நிலம் 5 முதல் 10 ஆண்டுகள் வரை இருக்கலாம். அது புதுப்பிக்கப்படவேண்டும். நிலக்கிழார் தாமாகப் பயிரிட விரும்பினால் அவ்வாறு புதுப்பிக்க வேண்டியது இல்லை. அதிகப்படியான குடிவாரத்தொகை விளைச்சலில் கால்பங்கு முதல் ஐந்தில் ஒரு பங்கு வரையில் கோரலாம். பயிரிடுவோர் கொடுக்கவேண்டிய குத்தகை அல்லது வாரத்தொகை எவ்வளவு என்றும், எக்காலம் வரை இவர்கள் பயிரிடலாம் என்றும் எல்லா இராச்சியங்களும் சட்டமியற்றியுள்ளன.

**(உ) நிலமற்ற வேலையாள் :** நிலமற்ற வேலையாட்களைப் பற்றி ஆக்க முறையில் திட்டக் கமிஷன் இப்பிரச்சினையைத் தீர்த்து வைக்கவில்லை. நிறுவன முறையில் மாறுதல்கள் ஏற்பட்டு, கிராம மக்களிடையே சமத்துவம் ஏற்பட்டு, அதன் பிறகு சீர்த்திருத்தங்கள் புரியலாம் என்று திட்டக் கமிஷன் கூறியுள்ளது. கிராம நிலங்களும் இதர வளங்களையும் ஒன்று திரட்டி, கிராமக் கூட்டுறவு நிருவாகத்தின்கீழ் அமைத்து, உடன்பட்டு வேலைசெய்ய விரும்புகின்ற

1. பாரபட்சமான முறையில் சிறிய நிலக்கிழார்களுக்குக் காட்டியுள்ள இச் சைக்குத் திருப்தியளிக்கும வகையில் திட்டக் குழுவினால் கொடுகக இயலாது. வேறு இராச்சியங்களில் நிலச சட்டங்களில் இக் கொள்கை தவிர்க்கப்பட்டது.

வர்களுக்கும் வன்மை பெற்றவர்களுக்கும் இதில் இடமளித்து வேலை கொடுக்க வசதி செய்யப்படுகிறது. இம்மாதிரி விளக்கமற்றும் எளிதில் புரிய இயலாத முறையில் திட்டக் கமிஷன் கூறியது. இது நீண்டகால அமைப்பு என்றதோடல்லாது பூமிதான இயக்கத்தைச் சுட்டிக்காண்பித்து இதன் மூலம் நிலமற்றவர்களுக்கு நில ஆர்ஜிதம் செய்வதற்கு ஒரேவழிதான் உள்ளது என இயம்புகிறது. நிலக் கொள்கையில் திட்டக் கமிஷன் ஒரு சீரிய முறையின்றியும் முன்னுக்குப்பின் முரணான கொள்கைகளை வகுத்தும் புதிர் போன்று விளக்கம் தர இயலாத வகையில் கூறியுள்ளது எனலாம். இந் நாட்டின் நிலக் கொள்கையின் அடிப்படையில் நிலச்சட்டம் எவ்வாறு அமையவேண்டும் என்று திட்டக் கமிஷன் வரையறுத்திருக்கிறது.

**2. பூமிதான இயக்கம் :** 1952-ல் உயர்திரு. ஆச்சாரிய விநோபாபாவே அவர்களால் முதன் முதலாக இந்த இயக்கம் துவக்கி வைக்கப்பட்டது. இதன் அடிப்படையாவது, இந்தியக் கிராமங்களில் வாழும் குடும்பம் அனைத்துக்கும் பயிரிடத்தக்க நிலம் வேண்டுமென்பதே சமூக ஏற்றத்தாழ்வுகளையும், மக்களிடையே நிலவி வரும் நியாயமற்ற முறைகளையும், கண்டித்துத் தார்மீக உணர்ச்சியின் வாயிலாகச் சமத்துவ முறையை அடிகோலினார் அப் பெரியார். நிலமுள்ள ஏழைகள் அனைவரும் தாமாகவே தம் விருப்பத்திற்கேற்ப நிலத்தின் ஒரு பகுதியை நன்கொடையாகக் கொடுத்து, இதை யாசிக்கப்பட்டதெனக் கருதாது பிறருக்குத் தாம் செய்யவேண்டிய கடமைகளில் ஒன்றாக நினைத்துக்கொள்ள வேண்டுமென்றார்.[1] பெரு நிலக்கிழார்களினின்று பெறக்கூடிய நிலம் பெருமளவில் இருக்க வேண்டுமென்றும், ஆயினும் சிறிய நிலக்கிழாரிடமிருந்து எவ்வளவு குறைவான நிலமாயினும் பெற விரும்பினார். தானம் கொடுக்கப்பட்ட நிலங்களைப் பிரித்துக் கொடுப்பதில் திரு. விநோபாபாவே நிலமற்றவர்களுக்கும் கைவினைஞர்களுக்கும் முதன் முதலில் கொடுக்கும்படிக் கோரினார். ஆகவே பூமிதான இயக்கத்தில் எடுகோள்களும் உண்மைகளும் அடிப்படையை அனுசரித்துக் கொள்ளத்தக்கவை. கடன் தேவைகளின் பெரும்பகுதி சிறு குடியானவர்களுக்கு நிலம் வாங்க வேண்டியிருக்கிறது என்று கிராமக் கடன் ஸர்வேக் குழுவினர் கூறியுள்ளனர். பொருளாதார முறையில் ஒரு கைவினைஞனுக்கு வெகு சிறிய நிலமாக இருப்பினும்கூட அதினின்று கிடைக்கும் விளைச்சல் அவனுக்கு ஆதாயமளிக்கவல்லது என்பதில்

1. திரு. விநோபா பூமிதான இயக்கத்தின் அடிப்படையில் 'தான் என்ற பொருளுக்கு யாசகம் எனக் கொள்ளுவது தவறென்றும், சம்விபாகம் அல்லது சமூகக் கடமையின் அடிப்படையில் நிலப் பிரிவினை தாமாகவே கொள்ளுதல் எனப் பொருள்படும்' என்று கூறுகிறார்.

ஐயமில்லை, அவனது வாழ்க்கையிலேயே புதுத் திருப்பம் ஏற்படுகிறது. பேரம் பேசுதலிலும் அவனுக்குப் புதிய தெம்பு தோன்றுகிறது. மற்றோர் எடுகோள் என்னவெனில் அதிகப்படியான ஆட்கள் நில உரிமையைப் பெற்றதால் உற்பத்தி குறையும் என்பது தவறு; உற்பத்திப் பெருக்கேற்படும். நிலவில் உள்ள உற்பத்தித் தொழில் நுட்பத்தில் மாற்றமின்றியமைந்தால் அதுவே போதுமானது. உற்பத்தித் தரத்தில் மாற்றம் வேண்டியது அவ்வளவு முக்கியமில்லை.[1] மேலும் வாதத்தின் வழியே நோக்குங்கால், அதிகப்படி மக்கள் விவசாயத்தில் ஈடுபட்டார்களானால் மொத்த உற்பத்தி அதிகரிக்குமென்பதில் ஐயமொன்றுமில்லை.

நடப்பிலுள்ள பயிர் முறையை ஒட்டிச் சிறிய பெரிய நிலப்பகுதிகளின் உற்பத்தியளவை ஒப்பிடின், இவற்றில் ஏகரா உற்பத்தியில் பெரிய விகித மாற்றமொன்றும் காணவில்லை. பூமிதான இயக்கத்தின் காரணத்தால் நிலமற்றவர்களுக்கும் கைவினைஞர்களுக்கும் நிலம் வாரி வழங்கப்படுவதால் பெருவாரியான அளவில் உற்பத்தி அதிகரிக்கும் எனக் கருதுவதற்கில்லை. வேறு எந்தத் துறையிலும் அவர்களுடைய வறிய நிலையைப் போக்க இயலாத காரணத்தால் பூமிதான இயக்க முறையினால் கிடைக்கும் சொற்பப் பலனைக் கூடப் புறக்கணிக்க முடியாது. இந்த இயக்கத்தினால் காணக் கூடிய மற்றொரு பலனென்னவெனில் இதர தொழில்களில் ஈடுபடக் கூடியவர்களை நிலத்தில் கண்டிப்பாக இருத்திவிடுகிறது. வேறு எவ்வகையினும் உடனடியாகப் பலனளிக்கக் கூடிய முறை இல்லாததாலும் பூமிதான இயக்கத்தினால் தற்காலிக வசதிகள் கிட்டுவதாலும் இம் முறையை உடனடியாக மேற்கொள்ளலாம் எனக்கருதுகிறார்கள்.[2]

3 **பூமிதான இயக்கத்தைப் பற்றிய மதிப்பீடு:** பூமிதான இயக்கத்தின் குறைபாடுகள் இரண்டினைப் பற்றிப் பேராசிரியர் டி.ஆர். காட்கில், இந்தியப் பொருளாதார விவசாயக் குழுவினரின்

1. சிறிய நிலக்கிழார்களும் தங்கள் நிலப்பகுதிகளில் சிறியதளவைப் பூமிதான இயக்கத்திற்குக் கொடுப்பதால் அவர்களுடைய உற்பத்தி ஏகரா ஒன்றிற்கு இவ்வளவு என்ற விகிதத்தில் குறைவு காணாது. இந்தப் பொருளாதார அடிப்படையின் கீழ்த் தான் நிலததைத் துண்டுகளாக்கி விவசாயம் செய்யவேண்டுமென்ற வாதம் எற்படுகிறது. பூமிதான இயக்கத்தினால் இன்னும் தொடர்ந்து நிலச் சிதறல் முறை ஏற்படுமென்ற வாதத்திற்குத் திரு. வினோபாபாவே பதிலளிக்கையில், 'மனச் சிதறல்' தோன்றுவதைவிட நிலச் சிதறல் தோன்றுவதே மேல் என்றார். தனது சத்திய முறையிலும் வழக்கமான நேர்மையுடன் அவர் கூறினார் என்றாலும், இதை ஒரு தக்க வாதமாகக் கொள்ள இயலாது.

2. பூமிதான இயக்கத்தைப் பற்றிய விவரச் சுருக்கம் பேராசிரியர் டி.ஆர். காட்கில் அவர்கள் 15-வது ஆண்டு இந்தியப் பொருளாதார விவசாயக் குழுவினரின் மாநாட்டுத் தலைமையுரையில் நிகழ்த்தியது.

மாநாட்டுத் தலைமையுரையில் விளக்கியுள்ளார். அதிவிரைவில் ஏற்படும் பொருளாதார மாற்றங்களின் காரணமாக உற்பத்தியின் முறைகள் செவ்வனே அமைந்து, அதன் நிமித்தம் பொருளாதார அளவைகளில் ஏற்றம் உண்டாகலாம். பூமிதான இயக்கத்தின் அமைப்பால் நிலப் பிரிவினை விஞ்ஞான முறையில் அமையாமலும் நில மணத்தும் முழு முறையில் பயன் பெருமலும் போய்விடும். மேலும் உற்பத்திப் பெருக்கு ஏற்படும் எனக் கூற இயலாது. இவ்வியக்கத்தில் முழு நம்பிக்கையுள்ளவர்கள் அவ்வாறன எதிர்ப்புக்குப் பதில் அளிக்கையில் நாட்டில் சமுதாய மாற்றம் ஏற்படும்போது பூமிதான இயக்கமும் அதற்கேற்ப மாறி ஆக்கத் திட்டங்களுக்கெதிராக இராது கூட்டுறவு முறையில் ஒத்துப் போகும். இதனைப் பற்றிய பிறிதொரு குறைபாட்டை விளக்குகையில் பேராசிரியர் டி. ஆர். காட்கில், இம்முறையினுல் நில உடைமை பற்றிய கொள்கை அதிகரிப்பதோடு அல்லாது எண்ணற்ற அளவில் சிறு நிலக்கிழார்கள் தோன்றிவிடுவார்கள். பிறர் நலனைக் கோரித் தங்கள் நிலத்தின் ஒரு பகுதியைத் தான மாகக் கொடுத்தவர்கள் அடுத்து ஏற்படக் கூடிய எவ்வகையான நிலச் சீர்த்திருத்தச் சட்டமும் இவர்களுடைய உரிமையைப் பாதிக்கக் கூடியதாக இருப்பின் கடுமையாக எதிர்த்துத் தங்களுக்கு எதிர்க்க உரிமை உண்டென்று இருப்பார்கள். பூமிதான இயக்கத் தின் காரணத்தால் அதிகப்படியான சிறு நிலக்கிழார்கள் தோன்றிச் சீர்திருத்த வாதிகளுக்கு மேலும் மேலும் புதிய பிரச்சினைகளை எழுப்பி, அதனுல் சமுதாய வளர்ச்சியின் நிமித்தம் கூட்டுக்கொள் கையைக் கொண்டு வருவதில் தடங்கல் செய்யக் கூடும்.[1] இம் மாதிரியான குழப்பங்களைப் போக்க ஒவ்வோர் இராச்சியமும் நிலம் உழுபவருக்கே என்ற அடிப்படையின் கீழ்ப் பெருமளவில் சட்டமியற்றி வருகின்றது. பூமிதான இயக்கத்தைப் பற்றிய குறை பாடுகளை மிகைப்படுத்திக் கூறியுள்ளனர் என்றும் நாம் இதை முடிவு கட்டுவோம்.

1955 ஆம் ஆண்டு மே மாதம் முடிய, தானமாகப் பூமிதான இயக்கத்தின் கீழ்ச் சேர்ந்த நிலப்பரப்பின் அளவு 37, 58, 692 ஏக்கர், 'இதனுல் உலகில் மிகவும் செல்வரான நிலக்கிழாராக வினோபாபாவே ஆகிருர் என்ருல் மிகையாகாது'. மிகவும் மெலிந்த தேகமுடைய திரு. வினோபாபாவே தன்னந்தனியே பிறர் உதவியின்றி மன உறுதியுடன் பணியாற்றத் தாமாகவே வந்து

1. இத் தடங்கலை நிவர்த்திக்க (1) இதில் பயன் பெறுபவர்கள் குத்தகைக் காரராகக் கருதப்படுவர், (2) நில நிர்வாகத்தைச் செவ்வனே நடத்தப் போகும் முறைகளில் இராச்சிய அரசின் உத்தரவுக்குட்பட்டு நடக்கச் சித்தமாக இருப்பவரே நிலப் பயன் பெறுபவராகக் கருதப்படுவர், (3) கூட்டுறவு முறையில் விவசாயத்தை ஆரம்பகால முதல் எடுத்து நடத்த உரிமையுண்டு.

குவிந்த நிலக்காணிக்கையைப் பார்த்தால் அது செயற்கரிய செயல் எனக் கூறலாம். பூமிதான இயக்கத்தின் வாயிலாக இந்நாட்டின் நிலமற்றவர் அனைவருக்கும் நிலம் கிடைக்குமா என்று எதிர்பார்க்க இயலாது. இந்த இயக்கத்தில் ஈடுபட்டவர்களுக்கு விவசாயத்தைச்சீரான முறையில் அமைக்க யாதொரு முன்னேற்பாடும் இல்லை. கிராமத்தின் நிலையைச் செழிப்பாக்கும் திட்டமும் கிடையாது. திரு. விநோபாபாவே அவர்கள் அடிக்கடி எடுத்துக் கூறி வரும் சுய தேவைகளைக் கிராமத்தினூடே பெறல் வேண்டும் என்பது பொருளாதார அடிப்படையில் மிகவும் பிற்போக்கான முறையைச் சுட்டிக்காட்டுகிறது.

இந்த இயக்கத்தை ஆதரித்துச் செல்பவர்கள் தாங்கள் மக்களுடைய மன உணர்ச்சியைத் தட்டி எழுப்பும் வகையில் வேண்டுகோள் விட்டு, இப் புவியின் பொருளனைத்தும் சமூகத்தின் சொத்து எனக் கூறி வருவதால் இதில் மன மாற்றம் தோன்றுவது மட்டுமின்றி, எவ்வகையான நிலச் சீர்திருத்தம் கொண்டுவரினும் அவர்கள் அதை எதிர்ப்பு இன்றி ஏற்றுக் கொள்ளுவார்கள். நாட்டில் மக்கள் எவ்வளவு பரிசுத்தமான மனமுடையவராக இருப்பார்கள் எனக் கூறவும் வேண்டுமோ? தீர்வு காணத்தகாத இவ்வாறான கொள்கைகளில் யாரும் எவ்வகை முடிவும் கொள்ள இடம் இருக்கிறது. ஆயினும் பூமிதான இயக்க முறையால் நிலச் சீர்திருத்த முறைகளுக்கு யாதொரு வழியும் ஏற்படாது; இடர்ப்பாடும் இல்லையெனலாம்.

**4. நிலச் சட்டமும் உற்பத்திப் பெருக்கமும்:** அண்மையில் ஏற்பட்ட நிலச் சீர்திருத்தச் சட்டங்கள் பல இராச்சியங்களில் அவ்வப்போது இயற்றப்பட்டன. இவையனைத்தும் ஒரே அடிப்படையில் தோன்றியுள்ளன. ஆயினும் செய்ம் முறைகளில் மாறுதல்கள் உள்ளன. எனவே, ஒரே சீரான நிலச் சட்டம் நாடு முழுமையும் உளது. ஒவ்வொரு நிலச் சீர்திருத்தச் சட்டம் தோன்றியபோதும் தனிப்பட்ட சரித்திர அடிப்படையிலும் நிலப் பரப்பின் சமூக வழக்கத்தை யொட்டியும் அந்தந்த இராச்சியத்தின் நிலவளம், மக்களின் செல்வ நிலையை அனுசரித்தும் தோன்றின. நிலச் சீர்திருத்தங்கள் தோன்றுவதற்கான பொதுக் கொள்கைகளை இங்கு விளக்குவோம்: முதலாவதாக நில உடைமை, நிருவாகம், உழைப்பு இவையனைத்தும் ஒழுங்கான முறையில் ஒன்றுபடுத்தி, நிலத்தைப் பொறுத்த மட்டில் இராச்சியம், நிலத்தில் உழைப்பவர் என இருவகைப் பாகுபாடுகளை ஏற்படுத்துதல். இதில் தீர்வுகாண (i) வார அல்லது குத்தகைத் தொகைபெறும் வகுப்பினரைச் சந்தித்து உழைப்பவர் நிலம் பெற, வருங்காலத்தில் தனியார் கையில்

அதிக நிலம் சேராது இருக்கத் தடுப்பது; (ii) குறிப்பிட்ட வாரக் குடியானவருக்கு ஏற்ப உரிமைப் பட்டயம் வழங்குதல்-இம் முறையால் குத்தகை அல்லது வாரக் குடியானவர் நிலக் கிழாராகவாவது அல்லது பிற உரிமையாளரிடம் பகுதி உரிமை யாளராகவாவது மாறி விடுவது; (iii) நிலத்தைக் கூறுபோட்டு, குத்தகை அல்லது வாரத்திற்குப் பயிரிட விடுவதைத் தடுப்பது அல்லது வாரத்தில் பெற்ற நிலத்தை மறுபடியும் உப குத்தகைக்கு விடுவதையும் தடுப்பது. (இம் முறைகளால் வருங்காலத்தில் நில சேமிப்பைத் தடுப்பது. மேலும் தாமாகவே நிலத்தைப் பயிரிட வேண்டும் என்ற கொள்கையை விஸ்தரித்தும் வாரப் பயிர் முறையைக் கட்டோடு நீக்கவும் முயலுவது); (iv) சுரண்டல் முறையை ஒழிக்க நேர்மையான வார அல்லது குத்தகைத் தொகையை நிர்ணயித்தும், குத்தகைக்காரர்களை முன் அறிவிப் பின்றி வெளியேற்றுவதைத் தடைப்படுத்தியும் உடைமை மாற்றங் களைத் தடுத்தும், அடகு வைக்கும் முறையைக் கட்டுப்படுத்தியும் சீர் செய்தனர்; (v) ஒரு குறிப்பிட்ட வரம்பிற்கு அப்பால் நிலச் சிதறுதலைக் கட்டுப்படுத்த முயன்றனர்.[1]

நிலைமை படுமோசமாகாதிருக்க நடப்பிலுள்ள சட்ட திட்டங் களை வற்புறுத்திக் கட்டுப்பாடு செய்தனர். இவைகளை உற்பத்தியை அதிகரிக்க இயற்றப்பட்ட சட்டங்களாகக் கருத இயலாது. உற்பத்தியை அதிகரிக்க விவசாயம் செய்ய அளவிடப்பட்ட நிலத் துண்டை உத்தமப் பருமனுக்கேற்ப அதிகரிக்க வேண்டும். மற்றும் விவசாயத் தொழில் நுட்ப முறைகளையும் புகுத்த வேண்டும். நாளிது வரையில் உற்பத்திப் பெருக்கம் மிகவும் குறைவாக இருக்கிறது.[2]

**5. கிராமப் பஞ்சாயத்துக்களின் சீரமைப்பு :** நிலங்களின் நிருவாகமும் அவற்றைப் பற்றிய சீரமைப்புக்களும் தெளிவுறச் செய்தற்கு உகந்தவர் கிராமப் பஞ்சாயத்து மக்களே. 1954ஆம் ஆண்டு ஜூலை மாதம் இராச்சிய அரசின் மந்திரிகள் ஒன்றுகூடி ஒரு குழுவை அமைத்தனர். அதன்படிக் கிராமப் பஞ்சாயத்தினர் மூலமாகத் திட்டங்கள் வகுத்தும், கிராமச் சீர்திருத்தங்கள் செய்தும் குறிப்பாக, கிராமப் புனரமைப்பு சம்பந்தமான செயல்களை

1. அக்ரேரியன் லெஜிஸ்லேஷன் (Agrarian Legislation) பகுதி, 4: முகவுரையைக் காண்க.

2. 1953ஆம் ஆண்டு மே மாதத்தில் நிலச்சீர்திருத்தம் சம்பந்தமாக மத்தியக் குழு ஒன்று நியமிக்கப்பட்டது. இதற்கு ஒரு தலைவர். மற்றும் இதர உறுப்பினர்களும் உள்நாட்டு விவகார மந்திரியும் இராச்சிய மந்திரிகளும் உளர். இராச்சிய அரசினர் அவ்வப்போது நிலச் சீரமைப்புச் சம்பந்தமான கோரிக்கைகளைப் பரிசீலனை செய்து திட்டக் கமிஷனுக்குத் தங்கள் பரிந்துரையைக் கூறினர்.

உருவாக்க முயன்றனர். அவர்கள் கூறிய யோசனைகளாவன: (i) நில வரியை ஒழுங்காக வசூல் செய்யும் பொறுப்பைக் கிராமப் பஞ்சாயத்திடம் ஒப்படைக்க வேண்டியது. இதில் ஒரு குறிப்பிட்ட சதவீதம் அவர்களுடைய வருமானமாகக் கருதப்பட வேண்டும். ஒரு சில குறிப்பிட்ட பஞ்சாயத்துக்களில் இம் முறையைப் பரீட்சை செய்து பார்க்கவேண்டியது. (ii) நில சம்பந்தமான ஆவணங்களைப் பஞ்சாயத்துக்கள் சரியான முறையில் வைத்துக்கொள்ளவேண்டியது. பட்வாரி (patwari) அல்லது கிராமத் தலைவர் நிலப்பட்டா மாற்றங்களைப்பற்றிய தகவல்களைக் கொடுத்தும் நில உடைமையாளர்களுக்கு அவ்வப்போது தாக்கலான நிலத்தைப் பற்றிய விவரங்களை அறிவித்தனர். (iii) சர்க்கார் நிலங்கள், சாதாரண உபயோக முள்ளவை, மேய்ச்சல் வெளி நிலம், மீன் வளம் பெற்றவை, ஆபாதி (abadi) இடங்கள் (குடியிருப்பு), காடுகள் இவையனைத்தும் பஞ்சாயத்திடம் ஒப்படைக்கப்பட வேண்டியவை. பஞ்சாயத்து இவைகளைச் சீரிய முறையில் முன்னுக்குக் கொண்டு வரும். இவைகள் விவசாயம் மற்றும் இதர செயல்களுக்காகக் குத்தகைக்கு விடப்படும். (iv) பஞ்சாயத்துக்கள் மூலமாகவே நிலங்கள் குத்தகைக்கும் வாரப் பயிருக்கும் விடப்பட வேண்டும். (v) கிராமக் கூட்டுறவு நிறுவனங்களை இப் பஞ்சாயத்துக்கள் தொடங்க வேண்டும். அவற்றின் உதவியால் பலவகையான தொழில்களை நடத்தி, அக் கூட்டுறவு நிறுவனங்கள் நாளிது வரை செம்மையாக நடக்கின்றனவா எனக் கவனித்து வரவேண்டும். தேறிய விதைகளை விற்கும் பொறுப்பினை இக் கூட்டுறவுச் சங்கத்தின்பால் பஞ்சாயத்துகள் ஏற்று எடுத்துக் கொள்ளும். அரசினர் அளிக்கும் பெரும்பாலான உதவிகள் கூடிய வரையிலும் கூட்டுறவுச் சங்கங்கள் மூலமாகவும் கிராமப் பஞ்சாயத்துக்கள் மூலமாகவும் கிராமங்களுக்குக் கிடைக்கும். (vi) நகராட்சியையும் சமூக நலத்தையும் ஒட்டிப் பல பணிகளைக் கிராமப் பஞ்சாயத்துகள் செய்யவேண்டும். அவை 25 வகைகளாகப் பிரித்து விளக்கம் செய்யப்பட்டுள்ளன. பிறப்பு, இறப்பு, மணம் இவைகளைப் பதிவு செய்தும், மருத்துவ வசதி, சுகாதார வசதி இவைகளைக் கொடுத்தும், குடி நீர்க் கிணறுகளை ஏற்படுத்தியும், அவற்றினைச் செப்பனிட்டும் மேற்பார்வை செய்வார்கள். விவசாய, கூட்டுறவு நிறுவனங்கள் அமைப்பதிலும், பொதுக் களஞ்சியங்களை ஏற்படுத்துதலிலும், குடிசைத் தொழில்களை நிறுவி அவை வளர்ச்சி பெற வேண்டிய முறைகளை ஆய்வு செய்வார்கள். (vii) கிராமங்களுக்குச் சுகாதார முறையில் காப்பு அளிக்கப்பட்ட நீர் வழங்குதல் முறையை அரசினர் கவனத்திற்குக் கொண்டு வந்து அதைச் செம்மையான முறையில் மத்திய, இராச்சிய அரசுகள் மான்யத் தொகை யளித்து நடத்துவதை

கண்காணிக்க வேண்டுமென்று இக் குழு வற்புறுத்துகிறது. (viii) பஞ்சாயத்துக்களுக்கான ஒதுக்கல்களில் இன்னும் பல்வேறு தகவல்களுக்கிடையே கீழ்க்கண்ட வரி வகைகளையும், இதர வகை வருமானங்களையும் பரிந்துரைத்துள்ளனர். அவையாவன: நில வரியையும், வாரத் தொகையையும் அனுசரித்து ஏற்படும் தரவரி (grade tax), தொழில், பணி, உத்தியோகங்களின்மீது வரி விதிப்பது, சொத்து வரி, பொதுச் சுகாதாரப் பாதுகாப்பு வரி, சந்தைகளிலும், பொது விற்பனை இடங்களிலும் பண்டங்களை விற்பனை செய்யத் தீர்வை விதித்தல் வாடகைக்கு எடுக்கப்படும் வண்டி, பிராணி இவைகளின் பேரில் லைசென்ஸுக் கட்டணம் விதித்தல், பஞ்சாயத்து நீதி மன்றங்களிலிருந்து விதிக்கப்படும் அபராதம், கட்டணங்கள், குளம் குட்டை இவைகளில் மீன்பிடிக்கக் கட்டணம் வசூலித்தல், அறுவடை முழுவதையும் விற்பனை செய்யின் அதன்மீது வரிதண்டல், பொதுச் சந்தை இவைகளை நடத்துவதில் கிடைக்கும் வருமானம், பொதுக் காரியங்களைச் செவ்வனே நடத்த வரிபோன்று உழைப்பைப் பெறுதல், குறிப்பாக நிலதானம், பண ஈகை, பொது மராமத்து வேலைகளுக்கான சிரமதானம் (shramadan).

19ஆம் நூற்றுண்டின் இறுதியில் ஏற்பட்ட பொருளாதார மாற்றங்களால் பஞ்சாயத்துகள் பண்டைக் காலங்களில் செய்து வந்த பொதுச் செயல்கள் புரிய இயலாது பயனற்றுப் போயின. உடனடியாக எல்லாப் பொறுப்புகளையும் பஞ்சாயத்தின் செயலுக்கு விட்டுவிடின் குழப்பங்கள்தான் தோன்றும் என்று குழு கூறி நிதானமாகப் பஞ்சாயத்துகளுக்கு அனுபவம் உண்டான பிறகு செயல் புரிய ஏற்பாடு செய்தல் நலமென்றது. மிகவும் முன்னேற்றம் காணும் ஒரு சில பஞ்சாயத்துக்களின் அமைப்பில் மாதிரியாக இச் செயல்களைப் புரிய முயன்று பின்னர் எல்லாப் பஞ்சாயத்துக்களையும் அவ்வாறுக்கலாம்.

**6. அண்மையில் ஏற்பட்ட மாறுதல்கள்:**[1] திட்டக் கமிஷன் பகர்ந்த முறைகளில் அநேக நிலச் சீர்திருத்தச் சட்டங்களை இராச்சிய அரசினர் ஏற்றெடுத்து நடத்தினர். நாடு சுதந்திர மடைந்தவுடன் நில வருமான முறைகளில் பெரும் மாறுதல்கள் ஏற்பட்டன. இவைகளில் முதலாவதாகச் சிற்றரசு நாடுகள் இந்திய யூனியனுடன் இணைக்கப்பட்டன. இம்மாதிரிச் சுதேச இராச்சியங்களில் பலவித முறைகளில் நிலவரி முறைகள் அமைந்திருந்தன. பழக்க வழக்கங்களையும் பண்டை முறைகளையும் அனுசரித்து நிலவரி விகிதம் தீர்மானித்தனர். ஆட்சியாளர்கள் விருப்பத்திற்கேற்ப நிலசர்வேக்

1. வரி விசாரணைக் குழுவின் அறிக்கை: பகுதி 3, பக். 189—286.

களும் கணக்குத் தீர்வுகளும் செய்யப்படும். நில மதிப்பிடுதலில் பேதங்களும், அதன் காரணமாக வரிவிகிதங்களில் மாறுதலும் ஏற்பட்டன. சர்வே செய்யப்படாத நிலங்கள் அதிக அளவில் இருந்தன. குடியானவர், பயிரிடுபவர்கள் இவர்களுக்கு எவ்வித மான காப்பு முறையும் இல்லை. நிலவரி முறைகளை யெல்லாம் உடனே ஒரே திட்டத்திற்குள் ஒழுங்குபடுத்த முயலுவதும் கடினமாக இருந்தது. ஏனென்றால் நீண்ட கால அனுபவத்தின் அடிப்படையில் இந்த வரிமுறை உருவாயின. எல்லா இணைக்கப் பட்ட பகுதிகளிலும் ஒரே ஒழுங்கு முறையின்கீழ் வரி விகிதத்தை அமைக்க முயலவேண்டும். இதற்காக இடைக்கால மாறுதல்களை ஊடே புகுத்தித் தனித்தனி நிலத்திற்கு ஏற்ப நிலைமையை அனுசரித்துப் புது வரி விதிப்பினைச் செய்யலாம். நிரந்தர செட்டில்மென்டு (Permanent Settlement) வட்டாரங்களைத் தவிர இதர இடங்களில் முன்பெல்லாம் பருவத்திற்கேற்ப மறு செட்டில் மென்டுகள் செய்யப்பட்டன. கடந்த 70 ஆண்டுகளாகச் செட்டில் மென்டு மாற்றம் செய்யப்படாத பகுதிகளும் உண்டாயிருந்தன. அங்கெல்லாம் நிலைமை கட்டுக்கடங்காமல் இருந்தது. இந்த நூற்றாண்டின் முப்பதில் பெரு மந்தம் ஏற்பட்டு, அதன் விளைவாக விலைகள் சரிந்தன. இதையடுத்து ஏற்பட்ட போரின் காரணமாக விலையேற்றம் தோன்றியும், யுத்தத்தின் பிற்காலத்தில் பண வீக்கத்தின் காரணமாக விலைகள் நஞ்சுபோன்று மித மிஞ்சியும் ஏறின. தொழில் நடத்தும் ஆட்சியாளர்கள் தோன்றினர். ஆயினும், தகுதியான பயிற்சி பெற்ற தொழில் நுட்ப வேலையாட்கள் இல்லாததால் நிலத் தீர்வைகளைச் செய்ய இயலவில்லை. இராச்சிய அரசினர் அநேக இடைக் கால முறைகளை அமலாக்கி நிலவரி விதிப்பில் திருத்தங்களைச் செய்தனர். இம் முறைகள் தற்காலிகமானவை. பழைய நிலத் தீர்வை, முறைகளை நன்கு உணர்ந்து புதுச் சுற்றுப்புறத்திற்கேற்ப அவைகளை மாற்றி யமைப்பார்கள். சில எடுகோள்கள் சற்று ஒவ்வாத காரணத்தால் மற்ற முறைகள் இன்றியமையாதவை எனலாம். அவ்வாறான எடுகோள்கள் வருமாறு: (i) பல்வேறு நிலப்பரப்புக்கள் பல்வேறு காலத்தில் நிலத் தீர்வை இடப்படுதலால் கடுமுரண்பாடுகள் ஏற்படாதிருத்தல், (ii) உள்ளூரில் நிலவும் விலைகளும் அவற்றின் நிலையும் ஏற்றத் தாழ்வுகளும் வெளியூரின் விலைகளை அனுசரித்து மாறுபடுவதில்லை. ஆக அவ்வாறான விலைகளும், ஏற்றத் தாழ்வு களும் நிலவரி நிர்ணயம் செய்யுமுன் கருதப்படவேண்டும். (iii) வெகு நீண்ட கால நிலவரித் திட்டம் 30 ஆண்டுகளுக்கு மேற்பட்டதால் விலைகளில் ஏற்றத் தாழ்வு மிகவும் அதிகமாக இராது.

உண்மையிலேயே பார்க்கப் போனால் முற்போக்குடன் பண மாக்கமும், வர்த்தகமாக்கமும் விவசாயத் துறையில் செய்த காரணத்தால் உள்ளூர் விலைகள் நாட்டின் விலைகளுடனும் உலகத்தின் விலைகளுடனும் ஈடுபட்டன. உலகப் போரின் காலத்தின் பிறகு விலைகளில் பெரும் ஏற்றத் தாழ்வுகள் உண்டாயின. இதன் விளைவாக-விலையேற்றத்தின் காரணமாக-அவ்வமயம் முதல் நிலவரிச் சுமையைக் குறைக்க முயன்றனர். (1930—37-ல் மட்டிலும் விலைகள் குறைந்தன) இவ் விலைமாற்றங்கள் ஏற்படுவதால் முன்னியம்பிய எடுகோள் - அதாவது பல்வேறு நிலப்பரப்புக்களில் பல்வேறு காலத்தில் நிலத் தீர்வை இடப் படுதலால் கடு முரண்பாடுகள் ஏற்படாதிருத்தல்-என்பது பொய்த்தது. ஏற்றத் தாழ்வற்ற ஒரே சீரான நிலங்கள் வெவ்வேறு காலங்களில் வரி விதிக்கப்படுவதால் ஒரே அளவில் தீர்வையிடப் படவில்லை. நியாய முறைகளைக் கையாள விரும்பினால் இம் மாதிரியான ஏற்றத் தாழ்வுகளைப் போக்கச் சில மறுமுறை சரிகட்டல் கொள்கைகளைக் கடைப்பிடித்தல் இன்றியமையாத தெனலாம். முடிவாக விலைகளின் புள்ளி விவரத்தைச் சேகரிக்க வென வெகு சிறிய புவியெல்லை உடைய பகுதிகளுக்குச் சென்று கணக்கிடவேண்டாம். பொதுப்படையில் நிலவும் விலை யமைப்பினைக் கண்ணுறலே நலம்.

# 10. கிராமக் கடன்பாடு

1. **கடன் தொகையின் அளவு:** கீழ்க்கண்ட அட்டவணையில் கிராமக் கடன்பாடு எவ்வளவு இருக்கக்கூடும் என்று ஒவ்வொரு சமயத்திலும்[1] மதிப்பிடப்பட்டிருப்பதைப்பற்றி விளக்கம் கொடுக்கப்பட்டிருக்கிறது.

| ஆண்டு | கடன் தொகை (கோடிக் கணக்கில்) | எழுதியவர் |
|---|---|---|
| 1911 | 300 | ஸர் எட்வர்ட் மக்கலகன் |
| 1924 | 600 | ஸர் மால்காம் டார்லிங் |
| 1930 | 900 | ஜே. ஸி. பீ. ஈ. குழு |
| 1935 | 1,200 | Dr. ராதாகமல் முகர்ஜி |
| 1938 | 1,800[2] | ஈ. வி. எஸ். மணியம் |

அண்மையில் ஏற்பட்ட விலையேற்றத்தினால் கிராமக் கடன் பளு குறைந்துள்ளதா என்ற கேள்விக்குப் பல வகையான பதில்கள் கிடைத்துள்ளன.[3] இவ்வேறிய விலைகள் பெரு நிலக்கிழார்களுக்கே உற்பத்திப் பெருக்கின் காரணமாக இலாபம்

1. நானாவதியும் அஞ்சாரியாவும் — தி. இண்டியன் ரூரல் ப்ராப்ளம் (The Indian Rural Problem) 4 வது பதிப்பு. பக். 53.

2. 1800 கோடியை நாட்டுப்புற மக்கள் தொகையால் அதாவது 25 கோடியால் வகுக்க 5 பேர் கொண்ட குடும்பத்தில் தலா ரூ. 72 அல்லது குடும்ப மொன்றுக்கு ரூ. 360 ஆகிறது. இதை நோக்குங்கால் பெரியதாகத் தெரியவில்லை. ஒரு குடியானவனுடைய வருமானத்துடன் இதைக் காணும் போது கடன் தொகை மிகப் பெரியதாகத் தெரிகிறது. இக்கடனில் பெரும் பகுதி பயன் தராதது என்று அறிந்து, அதனால் கண்மூடித்தனமாகக் கடன் வாங்காது இருக்கலாம். ஒரு சாதாரணக் குடியானவன் எவ்வளவு கடன் வாங்க இயலும் என்பது இதிலிருந்து புலனாகிறது அது மிகவும் குறைவானது. அவன் தன்னால் எவ்வளவு கடன் பெற முடியுமோ அதைத் தான் பெறுகிறான். அவன் கோரிய அளவு கடன் கிடைப்பதில்லை.

3. த்யூவெட்டும் ஸிங்கும், இண்டியன் எகனாமிக்ஸ், பக். 155.

தந்தது. சிறு நிலக்கிழார் தங்களது நுகர்வுக்கு ஏற்ப உற்பத்தி செய்ததால் அவர்களுக்கு இவ் விலையேற்றம் பயன்தரவில்லை என்பது ஒரு வகைப் பதில். ஆயினும், விலை இறக்கம் ஏற்பட்ட வுடன் எல்லா நிலக் கிழார்களையும் பாதிப்பது போல் விலை யேற்றம் சிறிதளவேனும் எல்லா நிலக் கிழாரையும் பயனடையச் செய்திருக்கும் எனலாம். கூட்டுறவு இயக்கம் (1939—46) பற்றிய ஆய்வுரையில் ரிஸர்வ் பாங்கு குறிப்பிடும்போது விலையேற்றத்தின் காரணத்தால் விவசாயக் கடனாளிகள் தங்கள் கடன் பகுதியைக் கூட்டுறவுக் கடன் சங்கங்களில் வெகு விரைவிலேயே கொடுத்துக் கணக்குத் தீர்த்தனர். இன்றும் சில மாகாணங்களில் காலத்திற்கு முன்னரே கடனைத் தீர்த்தனர் எனத் தெரிகிறது. தன் உணவிற்காகத் தனியே பயிரிட்டும் இதர நிலத்தில் கூலி வேலை செய்யும் குடியானவன் கூடுதல் கூலி பெறுவதால் அவனுடைய நிலைமையில் ஏற்றம் காணலாம். ஆயினும் கூலியும் விலைகளும் ஒரே சீராக இல்லாது கூலி விலையை விட எக் காலத்தும் பின் தங்கி உள்ள இந்நிலையில் அவன் பெறும் கூலி அவனது உண்மையான ஏற்ற வருமான நிலையைத் தெளிவாக்குகிறதா என்றால் ஐயத்துடனேதான் நாம் அதைக் காண முடியுமெனலாம்.

**2. கடனும் விவசாயத் தொழிலும் :** விவசாயத்தில் தனிப் பட்ட சிரமங்கள் தோன்றியிருப்பது நாம் அறிந்ததே. எவ்வகைத் திட்டங்களிட்டாலும் இவைகள் பெரும் பிரச்சினையாகக் கருத வேண்டியிருக்கின்றன. (i) கிராமப் பகுதிகளில் நிதி வசதி சீரிய முறையில் அமையவில்லை. விவசாயக் கடன் எனப்படுவது நிறுவன முறையில் நடத்தப்பட இயலாதது. இதர நிதி வசதிகளை விட இது மிகவும் பரவலாக ஏற்பட்டுள்ளது. மேலும், மிகவும் சீர்கேடான நிலையில் நிதி உள்ள காரணத்தால் விவசாயிக்குப் பெருத்த துன்பங்கள் உண்டாகி, அவற்றின் காரணமாக விவ சாயத்தில் போதிய அக்கறை காட்ட முடியாது போகிறது. (ii) பொறிசெய்தொழில் போன்று இதில் மூலதனமிட்டு நடத்தி இலாபம் காணுவது அதிக சிரமமானது. பருவ மழையின் ஏமாற்றங்களாலும், சிறுசிறு விவசாய நிறுவனங்களாக உள்ள தாலும் இம்மாதிரி இடர்கள் அதிகம் தோன்றுகின்றன. (iii) விவ சாய உற்பத்திப் பொருள்கள் அதி விரைவில் கெட்டுப்போய், உபயோகத்திற்கு உதவாமல் போய்விடும். எனவே, விலை யேற்றத்தின் பலாபலனை அடைய வேண்டுமானால் காலம் கடந்து பண்டகசாலையி லிட்டு வைக்கவேண்டும். அவ்வாறு செய்ய இயலாததால் விவசாயி எவ்வகையேனும் விவசாயப் பொருள்களை வந்த விலைக்கே விற்க வேண்டியேற்படுகிறது. (iv) விவசாயி தான் செய்த உழைப்பின் பலனை நெடிது நாள் கழிந்த

பிறகே காண முடிகிறது. (v) தான் பயிரிட்ட பொருள் சந்தையில் விலையிறக்கம் கண்டதெனில் உடனே அதைக் களைந்து அதிக மதிப்புள்ள வேறு பொருள்களைச் சாகுபடி செய்ய இயலாது. (vi) தனது விவசாயப் பொருள்களை விற்க வேண்டுமானால் விவசாயி அநேக வெளியார்களைக் குறிப்பாகத் தரகர், கமிஷன் ஏஜென்டு முதலியவர் களின் தயவை நாடவேண்டியது மிகவும் இன்றியமையாத தென லாம்.[1]

3. **கடன்படுதலின் காரணங்கள் :** கடன் வசதியின்றேல் விவசாயமில்லை. ஆகவே, கடன், விவசாயம் இவ் விரண்டினுக்கும் மிகவும் நெருங்கிய தொடர்பு உண்டு. இது விசாரிக்கத் தக்க தன்று எனலாம். வேளாளரின் மதியீனச் செயல்களாலும், அல்லது இயற்கையின் சதியாலும் விவசாயி தன் பணிகளில் முன் னேற்றம் காணாது பின்னடைகிறான். பயனற்ற முறையில் விவ சாயத்தில் ஈடுபட்ட விவசாயி பெருங்கடனாளியாகிறான்.

விவசாயியின் ஏழ்மைத் தனத்தால்தான் அவன் கடனாளியாகிறான். சாதாரண வாழ்க்கைக்கு வேண்டிய பொருள் களைப் பெறாது கடன் வாங்கியே காலங் கழிக்கிறான். அவனுடைய வாழ்க்கை நிலை படுமட்டமாவதற்குக் காரணங்களாவன : (i) நிலத்தின் வருமானத்தைப் பங்கு பெற எண்ணிறந்த மக்கள் தொகை, (ii) நிலத்தைப் பிரித்தலும் சிதறவிடலும், (iii) பயிர்த் தொழில் போக இதர தொழிலில்லாத காரணத்தால் பகுதி வேலை யின்மை, (iv) பருவ மழையின் ஏற்றத் தாழ்வுகளால் விவசாயம் வெறும் சூதாட்டமாகிவிடுதல், (v) விவசாயிக்கும் அவனது கால் நடைகளுக்கும் வியாதியோ நோயோ பரவி, அதனால் அவதியுற்று, குறிப்பிட்ட காலத்தினுள் பயிரிட முடியாது கடன் வாங்கி மேலேற முடியாமல் சஞ்சலத்திலாழ்கிறான்.

அதிக நெருக்கமுள்ள காரணங்களைக் கீழ்க்கண்ட தலைப்புக் களில் அமைக்கலாம். சந்ததி வழியே தோன்றிய கடன், வீண் செலவு, கடன் கொடுப்போரும் அதிக வட்டி நிலையும்.

4. **சந்ததி வழியே தோன்றிய கடன் :** கடன்சுமை பல்லாண் டாக, சந்ததி சந்ததியாக வருகிறதெனலாம். ஒருவன் தனது சந்ததியாரிடமிருந்து பெற்றுக்கொண்ட சொத்தைப்போல் அவனது கடனுக்கும் பாத்தியதை அடைகிறான். மேலும் சந்ததி வழியே வரும் கடன், குடும்ப கௌரவத்திற்கு வேண்டியதென

1. ஆல் இண்டியா ரூரல் க்ரெடிட் ஸர்வேயின் அறிக்கை, பக். 151.

நம்பினர். ஆனதால் விவசாயி இந்தப் பொறுப்புகளுக்கு ஈடு கொடுக்கிறான்.

மூடபக்தியாலும் அறியாமையின் காரணத்தாலும் விவசாயி கடன் பொறுப்பை ஏற்றுக்கொள்ளுவது அவனது மதியீனத்தைக் காட்டுகிறது. இம் மாதிரிப் பழைய அர்த்தமற்ற கட்டுப்பாட்டு முறையை விட்டுவிட வற்புறுத்தவேண்டும். இக் கடன்நிலையை அனுமதித்துத் திவால் சட்டம் (Insolvency Act) மாற்றி யமைக்கப் பட வேண்டும். மக்களனைவரும் திவாலாவதை யாரும் விரும்ப வில்லை. அதேபோன்று மக்களனைவரும் கடனில் பிறந்து கடனில் வளர்ந்து வாழ்ந்து கடனிலே மடிந்து அந்தக் கடன் பளு ஒருவரை விட்டு ஒருவராகப் பின் சந்ததியினரைப் பிடித்துக்கொள்ளும் அம் மாபெரும் முறையையும் யாரும் விரும்பவில்லை.[1]

**5. தேவையற்ற செலவு:** இந்திய உழவர்கள் மிகவும் சிக்கன மான முறையில் குடும்பம் நடத்தியும் கூட, சில முக்கிய சந்தர்ப்பங் களில் குறிப்பாக மணம், மரணம், திருவிழா முதலியவைகளில் தமது வரம்புக்கு மீறிச் செலவு செய்கிறார்கள். தக்கண ரயத்துகள் குழுவினர் (1875)-ல் முன்கூறிய செலவினரால் விவசாயி கடனி லாழ்த்தப்படுகிறான் என்ற வாதத்தை ஏற்றுக்கொள்ளவில்லை. அந்தச் செலவினம் மிகவும் ஆடம்பர நிலையைக் காட்டுகிற தெனினும், ரயத்தின் நிலைக்குகந்ததன்று என்றாலும் இச் செல வினால் கடன் பளுகூடுகிறதென்பதை ஏற்றுக்கொள்ள இயலாது என்றனர். அடுத்தடுத்துவரும் சிறிய அளவில் செய்யப்படும் செலவினங்கள் அதாவது உணவுப்பண்டங்கள், தவிர்க்க இயலாத் தேவைகள், இவைகளால்தான் கடன் பளு கூடுகிறதென்று அக் குழுவினர் முடிவு செய்தனர். மேலும் விதை வாங்க, கால்நடைகள் வாங்க, அரசினரின் வரிவிதிப்பு இவைகளும் சேர்ந்த காரணத்தால் கடன் பளு, சுமையாக அமைகிறது என்று கருதப்பட்டது. ஆயினும் இந்த அபிப்ராயத்தை ஏற்க முன்வரவில்லை யெனலாம்.[2] பொதுவாகப் பெருங் கடன்சுமை உண்டாவதற்கு அடிப்படைக் காரணங்கள் இத் தனிப்பட்ட நிலைமைகளெனலாம். கடன் பெறுபவர் இதனின்று மீளுவது மிகக் கடினம். எனவே இம்மாதிரி பயனற்ற செலவுகளை அறவே அகற்றவேண்டும் என்று கடனுதவி யளிக்கும் நிறுவனங்களும் கூட்டுறவுச் சங்கங்களும் மக்களிடையே பிரசாரம் செய்துவருகின்றன.

1. *விவசாயக் குழு அறிக்கை, பத்தி 367. விவசாயக் கடன் சட்டம், 1935 (வங்காளம்) திவால் முறைக்கு இடமளிக்கிறது.*

2. *'சமூகப் பழக்க வழக்கங்களை யனுசரித்து மணம் மற்றும் இதர பண்டிகை களில் அதிகப்படியான செலவினைச் செய்து, அதற்காக நீண்ட காலத் தவணையில் பெருங்கடன்களை வாங்குகின்றனர்.' ஆல் இண்டியா ரூரல் க்ரெடிட் சர்வே அறிக்கை, பக். 186.*

**6. கடன் கொடுப்பவரும் அமித வட்டி தண்டலும் :** இந்தியர் கிராம வாழ்வில் கடன் கொடுக்கும் முறை என்றென்றும் சேர்ந்துள்ள ஒரு தவிர்க்க இயலாப் பகுதியாகும். பண்டைக் காலங்களில் கிராமச் சமூக வாழ்வு ஒருசார்புடைய நிலையி லிருந்ததாலும் மக்கள்பால் நெருங்கிய தொடர்பு ஏற்பட்ட காரணத்தாலும் கடன் கொடுப்பவரை மக்கள் மரியாதையுடனும் கௌரவத்துடனும் நடத்தி வந்தனர். அதேபோல் கடன் கொடுப்பவரும் தமக்கு வகுக்கப்பட்ட கடமைகளையும் பொறுப்புகளையும் நியமப்படிச் செய்துவந்தனர். பிறருக்குப் பணி புரிதல் கடமை என்றும், அவர்களைக் கசக்கிப் பிழிதல் பாவமென்றும் அறிந்திருந்தார்கள். கிராம அலுவல்களை அந்தக் கிராமமே பஞ்சாயத்து மூலம் கவனித்து வந்தது. கடன் கொடுப்போருக்கும் வாங்குவோருக்கும் யாதொரு இடையூறும் நேராவண்ணம் பஞ்சாயத்து மேற்பார்வை செய்து வந்தது. விவசாயியினது அறியாமையைப் பயன்படுத்திக் கொண்டும், அவனுக்குள்ள தேவையின் எல்லையற்ற நிலையைப் புரிந்துகொண்டும், கிராமத்தில் உள்ள சவுக்கார் இதன் மூலம் இலாபத்தைச் சம்பாதிக்க விரும்புகிறான். அவன் விவசாயிக்குக் கடனுதவி புரியும் முறை மிகவும் நெகிழ்வு பெற்றது. இக் கடன் கொடுக்கும் தன்மை எவ்வளவு பாதகத்தை விளைவிப்பதாயினும் இச் சுலபமான வழி போற்றத்தகுந்த தெனலாம். தனது வாடிக்கைக்காரனின் வறிய நிலையை நன்கறிந்தும் அவனது குணத்தினையும் நன்கறிந்தவன் ; ஆதலால் கேட்டவுடன் தட்டின்றிப் பணம் கொடுப்பதுண்டு. எனவே கூட்டுறவுச் சங்கங்கள் தம் உறுப்பினர்கள் கடனைத் திருப்பித் தரத் தகுதியுள்ளவர்களா என ஆய்வு செய்யும் முறைகளைக் காட்டிலும் வெகு எளிதாக இந்தக் கிராமக் கடன் கொடுப்போர் கண்டு பிடித்துவிடுவார்கள். இவர்கள் கொடுக்கும் கடன் வழிகள் பெரும்பாலும் உருப்படியான எந்த ஆஸ்தியின்மீதுமின்றித் தானகக் கொடுக்கப் படுகின்றன. சட்டப்படி நீதி மன்றங்களுக்குச் செல்லாமலும் வழக்குத் தொடுக்காமலும் தனிப்பட்ட முறைகளில் பொருளாதார நெருக்கடிகளைச் செய்தும், சமூகத்தில் நெருக்கியும் தான் கொடுத்த கடனைத் திரும்பப் பெறுகிறான். எக்காலமும், எவ்வகைச் செலவாயினும் சரி ; கடன் கொடுப்போர் அதிகச் சட்ட திட்டமின்றிப் பணவசதி செய்து கொடுக்கிறார்.

ஒரு சாதாரண விவசாயி, அன்றாட வாழ்க்கைக்குப் போதிய உணவு கண்டுபிடித்துக் காலந்தள்ளுவதே மிகச் சிரமமானதென்று கூறலாம். எனவே வறுமையி லாழ்ந்துள்ள வேளாளர்களுக்குக் கடன் கொடுத்துதவும் கடன்கொடுப்போர் அமிதவட்டியைக்கோருவதில் தவறென்றுமில்லை எனலாம். ஏனெனில் கடனைத் திரும்ப

வசூல் செய்வதில் அவருக்குள்ள அவதிகளை நோக்கின், அதிக வட்டியைக் கேட்பதில் தவறில்லை எனத் தோன்றுகிறது. அதிக ஆபத்துக்கள் உள்ளன என்ற காரணத்தினால் கண்மூடித்தனமாக வட்டியை வாங்குவதா என்றும், விவசாயியினது அறியாமை, மடமை, எல்லையற்ற தேவை இவைகளைப் பயன்படுத்திக்கொண்டு, ஐயப்பாடுள்ள முறைகளைக் கையாண்டு வருகின்றனர். மத்திய பாங்கு விசாரணைக் குழுவினர் இவர்களுடைய அமிதச் செயல்களை வரிசைப்படுத்தி விளக்கியுள்ளனர். அவையாவன : (அ) வட்டித் தொகையை முன் பணமாகக் கோரல், (ஆ) பணப்பையை அவிழ்க்க (purse-opening) வெகுமதியளிக்க வேண்டுமென்று வற்புறுத்துதல், (இ) விவசாயி வட்டியைச் சரியாகக் கொடுக்காத காரணத்தால் முதலிலேயே வெறும் வெள்ளைக் காகிதத்தில் இடக்கைப் பெருவிரல் ரேகையைப் புரட்டிக் குறி வைத்துக் கொண்டு தனது விருப்பத்திற்கேற்ப ஏதாவது ஒரு தொகையை எழுதுதல், (ஈ) கடன்பட்டோரின் மீது அதிகப்படிக் கணக்கைக் காண்பித்துக் கூடுதலான தொகையைப் பெறல், (உ) எழுதப்பட்ட கடன் பத்திரங்களில் கொடுத்த பணத்திற்கு மேலாகத் தொகையை இடையிடையே புகுத்தி விடுதல், (ஊ) பணம் கொடுக்காமல் ஏமாற்றுதிருக்க வேண்டி விற்பனைப் பத்திரங்களை வாங்கி வைத்துக் கொள்ளல்.[1]

**7. நில வருமானக் கொள்கையும் கடன்பளுவும் :** கிராமக் கடன் முறைக்கு அரசினரின் நில வருவாய்க் கொள்கைதான் காரணமாக இருக்கலாமென்ற வாதம் பலராலும் ஏற்படுத்தப் பட்டது. இது சம்பந்தமாக 1880 ஆம் ஆண்டுப் பஞ்ச விசாரணைக் குழுவினர் கூறியது வருமாறு : வரி கொடுக்க வேண்டிய அவசியமில்லை என்றுள்ள நிலக்கிழாரும், விடுவரி அல்லது 'குவிட்ரென்ட்' கொடுக்கும் நில உடைமையாளர்கள் கூடக் கொடுக்க மிகவும் சங்கடப்படுவதால் நிலவரி காரணமாக இருக்க முடியாதென்பது வெள்ளிடை மலை. ஒருவன் தான் பெறும் வருமானமனைத்தையும் செலவிட்டுப் பிறகு வரியையும் வாரத் தொகையையும் கொடுக்கவேண்டும் என்ற காரணத்திற்குக் கடன் வாங்கினால், அதனால் வரிச் சுமையின் காரணமாகக் கடன் ஏறியது என்பது தவறு. வரியும் வாரத்தொகையும் மொத்த விளைச்சலில் மிகவும் குறைந்த சதவீதம் ஆனபடியால் கடன் பளு இவைகளால் ஏற்படவில்லை.[2] பஞ்ச விசாரணைக்குழுவினர் இவ்வாறு வரியும்

1. ஒப்பந்தப்படி கடனை அடைத்துவிட்டால் வீட்டுப் பத்திரங்கள் விற்பனையாளருக்குத் திருப்பிக்கொடுக்கப்படும் என்ற நிபந்தனைப்படி அமைத்தல் (ஆல் இண்டியா ரூரல் க்ரெடிட் ஸர்வே அறிக்கை, பக். 1 (4-6).

2. பஞ்ச விசாரணைக் குழுவினர் அறிக்கை, 1880. பக்.182.

வாரத்தொகையும் மொத்த உற்பத்தியில் ஒரு சிறிய பகுதியே ஆகும் என்ற வாதத்தை அக் காலத்தில் யாரும் ஒப்புக்கொள்ள முன்வரவில்லை. நடப்பில் வரி விகிதம் அதிகரித்துள்ளதென்று கொள்ளமுடியாது. பஞ்ச விசாரணைக் குழுவினர் கூறியதுபோல விவசாயி வரிசெலுத்த வேண்டுமென்று கடன் வாங்கினால், அந்த வரியினால் கடன் பளு ஏறியது எனக் கூறுவது தவறென்ற வாதத்தை நாம் ஏற்றுக்கொள்ள வேண்டும். செலவின் காரணத்தால் படும் கடன்களால் அதை ஒதுக்கி விடுதலும் தவறுதான். நில வரியைக் குறைப்பதோ நீக்கம் செய்ய முற்படுவதோ தற்காலம் எதிர்பார்க்கக்கூடிய நற்செயலன்று எனலாம். நாட்டில் உள்ள வரி விதிப்பு முறையின் கொள்கைப்படி வரிப்பளுவைப் பலன்தரா நிலங்களும் பகிர்ந்து கொள்ளுகின்றன. இதற்கு நிவாரணமாக நிலவருவாயை வருமான வரியுடன் இணைத்தலும் சிக்கனமற்ற நிலங்களைக் கழித்தலும்தான் தேர்ந்த முறை[1] யாகும் எனலாம். இதற்கிடையில் நிலவரியைக் கடன் பளு ஏற்படுவதற்கான காரணமென்று கூறுதல் செயல் முறையில் தவறாகவும் பகுத்து ஆராய்ச்சி செய்யின் ஏற்றுக்கொள்ளத் தகாத வாதமாகவும் இலங்குகிறது.

**8. நிவாரண முறைகள்:** விவசாயியினுடைய தொழிலில் இடையூறு விளைவிக்கும் நிலைமைகளை விளக்கி அவற்றை அகற்றிடும் முறைகளைப்பற்றி விவரமாக முன்னரே கூறியுள்ளோம். ஆயினும் இத் தீர்வுகாணும் முறைகள் உடனே நடத்தக்கூடியவையல்ல. அவைகள் பல்லாண்டுகளாகக் கவனிக்கப் பெற்று ஆவன செய்யப்பட வேண்டும். கிராமக் கடன்பட்ட தன்மை உடனே கவனிக்கப்பட வேண்டியதாகையால் அதற்கான செயல் முறைகளைக் கையாளுதல் இன்றியமையாதது எனலாம். இந்தியாவில் கிராமக் கடன்பட்ட தன்மையைக் குறித்து அனுப்பிய குறிப்பில் ஸர். எட்வர்ட் மக்லகென், அரசினர் எடுத்துக்கொண்ட முறைகளைப் பகுத்து (i) பயனற்ற கடன்கள் வாங்குவதைத் தவிர்க்க முயலுதல், (ii) கடன் கொடுக்கும் முறையையும், விவசாயக் கடன்களையும் ஒழுங்கான முறைகளில் அமைக்க, சிவில் சட்டத்தில் மாற்றங்கள் ஏற்படுத்தல், (iii) நிலத்தை மாற்றும் வகைகளைத் தடுக்கும் வழிகளைக் கையாளுதல், (iv) கடன் வசதியளித்தல் அல்லது கடன்பளுவைக் குறைக்கும் முறைகளைக் கையாளுதல். இவைகளில் முதலாகக் கூறியுள்ள அவசியமற்ற கடன்கள்

1. முடிவான எண்ணமாவது, நிலவிவசாய இதர வருமானத்தை நில வருமானத்துடன் இணைத்து ஒரே முக வருமான வரியாக அமைத்து, மத்திய அரசினரும் இராச்சிய அரசினரும் குறித்த விகிதத்தில் பகிர்ந்து கொள்ள வேண்டும். (வரி விசாரணைக் குழுவினரின் அறிக்கை, பகுதி III, பக். 221.)

எனப்படுபவை மணம், மரணம் இவைகளில் கண்டபடி செலவிடப் படும் தேவையற்ற செலவினங்களைத் தடுத்தல். இவைகளைப் பற்றிய விளக்கம் முன்னரே கூறப்பட்டது. இனிக்கூறப்படுபவை வரும் மூன்று பிரிவுகளிலே காணலாம்.

**9. சிவில் சட்டத்தில் மாறுதல்கள் :** 1879-ல் அமலில் வந்த தக்கண விவசாயிகள் நிவாரணச் சட்டத்தில் கடன் வாங்கிக் கொடுக்கத் தவறிய விவசாயியைச் சிறைப்படுத்தக் கூடாதென் றும், கடன் வாங்கிய ஒப்பந்தத்தைப் பரிசீலனை செய்து விவசாயி யினது சௌகரியத்தின் நிலைமையை ஒட்டி, வட்டி விகிதத்தில் மாறுதல்கள் செய்தும், அமித வட்டியைக் குறைத்தும், நிலத்தை விற்பதைத் தடுத்தும், வசதிகள் செய்யப்பட்டன. கடன் கொடுத் தவர்கள் கணக்குகளைக் காண்பிக்கவும், பணம் பெற்றுக்கொண்ட தற்குப் பற்றுச் சீட்டுகளைக் கொடுக்கவும் வற்புறுத்தப்பட்டனர். காலாவதிச் சட்டம் (Limitation Act) மூன்றுண்டுகளிலிருந்து பன்னிரெண்டு ஆண்டுகளாக நீடிக்கப்பட்டது. இது ஆவணப் பதிவுக் கடன்களுக்கே பொருந்தும் எனலாம். இதர வகைகளுக்கு ஆறு வருடங்களாக நீட்டப்பட்டது. சட்டம் எதிர்பார்த்த அளவு பலாபலன்கள் கிட்டவில்லை. இதனால் சட்டப்படி வழக்குகள் அதிகமாகிவர ஆரம்பித்தன. சிற்சில வகைகளில் இது பெரும் இடைஞ்சலாகவே இருந்தது எனலாம். இம் மாதிரிச் சட்டம் வந்த வுடனே கடன் கொடுப்போர் விவசாயிக்குக் கடன் கொடுப்பதில் வெகு எச்சரிக்கையுடன் நடந்துகொண்டனர். மேலும் கடன் கொடுப்பதும் ஓரளவு தடைப்பட்டது. சட்டத்தில் விவசாயி என்ற சொல்லுக்குக் கொடுக்கப்பட்ட இலக்கணம் வெகு விரிவாக அமைந்திருந்த காரணத்தால் தொழிலில் ஈடுபடாதவர்கள்கூட விவசாயி என்று நடித்து அரசினரிடம் சலுகைகளைப் பெற்றனர். கடன் பெற்றும், அவைகளைத் திருப்பித் தராது காலம் தாழ்த்தினர். பம்பாய் விவசாயிகள் கடன் நிவாரணத் திருத்தச் சட்டம் 1941-ல் இயற்றப்பட்டு, 1879-ல்[1] அமலான தக்கண விவசாயிகள் நிவா ரணச் சட்டம் நீக்கப்பட்டது. இதன் விளைவாகக் கடன் நிவாரண போர்டு ஒன்று உருவாகியது. பம்பாய் விவசாயக் கடன் நிவா ரணச் சட்டம் 1947-ல் உருவானது. 12 மாதங்களுக்குள் கடன் அடைக்க ஆஸ்தி வசதியில்லாத விவசாயியைத் திவாலானவன் என்று முடிவு செய்து நீக்க வேண்டும் என்று காணப்பட்டது.

1899-ல் இயற்றப்பட்ட சட்டப்படி, ஒப்பந்தச் சட்டத்தில், கடன் கொடுப்போர் தகாத வழிகளில் துன்புறுத்திக் கடன் பத்திரங்

1. இப்போது நீக்கம் பெற்றுள்ளது.

களை எழுதி வாங்கவில்லை என்ற நிருபணத் தலைச்சுமை, கடன் கொடுப்போரிடம் விடப்பட்டது.

1918-ல் இயற்றப்பட்ட அமித வட்டிக் கடன் சட்டம் (இது விவசாயிகளுக்கும் இதரர்களுக்கும் பயனுள்ளதாகும்.) நீதி மன்றங்களுக்குப் பழைய கடன் வட்டி விகிதத்தைக் குறைந்துக் கணக்குகளைப் பார்வையிட்டு நியாயமான தீர்ப்பு அளிக்க வேண்டும் என இயம்பியது. 1926-ல் இயற்றப்பட்ட திருத்தச் சட்டத்தின்படி ஈடு காட்டிக் கடன் தகராறில் நிவாரணம் கோரி மனுச்செய்யின் அதைச் சரிவர நீதி முறையில் சரிக் கட்டியும், அடைமானமில்லாச் சாதாரணக் கடனுல் கடன் பெற்றோர் கடனைப் புதுப்பிக்க மறுத்து, அதன் காரணமாக நீதி மன்றத்திற்கு வந்து நீதி பெறுவர். இந்தச் சட்டமும் பயனற்றுப்போய்விட்டது. இது மிதமிஞ்சிப் பணியாற்றும் உதவிச் சிவில் நீதிபதிகளுக்குப் பெரும் இடராக உள்ளது. நியமப்படி இன்ன வட்டி விகிதம்தான் அமைத்தல் வேண்டுமென்ற வரம்பு இல்லாததாலும், சட்ட மறியாத கடன்பட்டோரின் செயல்களாலும், நேர்மையற்ற முறையில் ஒப்பந்தச் சட்டத்தைப் பயன்படுத்திவருகின்றனர்.[1]

1938—39-ல் அநேக மாகாணங்கள் அமித வட்டிக்கடன் சட்டத்தின் கீழ்ப் பழைய கணக்குகளை மறுமுறை பார்த்து, அதிக வரித் தண்டலை நீக்கி, நியாய வட்டியில் எழுதச் சொல்வது, அந்தந்த நீதி மன்றத்தின் விருப்பத்திற்கு விடப்பட்டது. அநேக மாகாணங்கள் தாம்துபத் முறைப் (rule of damdupat) படி வட்டி எக்காரணத்தைக்கொண்டும் அசலைவிட இருமடங்காக அதிகரிக்கக் கூடாது என்று சட்டம் இயற்றியுள்ளனர்.

**10. கடன் கொடுத்தோரின் மீது கட்டுப்பாடுகள் :** ஆங்கில ஆளுகையின் காரணத்தால் கிராமச் சமூகத்தில் பிரிவினை எண்ணம் ஏற்பட்டு வருவதைக் காண்கிறோம்.[2] அதே அடிப்படையில் கடன் கொடுப்போருக்கும் அவருடைய வாடிக்கைக்காரர்களுக்கும் ஒற்றுமையில்லாமல் போய்விடுகிறது. பண்டைக் காலங்களில் கடன் கொடுப்போர் நியாயமான முறையில் நடந்து, தொண்டாற்ற வேண்டுமென்ற நோக்கத்துடன் நியாயமான வழிகளைக் கடைப்பிடித்து வருவாராயினர். ஏழை விவசாயியின் அறியாமையைப் பயன்படுத்திக்கொண்டு அதன் காரணமாக இலாபம் சம்பாதிக்கும் எண்ணம் கிடையாது. நாளடைவில், பழங்காலக் கொள்கைகளை அறவே நீக்கித் தள்ளி அம்மாதிரிக் கட்டுப்பாடுகளி

1. தி ரிலீப் ஆப் அக்ரிகல்சுரல் டெட் (1938) பக். 10 சி. எப். ச்ரிக்லாண்ட் எழுதியது.

2. வேறு பகுதியைப் பார்க்க.

லிருந்து விடுவித்துக்கொண்டு, நியாயம், சத்தியம் இவைகளை வர்த்தக முறையில் பணயம் வைத்தனர். முன்னர் ஏதாவது வழக்கேற்படின் கிராமப் பஞ்சாயத்து மூலம் இந்த நடவடிக்கை கவனிக்கப்பட்டு, இரு தரப்பினருக்கும் பலனுகக்கூடிய முறையில் தீர்ப்பு அளிப்பார்கள். ஆனல் இப்போதோ கோர்ட்டுகள்; நீதித் தலங்கள் தோன்றியதாலும், அவற்றில் வழக்குகள் தாக்கல் செய்வதில் உள்ள சிக்கலான முறைகளாலும் கிராம விவசாயி ஒன்றும் அறியாத நிலையில் இருப்பதைப் பயன்படுத்திக்கொண்டு கடன் கொடுப்போர் பலன் பெறுகிருர். நகர வாழ்க்கையில் அமிழ்ந்துள்ள நீதிபதிகள் கிராமத் தகவல்களையும் பழக்க வழக்கங்களையும் புரியாத காரணத்தால் கடன் பத்திரத்தில் எழுதியுள்ளபடி படித்து, அதன் அமைப்பிற்கேற்பத் தீர்ப்புச் செய்வது வழக்கம்; இது கடன்பட்டோரை மிகவும் வஞ்சித்தது என்ருல் மிகையாகாது. இதன் விளைவாகக் கடன்பட்ட விவசாயியினுடைய நிலம், கடன் கொடுத்த உழவுத் தொழிலறியாக் கடன் கொடுப்போருக்கு உடனடியாகக் கைமாற ஆரம்பித்தது. இதைக் கண்ணுற்ற அரசினர் சட்டமியற்றிக் கடன் கொடுப்போரின் செயல்முறைகளைக் கண்டித்தனர்.

1930 முதல் 1939 வரை அநேக மாகாணங்கள் கடன் கொடுப்போரின் முறைகளைக் கட்டுப்படுத்த ஒழுங்கு முறைச் சட்டங்கள் இயற்றியும், அவர்கள் தொழிலை நடத்தப் பதிவு முறையையும் உரிமை (licensing) முறையையும் அமலாக்கினர். அந்தச் சட்டத்தின் சில முக்கிய பகுதிகளாவன: (i) **பதிவு செய்தலும் உரிமை வழங்கலும்**: பதிவு செய்து கொள்ள வேண்டும் என்று வற்புறுத்திஞல் கடன் கொடுப்பவர்கள் அரசினர் விவசாயிகளுக்குப் பலனளிக்கும் முறையில் இயற்றியுள்ள சட்டத்திற்குப் புறம்பாக நடந்து அமித லாபம் பெறமாட்டார்களென்றும், கடன் கொடுப்போரின் இலக்கணம் இன்னதென்று, கூறுகையில் ஒருவர் தமது இயல்பான தொழிலின்போது பிறருக்குக் கடன் கொடுப்பவர் என்று விளக்கப்பட்டுள்ளது. (ii) **கணக்கினை ஒழுங்கான முறையில் அமைத்தல்**: 1934 முதல் எல்லா மாகாணங்களும் தங்கள் பகுதிகளிலுள்ள கடன் கொடுப்போர் அனைவரும் சரிவரக் கணக்குப் புத்தகங்களை வைத்திருக்க வேண்டுமென்றும், ஒவ்வொரு கடன் கொடுத்த வகைக்கும் சரிவரக் கணக்கு எழுதப்பட்டுக் கடன் பெற்றோர்க்குத் தகவல்கள் கொடுக்க வேண்டும் என்றும் நிகர வட்டி இவ்வளவென்றும் அசல் பாக்கி இவ்வளவென்றும் விவரமாகக் காட்டி, கொடுத்த பணத்திற்கு அவ்வப்போது பற்றுச்சீட்டுக் கொடுக்கவும் வேண்டும். இவ் வொழுங்குமுறைச் சட்டங்கள் அனைத்தும் பலனளிக்கவில்லையெனலாம். மத்தியப்பிரதேச நீதித்தலத்தில் கடன் பெற்ற

வர் கடன் சம்பந்தப்பட்ட வரையில் வாயைத் திறந்து கேட்பது இல்லையே எனின் அவன் எவ்வளவு பணம் கொடுத்தான் என்ற விவரத்துக்கான பற்றுச்சீட்டுக் கொடுக்கப்படவில்லை. பஞ்சாப்பில் உள்ள கடன் கொடுப்போர், நீதித் தலத்துக்குப் புறம்பாகக் கடன் பெற்றோருடன் கடன் கணக்கைத் தீர்த்துக்கொள்ளுகிறார். இதனால் கடன் கொடுத்தவர் அதிக வசதி பெறுகிறார். அவர்கள் கோணரும் தப்புக் கணக்குகளை நீதித் தலங்கள் அனுமதிக்கமாட்டா எனத் தெரிந்தே அவ்வாறு செய்கிறார்கள். விவசாயி தனது அறியாமையின் காரணத்தால் எவ்வளவு சாதகமான சூழ்நிலை இருந்த போதினும் தனது பக்கத்திற்கு வாதாடமுடியாத நிலையில் இருக்கிறான். கடன்பட்டவரும், கடன் கொடுத்தவரும் கள்ளக்கூட்டு முறையில், கடன் பட்டோர் தங்கள் தேவையின் நிமித்தம் இச் சதியாலோசனைக்கு ஆளாகி அரசினர் இடும் சட்டங்களுக்கெல்லாம் எதிராக வேலை செய்கின்றனர். (iii) **வட்டியை ஒழுங்காக அமைத்தல் :** அமித வட்டிக் கடன் சட்டத்தைச் சீரிய முறையில் அமலாக்க மத்திய பாங்கு விசாரணைக் குழுவினர் சில யோசனைகளைக் கூறி இதர சட்டங்களில் கிராமக்கடன் முறையைக் கட்டுப்படுத்தவும் பல பரிந்துரைகளைச் செய்தனர். அநேக மாகாணங்களில் அதிகப்படியான வட்டி விகிதம் இன்னதென்று வரையறை செய்தனர். ஈட்டின் பேரில் கொடுக்கப்பட்ட கடனுக்கான வட்டி விகிதம் குறைவாகவும் ஈடில்லாத கடனுக்கான வட்டி விகிதம் அதிகமாயும் அளவிட்டனர். ஒவ்வோர் இராச்சியத்திலும் பணச் சந்தையின் நிலைமையை ஒட்டி வட்டி விகிதம் மாறியிருந்தது.[1] இம்மாதிரியான சட்டங்களுக்கு அஞ்சாது கடன் பத்திரத்தில் அதிகத்தொகையைக் காண்பித்துக் கடன்பட்ட விவசாயியைச் சம்மதிக்க வைக்கிறார். இந்த வட்டி விகிதங்களை நடைமுறையில் கொண்டுவருவது மிகவும் சிரமமான காரியம் எனலாம். (iv) **சில்லறைத் தகவல்கள் :** கடன்பட்டவரை வற்புறுத்தியோ அவருக்கு அதிகப்படியான உபத்திரவங்கள் கொடுத்தோ அவருடைய நிலங்களைப் பிடுங்கிக் கொள்ளச் செய்யும் முயற்சிகளைத் தடுத்தும், அல்லது நிலத்தை ஏலத்திற்குக் கொண்டுவரப் பாடுபடுவதையும் ஆதரவான தீர்ப்புக்களை நடத்தச் செய்யும் முறைகளைக் கண்டித்தும் ஈடுகாட்டிக் கடன்களைக் கால வரையறை செய்தும் உதவியளிக்கப்படுகின்றனர்.

**11. நிலத்தைப் பிறர் பெயருக்கு மாற்றுவதில் தடைவிதிப்பு :** ஆங்கில ஆட்சி இந்தியாவில் ஏற்பட்டவுடன் கடன்பட்டோரின் நிலங்கள் பெருமளவில் கடன் கொடுத்தவர்கள் பெயருக்கு மாற்றப்

1. ஒவ்வோர் இராச்சியத்திலும் விதிக்கப்பட்ட வட்டி விகிதம் இப்போது கேட்பாரற்று ஆகிவிட்டது. உண்மையில் இதை மாற்றியமைக்க வேண்டும்.

பட்டன. நிலத்தின் மதிப்பு அதிகரித்துவர ஆரம்பித்தது. அவற்றிற்கான காரணங்கள் : (i) குறைந்த முறையில் அரசியல் பாதுகாப்பு இந் நாட்டினருக்குக் கிடைத்ததெனலாம். (ii) போக்குவரத்து வசதிகள் உண்டான காரணத்தால் கிராமப் பொருள்களைச் சந்தைக்குக் கொண்டுபோக வசதியேற்பட்டது. (iii) விலைகள் தாமாக ஏற ஆரம்பித்தன. விவசாயி முற்காலங்களைக் காட்டிலும் அதிக அளவில் கடன்பெற முடிந்தது. அதற்கீடாகத் தனது நிலத்தை அடைமானமாக வைத்தான். விவசாயி கடனைத் திருப்பித்தர இயலாது இருக்கின்ற காரணத்தாலும் அம்மாதிரியான நிலையைக் கடன்கொடுப்போர் விரும்பி வருவதாலும் அடைமான காலம் தீரு முன்பே கடன் கொடுத்தவர் உடனே நிலத்தினைப் பெற்றுக் கொள்ளுகிறார். இம்மாதிரியான ஓர் அரிய சந்தர்ப்பம் எப்போது கிடைக்கும் என்று அவர் எண்ணியிருப்பது வழக்கம். நிலம் பறிபோகாதிருக்கப் பழங்காலத்தில் இயற்றப்பட்ட சட்டங்களில் மிகவும் நிலையானது பஞ்சாப் நிலப் பராதீனச் சட்டம். இது 1901ஆம் ஆண்டில் அமலுக்கு வந்தது. இதன்படி நிலப்பணி செய்யாதவர் நிலக்கிழாரிடமிருந்து நிலம் வாங்குவது தடைப்படுத்தப்பட்டது; மேலும் அடைமானமாக 20 ஆண்டுகளுக்கு மேலாக வைத்துக் கொள்ளக் கூடாது எனப்பட்டது. இந்தச் சட்டங்களாவன : அடைமானத்தைத் திரும்பிப் பெறச் சட்டம் 1913-லும், பறிக்கப்பட்ட உரிமையைத் திரும்பப் பெறுவதற்கு அடைமானச் சட்டம் 1938-லும் பஞ்சாப்பில் இயற்றப்பட்டன. பண்டெல்கண்டு நிலப் பராதீனச் சட்டம், 1903-லும் வடமேற்கு எல்லைப்புற மாகாண நிலப் பராதீனச் சட்டம் 1904-லும், மத்திய மாகாண நிலப் பராதீனச் சட்டம் 1916-லும் இயற்றப்பட்டன. பயிர் செய்யாதவர்களுக்கு நிலத்தை மாற்றிக் கொடுக்கும் வழக்கம் ஒருவாறு கட்டுப்படுத்தப்பட்டது. அரசினர் விவசாயக் குழுவினர் இம்மாதிரி எல்லா மாகாணங்களிலும் நிலப் பராதீனச் சட்டம் இயற்றப்பட வேண்டுமென்பது சரியான பரிந்துரை எனலாம். எடுத்துக்காட்டாகச் சில விவசாயத் தொழிலற்ற கடன் கொடுப்போர் ஆள் பெயரற்ற (benami) பதிலாள் ஒருவரை விவசாயத்திற்கென நியமித்து, அவரிடம் நிலங்களை ஒப்புக் கொடுப்பதாகக் கூறுவது வழக்கம். விவசாயம் செய்யும் கடன் கொடுப்போர் விவசாயத் தொழில் அறியாக் கடன் கொடுப்போரைப் பகுதி அளவில் நிலத்தினின்று நீக்கிப் பெருவட்டி விகிதத்தில் ஆதாயம் பெறுவதுண்டு. நிலத்தில் வேலை செய்பவர் கடன் கொடுக்கத் தொடங்கியவுடன் தமது நிலப்பணியைப் புரியாது நிலத்தில் இல்லாத நிலக் கிழாராக மாறி விடுகிறார். இம்மாதிரி சந்தர்ப்பங்களில் நிலப் பராதீனச் சட்டங்கள் பயனற்றுப் போகின்றன. அவர்

களைக் கட்டுப்படுத்த இச் சட்டங்கள் உபயோகப்படுவதில்லை.[1] இச் சட்டங்களைக் குறித்துக் கண்டனம் கூறுவதில் பயனொன்றும் இல்லையெனலாம். பணம் படைத்த நகரமாந்தர் நிலங்களை வாங்கி, அதில் எவ்வளவு அதிகப்படியான வாரம் வரும் என்ற அளவில் கூர்ந்துள்ளனரே ஒழிய உண்மையில் விவசாயத்தில் ஈடுபடவில்லை. இதைத் தவிர்க்கச் சட்டம் பாடுபடவில்லை எனலாம்.

**12. கடன் கொடுப்போரின் முறையைக் கட்டுப்படுத்தும் மசோதா :** முன்பு கட்டி உரைக்கப்பட்ட கடன் கொடுப்பவரைக் கட்டுப்படுத்தும் மசோதாக்கள் பயனற்றவையாக இருந்தன. பெருமளவில் சட்டத்திற்குப் புறம்பாகவும், கடன் பெறுவோரைக் கையினுள் போட்டுக் கொண்டு தங்களுக்குச் சாதகமான முறையில் எழுதி வாங்கிக் கொண்டனர். அவைகள் வருமாறு : (i) ப்ரோ நோட்டில் கொடுத்த அளவுக்கு மீறிய தொகையை எழுதிக் கையெழுத்துப் பெறல்.[2] (ii) தனது வேலையாள் அல்லது உறவினன் பேரில் அதிக வட்டியைப் பெற ஒரு புரோநோட்டினை எழுதி வாங்குதல், (iii) உயரிய வட்டியைக் கழித்து, அசலின் மிகுதியை மட்டும் கொடுத்தல், (iv) விவசாயியினுடைய பண்டத்தைப் பொய்யான மதிப்பீடு கொடுத்து முன்பே வாங்குவதற்கு ஏற்பாடு செய்தல், (v) பத்திரங்களில் முன் தேதியிடல், (vi) விற்பனையில் கோட்பாடுகள் இடல், (vii) மிகவும் குறைவான விலையில் கடன்பட்டோரின் நிலம் அல்லது பசுமாடு இவைகளைச் சுவாதீன அடையாளத்தில் பெறல், (viii) உரிமைக் கட்டணம் செலுத்தாது கடன் கொடுப்பு வியாபாரம் செய்தல், சட்டப்படி உரிமை பெறுதல் வேண்டும்.

கிராமக்கடன் சர்வே கூறியுள்ள யோசனைகளில் தேவையான அளவு மேற்பார்வை அலுவலர்களைக் கூட்டுறவுப் பதிவாளரின் கண்காணிப்பின்கீழ் அமைப்பதற்கு அரசினர் தக்க சட்டங்களை ஏற்படுத்த வேண்டியது இன்றியமையாததென்றும் கூறியுள்ளனர். விவசாயிகளுக்கு வேறு துறைகளின் மூலம் கடன் கிடைக்காத காலம் வரையிலும் எவ்வகைத் தடுப்புச் சட்டங்களிட்டபோதிலும் கடன் கொடுப்போரின் தீச்செயல்களைக் கண்டிப்பது பயனற்றது எனலாம்.

*1. அண்மையில் செய்யப்படும் நிலச் சீர்திருத்தச்சட்டம் நிலத்தில் இல்லா நிலக்கிழார்களை நீக்கவேண்டும் என்ற கொள்கையுடன் இயற்றப்படும். இது முன்னர் இயற்றப்பட்ட நிலப் பராதீனச் சட்டங்கள் போன்று அபரிமிதமாக அமைந்து விடும் எனலாம்.*

*2. மத்திய பாங்கு விசாரணைக் குழுவினர் கண்ட அடாவடிச் செயல்களிலொன்றைக் குறிப்பிடுகின்றனர்.*

**13. கடன் தீர்ப்பு முறைகள் :** மத்திய பாங்கு விசாரணைக் குழுவினர் விறுவிறுப்பான முறையில் கடன் தீர்ப்பு முறைகளைத் தாமாகவே கைக்கொள்ள வேண்டிய சட்டங்களை இயற்ற வேண்டும். இதைச் சம்மதித்து எல்லா இராச்சிய அரசினர்களும் இது சம்பந்தமான சட்டங்களை இயற்றினர்.[1]

இச் சட்டங்களை யனுசரித்துச் சமரச போர்டுகளை நியமித்தனர். இதன் உறுப்பினர்கள் அரசுப் பணியாளர்களும், மற்றும் பொது மக்களும் ஆவர். கடன் பெற்றவர், கொடுத்தவர்களுடைய பிரதிநிதிகளுமாக 3 முதல் 9 பேர்கள் வரை கூடுவார்கள். இதன் தலைவர் நீதிபதியாகவோ அல்லது நிர்வாக அதிகாரியாகவோ இருக்கக்கூடும். கடன்பட்டவர் ஒரு விண்ணப்பம் கொடுத்த வுடனே அல்லது கடன் கொடுத்தவர் விண்ணப்பம் அனுப்பிய வுடனே தீர்வுகாணும் முறைகளைக் கையாள ஆரம்பிப்பார்கள். முதன்முதலாகக் கடன் கொடுத்தவர், தாம் கொடுத்த கடனுக்காகக் கணக்குகளை அட்டவணைப் படுத்தி ஒரு குறிப்பிட்ட கால வரை யறைக்குள் இந்தப் போர்டுக்கு அனுப்பவேண்டியது ; அப்படி அனுப்பத் தவறினுல் அவருக்குச் சேரவேண்டிய கடன்களை ரத்து செய்து விடுவார்கள். ஒருக்கால் குறைந்தபட்ச அளவுத்தொகை இவ்வளவுதான் என்ற முடிவுக்கு வந்தால் போர்டாரால் கையெழுத்திடப்பட்டுப் பதிவு செய்யப்பட்டுச் சிவில் கோர்ட்டில் தீர்ப்பு ஆனதுபோல் ஏற்றுக்கொள்ள வேண்டியது.[2] கடன் கொடுப்போர் சற்று இணக்கப்படாதவராகிக் கடன் பட்டவருக்குப் போர்டு ஒரு நற்சாட்சிப் பத்திரம் கொடுத்து அபராதம் போன்று கடன் கொடுத்தவர் நீதித்தலத்தில் வழக்குத் தொடர்ந்து அதற்கான செலவினைப் பெற முடியாது. அந்த நற்சாட்சிப் பத்திரம் வழங்கப்பட்ட தேதிக்குப் பின்னர் வட்டியை நியமித்த அளவில்தான் கோரலாம்.

வங்காளம், மத்திய மாகாணம், பஞ்சாப் இம் மாகாணங்களில் இவற்றுல் நல்ல முடிவுகள் ஏற்பட்டன. இம் முறைகளைத் தவருன வழிகளிலும், குறைபாடுள்ள வழிகளிலும் நடத்தி வரு கின்றனர். ஆள் அற்ற கடன் கொடுப்போரை உற்பத்தி செய்து, சட்டப்படி மிகவும் குறைந்த அளவில் கடன் பத்திரம் எழுதிக் கொள்ளுவர். சட்டத்தின் அமைப்பின்படிப் பலன் பெறத்

1. கடன் சமரசச் சட்டம் 1938 (ம. மா.); கடனிலிருந்து விடுதலைச் சட்டம் 1934 (பஞ்சாப்) ; விவசாயக் கடனாளிகள் சட்டம் 1935 (வங்காளம்) ; கடன் சமரசச் சட்டம் 1963 (சென்னை).

2. வங்காளச் சட்டத்தில் இரண்டு தனிப்பட்ட குணங்கள் (1) தீர்வு காணும் பொருட்டு வற்புறுத்தலாம்; அதற்கு இசையாவிடின் கட்டாயப்படுத்தலாம். (2) எளிய முறையில் திவால் சட்டத்தைக் கையாளலாம்.

தங்களை விவசாயிகள் என்று நடித்துப் பலன் பெற விரும்புவார்கள். படிப்பு வாசனையற்ற கடன் பெற்றோர் தங்களுக்குக் கடன் கொடுத்தவர்களின் சரியான பெயர்கூட அறியார். அதனால் அவர்கள் பெயரைக் கொடுக்காது கடனிலிருந்து மீளுவதில்லை. குடிக் கூலிக் கடன், அரசினர்க்குச் சேர வேண்டிய கூட்டுறவுச் சங்கப் பாங்குக் கடன்கள், இவைகளைப் பகுதியாகவும், முழுவதுக்கும் சட்டத்திலிருந்து விதி விலக்குப் பெற்ற காரணத்தால் சில கடன் பட்டோர்கள் ஒன்றும் செய்ய முடிவதில்லை. கொடுக்க வேண்டிய கடன்தொகை இன்னதென்று வரையறுத்துச் சரியான முறையில் முடிவு காணவேண்டும். அப்படியிருந்தால் அதைச் சரியான சமரச முறை யெனலாம். இது சம்பந்தமான ஒரு யோசனையாவது கூட்டுறவு நில அடமானபாங்குகள் கடன் கொடுத்தவருக்குச் சேர வேண்டிய தொகையைக் கொடுத்துவிட்டுக் கடன்பட்டோரிடமிருந்து சுலபமான தவணைகளில் மேற்படிக் கடன் தொகையை வட்டியுட்பட மீட்டுக் கொள்ள வேண்டும் என்பதாம். எந்தக் கடன்காரர்களுக்கு இவ் வசதி யளிக்கலாம் என்பது பாங்கியினுடைய தனிப்பட்ட ஆய்வினைப் பொறுத்தது.

**14. கடன்களைக் கட்டாய முறையில் குறைத்துவிடல்:** தாமாகவே இருவரும் வந்து சமரசம் காணும் முறையினால் மிக்க கால தாமதம் ஏற்படுகிறது. இம் முறைகளிலும் சில குறைபாடுகள் உள்ளன. எனவே, கட்டாய முறைகளில் கடன் குறைத்தல் செய்யக் கூடும். இராச்சியச் சட்டங்களில் இம் மாதிரிக் கட்டாய முறைகள் கையாள வசதியுள்ளது. இம் மாதிரியான உட்பிரிவுகளில் மிகவும் விறுவிறுப்பானதும், உடனே அமலாக்கப்பட்டதுமான சென்னை விவசாயிகள் கடன் நிவாரணச் சட்டம் 1938-ல் இயற்றப்பட்டது. அதன்படி 1937ஆம் ஆண்டு அக்டோபர் 1 ஆம் தேதி வரை 1932ஆம் ஆண்டு அக்டோபருக்கு முன்னால் உள்ள வட்டித் தொகை நீக்கப்பட்டது. 1932ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் முதல் 5% வட்டி விகிதமே 1937 ஆம் ஆண்டு அக்டோபரில் கேட்கலாமென்றும் தீர்மானிக்கப்பட்டது. அதுவும் தாம்தூபட் (damdupat) கொள்கையை அனுசரித்துத்தான் இருக்க வேண்டும். குறைக்கப்பட்ட கடன் சட்டம் இயற்றப்பட்ட பிறகு ஏற்பட்ட கடன்கள் இவைகளின்மீது $6\frac{1}{4}$%தான் வட்டி வசூலிக்கலாம்.

மத்திய மாகாண பேரார்ப் பகுதிக் கடன் நிவாரணச் சட்டம் 1939-ல் தோன்றி அப் பகுதியில் இருந்த சமரசப் போர்டுகளை நீக்கி, அவைகளுக்குப் பதிலாகச் சமரச நீதிஸ்தலங்கள் உண்டாயின. நில மதிப்பு வீழ்ச்சிகளை அனுசரித்துக் கடன்காரர்

களுக்குக் கிரமமான நிவாரணம் அளிக்கப்பட்டது. பம்பாய் விவசாயிகள் நிவாரணச் சட்டம் (1939) ஒரு சில தாலுக்காக்களைத் தவிர, இதர பகுதிகளில் கடன் ரூ. 15,000-க்கு மேற்பட்டால் கட்டாயமாகக் குறைத்து, அத்தகவல்களைக் கடன் சரிசெய்யும் போர்டுகள் (Debt Adjustment Boards) மூலம் அளவிட்ட முறையிலும் விவசாயி தன்னால் திருப்பித் தரக்கூடிய தவணை முறையிலும் வசதி செய்து கொடுத்தனர். உத்தரப் பிரதேசக் கடன் மீட்டுச் சட்டம் (Debt Redemption Act) ஒரு கடன் கொடுத்தவர் இதுகாறும் வாங்கிய தொகையனைத்தும் உட்பட அசலைப்போல் இருமடங்கிற்கு மேலாக இருக்காதவண்ணம் ஒரு தீர்ப்புக் கொடுக்கும்படி நீதி மன்றங்களுக்கு அதிகாரம் கொடுத்தது.

**15. கடன் வசூலைச் சட்டப்படி நிறுத்தி வைத்தல்:** 1929-ல் உண்டான மந்த நிலையில் கடனில் மூழ்கித் தத்தளிக்கும் எந்த விவசாயியும் முன்னேற முடியாது அவதியுற்றான். இதைப் பயன்படுத்திக் கொண்டு கடன் கொடுத்தவர்கள், தங்கள் வழக்குகளை நீதித் தலத்திற்குக் கொண்டு விரைந்தனர். பெருமளவில் தீர்ப்பு ஏற்பட்டு, அதை நடத்த முன்வராதிருக்க வசூலை ஒத்திப் போடச் சட்ட வசதியளித்தனர். 1932-லும், 1933-லும் ஐக்கிய மாகாணத்தில் சிவில் வழக்கு நீதித்தலத்தில் நிலத்தை விற்க வேண்டுமென்று முடிவு செய்திருந்தால் அம்மாதிரியான நிலங்களை அந்த மாவட்ட ஆட்சித் தலைவரிடம் ஒப்புவிக்க வேண்டும். விற்பனைக்குக் கேட்ட விலைகள் மிகவும் நியாயமற்றவைகளாக இருப்பின் விற்பனையை அவர் தள்ளிப் போடலாம். இன்னொரு அறிக்கைப்படி நியாய விலை வரம்பு இடப்பட்டது. இவ்வித முறைகளால் சற்றேறக்குறைய 48,000 தீர்ப்புகள் நிறுத்தி வைக்கப் பட்டன. இம்மாதிரி முறைகளைச் சென்னை, மத்திய மாகாணம், பம்பாய் இவைகள் கடைப்பிடித்தன. இவை நீதித் தலத் தீர்ப்புகளை நிறுத்தி வைத்து நிவாரணச் சட்டமியற்றும் வரை உடனே அமலாக்கவிடவில்லை.

**16. விவசாய நிதி உட்குழுவினரின் பரிந்துரைகள், 1944:** விவசாய நிதி உட்குழுவினரின் (கட்கில் குழுவினரின்) பழைய கடன்களைச் சரிசெய்தும், குறைத்தும் ஒன்று சேர்த்தும் செய்யும் வகையில் கூறிய பரிந்துரைகள் வருமாறு: (i) நில உரிமையற்ற வேளாளர்களுக்குள்ள கடனுயிருப்பின் உடனே கட்டாயமாகச் சரிக்கட்டல் வேண்டும். (ii) நில உடைமை உள்ளவர்களுடைய தானால் கடன் கணக்கைக் கட்டாயமாகக் குறைக்கவேண்டும். அதற்குக் கடன்பட்டவர்களுடைய மனு தேவையில்லை. வாடகைப் பாக்கிகளையும் கடனாகப் பாவிக்க வேண்டும்; கூட்டுறவுச் சங்கங்களுக்குச் சேரவேண்டிய கடனால் கூட்டுறவுப்

பதிவாளரிடம் அனுமதி கோரி எவ்வளவு தள்ளுபடி செய்ய முடியும் என அறிந்து கொண்டு பிறகு குறைப்பது முறை. (iii) சரிசெய்தலை நீதி முறை அலுவலர்கள் கையில் ஒப்படைப்பது தான் முறை. அல்லது இவர்களால் ஏற்படுத்தப்பெற்ற போர்டு களிலும் ஒப்படைக்க வேண்டும். போர்டுகள் விசாரணைகள் செய்து தீர்வுகாண வேண்டும். இவர்களது தீர்ப்பே முடிவானது. அதை மாற்றச் சட்டம் இல்லையெனலாம். இவ் விசாரணை எக் காரணத்தை முன்னிட்டும் இரண்டு ஆண்டுகளுக்கு மேலாகப் போகக் கூடாது. தக்கண விவசாயிகள் நிவாரணச் சட்டத்திலும், அமித வட்டிக் கடன் சட்டத்திலும் கூறப்பட்ட முறைப் பிரகாரம் நீதி நெறியாளர் கடன் கொடுத்தவர் எழுதிய கணக்கினை ஆராய்ந்து பழைய விவரங்களைச் சேகரித்துத் தாம்துபட் நியமப் படிக் கடன் இன்னதென முடிவு செய்யவேண்டும். தீர்மானம் செய்யப்பட்ட நியாயமான கடன் தொகையை இன்றைய நிலைக்கு மாற்றியமைத்து. 20 ஆண்டுகளில் திருப்பித் தர 4% வட்டி விகிதத் தையும் சேர்த்துக் கொள்ளவேண்டும். அல்லது கடன்பட்டவரது தாவர சொத்தின் 50% அளவில் தீர்மானம் செய்யவேண்டும். இவ்வாறு கணக்கிட, ஈடுகாட்டிய கடனுல் 50% தள்ளி அந்தச் சொத்தினைக் கணக்கில் எடுத்துக் கொள்ளக் கூடாது. ஈடுகாட்டிய கடன் விகிதமும் அந்தக் கடனுக்கான சொத்து விகிதமும் சாதாரணக் கடனின் விகிதத்தை விடக் குறைவாக இருக்கக் கூடாது. (v) பூர்விகச் சொத்தும் நில உரிமையும் இல்லாத கடன்பட்டோரின் கடன் அவரது திருப்பித் தரும் தன்மையை மீறியது எனின், சட்டப்படித் தவணை செலுத்தும் நிலையிலில்லை யெனின், அவரைத் திவால் ஆனவர் என்று திவால் சட்டப்படி அவரது கணக்கைத் தீர்க்கவேண்டும். (vi) கூட்டுறவு நில அடைமான பாங்குகள் எங்கிருந்தாலும் சரிக்கட்டப்பட்ட கடனை யேற்றுக்கொண்டு, தங்கள் தரத்திற்கேற்பக் கோரிக்கைகளைத் தீர்மானம் செய்யவேண்டும். கூட்டுறவு நில அடைமான பாங்கு ஏற்றெடுத்துக் கொண்ட கடன்கள் போக மிகுதியை இராச்சிய நிறுவனம் ஒன்று ஏற்றுக்கொள்ளுதல் நலம். கடன் பட்டோரிட மிருந்து தவணைகளாக 20 ஆண்டுக் காலத்தில் திரும்பப் பெற வேண்டியது. (vii) கடன் சீர்பாடு முறைக்காக ஒவ்வொரு பிரதேசத்திலும் கடன் தரும் நிறுவனங்கள் தோன்றி, தனிப்பட்ட கடன் கொடுப்போரின் தொழிலைக் கட்டுப்படுத்தி வருதல் வேண்டும்.

**17. தக்காவிக் (taccavi) கடன் முறை**[1]**:** தற்போது நடப் பிலுள்ள கடனை வெகு எளிதில் நிவர்த்தி செய்ய இயலும்.

1. ஆல் இண்டியா ரூரல் க்ரெடிட் சர்வே அறிக்கை, அதிகாரம் 17.

விவசாயி மறுபடியும் கடனில் விழாது தடுப்பதே மிகவும் சிரம மான காரியமெனப்படுகிறது. அதற்கென அவனுக்கேற்பட்ட பொருளாதார நெருக்கடியைத் தீர்த்தும், பல துறைகளில் ஏற்பட்ட சிக்கல்களைப் பல்வேறு முறைகளால் அகற்றியும் தீர்வு காணலாம். இதற்கெனத் தனியார் கடன் வசதி முறையும் பலன் தரும் வகையில் ஈடுபடுத்தலாம். இந்த வழங்கு முறைகளைக் கையாள, தக்காவிக் கடனும், கூட்டுறவுக் கடன் முறையும் மேம்பாடானவை. தக்காவியையும் கடன் வசதியைப்பற்றிக் கூட்டுறவுக் கடன் முறை யையும் அடுத்த அதிகாரத்திலும் விளக்கியிருக்கிறோம்.

வெள்ளையர் ஆளுகைக்கு முன்னரே அரசினர் தக்காவிக் கடன் வசதியை விவசாயிகளுக்கு அளித்து வந்தனர். எனவே, ஆங்கில ஆட்சி வந்ததும் தக்காவிச் சட்டங்கள் போடப்பட்டன. 1871 முதல் 1879 வரை அவை அமலிலிருந்தன. 1883-ல் நில அபிவிருத்திச் சட்டம் இயற்றப்பட்ட பின்னரே தக்காவிக் கடன் முறை அமலிலிருந்து வந்தது. நில அபிவிருத்திக் கடன் சட்டம் நீண்டகாலக் கடன் வசதியளிக்கவே பயன்பட்டது. உதாரணமாக விதை, கால் நடை, உரக் கொள்முதல் செய்யவேண்டிய அளவிற் கென நியதி செய்யப்பட்டது. இந்த முறையில் ஏற்பட்ட கடன் வசதி பயனற்றும், செயலற்றும் இருந்ததெனக் கூறுகின்றனர். அவைகளுக்கான காரணங்கள் வருமாறு: (i) கடன் கொடுப் போர் கையாளும் எளிய முறைகளில் தேவைக் கேற்பக் கடன் கொடுக்கும் முறையை விவசாயி விரும்புகிறான். இதன் முறைப்படி ஏதாவது ஒரு குறிப்பிட்ட வகையில்தான் அவன் கடனைப் பெற இயலும். (ii) இதன்கீழ் அனுமதிக்கப்பட்ட கடன் வசதியைக் கொடுப்பதில் சிரமமும் கால தாமதமும் ஏற்படுவது அதிகம். ஆண்டு முடியும் தருணம் மார்ச் மாதக் கடைசியில் அவசர அவசரமாகக் கடனைக் கொடுப்பார்கள். (iii) சிற்சில காலங்களில் முன்பின் விசாரணையின்றிக் கண்டபடிக் கடனை அனுமதித்துக் கடன் பளுவைக் கூட்டித் திரும்ப வாங்க முடியாமற் செய்து விடுவார்கள். (iv) கடன் வசதியை நடத்திக் கொடுக்க நியமிக்கப் பட்ட அலுவலர்கள் மிகவும் கடுஞ்சினத்துடன் துன்புறுத்தியும், கைக் கூலி பெற்றும் நடத்தி வருகின்றனர். (v) குறிப்பிட்ட தேவைகளுக்கெனக் கொடுக்கப்பட்ட கடன்கள் சரிவர உபயோகிக் கப்படுகின்றனவா எனக் காணுவது கடினம். (vi) சீரிய முறையில் தக்காவிக் கடன் முறையை நடத்த உழவருக்குப் பணம், விதை, கருவிகள் இவைகளை வழங்க வேண்டும். சில இராச்சியங்கள் விவசாய இலாக்காவின் உதவியைப் பெறுகின்றன. போதிய அலுவலர்கள் இல்லாமையால் தக்காவித் திட்டம் நலமாக நடை பெறுவதில்லை. (vii) தக்காவிக் கடன் திட்டம் பழைய கடன்களை,

நிவாரணம் செய்யப் பயன்படுவதில்லை. (உத்தரப் பிரதேசத்தில் விவசாயிகள் கடன் சட்டம் மட்டிலும் திருத்தப்பட்டுக் கடன் வசதியை மாற்றிப் பழைய கடனை அடைக்கவும் புதிய நிலங்களை வாங்கவும் பயனைத் தருகிறது). (viii) மிகவும் சுருக்கமான வசதி யமைந்துள்ள காரணத்தால் எல்லாக் காரியங்களுக்கும் தக்காவிச் சட்டம் பயன்படவில்லை. தனியார்களுக்கு அனுமதிக்கப்பட்ட கடன் தொகை எவ்வகையிலும் பயன் பெறவில்லை. (ix) இவற்றி னடிப்படையில் பயன் பெற்றவர் பெரும் செல்வச் சீமான்களே. தேவையில் உழலும் வறிய உழவர்களுக்கு எவ்வகையிலும் பயன் தரவில்லை. செல்வர்கள் தங்களுடைய செல்வாக்கைப் பயன் படுத்திக்கொண்டு, அரசினரின் நிதியைப் பெற்று விவசாயக் கருவிகள், நீர் இறைக்கும் இயந்திரங்கள் இவைகளை மிகவும் சலுகைகளில் பெற்று, மத்திய தர அல்லது தாழ்ந்த விவசாயிகளை விடச் சௌகரியமான முறையில் அமைத்துக் கொள்ளுகின்றனர். கிராமக் குழுவினர்களின் உதவியைப் பெற்றுத் தக்காவிக் கடனைப் பெற்றுப் பயனடைபவர் செல்வர்களே. அவர்களே இக் குழுவில் உறுப்பினராகவும் உள்ளனர். நில ஈட்டின் பேரில் கடன் கொடுக்கப்படுவதால் பெரும்பாலான விவசாயிகள் ஒன்றும் செய்ய இயலாது உள்ளனர். (x) நில வருமானம், விவசாய இலாக்கா, கூட்டுறவு இலாக்கா இவை ஒன்றுக்கொன்று தொடர்பற்றுத் தக்காவிக் கடன்முறையைச் சீரிய முறையில் நடத்தி வரவில்லை. இதன் முடிவாக மறுபடியும் அதே முறையில் பற்பல தவறுகள் உண்டாகி வந்தன.

ஓர் இராச்சிய உதவி நிதி மந்திரி இந்தத் தக்காவிக் கடன் முறையைப்பற்றிக் கூறியுள்ளதைக் கிராமக் கடன் சர்வே இங்கு மேற்கோளாக வருமாறு காட்டியுள்ளது. தக்காவிக் கடன் முறையின் தோற்றமும் உருவமும் பெற்றதனால் இது விவசாயத் திற்கு நிதி உதவி யளிப்பதற்கென்று ஏற்படினும் இதை ஏனோ தானோ என்ற அளவில்தான் தற்காலிகக் கடன் வழியாகக் கொடுக் கின்றனர்.[1] கி.க.ச. வின் கூற்றுவது வருமாறு: 'மிகவும் சீரற்ற நிறுவனமாகவும், தவறான முறைகளிலும் கடன் அளிப்பதுதான் இந் நிறுவனம் எனலாம்.' தக்காவி முறை எனப்படுவது போதிய அளவில் பயன் தரும் அமைப்பன்று எனலாம். (i) தேவைக் கேற்பத் தொகை அளிப்பதில்லை. வழங்கு முறையில் நேர்மை யில்லை; கோரும் ஈட்டுத் தொகை சரியாக அமைவதில்லை எனலாம். (ii) காலத்தின் அசௌகரியம், எதிர்பாராத கால தாமதம், கடன் பெறுபவரின்மீதுதொடரப்படும் பிடித்தங்கள் இவைகளும், (iii) பல

1. அகில இந்தியக் கிராமக் கடன் சர்வே அறிக்கை, பக்கம் 208.

இலாக்காக்களின் ஒருங்கமைப்பின்மையும், எடுத்து ஒழுங்குபெற நடத்துவதில் தேர்ச்சியின்மையும் காரணமாக இருந்தன.[1]

**18. விவசாயக் கடன் நிறுவனங்களின் தேவைகள்:** [2]கிராமக் கடன் சர்வே ஃபிரெஞ்சு நாட்டு முதுமொழியைக் கூறுகிறது. 'தூக்குமேடைக் கயிறு தூக்கிலிடப்பட்டவனைத் தாங்குவது போலக் கடன் வசதிதான் விவசாயியைத் தாங்குகிறது' என்பதே அப்பழமொழி. கடன் உதவி விவசாயத்திற்குத் தவிர்க்க இயலாத ஒரு தேவை எனலாம். ஆயினும் அதைச் சீரான முறையில் அமைத்தாலன்றி விவசாயத்தையே அது சீர்கேடாக்கிவிடும்.[3]

விவசாயத்தைச் செம்மையாக நடத்த நிதி தேவை. (i) அதைக் குறைந்த கால (15 மாதங்கள் வரை) நடப்பிலுள்ள செலவுகளை ஈடு கட்டப் பயன்படுத்துவது, (ii) நடுத்தரக் காலம் (15 மாதங்கள் முதல் 5 ஆண்டுகள் வரை) என்றும், (iii) நீண்டகாலம் (5 ஆண்டு களுக்கு மேற்பட்டது) என்றும் வரையறுக்கலாம். விவசாயத் தொழிற் கூலி கொடுக்கவும், விதைகள், எரு முதலியவற்றை வாங்கவும், குறுகிய காலக் கடன் பயன்படும். அறுவடையின் போது இதைத் திருப்பிக் கொடுப்பார்கள். உயர் தர விவசாயக் கருவிகள், கிணறு தோண்டுதல், கால்நடை கொள் முதல் செய்தல் முதலியவற்றை நடுத்தரக் காலக் கடன் வசதியில் பெறலாம். பெரிய எந்திரங்களை வாங்குவதற்கும் நிலத்தை விஸ்தரிப்பதற்கும், பழைய கடன்களை அடைப்பதற்கும் நீண்ட காலக் கடன் வசதி பயனுள்ளதாகலாம். பல வகைப்பட்ட குடும்பச் செலவிற்காக வாங்கும் கடன்களையும் குறுகிய, நடுத்தர, நீண்டகாலக் கடன்களாக வகைப்படுத்தலாம்.

அண்மைக் காலம்வரை கடன் கொடுப்பவர்கள் மட்டுமே கிராமக் கடன் வசதிக்கு மூலகாரணமாயிருந்தனர். கடன் நிவாரணச் சட்டம், கடன் கொடுப்போரைக் கட்டுப்படுத்த, உரிமை முறை அமைத்தல், நிலத்தை ஈடுகாட்டிக் கடன் கொடுக்கும் முறையைக் கட்டுப்பாடு செய்தல் இவைகளின் மூலம் கடன் கொடுப்பவரின் தொழிலை ஒருவாறு கட்டுப்பாடு செய்தனர். கிராமக் கடன் உதவியளிக்க வேறு ஒரு தக்க நிறுவனம் தோன்றாத காரணத்தால் இவர்கள் இத் தொழிலில் தழைத்தோங்குகின்றனர். உரிமையுள்ள நில உடைமைத் திட்டங்களை ஜமீன்தாரி ரயத்துவாரி முறைகளில் பெரிய சீர்த்திருத்தங்களைக் கொண்டு வருவதால் பெரிய விவசாயிகளும், நிலக் கிழார்களும் நிலத்தில் முதலீடு செய்ய முன்வருவதில்லை. சென்ற பல ஆண்டுகளாகத் தக்காவிக்

1. அதே அதிகாரம், பக்கம் 199.
2. முதல் ஐந்தாண்டுத் திட்டம் அதிகாரம். 16
3. அகில இந்தியக் கடன் சர்வே அறிக்கை, பக். 151.

கடன் வசதிகள் அதிக அளவில் செய்ய வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்பட்டுள்ளது. கிராமக் கடன் வசதியளிக்கத் தக்காவிக் கடன் எவ்வாறு பயனற்றது என்று முன்னரே விளக்கியுள்ளோம். நடப்பில் பரிசீலனைக்கு அமைக்கும் கடுமையான பரீட்சை யளவில் இந்தியக் குடியானவர்கள் கடன் கொடுப்பதற்கு ஏற்றவர்களாகவும் சிக்கனமற்ற உழவராகவும் உள்ளனர். இவர்களைப் புறக்கணித்தால் விவசாயக் கடன் முறையைப் பற்றிய பிரச்சினை எதிர்பாராத அளவில் சுருங்கி விடக்கூடும்.

கூட்டுறவு அமைப்புகள் உள்ளூரில் திரட்டக்கூடிய நிதியைப் பெறுவதற்குப் போதிய ஊக்கமுள்ள வழிகளைக் கையாள வேண்டும். இம் முறையால் சிக்கன வழிகளை அவர்கள் பின்பற்றுவார்கள். சேமிப்புத் திட்டத்திற்கேற்ற அளவில் பொது மக்கள் செவி சாய்க்காத காரணத்தாலும், இந்த உறுப்பினர்கள் தேவையைப் பூர்த்தி செய்யும் அளவில் சேமிப்புக் கிடைக்காத காரணத்தாலும் நிதி உதவி அயலாரிடமிருந்து வரவேண்டிய நிர்ப்பந்தம் உண்டாகிறது. இது சம்பந்தமாக ரிஸர்வு பாங்கு அன்மையில் பல நடவடிக்கைகள் எடுத்துள்ளது. கிராமக் கடன் முறையைப்பற்றிய விரிவை 11 ஆம் அதிகாரத்தில் 16 வது பகுதியில் காணலாம்.

# 11. கூட்டுறவு

1. **கூட்டுறவின் பொருள்:** தனியார் சக்தியற்ற நிலையில் பிறருடன் பண்பொத்துக் கூடுவதால் ஒருவருக்கொருவர் ஒற்றுமை நிலவிப் பொருள் வசதி கிடைத்துப் பெருஞ் செல்வர்களுக்குக் கிடைக்கும் பொருள்நிலை இவர்களுக் கெய்துகிறது[1] என்று மக்லெகன் குழுவினர் கூறியதுபோலப் பொது நன்மை பயக்க வேண்டுமென்றால் தனி ஆட்கள் தாமாகவே ஒன்றுகூடி வாழ முயலுவதுதான் கூட்டுறவின் அடிப்படையெனலாம். இதன் அடிப்படைக் கொள்கையாவது : 'எல்லோரும் ஒவ்வொருவருக்காகவே; ஒவ்வொருவரும் எல்லோருக்காகவே'. கல்வி, கேள்வி, அறிவுத் திறன், நம்புதற்குறிய தன்மை, விசுவாசம் இவைகளுடன் தன்னம்பிக்கை, மேற்பார்வை இவைகள் அனைத்தும் ஒருங்கே அமைந்தால்தான் கூட்டுறவு முறையில் வெற்றி காண இயலும்.

1895-97-ல் ப்ரடரிக் நிக்கல்ஸன் தயாரித்த அறிக்கையில் இந்தியாவில் உள்ள கிராமியக் கடன் பளுவைத் தகர்த்துக் கடன் வசதி செய்து கொடுக்கவும் ஏற்றதாக உள்ளது கூட்டுறவு முறை எனக் குறிப்பிட்டுள்ளார். இவ் வறிக்கையின்பேரில் யாதொரு செயலும் எடுத்துக்கொள்ளவில்லை. ஆயினும், தனி மனித முயற்சிகள் செய்யப்பட்டன. ஐக்கிய மாகாணத்தில் திரு.டுபர் நெ. (Mr. Dupernex) என்பவரும் பஞ்சாப்பில் திரு. மக்லெகன் (Mr. Meclagan) என்பவரும் திட்டமிட்ட அதே சமயத்தில் கடன் சங்கங்களை நிறுவ முயன்று வந்தனர். 1901-ல் வந்த பஞ்சக் குழுவினரும் கடன் சங்கங்கள் நிறுவுவதன் அவசியத்தை வற்புறுத்தினர்.

2. **கூட்டுறவுக் கடன் சங்கச் சட்டம், 1904:** கடன் சங்க நிறுவனச் சட்டம் 1904-ல் ஏற்பட்ட பின்னர்தான் கூட்டுறவு முறை

1. மக்லெகன் குழுவின் அறிக்கை, பத்தி 2.

உண்மையில் இந்தியாவில் தோன்றியது எனலாம்.[1] இச்சட்டத்தின் அம்சங்களாவன: (i) வயது வந்த பத்து பேர்கள் ஒன்று கூடிய எந்தச் சங்கமும் பதிவு பெற மனுச் செய்து, உடனே கூட்டுறவுச் சங்கமாக ஆகிவிடலாம். (ii) அங்கத்தினர்களின் எண்ணிக்கைக்குத் தக்கவாறு கிராமக் கூட்டுறவுச் சங்கம் என்றும் நகர்ப்புறக் கூட்டுறவுச் சங்கம் என்றும் பாகுபாடு செய்யலாம். இதில் உறுப்பினராக உள்ளவர்களில் ஐந்தில் நான்கு பகுதியினர் விவசாயிகளாக இருப்பின் கிராமக் கூட்டுறவுச் சங்கம் என்றும், இதரவகைகளை நகர்ப்புறக் கூட்டுறவுச் சங்கம் என்றும் பிரிக்கலாம். (iii) கிராமக் கூட்டுறவுச் சங்கமானால் எல்லையற்ற பொறுப்புண்டு. நகர்ப் புறக் கூட்டுறவுச் சங்கமானால் பொறுப்பின் அளவு சங்கத்தின் விருப்பிற்கு, விட்டுவிடப்படுகிறது. அரசினர் இவற்றில் சில அதிகாரங்களைத் தமக்கென வைத்துக்கொண்டனர். அவை யாவன : (அ) கட்டாய ஆய்வும் தணிக்கையும், (ஆ) அவசியமாக இருப்பின் சங்கத்தைப் பதிவாளர் கலைத்து விடலாம். ஆனால் இராச்சிய சர்க்காரிடம் அந்தச் சங்க உறுப்பினர் மேல் முறையீடு செய்துகொள்ள உரிமை வழங்கல், (இ) சங்கத்திற்கான விதிகளை ஏற்படுத்துதல்.

ரெய்பீஸன் (Raiffeisen) மாதிரியில் இந்தியாவில் விவசாயக் கடன் சங்கங்கள் நிறுவப்பட்டன. அவற்றின் தனிப்பட்ட குணங்கள் வருமாறு: (i) எல்லை வரையறுக்கப்பட்டிருந்தது, (ii) பங்குகள் இல்லை அல்லது மிகக் குறைவான மதிப்பில் பங்குகள், (iii) எல்லையற்ற கடன் பொறுப்புகள், (iv) உற்பத்திக் காரியங்களுக்கு மட்டிலும் கடன் கொடுத்தல், (v) நீண்ட காலக் கடன் வசதியும் தவணைகளில் கடனைத் தீர்க்க வசதியும், (vi) நிரந்தரமானதும் பிறரால் மாற்ற இயலாததுமான ஓதுக்கு நிதி, (reserve fund). (vii) இலாபத்தைக் கோரும் தன்மை, கிடைக்கும் இலாபத்தை ஓதுக்கு நிதியுடன் கூட்டிவிடல், (viii) கௌரவப் பணியாற்றலும் மக்களாட்சி முறையும், (ix) சமூகப் பொருள் தார்மீக முன்னேற்றத்திற்கு ஒருங்கமைந்த வசதி. ஷுஉலிஸ்-டெலிட்ஸ் முறையின் கீழ், ரெய்பீஸன் முறையை ஒத்திட்டுப் பார்த்ததில் இதன் முக்கிய வேறுபாடுகளாவன: (i) அகண்ட பரப்பில் தொழில் புரிதல், (ii) அதிகப்படியான பங்கமைந்த மூலதனம் பெறல், (iii) குறைந்த பொறுப்புகள், (iv) குறுகிய காலக் கடன், (v) பெருமளவில் ஓதுக்கு நிதி வளர்ச்சிக்காக அவ்வளவு அக்கறை காட்டுவதில்லை, (vi) லாபப் பங்கு வீதம் கொடுக்க ஏற்பாடு, (vii) சம்பளத்தில்

1. கூட்டுறவு இயக்கம் இந்தியாவில் தோன்றக் காரணமாக இருந்தது அரசாங்கமே. அரசாங்க மேற்பார்வையிலும் கட்டுப்பாட்டிலும் நிலைத்து வருவது.

ஆளை நியமித்து நடத்தல், (viii) வியாபார வளர்ச்சிக்கு அதிக ஊக்கம் அளித்து, சமூக, தார்மீக முன்னேற்றத்தைப் பற்றி அவ்வளவு பொறுப்பு எடுத்துக் கொள்வதில்லை. ரெய்பீஸன் முறை, கிராம விவசாயக் கடன் கூட்டுறவுச் சங்கங்களுக்குப் பொருத்தமானது என்றும், விவசாயமற்ற இதர வேலைகளுக்கு ஷூலிஸ்-டெலிட்ஸ் முறை பயன்படுமென்றும் கருதப்பட்டது. ரெய்பீஸன், ஷூலிஸ்-டெலிட்ஸ் என்ற இருவரும் ஜெர்மனி நாட்டில் கூட்டுறவு முறையை ஆரம்பித்தவர்.

3. **கூட்டுறவுச் சங்கச் சட்டம், 1912 :** 1904-ல் ஏற்படுத்தப்பட்ட சட்டத்தில் முக்கியமாக மூன்று குறைபாடுகள் உள்ளன: (i) இது கடன் சங்கங்களை மட்டிலும் அங்கீகரித்தது, (ii) அடிப்படைக் கடன் சங்கங்களுக்குப் போதிய மூலதனம் கொடுக்கவில்லை. மத்திய கண்காணிப்பு நிறுவனங்களையும் இது ஏற்படுத்தவில்லை. (iii) கிராம நகர்ப்புறச் சங்கங்கள் எனப் பிரிவினை செய்தது இடைஞ்சலாகவும் முறையற்றதாகவும் உள்ளது.

1912-ஆம் ஆண்டில் இயற்றப்பட்ட கூட்டுறவுச் சங்கச் சட்டம் மேலே கூறிய தவறுகளை நீக்கிக் கடனற்ற சங்கங்களையும் குறிப்பாக விற்பனை, கொள்முதல், உற்பத்தி, இன்சூரன்ஸ், வீடு கட்டல் முதலியவற்றையும் அங்கீகரித்தது; அடிப்படைச் சங்கங்கள் நீங்கலாக உள்ள மூன்று வகைப்பட்ட மத்திய சங்கங்களையும் அங்கீகரித்தது. அவையாவன : (i) அடிப்படைச் சங்கங்கள் உள்ள யூனியன்கள். இவைகள் மேற்பார்வைக்கும் தணிக்கைக்கும் ஏற்பட்டவை. (ii) தனி மனிதர் உறுப்பினரும், சங்க உறுப்பினர்களும் கொண்ட மத்திய பாங்கு, (iii) மாகாண அல்லது இராச்சிய பாங்குகள்.[1] இந்தச் சட்டப்படி இச் சங்கங்களின் பொறுப்புகள் மிகக் குறைவாகவே இருக்கும். கடன் வசதியளிக்கும் சங்கமாக இருப்பின், அதுவும் அதன் உறுப்பினர் விவசாயத்தில் ஈடுபடின் பொறுப்பு எல்லையற்றதாக இருக்கும். இவை இரண்டும் அல்லாதவைகளின் பொறுப்பைப்பற்றி அந்த உறுப்பினர்களே முடிவு செய்யவேண்டும்.

4. **சங்கங்களின் வகைகள் :** கூட்டுறவுச் சங்கங்களின் விதங்களைக்[2] கீழ்க்கண்ட விதமாகப் பிரிக்கலாம்.

1. *மாகாணப் பாங்குகளை இராச்சிய பாங்கு என்றும் சொல்லலாம்.*

2. *ரோமில் உள்ள உலக விவசாய நிறுவனத்தின் பாகுபாட்டின்படி இராச்சியங்கள் கூட்டுறவுச் சங்கங்களைக் கீழ்க்கண்டவாறு வரையறுத்தன : (i) கடன், (ii) கொள்முதல் அல்லது கொள்முதலும் விற்பனையும், (iii) பத்தியும் விற்பனையும், (v) இன்சூரன்ஸ், (vi) இதர வகை.*




ஆரம்ப மத்திய சங்கங்களைப்பற்றி இனி விவாதிப்போம்:

5. **ஆரம்ப விவசாயக் கடன் சங்கங்கள் :** மிகவும் முக்கியமான அமைப்புள்ள இந்த விவசாயக் கடன் சங்கங்கள். (i) பரிமாணம்: எந்தப் பத்து பேர்களும் கூடிக் கிராமக் கடன் சங்கப் பதிவுக்கு மனுச் செய்யலாம். இதன் விகிதப்படி எண்ணிக்கை 100 பேர். இவ் வெண்ணிக்கைக்குமேல் இருக்கக் கூடாது.[1]

(ii) **பணியாற்றும் பரப்பு :** உறுப்பினர்களுக்குள் ஒற்றுமையும் ஒழுங்கு முறைகளும் ஏற்பட, ஒருவர்க்கொருவர் புரிந்து கொள்ள, கிராமம் ஒவ்வொன்றுக்கும் ஒரு சங்கம் ஏற்படவேண்டும். பலதரப்பட்ட வசதிகள் கொடுக்கவல்ல சங்கங்களைப் பம்பாயில் கிராமக் கூட்டங்களுக்கென நிறுவினர்.

(iii) **பொறுப்பு:** பொதுப்படையான நியமனமாவது எல்லையற்ற பொறுப்புகளாகும். கால வரையறைக்குள் நியமப்படிச்

1. 1947-ல் நடந்த கூட்டுறவுச் சங்கப் பதிவாளர்களின் மாநாட்டில் நடந்த பரிந்துரைகளாவன: (அ) அடிப்படைப் பலமுகச் சங்கத்தின் எல்லை கிராமத்திற் குட்பட்டதாக இருக்க வேண்டும்.

(ஆ) கிராமங்கள் வெகு சிறியவைகளாக இருப்பின், ஒன்றுக்கு மேற்பட்ட கிராமங்களுக்கெல்லாம் ஒரு முக்கிய கேந்திரக் குழுவை ஏற்படுத்துவது.

(இ) ஒரு வியாபார மண்டியின் செயலாற்றும் எல்லை தானிய வகைகளை உற்பத்தி செய்யும் எல்லாக் கிராமங்களையும் கவருவதாக இருத்தல் வேண்டும்.

செலுத்தத் தவறினால் சங்கத்தின் அன்றாடச் செலவுக்கான பற்றாக் குறையை ஈடுகட்டத் தலை ஒன்றுக்கு இவ்வளவென்று பற்றாக்குறை ஈவித்து வசூலிக்கப்படும். கடன் கொடுத்தவர் நேரடியாக ஒவ்வோர் உறுப்பினர்மீதும் சட்ட நடவடிக்கை எடுத்து வாங்க முடியாது.[1] எல்லையற்ற பொறுப்புகள் இருப்பது நலம் எனக் கீழ்க்கண்ட காரணங்கள் மூலம் விளக்கப்படுகிறது: (அ) நன் மதிப்புடையவர்களுக்கே கடன் கொடுத்து, அவர்களால் திருப்பித் தர வன்மையுள்ளதா என்றறிந்த பின்னரே கடன் கொடுக்கப் படுகிறது. சரியான ஈடுகாட்டுதற்கு வழியில்லாதவர்களுக்குக் கடன் கொடுப்பதில்லை. (ஆ) மக்களிடையே பரஸ்பர ஒற்றுமையை உண்டுபண்ணி, வர்த்தகத்தின் படிப்பினை இன்ன தென்று காண்பித்து, அவர்களுக்குள் எவ்வாறு நாணயத்துடன் நடந்து கொள்ளவேண்டும் என்றும், (இ) கூட்டுறவின் அடிப் படையில் எவ்விதம் உழைக்கவேண்டுமென்றும், (ஈ) சங்கங்கள் ஒரே கிராமத்திலிருந்து பலமுக வேலைகளைச் செய்யாதிருப்பதே நலமெனலாம். நடைமுறையில் எல்லையற்ற பொறுப்பு முறை ஈடேறுவது கடினம் எனலாம். கூட்டுறவைப் பற்றிய சென்னைக் குழு (1939-40) இவ் வெல்லையற்ற பொறுப்புகளை வற்புறுத்துவது மிகவும் பயனற்றது என்றனர். கடன் வாங்காதவர்களும், கடன் தவணைகளைச் செலுத்தத் தவறாதவர்களும் தொல்லைக்குட்படுத்தப்பட்டு, இக் கூட்டுறவுக்கே ஓர் இழுக்கை ஏற்படுத்தினர் எனலாம். மேலும், எல்லையற்ற பொறுப்பினால் செல்வர்களும் நிலக் கிழார்களும் இக் கூட்டுறவுத் தாபனத்தில் கலந்துகொள்ளவில்லை. கூட்டுறவு இன்சூரன்ஸ் திட்டமும் வேறு சில வகை உதாரணங்களும் எல்லையற்ற பொறுப்புக்கு ஒரு முற்றுப்புள்ளியிட்டன வெனலாம். சமீப காலத்தில் கட்டுப்பாட்டுக் குட்பட்ட பொறுப்பின் முக்கியத் துவத்தை மதிப்பதாக 1947ஆம் ஆண்டின் பதினைந்தாம் கூட்டுறவுச் சங்கப் பதிவு உத்தியோகஸ்தர்களின் கூட்டத்தின் ஆதரவிலிருந்து தெரிகிறது.

மேலும் அது திட்டக் குழுவின் நோக்கங்களை அங்கீகாரம் செய்துள்ளது. அது பின் வருமாறு :

**கூட்டுறவுத் திட்டக் குழுவின் அம்சங்கள் :**

(அ) எல்லையற்ற பொறுப்புள்ள சங்கங்கள் வெற்றியுடன் செயலாற்றுமாயின் அவற்றில் மாற்றம் ஏற்படுத்துவது சரியன்று.

1. மக்லேகன் குழு அறிக்கை, பத்தி 47.

(ஆ) மற்றவைகளில் பொறுப்புகள் கட்டுப்படுத்தப்பட்டு அங்கத்தினர்களின் பங்குகள் விகிதாசாரம் நிர்ணயிக்கப்பட வேண்டும். மேலும், வேண்டும்போது ரொக்கப் பணம் பங்குகளிலிருந்தே எடுக்க வசதியிருத்தல் வேண்டும்.

(இ) பொதுவாக ஒவ்வொரு மனிதனின் விஷயமும் அதனதன் யோக்கியதாம்சத்திற்குத் தக்கபடி தீர்க்கப்பட வேண்டும்.

(ஈ) கட்டுப்படுத்தப்பட்ட பொறுப்புகளை ஏற்றால், எளிய அங்கத்தினர்களின் தேவைகளைப் புறக்கணிப்பதாக இருத்தல் கூடாது.

(iv) நிருவாகம் : இரு உறுப்பினர் கையில் நிருவாகம் அமைந்துள்ளது :

(அ) எல்லா அங்கத்தினர்களையும் கொண்ட பொதுச் சபை.

(ஆ) **நிருவாகக் குழு :** இதன் அங்கத்தினர்கள் பொதுச் சபையினரால் அதன் வருடாந்தரக் கூட்டத்தின்போது தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள். சபையினரால் அமர்த்தப்பட்ட சம்பளக் காரியதரிசியும் ஓர் அங்கத்தினரே. அந்தப் பொதுச் சபையினரின் முக்கிய அலுவல்களாவன : நிருவாகக் குழுவினரால் உருவாக்கப்பட்ட ஐந்தொகைக் குறிப்பை ஆமோதிப்பது, பதிவாளர், தணிக்கையாளர்களின் அறிக்கைகள், ஆணைகளைப் பரிசீலிப்பது, பொதுவாகச் சங்கத்தின் வரவுகளை நிர்ணயித்தல், தனிப்பட்ட ஆட்களின் செல்வாக்கினையும் நிர்ணயித்தல், சங்கத்தின் துணைச்சட்டங்களைத் திருத்தியமைத்தல் முதலியனவாகும். மேலும் நிருவாகக் குழு வாயிலாக, நிர்வாக அலுவல்களை நடத்துவதன்றிப் புது அங்கத்தினர்களைச் சேர்ப்பதும், கடன் பத்திரங்களை அமலாக்குவதும், பாக்கிக் கடன் தொகைகளை வசூலிப்பதுமாகும்.

(v) **நடைமுறைச் செலவு மூலதனம் :** கிராமிய நாணயச் சங்கங்கள் தங்கள் நிதிக்குப் பெருமளவில் வெளியுதவி ஆதாரங்களையே நோக்கியிருக்கின்றன.

**உள் ஆதாரங்கள் :** (அ) அங்கத்தினர்கள் செலுத்தும் சந்தாத் தொகை. (ஆ) அங்கத்தினர்கள் போடும் வைப்புத் தொகை (இ) ஏதாவது பங்குத் தொகைகள். (ஈ) நெருக்கடி நிதியின் உபரி சொத்துக்களேயாகும். ஏழை அங்கத்தினர்களுக்கு வசதியளிக்கும்படியும், பங்கு வீதம் மட்டுமோர் நோக்க

மில்லாதபடியுமிருப்பின், பங்கு மூலதனம் அனுமதிக்கப்படும்.[1] எப்படியிருப்பினும் பாங்குச் சேமிப்புத் தொகைப் பழக்கம் குழந்தைப் பருவத்திலேயே இருப்பதனால் கிராமீயக் குழுக்களுக்குத் தேவைப்பட்ட தொகை (இந்தியாவில்) தல சேமிப்புக்களிலிருந்து மிகச் சொற்பமே கிடைக்கின்றதெனலாம். ஆனால், பொதுவான குணம் மூலதனம், வாணிபம், கடன் கொடுத்தல் மூலமே வெகுவாக நடை முறையி லுள்ளது.

(vi) **கடன் கால நீட்சியும் அதன் நோக்கமும் :** இலாபகரமான வேலைகட்கும், மற்றும் வேறு சிலவற்றிற்கும், பழைய கடன் மீட்சிக்கும், பணம் கடனாகக் கொடுக்கப்படுகிறது. அநேகமாக, கடன் கால நிர்ணயம் ஒருவருடத்திற்குமேல் நீடிப்பதில்லை. இரண்டு ஆண்டுகட்குமேல் நீடிப்பது என்பது புறநடை யாகும். அங்கத்தினர்கள் கடன் வாங்குவது வரும் காரணங்களுக்காகவெனலாம் :

(அ) பருவ காலப் பயிர் உற்பத்திக்கு, (ஆ) கிணறுகள் தோண்டுவதற்கு, (இ) எருதுகள் வாங்குவதற்கு, (ஈ) பண்ணை வீடு கட்டுவதற்கு, (உ) நில அபிவிருத்திக்கு எண்ணெய்ப் பொறியால், நீரேற்று முறையமைப்பதற்கு, (ஊ) புது நிலங்கள் வாங்குவதற்கு, (எ) தரிசு நிலங்களைச் சீர்திருத்த[2] இலாபகரமற்ற வேலைகட்கும் கடன் தரப்படுகின்றது. அதன் நோக்கம் நிலச்சுவான்தார் வட்டிக் கடைக்காரரிடமிருந்து கடன் வாங்குதலைத் தடுப்பதற்காகவே யாகும். பம்பாய், சென்னை மாவட்டங்களில் பயிர்த் தொழில் செய்யும் யாவர்க்கும் அவர்களுடைய எல்லாவிதச் சொந்தத் தேவைகளுக்கும் கூட (கல்யாணச் சடங்குச் செலவுகள்) முன் கூட்டியே தகுந்த வசதி செய்து கொடுத்து, ஒரு குறிப்பிட்ட காலத்திற்குள் திரும்பவும் பெற்றுக்கொள்கின்றனர்.

(vii) **கடன் தொகையைத் திருப்பிக் கொடுக்கும் முறை :** எந்த இலாபகரமான செயலுக்குக் கடன்தொகை யளிக்கப்படுகிறதோ, அதிலிருந்து வரும் வருவாயிலிருந்தே அக்கடனைத் திருப்பிக்கொடுத்தல் வேண்டும். இலாபகரமற்ற செயல்களுக்குக்

*1. எதிர்பார்த்த நஷ்டங்களை, தனி, கூட்டுப் பொறுப்பு முறைகள் ஈடு செய்ய முடிந்ததால், ஆரம்ப காலத்தில் செலுத்தப்பட்ட பங்கு முதல் வெகுவாக ஆதரிக்கப் படவில்லை. மந்தகால, துன்ப அனுபவத்தின் பலனைக் கூட்டுறவு முறை விழிப்போடு பாதுகாப்பாயிருந்தது. கணிசமான பங்குத் தொகை வசூலிப்பது திட்டமாக்கப்பட்டு அதன் பேரிலேயே குழுக்களுக்குக் கூட்டுறவுத்துறை அங்கீகாரமளித்தது. அங்கத்தினர்களிடமிருந்து அதிகப்படிப் பங்குத்தொகை வசூலிக்க அடிக்கடி நடவடிக்கைகள் எடுக்கப்பட்டன. சென்ற காலத்திலிருந்ததைவிடத் தற்போது குழுக்களுக்கு அதிகப் பணம் தேவைப்படுகின்றது. ஆகவே, கூட்டுறவுப் பல்லவியான 'சுயஉதவி' முறை உழைபயிற்காக மேலும் மேலும உந்தப்படுகிறது.*

*2. 1952ஆம் வருஷத்திய பயிர்த் தொழில் கூட்டுறவு, பக். 97.*

கொடுக்கப்படும் கடன்தொகை, வாங்குபவரால் அவரது தகுதி முறைக்குள்ளபடி குறிப்பிட்ட தவணைகளில் திருப்பித்தரப்பட வேண்டும். கடன் தொகை திருப்பிக் கொடுக்கும் வகையில் தாமதமின்மை கூட்டுறவுக் கடன் முறைக்கே ஒரு முக்கிய அம்சமாக உள்ளது. 1929 முதல் மந்த கால நிலையில் அஞ்சுதற்குரிய அளவிற்கு அதிகமான பாக்கியுள்ள தொகை தேக்கமாயிருந்தது. ஆனால் தற்போது அந் நிலை மாறுதலடைந்து புகழுக்கான அளவு அபிவிருத்தியடைந்துள்ளது. பாக்கியுள்ள தொகையின் மதிப்பு இப்போது 25 சதவீதத்திற்கும் குறைவென்றே கூறலாம். இருந்தாலும் இதுகூடத் திருப்திகரமானதென்று சொல்வதற்கில்லை.

(viii) ஆதரவு: கோட்பாட்டின்படி அனுமதிக்குட்பட்ட பிணையம் அங்கத்தினர் அல்லது கடன்பட்டவரின் நேர்மையும் உயர்குணமுமேயாகும். நேர்மை என்பதையே முதலாக்க வேண்டும். எப்படியிருப்பினும் நடை முறையில் சடப்பொருள் துணை ஈடு சாதாரணமாக வற்புறுத்தப்பட வேண்டும்.[1]

**6. நில அடைமான பாங்குகள்:**[2] விவசாயிக்குத் தேவையான நீண்டகாலப் பண உதவி, கடனைத் தீர்ப்பதற்கும்.[3] இலாபகரமான ஆனால் மிக அதிக விலை மதிப்புள்ள அபிவிருத்திச் செயல்களுக்கும் கொடுப்பது கூட்டுறவு ஸ்தாபனங்களால் உதவி செய்ய முடியாத ஒரு நிலை எனலாம். ஏனெனில் பணம் நீண்ட காலத்திற்கு ஒரே இடத்தில் முடங்கலாகாது. குறுகிய கால உதவியானல் நலமாகும். மேலும் நீண்டகாலத் தவணைக்குப் பண உதவி செய்தலில் முக்கியமாகச் சிறந்த தேர்ச்சியுள்ள நில மதிப்பீட்டு நிபுணர்களின் சேவை தேவைப்படுகின்றது. அதுதான் காடுத்த கடனுக்கும் ஈடு செய்வதாயிருக்கும். நில அடைமான

*1. இதற்கு விலக்காகப் பம்பாய் இராச்சியத்தில் சமீபத்தில் (ஆதரவளிக்கப் பட்ட அல்லது செயலாற்ற) பயிர்க் கடன் முறையைக் கூறலாம். இதன்படிக் கூட்டுறவுப் பாங்குகள் நாணயமுள்ள விவசாயிகளுக்கு எக்காலத்திலும் குறுகியகால கடன் வசதியளிக்க உதவியுள்ளது. கடன் கொடுக்கப்படும் தொகை வரையறுக்கப் பட்டு அறுவடைக் காலத்தில் திருப்பியடைக்கப்படுவதாகவும் பயிர்களின் சராசரி வருமானத்தைப் பொறுத்தும் நிர்ணயிக்கப்படுகிறது. அரசாங்கம் 5 சதவீதம் நஷ்டஈட்டுக்கு உத்தரவாதமளித்தும், கூட்டுறவு மேற்பார்வைச் செலவையும் ஏற்றுக்கொள்ள வசதியளிக்கிறது. இப்புது முறையின்படிக் குறுகிய காலக் கடன் வசதிகள் கூட்டுறவுச் சங்கங்களின்மூலம் அதிக அளவில் கொடுக்கப்படுகிறது.*

*2. அகில இந்தியக் கிராமியக் கடன் தொகையளிப்பு சர்வே அறிக்கை, பக். 221-8.*

*3. நில அடைமான பாங்குகளின் கடன் நிவாரண வேலைகளைத் தப்பிதமாக எண்ணலாகாது. நில அடைமான பாங்கு விவசாயியின் கடனை முழுவதுமாகத் தீர்ப்பதில்லை. அது பண உதவி செய்யும் சவுக்கார் மாதிரி இருக்கிறது. ஆனால் சவுக்காரை விடப் பாங்கியை நம்பிக்கைக்குப் பாத்திரமாகக் கொள்ளலாம். ஏனெனில் சவுக்கார் இரக்கமின்றி விவசாயியைத் தொல்லைப்படுத்துவதுபோல் பாங்கு செய்வதில்லை.*

பாங்குகள் முக்கியமான காரியத்திற்கு நிறுவப்படுவதன் நோக்கம் விவசாயிகளுக்கு நீண்டகாலக் கடன் திட்டப்படி பண உதவி செய்வதற்கேயாம். இந்தியாவில் இவை கூட்டுறவு முறை போன்றதா யுள்ளது. இதில் தனி அங்கத்தினர்களும் சேர்த்துக் கொள்ளப்படுவர் ; அல்லது கூட்டுறவுத் தாபனங்களும் அங்கத் தினர்களாகலாம் ; நில அடைமான பாங்குகள் இந்தியாவில் வெற்றியுடன் செயலாற்ற அரசாங்கத்தின் பொருளுதவி தேவை. இதை அரசாங்கம் தெளிவாக உணர்ந்துள்ளது. அதனாலேயே அரசாங்கம் கடன் ஈட்டுப்பத்திரங்கள் வாங்குவதற்கும், வேலை தெரிந்த அதிகாரிகளை நிலங்களை மதிப்பீடு செய்வதற்கு அனு மதித்தும், வேலைக்காக உள்ள செலவுத் தொகைக்காக உதவித் தொகை கொடுக்க உத்தரவாதமளிக்கிறது. மேலும் பாங்குகளும் கடன் தொகை வசூலிப்புக்கு வேண்டிய வசதி வகைகளுக்கு அனு மதி கொடுக்கின்றன.

மத்திய நில அடைமான பாங்குகள் பம்பாய், சென்னை, மைசூர், ஒரிஸ்ஸா, திருவாங்கூர், கொச்சி, சௌராட்டிரம், ஐதரா பாத் முதலிய இராச்சியங்களில் செயலாற்றுகின்றன. ஒரிஸ்ஸா, திருவாங்கூர், கொச்சி, சௌராட்டிரம் முதலிய இராச்சியங்களில் மத்திய பாங்குகள்தாம் உள்ளன. மூல பாங்கு இல்லை ஆதலால் மத்திய பாங்குகள் நேரிலேயே கடன் வாங்குவோரிடம் தங்கள் அலுவல்களைச் செயலாற்றுகின்றன. 1951-52-ல் மத்திய, மூல நில அடைமான பாங்குகளின் நிலை பின்வருமாறு :

| | மத்திய நில அடைமான பாங்குகள் | மூல நில அடைமான பாங்குகள் |
|---|---|---|
| எண்ணிக்கை | 6 | 289 |
| அங்கத்தினர்கள் (அ) தனிப்பட்டவர் | 34,175 | 2,13,814 |
| (ஆ) பாங்குகள் | 404 | ... |
| | (கோடியில் ரூ.) | (கோடியில் ரூ.) |
| கடன் ஈட்டுத்தொகைகள் | 7·83 | 0·09 |
| நடைமுறை முதல் | 10·17 | 7·59 |
| நடைமுறை வருடத்தில் கொடுக்கப் பட்ட கடன்கள் | 2·51 | 1·30 |
| வருட முடிவில் பாக்கியுள்ள கடன் தொகைகள் | 8·05 | 6·96 |

விவசாய நிதித்தேவையின் நீண்டகால அளவைக் கவனிக்கும் போது இந்தியாவில் நில அடைமான பாங்குகளின் வளர்ச்சி மிகச் சிறியதே எனலாம். இந்த வகையில் சிறந்த பெருக்கம் அடைந்துள்ளது சென்னை இராச்சியம் ஒன்றேதான். இந்தியாவிலுள்ள 289 மொத்த மூல பாங்குகளில் சென்னையில்மட்டும் 130 நில அடைமான மூல பாங்குகள் உள்ளன. நில அடைமான, பாங்குகளின் அலுவல்களில் திருப்தியற்ற சில அம்சங்கள் பின்வருமாறு : (அ) பழைய கடனைத் தீர்க்கப் பண உதவி தரப்படுகிறதே யொழிய இலாபகரமான வேலைகளுக்கல்ல. (ஆ) இராச்சிய அரசாங்கங்களில் சிறந்த பணியாளர்களிருந்தும் கடன் தேவைக் கோரிக்கைகளை ஆராய்வதற்கும், கடன் கொடுத்தலை மேற்பார்வையிடவும் நில அடைமான பாங்குகளில் பணியாளர்கள் இல்லை. அரசாங்கப் பணியாளர்களும் முன் வருவதில்லை. (இ) நில அடைமானப் பாங்குகளிலிருந்து வாங்கும் கடன் 15 முதல் 20 ஆண்டுக் காலம் வரை சம தவணைகளில் செலுத்தப்படுகின்றன. காலம் பண அளவுக்குத் தக்கபடி வித்தியாசப்படுவதில்லை. (ஈ) கடன் ஈட்டுத் தொகைப் பத்திரங்களுக்கு அரசாங்கம் உத்தரவாதமளிப்பினும் நில அடைமானப் பாங்குகட்கு தங்கள் அலுவல்களுக்குப் போதிய பண வசதி கிடைப்பதில்லை. (உ) மத்திய நில அடைமானப் பாங்குகளுக்கும் இராச்சியக் கூட்டுறவுப் பாங்குகளுக்கும் ஒருமைப் படுத்தும் வகையில் செயலாற்றும் முறையை முயல்வதில்லை. (ஊ) நில அடைமானப் பாங்குகள் முக்கியமாகச் செல்வந்தராகி, விவசாயிகளுக்குத்தான் பண உதவி செய்கிறதே யொழிய உண்மையில் அதிக அளவு அவதிப்படும் ஏழை விவசாயிகளுக்குக் கொடுப்பதில்லை.

இந்தியாவில் நில அடைமான முறை சிறந்த அளவில் முயன்றும் போதுமான நிதி திரட்ட முடியாமல் தேவைக்கும், பெருக்கத்திற்கும் சம்பந்தமற்ற முறையில் செயலாற்றுவதால் உற்பத்தியைவிடப் பழைய கடன் பாக்கியே முக்கியமாகக் கருதி, அதுவும் பணக்கார விவசாயிக்குத்தான் காலந்தவறிக் கொடுக்கப்படுகின்றது.[1]

**7. மூலச் சங்கங்களின் குறைபாடுகள் :** கூட்டுறவு அமைப்புக்களினால் விவசாயிக்குப் பண உதவி செய்தலின் மூலம் பலனடையுமாறு முடிவாகத் தீர்மானிப்பது மூலச் சங்கங்களேயாகும். துரதிருஷ்டவசமாக அவைகளின் இப்படிப்பட்ட திறம்பட்ட செயல்களின் குறிப்பு முக்கியமாக முற்றிலும் போற்றத் தக்கவாறின்றி வருந்தக்கூடிய நிலையிலுள்ளது. ஆனால் இவைகள்

1. அகில இந்தியக் கிராமியக் கடன் சர்வே அறிக்கை, பக். 228.

செயலாற்றும் முறையிலுள்ள குறைபாடுகள் பின்வருமாறு: (i) சரியற்ற பிரதேசவாரிக் கடன் தொகைப் பங்கீடு (இந்தியாவிலேயே மூலச்சங்கங்களின் மொத்த உதவிக் கடன் தொகையில் சென்னை, பம்பாய் இராச்சியங்களில் மட்டும் 60 சதவீதம் எனலாம்.) (ii) ஒவ்வொரு சங்கத்திலும் அங்கத்தினர்களின் எண்ணிக்கைக் குறைவும் அதன் நிமித்தம் அநேக சங்கங்களில் செயலாற்ற முடியாதவாறு பணவசதிக் குறைவும். (iii) இருப்புத் தொகையில் போடும் மூலதனம் சொற்பம். ஆகவே வெளியுதவி கோரி ஈடு செய்வதற்குள்ள முறை. (iv) இடைநிலைக் கால நிதி உற்பத்திக்கு வழி செய்யாமை. (v) தகுதியற்றோர்க்கும், பணவசதியற்றோர்க்கும் உற்பத்திப் பெருக்கு வேலைகளுக்கன்றிச் சம்பந்தமற்றவைகட்குப் பண உதவி அடிக்கடிச் செய்வது. (vi) புதிதாக வாங்கும் கடனில் பழைய கடனையடைத்தல் உண்மையான பணம் சேர்க்கும் முறையன்று. அதுவும் இலாபகரமற்ற செயல்களுக்கு உதவப்படும் தொகை. (vii) பொருள் ஈட்டுவதன் நோக்கம் வற்புறுத்தப்படல். (viii) கடன் பாக்கித் தொகையில் அதிக பாக்கிகளால் ஏற்படும் பணமின்மை நிலைக்குள்ள பின்வரும் காரணங்கள். (1) கடன் வசூலில் தயைதாட்சணியம் காட்டுதல். (2) கடன் தொகை திருப்புதலில் பாக்கி ஏற்படும்போது மறுபடியும் கடன் கேட்கும் முறை, மேலும் செயலாற்றும் உத்தியோகஸ்தர்கள் எக்காரணத்தினாலோ இம்முறைக்குத் தகுந்த நடவடிக்கை எடுக்காமலிருந்துவிடுதல். (3) அங்கத்தினர்களின் ஒற்றுமையுணர்ச்சியில்லாத போக்கு. கொடுக்கச் சக்தியுள்ளவர்களும் தாமதித்துக் கொடுப்பது. (ix) அங்கத்தினர்கட்குத் தங்கள் சங்கங்களின் பேரில் கூலிக்குமாரடிக்கும் எண்ணமிருப்பது. ஏனெனில் கூட்டுறவுச் சங்கங்கள் மார்வாடிக்காரனுக்குப் பதிலாகச் சுகமான ஒரு வழி என்பதாகும். (x) மேற்பார்வையில்லாமை, சக்தியற்ற ஆதிக்கம், துப்புரவற்ற தணிக்கை, தகுந்தபோதுமான நிதி வசதியின்மை (திறமையற்ற)யாவும் சேர்ந்து தனிப்பட்ட முறையிலுள்ள கடன்கள் சொற்பமாயும், பயனற்றதாயுமிருத்தல். (xi) கடனளித்தலில் தாமதம் ஏற்படுதல். (அ) மிகச் சொற்பமான சொந்த முதல் தொகை-மத்தியக்கூட்டுச் சங்கத்திலிருந்து உதவி வரும் வரை எதிர்பார்ப்பதனால் ஏற்படும் நீண்டகாலத் தாமதம். (ஆ) கடன் உதவியளிப்பதில் நீண்ட முறைகள். (இ) பஞ்சாயத்துக்களிலிருந்து செயலாற்றும் செயலாளர்களின் உதவி, திறமையில்லாததும், சுய முயற்சியும், தீர்மானமும் அற்ற வகை[1] (xii) நடைமுறையில் அநேகமாக-பணம் முக்கியமாய்த் தேவைப்படுபவர்கள், சிறிய விவசாயிகள்,

1. பஞ்சாயத்துகள் அதிகமாக மேற்பார்வையாளர்களின் ஒத்துழைப்பை எதிர்நோக்குதலில் மேற்பார்வையாளர் அநேகமாக நேரே செயலாற்றுவதில்லை.

கூலிக்காரர்களும், கூலிக்குப் பயிரிடுபவர்களும், முக்கியமாய் மழையற்ற பிரதேசங்களில் பயிரிடுபவர்கள் முதலிய கீழ்ப் பட்டோருக்குக் கடன் வசதியின்றிக் கூட்டுறவுச் சங்கங்களிலிருந்து நீக்கப்படுகிறார்கள். (xiii) பினாமிக் கடன்கள், சாதிச் சண்டைகள், தீய செயல்கள், தலைவர்களும் சங்க அங்கத்தினர்களும் ஏதேச்சாதிகாரமாக அதிகாரத்தைக் கெட்ட வழிகளில் செயலாற்றுதல். (xiv) சங்கங்களில் ஈடுபட்டவர்கள், பலமற்ற, திறமையற்ற சங்கங்களை ஒழித்துக்கட்டுவதில் எண்ணாங்கொண்டு, அதன் பயனாக அநேக சங்கங்கள் இருள் சூழ்ந்து மதியிழந்து செயலாற்ற முடியாமல் தவித்து ஒரு சிறு அளவில்கூட யாதும் செய்ய முடியாமை. கடைசியாக (xv) அகங்காரம், கவனமின்மை, கூட்டுறவு முறையில் பற்றின்மை, அக்கறையின்மை முதலியன அங்கத்தினர்கட்குள்ள குணங்களும் நோக்கமுமாகும். மேலும் அங்கத்தினர்கட்குக் கூட்டுறவு முறையைப் போதிப்பவர் சரிவரத் திறமையுடனும் கட்டுப்பாட்டுடனும் புகட்டாமையாகும்.

8. **விவசாய மற்ற கடன் சங்கங்கள் :** மக்லெகன் (Maclagan) குழுவினர் விவசாயமற்ற கடன் சங்கங்கள் ஏற்பட வேண்டியதன் அவசியத்தைக் குறிப்பிடும்போது கூறியதாவது:[1] 'விலையேற்ற முள்ள நிலைமையினாலும், வசதியற்றதும் சுகாதார மற்றதுமான வீடுகளில் உள்ளதாலும், கூலி எக் காலமும் பாக்கியாக இருக்கும் போது கல்வி வளர்ச்சியின் காரணத்தால் வாழ்க்கைத் தரத்தை உயர்த்த வேண்டுமென்ற எண்ணம் உண்டாகிறது எனவே, தொழிலாளர்களுக்குப் பெரும் இடர்ப்பாடுகள் தோன்றிவிடக் கூடும். இவைகளைக் கூட்டுறவுச் சங்கங்களால்தான் சீராக்க முடியுமென்பது திண்ணம்.

கடனற்ற கூட்டுறவுச் சங்கங்கள் சுருக்கி வரையப்பட்டுள்ளன:

(i) **பொதுமக்கள் பாங்கு :** லூஸட்டீ முறையில் நகர்ப்புறச் சங்கங்கள் உள்ளன. இவை மத்தியதரக் குடும்பங்களுக்கான வசதியுள்ள நிறுவனமாக அமைந்துள்ளன. கூட்டுப்பங்குப் பாங்குகளுக்கு உதவியாகவும் பாங்குக்கொள்கை செயல் முறை இவைகளில் போதிய பயிற்சி கொடுக்கவும் இந்தச் சங்கங்கள் பயனுள்ளனவாக அமைந்துள்ளன. இம்மாதிரியான கூட்டுறவு நிறுவன பாங்குகள் சென்னை, பம்பாய் முதலிய நகரங்களிலும், அவற்றையடுத்துள்ள பெரிய பட்டணங்களிலும் மக்களுக்குப் பேருதவியளிப்பதென்பது அறிந்ததே. உள்ளூர் வர்த்தக முறையை ஊக்குவித்தும் சொற்ப வருமானமுள்ள கைவினைஞர்,

1. மக்லெகன் குழுவினரின் அறிக்கை, பத்தி 50.

இன்னும் ஏனைய துறைகளில் பணியாற்றுவோர்களுக்குப் பாங்கு வழக்கத்தைப் போதிக்கும் பொறுப்பு இவற்றினுடையதென்பதில் ஐயமில்லை.

(ii) **சிக்கன நிதிகளும், ஆயுள் இன்சூரன்ஸ் நிறுவனங்களும்:** நகரங்களில் உள்ள கூட்டுறவு நிறுவனங்களில் இவைகளும் முக்கியமானவை யெனலாம். மாதாமாதம் சேமிப்பு முறையில் பணம் பெற்று, இரண்டல்லது நான்காண்டுகளுக்குள் செம்மையான முதலீட்டிவிட்டு வைப்பாளர்களுக்குப் பயனுள்ள வகையில் வட்டியும் அசலுமாகத் திருப்பிக் கொடுப்பார்கள். ஆயுள் இன்சூரன்ஸ் நிறுவனங்களுக்குப் பங்கு மூலதனம் கிடையாது. அவர்கள் ஒரேமாதிரியானதும் ஒத்த நிலையுடனும் பணியாற்றுகின்றனர். சென்னையிலும் பம்பாயிலும் பலர் இத்துறையில் சீரிய முயற்சியுடன் முன்னேறினர். தி பாம்பே கோஆபரேடிவ் இன்சூரன்ஸ் சொஸைடியும், தி சௌத் இண்டியன் கோஆபரேடிவ் இன்சூரன்ஸ் சொஸைடியும் தக்க எடுத்துக்காட்டுகளாகும்.

(iii) **பெரிய நிறுவனங்களிலும், அரசினர் இலாக்காக்களிலும் பணியாற்றும் அலுவலர்களுக்கான கூட்டுறவு நிறுவனம்:**

பெரிய வர்த்தகக் கம்பெனிகளும், அரசினர் அலுவலகங்களிலுள்ளோர்களும் சிக்கன வாழ்க்கையைப் பழக்கம் செய்து கொள்ளவும், எளிய வட்டி விகிதத்தில் தேவையான கடன் வசதியைச் செய்து கொடுக்கவும் கூட்டுறவுச் சங்கங்கள் தோற்றுவிக்கப்பட்டன.

(iv) பிற்போக்கிலுள்ள சமுதாய நலனுக்காகச் சில கூட்டுறவுக் கடன் சங்கங்கள் உள்ளன. குறிப்பாகக் கைவினைஞர் கடன் சங்கங்கள் உண்டு. நெசவாளர், தச்சர், காலணிகள் செய்வோர், இவர்களுடைய நலனைக் கோரி இவை திறக்கப்பட்டுள்ளன. இந் நாடு முழுமையும் இம்மாதிரியான சங்கங்கள் திறக்கப்பட்டுள்ளன. பம்பாய் இராச்சியத்தில் கூட்டுறவுக் கைத்தறி நெசவாளர் சங்கங்கள் நன்கு பணியாற்றுகின்றன. தொழில் கொடுப்போரால் உபத்திரவங்கள் ஏற்படாவண்ணம் பாதுகாக்கத் தொழிற்சாலையில் உள்ள தொழிலாளர்களுக்கும் கூட்டுறவுச் சங்கங்கள் திறக்கப்பட்டுள்ளன. எளிய முறைகளில் சுலபத் தவணைகளில் கடன் கொடுத்தும், சிக்கன வழியைக் கடைப்பிடிக்கச் செய்தும், தங்கள் உறுப்பினர்களிடையே கல்வி வளர்ச்சியைப் பரப்புகின்றனர்.

1950-ல் விவசாயமற்ற கடன் சங்கங்கள் 7.534-ம் அவற்றில் 20·7 இலட்சம் உறுப்பினர்களும், ரூ. 51·6 கோடி மூலதனமும் பெற்றிருந்தனர்.

**9. விவசாயக் கடனற்ற சங்கங்கள் :** கடனற்ற கூட்டுறவுச் சங்கங்களை விவசாயச் சங்கங்களாகவும் விவசாயமல்லாதவை களாகவும் பிரிக்கலாம். இவைகளை இன்னும் பலவகைகளாகப் பிரிக்கலாம். அவையாவன : மூலப் பொருள் கொள்முதல், விவசாயக் கருவிக் கொள் முதல், விளைச்சலை விற்பனை செய்தல், ஆக்கம், வழங்குதல், நுகர்வு, இன்சூரன்ஸ், வீட்டு வசதிச் சங்கங்கள் எனலாம். கடனற்ற விவசாயச் சங்கங்களைப் பற்றிய வெகு நீளமான பட்டியல் ஒன்றைக் கொடுக்கலாம். விவசாயி யினுடைய பல்வேறு தேவைகளை யனுசரித்துப் பாகுபாடு செய்ய லாம். எடுத்துக்காட்டாக விவசாயக் கருவிகள் வாங்குவதற்கென ஒரு நிறுவனமும் உரம், முதல் தரமான விதைகள், கால்நடை களுக்கான இன்சூரன்ஸ் மற்றும் பண்ணைக் கட்டடங்கள், வைக்கோல் போர், களஞ்சியங்கள் இவைகளுக்கான இன்சூரன்ஸ் அமைப்புகளைக் கூட்டுறவு முறையில் அமைக்கலாம். மேலே கூறியவைகளில் சில கூட்டுறவு நிறுவனங்கள் தற் போதுள்ள நிலைமையில் வெகு விரைவில் துவக்கப்பட வேண்டியது இன்றியமையாதது. இன்னும் சில நிறுவனங்களை நடத்துவதில் சில இடர்ப்பாடுகள் உள எனலாம். கால்நடை இன்சூரன்ஸ் விவசாயிக்கு ஏற்படும் எதிர்பாராத சிரமத்தைப் போக்கக்கூடும். ஆயினும், இந் நாட்டில் கால்நடைகளுக்கு ஏற்படும் மாபெரும் நோய்களை நீக்கத்தகு மருத்துவ முறைகளும் அவைகளை அடக்கி ஒடுக்கும் தன்மையும் இன்னும் காணப்பட வில்லை. ஆதலால், இக் குறிக்கோளுடன் ஆரம்பிக்கப்பட்ட நிறுவனங்கள் எதிர்பாராத கால்நடைச் சாவுகளை அனுசரித்துக் காப்புப் பணமாகக் கொடுக்கப் போதிய நிதியற்று வெகு குறைந்த காலத்தில் மூடப்பட்டு வருகின்றன. அதேபோன்று கால்நடை வளர்ச்சி நிறுவனங்களும் போதிய தீவன வசதியின்மையால் சீரிய முறையில் கால்நடை வளர்ப்புக்குத் தேவையுள்ள அளவு உதவி புரிய இயலாத நிலைமையில் உள்ளன. நிலத்திற்கு வேலியிடல், பயிர்காத்தல் மற்றும் நீர்ப்பாசனம் இம்முறைகளைக் கூட்டுறவு நிறுவனத்தின் கீழ் அமைத்து ஓரளவு வெற்றி கண்டி ருக்கிறார்கள்.

**முன் அதிகாரத்தில் நில உடைமையைப்பற்றிக் குறிப்பிடும் போது கூட்டுறவு முறையின்கீழ் நிலங்களை ஒன்றுபடுத்திச் செயல் புரிவதைப்பற்றி விளக்கியுள்ளோம்.**

துய்ப்போர் அல்லது நுகர்வாளர் கூட்டுறவுச் சங்கங்கள் கிராமப் பகுதிகளில் அதிகமாக முன்னேற்றம் அடைந்ததாகத் தெரியவில்லை. இதன் அடிப்படையை ஆராய்ந்து நோக்கின், கிராமவாழ் மக்களின் தேவைகள் மிகவும் அற்பமானவையே. அத் தேவைகளை எளிதில் கிராமப்புறச் சந்தைகளிலேயே பெற்றுக் கொள்கிறார்கள். கிராமப்புறங்களில் உள்ள விவசாய அடிப்படைக் கடன் சங்கங்கள் அவ்வப் பகுதிக்கு வேண்டிய பண்டக சாலைத் தொழிலை மேற்கொள்ளலாம். அவ்வாறு மேற்கொள்ளின் பண்டக சாலைப் பகுதியைக் கூட்டுறவுச் சங்கத்தினின்று பிறிதாக நடத்துவது வேண்டற்பாலது எனலாம். பண்டக் கொள்முதலுக்காக வேண்டிய பண உதவியைக் கூட்டுறவு மத்திய பாங்கினின்று பெறலாம்.[1]

விவசாயம் சம்பந்தப்பட்ட தகவல்களை அரசினர் இலாக்காக்கள் பிரசாரம் செய்வதற்குக் கூட்டுறவுச் சங்கங்களே மிகவும் பொருத்தமானவை. அரசினர் இலாக்காக்களின் மூலமாகப் பாமரமக்கட்கும் பொதுமக்கட்கும் வல்லுநரைக் கொண்டு, போதனை செய்வது எளிதான செயல் அன்று. ஆயினும், கூட்டுறவு நிறுவனங்கள் மூலம் அல்லது கிராமப் பஞ்சாயத்துகளின் மூலம் வல்லுநரை வரவழைத்துத் தொழில் நுட்பம் சம்பந்தமான விளக்கங்களைக் கொடுக்கச் செய்ய முடியும். சென்னையிலும் பஞ்சாபிலும் செம்மையான விவசாயச் சங்கங்கள் இத்துறையில் வெகுவாக முன்னேற்றம் கண்டுள்ளன. செம்மாந்த வாழ்க்கைச் சங்கங்களும் உள்ளன என்றால் மிகையாகாது. இம்மாதிரியான சங்கங்கள் முதன் முதலாகப் பஞ்சாபில் உருவாயின. மணச் சடங்குகளிலும் மற்றும் இதர சமுதாயக் கூட்டங்களிலும் வீணான செலவுகளைச் செய்யாதிருக்கவே இவைகள் தோன்றின எனலாம். பொது நலத்தை அனுசரித்து, கிணறு வெட்டுதல், குளத்தைச் செப்பனிடல், சாலைகள் அமைத்தல், மருத்துவ விடுதிகளும், பள்ளிக்கூடங்களும் திறத்தல், கிராமச் சுகாதாரத்தை மேம்பாடு அடையும்படி செய்தல், உயர்தரவித்து, வளர்ச்சிபெற்ற கால்நடை, சீரிய விவசாய முறைகள் இவைகளை மேற்கொள்ளுதல் தலையாய கடன் என இக் கூட்டுறவு நிறுவனங்கள் முடிவு செய்துள்ளன.

பம்பாய், சென்னை, உத்தரப் பிரதேசம் இவைகளில் உணவு உற்பத்திப் பிரசாரத்தின்போது கூட்டுறவுச் சங்கங்கள் வெகுவாகப் பணியாற்றியுள்ளன. பம்பாய் அரசினரின் முயற்சியால் அநேக கூட்டுறவுப் பண்ணைச் சங்கங்கள் தோற்றுவிக்கப்பட்டன. இச்

1. சரையா குழுவினரின் அறிக்கை, பக்கம். 105.

சங்கங்கள் அரசாங்கத்திடமிருந்து தொழில் நுட்ப உதவியாளர்களையும், முதலாண்டில் வரி தள்ளுபடியையும், விதை, உரம், கருவிகள் ஆகியவை வாங்கப் பொருளுதவியையும் பெற்றிருக்கின்றன. 1949-'50-ல் 12 ஆயிரம் ஏக்கர் பரப்புள்ள நிலங்களும் 2,700 உறுப்பினர்களும் கொண்ட 79 சங்கங்கள் இருந்தன.

1949-ல் அரசினர் எல்லாக் கூட்டுறவுச் சங்கங்களுக்கும் நீர் இறைக்கும் முறைப் பாசனத்தைக் (lift irrigation) கையாளுபவர்களுக்குக் கடன், மற்றும் மான்யம் முதலியவைகளை வழங்கி வந்தனர். 1950-ல் 114 நீர்ப்பாசன சங்கங்கள் இருந்தன.

**10. விவசாய மற்ற கடனற்ற சங்கங்கள் :** விவசாயத் துறையிலன்றி இதர துறைகளிலும் கூட்டுறவு முறை வளர்ச்சி பெற்று இருக்கிறது. இச் சங்கங்கள் வெறும் கடன் வசதி அளிப்பவை அல்ல. அவைகளைப் பற்றி இங்கு விவரிப்போம்:

**(i) கைவினைஞர்களின் கொள்முதல் விற்பனைச் சங்கங்கள் :** கடன் வசதி அளிக்கமட்டும் கூட்டுறவுச் சங்கங்கள் நிறுவப்படவில்லை. இதர துறைகளிலும் இவை பயன்படுகின்றன. கிராமக் கைத்தறி நெசவு முறையிலும் இது மிகவும் பயன்படுகிறது. ஆக்கப்பொருள்களைக் குறைந்த விலையில் கொள்முதல் செய்தும் கைத்தறிக்கு வேண்டிய இதர கருவிகளையும் லாபகரமான விலையில் வாங்கவும் நெசவு செய்யப்பட்ட துணிகளைச் சீரிய முறையில் விற்பனை செய்யவும் இச் சங்கங்கள் பேருதவி புரிகின்றன. பல்வேறு ராச்சியங்களிலும் பல கூட்டுறவு நிறுவனங்கள் இத் தொழிலுக்காக வேலை செய்து வருகின்றன. காலணிகள் செய்வோர், பொற்கொல்லர், இதர வகையான கைவினைஞர்கள், மட்பாண்டங்கள் செய்வோர், தச்சுவேலை செய்பவர் இவர்களுடைய நலனைக் கோரியும் கூட்டுறவு நிறுவனங்கள் பல்வேறு பகுதிகளிலும் நிறுவப்பட்டுள்ளன எனலாம்.

**(ii) பயிற்சியற்ற தொழிலாளர்களின் கூட்டுறவு நிறுவனங்கள் :** தொழில் முதிர்ச்சியற்ற பலர் ஒன்று சேர்ந்து ஒரு கூட்டுறவு நிறுவனத்தை நிறுவியுள்ளனர். குறிப்பாகச் சென்னை அரசாங்கத்தில் இது மிகவும் முன்னேற்றத்தைக் கண்டுள்ளது. பாதைகள் அமைப்பதிலும், மண் வெட்டுதல், பள்ளம் தோண்டுதல் இவைகள் போன்ற பெரும்பணிகளில் இவர்கள் ஈடுபட்டுள்ளனர். தனிப்பட்ட தரகர்களால் போட்டி ஏற்பட்டும்கூட இம்மாதிரி நிறுவனங்கள் வெகுவாக முன்னேற்றம் அடைந்துள்ளன எனலாம்.

**(iii) நகர்ப்புறங்களில் உள்ள துப்பேரவின் சங்கங்கள் :** அரசினர் பங்கீட்டு முறையைக் கையாள நேரிட்டபொழுது அவர்

களுக்குப் பேருதவியாகவும் உறுதுணையாகவும் நின்று வந்தது. நகரத்தில் உள்ள நுகர்வோரின் கூட்டுறவுச் சங்கங்களே எனலாம். இவ்வாறு செயலாற்றுவதில் இறங்கியவைகள் நிதிவன்மை பெற்று, மேன்மேலும் வர்த்தகத்தைப் பன்மடங்காகப் பெருக்க முயன்று வருகின்றன. கட்டுப்பாடுகள் நீக்கமடைந்தன. இவற்றின் பின்விளைவாக இச் சங்கங்கள் சற்றுத் தடுமாற்றமான நிலையை அடையும் என்பதில் ஐயமில்லை. எனினும் தனிப்பட்ட முயற்சிகளைக் கொண்டுதான் இவைகளைத் திடப்படுத்தவேண்டும். இம்மாதிரியான நிறுவனங்கள் வெற்றியின்றிப் பயனற்ற நிலையில் நடத்தப்பட்டு முடிவில் மூடப்படுகின்றன. அவற்றிற்கான காரணங்கள் வருமாறு: இச் சங்கங்களை நடத்துவோருக்குப் போதிய வர்த்தக நுட்பப் பயிற்சியின்மை, அனுபவமின்மை, துய்ப்போருடைய தேவைகளுக்குரிய பண்டங்களை இன்னவென்று கவனியாதிருத்தல், கடன் முறையில் வர்த்தக முறையை நடத்தல், தவறான இருப்புக் கணக்குவைத்தல், கணக்கிலுள்ள கோளாறுகள், மனசாட்சியின்றிப் பணியாற்றல் மிதமிஞ்சிய அடக்கச் செலவு, வசூலிக்கவியலாக் கடன்கள் உண்டாதல் மற்றும் கவுரவ உழைப்பினைக் கோரல் ஆகியவைகளாகும். நகரங்களில் இம்மாதிரியான தவறுகளால் அநேக சங்கங்கள் வீணாகிவிட்டன. கிராமப் புறங்களில் இவை ஏற்படாதிருப்பதன் காரணத்தைப்பற்றி முன்பே விளக்கியுள்ளோம்.

(iv) **வீட்டு வசதி நிறுவனங்கள் :** யுத்தத்தின் பிற்காலத்தில் ஏற்பட்ட புதியதொரு முறையான சங்கம் வீட்டு வசதி நிறுவனமாகும். இரண்டாம் உலகப் போரினை அடுத்துப் பல்வேறு இராச்சியங்களில் வெகுதுரிதமாக வீடுகள் கட்டப்பட்டன. வீடு கட்டவேண்டிய பொருள்கள் கிடைக்காத காரணத்தாலும் மலிவான விலையில் காலியிடங்கள் கிடைக்காததாலும் மூலதனம் இன்மையாலும் இச் சங்கங்களின் முன்னேற்றம் வெகுவாகத் தடைப்பட்டது எனலாம். இவைகளை ஊக்கப்படுத்தும் நோக்கத்துடன் அரசினர் மான்யங்கள் கொடுத்தும், எளிய வட்டி விகிதத்தில் கடன் கொடுத்தும் இவைகளுக்குச் சலுகைகள் அளித்து வருவதனால் இவைகள் வளர்ச்சி பெற்றுள்ளன. சர்க்கார் இம்முறைகளை நீடித்தாலன்றி இச் சங்கங்கள் முன்னேற்றம் அடையா.

(v) **கூட்டுறவுப் பால் வழங்கு முறை :** சென்னை, மேற்கு வங்காளம், உத்தரப் பிரதேசம் ஆகிய ராச்சியங்களில் கடந்த சில ஆண்டுகளாகப் பால் வழங்கு திட்டம் கூட்டுறவு முறையின்கீழ் நடத்தப்பட்டு வருகின்றது. பம்பாய் நகரத்திற்குப் பால் வழங்கு முறையைத் திட்டப்படுத்த அரசினர் ஆரேயில் தனிப்பட்ட பால்

நிலையத்தை நிறுவி, செம்மையான முறையில் மேம்பாடடைந்த சுகாதார வழிகளில் பாலைச் சேகரித்து, சீரிய முறையில் வழங்கி வருகிறார்கள். இந் நாட்டில் இது ஒரு மேம்பாடடைந்த முயற்சி எனலாம். இந் நிலையம் பம்பாயிலிருந்து ஒரு சில மைல்களுக்கு அப்பால் அமைந்துள்ளது. இச் சங்கம் (அ) அதனுல் வாடகைக்கு விடப்பட்ட தொழுவங்களிலிருந்து பாலைப் பெறுகிறது. (ஆ) பம்பாய் இராச்சியத்து 19 கூட்டுறவுச் சங்கங்களிலிருந்து பாலைப் பெறுகின்றது. (இ) ஆனந்தில் உள்ள கூட்டுறவுப் பால் பண்ணையிலிருந்தும் பாலைப் பெறுகிறது. எனவே பம்பாய் நகரத்தின் பாதிக்கு மேற்பட்ட பாலின் தேவையை ஆரே பால்நிலையமே அளிக்கிறது எனலாம்.[1]

(vi) **தொழில் கூட்டுறவு நிறுவனம்:** 1952ஆம் ஆண்டு ஜூன் மீ முடிவு வரையில் கிட்டத்தட்ட 8,000 கூட்டுறவுத் தொழில் நிறுவனங்கள் இருந்தன. அவைகளின் மொத்த உறுப்பினர்கள் தொகை 8.8 லட்சம். இவைகளில் 5,364 நிறுவனங்கள் நெசவாளர் சங்கங்களே. இவைகளின் மொத்த உறுப்பினர்கள் தொகை 7·2 லட்சம். நசவாளர் கூட்டுறவுச் சங்கங்கள் அதிகப்படி எண்ணிக்கையில் உருவான இராச்சியங்கள் சென்னை, மேற்கு வங்காளம், உத்திரப்பிரதேசம், பம்பாய் ஆகியவைகள். இவைகளில் எதிர்பார்த்த அளவிற்கு மேல் முன்னேற்ற மடைந்தவை சென்னையும் பம்பாய் ராச்சியமுமே. இவற்றையடுத்து மேற்கு வங்காளம், உத்திரப் பிரதேசம், மத்தியப் பிரதேசம், பிகார், ஒரிஸ்ஸா, இராஜஸ்தான், ஐதராபாத், திருவாங்கூர்-கொச்சி இவைகள் முன்னேறி வருகின்றன. இதர பகுதிகள் அவ்வளவாக முன்னேற்ற மடையவில்லை என்று திட்டமாகக் கூறலாம். அடிப்படைக் கூட்டுறவு நிறுவனங்கள் தங்கள் உறுப்பினர்களுக்கு ஆக்கப் பொருள்களையும் கருவிகளையும் வாங்கி உதவுகின்றன. மாவட்டச் சங்கங்கள் (சங்கங்களின் கூட்டமைப்பு) இவர்களுடைய நெசவுப் பொருள்களை விற்பனைசெய்ய முன்வருகின்றன. இதன் உறுப்பினர்கள் விற்பனைச் சங்கங்கள் மூலம் விற்க முன்வருவதில்லை.

சென்னை, பம்பாய், சௌராஷ்டிரம், மேற்கு வங்காளம், பஞ்சாப் இவைகளில் தோல் பதனிடுவோர் சங்கங்களும், தோல் வேலைத்திறன் சங்கங்களும் கூட்டுறவு முறையில் அமைக்கப்

1. ஆரே பால் நிறுவனம் அரசாங்கத்தாரால் நடத்தப்படுகிறது. அதைப் பற்றிய குறிப்பு இங்கே மன்னிக்கப்படுதல் வேண்டும். கூட்டுறவு நிறுவனங்களிலிருந்து பெரும்பகுதியான அளவு பால் கொள்முதலைச் செய்கிறது என்ற முறையில் இங்கு மேற்கோளாகக் காட்டப்பட்டது.

பட்டுள்ளன. பீகாரில் நுகர்வுப்பொருள் கூட்டுறவுச் சங்கங்கள் வெகுவாக முன்னேறியுள்ளன. 1952ஆம் ஆண்டு ஜூன் மீ 30ஆம் உ வரையில் 64 நிறுவனங்கள் தோன்றியுள்ளன. சௌராஷ்டிராவிலும் ஒரிஸ்ஸாவிலும் சில உப்பு உற்பத்தியாளர்கள் நிறுவனங்களும் கூட்டுறவு முறையில் அமைக்கப்பட்டுள்ளன. பம்பாயில் சற்றேறக்குறைய 769 தொழில் கூட்டுறவுச் சங்கங்கள் உள்ளன. (கைத்தறி நெசவுச்சங்கங்கள் நீங்கலாக) இவைகளின் மொத்த உறுப்பினர்கள் சுமார் 55,000 என்று 1952ஆம் ஆண்டு ஜூன் மீ முடிவு வரையில் கணக்கிட்டனர்.[1]

**11. தனிப்பட்ட கூட்டுறவுச் சங்கங்களும் பல்வகைப் பணியாற்றும் கூட்டுறவுச் சங்கங்களும் ஒப்புதல்:** தனிப்பட்ட கூட்டுறவுச் சங்கங்கள் நன்மையுள்ளனவா அல்லது பல்வகை வசதி கொடுக்கும் சங்கங்கள் நன்மையுள்ளவையா என்பதைப்பற்றிய கொள்கையடிப்படையில் எண்ண வேறுபாடுகள் தோன்றியுள்ளன.[2] மேலான நோக்கங்களுடன் ஆரம்ப காலத்தில் கூட்டுறவுமுறை இந்நாட்டில் உருவாகியது. அப்போது அது மிகவும் சாதாரண அடிப்படைக் கொள்கையில் தோன்றியது. வரவரக் கூட்டுறவின் அடிப்படையை விஸ்தரிக்க வேண்டும் எனப் பெரும்பாலான மக்கள் கருதி வருகின்றனர். ஒரு கிராமக் கூட்டுறவுச் சங்கம் கிராமத்தின் பெரும்பாலான தேவைகளை உறுப்பினரின் நலனுக்காகவேண்டி அமைத்தல் இன்றியமையாததெனலாம். கிராம மக்களின் தேவைகள்

1. *ஆல் இண்டியா ரூரல் க்ரெடிட் சர்வே ரிப்போர்ட், பக். 119.*

2. *ஒவ்வொரு கூட்டுறவுச் சங்கத்தின் நன்மைகளும் தீமைகளும் உள்ளூர் நிலைமையை ஒட்டி முடிவாக்கப்படுகின்றன. ஒரு வகைக் கூட்டுறவுச் சங்கத்தினால் வெகு சுலபமான முறையில் கணக்கு வைத்துக்கொள்ளவும் எளிதில் புரிந்துகொள்ளவும் முடியும். ஒரு வர்த்தகத்துறையில் ஆதாயம் பெற்ற காரணத்தால் மற்றொன்றில் சிரமம் தோன்றாது. நிருவாகத்தின் பொறுப்புகள் மிகவும் குறைவாக இருக்கும். கொள்கைகள் சம்பந்தமாகச் சம்பளம் பெறும் சிப்பந்திகளை எதிர்நோக்கியிருக்க வேண்டிய அவசியமில்லை. ஒரே ஒரு வர்த்தக முறையை அனுசரித்து உறுப்பினரின் எண்ணிக்கை, சங்கத்தின் விஸ்தாரம், அமைப்பு இவைகளைக் கவனிக்கலாம். பல்வகைத் துறைப் பணியாற்றுச் சங்கங்கள் தாமாகவே இயற்கையில் தோன்றி முன் வந்துள்ளன. பண்டைக்காலக் கிராமக் கடைகள் செய்துவந்த பல்வேறு பணிகளையும், தாமாகவே முன்வந்து கடன் உதவியளித்த பண்டைக்கால வர்த்தகர்களைப்போலவும், சில முற்போக்கான விவசாயிகள் பல்வகைத் தனிப்பட்ட கூட்டுறவுச் சங்கங்கள் அமைத்து, அவற்றில் தலைமை தாங்கும் நிலை ஒரு சிலரின் கையில் அமைந்த காரணத்தாலும் பல்வகைப்பட்ட வசதியமைந்த கூட்டுறவுச் சங்கங்களாக அமையலாம். பல்வகைப்பட்ட வசதியமைந்த சங்கங்களுக்குக்கூட குறைந்த அளவில் கட்டடம், போக்குவரத்து, பணியாளர் இவர்களுக்கான செலவுகள் தனிப்பட்ட சங்கங்களை விட நன்றாக அமையக்கூடும். அனுபவ வாயிலாகவும் 'உயரிய வர்த்தகம்' என்ற படிப்பினையின் மூலமாகவும் ஒரு சிறிய சங்கம்கூட முன்னேறி, பின்னர் பல்வகைச் சங்கமாக மாறியமையக்கூடும். அல்லது பல்வகைப் பணிகளைச் சீரிய முறையில் செய்யத் தனிச் சங்கமாகவும் அமைக்கலாம். ஒரே சங்கம்கூடத் தன் தொழிலை விஸ்தரித்துப் பலவகை வசதியுள்ள சங்கமாக மாறலாம்.*

*—ரூரல் ப்ரோக்ரஸ் த்ரு கோஆபரேஷன் (யுனைடெட் நேஷன்ஸ்) பக். 17.*

அனைத்தும் பொருளாதார, சமூக சம்பந்தப்பட்டவை யென்பது நாம் அறிந்ததே. இவை ஒன்றுக்கொன்று தொடர் புடையவை. 1937-ல் ரிஸர்வ் பாங்கு விடுத்த அறிக்கையில் கிராமப் பாங்கினைத் தோற்றுவிக்கக் கிராமங்களில் ஆரம்ப அடிப்படைக் கூட்டுறவுச் சங்கங்கள் நிறுவப்பட வேண்டுமென்றும், இதனால் கிராம விவசாயியைப் பல வழிகளிலும் அதில் முக்கியப் பங்கு கொள்ளச் செய்வதோடு, அவனது வாழ்க்கைக்குத் தேவையான வற்றைப் பெறப் பயன்படுத்தலாம் என்றும் கூறியது. விவசாயக் கூட்டுறவுக் கடன் சங்கங்கள் பணத்தின் மதிப்பு, அதன் உபயோகம் இவைகளைப் போதிப்பதோடல்லாது கடனைக் கட்டுப் படுத்தவும் செய்கின்றன. விற்பனை, வழங்கு முறை இவைகளி னின்றும் கடன் வசதி நீக்கம் பெற்றால் நடைமுறையில் அநேக இடர்கள் தோன்றுகின்றன. இதனால் பலவகைப்பட்ட பணி யாற்றும் கூட்டுறவுச் சங்கங்களை மக்கள் விரும்புகின்றனர். அனுபவம் வாய்ந்த கூட்டுறவுக் கொள்கையினர் இதற்குப் போதிய உழைப்புத் தந்து பலவகைப்பட்ட வசதியுள்ள கூட்டுறவுச் சங்கங் களை நிறுவியுள்ளனர். பலவகைப்பட்ட வசதியுள்ள கூட்டுறவுச் சங்கங்கள் அடிப்படைச் சங்கங்களின் அறிவு, உழைப்பு, மூலதனம் இவற்றை விஞ்சியவை எனலாம். ரிவ்யூ ஆப் தி கோ ஆப்ரேடிவ் மூவ்மெண்ட் (Review of the Co-operative Movement) கூட்டுறவு இயக்கத்தினைப் பற்றிய ஒரு விசாரணை என்றுள்ள நூலின் ஒரு பகுதியிலிருந்து கீழ்க்கண்ட விவரம் கொடுக்கப்பட்டுள்ளது:

'நடப்புத் தேவைகளைப் பெறக் கடன் வசதியளித்து, இதன் நிமித்தம் சேர்ந்துள்ள பழைய கடனைப் போக்கித் தீர்வுகாண நில அடைமான பாங்கியின் மூலம் ஏற்பாடு செய்கிறது. உறுப்பினர் களுக்குப் பயனுள்ள முறையிலும் லாபம் பயக்கவல்லதாக அமைய அவர்களைத் தங்களுடைய அறுவடைப் பொருள்களைக் கூட்டுறவுச் சங்கத்தின் மூலம் விற்கும்படி ஊக்குவித்தும், நல்ல தேறிய விதை களைச் சலுகை விலையில் மொத்தமாக வாங்கி உறுப்பினர்-விவசாயி களுக்குக் கொடுத்தும், தேவைப் பட்டியல் மூலம் (indent system)[1] நுகர்வுப் பொருள்களைக் கொள்முதல் செய்தும் விற்பனை செய் தும் நீதிமன்றங்களில் வழக்கு, தாவா ஆகியவை யின்றி மத்தியஸ் தம் (நடுவர்) மூலம் வழக்குகளைத் தீர்த்துவைத்தும் அதிக விரய மின்றி உயர்ந்த விவசாயக் கருவிகளையும் விதைகளையும் அளித்தும், உப தொழில்களைத் தொடங்கி, அதில் உறுப்பினர் களைப் பங்கெடுக்கும்படி செய்தும், மிதமிஞ்சிய சமுதாயச் சடங்கிற்

1. ரிஸர்வு பாங்கு 1940-41 அறிக்கை

கான செலவுகளைக் குறைக்கும்படி ஏற்பாடு செய்தும், சுகாதார மற்ற முறைகளை நீக்க விழைந்தும், பொது நன்மைக்கான சட்ட திட்டங்களை அமைத்தும் வருவதோடல்லாது மருத்துவ இல்லங்களை அமைத்து அனைவருக்கும் மருத்துவ உதவி அளிக்கும்படி பாடுபட்டு வருவதும் 'பலமுக உதவிக் கூட்டுறவுச் சங்கம்' எனலாம். இன்னும் பல்வேறு வகையில் பணியாற்றி வருகின்றது. கடந்த 15 ஆண்டுகளாகப் பலவகை வசதி அளிக்கும் கூட்டுறவுச் சங்கங்கள் அதிக எண்ணிக்கையில் தோற்றுவிக்கப்பட்டு வருகின்றன பம்பாய், உத்தரப் பிரதேசம், மத்தியப் பிரதேசம் ஆகிய இடங்களில் இவை தோன்றியுள்ளன. சென்னையிலும் மற்றும் இதர ராச்சியங்களிலும் உள்ள அடிப்படைச் சங்கங்களைப் பல்வகை வசதியுள்ள கூட்டுறவுச் சங்கங்களாக மாற்றியமைத்துள்ளனர். இன்னும் சில ராச்சியங்களில் கிராமங்களை ஒரு கூட்டாக அமைத்து, அவைகளுக்கான கூட்டுறவுச் சங்கங்களை அமைக்கத் திட்டம் வகுத்துள்ளனர். இச் சங்கங்கள் அனைத்தும் கடனற்ற வர்த்தகப் பணியை மேற்கொள்ளுகின்றன. சில பல்வகை வசதிக் கூட்டுறவு நிறுவனங்கள் எல்லையற்ற பொறுப்பினை ஒப்புக் கொண்டுள்ளன. இன்னும் பல நிறுவனங்கள் பொறுப்பினை மிகவும் சுருங்கிய அளவில் ஒப்புக் கொண்டுள்ளன. அனுபவத்தின் பேரில் நாமறிந்துள்ளது என்னவெனில் இந்தப் பல்வகை வசதிக் கூட்டுறவுச் சங்கங்கள் கூட்டுறவு இயக்கத்தின் அடிப்படையினின்று வழுவாது நடைபெற்று வருகின்றன.

1951-52-ல் பல்வகைக் கூட்டுறவுச் சங்கங்கள் 39,930 ஆக இருந்தன; அவற்றில் 24,302 மட்டும் உத்தரப் பிரதேசத்தில் உருவாயின. அடிப்படைக் கூட்டுறவுச் சங்கங்களின் பணிகளுடன் ஒன்றிரண்டு வேலைகள் சேர்ப்பின் அந்த அடிப்படைச் சங்கம் பலவகை வசதிக் கூட்டுறவுச் சங்கமாக மாறும். யுத்த காலத்தில் இந்த அடிபடைச் சங்கங்கள் நாட்டின் அவசர நிலையை அனுசரித்து உணவு உடை இவைகளை வழங்கும் பொறுப்பினையேற்றுக் கொண்ட காரணத்தால் இவைகள் பலவகை வசதிச் சங்கங்களாக மாறின எனலாம். இன்னும் அவசியமான சில பொருள்களையும் அந்தச் சங்கங்கள் வாங்கி விற்றன; அரசினர்க்குப் பதிலாள் போன்று இவ்வழங்கு துறையில் ஈடுபட்டன. தனியாரை விடக் கூட்டுறவு நிறுவனங்களே மேல் என அரசினர் கண்டு கொண்டனர்.

**12. மத்திய சங்கங்கள்:** இதுகாறும் நாம் அடிப்படைச் சங்கங்களைப் பற்றி விவரித்துள்ளோம். இனிக் கூட்டுறவு மத்திய சங்கங்களைப் பற்றியும் உயர்தரக் கூட்டுறவு நிறுவனங்களைப் பற்றியும்

இங்கு விளக்கம் செய்வோம். இந்திய நாட்டிலுள்ள எல்லா ராச்சியங்களிலும் கூட்டுறவு மத்திய நிறுவனங்கள் உள்ளன. அவைகள் (அ) உத்தரவாதம் செய்யும் கூட்டுச் சங்கமாகவோ (ஆ) நிருவாகம் புரியும் நிறுவனமாகவோ (இ) பாங்கு நிறுவனமாகவோ இருக்கலாம். கூட்டுச் சங்கமெனப்படுவது ரெவின்யு வட்டாரத்தினும் சிறிதான பரப்பில் தோன்றியுள்ள கூட்டுறவுச் சங்கங்களின் அமைப்பு எனலாம். கூட்டுச் சங்கத்தின் கையில் நிருவாகம் ஒப்படைக்கப்பட்டுள்ளது. இதற்கென ஒரு நிருவாகக் குழு தேர்ந்தெடுக்கப்படுகின்றது. வட்டாரத்திலுள்ள எல்லாக் கூட்டுறவுச் சங்கத்தினரும் இதில் உறுப்பினர் ஆவார். நிர்வாகத்தை ஒழுங்காக நடத்தச் சம்பள விகிதத்தில் செயலர் ஒருவரை நியமிக்கின்றனர். உறுப்பினர் சங்கங்களின் பணியைக் கண்காணித்தும் ஆய்வு செய்யவும் ஓர் உப குழுவினை நியமனம் செய்துள்ளது. உத்தரவாதம் தரும் மத்திய சங்கமாக இருப்பின் உறுப்பினர் சங்கங்கள் எவ்வளவு வெளிக்கடன் உதவி பெறலாம் என்று முடிவு செய்து கூட்டுறவு மத்திய பாங்கிற்குக் கடன் கொடுக்க உத்தரவாதம் அளிக்கிறது. உத்தரவாத சங்கங்கள் பம்பாயில் மாதிரியாக அமைக்கப்பட்டன. ஆயினும் அவை வெற்றியுடன் வேலை செய்யவில்லை. எனவே உத்தரவாத சங்கங்கள் கைவிடப்பட்டு, கண்காணிப்புச் சங்கங்களாக நிறுவப்பட்டன. ஒவ்வொரு இராச்சியத்திலும் கண்காணிப்பு வேலையை வெவ்வேறு நிறுவனங்கள் எடுத்து நடத்தி வருகின்றன. சில காலம் வரை இது கூட்டுறவு இலாக்காவின் பணியாக இருந்துவந்தது. இன்னும் சில பகுதிகளில் கண்காணிப்புச் சங்கங்களும், மாவட்டக் கண்காணிப்பு போர்டுகளும், வட்டாரச் சங்கங்கள், இராச்சிய அல்லது மாகாணக் கூட்டுறவு நிறுவனங்கள், மத்திய பணவசதியளிக்கும் பாங்குகள் மற்றும் பல்வேறு வகைப்பட்ட அமைப்புகள் உள்ளன. இவைகளின் கண்காணிப்பு முறை சீரியமுறையில் இல்லை என்ற குற்றச்சாட்டு எழுந்துள்ளது. மேலும், இவர்கள் மேலெழுந்த வாரியாகக் கண்காணிப்புச் செய்கின்றனர் என்றும் செய்ததையே திரும்பத் திரும்பச் செய்ய முற்படுகிறுர்கள் என்றும் புகார்செய்யப்படுகிறது.

**13. மத்திய கூட்டுறவு பாங்குகள்:** மத்தியக் கூட்டுறவு பாங்குகள் நகரங்களிலுள்ள பெரிய பணச்சந்தைகளுக்கும் கிராம நிறுவனங்களுக்கும் ஒரு தொடர்பு எனக் கொள்ளலாம். தத்தம் வட்டாரத்திலுள்ள கிராமக் கூட்டுறவு நிறுவனங்களின் பற்றுக்குறை அல்லது உபரி மூலதனத்தை ஒன்றுக் கொன்று சீரமைத்துக் கொடுக்க இந்த மத்திய பாங்கு பயனுள்ளதாக அமைந்துள்ளது. அதிகப்படியான மூலதனம் வேண்டுமானுல் இந்த அடிப்படைச் சங்கங்கள் மத்திய பாங்கினுல் உதவியளிக்கப்படுகின்றன. மத்திய

பாங்கு இதற்கான பணவசதியைப் பணச் சந்தையினின்று பெறுகின்றது. சில சமயங்களில் மத்திய பாங்குகள் தங்களுடைய பங்குதாரர்களான கூட்டுறவுச் சங்கங்களை நிருவகிக்கவும் மாற்றியமைக்கவும் கண்காணிக்கவும் பாடுபடக் கூடும். பொதுவாக நிதிவசதியளிக்கும் நிறுவனங்களாகவே பணியாற்றி வருகின்றன. மத்திய பாங்குகள் இயல்பாகப் பாங்குத் தொழிலைச் செய்து வருகின்றன இவை வங்காளம், பீகார், ஒரிஸ்ஸா முதலிய இராச்சியங்களில் ஒவ்வொரு தாலுக்காவிலும் பணியாற்றி வருகின்றன. இதர இராச்சியங்களான மதராஸ், பம்பாய், மத்தியப் பிரதேசம் இவைகளில் ஒரு மாவட்டம் வரையிலுள்ள எல்லைக்குள் பணியாற்றி வருகின்றன.

மத்திய பாங்குகள் இரண்டு வகைப்படும். அவையாவன: தனிப்பட்டவைகளும் பல்வேறு வகைப் பணியாற்றுபவைகளும், பல்வேறு வகைப் பணியாற்றுபவைகளில் தனி ஆட்களும், கூட்டுறவுச் சங்கங்களும் உறுப்பினராக இருப்பார்கள். தனிப்பட்ட வகைகளில் சங்கங்கள் மட்டிலுமே உறுப்பினராக உள்ளன. தனிப்பட்ட வகையைக் காட்டிலும் பல்வேறு வகைப் பணியாற்றுபவைகளில் தனி வர்த்தகர்கள், நடுத்தரச் செல்வந்தர்கள் இவர்களை உறுப்பினராக்கி, நிதி வசதியை அதிகப்படுத்த இயலும். உறுப்பினரின் எண்ணிக்கையை அதிகரித்து ஆட்களை நீக்கி, கூட்டுறவுச் சங்கங்களையே உறுப்பினர்களாக்க முயலுகின்றனர் இதுவே கூட்டுறவுக் கொள்கையின் அடிப்படை. கடனைப் பெற்ற தொகையில் 90%ஐப் பொதுவாகக் கடனாக வெளிவிடுகின்றன. மத்திய பாங்குகள் மிகவும் குறைவான ரொக்க இருப்புடன் பணியாற்றி வருகின்றன. இதர பாங்குகளிலிருந்து கிடைக்கவேண்டிய தொகைகளும் வராத கடன்களும் மூலதனத்தைவிட அதிகரிக்கக் கூடும். சென்னை, பம்பாய், பஞ்சாப் போன்ற இராச்சிய மத்திய பாங்குகளில் நிலைமை மேலாக உள்ளது. பீகார், வங்காளம், ஒரிஸ்ஸா முதலிய இராச்சியங்களில் உள்ள கூட்டுறவு மத்திய பாங்குகளின் நிலைமை திருப்திகரமாக இல்லை. விவசாயப் பொருள்களின் அடைமானத்தில் தனி ஆட்களுக்குக் கூட்டுறவு மத்திய பாங்குகள் கடன் கொடுப்பதும் உண்டு. இம்மாதிரித் தனி நபர்களுக்குக் கடன் வசதியளிப்பதால் கூட்டுறவு நிறுவனம் தரகர்களுக்கு ஊக்கமளித்து வருகிறது என்பது பெரும் குறைபாடே. அவர்களை நீக்கம் செய்வதற்குப் பதிலாக அவர்களை ஆதரிப்பது கொள்கைக்கு முரணானது எனலாம். இதனால் கூட்டுறவுச் சந்தை வர்த்தகம் பெரிதும் தடைப்படும் என்பதில் ஐயமில்லை. இன்னும் சில மத்திய பாங்குகள் தனி நபர்களுக்கு அதிகப்படியளவில் கடன் கொடுத்து, கூட்டுறவுச் சங்கங்களுக்கு

அவ்வளவு உதவியளிக்காமல் விடுகின்றன. இதற்குக் காரண மென்னவெனில் நெறியாளர்கள் பலர் நகர்ப் புறங்களிலிருப்பவர்க ளாதலால் தனி ஆட்களுக்குக் கடன் வசதியளிப்பதை வரவேற் கிறார்கள். கூட்டுறவுச் சங்கங்களுக்குக் கடன் கொடுப்பதில் பல இடையூறுகள் உள்ளன என்பதை இவர்கள் கருதி வருகிறார்கள்.

கூட்டுப் பங்கு பாங்குகளுடனோ அல்லது நாட்டின் மத்திய பாங்கு ஆகிய ரிசர்வ் பாங்குடனோ இந்தக் கூட்டுறவு மத்திய பாங்கு கள் எவ்வகையான தொடர்புகளும் கொள்ளக்கூடாதென்பது தெரிந்ததே. இன்னும் சில இராச்சியங்களில் இவை கடன் சம்பந்த மற்ற இதர தொழில்களில் ஈடுபட்டுள்ளன. அண்மையில் இதர வகை வர்த்தகங்களாலும், கடன் வியாபாரம் அதிகரித்த காரணத் தினாலும் அவ்வப்பொழுது நிதி வெகுவாகத் தேவைப்பட்டு வருகிறது.

**இந்தியக் கூட்டுறவு இயக்கத்தைப் பற்றிய ஒரு பரிசீலனை (1948-50)** என்ற நூலில் மத்திய பாங்குகள் எவ்வகையில் பணி யாற்றி வருகின்றன என்று விளக்கம் கொடுக்கப்பட்டுள்ளது. இதனுடைய வருங்கால முக்கியத்தைப் பற்றிய மதிப்பீடு செய்யப் பட்டுள்ளது. (i) பணிக்கு வேண்டிய மூலதனம் மிகவும் மென்மை யான அடிப்படையிலுள்ளதெனலாம். வன்மையான மூலதனம் பெற்ற பாங்குகளால் நிலையானதும் வன்மையுள்ளதுமான வர்த்தகம் நடைபெறக் கூடும். மேலும், உறுப்பினர்களும் கூட்டுறவுக் கொள்கையை நேர்மையுடன் கடைப்பிடித் தொழுகவும் கடன் எல்லையை இவ்வளவென்று வரையறுக்கவும் வேண்டி மத்திய பாங்குகள் கூட்டுறவுக் கொள்கைக்கேற்ப, பாங்குகளின் மூலதனத்தை அதிகரிக்க முயற்சி செய்கின்றன. (ii) சட்டப்படி இருக்கவேண்டிய ரிசர்வ் நிதிகளையும் இதர ரிஸர்வுகளையும் பாங்கு கள் பலப்படுத்திக் கொள்ள வேண்டும். (iii) கிராமப் பகுதி களிலுள்ள மக்களிடமிருந்து அதிக ஊக்கத்துடன் வைப்புகள் சேர்க்க முயலவேண்டும். (தற்போதுள்ள நிலைமையில் இதரர் வசம் சேர்ந்துள்ள அளவு வைப்புகள் கூட்டுறவுப் பாங்குகளிடம் இல்லை. பொது மக்களுக்குக் கூட்டுறவுப் பாங்குகளின் மீது நம்பிக்கை ஏற்படும் அளவு பிரச்சாரம் செய்யவேண்டும்.) (iv) நடப்பில் சில இராச்சியங்களிலுள்ள கூட்டுறவு மத்திய பாங்குகள் நடத்தி வந்த வர்த்தகப் பாங்குத் தொழிலால் ஏற்பட்ட பெரும் நட்டத்தைக் கண்ணுற்று அதன் விளைவாக வர்த்தகப் பாங்குத் தொழில், நடத்துவதைக் கண்டிக்க வேண்டும். (v) முடிவாகக் கடன் சம்பந்தப்பட்ட தொழிலின் மேற்கோளினால் வராத கடன் தொகை இவ்வளவு என்று அறுதியிட்டு மேற்படி தொகையைப் பொறுத்த அளவில் ஒதுக்கு நிதி அமைத்து, கடன் கொடுக்கும்

முறையைச் செம்மைப்படுத்த முயல வேண்டும். தற்போதுள்ள நிலைமையில் வராத கடன்களுக்கேற்ப அமைந்துள்ள ரிசர்வ் நிதி வெகு சொற்ப அளவில் அமைந்துள்ளதை மாற்றி அமைக்க வேண்டும்.[1] அநேக இராச்சியங்களில் எண்ணற்ற அளவில் மத்திய பாங்குகளும், பாங்கு சங்கங்களும் உள்ளன. ஆயினும், இவைகளில் இணைக்கப்பட்ட கூட்டுறவுச் சங்கங்களோ மிகவும் சொற்பமானவை. இதன் நிமித்தம் போதிய அளவு வியாபாரம் கிடைப்பதில்லை; தக்க பயிற்சியுள்ள பணியாளர் மத்திய பாங்கு நிறுவனங்களில் இல்லை. இது, முன்னேற்றத்துக்குப் பெரும் இடைஞ்சலாக உள்ளது.

**14. மாகாணக் (இராச்சிய) கூட்டுறவுப் பாங்குகள் :** மாகாணக் கூட்டுறவுப் பாங்குகள் (இராச்சியப் பாங்குகள்) மேற்படி மாகாணம் அல்லது இராச்சியத்திலுள்ள கூட்டுறவுச் சங்கங்களின் இருப்பு, பணிக்கப்பட்ட மூலதனத்தின் அதிகம் அல்லது குறைவான நிலைமை, அவ்வப்போது சங்கங்களுக்கான நிதி வசதி, கணக்குத் தீர்வகம் இவ்வனைத்தையும் ஒருமிக்க நடத்திக் கொடுப்பதே இவைகளின் முக்கியமான வேலை. நகர்ப் புறங்களில் பொதுப்பணச் சந்தைக்கும் கூட்டுப் பங்கு பாங்குகளுக்கு மிடையே இருப்பதும் கிராமக் கூட்டுறவுச் சங்கங்களுக்கெனத் தனிப்பட்ட முறையில் பணியாற்றி வருவதும் மாகாணக் கூட்டுறவுப் பாங்கே. சிற்சில இராச்சியங்களில் இவை ஆதாரக் கூட்டுறவுச் சங்கங்களுடன் நேர் முகமாக வர்த்தக ஈடுபாடு கொள்ளுவதில்லை. எங்கெங்குக் கூட்டுறவு மத்திய பாங்குகள் தோன்றவில்லையோ அங்கெல்லாம் உள்ள ஆதாரச் சங்கங்களுக்குப் பண உதவி அளிக்கவேண்டிய பொறுப்பு இவர்கள்பால் விடப்பட்டுள்ளது. பொது விதிப்படியும் மற்றும் முன் கூறிய காரணங்களாலும் மாகாணப் பாங்குகள் தம் உறுப்பினராகக் கூட்டுறவுச் சங்கங்களையும் தனி ஆட்களையும் கொண்டுள்ளன. தற்கால நிலைமையில் வர்த்தக நுணுக்கம் தெரிந்த காரணத்தினாலும் பணச் சந்தையினின்று தொடர்ந்து பண வசதி பெற விழைவதாலும் தனி ஆட்களை உறுப்பினராகச் சேர்த்துக் கொள்கின்றனர். எல்லா மாகாணப் பாங்குகளையும் நோக்குங்கால் பம்பாயிலுள்ள பாங்கு உலகமனைத்தும் மெச்சத் தகுந்த முறையில் நடத்தி வரப்படும் பாங்கு என்று கருதப்படுகிறது. இந்தப் பாங்கு நிதி, ஆக்கவேலை, கூட்டுறவு முறை வளர்ச்சி, பொது கண்காணிப்பு இவைகளை முன்பிருந்த பம்பாய் மாகாணம் முழுவதிலும் இடையறாது கவனித்து வந்தது.

1. ரிவ்யூ ஆப் தி கோ-ஆபரேடிவ் மூவ்மெண்ட் இன் இண்டியா (1948-50). பக். 25.

ஒரு சில இராச்சியங்கள் தவிர இதர இராச்சியங்களில் உள்ள மாகாணக் கூட்டுறவுப் பாங்கு, கூட்டுறவு முறையின் கீழ்க் கடன் கொடுக்கும் முறையைச் சீர்படுத்தி, ஒழுங்கான முறையில் கண் காணித்து வரவில்லை. இவர்கள் நடத்தி வரும் கடன் வழங்கு முறையில் கீழ்க்கண்ட கோளாறுகள் உள்ளன: (i) வர்த்தகர், தரகர், மற்றும் இதர தனி ஆட்களுக்குக் கடனுதவியளித்து, கூட்டுறவுச் சங்கங்களைக் கவனிக்காமல் விட்டுவிடுகின்றனர் ; குறிப்பாகச் சிறு அளவில் கடன் கோருபவர்களை ஈவிரக்கமின்றிக் கவனியாது புறக்கணித்து விடுகின்றனர். (ii) சிற்சில சமயங்களில் சில இராச்சிய கூட்டுறவுப் பாங்குகள் குறுகிய கால நிதியில் உள்ள பணத்தை நீண்ட காலக் கடன் வசதிக்கெனக் கொடுத்து விடுகின்றனர். (iii) பீகார் இராச்சியத்தில் கடன் வசதி இயக்கத்திற்கே பெரும் சீர்கேட்டைத் தேடித் தந்து கடன் முறையுடன் வர்த்தகத் துறையை மேற்கொண்டு அந்த இராச்சியக் கூட்டுறவுப் பாங்கு நடத்தி வந்தது தெரிந்ததே. (iv) இன்னும் சில விவகாரங்களில் கடன் கொடுத்தல் உபரிம் பழம் பாக்கியைப் பொறுத்து அதிகப்படி விகிதத்தில் அமைந்திருந்தது.

**15. கூட்டுறவுப் பணியாளர் :** கூட்டுறவுக் கடன் நிறுவனங்கள் எல்லாத் தளங்களிலும் தக்க பயிற்சி பெற்ற பணியாளரில்லாத காரணத்தினாலும் போதிய வர்த்தகப் பயிற்சியின்மையாலும் முன்னேற்றமின்றிப் பின்தங்கியுள்ளனர். இது சம்பந்தமாகக் கூறப்படும் யோசனைகளாவன : (i) அனுபவம் வாய்ந்த பாங்கர் களையே இத் தொழிலில் அமைத்துக் கட்டுப்பாடு செய்யும்படி கூற வேண்டும். (ii) வர்த்தக பாங்கும் கூட்டுறவுக் கடன் முறையும் தங்களுக்குள் செம்மையான தொடர்பு கொள்ளவேண்டும். (iii) உள்ளூரில் உள்ள வர்த்தக பாங்கு அனுபவம் பெற்ற வல்லுநர்களின் சேவையைப் பயன்படுத்திக் கொள்ளவேண்டும். (iv) இவர்களுக்கு வாங்கும் பயிற்சி கொடுப்பதற்கு எவ்வெவ்வகை முயற்சி எடுக்க வேண்டுமோ அவை அனைத்தும் செய்யப்பட வேண்டும்.[1]

**16. ரிசர்வ் பாங்கும் கூட்டுறவு இயக்கமும் :** ரிசர்வ் பாங்கு சட்டத்தில் கண்டபடி 1935 ஆம் ஆண்டு ஏப்ரல் மாதத்தில் விவசாயக் கடன் இலாக்காவை ரிசர்வ் பாங்கு நிறுவியது. சட்டத்தில் கண்டபடி விவசாயக் கடன் இலாக்கா தமது விவசாயக் கடன் 1937ஆம் ஆண்டு டிசம்பர் மாதத்தில் இந்திய அரசினருக்குச் சமர்ப்பித்தது. அவ்வமயம் முதல் அவ்வப்பொழுது அறிக்கைகள் வெளியீடுகள், சிறு சிறு நூல்கள் இவைகளைக் கூட்டுறவுக் கடன்

1. இதில் 18வது பகுதியைப் பார்க்கவும்.

சம்பந்தமாக ஆராய்ச்சிகள் நடத்தி எழுதி வருகின்றது. ரிசர்வ் பாங்கு இத்துறையில் தேர்ச்சி பெற்ற வல்லுநர்களைக் கொண்டுள்ள தால் இராச்சியங்கள், மத்திய அரசு, இராச்சிய கூட்டுறவுப் பாங்குகள், இதர பாங்கு நிறுவனங்கள் ஆகிய அனைத்துக்கும் குறித்த காலத்தில் விவசாயக் கடன் சம்பந்தமான அறிவுரைகள் கிடைக்கின்றன.

17. **ரிஸர்வ் பாங்கும் கூட்டுறவு நிதியும்:** *ரிஸர்வ் பாங்கு தமக்குக் கிடைத்துள்ள சில சட்ட முறையின் கீழ்க் கூட்டுறவு பாங்குகளுக்கு நிதி உதவி அளிப்பதற்குப் போதிய அதிகாரம் பெற்று இருக்கிறது.* (i) 1951க்கு முன்னால் ரிஸர்வ் பாங்குச் சட்டப் பிரிவு 17 (2) (b) பிரிவும் (4) (c)யின் படி இராச்சியக் கூட்டுறவுப் பாங்குகளுக்கோ பட்டியலில் கண்டுள்ள பாங்கு களுக்கோ முன்பண வசதி கொடுத்தும், அவர்களுடைய புரோ நோட், உண்டியல் காகிதங்கள் இவைகளை மறுமுறை கழிவு நீக்கிக் கொடுத்தும் பண உதவி செய்ய முன் வருகின்றது. இராச்சியக் கூட்டுறவுப் பாங்குகள் கொடுக்கும் பண்ட உரிமைச் சீட்டுகளுடன் அவற்றின் அடைமானத்தில் புரோநோட்டு எழுதி வாங்கிக் கொண்டு, கடனுதவி செய்து வருகிறது. பருவகால விவசாய வசதிக்கென்று இவ்வாறு செய்து வருகின்றது. ரிசர்வு பாங்கினின்று கடன்பெறும் இந்தப் பாங்குகளுக்கு அவர்களுடைய வர்த்தக உறுப்பினரோ அல்லது இதர கூட்டுறவுச் சங்கங்களோ பண உதவி பெறவும் விவசாயப் பண்டங்களை விற்பனைக்குக் கொண்டு வரவும் இம்மாதிரியான முன் பண வசதி அளிக்கப்படுகிறது. இவைகளின் ஈட்டின் பேரில் கடன் வசதி, எல்லை மீறிய செக் கொடுப்பதற்கான 'ஓவர் டிராப்டு' முறை (overdraft), 'காஷ் கிரடிட்' முறை (Cash Credit) கையாளப்பட்டு வருகின்றன.

(ii) **1951-53-ல் ஏற்பட்ட மாற்றங்களும் பின் சேர்ப்புகளும்:** 1951-ல் கொண்டுவரப்பட்ட திருத்தங்கள் ரிஸர்வு பாங்குச் சட்டப் பிரிவு 17 (2) (a) ஐக் குறிக்கும். மேலும் வியாபார சம்பந்தமாக வந்துள்ள பிராமிசரி நோட்டு, உண்டியல் இவைகளைக் கொள் முதல் விற்பனைக் கழிவுநீக்கி மேற்கொள்ளல் முதலியனவற்றைப் பற்றி இதர வர்த்தக பாங்குகள் பெறுவதுபோல் இராச்சியக் கூட்டுறவுப் பாங்குகள் பெறலாம் என்று சட்டம் கொண்டு வரப்பட்டது. இரண்டாவது திருத்தமாவது ரிஸர்வு பாங்குச் சட்டப் பிரிவு 17 (2) (b)-ஐக் குறித்துச் செய்யப்பட்டது. **கடன் வசதியளிக்கப்படும் காலவரம்பு பருவ கால விவசாயப் பணியாற்று தலை யனுசரித்தும் விவசாயப் பண்டங்கள் விற்பனையைக் குறித்தும் 9 முதல் 15 மாதங்கள் வரை நீட்டிக் கொடுக்கப்**

படுகிறது. (ஆ) 1953ஆம் ஆண்டில் விவசாயப் பணி என்பதற்கான விளக்கத்தை விரிவாக்கு முறையில் ரிஸர்வு பாங்குச் சட்டப் பிரிவு 17 (2) (b) விவசாயப் பொருள் விற்பனை இவைகளுடன் கலப்பு விவசாயத்தின் அலுவல்களையும் இணைத்தது. (கால் நடை வளர்த்தல், விவசாயப் பொருள் விற்பனைக்கு முன்னர்ப் பதனம் செய்யும் முறை இவைகள் கலப்பு விவசாயமாகக் கருதப்படுகின்றன). (ஆ) புதிய பிரிவு 17 (2) (bb) இணைக்கப்பட்டு அதன் காரணமாக இராச்சிய நிதிக் கார்ப்பரேஷன் (State Financial Corporation) இராச்சியக் கூட்டுறவுப் பாங்கு இவைகளில் உண்டியல்களை மறு முறைக் கழிவு தள்ளிக் கொடுக்கலாமென்று கூறப்பட்டது. கிராமக் குடிசைத் தொழில் சம்பந்தமான பொருள்களைப் பதனப்படுத்தவும் விற்பனை செய்வதற்கும் அனுகூலமாக அமையவே இம்மாதிரி வசதியளிக்கப்பட்டது. மேற்படி உண்டியல்கள் 12 மாத காலத்தினுள் காலாவதியாக வேண்டியது. இவற்றிற்காக அசலுக்கும் வட்டித் தொகைக்கும் இராச்சிய அரசினர் உத்தரவாதம் கொடுக்க வேண்டும். (இ) புதிய பிரிவு 17 (4A) என்று ஒன்றும் இணைக்கப்பட்டது. இதன்படி ரிஸர்வு பாங்கு நடுத்தர அல்லது மத்திய காலக் கடன் வசதியை இராச்சியக் கூட்டுறவுப் பாங்குகளுக்குக் கொடுப்பதற்கும் மேற்படி கடன் தொகைக்கு இராச்சிய அரசினர் உத்திரவாதம் அளிக்க, எக்காரணத்தைக் கொண்டும் இக் கூட்டுத் தொகை ரூ. 5 கோடிக்கு[1] அதிகப்படாமல் இருக்கவும் ஏற்பாடு செய்யப்பட்டது.

அவ்வப்பொழுது செம்மையான பாங்கு வர்த்தக முறை இவ்வாறு நடத்த வேண்டும் என்பதை இராச்சியக் கூட்டுறவுப் பாங்கிற்கு ரிசர்வு பாங்கு அறிவுறுத்துகிறது. ரிசர்வு பாங்கிலுள்ள விவசாயக் கடன் இலாக்காவின் பேருதவியினால் அந்தந்த இடத்தில் ஆய்வு நடத்தி விசாரணை செய்து நாட்டிலுள்ள எல்லாக் கூட்டுறவு நிறுவனங்களின் நிலையையும் ஆராய்ந்து முடிவில் பயனற்ற கூட்டுறவுப் பாங்குகளை மூட வேண்டும் என்ற தகவல்களையும் கொடுத்து வருகின்றது. சிறிய பாங்குகளை ஒருங்கே இணைத்துப் பயனுள்ளதாகச் செய்யவேண்டுமென்று தீர்மானித்துள்ளார்கள். அவைகளில் (i) பெரிய வட்டாரங்களில் வேலை செய்யும் பாங்குகளுக்கு ஏற்படும் அதிகப்படியான செலவுகளை ஒடுக்கவே இந்த இணைப்பு முறையைப் பரிந்துரை செய்திருக்கிறார்கள். (ii) இதில் இணைப்பு பெற்ற சங்கங்கள் குறைந்த செலவில் நிறைந்த பணியாற்றவும் குறைந்த வட்டியில் அதிகப்படி ஆட்களுக்குக் கடன் கொடுக்கவுமுள்ள வழிகளை ஆராய முற்

1. ஆல் இண்டியா ரூரல் க்ரெடிட் சர்வே அறிக்கை, பக். 288-9.

பட்டுள்ளன. (iii) சங்கங்களின் கடன் கொள்கையைப் பற்றிய திட்டங்களை ஆராய்ந்து முடிவு செய்யவும் (iv) தேர்ந்த அனுபவம் பெற்ற தொழில் நுட்பமறிந்த பணியாளர்களை அமைக்க வேண்டும் என்று கூறியுள்ளது. இந்தத் திட்டம் பல்வேறு இராச்சியக் கூட்டுறவுச் சங்கங்களை நியமிக்கப் பயன்படுகிறது.[1]

தாமாகவே கூட்டுறவுப் பாங்குகள் செம்மையாக நடந்து வருகின்றனவா என்று கண்காணிக்க ரிசர்வு பாங்கு ஆய்வுகளை நடத்தி வருகின்றது. இம்மாதிரியாக நடத்தப்படும் ஆய்வினுல் திட்டமான பாங்குக் கொள்கைகளின் அடிப்படையில் கூட்டுறவுப் பாங்குகள் நடந்துவருகின்றனவா என்றும், கூட்டுறவுக் கொள்கையின்படி இந்த பாங்கு நிறுவனங்கள் ஒழுங்கு பெற நடந்துவருகின்றனவா என்றும் கவனிக்க ஆரம்பித்துள்ளது.[2] அண்மையில் ஏற்பட்ட இம் மாறுதலாவது 1951ஆம் ஆண்டு நிரந்தர யோசனை கூறும் குழுவினரின் நிறுவனத்தைப் பற்றிச் சட்ட திட்டங்கள் வகுக்கப்பட்டு, அதன் காரணத்தால் விவசாயக் கடன் சம்பந்தப்பட்டதும் அதையடுத்து இதர தகவல்களைப் பற்றியும் முடிவும் கூறுவதற்கென்றே இக் குழுவினர் தோன்றியுள்ளனர். இக் குழுவினர் மூன்று பெரிய பிரச்சினைகளைப் பற்றி முடிவு கட்டவேண்டியது அவசியம். அவையாவன: (i) நீண்ட கால விவசாயக் கடன், அத்துறையில் ரிசர்வு பாங்கு செய்ய வேண்டிய முடிவு, (ii) தற்போதுள்ள கடன் வசதி முறையை விஞ்ஞான முறையில் தொகுத்துக் கண்காணித்தலும் போதிய கடன் வசதி விவசாயத் தொழிலுக்குக் கொடுப்பதும், (iii) கூட்டுறவு முறை வளர்ச்சி பெருத இராச்சியங்களில் இதை வளர்க்கப் பாடுபடுவதும், சீர்திருத்தங்களைக் கொண்டுவருவதும். இது தோன்றிய நாள்முதல் கணக்குப் பரிசீலனை ஆய்வு முறைகளை நடத்தி முடிவில் கூட்டுறவுப் பாங்கு ஒவ்வொன்றும் எவ்வளவு ரொக்க இருப்பு வைத்துக்கொள்ள வேண்டுமென்றும், ஒவ்வொரு கூட்டுறவுப் பாங்கிற்கும் ரிசர்வு பாங்கு கொடுக்க வேண்டிய கடன் எல்லை எவ்வளவென்றும். ரிசர்வு பாங்கு, குறுகிய காலக் கடன் கொடுப்பதில் விதித்துள்ள அலுவலக முறைகளை இக் குழுவினர் வேண்டாமென்று நீக்கி எளிதாக்கியும் உள்ளனர். சில இராச்சியங்களில் B பகுதி C பகுதி இராச்சியங்களில் நன்கு அமைந்த விவசாயக் கடன் வசதி அளிக்கும் நிறுவனங்களே இல்லை எனலாம். இதன் நிமித்தம் அந்த

1. 1955ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 30ஆம் தேதி 21 சங்கங்கள் இருந்தன.

2. சர்க்கார் நடத்தும் கணக்கு ஆய்வு முறையைத் திரும்ப நடத்த வேண்டும் என்ற எண்ணத்துடன் தணிக்கை செய்ய ரிஸர்வ் பாங்கு வருவதில்லை. பொதுவாக கடன் வசதி எவ்வளவில் உள்ளதென்று ஆராய்ந்தும் மாவட்டப் பாங்கு எவ்வளவு கடன் வசதி பெறக்கூடியதென்றும் இதற்கென ஒதுக்கப்பட்ட பணமனைத்தையும் பயனுறும்படி செலவிடுகிறதா என்றும தணிக்கை செய்கிறது.

மாதிரியான இடங்களில் ரிசர்வு பாங்கு எவ்வகையான உதவியும் செய்ய இயலாமல் போய்விடுகிறது. இதை அனுசரித்து அவ்விடங்களில் புதிய தலைமைக் கூட்டுறவுப் பாங்குகளை நிறுவ முயற்சிகள் நடைபெறுகின்றன அல்லது நடப்பிலுள்ள கூட்டுறவுப் பாங்குகளைத் தலைமைப் பாங்குகளாக அமைத்து வருகிறார்கள். அண்மையில் நடந்த இம்மாதிரியான மாற்றங்களால் கூட்டுறவு முறை முன்னேறி வருகிறது.

**18. ரிசர்வ் பாங்கும் கூட்டுறவுப் பயிற்சியும்:** ரிசர்வ் பாங்கின் நிரந்தர ஆலோசனை கூறும் குழுவினரின் முயற்சியால் 'கூட்டுறவு' என்ற பாடத் திட்டத்தை இந்திய பாங்கர் தேர்வு நிறுவனத்தின் பரீட்சையில் ஒரு பகுதியாகச் சேர்த்துள்ளனர். கூட்டுறவுப் பணியாளர்களுக்கான பயிற்சியை அவ்வப்போது திட்டமாக நடத்தி வருகின்றனர். பம்பாய் மாகாணக் கூட்டுறவுப் பயிற்சி நிறுவனத்தின் உதவியைக் கொண்டு ரிசர்வ் பாங்கு, பூனாவில் இந்தியா முழுவதுக்கும் ஒரு பயிற்சி நிறுவனத்தை ஏற்படுத்தியுள்ளது. இதில் இரண்டு வகையான பயிற்சிகள் அளிக்கப்படுகின்றன; ஒரு வகைப் பயிற்சி குறுகிய காலத்தில் அதாவது 6 மாதங்களுக்குள்ளாகப் பயனுறும் முறையில் கூட்டுறவுப் பாங்குகளின் நிர்வாகிகள் மற்றும் இதர அதிகாரிகளுக்கென வகுக்கப்பட்டது. இன்னும் ஒரு பயிற்சி நீண்டகால அளவில் ஓர் ஆண்டுக் காலத்திற்கென்று அமைத்து மத்திய தர அலுவலர்களையும் பணியாளர்களையும் சேர்த்துப் பயிற்சியளித்துவருகிறது. கூட்டுறவுப் பயிற்சியளிப்பதற்கென்றே இந்திய அரசினரும் ரிசர்வு பாங்கினர் 1953-ல் மத்தியக் குழு ஒன்றை நியமனம் செய்தனர். நாடு முழுமைக்கும் கூட்டுறவுப் பயிற்சி பெறுவதற்கான திட்டம் ஒன்றை வகுத்து, தலைமை அதிகாரிகளுக்கான பயிற்சியைக் கொடுக்க, பூனாவில் பயிற்சிக் கல்லூரி ஒன்றையும், நடுத்தரப் பணியாளர்களுக்கான ஐந்து பயிற்சி நிலையங்களை ஏனைய பகுதிகளிலும் திறந்தனர். உயர்தர, நடுத்தர அதிகாரிகளுக்குப் போய்வரும் செலவு வாடகை, குடியிருப்பு, மாதாந்தரப் படிப்புக்கான பண உதவியுடன் (Stipend) இனமாகப் படிப்புச் சொல்லிக் கொடுக்கப்படுகிறது.

**19. பதிவாளர்:** மக்லெகன் (Maclagan) குழுவினர் பதிவாளரின் பணிகள் இன்னவை என்பதையும் அவர் இந்த இயக்கத்தில் எவ்வகையான பதவி வகிக்கிறார் என்பதைப் பற்றியும் கூறியுள்ளனர். இதன் நகல் அகில இந்தியக் கிராமக் கடன் சர்வே அறிக்கையில் வெளியிடப்பட்டிருக்கிறது. 'சட்டப்படி பதிவுக்காக வரும், ஒவ்வொரு சங்கத்தின் மனுவையும் தீர விசாரித்து, அவைகளுக்குப் பதிவுப் பத்திரம் கொடுக்கலாமா என்று முடிவு செய்வர்.

டி சங்கங்களின் உள் சட்டங்களையும் அவ்வப்பொழுது வரும் திருத்தச் சட்டங்களையும் பதிவு செய்து கொள்வார். டி சங்க அலுவல்களைத் தணிக்கை செய்வார்; அல்லது தணிக்கை செய்யும் படி உத்தரவிடுவார். கூட்டுறவுச் சங்கங்களின் ஆஸ்திகள், பொறுப்புகள் இவைகளை ஆய்ந்து, உரிய மதிப்பீடு செய்து, கடன் பாக்கி எவ்வளவு என்று அறுதியிட்டுக் கூறுவார். சங்கங்கள் கூட்டுறவுச் சட்ட நியதிப்படியும் தங்கள் உள் சட்டப்பிரிவுகள் படியும் சங்க அலுவல்களை நடத்தி வருகின்றனவா என்றும் கண்காணிப்பார். திடீரென்று தனிப்பட்ட முறையில் ஆய்வுகளை நடத்தி, சங்க நடவடிக்கைகள் எவ்வாறு அமைந்துள்ளன என்று புலன் விசாரிப்பார். சிற்சில சங்கங்களை மூடுவதற்கும் அவற்றின் செல்வ நிலைமையை அனுசரித்து ஆஸ்திகளை விற்று, பொறுப்புகளை ஈடேற்றி, பயனற்ற சங்கங்களைச் சமூகத்தினின்று விலக்க முற்படுவார். தம்முடைய கடமையைச் சரிவர நடத்த வேண்டிய காரணத்தால் அவ்வப்போது கூட்டுறவு முறை, இவ்வியக்கம் ஆகியவை சம்பந்தப்பட்ட புதுப்புதுத் தொகுப்புகளையும் நூல்களையும் தற்போதுள்ள நிலையில் அபரிமிதமாகச் சேர்ந்துள்ள கூட்டுறவுக் கொள்கைகளைப் படித்து, அதன்படி பணியாற்றத் தலைப்படுவார். தாம் பணியாற்றும் வட்டாரத்தின் செல்வ நிலை, நாட்டின் பொருளாதார நிலை இவைகளைப் பற்றிய நடப்பு நிலை அவருக்குத் தெரிந்திருக்க வேண்டுமென்பதில் ஐயமில்லை. கூட்டுப்பங்கு பாங்கு எவ்வாறு துவக்கப்பட்டு நடைபெற்று வருகிறது என்றும், இதர நாடுகளில் கூட்டுறவு முறையை எவ்வாறு சிக்கன முறையில் கையாண்டுள்ளனர். என்பதையும் இவர் அறிந்திருக்க வேண்டும். போதனு முறைப் பயிற்சியின் தலைவராகவும் அவர் இருக்கவேண்டி நேரிடுகிறது. அவ்வமயம் பெரும்பாலான மக்கட்குக் கூட்டுறவுக் கொள்கைகளை மனதில் பதிய வைத்து, அதற்கியைந்தவாறு அவர்களை நடக்க ஊக்குவிக்க வேண்டும். எண்ணிறந்த பணியாளர்களை ஒழுங்கு பெறக் கண்காணித்தும், சட்ட திட்டங்களை வகுத்தும் புள்ளி விவரங்களைத் தயார் செய்தும், அவ்வப்பொழுது அறிக்கைகள் விட்டும் அரசினர்க்குக் கூட்டுறவு சம்பந்தமான பரிந்துரைகள் செய்தும், மத்திய பாங்கு, ராச்சிய பாங்கு ஆகியவைகளின் நிதி சம்பந்தமான நிலைமையைக் கண்காணித்தும் வரவேண்டும். விவசாயம், கூட்டுறவு சம்பந்தமாக நடக்கும் பல்வேறு மாநாடுகளில் இவர்கள் பங்கெடுத்துக் கொண்டும் நாட்டின் சந்தைகள் சம்பந்தமாகத் தகவல்களைச் சேகரித்தும் அவ்வப்பொழுது பொதுத் தாள்களுக்கும், அரசினர் தகவல் வெளியீட்டு நிலையங்களுக்கும், கூட்டுறவுப் பத்திரிகைகளுக்கும் எழுதுகிறார்கள். பதிவாளரின் பணி இவ்வளவுதான் என்று, அறுதியிட்டுக் கூறமுடியாது. எப்

பொழுது பார்த்தாலும் இவர்களுடைய பொறுப்புகள் அதிகரித்துக் கொண்டே போகின்றன. நமக்கிட்ட பணி இவ்வளவுதான் என்று இவர்கள் முடிவுசெய்துவிட முடியாது எந்நேரமும் அவர் அதிகப் படியான தகவல்களைச் சேகரித்துக்கொண்டே இருந்தும் தங்கள் சங்கங்களுக்கு வழி காட்டியாக நின்று விளக்கங்கள் கொடுத்துவர வேண்டும். சங்கச் செயலர்களுடன் அவ்வப்பொழுது கூடி ஆலோசனைகள் நடத்திப் புதிய கொள்கைகளை வகுக்க முற்படு வார். பெரும்பாலான மக்கள் கூட்டுறவுச் சங்கங்களில் நம்பிக்கை யுடன் தங்கள் செல்வத்தை ஈடுபடுத்தி, பொருளாதார நிலையில் எவ்விதத் தீங்கும் நேராது கண்காணித்து வருவார்கள். இவ்வளவு அரும்பெரும் எல்லையற்ற பொறுப்பு இவர்கள்மீது சுமத்தப் பட்டுள்ளது.[1]

மக்லெகன் குழுவினர் கூறியுள்ளதைவிட அதிகப்படியான பொறுப்புகளைப் பதிவாளர் மேற்கொள்ளவேண்டிவரும் என்று அகில இந்தியக் கிராமக் கடன் சர்வே அறிக்கை கூறுகிறது. கூட் டுறவுத் திட்டக் குழு (1946)வினரின் எண்ணத்தை இவர்களும் கூறியுள்ளனர். இவர் (பதிவாளர்) பெரும் தொழில் வன்மையும் புத்தி கூர்மையுமுள்ளவராக இருப்பதோடல்லாது இவ்வியக்கத் தினை வன்மையான முறையில் நடத்தக் கூடிய ஆற்றல் படைத்த வராகவும் இருக்கவேண்டும். அவர் பதிவாளர்ப் பதவியை ஏற்கும் முன்னரே ஆழ்ந்த பயிற்சியும், இரண்டு ஆண்டுகளுக்குக் குறை யாமல் உதவி அல்லது கூட்டுப் பதிவாளராகப் பணியாற்ற வேண்டும். பயிற்சிக் காலத்திலும், பணியாற்றும்போதும், இதர மாகாணங்களில் கூட்டுறவு முறை எவ்வாறு முன்னேறியுள்ள தென்றும், இந்தியா ஏனைய நாளில் எவ்வாறு வளர்ச்சி பெற்றுள்ளது என்றும் அறிந்து கொள்ள அவகாசம் பெற வேண்டும்.[2]

கூட்டுறவு இலாக்காவின் பதிவாளர் மற்றும் இது சம்பந்தப் பட்ட இதர அரசினரின் இலாக்காக்கள் தங்கள் எல்லைக்குட்பட்ட எல்லா உதவிகளையும் அளித்துக் கூட்டுறவு முறையைத்தாமாகவே இயங்கும் நிலையில் வைக்க முயலவேண்டும் இந்திய நாட்டில் கூட்டுறவு முறை தழைத்தோங்க இப் பதிவாளர்கள் வெறும் பதிவுப் பணியை மட்டும் செய்யாது, மிகவும் உயரிய செயல்களைப் புரிந்து, கூட்டுறவு முறையைப் பலப்படுத்த முன்வரவேண்டும்.

**20. கூட்டுறவுமுறை தோற்றது - ஆயினும் அது தழைத் தோங்கி வெற்றிபெறவேண்டும் :** 1904ஆம் ஆண்டு முதல்

1 இந்தியாவில் கூட்டுறவு முறையைப் பற்றி 1915-ல் குழுவினரின் அறிக்கை பக், 94.

2. கூட்டுறவுத் திட்டக் குழுவினரின் அறிக்கை, 1946, பக். 155.

உருவாகியுள்ள கூட்டுறவு முறை ஒவ்வோர் இராச்சியத்திலும், மாவட்டத்திலும் முற்றிலும் முரண்பட்ட நிலையில் தோன்றி வன்மையான தலைமையின்றித் தனி மனிதர் உதவியின்றி அரசினரின் ஊக்குவித்தலால் உருவெய்தியுள்ளது. சில இராச்சியங்களில் உண்மையிலேயே ஊக்கத்துடனும் உவகையுடனும் மக்கள் ஒருமிக்க உருவாக்க உதவியுள்ளனர். மற்றும் பல இராச்சியங்களிலோ கவனிப்பு இன்றி எவ்வித முயற்சியுமின்றி இருக்கின்றனர். ஏதோ ஒரு சிலவற்றில் மெச்சத்தகு பலன்கள் கிடைத்தபோதிலும் பொதுவாகத் தோல்வியே காணப்படுகிறது எனலாம்.[1]

கிராமக் கடன் சர்வே அறிக்கை, கூட்டுறவுக் கடன்முறை, வசதியாக அமையவில்லை யென்றும் ஏற்றத் தாழ்வு அமைந்துள்ளதென்றும் தேவையான காலத்தில் பயனற்றதென்றும் இதன் உறுப்பினர்கள் இன்னமும் கடன் கொடுக்கும் தனி மனிதர்களையே அண்டி வருகின்றனர் என்பது வெள்ளிடைமலை என்றும் கூறுகிறது. விவசாயக் கடன் முறை சம்பந்தமாகவே இந்த அறிக்கை இவ்வாறு விவாதித்துள்ளது. விவசாயமற்ற இதர துறைகளில், அதாவது நகர்ப்புறங்களில் இந்த இயக்கம் ஓரளவு வெற்றி பெற்றுள்ளது எனலாம். கடன் வசதி யென்பது இதன் அடிப்படைக் கொள்கையானதால் இத்துறையில் தோல்வியே நிகழ்ந்துள்ளது. எனவே கூட்டுறவு முறை முழுமைக்கும் தோல்வி ஏற்பட்டது என்று கூறுவதில் தவறென்றும் இல்லை. ஐம்பதாண்டுகளுக்கு முன்னர் இந் நாட்டின் வறிய நிலை மாறும் என்ற பெருமிதத்துடன் மக்கள் இவ்வியக்கத்தைத் தோற்றுவித்தபோது என்ன நிலை யிருந்ததோ, அதனின்று எள்ளளவு மாற்றம்கூட ஏற்படவில்லையே என்று இரங்க வேண்டியுள்ளது. எது எவ்வாறிருப்பினும் கிராமக் கடன் சர்வே அறிக்கை இன்றும் வன்மையாகக் கூட்டுறவு முறையினுல்தான் நாட்டின் வறிய நிலையைப் போக்க இயலும்; மற்றெந்த முறையும் பயன்படாது என்று வலியுறுத்தியுள்ளது. கிராம வாழ் மக்களின் வறிய நிலையைப் போக்கத் திட்டமிட்டு அதற்கேற்ப நிலைமையை ஈடுகட்ட இந் நாட்டில் கூட்டுறவு முறையை முழுமையும் பயன்படுத்திக் கொள்வது என்று முடிவு செய்துள்ளனர். 'கூட்டுறவு முறை தோற்றதென்ருல் கிராமத்தினரின் நன்னம்பிக்கைக்குப் பேரிடி யேற்பட்டுள்ளது' என்று 1929-ல் விவசாயக் குழுவினரின் அறிக்கை கூறுகிறது. 'கூட்டுறவு முறை தோற்றதென்பதில் ஐயம் இல்லை' என்று கருதும் கிராமக் கடன் சர்வே அறிக்கை, 'இதற்கு வெற்றி கண்டிப்பாக ஏற்படும்

1. அகில இந்தியக் கிராமக் கடன் சர்வே அறிக்கை, பக். 211.

என்று அறுதியிட்டுக் கூறுகிறது.'[1] வெற்றி அல்லது தோல்வி பற்றி முடிவான கருத்துகள் ஏற்படாவிடினும் இவை இரண்டும் கூட்டுறவு முறையில் முழு நம்பிக்கை கொண்டு அதற்குத் தக்க சக்தி உண்டென்றும் கருதுகின்றன. கிராமங்கள் உள்ள இந்தியாவில் முன்னேற்றமும் பலனும் காண்பதற்குக் கூட்டுறவு முறையே சரியான வழிகாட்டி என்று கருதுகின்றன.

**21. கூட்டுறவு இயக்கம் தோல்வி பெறுதற்கான காரணங்கள்:** இவ் வியக்கம் தோற்றுப் போனதற்கான காரணத்தை ஆராய முற்பட்ட அகில இந்தியக் கிராமக் கடன் சர்வே அறிக்கை கூட்டுறவின் கொள்கைகளை விளக்கும்பொழுது தேறிய விவசாயம், தேறிய வர்த்தகம், செம்மையான வாழ்வு இவைகளை அடிப்படையாகக் கொள்ளவேண்டுமென்றும் இவைகளுக்குள்ள தொடர்புகள் எவையென்றும் கூட்டுறவு முறை போதிய வளர்ச்சி பெறவில்லை என்றும் கூறுகிறது. தேறிய விவசாயம் என்பதில் மாறுதல்களையும் புத்துணர்ச்சியையும் நில உடைமை குத்தகை வாரத் தீர்மானம், விவசாய நிலப்பங்கீடு, நீர்பாய்ச்சுதல், தேவையான உரம், வன்மையான விதை, விவசாயக் கருவிகள், தொழில் நுட்பமுறை, உதவித் தொழில்கள், விவசாயப் பொருள்களை எவ்வகையில் பயன்படுமளவில் மேற்கொள்ளல் ஆகிய விவரங்களை முன் யோசனையுடன் திட்டம் வகுத்து, இராச்சியத்தினின்று நிதி வசதி ஏற்று நடத்த வேண்டி வரும். தேதி வர்த்தகம் என்பதைப் பற்றி விவசாய சம்பந்தப்பட்ட வகையில் கடனும் பொருளாதார சம்பந்தப்பட்ட செயல்களுமேயாகும். பொருளாதாரச் செயல்களாவன: உற்பத்தி, பதனப்படுத்தல், பண்டக சாலையில் இடல், வர்த்தகம் செய்தல் இவைகளை குறிக்கும். இப்பொழுதுள்ள நிலையில் கூட்டுறவு முறையினால் செயல்புரிய இயலாது. தனி மனிதர்களால் கட்டுப்படுத்தப்பட்டு, கடன் கொடுப்போர், வர்த்தகர், மில் முதலாளி முதலியோராவர். பலம்பெற்ற தனிமனிதர்களின் போட்டிக் காரணத்தினால் கிராமக் கூட்டுறவுச் சங்கம் எதிர்ப்பைச் சமாளிக்க முடிவதில்லை. தனி மனிதர்களுக்குள் உள்ள நகர கிராமத் தொடர்பின் காரணத்தாலும் ஆழ்ந்த நிதி வசதி உள்ளதாலும் கூட்டுறவு நிறுவனங்கள் இந்த நகர சக்திகளுக்கு எதிராகப் போரிட முடிவதில்லை. ஆதார சங்கங்கள் மத்திய கூட்டுறவுப் பாங்குகளினின்று மிகவும் குறைந்த நிதி வசதியைப் பெறுகின்ற காரணத்தால் பணமின்மை ஏற்பட்டு, எதிர்ச் சக்திகளுடன்

1. கூட்டுறவு முறை மடிந்தது – அது நெடிது நாள் வாழ்க! என்று கூறும் வார்த்தைகளால் அறிவோம். இதை எழுதிய அறிக்கையாளர் இதை வாழ்க என்று கூறியுள்ளது அவரது சொல்லழகைக் குறிக்கும். இன்னும் சிங்காரமான சொற்களைப் போட முன் வந்தவர் அவற்றை விட்டுவிட்டுச் சாதாரண சொல்லையே உபயோகித்திருக்கிறார்

போரிட முடிவதில்லை. கூட்டுறவுப் பாங்குகளுக்கு இம்மாதிரியான நிலை ஏற்படுவது எதிர்பார்க்கத் தக்கதே. இப்போதுள்ள நிலைமையில் ரிசர்வ் பாங்கியினின்று நிதி கோரியவுடன் வர்த்தகத் துறைக்கு அளவு கடந்து வழங்கப்படுகிறது. ஆனால் கூட்டுறவுத் துறைக்கு மிகவும் குறைந்த அளவே வழங்கப்படுகிறது எனலாம்.

கூட்டுறவு அமைப்புகளிலேயே பல்வேறு குறைபாடுகள் உள்ளன. குறைவின்மையும் வாங்கிய கடனைத் திருப்பித்தரு வதற்குச் சக்தியும் இருக்கவேண்டுவதற்குப் பதிலாகக் கூட்டுறவுச் சங்கங்கள் நில அடைமானமும் தக்க ஜாமீனையும் கோருவது ஏற்ற தாகத் தோன்றவில்லை கிராமச் சங்கங்கள் மத்திய தலைமை பாங்குகள் விற்பனைக்குரிய நிலத்தை மதிப்பீடு செய்வது சாலச் சிறந்ததென்னும் குணத்தையும் வாங்கிய கடனைத் திருப்பித்தரும் சக்தியுள்ளதா என்று ஆலோசனை கூறுவதைவிட மேலானது என்றும் கருதுகிறார்கள். இது மிகவும் தொந்தரவு இல்லாத ஜாமீன் ஆகும். இதைக் கண்காணிப்பதற்கென்று தனியாக ஓர் அமைப்பும் தேவையில்லை. நிலமற்ற பயிரிடுவோர், காப்புப் பெற்ற பயிரிடுவோராகவே இருப்பர் இந்த உரிமையை மாற்றிக் கொடுப்பது எளிதான காரியம் அல்ல. பாதுகாப்பு உண்டோ அல்லது இல்லையோ. அவன் தனது நிலத்தினின்று வரும் உற்பத்திப் பொருளையே ஈடாகக் கொடுக்கமுடியும். ஆயினும் அறுவடை ஏற்படும் பல மாதங்களுக்கு முன்னரே மில் முதலாளியிடமோ உள்ளூர்த் தரகரிடமோ, அல்லது கடன் கொடுப்போரிடமோ பணயமாக வைத்துக் கடன் வாங்கியிருக்கக்கூடும். இந்நாட்டிலுள்ள கூட்டுறவு நிறுவனங்களை விரல் விட்டு எண்ணத் தகும். ஒரு சில நிறுவனங்களே செம்மையாக வர்த்தகம் புரிகின்றனவே அன்றி இதர நிறுவனங்கள் கடன் வசதியும், சந்தை வசதியுமின்றி வேலை செய்து வருகின்றன. இக்கூட்டுறவு நிறுவனங்கள் தங்களிடையே போதிய நிதி வசதி பெற்றிருப்பின் விவசாயிகளுக்குத் தக்க பயிர், கடன்களைக் கொடுத்து உதவிபுரிய முன்வந்திருக்கும். இதனால் பெருமளவில் விவசாயிகளுக்கு உதவி அளிக்கும் என்பதில் சிறிதும் ஐயமில்லை. ஆனால், அடிப் படையில் உடனே ஏற்படவேண்டிய மாறுதல் என்னவெனில் இவர்கள் உழைத்து இட்ட விளைச்சலைக் கூட்டுறவு நிறுவனங்கள் மூலம் விற்பனை செய்தால்தான் தக்க பலனைக் காணலாம். தற்போதுள்ள நிலைமையில் கூட்டுறவு விற்பனைச் சங்கங்கள் நிதி வசதி அற்றும் தொழில் நுட்பவசதி அற்றும் உள்ள காரணங்களால் செயலற்றுப் பெருமளவில் வர்த்தகம் செய்ய இயலாது வாளாயிருக்கின்றன.

முன்னர் விளக்கியுள்ள பல்வேறு காரணங்களை முறைப் படுத்திக் கூட்டுறவின் தோல்விக்கு மூன்று காரணங்களை இங்கு விவரிக்கலாம்: (i) பதனப்படுத்துதல், விற்பனை செய்தல், கடன் வசதிபெறல் இம்மூன்றினுக்கும் உள்ள தொடர்பைத் தெளிவுறப் புரிந்துகொள்ளாத நிலைமையில் இருத்தல், (ii) இத்துறைகள் அனைத்திலும் பலமுள்ள தனி மனிதர் போட்டி அதிகம் ஏற்பட்டிருத் தல், (iii) கிராமக் கடன் வசதி மிகவும் பூஞ்சையான நிலைமையில் இருத்தல் மற்றொரு காரணமாகும்.

**22. விவசாயமற்ற இதர கிராம உற்பத்தி வகைகள்:** தேறிய வர்த்தகம் என்ற தலைப்பின்கீழ் விவசாயப்பொருள் பதனம், விற்பனை, கடன் இவைகளையும் விவசாயத் தொழில் சம்பந்தமுள்ள இதர பொருள்களையும் கிராம உற்பத்திக்குத் தேவையுள்ளவைகளை யும் இங்கு விளக்குவோம். பால்பண்ணை நடத்தல், கால்நடை வளர்த்தல் இவைகளைக் கலப்பு விவசாயத்துடன் இணைக்கலாம். இவற்றுடன் கிராமக் குடிசைக் கைத்தொழில்களையும் சேர்க்கலாம். தனியார் நிதி, வர்த்தகம் இவைகளுக்கெதிராகக் கூட்டுறவு நிறு வனங்கள் போட்டியிட்டு வெற்றி காண இயலாது நிற்கின்றன. மேலும் சீரமைந்த பெருந்தொழில்களின் போட்டியாலும் இவை மேற்கொண்டு அவதியடைகின்றன.

**23. சமுதாய மனோநிலை சம்பந்தமான காரணங்கள்:** கூட்டுறவு முறையின் உள்ளும், புறமும், அதாவது இன்சூரென்சு, பாங்கு முறைகளின்மூலம் கூட்டுறவு நிறுவனங்களுக்கு உதவியும் பணவசதியும் கிடைக்குமென்று கருதப்பட்டு வந்தது. ஆனால் மாறாக எதிர்ப்பும் போட்டியும்தான் அதிகரிக்க ஆரம்பித்துள்ளன. அதே போல் கூட்டுறவு முறையிலும் சில கடன் சங்கங்களும் உறுப்பினர்களுக்கான தனிப்பட்ட ஒரு சொத்து எனக் கருதி, பிற வகுப்பினரைச் சேர்க்காதும், புகவிடாதும் தடுத்துவரும் மதியீனம் என்னே! நிலக் கிழார்கள் உறுப்பினராயின் இவர்களைச் சேர்ப்பதில்லை. அதேபோல் நகர மாந்தர் உறுப்பினராகி விவசாயிகள் மீது சிறிதளவேனும் பரிவு காட்டாது கூட்டுறவு முறையைப் பயனற்றதாக்கிவிடுவர். அதேபோல் மத்திய நில அடைமான பாங்குகள், மத்திய கூட்டுறவுப் பாங்கு முதலிய நிறுவனங்களில் சக்திவாய்ந்த உறுப்பினர்கள் தோன்றி, கிராமச் சிறு குடியானவர்களின் இடர்ப்பாடுகளைக் கண்ணுருது, தான் தோன்றித் தனமாக நடந்துகொண்டு கூட்டுறவின் மேம்பாடான கொள்கையைப் புறக்கணிக்கின்றனர். தலைமைக் கூட்டுறவுப் பாங்கினர் தனி மனிதர், வர்த்தகர் ஆகியோருக்கு முன் பணக் கடன் வசதியில் காட்டும் ஊக்கம் கூட்டுறவுச் சங்கங்களுக்குக்

கொடுப்பதில் இல்லை. நில அடைமான பாங்குகள் பழங்கடனை நீக்க உதவிபுரிகின்றனவே ஒழிய, நிலச் சம்பந்தமான செலவுகளுக்குப் பணவசதி யளிப்பதில்லை. கூட்டுறவுப் பாங்குகள் கடன் கொடுப்பதற்குக் கோரும் ஈடு, பொருள் மதிப்பு உள்ளதா என்று கவனித்து வருகின்றன. எனவே வாங்கும் கடன், உற்பத்தி முறைகளுக்குப் பயன்படுகின்றதா என்று கண் காணிப்பதில் செலவும் அலைச்சலும் அதிகப்படுகின்றன.

**24. கூட்டுறவு அமைப்புகளும் செம்மாந்த வாழ்வும் :** மூன்ருவது கொள்கையான செம்மாந்த வாழ்வு என்பது கூட்டுறவின் அடிப்படையிலே ஊறியுள்ளது. இந்தக் கொள்கை அதிகப்படியாக வலியுறுத்தப்படுகிறது. அகில இந்தியக் கிராமக் கடன் சர்வே அறிக்கை இதைப்பற்றி விளக்கம் தரும்போது கூட்டுறவின் முதல் இரண்டு கொள்கைகளைத் தேறிய முறையில் நடத்தப் போதிய வன்மை பெருத காரணத்தால் செப்பிடு வித்தை போன்று ஏதோ கூட்டுறவைப்பற்றி ஒரு சில வார்த்தைகள் கூறிப் பொறுப்பைத் தட்டிக் கழிக்க முற்படுவதேயாகும். தேறிய விவசாயத்திலுைம் தேறிய வர்த்தகத்திலுைம் எவ்வகைப் பலனும் பெருத காரணத்தால் அவர்கள் இந்த மூன்ருவது கொள்கையாகிய செம்மாந்த வாழ்வைப் பற்றிக் கண்ணும் கருத்தும் காட்டாதது அடிப்படைக் காரணமென்று கருதி, இதை ஊக்குவிக்க முயல் கின்றனர். ஆயினும் உண்மை இதற்குப் புறம்பானது எனலாம். செம்மாந்த வாழ்வு தோன்றிய பின்னர்த் தேறிய விவசாயமும், தேறிய வர்த்தகமும் ஏற்படுமா அல்லது தேறிய வர்த்தகமும், தேறிய விவசாயமும் ஏற்பட்ட பின்னர் செம்மாந்த வாழ்க்கை ஏற்படுமா என்று நோக்கினல் பின்னர்க் கூறியதே சரி என்று புலப்படுகிறது.

**25. இதன் தோல்விக்கான அடிப்படைக் காரணங்கள் :** அகில இந்தியக் கிராமக் கடன் சர்வே அறிக்கையாளர்கள் இது இந்தியாவில் வெற்றி பெருமல் போனதற்குக் காரணங்கள் சிலவற்றை விளக்கியுள்ளார்கள். வர்த்தக வளர்ச்சியும் காலணி முறையும் தொழில் வளர்ச்சியும் நகர்ப்புறங்களின் தோற்றமும் சமூகத்தில் குடிகொண்டுள்ள பல்வேறு பிற்போக்குச் சக்திகளும் கொள்கைகளும் மதக் கோட்பாடுகளும் சிறிய விவசாயப் பகுதிகளும் குழப்பமுள்ள நில உடைமைகளும் அறியாமையும் பயிற்சியின்மையும் நடத்தத்தகும் தொழில் நுட்பப் பணியாளர் இல்லாமையும் போக்குவரத்து வசதியின்மையும் ஆகியவைகளே முக்கிய காரணங்களாகக் கருதலாம். ஒரு நூற்ருண்டாக நகர

வாழ்க்கை முன்னேறிப் பணத்தின் அவசியம் அதிகரித்து, கிராம வாழ்க்கையின் சுயதேவைப் பூர்த்தியை அகற்றி, எவ்வகையினும் பயன்படாது செய்துவிட்டது. நகர வாழ்க்கைக்கு அடிகோலியது காலனி வாழ்க்கையாகும். இதை யொட்டிப் பாங்கு, இன்சூரன்சு முதலிய நிதி நிறுவனங்கள் வளர்ந்து பொது வர்த்தகத்திற்கு அடிகோலின. இவைகளுக்கிடையே உள்ள தொடர்பு வன்மையாக வளர்ந்துகொண்டே வர ஆரம்பித்தது. காலனி ஆட்சி முறையில் மாற்றங்கள் ஏற்பட்டுங்கூட, வர்த்தக முறையிலும் பாங்கு முறையிலும் எவ்விதமான மாற்றமும் ஏற்படவில்லை. எனவே மக்களாட்சி தோன்றியும் கூட்டுறவு முறையில் எவ்வித மாறுதலும் வளர்ச்சியும் ஏற்படவில்லை.

# 12. அகில இந்தியக் கிராமக் கடன் சர்வே

**1. அகில இந்தியக் கிராமக் கடன் சர்வே :** 1951-ல் ரிஸர்வ் பாங்குத் தலைவர் திரு. பி. ராமராவ் கூட்டிய மாநாட்டில் கலந்து கொண்ட கூட்டுறவுப் பயிற்சியாளர்கள், பொருள்துறை வல்லுநர்கள், இதர ஆட்சியாளர்கள் ஆகியோர் இந் நாட்டில் கிராமக் கடன் சர்வே ஒன்று நடத்தவேண்டும் என்றனர். இதற்கென நெறியாளர் குழு ஒன்றையமைத்து, இதை நடத்துவதென முடிவாக்கி, இந் நாட்டின் பல பாகங்களில் உள்ள அநேக மாவட்டங்களில் குறிப்பாக, 75 மாவட்டங்களில் உள்ள 600 கிராமங்களில் 1,27,343 குடும்பங்களை எடுத்து விசாரணை நடத்தி, புள்ளி விவரம் மூன்று புத்தகங்களாக வெளியிடப்பட்டுள்ளது. முதல் புத்தகத்தில் சர்வே அறிக்கையின் விவரமும், இரண்டாவது புத்தகத்தில் பொது அறிக்கையும், மூன்றாவது புத்தகத்தில் தொழில் நுட்ப அறிக்கையும் வரையப்பட்டுள்ளன. பொது அறிக்கையின் சுருக்கம், வரும் பக்கங்களில் கொடுக்கப்பட்டுள்ளது.

**2. நோக்கங்களும் தேவைகளும் :** ஒவ்வோர் அறுவடை முடிந்த பின்னரும் விவசாயி அடுத்த பருவத்திற்கான வேளாண்மைக்கு வேண்டிய தொகையை ஒதுக்கிவைக்க முடிவதில்லை. மேலும், தன் குடும்பச் செலவிற்கும் போதிய தொகை எடுத்து வைப்பதில்லை. அவனுக்குத் தேவையான கடன் தொகை, உற்பத்திக்கும் நுகர்விற்கும் ஏற்றதாக இருக்கவேண்டும். விவாகம், மரணம் முதலிய சடங்குகளுக்கென அதிகப்படியாகக் கடன் வாங்கி, வீணே செலவு செய்கிறான். அவனது உபதொழில்களை விஸ்தரித்திருந்தால் இவ் வகையில் பெரிய கடன் சுமையைத் தாங்கவேண்டிய நிர்ப்பந்தம் இல்லையெனலாம். அவனது சிக்கன வாழ்க்கைக்கு ஏற்றவாறு குடிசைத் தொழில்களைப் பகுதிநேர உழைப்பாகக் கருதிச் செய்யலாம். ஒருங்கமைந்த கிராமக் கடன்

முறை கீழ்க் கண்டவாறு அமைதல்வேண்டும். (1) கிராம உற்பத்தியை அதிகரித்துக்கொண்டு வரவேண்டும் என்ற அடிப்படைக் கொள்கையுள்ள இராச்சியக் கொள்கைக்கு ஏற்றவாறு அமையவேண்டும். (2) தனியார் கடன் கொடுக்கும் முறைகளிலும் மேம்பாடாக இந்தக் கடன் கொடுக்கும் நிறுவனம் அமையவேண்டும். (3) போதிய பண வசதியும் இதைத் தக்க முறையில் நடத்த அனுபவம் பெற்ற செயல்புரிவோரும் அவசியம். (4) இதன் செயல்களாவன : (அ) நீண்டகால, மத்திய கால, குறுகிய காலக் கடன் வசதி செய்தல் (ஆ) விவசாயியின் உதவிக்கெனச் சரக்கினைத் தரப்படுத்திச் சந்தைக்கு அனுப்புதல் முதலிய காரியங்களைக் கவனித்து, அவனுடைய பொருள் நிலையைச் சீராக்குதல் (இ) அரசினருடன் இணைந்து விவசாயிக்குச் சீரான முறையில் விவசாய முறைகளைப் படிப்பித்து, முயற்சியை வீணடிக்காமல் மேம்பாடு அடையும் முறைகளைப் போதிக்கலாம். (5) மத்திய, சிறிய குடியானவர்களுடைய அமைப்பில் அதிக ஊக்கம்காட்டி அவர்களது நிலத்தின் ஈட்டிலும், இதர ஜாமீன் முறைகளிலும் அல்லது அறுவடையை எதிர்நோக்கியும் கடனுதவி அளிக்கலாம். (6) கடன் முறைகளைச் சீரிய வகையில் கண்காணித்து வரவேண்டும். (7) கிராம அடிப்படையிலிருந்து கூட்டுறவு முறையைப் போற்றி வளர்த்து அதைச் சீரிய அமைப்பாக ஏற்பாடு செய்யவேண்டும்.

**3. நடப்பிலுள்ள கடன் தரும் அமைப்புகள் :** அடுத்து வரும் அட்டவணையில் விவசாயிகளுக்கு எந்தெந்த வகையினர் கடன் கொடுக்கின்றனர் எனச் சுட்டிக் காட்டப்பட்டிருக்கிறது.

விவசாயிகளின் மொத்தக் கடனில் 3% கூட்டுறவு நிறுவனங்கள் மூலம் கிடைக்கிறது.[1] கூட்டுறவு நிறுவனத்தால் கொடுக்கப்படும் கடன்கள் நில உரிமை உடையவர்களுக்கே என நியமமிடப்பட்டுள்ளது. உற்பத்திப் பொருள்களைக் கூட்டுறவு முறையில் விற்கச் சம்மதித்தால் அதன் ஈட்டிலேயே கடன்கொடுக்கச் சம்மதிக்கின்றனர். கூட்டுறவு முறையில் இந் நாட்டில் விற்பனை மிகவும் குறைவாகவும் வளர்ச்சியற்றும் உள்ளது. கூட்டுறவுக் கடன் முறை கூட்டுறவு விற்பனையைவிட அதிகம் தேர்ச்சியடைந்துள்ளது. ஆனபோதிலும், அதிகப்படியான வேளாளர் குடும்பங்கள் இக் கூட்டுறவு முறையைப் பயன்படுத்திக் கொள்ள இயலவில்லை. அநேக பகுதிகளில் இதுகாறும் கூட்டுறவு முறை

*1. இது சராசரி சதவீதம். பம்பாய் இராச்சியத்தில் கூட்டுறவு முறையில் விவசாயிகளுக்குக் கொடுக்கப்படும் கடன் மொத்தக் கடனில் 10 சதவீதம் ஆகும்.*

விஸ்தரிக்கப்படவில்லை. இது பரவியுள்ள பெரும்பகுதிகளிலும் உழவர் குடும்பங்கள் அனைத்தும் உறுப்பினராகச் சேரவில்லை. அதிகப்படியான கடன்தேவைகளைக் கூட்டுறவு உறுப்பினர்கள் கூட, கூட்டுறவு முறையிலன்றி இதர முறைகளிலேயே பெறுகின்றனர்.

| கடன் கொடுக்கும் அமைப்பு | மொத்தக் கடனில் சதவீதம் |
|---|---|
| அரசினர் | 3.3 |
| கூட்டுறவு முறை | 3.1 |
| வர்த்தக பாங்குகள் | 0.9 |
| உறவினர் | 14.2[1] |
| நிலக்கிழார் | 1.5 |
| விவசாயிகளும் பணம் கடன் கொடுப்போரும் | 24.9 |
| தொழிலில் ஈடுபட்ட கடன் கொடுப்போர் | 44.8 |
| வர்த்தகர்களும் தரகர்களும் | 5.5 |
| இதரர்கள் | 1.8 |
| மொத்தம் | 100.00 |

மத்திய அரசினராலும், இராச்சிய அரசினராலும், தக்காவிக் கடனாகவும், அதிக உணவு வளர்ச்சித் திட்டத்தின்கீழ்க் கடன் கொடுத்தலும் கிட்டத்தட்டக் கூட்டுறவு முறையின் கீழ் 3% அளவில் உள்ளதெனலாம். ஆயினும், இத் தக்காவிக் கடன்கள் மிகவும் குறைவாகவும் போதாததாகவும் இருக்கின்றன. அரசினர் அளிக்கும் கடனுதவிகளில் கூட்டுறவுக் கடனுதவி போன்று பெரிய நிலக்கிழார்களுக்கே வாய்ப்பு அளிக்கப்படுகிறது. மத்திய அல்லது சிறு நிலக்கிழார்களுக்கு இதனால் எவ் வகையிலும் பலனில்லை எனலாம். பயனுள்ள வகையில் இக் கடன் வசதிகளை நிலக்கிழார்கள் பெறுகின்றனரா என்று கண்காணிக்க அரசினரின் மேற்பார்வை எவ்வகையிலும் இல்லை எனலாம்.

வர்த்தக பாங்குகள் நிலக்கிழார்களுக்கோ விவசாயிகளுக்கோ கடன்வசதி மிகக் குறைவான அளவில்தான் செய்துவருகிறார்கள்.

1. உறவினர்கள் வட்டியின்றிக் கடன் கொடுக்கின்றனர் என்பதைக் குறிக்கும்.

அது மொத்தக் கடன் வசதிகளில் 1%க்கும் குறைவாகவே இருக்கிறது. இவைகளும் இம்பீரியல் பாங்கு உட்பட இதர பாங்குகளும் பணப்புழக்கம், மற்றும் வர்த்தகம் அதிகமான பகுதிகளில்தான் அவ்வப்போது கடன் வசதியளித்து வருகின்றன. அதிக வளர்ச்சி பெருத உணவுப் (subsistence) பகுதிகளைக் கவனிப்பது இல்லை. இந்தப் பகுதிகளில் கூட்டுறவுப் பாங்குகளும், கூட்டுறவு நிறுவனங்களும் வளர்ச்சியடையவில்லை.

விவசாயி பெறும் கடனளவில் 70% பணம் கடன் கொடுப்போர்களும் வர்த்தகர்களுமே கொடுக்கின்றனர். கடன் என்ன செலவிற்கென்றோ அல்லது என்ன அவசியத்திற்கென்றோ கேளாது அபரிமிதமான பெரும் வட்டியளவில் கடன் கொடுக்கிருர்கள். வர்த்தகரோ உற்பத்திக்கென வேண்டிய அளவு கடன் கொடுத்து, மிகவும் குறைவான விலை விகிதத்தில் பெறுகிருர். மிகவும் வறிய பொருளாதார நிலையுள்ள பகுதியிலும், உணவு உற்பத்தி வட்டாரத்திலும் உணவு உற்பத்தி உள்ளூர் தேவைக்கு மட்டிலுமே செய்ய இயலும் என்றால் கடன் கொடுப்போர்கள் நிலமனைத்தையும் பிடித்துக்கொண்டு விடுவார்கள். வர்த்தகர்களோ பொதுவாக ரொக்கப்பயிர் சம்பந்தப்பட்ட வரையிலும் தீவிரமாக இருப்பார்கள். எங்கும் பணம் கடன் கொடுப்போரின் ஆட்சி மிகவும் கடுமையாக இருக்கும்.

**4. வருங்காலக் கொள்கையின் அடிப்படை :** கிராமத்தில் எந்த வகையான கடன் உதவியளிக்கும் நிறுவனமும் கூட்டுறவுச் சங்கத்தைப் போன்று வளர்ச்சி பெருது. தனியாரிடமிருந்து பெறும் கடனுதவி, திட்டப்படி அதிக உற்பத்தி செய்யவேண்டும் என்றபோது பயனற்றதாகிறது. எனவே, ஒரு நிறுவனம் மூலமாகக் கடன் பெறுதல்தான் பயனுள்ளதாகும். இதைக் கூட்டுறவு மூலமாகப் பொதுமக்களுக்குக் கிடைக்கும்படி செய்யவேண்டியது அவசியம். ஆயினும், நிறுவனங்கள் பெரிய நிலக்கிழார்களுக்கே பணியாற்றுகின்றன. கிராமங்களிலுள்ள சிறிய நிலக்கிழார்களுக்கும் இவ் வசதி கிடைக்கவேண்டுமானால் கூட்டுறவுச் சங்கங்கள் அவசியம். 'கூட்டுறவு முறை தோல்வியுற்றது. ஆயினும் அது வெற்றிபெற வேண்டுவது அவசியம்'. இதுதோல்வியுறக் காரணங்கள் என்ன என்பதை அலசிப் பார்த்து வெற்றிபெற நாம் என்ன செய்யவேண்டும் என்று கவனிப்போம். [1]

**5. இராச்சியக் கூட்டமைப்பு :** கிராமத் தேவைகளைச் சரிக்கட்டவும், எதிர்ப்புகளைச் சமாளித்தும், தனக்கெனச் சுயவசதிகளைச்

1. இதைப்பற்றிய விளக்கம் காண அதிகாரம் 9, பகுதி 21-5 பார்க்க.

செய்துகொண்டு பிறரை வஞ்சிக்கும் தனியார்களை எதிர்த்தும் அமையக் கூடிய ஒரு நிறுவனம் கூட்டுறவு முறை. அது அரசினரால் மட்டுமே ஏற்று நடத்தப்படலாம். அரசினரின் ஒத்துழைப்பு, பண உதவி, கொள்கையைப் பரப்புதல் ஆகியவைகளுடன், உற்பத்தி, கடனுதவி, பதனப்படுத்துதல், வியாபாரம் முதலியவைகளுக்கு அரசினரின் உதவி இன்றியமையாததெனலாம்.

**6. கிராமக்கடன் இணைப்புமுறை:** கிராமக்கடன் முறைகளைச் சீரமைப்பதற்காகத் திட்டம் வகுக்கப்பட்டுள்ளது. அவைகளின் அடிப்படைக் கொள்கைகளாவன: (1) பல தரங்களில் அரசினரின் உதவிபெறல். (2) கடனுக்கும் இதர பொருளாதாரப் பணிகளுக்கும் ஓர் இணைப்பு ஏற்படுத்தல். (3) நல்ல பயிற்சி பெற்ற பணியாளர்களைக்கொண்டு கிராம மக்களுடைய தேவைகளை அறிந்து அதன்படி உதவி அளித்து செம்மையான முறையில் நடத்துதல். இந்தத் திட்டத்தின் முக்கிய குணங்களாவன:

(i) **கடன் வசதி:** கிராமக் கூட்டுறவுக் கடன் வசதியளிக்க இராச்சிய அரசின் கூட்டுத் தேவை. இது கடன் வசதியைப் பெருக்கியும், உற்பத்தியை அதிகரித்தும் கிராம விவசாயிக்கு வசதியளிக்கப் பேருதவியாக இருக்கும்.

(ii) **பதனப்படுத்தி, சேமித்து, பண்டகசாலையில் இட்டு, விற்பனை செய்தல்:** இராச்சியத்தின் கூட்டமைப்பில் நிதி உதவியும், கூட்டும் பெற்று, கூட்டுறவு நிறுவனங்கள் நல்ல முன்னேற்றத்தை அடைகின்றன. அவைகள், தங்களது உற்பத்தியான சரக்குகளைப் பதனப்படுத்தி, சேமித்து, பண்டகசாலைகளில் இட்டு வைக்க வேண்டிய அளவு முன்னேற்றம் பெறுகின்றன. தேசியக் கூட்டுறவு வளர்ச்சியும் பண்டகசாலை நிறுவனம் ஒன்றைத் துவக்க முடிவு செய்துள்ளனர். அகில இந்தியப் பண்டகசாலை (All-India Warehousing Corporation) நிறுவனம், மற்றும் இதர இராச்சிய பண்டகசாலை அமைப்புகளை ஏற்பாடு செய்ய ஆலோசித்து வருகின்றது.

(iii) **இதர பொருளாதாரப் பணிகள்:** இராச்சியக் கூட்டமைப்பில் விவசாயிகளுக்குக் கூட்டுறவு முறையின்கீழ் விவசாயிகள், உழவர்கள், கிராமக் கைவினைஞர்கள் ஆகியோருக்குப் பண்ணைத் தொழில், நீர்ப்பாசன வசதி, உர வசதி, விதைகள் முதலியவற்றைக்கொடுத்தும் கால் நடை முன்னேற்றத்திற்குப் பால்பண்ணைகளுக்கு உறுதுணையாக நின்றும், கிராமக் குடிசைத் தொழில்களுக்கான உதவியும் அளிக்க வேண்டுமெனக் கூறப்பட்டது.

(iv) **வர்த்தகப் பாங்கு வசதி :** கிராமக் கூட்டுறவுப் பாங்கு முறை வளர்ச்சிபெற்றுக் கிராமத்தில் வர்த்தகம் தழைத்தோங்கவும், இந் நாட்டின் எல்லாப் பகுதிகளிலும் அரசினரின் கூட்டமைப்பு கொண்டு, நிதி வசதியை மேற்கொண்டு ஒரு பகுதியினின்று, மற்றொரு பகுதிக்கு மிகக் குறைந்த செலவில் பணமாற்றம் செய்யவும், முன்னேற்றம் அடையாப் பகுதிகளில் பாங்கு வசதி அமைக்கவும் இது உதவி செய்யவேண்டும்.

(v) **பயிற்சி :** கிராமப் பணியிலீடுபட்ட அனைவருக்கும் போதிய பயிற்சி கொடுக்கப்பட்டு, கிராமமென்ற வெறுப்பினை அகற்றி, அவர்கள் சீரிய முறைகளில் பணிபுரிய வசதியளிக்க வேண்டும்.

(vi) **இராச்சியக் கூட்டமைப்பும், இராச்சியத் தலையீடும் அதில் ஏற்படும் இடையூறுகளும் :** எந்தெந்தப் பகுதிகளில் அரசினர் தலையீடு இருக்கும் என்றும், அது தேவையுள்ளதா என்பதைப் பற்றித் தீவிர ஆலோசனை செய்தும், அம்மாதிரியான சர்க்கார் தலையீட்டைக் கட்டுப்பாடு செய்ய எம்முறைகளைக் கையாளவேண்டும் என்று கருதலாம். (அ) குறிப்பிட்ட ஒரு கால வரம்பினுள் இராச்சியக் கூட்டுப் பங்கினை மாற்றியமைத்து அதற்கீடாகக் கூட்டுறவு முறையை அமைக்க எவ்வகை முயற்சிகள் செய்யவேண்டும் என்றும் (ஆ) உயரிய அமைப்பில் எந்த எல்லை வரையிலும் இராச்சிய அரசினரின் கூட்டமைப்புடன் தனி வர்த்தகர்களின் போட்டியைச் சமாளிக்க எவ்வகை அமைப்பு வேண்டும் என்றும் முடிவு செய்யப்பட்டது.

(vii) **நிதியும் செல்வமும் :** சீரான முறையில் பணவசதி செய்து கொடுக்கவேண்டுமானால் கீழ்க்கண்ட தனிப்பட்ட நிதிகள் துவக்கப்பட வேண்டும். (அ) ரிசர்வு பாங்கின் ஆதரவில் தேசீய விவசாயக் கடனுக்காக (நீண்டகால வசதிக்கு) என்று (5 கோடி, ஆண்டுதோறும் திரும்பத் திரும்ப ஒதுக்கப் பெறுதவை ரூ. 5 கோடி) தேசீய விவசாயக் கடன் (திடப்படுதல்) நிதி (ஆண்டு தோறும் ரூ. 1 கோடி) (ஆ) விவசாய உணவு இலாக்காவின் ஆதரவில் தேசீய விவசாயக்கடன் (உத்தரவாதமும் இடையூறு நீக்கமும்) நிதி (ஆண்டுதோறும் ரூ. 1 கோடி) ; (இ) தேசீயக் கூட்டுறவு வளர்ச்சி நிதியினின்றும் பண்டகசாலை வளர்ச்சி நிதியினின்றும் (ரூ. 5 கோடி ஆண்டுதோறும் இவ்விரண்டிற்கும் பிரித்துக் கொடுத்தல்; மேலும் திரும்பத் திரும்ப ஒதுக்கப்படாது ரூ. 5 கோடி, பின்னர்க் கூறப்பட்ட நிதியினின்றும் ; (ஈ) இராச்சிய பாங்கின் ஒருங்கிணைப்புப் பகுதியினின்றும் (உ) இராச்சிய அரசினரின் விவ-

சாய இலாக்காவிலிருந்தும் (உத்தரவாதமும் இடையூறு நீக்கமும்) இராச்சியக் கூட்டுறவு வளர்ச்சி நிதிப் பகுதியிலிருந்து (ஊ) இராச்சியக் கூட்டுறவுப் பாங்கு, மத்திய கூட்டுறவுப் பாங்கு இவைகளிலிருந்து விவசாயக் கடன் (திடப்படுத்தல்), நிதி உருவாக்கல்.

விளக்கம் செய்யப்பட்ட 5 தேசீய நிதிகளில் (அ, ஆ, இ பிரிவுகளில்) சொல்லப்பட்டவை தனிப்பட்ட வகையில் முக்கியமானவை. இவற்றிற்கென ஒதுக்கப்படும் தொகைகளைப் பற்றிய விளக்க விசாரணை 5 ஆண்டுகள் கழித்துச் செய்யப்படும்.

**7. கூட்டுறவு முறையின் கடன் வளர்ச்சியில் ரிஸர்வ் பாங்கின் ஈடுபாடு :** (i) இராச்சிய அரசினர்களுடன், ரிஸர்வ் பாங்கும் கூடி, ஆலோசனை நடத்தி, கூட்டுறவுக் கடன் நிறுவனங்களை எவ்வகையில் உருவாக்கிச் சீர்படுத்தி அமைக்கவேண்டும் என்பதைக் குறித்துத் திட்டங்களைத் தயாரிக்க வேண்டும். இதற்கெனச் சட்டத்தின் வாயிலாக ரிஸர்வ் பாங்கு இராச்சிய அரசினர்களுக்கு அவ்வப்போது நீண்டகாலக் கடனுதவி அளிக்க முன்வர வேண்டும். இம்மாதிரியான ஏற்பாட்டின்கீழ் இராச்சிய அரசினர் நேர்முகமாகவோ அல்லது மறைமுகமாகவோ இராச்சியக் கூட்டுறவு பாங்குகள், மத்தியக் கூட்டுறவு பாங்குகள் பெருவாரி அடிப்படைக் கூட்டுறவுக் கடன் சங்கங்கள், மத்திய நில அடைமான பாங்குகள், ஆதார நில அடைமான பாங்குகள் இவைகளின் மூலதனத்தில் போதிய அளவு பங்கெடுத்துக் கொள்ளலாம். இதற்குத் தேவைப்படக் கூடிய கடனை, தேசீய விவசாயக் கடன் (நீண்டகாலத் தொழிலுக்கு) நிதியினின்றும் பெறலாம்.

(ii) இராச்சிய அரசினரின் உத்தரவாதத்தை யேற்றுக் கொண்டு அதன் நிமித்தம் இராச்சியக் கூட்டுறவு பாங்குகளுக்குக் குறுகிய காலக் கடனுதவி அளிக்க ரிஸர்வ் பாங்கு முன்வர வேண்டும். 15 மாதங்களுக்குக் குறைவுபடாமலும், 5 ஆண்டுகளுக்கு அதிகப்படாமலும் மத்திய காலக் கடன் வசதி மேற்படி பாங்குகளுக்கு அளித்தல் வேண்டும். இராச்சியக் கூட்டுறவு பாங்குகள் வழியே மத்தியக் கூட்டுறவு பாங்குகளுக்கும், சங்கங்களுக்கும் இவ் வசதியளிக்கப்பட வேண்டும். இம்மாதிரியான உதவிக்கடன் உச்ச எல்லை (வரம்பினை) ரூ. 5 கோடி என்பதை நீக்கிவிட வேண்டும்.[1] கூட்டுறவுப் பாங்குகள் தங்கள் வசம் எவ்வளவு நிதி வைத்துக் கொள்ளவேண்டும் என்ற கட்டுப்

1. இது சம்பந்தமான விவரங்கள் 10 வது அதிகாரத்தில் 17ஆம் பத்தியில் காண்க.

பாட்டையும் தளர்த்திவிட வேண்டும் என்று கோரப்படுகிறது. இராச்சியக் கூட்டுறவுப் பாங்கு, மத்தியக் கூட்டுறவுப் பாங்கு இவைகளை யனுசரித்து நிலைமையை ஆராய்ந்து, ரிஸர்வு பாங்கு எவ்வளவு தொகை வைத்துக் கொள்ளலாம் என்று வரையறை செய்வது சரியான முறையாகும்.

(iii) நில அடைமான பாங்குகளுக்கு நீண்டகாலப் பண வசதியை ரிஸர்வ் பாங்கு கொடுத்தல் மிகவும் நல்லது. (இந்த உதவி சுமார் 5 ஆண்டுகளுக்கு மேலாக இருக்க வேண்டும்.) இம்மாதிரியான கடன் வசதியை (அ) நேர்முகமாகக் கடன் கொடுத்தும் (ஆ) இந்தப் பாங்குகள் வெளியிடும் டிபெஞ்சர்களைச் சில்லறையாகவும், மொத்தமாகவும் ரிஸர்வ் பாங்கு வாங்கிக் கொள்ளலாம். தேசீய விவசாயக் கடன் (நீண்ட காலச் செயல் முறை) நிதியிலிருந்தும் பெறலாம். இதற்கான அசலுக்கும், வட்டிக்கும் இராச்சிய அரசினர் உத்தரவாதம் அளிக்க வேண்டும்.

(iv) மழையின்மை, பஞ்சம் முதலிய இயற்கையால் ஏற்படும் விபரீத காலங்களில் கூட்டுறவுச் சங்கங்கள் தாங்கள் பெற்ற குறுகிய காலக் கடன்களை, ரிஸர்வ் பாங்கிடம் திரும்பக் கொடுக்க இயலாது என்ற காரணத்தாலும், அவ்வாறு கொடுக்க முற்படின் கூட்டுறவுச் சங்கங்கள் தங்களது கூட்டுறவுக் கொள்கையை நடத்தவேண்டிய மூலதனத்தைப் பாதித்துதான் கொடுக்க வேண்டும் என்ற நிலையேற்படின், அவ்வமயம் ரிஸர்வ் பாங்கு தேசீய விவசாயக் கடன் (வன்மைப்படுத்தல்) நிதியின் கீழ் மேற்படி குறுகிய காலக் கடன் தொகையை ஒதுக்கிப் பயன் படுத்தலாம். அவ்வமயம், ரிஸர்வ் பாங்கு இலாக்கா கணக்கிலும், தேசீய விவசாயக் கடன் வன்மைப்படுத்தல் நிதியிலும் மாற்றங்கள் செய்யப்படும். குறுகியகாலக் கடன் உண்மையில் கொடுத்ததுபோலக் காட்டப்பட்டு, மத்தியதரக் கடனாக மாற்றப் பட்டு, ரிஸர்வ் பாங்கின் வன்மையாக்கு நிதியினின்று கொடுத்த தாகக் காண்பிக்கப்படும். ரிஸர்வ் பாங்கு இராச்சியக் கூட்டுறவுப் பாங்குகளிலும், இம்மாதிரியான வன்மைபடுத்தும் நிதி ஏற்படுத்தி னால்தான் கடன்வசதி அளிக்கமுடியும் என்று கண்டிப்பாக வரையறை செய்யும். மத்தியக் கூட்டுறவுப் பாங்குகளுக்கும், பெரிய அடிப்படைக் கூட்டுறவுச் சங்கங்களுக்கும் இம்மாதிரியான முறையில் ரிஸர்வ் பாங்குகட்டளையிடலாம். இக் கடன் பகுதியில் ஏற்பட்டுள்ள அபரிமிதமான பொறுப்பைக் கூட்டுறவுக் கடன் வசதிக்கென எழுப்பப்பட்ட, வன்மைப்படுத்தும் நிதியினின்று ஈடு கட்ட வேண்டுமென்று வலியுறுத்தக் கூடும்.

(v) இந்த நிதிகள் எவ்வாறு அமைக்கப்படவேண்டும், துவக்கப்படவேண்டும், நடத்தப்படவேண்டும், அவைகளுக்கான திட்ட அமைப்புகள், கொள்கைகள் ஆகிய அனைத்தையும் ரிஸர்வ் பாங்கின் கண்காணிப்பில் விடப்பட்டு, அதற்கான போர்டு இவற்றைப்பற்றி ஆழ்ந்த கருத்துடன் ஆலோசனைகள் நடத்தும். ரிஸர்வ் பாங்கின் ஒரு முக்கிய பகுதியான விவசாயக் கடன் இலாக்கா மாற்றியமைக்கப்பட்டு, பலப்படுத்தப்பட்டு இதற்கென ஏற்பட்டுள்ள பொறுப்புக்களையும், புதிதாக வந்தடைந்த புதுப் பொறுப்புக்களையும் செம்மையாக நடத்தி வரும். இந்த இலாக்காவிற்கு ஆலோசனை கூற, பொறுக்கி எடுக்கப்பட்ட தொழில் உறுப்பினர்களும், நாட்டின் நலனைக் கருதுபவர்களும், இந்த ஆலோசனைக் குழுவில் பணியாற்றி வருவார்கள். தேசீயக் கூட்டுறவு வளர்ச்சி, பண்டகசாலை போர்டு (The National Co-operative Development and Warehousing Board) விவசாய உணவு மத்திய இலாக்கா ரிஸர்வ் பாங்கு ஆகிய அனைத்திற்கும் இவர்கள் ஆலோசனைக் குழுவினராக இருந்துவருவர்.

**8. மத்திய அரசினரின் கடமைகள் :** விவசாய உணவு மத்திய இலாக்கா தேசீய விவசாயக் கடன் (உத்தரவாதமும் தற்காப்பும்) நிதியைக் கூடியவரையிலும் பயன்படுத்தி இராச்சிய அரசினர் மூலம் கூட்டுறவுக் கடன் நிறுவனங்களுக்கு மான்யங்கள் கொடுத்து, அதன் மூலம் பெற இயலாத கடன்களை ஈடுகட்டும்படி உத்தரவிடும். வசூலிக்க இயலாத பாக்கிகள் வராத காரணத்தினால் நொடித்துப் போகும் என்ற நிலை ஏற்படின் அவ்வமயம் இந்திய விவசாய உணவு இலாக்கா நிலைமையை ஆராய்ந்து பஞ்சம், வெள்ளம் போன்ற மனித சக்திக்கு மீறிய காரணங்களால் உண்டான சூழ்நிலை எனக் கருதி அவைகளைப் பாதுகாக்கப் போதிய நிதி வசதி அளிக்க முன்வரவேண்டும். இதே குறிக்கோளுடன் இராச்சிய அரசினரும் விவசாயக் கடன் (உத்தரவாதமும் தற்காப்பும்) நிதியை அமைத்துக் கொள்ள வேண்டும்.

**9. இராச்சிய அரசினரின் கடமைகள்:** (i) இராச்சிய அரசினர் திட்டப்படி வகுக்கப்பட்ட கடன் வளர்ச்சிக்கான கொள்கைகளை நடத்தித் தரும் பொறுப்பை ஏற்றுக் கொள்ளவேண்டும். இதற்கென ரிசர்வ் பாங்குடன் ஆலோசனை நடத்தித் திட்டத்தை வகுக்க வேண்டும்.

(ii) தக்காவி போன்ற விவசாயக் கடன்களை இராச்சிய அரசினரின் நிதிகளிலிருந்தும், மத்திய அரசினரின் நிதியினின்றும்

கொடுக்கப் படும் பணவசதிகள் குறிப்பிட்ட அவலமான நிலைக்கென்றே கொடுத்தல் வேண்டும். பஞ்சம், மழையின்மை போன்ற காலங்களில் மட்டிலுமே இவ்வுதவி அளித்தல் அவசியம். இதற்கான விதிவிலக்குகளாவன : (அ) எங்கெல்லாம் கூட்டுறவுக் கடன்வசதியமைக்க இயலவில்லையோ அங்கெல்லாம் தக்காவி முறைக்கடன் வசதியளித்து உற்பத்தி செய்ய ஊக்குவிக்க வேண்டும். ஆனால் கூட்டுறவுக்கடன் நிறுவனங்களை உடனே அமைக்க முயலவேண்டும். (ஆ) தனிப்பட்ட கடன் கொடுக்கும் வசதியைச் சில வட்டாரங்களுக்கும் அல்லது சில பகுதி மக்களுக்கும் (பஞ்சம் நிரந்தரமாகக் குடிகொண்டுள்ள வட்டாரம், மிகவும் முன்னேற்றமற்ற குடிகள்) பயன் காணும் வகையில் அமைத்தல் இன்றியமையாதது.

10. **கூட்டுறவு இயக்கத்தின் கடமை :** (i) அமைப்பும் பணியாளர்களும் : (அ) ரிஸர்வ் பாங்கின் ஆலோசனையின் பேரில் இராச்சிய அரசினர் கூட்டுறவுக் கடன் நிறுவனங்களைத் திருத்தி அமைக்க ஒரு திட்டத்தை வகுக்க வேண்டும். (ஆ) இச்சீரமைப்பு, பெரும்பகுதி இராச்சியக் கூட்டுப் பங்குப் பொறுப்புள்ளதாய் அமையவேண்டும். இம்மாதிரியான கூட்டமைப்பிலும் மாவட்டக் கூட்டுறவுப் பாங்குகளிலும் தலைமைப் பாங்குகளிலும் இராச்சியத் தலைமை இருக்கவேண்டும். சுருங்கிய காலவரம்புக்கு அடிப்படை அல்லது ஆதாரக் (கூட்டுறவுச்) சங்கங்களில் இராச்சியப் பொறுப்பு இருக்கவேண்டும். (இ) பயிற்சி பெற்ற பணியாளர்களைக் கூட்டுறவு உயர்தர அலுவல்களைக் கண்காணிப்பவர்களாகவும், பெருமளவில் நடந்து வரும் அடிப்படைக் கூட்டுறவு நிறுவனங்களுக்குப் பொறுப்பேற்று நடத்தும் அதிகாரிகளாகவும் நியமிக்க வேண்டும். தேவைக்குரிய காலங்களில் இவர்களது மேம்பாடான உழைப்பினை அடிப்படைச் சங்கங்கள் பெற வசதியளிக்கவேண்டி, தற்காலிகமாக அவர்களை இந்த நிறுவனங்களில் பதிலாள் போன்று அனுப்பிப் பணியாற்றும்படி பணிக்கப்பட வேண்டும். பல்வேறு படிப்படியான அலுவலர்களைக் கூட்டுறவுப் பாங்கோ அல்லது இராச்சிய அரசினரோ நியமனம்செய்து தேவைக்கு ஏற்ப அனுப்புதல்வேண்டும். (சந்தைப்படுத்துதல், விற்பனை முதலிய பணிகளுக்கான பொறுப்பினை இராச்சிய அரசினர் ஏற்றுக் கொள்ளல் வேண்டும்). இராச்சியக் கூட்டுறவுப் பாங்கிற்குக் கடன் சம்பந்தப்பட்ட பயிற்சி கொடுக்கும் பொறுப்பே உள்ளது எனலாம். இராச்சிய அரசினரின் கூட்டுறவு இலாக்கா இருபெரும் பகுதிகளாக மாற்றியமைக்கப்படவேண்டும். (i) ஆட்சியாளர் பகுதி, (ii) தொழில் நுட்பப் பகுதி. எனவே, இதன் விளைவாக, இராச்சியக்

கூட்டுறவுப் பணியாளர் சர்வீசு (முதல்படிவம், இரண்டாம் படிவம்) இதையடுத்து, கூட்டுறவுக் கீழ்த்தரப் பணியாளர் சர்வீசு (Co-operative Subordinate Service) (ஆட்சியாளர் பிரிவு) அதேபோன்று தொழில் நுட்பக் கூட்டுறவுப் பணியாளர் பகுதி (முதல் படிவம், இரண்டாம் படிவம்) இதையடுத்துக் கூட்டுறவுக் கீழ்த்தரப் பணியாளர் சர்வீசு (தொழில் நுட்பம்) ஆகியவை அமையும். (ஈ) குறுகிய காலக் கடன் நீண்டகாலக் கடன் இவற்றிடையே இணைப்பு இருத்தல் மிகவும் அவசியம். ஒன்றுக் கொன்று சட்டப்படியும், நிதியின் பிரிவின்படியும் வேறு பட்டிருப்பினும் இராச்சியக் கூட்டுறவுப் பாங்கும் மத்திய நில அடைமான பாங்கும் ஒரே பணியாளர் குழாத்தை அமைத்துக் கொண்டும் பொது நெறியாளர் போர்டை அமைத்துக் கொண்டும் இருக்கலாம். பின் கூறியதில் சிரமம் ஏற்படின் இவ்விரண்டு போர்டிலும் பொதுவாகச் சில நெறியாளர்கள் பொறுக்கி எடுக்கப்படலாம். (உ) வருங் காலத்தில் அடிப்படைக் கடன் சங்கங்கள் வளர்ச்சிபெறக் குறுகிய பொறுப்பு இருத்தலே நலம். (ஊ) இராச்சியக் கூட்டுறவு பாங்கு, அடிப்படை சங்கங்கள், மத்தியக் கூட்டுறவுப் பாங்குகள் இவை தேசீய விவசாயக் கடன் நிதியைத் துவக்கியதுபோலத் தனிப்பட்ட விவசாயக் கடன் நிதிகளை உதவியாக அமைத்துக் கொள்ள வேண்டும்.

(ii) **மேற்பார்வையும் நடத்தலும் :** (அ) குறுகிய காலக் கடன் வசதியைப் பயிற்சிகளுக்கான கடனாகவும் உற்பத்திக்கான கடனாகவும் கருதலாம். விளைச்சலின்பொழுது ஏற்படும் செலவுகளுக் காகவே இக் கடன்வசதி அளிக்கப்படுகிறது. அறுவடையாகி விற்பனையின் பலனாக வரும் தொகையினின்று இக் கடன் திருப்பப் படுகிறது. இந்தக் கடன் பண்டமாகத் திருப்பப்படுதலே நலம். (ஆ) விவசாயிகளின் வாழ்க்கைக்குரிய செலவிற்கான தொகை களைக் கடனாகத் தரவேண்டும். (குறிப்பாக மணம், நோய் முதலியவற்றிற்கான செலவுகளைக் கொடுத்தல் வேண்டும்). கிராமக் கைவினைஞர்களையும் விவசாயிகளையும் மற்றவர்களையும் உறுப்பினராகக் கொண்ட "சீட்டு நிதி" (chit fund) ஒன்றைத் தொடங்கி அதையும் பெரும்பான்மையான அடிப்படைக் கூட்டு றவுச் சங்கத்தின் கடன் வசதிகளில் ஒரு பிரிவாக இணைக்க வேண்டும். (இ) மத்திய காலக்கடனை (15 மாதங்கள் முதல் 5 ஆண்டுகள் வரை) கூட்டுறவுக் கடன் முறையின் குறுகிய காலக் கடனாக அமைத்தல் வேண்டும். இது கால்நடைகளைக் கொள் முதல் செய்யப் பயன்படும். நீண்டகாலக் கடன் கொடுக்கும் பொறுப்பு நில அடைமான பாங்கிற்கு உரியதாகும். இந்தப்

பாங்கு ஒவ்வொரு இராச்சியத்திலும் சீரமைக்கப்பட வேண்டும். (ஈ) மாவட்ட நிலையில் மத்திய பாங்கோ அல்லது தலைமைப் பாங்கினுடைய ஒரு பகுதியோ நீண்டகாலக் கடன் பகுதியை நாளடைவில் இந் நில அடைமான பாங்கின் உறுப் பாக மாற்றி அமைக்கலாம். முடிவில் அடிப்படை நில அடைமான பாங்குகளைத் தோற்றுவிக்க வேண்டும். (உ) நில அடைமான பாங்கியிலிருந்து கொடுக்கப் படும் கடன் வசதிகள் உற்பத்திக்கென அமைதல் வேண்டும். அரசினரிடமிருந்தும், ரிஸர்வ் பாங்கினரிடமிருந்தும் பல வகைப் பட்ட உதவிகளை எதிர்பார்க்கலாம். கிராமக் கடன் பத்திரங்களை (rural debentures) வெளியிடும்படி யோசனை கூறியுள்ளார்கள் (ஊ) இச் சங்கங்களின் மேற்பார்வை தலைமைக் கூட்டுறவுப் பாங் கிற்கும் மத்திய கூட்டுறவுப் பாங்கிற்கும் விடப்பட்டு, கணக்கு ஆய்வுப் பணியாளர்களைக் கண்காணிக்கும் பொறுப்பு இராச்சிய அரசினரிடம் விடப்படும்.

**11. கூட்டுறவு முறையில் பொருளாதார வளர்ச்சி: குறிப் பாகப் பதனப்படுத்தலும் விற்பனை செய்தலும்:** (i) தேசீயக் கூட்டுறவு வளர்ச்சிப் பண்டகசாலை போர்டு, அதற்கென ஏற்படுத்தி யுள்ள தேசீயக் கூட்டுறவு வளர்ச்சி நிதியினின்று தக்க பிரிவுகளின் கீழ் நீண்டகாலக் கடனை இராச்சிய அரசினருக்குக் கொடுக்க வேண்டும். கூட்டுறவுச் சங்கங்கள், பதனப்படுத்துதல், பால் பண்ணை நடத்துதல், விற்பனை செய்தல் இவைகளில் ஈடுபட்டிருப் பின் அவைகளுக்கான உதவி அளிப்பதற்கு இக் கடன்கள் கொடுக்கப்படும்.

(ii) **இராச்சிய அரசினர்கள்:** நிர்வாகத்தைப் பலப்படுத்தும் பொறுப்பேற்று அதற்கான தொழில் நுட்பப் பயிற்சியளித்துத் தொழில் நுட்ப வல்லுநர்களை அழைத்துக் கூட்டுறவு முறையின் கீழ்ப் பதனப்படுத்தல், விற்பனை முதலியவற்றைத் திட்டப்படி வகுத்து ஈடேறும் வகையில் நடத்தவேண்டிய பொறுப்பு இராச்சிய அரசினரிடம் விடப்பட்டுள்ளது.

(iii) **கூட்டுறவு இயக்கம்:** (அ) தேசீயக் கூட்டுறவு வளர்ச்சி, பண்டகசாலை போர்டுடன்கூடி ஆலோசனை நடத்தி இராச்சிய அரசினரின் விற்பனை, பதனப்படுத்துதல், பால்பண்ணை நடத்துதல், இவைகளுக்கான திட்டமொன்றை வகுத்து அவற்றைச் சரிவரக் கூட்டுறவுச் சங்கங்கள் கண்காணித்து வரு கின்றனவா என்று கவனித்தல் வேண்டும். இதில் பெரும் பங்கு இராச்சியத்தின் கூட்டமைப்பில் திகழும். இதற்கான தொழில்

நுட்பப் பணியாளர்களை இராச்சிய அரசினர் அவ்வப்போது நியமித்துவருவர். (ஆ) கூட்டுறவு விற்பனைச் சங்கங்கள் ஆரம்ப நிலையிலிருந்து அவற்றின் வளர்ச்சிக்கான வழிகளை ஆராயப்புகும் இம்முறை, வெகு தீவிரமாக நடத்தப்படவேண்டும். எனினும் சில குறிப்பிட்ட இடங்களிலேயே மாதிரியாக நடத்தப்பட்டு நீட்டப்படும். இந்தச் சங்கங்களில் பல்வேறு பொருளாதார அலுவல்களும் கவனிக்கப்படும். (இ) இராச்சிய அரசினரின் கண்காணிப்பில் உருவாகும் ஒவ்வொரு விற்பனைச் சங்கமும் மத்திய தர விவசாயியின் நலனைக் கோரியும் சிற்சில நிலைமையில் சிறு விவசாயி நலனைக் கருதியும் நடைபெறுகின்றனவா என்று கவனித்துவரவேண்டும். (ஈ) அகில இந்தியப் பண்டகசாலைக் கார்ப்பரேஷன் தலைமையில் அல்லது இராச்சிய பண்டகசாலை அமைப்பின்கீழ்த் தோன்றியுள்ள ஒழுங்குபடுத்தப்பட்ட சந்தைகளில், அடிப்படைச் சந்தைச் சங்கங்கள், உள்ளூர்க் கூட்டுறவுப் பாங்கு இவைகளுக்குத் தங்கள் நிறுவனங்களின் சார்பாக ஒன்று அல்லது இரண்டு பேர்களைச் சந்தைக் குழுவினரின் உறுப்பினராகத் தேர்ந்தெடுக்க உரிமையுண்டு. இராச்சியப் பண்டகசாலை, போர்டாக இருப்பின், இவர்கள் ஆலோசனைக் குழுவில் வந்து பணியாற்றலாம். (உ) இச் சங்கங்களின் மூலதனம் இயல்பான மூலதனத்தைக் காட்டிலும் ஆண்டுதோறும் செய்யும் விற்பனையையொட்டி அதிகரிக்கப்படவேண்டும். மேலும், இச் சந்தைச் சங்கங்கள் பெறும் கடன் எல்லையைப் பொறுத்தும் அமையலாம். (எடுத்துக்காட்டாக, கடன் சங்கம் ஒருகால் விற்பனை, பதனப்படுத்தல் இவைகளையும் மேற்கொள்ளக்கூடும்.) (ஊ) பதனப்படுத்தும் இயந்திர சாதனங்களைக் கட்டாயமாக வாங்கும் முறை தவிர்க்கப்படவேண்டும். கூட்டுறவு நிறுவனங்களில் உள்ள உறுப்பினர்கள் அதற்கு ஏற்பட்ட மூலதனத்தில் 30%ஐ அதிகப்படியாகக் கொடுக்க முன்வரின், அதன் பின்னர் இராச்சிய அரசினர் தகவல்களை வெளியிட்டுப் பதனப்படுத்தும் இயந்திர சாதனங்களைக் கட்டாயமாக வாங்கிக் கொடுக்க முன்வரலாம். (எ) இராச்சிய அரசினர்கள் இயந்திர சாதனங்களுக்கு என வழங்கும் உரிமம், விவசாயப் பொருள்களைப் பதனம் செய்யும் சங்கங்களுக்கே கொடுக்க முன் வரும். (குடிசைத் தொழில்களுக்கு இது தேவையில்லை.) பதனப்படுத்துதலில் ஈடுபட்ட நிறுவனங்களுக்கு வழங்கும் உரிமையைச் சட்டப்படுத்தி மக்கள் சபையில் அதற்கென மசோதாக்களைக் கொண்டுவந்து நிறைவேற்ற வேண்டும். புதிய உரிமம் வழங்கும் முன்னர், மேற்படி வட்டாரத்தில் உள்ள கூட்டுறவுச் சங்கமோ அல்லது உருவாக இருக்கும் கூட்டுறவுச் சங்கமோ இவை இரண்டும் பொறுப்பினை ஏற்று நடத்த முன்வருமா என்று ஆலோசனை செய்து, தனி மனிதருக்கு

உரிமம் வழங்காத கூட்டுறவுச் சங்கங்களுக்கே உரிமம் வழங்க வேண்டும்.

**12. சேமித்தல், பண்டகசாலைமுறை, வழங்குதல் முதலியன :** (i) தேசீயக் கூட்டுறவு வளர்ச்சிப் பண்டகசாலைக் கழகம் இரண்டு முக்கியமான வளர்ச்சிகளுக்குப் பொறுப்பேற்றுள்ளது. ஆனால்; இந்த இரண்டு வளர்ச்சிகளுமே ஒன்றோடொன்று இணைந்து செல்லும் தன்மை உடையன. ஒரு பகுதி சேமித்தலும் பண்டகசாலை வளர்ச்சி பெறுவதையும், மற்றொரு பகுதி வழங்குதல் துறை முன்னேற்றம் அடைவதையும் கவனிக்கின்றன. வழங்குதல் துறை, விவசாயி தயாரிப்பாளனாகவும், உபயோகிப்பவனாகவும், இருக்குங்கால் அவனுடைய முக்கியமான தேவைகளை வழங்கி உதவிபுரிகின்றது. கழகம் இவர்கள் தேவைகளையெல்லாம் திட்டமிட்டுப் பண உதவியும் மான்யமும் அளிக்கின்றது. அதற்கு வேண்டிய நிதியைத் தேசீயப் பண்டகசாலை வளர்ச்சி நிதியினின்று பெறுகிறது. இந் நிதியிலிருந்து பொருளீட்டுக் கழகம், அகில இந்தியப் பண்டகசாலை நிறுவனத்தின் பங்கு முதலைச் சேர்க்கின்றது. இந் நிதி, சங்கத்தை மாகாண அரசாங்க தேசீயப் பண்டகசாலைக் கம்பெனிகளில் முதலீடு செய்ய உதவி புரிகிறது. இவ்வுதவி மாகாண பண்டகசாலைக் கம்பெனிகளை, சேமித்தலையோ பண்டக சாலையையோ, முக்கியமாகக் கொண்டுள்ள கூட்டுறவு வர்த்தகசாலைகளில் முதலீடு செய்யத் துணைபுரிகிறது. (ii) அகில இந்தியப் பண்டக சாலைச் சங்கம் இந்தியாவின் முக்கிய நகரங்களின் சேமிப்பு, பண்டகசாலை முதலியவற்றின் வளர்ச்சிக்குப் பொறுப் பேற்றுள்ளது. (iii) மாகாண பண்டகசாலைக் கம்பெனிகள் மாகாண அல்லது ஜில்லாக்களின் முக்கிய நகரங்களின் சேமிப்புப் பண்டகசாலை வளர்ச்சிக்குப் பொறுப்பேற்றுள்ளன. (iv) ஒழுங்கு படுத்தப்பட்ட சந்தைக்கு, அகில இந்திய பண்டகசாலைச் சங்கமோ அல்லது மாகாணப் பண்டகசாலைக் கம்பெனியோ, தன்னுடைய செயல்களை நீட்டித்தால் அச் சந்தை முறைப்படி அவைகளையே சாரும். அவ்விடங்களில் ஓர் ஆலோசனைக் கமிட்டியை ஏற்படுத்திச் சங்க அதிகாரிக்கு உதவிபுரியலாம். (v) கூட்டுறவுச் சங்கம் உள்ளடங்கிய ஜில்லாக்களின் சேமிப்பு, பண்டகசாலை வளர்ச்சியிலே மிகவும் ஈடுபட்டுள்ளது. அந்த ஊரே சந்தை மையமாயிருப்பின், இவ் வீடுபாடு மிகவும் அதிகமாகின்றது. பெரிய கிராமங்களில் கிடங்குகள், விதை சேமிக்கும் நிலையங்கள் முதலியன சங்கத்தின் செலவிலே கட்டப் பட்டால் நமது எண்ணம் முக்கியமாகப் பூர்த்தியடையும்.

(vi) மேற்கூறிய எல்லா நிலைகளிலும், இடங்களும், பண்டக சாலைகளும் பண்டங்களின் விநியோகத்திற்கு முக்கியமாக உரவிநியோகத்திற்கு உபயோகப்படுத்தப்படவேண்டும். இவ் விடங்களில் விவசாயிக்கு முக்கிய தேவையான சர்க்கரை, தீப்பெட்டி, மண்ணெண்ணெய் முதலியனவும் விற்கப்படவேண்டும். ஆனால் இவ் வியாபாரம், சங்கத்தின் முக்கிய நோக்கத்தைப் பாதிக்கக் கூடாது. சாதாரணமாக, கிடங்குகளையும், பண்டகசாலைகளையும், அகில இந்தியப் பண்டகசாலைச் சங்கத்திடமோ மாகாணப் பண்டகசாலைக் கம்பெனியிடமோ அல்லது கூட்டுறவுச் சங்கத்திடமோ ஒப்படைக்கவேண்டும். என்ற நியதி கிடையாது. இருந்தபோதிலும் ஒழுங்குபடுத்தப்பட்ட சந்தையிலோ, இவ்விடத்துக் கூறப்பட்ட வேறு எவ்விடத்திலோ கிடங்காவது பண்டகசாலையாவது இருந்தால், அவற்றை ஒப்படைக்க வேண்டும் என்ற நியதி உண்டு. ஆனால், பண ஈடுசெய்தால் இந் நியதியும் தள்ளுபடி செய்யப்படும்.

**13. கூட்டுறவுப் பாங்கும், கிராமக் கடன் வளர்ச்சி வசதிகளும் :** முக்கியமாக இந்த வசதிகள் ஸ்டேட் பாங்கால் (State Bank) அளிக்கப்படும். இந்தப் பாங்கு, இம்பீரியல் பாங்க் ஆப் இந்தியாவுடனும் மற்றும் மாகாணத் தொடர்பு பெற்ற பாங்குகளாகிய ஸ்டேட் பாங்க்ஆப் சௌராஷ்டிரா, தி பாங்க் ஆப் பாடியாலா, தி பாங்க் ஆப் பிகானீர், தி பாங்க் ஆப் ஜெய்ப்பூர், தி பாங்க் ஆப் பரோடா, தி பாங்க் ஆப் மைசூர், தி ஸ்டேட் பாங்க் ஆப் ஹைதராபாத், தி திருவாங்கூர் பாங்க் ஆகியவற்றுடன் வரையறுக்கப்பட்டுக் கூட்டு சேர்ந்து ஏற்படுத்தப்படவேண்டும். இவ்வாறு புதிதாக ஆரம்பிக்கப்படும் இந்த ஸ்தாபனத்தின் மூலதனத்தில் 52% ஐயும் அதற்கேற்ற ஓட்டுகளையும் இந்திய அரசாங்கமும் ரிசர்வ் பாங்கும் ஒன்று சேர்ந்து பெறவேண்டும்.

**14. கூட்டுறவுக் குழுவின் பயிற்சி மூலம் பயிற்சியாளரை உருவாக்கல் :** (i) பயிற்சியின் பயனைப் பெருக்கவும், அதனைப் பெருமளவில் அபிவிருத்தி செய்யவும் இந்தியஅரசாங்கமும், ரிசர்வ் பாங்கும், கூட்டுறவுப் பயிற்சியின் மத்திய கமிட்டிக்கு நிறைய நிதி அளிக்கவேண்டும். (ii) இப் பயிற்சி ஸ்தாபனம், இலாக்கா ஆகியவற்றில் எல்லா நிலையிலும் வேலைசெய்வோர்க்கு வசதி அளிக்க செய்யவேண்டும். இவற்றில், பாங்குத்துறை, வியாபாரத்துறை, கூட்டுறவுத் தொழில்துறை, பரிபாலனம், மேற்பார்வை, கணக்காய்வாளர் துறை முதலிய அம்சங்களுக்கு முக்கியத்துவம் அளிக்க வேண்டும். (iii) தேசீய நலத் திட்டத்திலும், சமூக நலத் திட்டத்திலும், இவர்களுக்குப் போதிய பயிற்சி அளிக்கவேண்டும்

(iv) மத்தியக் கமிட்டி கிராமத் தேவைகளையும் அவைகளைச் செவ்வனே செய்யப் பயிற்சி பெற்ற புதுமாதிரியான அதிகாரிகளின் தேவையையும் உணர்ந்து அந்த நோக்கத்துடன் பயிற்சி முறையை அமைக்க வேண்டும்.

**15. தனியார் ஸ்தாபனங்களின் பங்கு :** இந்தத் திட்டத்தின் முழுநோக்கம் யாதெனில், மாகாணக் கூட்டோடு தனியார் சேர்ந்து கூட்டுறவுப் பாங்கியின் வளர்ச்சிக்கும், செழுமைக்கும் பாடுபடுவதேயாம். ஆகவே, இத்திட்டம் கிராமக் கடன் சங்கங் களுக்கு ஏற்றதொரு மாறுபாட்டு ஸ்தாபனமாய் அமைகின்றது. இக் காரணத்தினுலேயே இதனை வட்டிக்குக் கடன் கொடுப் போரின் எதிரி எனக் கூறலாம். இத் திட்டம் விவசாயியின் சக்தி யையும், அவனுடைய சாதனங்களையும் நல்வழியில் திருப்ப இயலு கின்றது. இத் திட்டத்தில் கடன் கொடுப்போருக்கு இடமே கிடையாது. ஆனுலும், தனியார் துறையில் கடன் கொடுப் போரும் வியாபாரிகளும் இதர பாங்குகளும், தாம் திட்டத்தில் இடம் பெறவில்லையாயினும் (State Bank of India-வைத் தவிர) தம்மால் இயன்ற உதவியைச் செய்து கிராமக் கடன் திட்டத்திற்கு உதவிபுரிவார்கள் என்று நம்பப்படுகிறது. முக்கியமாக, வியா பாரப் பாங்குகள் இணைக்கப்பட்டு அமைக்கப்பட்ட கிடங்குகளையும், பண்டகசாலைகளையும் கொண்டு பயிர்த்தொழிலுக்குப் பெரிய அளவில் கடனுதவி புரிய ஊக்கமளிக்கப்படுவார்கள்.

**16. கிராமச் சேமிப்பு :** கிராமச் சேமிப்பினைப் பயன்படுத்து வதைக் காட்டிலும் அதை ஒன்று திரட்டுவது எளிதான செயலன்று. திரட்டப்பட்ட தொகை கிராமத்தில் பயன்படவில்லையானுல் நகர்ப் புறங்களில் பயன்படுத்தப்படவேண்டும். நகர அல்லது நகர்ப் புறச் சேமிப்பை அரசினர் கடன் துறைக்குப் பயன்படுத்த முயல வேண்டும். கிராமங்களினின்று கடன் துறைக்குச் சேமிப்பைப் பெறக்கூடாதெனலாம். பின் கூறியதைக் கூட்டுறவு அல்லது நில அடைமான பாங்குகளைப் பெறும்படி செய்யவேண்டும். கிராமச் சேமிப்பைக் கொண்டு, விற்பனை, பதனப்படுத்தல் இவைகளை மேற்கொண்டு நடத்த நான்கு நிறுவனங்கள் உள்ளன. இதன் பொருளாதாரத் தேவைகளுக்குக் கடன் பத்திரங்களை (டிபெஞ்சர் களை) வெளியிடவேண்டும். சீட்டு நிதி முதலிய முறைகளை யமைத்து அரசினரின் நிதியைத் திரும்பப் பெற்றுக்கொள்ள வேண்டும். டிபெஞ்சர்கள் கிராமத்தின் குறிப்பான திட்டங்களைப் பல்வேறு பொறுப்புகளில் எடுத்து நடத்த ஏற்பாடு செய்ய வேண்டும். அறுவடைக் காலங்களிலும், தானிய விற்பனை செய்யப் படவேண்டும். இதைத் திருப்பித்தர வேண்டுமானுல் கிராம

முதலீடு செய்பவரின் சௌகரியத்திற்குத் தக்கமுறையில் செய்தல் வேண்டும். கூட்டுறவு முறையில் அண்மையில் பாங்கு உருவாகாத வட்டாரத்தில்தான் நடமாடும் பாங்குகளை நிறுவலாம். வர்த்தகப் பாங்குகள், ஒரு குறிப்பிட்ட வட்டாரத்தில் சேமிக்கும் நிதியை அனுசரித்துக் கடன் கொடுக்க முன்வந்தால்தான் நடமாடும் பாங்கு அந்த வட்டாரத்தில் உலவிவரலாம். மேலும், வர்த்தகப் பாங்குகள் விவசாயத்திற்குக் கடன் உதவி புரிய வேண்டும்.

17. **பஞ்ச நிதிகள் :** பஞ்சம், வெள்ளம் இவற்றின் காரணத்தால் பீடிக்கப்பட்ட கிராமங்கள் கடனில் தத்தளிப்பதால் போதிய சௌகரியமின்றி உள்ளன. இதை ஆராய்ந்து (i) இராச்சிய பஞ்ச நிதியை அதிகரித்தல், (ii) இராச்சியங்களில் இதற்கென நிதியை நிறுவுதல், (iii) மத்திய பஞ்ச நிவாரண நிதியை நிறுவப்பாடுபடுதல், இதனின்று இராச்சியங்களுக்குக் கடன் உதவியளித்து நிலைமையைச் சமாளிக்கச் செய்யவேண்டும்.

18. **கிராமச் சாலைகள் :** (i) கிராமச் சாலைகளைச் செம்மையாக்க அளவுமீறிய நிதி உதவியளிக்க வேண்டும். குறிப்பாக, கிராமச் சந்தைகளை இணைக்கும் சாலைகளைப் புதுப்பிக்க முதலிடம் கொடுக்கவேண்டும். (ii) ரெயில்வே, பஸ், கப்பல் போக்குவரத்து சம்பந்தமாக உள்ள நிலையைப் பரிசீலனை செய்யவேண்டும். கிராம உற்பத்தியாளரை இந்தப் போக்குவரத்துக் கட்டணம் எவ்வகையில் பாதிக்கிறதென்பதைக் கணக்கிடவேண்டும்.

19. **கிராமத் தொழில்களுக்கான நிதி வசதி :** மத்திய, இராச்சிய உதவி நிறுவனங்களாகிய கிராமக் கைத்தொழில் போர்டு, அகில இந்தியக் கைத்தறிபோர்டு இவைகளின் உதவியைக் கொண்டு இராச்சியங்களில் உள்ள பல்வேறு கிராமக் கைத்தொழில்களை வளர்த்துவர நிதி உதவியும் தரவேண்டும். இவைகளுக்குப் புறமாகத் தனிப்பட்ட திட்டங்களை வகுத்துக் கடன் வசதிகள் மான்யங்கள் அளிப்பது சம்பந்தமாக அமைத்தல் வேண்டும். இராச்சிய நிதிக் கார்ப்பரேஷன்கள், இராச்சிய பாங்கு, ரிஸர்வ் பாங்கு இவைகள் அனைத்தும் கூட்டுறவு முறையில் அமைக்கப்பட்ட கிராமக் கைத்தொழில்களுக்கு நீண்டகாலக் கடன், குறுகிய காலக் கடன் இம் மாதிரியான வசதிகளைக் கொடுத்து உதவி செய்யவேண்டும். மத்திய காலக் கடனைக் கூட்டுறவுப் பாங்குகள் குறுகியகாலக் கடன்கள் மூலமாகச் சமாளிக்கவேண்டும். கிராமத் தொழில் கடன் வசதியை இவர்களுக்குக் கிடைக்கும்படியும் செய்யவேண்டும்.

**20. ஆட்சிமுறையில் மாற்றங்கள் :** முதன் முதலாக அரசினர், கிராமம் சம்பந்தப்பட்டவரையில் நன்மை பயக்கவல்ல நிறுவனமாக இருக்கவேண்டுமேயொழிய வெறும் வரி வசூலிக்கும் நிறுவனமாக இருப்பது சரியன்று. இதுபற்றிச் சமூகநல வளர்ச்சித் திட்டம் ஆட்சி முறையினுல் உருவாக்கப்பட்டுள்ளது. இரண்டாவதாக, கிராமப் பொருளாதார வளர்ச்சியில் இராச்சிய அரசினரும் கூட்டுப் பங்குகொண்டு உண்மையாக உழைக்கவேண்டும். மூன்ருவதாக, கிராம ஆட்சி, மக்களுக்கு விளங்கும் முறையிலும், அறிந்துகொள்ளத்தகும் வகையிலும் அமைக்கப்படவேண்டும். இவைகளில் இணைப்பு உண்டாக்கக் கீழ்க்கண்ட செயல்களை மேற்கொள்ளவேண்டும்: அவைகளாவன: (i) பல்வேறு ஆட்சி அமைப்புகளைக் குறிப்பாகக் கூட்டுறவு, மக்களாட்சி இவைகளை முரண்பாடின்றி நடக்கச் செய்தல், (ii) அடிப்படை ஆட்சி முறைக்கும் இதர நிறுவனங்களுக்கும் இணைப்பு ஏற்படுத்தல், பஞ்சாயத்துக்கள், மக்கள் உள்ளாட்சிக் குழுக்கள் இவைகள் தங்களுக்குள்ளாகச் சீரான முறையில் உள்ளனவா என்று இதுகாறும் கண்காணிக்கப்படாது உள்ளன. அவற்றை ஆராய்ந்து ஒற்றுமையை உண்டாக்குதல் இன்றியமையாதது. பல்வேறு துறைகளான சிறுபான்மைப் பாசனம், சாலைகள், பொதுநலம், அடிப்படைக் கல்வி இவைகளில் முரண்பாடின்றி ஒற்றுமையைக் கொண்டுவருவது. மாவட்டத் தலைமை அதிகாரி மாவட்ட வளர்ச்சி அதிகாரியாக இருக்கிற காரணத்தினுல் பணியாற்றும் பல்வேறு இலாக்காக்களை மாவட்ட அளவில் சமப்படுத்த முயலுவார். அதேபோன்று தாலுக்கா மாவட்ட உட்பிரிவு, வருமானவரி அதிகாரிகள் இச் சீரமைப்பு முறையில் பங்கெடுத்துக் கொள்வார்கள். இதர வருமானப் பகுதிப் பணியாளர்கள் மிகவும் குறைவு எனினும், மேம்பாடடைந்த பணியைச் செய்வார்கள். இராச்சிய அரசினர் நிலையில் தலைமைக்காரியதரிசியும், கூட்டுக் காரியதரிசியும், உதவிக் காரியதரிசிகள் இருவரும் இவ் வளர்ச்சி சம்பந்தமான நிலையை ஆராய்ந்து (i) விவசாயம், (ii) கூட்டுறவு, (iii) குடிசைத் தொழில்கள், (iv) பொறிசெய் தொழில்கள், இத்துறைகளில் எவ்வாறு வளர்ச்சி அடைந்துள்ளன என்று கண்காணித்து இராச்சிய அரசினருக்கும் மக்கள் சபைக்கும் தாங்கள் கண்ட நிலையை விளக்கி அறிக்கையின் மூலம் தெரிவிப்பார்கள்.

**21. அறிக்கையைப் பற்றிய அபிப்பிராயங்கள் :** சர் ஹோரேஸ் ப்ளங்கெட் (Sir Horace Plunkett) கூறியதுபோல், இந் நாட்டில் கூட்டுறவுமுறை அரசினரின் தீர்மானத்தால் உருவாகியது. மிகவும் திறம்படைத்த இந்திய சிவில் பணியாளர் குழாத்தினுலும் பெருவாரியான எண்ணிக்கையுள்ள பதிவாளர்கள், உதவிப்

பதிவாளர்கள், தலைக்கையாளர்கள், கணக்கர்கள் இவர்களைக் கொண்டே இந்த இயக்கம் முன்னேறி வந்துள்ளது. அநேக கூட்டுறவுக் கொள்கையாளர்கள் கூறிவருவதுபோல இந்தியக் கூட்டுறவுமுறை ஆட்சியாளரின் பிடியிலிருந்து விலகவேண்டும் என்று இவரும் கருதுகின்றார். ஆயினும், கூட்டுறவு நிறுவனம் தனித்தியங்கக் கூடிய வன்மையைப்பற்றிச் சிறிது ஐயம் ஏற்படுகிறது. அரசினரின் உதவியின்றித் தாமாகவே தனித்தியங்கத் தக்க கூட்டுறவு நிறுவனங்கள் தோன்றவில்லை எனலாம்.[1] இதையே கூட்டுறவின் குறிக்கோளாகக் கருதலாம். இம்மாதிரியான நிலைமையை எய்தவேண்டுமெனில் தற்போதுள்ள நிலையில் இராச்சியங்கள் அதிகப்படி ஊக்கமும் அக்கறையும் காட்டினாலன்றி முன்னேற்றம் அடையாது என்று கிராமக் கடன் சர்வே அறிக்கை கருதுகிறது. முன்னாட்களில் நிலவிவந்த கொள்கைக்கு மாறாக இக் கொள்கை இருக்கிறதெனலாம். அக் காலங்களில் 'தன் கையே தனக்குதவி' என்ற அடிப்படையில் ஆரம்பிக்கப்பட்ட கூட்டுறவு இயக்கம் அரசினரின் தலையீட்டை வெறுத்தது. அதைப் புறக்கணித்தால்தான் கூட்டுறவுமுறை நேர்மையாகும் எனக் கருதி வந்தது. அரசு ஊழியர்களும் நிதிப்பொறுப்பு ஏற்காது இம்முறையிலேயே பேசிவந்தனர். எனவே, அவர்கள் தங்கள் கட்டுப்பாட்டின் கீழ் இம்முறையைக் கைப்பொம்மைபோன்று ஆட்டி வந்ததில் ஐயம் இல்லை. ஆயினும், இவ்வறிக்கையோ இக் கொள்கைக்கு எதிராகக் கிராமக் கடன் வசதி வளரவேண்டுமாகில், இராச்சிய அரசினர் கூட்டுறவு நிறுவனத்தின் கூட்டாளியாக அமர்ந்து பல்வேறு துறைகளிலும் புகுந்து சீரமைப்புக்கான வழிகளைப் புகன்று கூட்டுறவு முறைக்குப் பலம் கொடுக்க வேண்டும். வேறு எந்த வழியிலும் கிராம மக்களுடன் தொடர்பு கொள்வது அரிது. சுய தேவைகளைப் பூர்த்தி செய்வது எளிதான செயலன்று. சிக்கனத்தையும், ஒற்றுமையையும் செம்மையான வழியில் மக்களிடையே பரப்புவதற்கும், உள்ளூரிலுள்ள சக்திகளை ஒன்று திரட்டுவதற்கும் வேறெந்த அரசினரல்லாத நிறுவனத்தாலும் செய்ய இயலாது.[2] எக் காலத்திலும் இயக்கத்தைச் சீரமைத்து வைக்கவும், பழங்கடனை நீக்கவும், அரசினரால்தான் இயலும்.

இவை அனைத்தும் நலமெனக் கருதினாலும், கூட்டுறவுக் கொள்கைகளைப் புறக்கணித்து, அதிகப்படியான ஊக்கம் காட்டுவது எவ்

1. அகில இந்தியக் கிராமக் கடன் சர்வே, பக்கம் 251.

2. கிராமக்கடன் அமைப்பு என்ற தலைப்பில் டைம்ஸ் ஆப் இந்தியா (Times of India) வில் 1955ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 15 ஆம் தேதி வெளியானவை. வ. மேத்தாவின் கட்டுரை.

வகையிலும் பொருந்தாது. கடந்த காலத்தில் அரசினர் அழுத்தலாகத் தலைமை தாங்கி நிதிவசதி செய்யாது கூட்டுறவு முறையைச் சீரமைக்காது விட்டனர். இப்போதுள்ள இடர் என்னவெனில் கூட்டுறவு முறைக்குக் கோரியபடி நிதிவசதி செய்து, அழுத்தலான முறையில் தலைமையை மேற்கொள்ளுவார்கள். இது மெச்சத்தக்கது அன்று. ஆங்கில அரசின் ஆட்சியில் ஆணவம் படைத்த அரசினர் கூட்டுறவு முறையைக் கட்டுப்பாட்டினுள் கட்டிவைத்தனர். இப்பொழுதோ பொதுமக்களால் பொறுக்கி எடுக்கப்பட்ட பொதுநல ஊழியரான மந்திரிகள் வந்தும்கூட அரசினரின் தலையீட்டைக் குறைக்க இயலவில்லை. அரசினரும் மற்ற நிறுவனங்களும் கண்டபடி அளவுக்கு மீறிக் கடன் கொடுத்து வருகின்றன. பாங்கு நிதியை விவசாயத் துறைக்கு ஈடுபடுத்தி வருவது கண்காணிக்கத் தக்கதே. முன்னர், இந் நாட்டில் ஏற்பட்ட அதே தவற்றை நீக்க எச்சரிக்கை செய்ய வேண்டியேற்படுகிறது. அதே சமயத்தில் தங்கள் வர்த்தகத்தை அதிகரிக்க வேண்டும் என்ற எண்ணத்துடன் இவ்வாறு புகுதல் சரியன்று. கூட்டுறவுச் சங்கங்கள் நேரானமுறையில் தங்கள் நிலையைச் சரிய விடாது கடன் கொடுத்துத் திரும்பப் பெறுகின்றனவா எனக் கவனிப்பது அவசியம். நில அடைமானம் அல்லது ஈடுகாட்ட வசதியற்று இருப்பினும், ஒழுங்காகக் கடனைத் திருப்பித்தர வசதியுள்ளவர்களுக்கான நிலைமையை அனுசரித்துச் சட்டத் திட்டத்தைச் சற்று நயமாக அமைத்தலை அகில இந்தியக் கிராமக் கடன் சர்வே கூறுகிறது. வராத கடன் ஏற்படுமென்ற காரணத்தாலும், திருப்பித்தர வேண்டியவரின் நிதி நிலையை ஆராயத்தக்க முறை ஏற்படாத காரணத்தாலும் நிலமற்றவரின் செல்வ நிலையை மதிப்பிடல் கடினமென்ற காரணத்தாலும் இப்பொறுப்பைத் தட்டிக் கழிக்கின்றனர்.

# 13. சிறுபான்மைத் தொழில்

**1. பழங்காலத் தொழில்களின் சிதைவுக்குக் காரணங்கள் :** முற்காலத்திலிருந்த இந்தியக் கைத்தொழில் 19ஆம் நூற்றுண்டின் மத்தியில் மிகவும் நசித்துப் போனதற்குரிய காரணங்கள் வருமாறு:

(i) **பல்வேறு அரசவைகள் மறைந்த காரணம் :** இந்திய அரசர்களும் மற்றும் பல்வேறு செல்வந்தர்களும் இத்தொழில்களுக்குப் போதிய ஊக்கம் காட்டி வந்தனர். இவர்களுடைய காலத்திற்குப் பின்னர் இத்தகைய பண உதவியளிப்பாரின்றி இத் தொழில்கள் நசித்துப் போயின. மக்கள் ஆயுத மேந்தக்கூடா தென்ற சட்டம் தோன்றியவுடன் ஆயுத உற்பத்திச் சாலைகள் மூடப்பட்டன.

(ii) **மேல்நாட்டுப் பண்புகளால் ஏற்பட்ட தீவினைகள் :** ஆங்கில அரசு ஏற்பட்டவுடனேயே நம் நாட்டுக் கைத்தொழில்களைத்தும் மங்கின. ஆங்கிலப் படிப்பில் ஊறித் திளைத்த இந்தியச் செல்வர்கள் மேல்நாட்டுப் பழக்கவழக்கங்களை அப்படியே கையாள ஆரம்பித்தனர். ஆங்கிலேய உற்பத்தி பண்டங்களை விரும்பி அதன் விளைவாக இறக்குமதி செய்தனர். உள்நாட்டில் உற்பத்தியாகும் பண்டங்கள் கேட்பாரற்றுப் புறக்கணிக்கப் பட்டன. அயல்நாடுகளிலிருந்து சுற்றுலாவிற்கென வருபவர்களும் ஆங்கிலேயர்களுமே உள்நாட்டு உற்பத்திப் பொருள்களுக்கு ஆதரவு கொடுத்தனர் என்று கேட்க விநோதமாக உள்ளது. ஐரோப்பிய நாட்டவர்களுடைய விருப்பங்கள் நம் நாட்டின் பழங்கால முறையிலும் தாழ்ந்திருந்ததால் தொன்மையிலிருந்த அதே தரத்தில் அமையாது சற்று மட்டமான முறையில் நடந்தேறியது.

**(iii) ஆங்கிலப் பாராளுமன்றமும் கிழக்கிந்தியக் கம்பெனியாரின் கொள்கையும் :** கிழக்கிந்தியக் கம்பெனி ஆரம்ப காலத்தில் இந்தியாவில் தொழிலுற்பத்தி செய்து அவற்றின் விளைவாகச் செய்யப்பட்ட பண்டங்களை அயல் நாடுகளில் வர்த்தகம் செய்வது என முடிவு செய்திருந்தது. இக் கொள்கைக்குப் பெரும் எதிர்ப்புகள் தோன்றின. ஆங்கில முதலாளிகள் தங்கள் தொழில் வளர்ச்சிக்கென இந்திய ஆக்கப் பொருள்களை ஏற்றுமதி செய்யக்கூறி வற்புறுத்தினர். ஆங்கிலச் செலாவணி இந்தியாவிற்குள் புகா வண்ணம் செய்யவும், இம்மாதிரி முறையைக் கையாண்டனர். 18ஆம் நூற்றாண்டின் முற்பகுதியில் இங்கிலாந்து இந்தியப் பண்டங்களின் மீது கடும் தீர்வையை விதித்தும் உள்நாட்டு வருமானத்தைக் காட்டியும் ஐரோப்பியக் கண்டப் போர்களுக்கு (Continental Wars) ஏற்பட்ட செலவினைச் சமாளித்தது. 1700 முதல் 1824 வரை சாயமேற்றப்பட்ட காலிக்கோ (calicoes) துணிகளைத் தடுத்தனர். இந்தியாவிலோ ஆங்கிலச் சரக்கிற்கு எவ்விதக் கட்டுப்பாடும் கிடையாது. அவ்வாறிருப்பின் அது மிகவும் குறைவாக விருந்ததெனலாம். அக் காலத்தில் இந்தியா, சைனு, ஜப்பானிலிருந்து ஸ்பைஸ் (Spice) தீவுகள் வரையிலும் பர்மா, பெகு, பெர்ஷியா, அரேபியா, ஐரோப்பா ஆகிய இடங்களுக்குப் பருத்தித் துணி ஏற்றுமதி செய்து வந்தது. அதில் இங்கிலாந்துக்கான வியாபாரம் சிறிதளவுதான் எனலாம்.[1]

**(iv) இயந்திர உற்பத்திப் பொருள்களின் போட்டி :** இந்தியக் கைத்தொழில் நசித்துப் போகத் தவிர்க்க இயலாக் காரணம் ஆங்கில நாட்டில் இயந்திர மூலம் தயாராகும் பொருள்களுக்குச் சொல்லொணுத் தேவை ஏற்பட்டதே ஆகும். ஐரோப்பாவில் விசைத்தறி தோன்றியவுடனேயே இந்தியக் கைத்தொழில்கள் சீர்குலைய ஆரம்பித்தன. கப்பல் கட்டும் தொழில் இந்தியாவில் நிலைபெருது போய்விட்டதற்கு நீராவிக் கப்பல்களின் தோற்றமும் ஆங்கில நாட்டு வர்த்தகக் கப்பல்களின் போட்டியுமே காரணமாகும். டல்ஹௌசி பிரபு காலத்தில் இருப்புப்பாதைகள் அமைத்து நல்ல சாலைகள் போட்ட காரணத்தினுல் ஆங்கிலேயர்களுடைய சரக்குகள் இந்தியாவின் மூலைமுடுக்குகளுக்குப் போய்ச் சேர்ந்தன. சாலைகள், தந்தி, ரெயில்வேக்கள், சூயெஸ் கால்வாய் உருவானது. கப்பல் கட்டணம் குறைத்தல் இம்மாதிரியான பல்வேறு வன்மையான காரணங்களால் இந்தியத் தொழில்கள் ஆட்டம் கண்டன.

*1 கோல்ஸ் தி எகனுமிக் டெவலப்மெண்ட் ஆப் தி பிரிட்டிஷ் ஒவர்சீஸ் எம்பைர், பக்கம் 310.*

**2. ஆங்கில ஆட்சியில் உண்டான 'தாமாகவே வளரட்டும்' என்ற தொழில் கொள்கை:** இந்தியத் தொழில்களைக் குறித்து ஆங்கிலேயர் காலத்தில் யாதொரு முயற்சியும் எடுத்துக் கொள்ளப்படவில்லை. இந்தியச் சந்தைகளில் ஆங்கில நாட்டு வர்த்தகர்களின் பண்டங்களைக் குவித்து அவர்களது வர்த்தகத்திற்குப் போதிய வசதியளித்து அவர்களை லாபம் பெறும்படி ஊக்குவித்தனர். இந்த அவல நிலையைக் கண்டு திரு. மகாதேவ கோவிந்த ரானடே அவர்கள் கீழ்க்கண்டவாறு கூறியுள்ளார்: 'இந்த நூற்றுண்டில் ஆங்கில நாட்டின் அடிமைத்தளையில் அவதியுறும் இந் நாடு பழங்காலக் குடியேற்ற நாடுகளைப் போல் பண்டங்களை வழங்கி வந்தது. இந்த அடிமை நாடு தேயிலைத் தோட்டங்கள், கச்சாப்பொருள் உற்பத்தி இவைகளைப் பெருமளவில் ஆங்கிலேயக் கப்பல்களின் ஆங்கிலேயப் பதிலாள்மூலம் அனுப்புகிறது. அவை ஆங்கிலேயர்களால் பொறிசெய் தொழில்களில் ஈடுபடுத்தப்பட்டு, ஆங்கில மூலதனத்தைக்கொண்டும் ஆங்கிலேயத் தொழிலாளர்களை கொண்டும், நுகர்வுப் பொருளாக மாற்றப்பட்டு இந்திய நாட்டிற்கு ஏற்றுமதி செய்யப்பட்டு, இந்தியாவில் அந் நாட்டவர்கள் நடத்தும் வர்த்தகக் கம்பெனிகள் மூலம் பெருவாரியாக விற்பனை செய்யப்படுகின்றன. நீராவிச் சக்தியும், இயந்திர நுட்பமும் எளிதில் அனுப்புவதற்கு ஏற்ற போக்குவரத்து முறைகளும், இவர்களுக்கு உறுதுணையாக நின்று, இதன் விளைவாக இந் நாட்டுக் கிராமங்களில் உள்ள தொழில்கள் கேட்பாரற்று, தக்க உதவியின்றித் தாமாகவே வெகுவிரைவில் நசித்துப்போய் விட்டன.

**3. பெரும்பான்மைத் தொழில்களினுல் இடையூறுகள்:** இந் நாட்டில் பழங்காலப் பொருளாதார நிலைமை புதிய போக்குவரத்து முறைகளினுலும் பெரும்பான்மைத் தொழில்கள் தோன்றியதனுலும் மாற்றம் கண்டது; பழைய நிலையிலிருந்து புதிய நிலைமைக்கு மாற்றங்கள் ஏற்படக் காரணமாயிருந்தது; வர்த்தகத்தில் போட்டியிடவரும் நிலையையொட்டி இருந்தது.

பொதுப்படையாகப் பார்க்கப்போனுல், நகர்ப்புறங்களில் உள்ள கைவிணைஞர்கள் அயல்நாட்டுச் சரக்குகளின் போட்டியில் ஈடுபட்டு அவதியுற்றனர். ஆயினும், கிராமங்களிலோ இவ்வாருன போட்டி சிறிதளவேனும் ஏற்படவில்லை. அதுவும் குறிப்பாக ரெயில்வே அல்லது சாலைகளால் இணைக்கப்படாத கிராமங்கள் பாதிக்கப்படவில்லை. குடிசைத் தொழில்களில் மிகவும் சீர்கேடு அடைந்தது நூற்றல் தொழிலே. அயல் நாடுகளிலிருந்து உயர்தர அநிலைன் சாயங்கள் (aniline dyes) வந்தவுடன் கிராமங்களில்

உள்ள சாயக்காரரின் தொழில் நசித்துப் போய்விட்டது. மேலும், ஆலையில் தயாரித்த நூல்கள் வர ஆரம்பித்ததால் இவர்களுக்கு வேலை இல்லாமல் போய்விட்டது. பெருமளவில் அயல்நாடுகளில் தயாரிக்கப்படும் துணிகள் வந்து இறங்கிய காரணத்தால் இந்திய நெசவாளர்களுக்குத் தொழிலின்மை ஏற்பட்டு வேலையில்லாத் திண்டாட்டத்தில் முடிந்தது. சிறிதுகாலம் கழித்து இந்திய நெசவாளிகளே இவர்களுக்கு எதிராகப் போட்டியிட்டனர் என்று கூறவும் வேண்டியதில்லை. இந்தியத் துணிரகங்கள் இந்தியச் சந்தையிலிருந்து விலையேற்றத் தாழ்வினால் விலக்கப்பட்டதோடு அல்லாமல் ஜாவா, பெர்சியா போன்ற அயல் நாடுகளின் சந்தைகளினின்றும் வெளியேற்றப்பட்டன. இரும்பு உழவுக் கருவிகள், செக்குகள், இவை அயல் நாடுகளிலிருந்து வந்த காரணத்தால் உள்நாட்டுத் தச்சர், கருமார், இவர்களுக்கு எவ்விதமான வகையிலும் தொழிலுக்கான வசதி ஏற்படவில்லை. அலுமினியம், எனாமல், பித்தளை போன்ற லோகங்களினால் தயாரிக்கப்பட்ட பாத்திரங்கள் வந்தவுடன் கிராமத்திலுள்ள குயவர்களுக்கு வேலையில்லாமல் போய்விட்டது. உலக விலைகள் ஏறிய காரணத்தால் தோல் பதனிடுவோர்களுக்குத் தொழிலில்லாமல் போய்விட்டது. பதனிடாத தோலை ஏற்றுமதி செய்து பதனிட்ட தோலினாலான பொருள்களை இந்நாட்டில் இறக்குமதி செய்தனர். மண்ணெண்ணெய் தோன்றிய காரணத்தினால் கிராமங்களிலுள்ள எண்ணெய் வித்துக்களுக்கும் எண்ணெய் ஆட்டும் செக்குகளுக்கும் நகர்ப்புறங்களிலுள்ள எண்ணெய் ஆலைகளுக்கும் தொழிலில்லாமல் போய்விட்டது. இவற்றின் விளைவாக, இந்நாட்டிலுள்ள கைவினைஞர்களுக்கு, வேலையில்லாது, வேலைதேடி அலையும் நிலை ஏற்பட்டு அவர்கள் பெருமளவில் நாடு பெயர ஆரம்பித்தனர். அவர்கள் தங்கள் இயல்பான தொழில்களைவிட்டு அன்றாடக் கூலிபெறும் தொழிலாளர்களாக நகர ஆலைகளில் பணியாற்ற ஆரம்பித்தனர். இன்னும் சிலவற்றில் கைவினைஞர்கள் மாறுபட்ட நிலையை அனுசரித்து வந்தனர். புதிய தொழில் நுட்பத்தையும் அறிந்து கொண்டு தங்கள் தொழிலைச் சீராக்கிக் கொண்டார்கள். சேணியர், நூற்பாலைகளிலிருந்து வரும் நூலைப் பயன்படுத்தவும், ஓடும் நாடாவைப் (fly-shuttle) பயன்படுத்தவும் அறிந்துகொண்டார். இம்முறை வங்காளத்திலும், சென்னையிலும் பெயர்பெற்று விளங்குகிறது. அதேபோன்று, கருமார் உடனே பயன்படுத்தும் வகையிலுள்ள இரும்பு, தகடுகள் முதலியவற்றைப் பயன்படுத்த ஆரம்பித்தனர். தச்சர் நாளடைவில் புத்தம் புதிய கருவிகளை ஆளும் வகையை அறிந்துகொண்டார்கள். தச்சரும், கொல்லரும் இதுகாறும் செய்து கொண்டிருந்த உற்பத்தித் தொழிலை விட்டு

விட்டுப் பழுதுபார்க்கும் தொழிலில் ஈடுபட்டார்கள். சில தச்சரும் கொல்லரும் நகர்ப்புறங்களுக்குச் சென்று பொறிசெய் தொழிற் கூடங்களிலும், கட்டட வேலைகளிலும் வெகுவாக ஈடு பட்டு, தங்கள் வறிய நிலையைப் போக்கிக் கொண்டார்கள். இந்த நிலையைச் சித்திரித்துப் பார்க்கின் பழங்காலத் தொழிலாளியின் நிலை, அவலமான நிலை என்பதை அறியலாம்.

**4. கிராமத் தொழில்களின் வருங்காலம் :**[1] கிராம வளர்ச்சித் திட்டங்களில் கிராமத்தொழில்கள் நடுநாயகமாக விளங்க வேண்டும் என்று கொள்ளவேண்டும். விவசாயத் துறையில் வளர்ச்சி எவ்வளவு எதிர்பார்க்கப்பட வேண்டுமோ, அதே அளவில் கிராமத் தொழில் வளர்ச்சியும் ஏற்படவேண்டும் என்று திட்டக்கமிஷன் கருதி வருகிறது. உள்ளூர்த் தேவையை யொட்டியே இத் தொழில்கள் அதி விரைவில் வளர்ச்சிபெறும் என்பதில் ஐயம் இல்லை. உள்ளூர் நிலைமையை ஒட்டி இவை களைச் சீரமைத்தல் வேண்டும். இதனால் உள்ளூர்த் தொழிலாளி களுக்கும் வேலை கொடுக்க இயலும். கிராமச் சமூகத்தின் பொறுப்பாக இந்தத் தொழில்கள் நடந்துவர வேண்டும். இவை களின் வளர்ச்சிக்குக் கிராமச் சமூகம் பாடுபட்டுவருதல் இன்றிய மையாதது எனலாம். தனித்தொழில்கள் அல்லது கூட்டுத் தொழில்களமைந்த கைவினைஞர் கூட்டுறவுச் சங்கங்களை நிறுவி. இவைகளை நடத்தி வரவேண்டும்.

எப்போதாவது ஒரு பெரும்பான்மைத் தொழில் குடிசைத் தொழிலுடன் போட்டிபோட முற்படின், அதற்கான போட்டியை அகற்றிப் பொது உற்பத்தித் திட்டம் ஒன்றை வகுத்து, வேலை தரும் நிலையை ஆராய்ந்து வந்தனர். திட்டக் கமிஷனின் விதிப் படி பொது உற்பத்தித் திட்டம் வருமாறு : (1) உற்பத்தி வட்டாரங்கள் இன்னதென்று ஒதுக்கல், (2) பெரும்பான்மைத் தொழில்களை விஸ்தரிக்காமல் இருத்தல், (3) பெரும்பான்மைத் தொழிலில் தீர்வையிடல், (4) ஆக்கப் பொருள்களை வழங்க வசதியளித்தல், (5) பயிற்சி, கூட்டமைப்பு இவைகளுக்கான வசதியளித்தல்.

இக் கொள்கைகள் முன்னரே அமலாக்கப்பட்டன. எடுத்துக்காட்டாகப் பருத்தியாடைப் பகுதிகளில் மில் தொழிலுக்கும் கைத்தறி நெசவிற்கும் அம்மாதிரியான ஒதுக்கல் செய்யப்பட்டுள்ளது. மில் நெசவுத் துணிகளின்மீது தீர்வை விதிக்கப்பட்டு, அதனின்று கிடைக்கும் வருவாயைக் கொண்டு

1. திட்டக் குழுவினரின் அறிக்கையைக் காண்

கைத்தறி, கதராடைகளுக்கு உதவியளித்து வளர்ச்சிக்கு அடிகோலப்படுகிறது. கட்டுப்பாடு விலைகளில் சிறுபான்மைத் தொழில்களுக்குக் கச்சாப் பொருள்கள் வழங்கப்படுகின்றன. உணவுப் பதனம் செய்யும் தொழில்கள் சம்பந்தமாகத் திட்டக்கமிஷன் பெருவாரித் தொழிலாக அமைதல் தடுக்கப்பட வேண்டுமென்றும் அரசினரோ அல்லது கூட்டுறவு நிறுவனமோ, ஏற்படின் அனுமதிக்கலாம் என்றும் கூறியுள்ளனர். இத்துறையில் தனியார் நிறுவனம் ஏற்பட்டதால் கிராம மக்களுக்கு வேலை கிடைப்பது அரிதாகிவிட்டது.

குடிசை, சிறுபான்மைத் தொழில்களுக்கென முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் 3·25 கோடி மத்திய அரசினரின் பட்ஜெட்டிலும் 3·12 கோடி இராச்சிய பட்ஜெட்டிலும் ஒதுக்கப் பட்டுள்ளன. தொழில் கூட்டுறவு நிறுவனங்களை அமைத்து அதன் மூலமாகக் கைவினைஞர்களுக்கு உதவிபெற வழிசெய்ய இராச்சிய பட்ஜெட்டுக்களில் இம்மாதிரியான ஒதுக்கல்கள் செய்யப்பட்டுள்ளன.

கிராமக் கைத்தொழில்கள் பத்து: அவை எண்ணெய் எடுத்தல், வேப்பெண்ணெயைக் கொண்டு சோப் தயாரித்தல், நெல் அரைத்து உமி நீக்குதல், பனைவெல்லம் தயாரித்தல், வெல்லம், பழுப்புச் சர்க்கரைத் தொழில், கம்பளிச் சால்வைகள் தயாரித்தல், கையினால் காகிதம் செய்தல், தேனீ வளர்த்தல், தீப்பெட்டி செய்தல். இவைகளுக்கான திட்டம் வகுத்துள்ளனர்: மத்திய அரசினரால் நியமனம் செய்யப்பட்ட அகில இந்தியக் காதி கிராமக் கைத்தொழில் போர்டாரால் இவைகள் நடத்தப் படும்.

**5. அகில இந்தியக் காதி கிராமக் கைத்தொழில் போர்டு:** 1953 ஆம் ஆண்டு அகில இந்தியக் காதி கிராமக் கைத்தொழில் போர்டு நிறுவப்பட்டது. இந்தப் போர்டு செய்யும் பரிந்துரைகளை அரசினர் ஏற்றுக் கொள்வர். நிதி, வர்த்தகம், தொழில் முதலிய அரசினர் இலாக்காக்களின் அதிகாரிகள் இந்தப் போர்டில் இடம் பெறுவர். மற்றும் திட்டக் கமிஷன் உறுப்பினர் களும் இதில் பங்கெடுத்துக் கொள்வார்கள். அரசினருக்குப் பதிலாக இந்தப் போர்டு கூடிக் காதி கிராமக் கைத்தொழில் சம்பந்தமாக வர்த்தகப் பேச்சுகளை நடத்தும். கதர் கிராமக் கைத்தொழில்கள் இவைகளுக்குத் தேவைப்படும் ஆக்கப் பொருள், நிதி, ஆராய்ச்சி, விற்பனை, உபகரணங்கள் இவைகள் சம்பந்த மான பொருளாதாரப் பிரச்சினைகளைக் கவனித்து, அதற்கேற்பக்

கொள்கைகளை வகுத்து, கணக்குத் தீர்வகம் போன்று பணியாற்றி வருகிறது.

முதற்செயலாக நாட்டை ஏழு பெரும் வட்டாரங்களாகப் பிரித்து, ஒவ்வொரு வட்டாரத்திற்கும் ஒரு நெறியாளர் நியமிக்கப் பட்டிருக்கிறார். அந் நெறியாளர் தனிப்பட்ட நிறுவனம் ஒவ்வொன்றினையும் அதன் அமைப்பிற்கேற்பக் கூட்டமைத்துக் கொள்கைகளை ஆய்ந்து இராச்சிய அரசினருடன் ஆலோசனைகள் நடத்திப் பொதுஜனத் தொடர்பு அதிகாரி போன்று பணியாற்றி வருகிறார்.

அடுத்தபடியாக, அனுபவம் வாய்ந்த அலுவலர்களைக் கொண்டு, பல்வேறு தொழில்களை நடத்த முற்படுகின்றனர். இவர்கள் தாங்கள் மேற்கொண்டுள்ள தொழில்களின் நிலைமையை ஆராய்ந்து குறுக்கிடும் பிரச்சினைகளுக்குத் தீர்வுகண்டு, இத் தொழில்களுக்கான திட்டங்களை உருவாக்கி, இந்தப் போர்டுக்கு அனுப்புகிறார்கள். பம்பாய், மத்திய பாரதம், மேற்கு வங்காளம், மத்தியப் பிரதேசம், அஸாம், சென்னை, இராஜஸ்தான், ஹைதராபாத், சௌராஷ்டிரம், ஒரிஸா, ஆஜ்மீர், டெல்லி, திரிபுரா முதலிய இடங்களில் அரசாங்கங்கள் தத்தம் வட்டாரத்திற்குரிய போர்டுகளைத் தாங்களே நியமித்துள்ளனர். சௌராஷ்டிரத்தில் உள்ள இந்தப் போர்டு சட்டப்படி உருவானது. பம்பாயில் உள்ள கிராமக் கைத்தொழில் குழுவினர் சட்டப்படி அமைக்கப் பட்டுள்ளனர். சௌராஷ்டிரம், பம்பாய் நீங்கலாக ஏனைய இராச்சியப் பகுதிகளில் உள்ள போர்டுகள் ஆலோசனை கூறும் அளவில்தான் உள்ளன.

பல்வேறு உட்குழுக்களும் நிறுவப்பட்டு போர்டுக்குக் கதர், கிராமக் கைத்தொழில் சம்பந்தமாக ஆலோசனை நடத்திப் பரிந்துரைகள் வழங்க ஏற்பாடு செய்யப்பட்டுள்ளன. இவை களில் சிறப்பு வாய்ந்த சில உட்குழுக்களின் விளக்கங்களைக் கீழே கொடுத்துள்ளோம். (1) நிரந்தரப் பயிற்சிக் குழுவினர் இவர்கள் இராச்சிய முழுமைக்கும் உள்ள பயிற்சி அளிக்கும் நிறுவனங் களின் நிலையை ஆராய்ந்து அதிகப்படியான அளவில் பயிற்சிகள் கொடுப்பது சம்பந்தமாக ஆலோசனை கூறிவருகின்றனர். கிராமக் கைத்தொழில் சம்பந்தமான ஆராய்ச்சிகளை நடத்த அதற்கேற்ப வசதிகளை அமைப்பதுபற்றி ஆலோசனை கூறியுள்ளனர். நாசிக்கில் மத்தியப் பயிற்சி நிறுவனமொன்றைத் துவக்கியுள்ளார்கள். (2) பட்ஜெட் குழு நடைபெற விருக்கும் பல்வேறு திட்டங்களையும், கொள்கைகளையும் அமுலாக்க

போர்டுக்கான பட்ஜெட்டை வரைந்து கொடுக்கும். (3) பொருளாதார ஆராய்ச்சிக் குழுவினர் பல்வேறு கிராமத் தொழில்களை ஆராய்ந்து அவைகளின் வளர்ச்சியைப்பற்றி முடிவு செய்து, பரிந்துரை செய்வார்கள். (4) ஆராய்ச்சி குழுவினர் மத்திய ஆராய்ச்சி நிறுவனத்திற்கான திட்டங்களை வகுத்து, தொழில் நுட்ப உற்பத்திகள் சம்பந்தமான ஆராய்ச்சிகளை நடத்தி முடிவைக் காணலாம். 1954-55 ஆம் ஆண்டில் இந்திய அரசினர் மான்யமாக ரூ. 1,76,00, 000 தொகையும் கடனாக 2,03,00,000 இந்தப் போர்டுக்கு அனுமதித்துள்ளனர்.

மேற்கூறியவைகளை அடுத்துச் சிறுபான்மைத் தொழில்களுக்கான பல்வேறு ஆலோசனைக் குழுக்களும் அமைக்கப் பட்டுள்ளன. அகில இந்தியக் கைத்தறிபோர்டு, அகில இந்தியக் கைவேலை போர்டு (இவையனைத்தும் 1952-ல் நிறுவப்பட்டன.) இவை கைத்தறி, கைவேலை ஆகியவைகளின் வளர்ச்சிக்காகவும், இவை பற்றிய பிரச்சினைகளைக் கவனிப்பதற்காகவும் நிறுவப் பட்டன. சிறுபான்மைத் தொழில் போர்டு 1954-ல் அமைக்கப் பட்டு, வட்டார நிறுவனங்கள், சிறு பான்மைத் தொழிற் பயிற்சி நிறுவனங்கள், சிறுபான்மைத் தொழிற் கார்ப்பொரேஷன் இவைகளை இணைத்துச் சிறுபான்மைத் தொழில் வளர்ச்சிக்கான திட்டங்களை வகுத்தது. 1949-ஆம் ஆண்டில் மத்திய பட்டு போர்டு துவக்கப்பட்டு 1952-ல் சீரமைக்கப்பட்டது. 1954ஆம் ஆண்டில் கயிறு போர்டு துவக்கப்பட்டுக் கயிற்றுத் தொழில் வளர்ச்சி சம்பந்தமான முறைகளை ஆய்ந்துகொடுக்கும் இந்தப் போர்டுகளால் கிராமக் கைத்தொழில் வளர்ச்சிக்குப் போதிய வசதிகொடுக்கப்பட்டது எனலாம்.[1]

அகில இந்தியக் காதி கிராமத் தொழில் போர்டு மேற்கொண்டுள்ள பல கிராமக் கைத்தொழில்களைப் பற்றிய சுருக்கத்தை[2] இங்கு விவரிப்போமாக.

6. **கதர் சம்பந்தப்பட்ட பொருளாதார இயல்:** சர்க்காவினுல் ஏற்படும் நன்மையைப்பற்றி மகாத்மா காந்தி அடிகள் கீழ்க் கண்டவாறு சுருக்கிக் கூறியுள்ளார்கள் : (1) கை நூற்றல் தொழிலை உடனே நடப்பில் கொண்டுவர இயலும். ஏனென்ருல், (அ) இதற்கு மூலதனம் சிறிதளவுகூடத் தேவையில்லை. இதற்கு

1. கிராமச் சிறுபான்மைத் தொழில்கள் சம்பந்தப்பட்ட (இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டம்) குழுவினரின் அறிக்கை, அதிகாரம் 2, பக்கம் 5.

2. 'ப்ளானிங் பார்புல் எம்ப்ளாய்மெண்ட்' என்ற அகில இந்தியக்காதி கிராமக் கைத்தொழில் போர்டு, 1954 ஆம்ஆண்டு அறிக்கையை ஒட்டி எழுதப்பட்டுள்ளது.

வேண்டிய ஆக்கப் பொருள்கள் உள்ளூரிலேயே மலிவாகவும், எளிதாகவும் கிடைக்கும். (ஆ) தொழில் நுட்பப் பயிற்சி இதற்குத் தேவையில்லை. பட்டினியில் ஆழ்ந்து ஏழ்மையால் பீடிக்கப் பட்டுள்ள பாமர மக்கள் பெற்றுள்ள அறிவே போதுமானது. (இ) இதற்கென அதிக உடல் உழைப்புத் தேவையுமில்லை. சிறு குழந்தைகள் முதல் பெரியவர்கள் வரை இதை நன்கறிந்து நடத்தலாம். பல்லாயிர ஆண்டுகளாக இந் நாட்டு மக்கள் இத் தொழிலில் ஈடுபட்ட காரணத்தால் இதற்கென்று புதிய பயிற்சி பெற வேண்டிய அவசியமில்லை. (2) உணவுக்கு அடுத்தபடியாக, இது சமூகத்தில் இன்றியமையாத இடத்தைப் பெற்றுள்ளது. இதனுல் விவசாயிக்குத் தொடர்ந்து அதிகப்படி வருமானம் கிடைக்கும் என்பதில் ஐயமில்லை. நூற்ற நூலுக்கு எப்போதும் தேவை இருந்துகொண்டே வருகிறது என்பதை யாவரும் அறிவர். (3) இத்தொழிலுக்கு மழை அல்லது பருவக்காற்றுக்களால் எவ்வித தடங்கலு மேற்படுவதில்லை. பஞ்சத்தின் காரணத்தால் இத் தொழில் பாதிக்கப்படும் என்று ஆலோசிக்க வேண்டிய அவசியம் இல்லை. (4) பொருளாதார இடையூற்றினுல் குடும்பம் சிதறுண்டு பல்வேறு இடங்களுக்குப் போக நேரிடாது. அதே குடிசையில் இருந்து கொண்டு தொழிலை உயரிய முறையில் நடத்துவதற்கான வசதிகள் அமைந்துள்ளன. (5) மக்களின் சமூக மத சம்பந்தமான கொள்கைகளுக்கு எதிராக அமையவில்லை. (6) பஞ்சத்தை எதிர்ப்பதற்கு இது போதிய வசதியைக் கொடுத்து ஊக்கத்தையும் அளிக்கிறது. (7) தற்போது சிதைவு பெற்றுள்ள கிராமக் கைத் தொழில்கள் மறுபடியும் உயிர்பெற்று கிராமச் சமூகங்களுக்குப் பயனளிக்கக்கூடும். (8) இது கைத்தறி நெசவாளர்கட்கும், விவசாயிக்கும் நிரந்தரமாகப் போதிய பணவசதியும் அளிக்கத்தகு முறையில் உள்ளது. கைத்தறித் தொழில் அனேக மில்லியன் மக்களுக்கு உயிர்ப்பிச்சை அளிக்கிறது என்பதில் ஐயமில்லை. (9) இத்தொழில் மறுமலர்ச்சி பெறுவதால் இவற்றிற்கு உதவி யாக உள்ள பழங் கிராமக் கைத்தொழில்களும் மறுபடியும் உருவாகிச் சிதைந்து கிடக்கும் கிராமப்பொருள் நிலையை உயர்த்தக் கூடும். (10) மில்லியன்களுக்கு மேலான இந்திய மக்களிடையே செல்வநிலை சமமாக அமையும் எனலாம். (11) வேலையில்லாத் திண்டாட்டத்தைத் தீர்ப்பதுடன் படித்த மக்களுக்கும் வேலையற்றுள்ள விவசாயிக்கும் பகுதி நேர வேலை கொடுக்கும்.

1954-55-ல் காதி உற்பத்திக்காக ரூ. 5 கோடியை ஒதுக்கி வைத்து அதன் உற்பத்தி நிலை ரூ. 4,40,000 ஆக அதிகரிக்கும்.

**7. பருத்திக் கைத்தறி நெசவுத் தொழில் :** மில் நெசவுத் துணியின் காரணத்தால் பலத்த போட்டியேற்படினும் இக் கைத் தொழிலானது மிகவும் முக்கியமானதே. இத் தொழிலை அதிக ஈடுபாட்டுடன் மக்கள் மேற்கொள்ளுவதால் விவசாயத்திற்கு அடுத்தபடியாக இது மிகவும் மேம்பட்டதாய் அமைகிறது. நெசவுத் தொழிலை முழு வேலையெனப் பெரும்பகுதி மக்கள் மேற் கொண்டுள்ளனர். அதே போன்று, இதைப் பகுதி நேரப் பணி யெனக் கொண்டுள்ள மக்கள் பெரும்பாலும் உள்ளனர். 1941 ஆம் ஆண்டில் (கைத்தறி, மில் துணி) இவற்றைப் பற்றிய ஆராய்ச்சி நடத்தி, அவைகளின் நிலைமையைப் பரிசீலனை செய்து கூறக் குழு ஒன்றை அரசினர் நியமனம் செய்தனர். இத் துணி உற்பத்தியில் அடக்கவிலை அதிகமாக உள்ளதென்றும், அநேக தரகர்கள் இடையில் புகுவதால் அவர்களுக்கு இலாபம் கிடைக் கிறதே ஒழிய நெசவு செய்வோருக்கு யாதொரு பலனும் ஏற்பட வில்லையென்றும் யுத்தகாலத்தில் உண்டான தற்காலிக வர்த்தகப் பெருக்கத்தால் மட்டிலும் சிறிதளவு தொழிலில் ஏற்றம் உண்டாகிய தென்றும், மந்தகாலம் ஏற்பட்டவுடன் மறுபடியும் இத்தொழிலில் பல இடையூறுகள் ஏற்பட்டுள்ளன வென்றும் கூறப்பட்டது. காப்புத் தீர்வை (protective duties) இடப்பட்ட காரணத்தால் மில் நெசவுத் தொழிலுக்கு வளர்ச்சியளிக்கப்பட்டது. இது பெரும் இடையூறாக அமைந்தது. தேவையானபோது நூல் கிடைப்பது அரிதாயிருந்தது. மில்நெசவுடன் நிகழ்ந்த போட்டி, முரட்டுத்துணி மிகவும் மெல்லிய துணியில் அல்ல. நடுத்தர நெசவுத் துணியில் மட்டும்தான் எனலாம். கதர்த் தொழில் சம்பந்தமாகக் காந்தியடி கள் செய்த கிளர்ச்சியின் காரணமாகக் கைத்தறிக்குப் பேராதரவு ஏற்பட்டு வந்தது. அகில இந்தியச் சர்க்கா சங்கம் காந்தியடிகளால் துவக்கப்பட்டு அது கைத்தறி நெசவிற்கான அரும்பெரும் பணி களைச் செய்தது. அண்மையில் உருவாகியுள்ள அகில இந்தியக் கைத்தறி போர்டு, யுத்தப் பிற்கால வளர்ச்சிக்கென முதல் ஐந் தாண்டுகளில் மில்களில் அதிகரித்த கதிர்களின் எண்ணிக்கையில் பாதியளவை இத் தொழிலுக்குத் தேவைப்படும் நூலுக்கு ஒதுக்க வேண்டியது என்று கோரியதை அரசினர் அனுமதித்து உத்தர விட்டனர். இத் தொழிலை மேன்மையான நிலையில் கொண்டுவரத் தரப்படுத்தல் முறையையும் விஞ்ஞான முறைகளையும் மேற் கொண்டு அதன் உற்பத்திப் பொருள்களை விற்பனை செய்வதற் கென்று அரசினர் பொறுப்பெடுத்துக் கொண்டனர்.

இந்திய ராச்சியங்களனைத்திலும் கைத்தறி நெசவு பெரும் பான்மையான குடிசைத் தொழிலே. இத் தொழில் கிட்டத்தட்ட 100 லட்சம் பேர்களுக்கு வாழ்வளித்து வருகிறது. பலர் இதில்

சம்பாத்தியம் பெறுகின்றனர்; மற்றும் பலர் இதைத் தொழிலாகக் கொண்டவர்களிடம் அண்டி வாழ்கின்றனர். 30 லட்சம் பேர்கள் முழுநேர வேலையில் உள்ளனர்; 30 லட்சம் பேர்கள் பகுதிநேரத் தொழிலாளர்கள். மற்றைய 40 லட்சம் பேர்கள் அளவு குறைவாகவோ அன்றி முழுமையோ பிறரிடம் அண்டிப் பிழைப்பவர்கள். 1951 ஆம் ஆண்டில் உள்ள கைத்தறிகள் 30 லட்சம். அவற்றில் 8·4 லட்சம் சென்னையிலும், 4·8 லட்சம் அஸ்ஸாமிலும், 2·5 லட்சம் உத்தரப்பிரதேசத்திலும், 2 லட்சம் பீகாரிலும், 1·6 லட்சம் பம்பாயிலும், 1·2 லட்சம் மணிப்பூரிலும், 1·3 லட்சம் ஒரிஸ்ஸாவிலும், 1 லட்சம் மத்தியப்பிரதேசத்திலும் கிட்டத்தட்ட 1 லட்சம் மேற்கு வங்காளத்திலும் உள்ளன. இவற்றையடுத்து 23,000 விசைத் தறிகளும் உள்ளன. இவற்றில் 15,000 பம்பாய் ராச்சியத்திலும், இதர விசைத்தறிகள் மத்தியப் பிரதேசம், மைசூர், மேற்கு வங்காளம், சென்னை, பஞ்சாப் இவைகளிலும் உள்ளன. 1950-51-ல் கைத்தறி விசைத்தறி இவைகளிலிருந்து கிடைத்துள்ள துணியுற்பத்தி 810 மிலியன் கெஜங்களுக்கும் மேலாகும்.[1]

**8. கைநெசவுக் கம்பளி :** கம்பளி நெசவினைப் பல பகுதிகளில் கைத்தறியில் செய்து வருகின்றனர். இராஜஸ்தானத்தில் கம்பளி உற்பத்தி பெரும் தொழிலாகும். இங்குக் கம்பளி நூற்பும், நெசவும் பொருளாதார நிலைமையை எடுத்துக்காட்டும் பொருளாதார வளர்ச்சியற்ற பகுதிகளில், எடுத்துக்காட்டாக, ராயலசீமையில் கம்பளி உற்பத்தி மிகவும் முக்கியமானது. இங்கு மிகவும் மட்டமான முரட்டுக் கம்பளிகளையே உற்பத்தி செய்கிறார்கள். இந்நாட்டில் ஆண்டுதோறும் கைநெசவினால் 10 லட்சம் கம்பளிகள் தயாராகின்றன. இது ராஜஸ்தானத்தில் அதிகப்படியான அளவில் உற்பத்தியாகிறது. உத்தரப் பிரதேசத்தில் உள்ள மீர்ஜாபூரிலும், பாதோகியிலும், ஆந்திரப் பிரதேசத்திலும், ஏலூரிலும், மசூலிப்பட்டணத்திலும் தயாராகின்றன. 1951-52-ல் இவைகளில் ஏற்றுமதி ரூ. 5,00,00,000 எனக் கணக்கிடப்பட்டுள்ளது.

**9. கைக்குத்தல் அரிசி :** அநேக குடிசைத் தொழில்கள் இயந்திரங்கள் வந்த காரணத்தினால் நசித்துப்போய்விட்டதைப் போன்று கைக்குத்தல் அரிசித் தொழிலும் நெல்லறைக்கும் இயந்திரத்திற்கு எதிராக நிற்கமுடியாது இரையாகிறது. அண்மையில், கொஞ்சகாலம் முன்புவரை நாட்டின் 75% மொத்த நெல் குடிசைத் தொழிலாகவே பதனப்படுத்தப்பட்டுப் பயன்பெற்று வந்தது. கட்டுப்பாடுகள் இருந்த காலத்திலும் கூட நெல் கொள்முதல் செய்வது நின்றுபோய் அதன் விளைவாக இக் குடிசைத் தொழிலுக்

1. அகில இந்தியக் கிராமக் கடன் சர்வே அறிக்கை, பக்கம் 116.

குப் போதிய ஊக்கமின்றிக் கவனிப்பாரற்றுப் போய்விட்டது. இது எவ்வகையில் வன்மைபெற்றது என்பதைக் குறித்துக் கீழ்க்கண்ட விளக்கங்களிலிருந்து தெரிந்துகொள்ளலாம். (1) நம் நாட்டுப் பெண்டிர்க்குக் கிராமங்களில் இது பகுதிநேரப் பதனப்படுத்தும் தொழிலாக இருந்ததால் பதனப்படுத்தும் செலவு குறைந்து வந்தது. (2) இப்பொழுது நெல்லரைக்கும் இயந்திரங்களில் ஹல்லர் முறை இருப்பதால் கிடைக்கும் அரிசி கைக்குத்தல் முறையைவிட மிகவும் குறைவாகவே உள்ளது. (3) கைக்குத்தல் அரிசி மிகவும் சத்து உள்ளதென்று பொதுமக்கள் கண்டுபிடித்து, அதன் நிமித்தம் இதற்குப் பெரும் ஆதரவு கொடுத்து வருகிறார்கள். பொதுவாக, குடிசைத் தொழில்களில் உற்பத்தியாகும் பொருள்கள் தரத்திலும் அமைப்பிலும் குணத்திலும் பொறிசெய் பொருள்களை விட மட்டமானவை. எனினும், கைக்குத்தல் அரிசி, தரத்தில் மேம்பட்டது என்பதில் ஐயமில்லை. இதற்கேற்படும் உற்பத்திக் கெனவும் இயந்திரத் தொழிலில் உண்டாகும் அடக்கவிலையினும் குறைவாக இருக்குமென்பதில் ஐயமில்லை. இன்றுள்ள நிலைமையில் கைக்குத்தலையும்கூட ஹல்லர் முறையில் செய்யத் துணிந்து விட்டார்கள்.

கைக்குத்தல் முறையை வளர்ச்சியடையச் செய்யத் திட்டக் கமிஷன் செய்த பரிந்துரைகள் வருமாறு: (1) இத் துறையில் பெரும்பான்மைத் தொழில் புகுவதைச் சில கட்டுப்பாடுகள் விதித்துத் தடுக்க வேண்டும். (2) நெல் அரைக்கும் மில்களில் தற்போதுள்ள ஹல்லர் முறையைக் கொஞ்சம் கொஞ்சமாக நீக்கி, கைக்குத்தல் முறையைக் கொண்டுவர வேண்டும். 1955ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 26ஆம் தேதியன்று அமலில் வந்த தவிர்க்க இயலா வழங்குபொருள் தற்காலிக அமல் சட்டப்படி (Temporary Powers Act) இராச்சிய அரசினர் நெல் அரைக்கும் மில்களைக் கட்டுப்படுத்த ஆரம்பித்துள்ளனர். கைக்குத்தல் தொழிலை நன்கு பராமரிக்கக் காதி கிராமக் கைத்தொழில் போர்டு, தக்கசட்டத்தின் மூலம் இவைகளுக்குக் காலதாமதமின்றி ஆதரவு கொடுக்கவேண்டுமென்று கீழ்க்கண்ட பரிந்துரைகளைச் செய்துள்ளனர்: (1) ஹல்லர் முறை நெல்லரைக்கும் மில்களுக்குத் தடை விதித்தல் வேண்டும். (2) கைக்குத்தல் செய்வோர் ஜனக் கூட்டுறவு நியமனம் ஒன்றைப் போர்டின் உதவியைப் பெறுமாறு செய்தல். (3) நடப்பில் உள்ள மில்களுக்கு அதிகப்படி வளர்ச்சி செய்யாமையும் புதிய மில்களுக்கு அனுமதி கொடுக்காமலும் தடுக்கவேண்டும். 1954-55 ஆம் ஆண்டில் இந்தப் போர்டின் திட்டங்கள் ஆவன:

1. அகில இந்தியக் கிராமக் கடன் சர்வே அறிக்கை, பக். 116.

(1) கூட்டுறவு மூலமாகவும் மற்றும் இதர நிறுவனங்கள் மூலமாக வும், கைக்குத்தலரிசியை முதல் தரமாக்கி, இதை வழங்குதற்கு ஏற்பாடு செய்தல், (2) புதிய உபகரணங்களையும் வளர்ச்சிக் குரிய திட்டங்களையும் ஆராயப் போதிய வசதி கொடுத்தல், (3) இதற்குத் தக்க ஆதரவு தேடவேண்டிப் பொது மக்களி டையே துண்டு வெளியீடுகள் மூலமாகவும், சினிமாவைக் கொண்டும், கண்காட்சிகள் மூலமாகவும் இது எவ்வளவு சக்தி வாய்ந்தது என்பதை விளக்கமாக எடுத்துக்கூறலாம் என்று கூறி, அதற்கான வசதிகளை அமைத்துக் கொடுக்கப் பாடுபடுகிறது.

**10. தேனீ வளர்த்தல்:** 1924ஆம் ஆண்டு தென்னிந்தியாவில் உள்ள செண்பகனூரில் இருந்த ஒரு அமெரிக்கப் பாதிரியாகிய டாக்டர் நியூட்டன் என்பவர் விஞ்ஞான முறையில் தேனீக்கள் வளர்க்கும் முறையைத் தம் உதவியாளருக்குப் போதனை செய்தார். திருவாங்கூர் கொச்சியில் முதல் முதலாக இதை உடனே ஏற்றுக் கொண்டார்கள். இதையடுத்து மைசூர், குடகு, சென்னை இராச்சி யங்கள் இத் தொழிலில் அக்கறை காட்டின. பம்பாய் இராச்சியத்தில் வெகு அண்மையில் இத் தொழிலைத் தொடங்கிய போதிலும், கிராமக் கைத்தொழிற் குழுவினர் இதை ஒழுங்கான முறையில் அமைத்துக் கொடுத்திருப்பதால் பெருவாரியான முன்னேற்றத் தைப் பெற்றுள்ளனர். வடக்கு சதாரா (மஹாபலேஸ்வர்) பகுதி யிலும் வடக்குக் கன்னடப் (கன்னடப் பகுதியில்) பகுதியிலும் இத்தொழில் அடிகோலப்பட்டது. கர்நாடகத்தில் உபகரணம் அளித்தல், தேன் சேகரித்தல், பதனப்படுத்துதல், விற்பனை செய்தல் இவையனைத்தையும் தேனீ வளர்ப்போரின் கூட்டுறவு நிறுவனம் ஒன்றே நடத்தி வருகிறது. இவ்வாறு தேன் கூடுகளி லிருந்து எடுக்கப்படும் தேன் மிகவும் சுத்தமானது என்று பம்பாய் கிராமக் கைத்தொழில் குழுவினர் உத்தரவாதம் அளிக்கின்றனர். இதனுடைய விற்பனை விலைக்கும் நுகர்வோருக்கு இன்ன விலைக்குக் கிடைக்கவேண்டுமென்பதற்கும் வரம்பு விதித்து உள்ளார்கள். விவசாயப் பள்ளிகளிலும் துவக்கப் பள்ளிகளிலும் தேனீ வளர்த்தலைப் போதித்து வருகின்றார்கள். பல்வேறு வட்டாரங்களில் சந்தைப்படுத்தும் முறையை மேற்கொண்டு தேனீ வளர்ப்போருக்கு உபகரணங்களை அரசினர் மான்யம் போகக் குறைந்த விலையில் கொடுத்து உதவுகிறார்கள்.

**11. கிராம எண்ணெய்த் தொழில்:** கிராமங்களில் செக்கு களின் மூலம் தொன்றுதொட்டே எண்ணெய் பிழிந்துவர ஆரம்பித் தனர். இந் நாட்டில் உள்ள செக்குகளின் எண்ணெய் பிழியும் சக்தி கிட்டத்தட்ட 20 லட்சம் டன்கள் என்றும், 4 லட்சம் டன் எண்ணெய் உற்பத்தியாகின்றது என்றும் கணக்கிடப்பட்டுள்ளது.

சென்னை இராச்சியத்தில் அதிகப்படி செக்குகள் (2,31,439) உள்ளன. உத்தரப் பிரதேசத்தில் 1,33,774 செக்குகள் உள்ளன.

செக்குகள் நவீன மின்விசையால் இயங்கும் இயந்திரங்களைப் போன்று அவ்வளவு சக்தி வாய்ந்தவை அல்ல. இவைகளுக்கும் இயந்திர வசதி இணைத்தால் உற்பத்திப் பெருக்கம் ஏற்படும் என்பதில் ஐயமில்லை. செக்குகளைப்பற்றி ஆதரித்துப் பேசுபவர்கள் எண்ணெய் வித்துக்கள் ஓர் ஊரிலிருந்து ஆலைகள் உள்ள ஊருக்கு எடுத்துப் போவதனால் ஏற்படும் காலதாமதமும் காய்ச்சலும் இன்றி ஆங்காங்கே உள்ள செக்குகளில் பிழிந்து, எண்ணெய் எடுப்பதே எளிது என்று கூறுகிறார்கள். மேலும் செக்குகளில் பிழியப்பட்டுவரும் பிண்ணாக்குகளில் உயர்தரமான உணவுச் சத்துக்கள் அதிகம் உள்ளதென்று கருதுகிறார்கள். இக் கொள்கை பற்றி வேறுபட்ட கருத்துக்கள் உள்ளன என்பதை நாம் இங்கு வலியுறுத்துகிறோம்.

**12. கருப்பட்டித்தொழில் (பனைவெல்லம் தயாரிக்கும் தொழில்):** இத் தொழிலில் போதிய வேலை கிடைப்பதற்கான வசதி உள்ளது என்றும் உற்பத்தி செய்ய இயலுமென்றும் கருதுகிறார்கள். இதற்கான ஆக்கப்பொருள் போதிய அளவு உள்ளதென்றும் ஒரு சிறிது பயிற்சி கொடுப்பின் இந் நாட்டவர் மிகவும் குறைந்த முதலீட்டையுடைய இத் தொழிலின்மூலம் செல்வத்தை வளம்பெறச் செய்ய இயலும் என்றும் கூறப்படுகிறது. அதிகப்படியான ஆட்கள் நிலத்தில் பணியாற்றுவதைக் குறைத்து, அவர்களின் உழைப்பை இத் துறையில் ஈடுபடுத்தினால் எளிதில் பயன் காணலாம். மேலும், கரும்பு பயிரிடுவதற்கெனத் தேவைப்படும் நிலங்களையும் குறைத்துக்கொள்ளலாம். இந்தியாவில் உள்ள பனைமர மனைத்தும் ஐந்து கோடிக்குப் பக்கமாக உள்ளதென்று கணக்கிடப்பட்டுள்ளது. பனைவெல்ல வளர்ச்சித்தொழில் கிட்டத்தட்ட எல்லா இராச்சியங்களிலும் வகுக்கப்பட்டு அமலில் இருந்து வருகின்றது. பல்வேறு வகைகளில் காதி கிராமக் கைத்தறி போர்டு இதற்கான வசதியையும், தொழில் நுட்பம் இன்னதென்று செய்துகாட்டியும் நிதி உதவியளித்தும் கூட்டுறவுச் சங்கங்களை ஊக்குவித்தும் வருகின்றது. 1954-55 திட்டப்படி ரூ. 10 லட்சம் இதற்கெனச் செலவிடுவதென்றும் இதன் பெரும் பகுதியைப் பல்வேறு இராச்சியங்களுக்கும் நிறுவனங்களுக்கும் ஒதுக்கீடு செய்வதென்றும் முடிவு செய்து இருக்கிறார்கள். மத்தியப் பனை வெல்லப் பயிற்சி நிறுவனத்தை (Central Palm-Gur Training Institute) வன்மைப்படுத்தியும், முக்கியமான சில பயிற்சி முறைகளைச் செய்கையில் நடத்திக்

காட்டுவதென்றும், அதற்கென வசதியமைத்துள்ளார்கள். மது விலக்குத் திட்டத்தை அமலாக்கிய இராச்சியங்களில் முற்காலங்களில் மரமேறிகளான சாணுர்களுக்கு வேறு தொழில் கொடுப்பதற்கு இது பெரிதும் பயன்பட்டு வருகிறது.

**13. வெல்லமும் பழுப்புச் சர்க்கரையும்:** இந் நாட்டின் உற்பத்தியில் 5% உத்தரப் பிரதேசத்தில் கிடைக்கிறது. பம்பாய், ஹைதராபாத், சென்னை இவை முக்கியமான வெல்ல உற்பத்தி செய்யும் இராச்சியங்கள் ஆகும். வெல்லம் உற்பத்தி செய்த இடங்களில் ஆங்காங்கே பயன்படுத்தப்படுகிறது. அவ்வாறுன உற்பத்தியில் 5 சதவீதமே தொழிலுக்கெனப் பயன்படுத்தப் படுகிறது. இதில் 5 லட்சம் பக்கமாக முதலிடப்பட்டுள்ளது. நிலையற்ற சந்தையின் காரணங்களினுல் இத்தொழில் அண்மை ஆண்டுகளில் முன்னேருது பின் தங்கியுள்ளது. இத் தொழிலில் முன்னேற வேண்டுமாஞல் கரும்பின் விலையைக் கட்டுப்படுத்தி, சர்க்கரை வெல்லம் விலையையும், கட்டுப்படுத்தி, இவற்றின் மூலம் விலைகளை ஒருவாறு இணைத்துத் தரத்தை உயர்த்தித் தீர்வு காணலாம்.

கண்டசாரி அல்லது பழுப்புச் சர்க்கரை தயாரிப்பது தொன்று தொட்டு இந் நாட்டில் நடந்துவரும் ஒரு கைத்தொழிலாகும். சர்க்கரைத் தொழிலுடன் இதுவும் அடுத்தடுத்து வளர்ச்சி பெற்றுள்ளது. இதற்கென இடப்படும் மூலதனம் அதிகம் இல்லை. மேலும் மேம்பாடான தொழில் நுட்பம் இதற்குத் தேவைப் படுவதில்லை. கிராமங்களில் இதற்கான மூலதனப் பொருள்களைத் தயாரித்து, சர்க்கரை ஆலைகளில் ஏற்படும் செலவினைப் போல் இதற்கும் போக்குவரத்துச் செலவு அதிகரித்து வருகிறது. கண்டசாரிச் சர்க்கரையைத் தித்திப்புப் பண்டங்கள் தயாரிப் பாளர்கள் வேண்டுமென்று கோருகின்றனர்.

**14. கையினுல் காகிதம் செய்தல்:** இயந்திரத் தொழிலில் வளம் பெற்ற மேல்நாடுகளிலும்கூட கையினுல் காகிதம் தயாரித்துப் பயன்படுத்துகின்றனர். இவ்வகையான காகிதத்திற்குத் தனிப் பட்ட குணங்கள் இருப்பதால் இதை மேம்பாடடைந்ததெனக் கருது கின்றனர். யந்திரங்களில் உற்பத்தியாகும் காகிதத்தைக் காட்டிலும் மிகவும் வழவழப்பான மேல்பரப்பினை இதில் உண்டாக்குதல் எளிது. கிராமக் கைத்தொழில் போர்டு இதற்கான மான்யம், பயிற்சி, கருவிகள் ஆகியவைகளை அமைத்துக் கொடுத்துள்ளது. 1954-55-ல் வகுக்கப்பட்ட திட்டப்படி 15 புதிய கேந்திரங்களைத் திறப்பதென்று முடிவு செய்யப்பட்டுள்ளது. இதன் பலனுக, 45 உற்பத்தி நிலையங்கள் இருக்கும். உயர்ந்த ரகமான காகிதம்

தயாரித்து, அம்மாதிரியான காகிதத்தை விற்பனை செய்ய வசதியமைத்துக் கொடுக்க முடிவு செய்துள்ளது. கல்கத்தா, ஹைதராபாத், பூனு ஆகிய இடங்களில் கையினுல் காகிதம் தயாரிக்கும் முறையைப் பற்றிய ஆராய்ச்சிகள் நடத்தப்படு கின்றன. இவைகளை ஒருங்கே இணைத்துத் தொழிலை வன்மைப் படுத்த ஆலோசனை செய்து வருகின்றனர். இதைக் கைத் தொழிலாகக் குறிப்பிட்ட பள்ளிகளில் கொண்டுவர முயன்றுவரு கின்றனர். அரசினரின் பேராதரவில்தான் இத் தொழில் வளர்ச்சி பெறக்கூடும்.

**15. கிராமங்களில் தோல் கைத்தொழில்:** பெரும்பான் மைத் தொழிலாக இந்தியாவில் அண்மையில் தோன்றிய போதிலும், இன்றும் அதிகப்படி அளவில் தோல் பதனிடல், தோல் சம்பந்தப்பட்ட பொருள்களைச் செய்தல் முதலியவைகளைக் கிராமங்களில் சக்கிலியர் என்ற ஒரு வகுப்பினர் செய்கின்றனர். கிராமங்களில் க்ரோம் முறையில் தோல் பதனிடல் இன்றுவரை தெரியாது எனலாம். ஆயினும், ஆவாரம்பட்டையைக் கொண்டு தனிப்பட்ட முறையில் இன்று பதனிட்டு வருகிருர்கள். இப் பழமையான முறை மாறி, நவீன அமைப்புக்களை ஏற்க வேண்டியது அவசியம். மற்ருெரு குறைபாடு என்னவெனில் மிருகங்களின் தோல் உரிப்பதில் செம்மையான முறையைக் கையாளுவதில்லை. இதிலும் சீர்திருத்தம் வேண்டுமென்பதில் ஐயமில்லை. அருந்ததியர்கள் (சக்கிலியர்கள்) அனைவரையும் ஒன்று சேர்த்துக் கூட்டுறவுச் சங்கங்களை ஆங்காங்கு அமைத்துச் சீரான முறையில் தோல் உரித்தல், மற்றும் தயாரித்த பொருள் களைக் கூட்டுறவு நிறுவனத்தின்மூலம் விற்பனை செய்ய ஏற்பாடு செய்தல் வேண்டும். இறந்த கால்நடைகளின் எலும்பு, கொழுப்பு இவைகளையும் பயனுள்ளவாறு செய்துகொள்ளவேண்டும். நகரங்களில் தோல் பதனிடுவதற்கான மூலப் பொருள்கள் எளிதில் கிடைப்பதாலும், தயாரித்த சரக்குகளுக்குத் தக்க விற்பனை செய்ய இயல்வதாலும் பெரும்பாலான தோல் பதனிடுவோர்கள் தங்கள் கிராமங்களை விட்டு நகரங்களுக்கு வந்து குடியேறி விட்டனர். இத்தொழில் கிராமங்களில் வளராததற்குக் காரணம் என்னவெனில் எல்லாத் தோல்களும் பதிலாள் மூலம் நகரங் களிலேயே வந்து சேர்ந்து விடுகின்றன. எனவே, கிராமக் கைத்தொழிலுக்கு ஒன்றும் கிடைப்பதில்லை. இதற்கான ஒரேவழி என்னவெனில், கிராமங்களில் கூட்டுறவுச் சங்கங்களை அமைத்து அவற்றின்மூலம் மொத்தக் கொள்முதல்செய்து, நிலைமையைச் சீராக்கலாம். கிராமக் கைத்தொழில் போர்டு 1954-55-ல் திட்டம் வகுத்து விஞ்ஞானமுறையில் இறந்த கால்

நடைகளிலிருந்து எலும்பு, கொழுப்புக்களைப் பிரித்தெடுக்கவும் செம்மையான முறையில் பதனிடவும், தக்க பயிற்சிகள்மூலம் கிராம அருந்ததியர்களுக்குப் போதிக்கவும், அரசினர் உதவியையும் கூட்டுறவுச் சங்கங்களையும் கொண்டு உதவியளிக்கவும் திட்டம் வகுத்துள்ளனர். தோல் உரிக்கும் தொழிலை மாத்திரம் 100 இடங்களில் பல்வேறு கிராமங்களில் அமைத்துள்ளார்கள். தோல் பதனிடும் கழிகளைச் சீர்திருத்தவும் புதுப்பிப்பதற்கும் அரசினரிடமிருந்து மான்யம் கோரலாம் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

**16. தீப்பெட்டித் தொழில் (குடிசைத் தொழில்):** இத் தொழிலில் உள்ள பிரச்சினை வருமாறு: (1) போதிய நிதிவசதியின்மை, (2) பெரும்பான்மைத் தொழிலின்மூலம் நடைபெறும் போட்டி, (3) சீரான விற்பனை வசதிமுறை, (4) ஆக்கப் பொருள் இன்மை. முதலில் கூறிய பிரச்சினையைத் தீர்க்கக் கூறப்பட்ட பரிந்துரை ஒதுக்கப்பட்ட மூலதனத்தில் 50% உள்நாட்டுத் தீர்வையாக இடப்பட்டதை நீக்க வேண்டும். இதற்கான இரண்டாவது பிரச்சினை இந் நாட்டில் சுவீடன் தேசத்துக் கம்பெனி தோன்றி, உள்நாட்டு விகிதத்தில் 50% ஈடுகட்டி விடுகிறது. மூன்ருவது பிரச்சினையாகிய வர்த்தக முறை அவ்வளவு கடுமையானது அன்று எனக் கூறலாம். ஆக்கப்பொருள் கிடைப்பதில்லை என்பதற்கான காரணம் என்னவெனில் மென்மையான மரத்துண்டுகள் எளிதில் இல்லாது போய்விடுவதால் இது பெரும் பிரச்சினையாகக் கருதப்படுகிறது. மேலும் குடிசைத் தொழிலின் கீழ் இவற்றைச் சுலபமான முறையில் வாங்குவதும் சிரமமாக உள்ளது. திட்டக் கமிஷன் இதற்காக ஒரு குறிக்கோளை வகுத்து இத் தொழிலை மேம்பாடாக்கக் கீழ்க் கண்டவாறு கூறியுள்ளது. பெரும்பான்மைத் தொழிலை வளரவிடாது தடுப்பது ஒருமுறை. கிராமக் கைத்தறி போர்டு குடிசைத் தொழில்களுக்கு அளிக்கும் உதவி வருமாறு: (1) விற்பனைக்குரிய வசதிகள் செய்தல், (2) முதல்தரமான தீக்குச்சிகளைத் தயாரிக்கவேண்டிய ஆய்கூட ஆராய்ச்சிக்கான வசதிகள் செய்தல், (3) நடைமுறையில் உற்பத்தியைச் செய்துகாட்டுவதற்கான தொழிற்சாலைகளை அமைத்தல், (4) கடன் வசதிகள், தனிப்பட்ட வசதிகள், மான்ய வசதிகள் அளித்தல். விற்பனைக்கெனப் பெரிய நகரங்களில் டெப்போக்களைத் திறந்தும், கதர் விற்பனை நிலையங்கள் மூலமாகவும், கூட்டுறவுச் சங்கங்களின் மூலமாகவும் இவற்றை வழங்கலாம். செயல் முறைக்காக இரண்டு தொழிற்சாலைகளைச் சிறிய அளவில் தொடங்கி ஒவ்வொன்றுக்கும் 7 ஆயிரம் ரூபாய் மான்யம் தரும்படியாக அமைப்பதென்றும் முடிவு செய்துள்ளனர்.

**17. உண்ணத்தகா எண்ணெய்களைக் கொண்டு சோப்பு உற்பத்தி செய்தல் :** நாட்டின் பல்வேறு பாகங்களிலும் அநேக விதமான எண்ணெய்கள் கிடைத்து வருகின்றன. இவை உண்ணத்தகாதவை. இவைகள் வீணாகிப் போகின்றன. இம் மாதிரியான எண்ணெய்வித்துக்களை ஒருங்கமைத்து, அவற்றி லிருந்து எண்ணெய்பிழிந்து, அதனால் உண்டாகும் எண்ணெயைப் பல்வேறு துறைகளில் பயனுள்ளதாக்கிக் கொள்ளலாம். இதனால் பலருக்கு வேலை கொடுக்க முடிகிறது. தொழில்களிலும் உண்ணத் தகும் எண்ணெய்களைப் பயன்படுத்தி வருகிறோம். அதை விட்டொழித்து அதற்குப் பதிலாக, உண்ணத்தகா எண்ணெய்களை உபயோகிக்கலாம். உண்ணத்தகா எண்ணெய்க்கு இருபெரும் குறைபாடுகள் உள்ளன. ஒன்று அதன் ஆழ்ந்த வர்ணம்; இரண்டாவது அதன் துர்நாற்றம். இவைகளைச் சுத்தி செய்து சாயம் ஏற்றி துர்நாற்றத்தைப் போக்கிப் பயன்படுத்திக் கொள்ளலாம். இதற்கென ஒவ்வோர் இராச்சியத்திலும் இந்த எண்ணெயைச் சுத்தி செய்ய ஆலைகளை அமைக்கவேண்டுமெனக் கருதுகின்றனர். உண்ணத்தகா எண்ணெயிலிருந்து சோப்புத் தயாரிக்கும் முறையை மாதிரியாகக் காண்பிக்க இரு இடங்களை 1954-55-ல் திறக்க முடிவுசெய்துள்ளார்கள். இவை இரண்டும் கிராமக் கைத்தொழில் போர்டின் நேர் மேற்பார்வையில் இருக்கும்.

**18. பட்டுப்பூச்சி வளர்த்தல் :** இத் தொழில் மைசூர், மேற்கு வங்காளம், மத்தியப் பிரதேசம், பீகார், சென்னை ஆகிய இடங்களில் மேம்பாடடைந்துள்ளது. மைசூர் இராச்சியத்தில் 51,000 விவசாயக் குடும்பங்கள் பட்டுப்பூச்சி வளர்த்தலை உதவித் தொழிலாகக் கொண்டுள்ளனர். மேற்கு வங்காளத்தில், 1,43,000 மக்கள் இதையே நம்பி வாழ்கின்றனர். 1,73,000 மக்கள் பகுதி நேர வேலையாகக் கொண்டுள்ளனர். மைசூரில் ஆண்டுதோறும் சலவை செய்யப்படாப் பட்டு 15 லட்சம் ராத்தலும், 4 லட்சம் ராத்தல் மேற்கு வங்காளத்திலும், 3·1 லட்சம் ராத்தல் மத்தியப் பிரதேசத்திலும், 3 லட்சம் ராத்தல் சென்னையிலும், 1 லட்சம் ராத்தல் பீகாரிலும் உற்பத்தியாகின்றன. சற்றேறக்குறைய 1,30,000 கைத்தறிகள் கோராப்பட்டு உற்பத்தியிலும், செயற்கைப் பட்டு நெசவிலும் ஈடுபட்டுள்ளன. விசைத் தறிகள் சில இராச்சியங்களில் அமலுக்கு வந்துள்ளன எனலாம்.[1]

1. *அகில இந்தியக் கிராமக் கடன் சர்வே அறிக்கை, பக். 116.*

**19. சிறுபான்மைத் தொழில்கள்-இலக்கணத்தில் உள்ள பிரச்சினை:**[1] தொழிற்சாலைகள் சட்டத்தின் கீழ்ப் பதிவு பெறாத தொழில்களைக் குடிசைத் தொழில்கள் எனக் கருதுவது நியதி. குடிசைத் தொழில்களுக்கும் சிறுபான்மைத் தொழில்களுக்கும் உள்ள வேற்றுமை இன்னதென்று ஒரு வரையறை செய்ய இயல வில்லை. இது சம்பந்தமாகப் பல்வேறு இலக்கணங்களும் அபிப் பிராயங்களும் அவ்வப்பொழுது கூறப்பட்டு வருகின்றன. மின் விசையைப் பயன்படுத்தும் நிறுவனங்கள் ஒரு வகையென்றும், பயன்படுத்தாத நிறுவனங்கள் ஒருவகையென்றும் வேற்றுமை காட்டப்படுகின்றது. நாளடைவில், மின்சாரம் கிடைப்பது எளிதானால் இந்த மாறுதல் நீக்கப் பெறும். பெரும்பான்மைத் தொழிலா அல்லது சிறுபான்மைத் தொழிலா என்ற மாற்றத்தைக் குறிக்கும். ஒரு தொழில் பெரும்பான்மையா அல்லது சிறு பான்மையா என்ற வேற்றுமைகாண இது தனி மனித உரிமையில் உள்ளதா அல்லது கூட்டுறவு நிறுவனத்தின் அமைப்பில் உள்ளதா என்று கண்டுகொள்ளவேண்டும். சிறுபான்மைத் தொழில்களுக்குத் தக்க உதவி அளிப்பதற்கே கொள்கைக் குட்பட்ட ஒரு திட்டமான இலக்கணம் தேவைப்படுகிறது. இல்லை யேல் குடிசைத் தொழிலுக்கும், சிறுபான்மைத் தொழிலுக்கும் ஒரு வேற்றுமையும் இல்லாது அர்த்தமற்ற முறையில் விளங்கும் எனலாம். ஒவ்வொரு தனிப்பட்ட பிரச்சினையின் அடிப்படையிலும் இந்த வித்தியாசத்தைக் கண்டுகொள்ளலாம்.

1949-50ஆம் ஆண்டுத் தீர்வைக் குழுவினரின் அறிக்கை[2]யின் படி சீரிய விளக்கம் கொடுத்து, குடிசைத் தொழிலுக்கும் சிறு பான்மைத் தொழிலுக்கும் உள்ள பேதத்தை விளக்கியுள்ளனர்.

விவரம் அடுத்த பக்கத்தில் காண்க.

1. *திட்டக் கமிஷனின் அறிக்கை, அதிகாரம் 25.*

2. *பத்தி 108.*


குடிசை, சிறுபான்மைத் தொழில்கள்
குடிசைத் தொழில்கள்
சிறுபான்மைத் தொழில்கள்
கிராமத் தொழில்
நகரத் தொழில்
நகர, உபநகரத் தொழில்கள்
கிராமத் தொழில்கள்
பகுதி நேரத் தொழில் (விவசாயத் தொழிலுக்கு உதவி)
முழு நேரத் தொழில் (கைவினைஞர் தொழில்)
பகுதி நேரம் (சில நகரத் தொழில்)
முழு நேரத் தொழில்கள் (அநேக நகரத் தொழில்கள்)
பகுதி நேரம் (பருவ காலத் தொழில்)
முழு நேரம் (எப்போதும் நடத்தப்பட்டு வருபவை)
பகுதி நேரம் (பருவ கால மற்றது)
முழு நேரம் (இவை இல்லை எனலாம்).
அ.
ஆ.
இ.
ஈ.
உ.
ஊ.
எ.
ஏ.

அ-பிரிவு: இது விவசாயஉதவித்தொழிலாகக் கைத்தறி, பட்டுப் பூச்சி வளர்த்தல், கூடைபின்னுதல், மாவரைத்தல், பீடி தயாரித்தல் இவைகளாம். ஆ-பிரிவின் கீழ்க் கிராமக் கைத்தொழில்கள் அனைத்தும் மட்பாண்டம் செய்தல், தச்சு வேலை, பட்டரை வேலை, தோல் பதனிடுதல், செக்கில் எண்ணெயாட்டுதல், கைக்கோளர் களால் நெசவு, வண்டி தயாரித்தல், படகுகட்டுதல் ஆகியவை அடங்கும். (ஆற்றோரத்தில் உள்ள மாவட்டங்களில்). இ, ஈ-பிரிவு களில் நகரப் புறங்களில் உள்ள குடிசைத் தொழில்கள் முழு நேர ஊதியத்தைக் கொடுக்கும் பொன், வெள்ளி, ஜரிகை வேலை, மர, தந்த சிற்ப வேலை, பித்தளை வெண்கல வேலை, விளையாட்டுப் பொம்மை செய்தல், பட்டுத்துணி செய்தல், பருத்தித் துணி களுக்குச் சாயம் இடுதலும், அச்சடித்தலும் ஆகிய தொழில்கள் அடங்கும். உ-பிரிவின் கீழ்வரும் தொழில்கள் : நகரங்களில் உள்ள பருவகாலத் தொழிலாகிய செங்கல் சூளைத் தொழில், மட்பாண்டம் செய்தல் இவைகளாகும். ஊ - பிரிவிலுள்ள சிறிய நிரந்தரத் தொழிற்சாலைகள் நகர்ப்புறங்களில் அமைந்துள்ள பின்னல் துணிகள், பொறியியல் தொழில், நெசவுத்தொழிலுக் கான வளையங்கள் செய்தல், (bobbin) நாடா செய்தல், அச்சடித் தல் முதலியன. எ - பிரிவில் கிராமங்களிலுள்ள பருவகாலத் தொழிற்சாலைகள் அடங்கும். இவை விவசாயப் பொருள்களைப் பதனப்படுத்தி, அரிசி, மாவு, கண்டசாரிசர்க்கரை, வெல்லம் இவைகளைத் தயாரிக்கின்றனர். ஏ - பிரிவின்கீழ் முழுநேரத் தொழிலாக ஆண்டு முழுமையும் அமைந்துள்ள கிராமச் சிறுபான் மைத் தொழில்கள் அடங்கும். இத் துறையில் இனி முன்னேற்றம் காணவேண்டும்.

சிறுபான்மைத் தொழில் அமைப்பிலும், கைவேலை அமைப் பிலும் கவனிக்கவேண்டிய சிலவற்றை இங்கு விளக்குவோம். தனித்தியங்கும் ஒரு தொழிலாளி, தன் குடும்பத்தினருடன் மூலப் பொருளைக் கொண்டும் தொழிற்கான கருவிகளைக் கொண்டும் சில தனிப்பட்ட முதலாளிகளுக்கென முழுநேர வேலையாகவோ அல்லது பகுதி நேர வேலையாகவோ பணியாற்றி வருவான். இதற்கடுத்தபடியாக, தனிப்பட்ட கைவினைஞன் ஒருவன் பிறருக் கென உற்பத்தி செய்யும் உருப்படிக் கணக்கின்மீது வேலை செய்து வருவான். மற்றும் சில சிறிய கைத்தொழில் நிறுவனங்கள் தொழிற்சாலைகளைப்போல் அன்றி, ஒரு சிறிய தொழிற்கூடமாக அமைந்து வருகின்றன. எனவே, குடிசைத் தொழிலுக்கும், சிறுபான்மைத் தொழிலுக்கும் உள்ள வேற்றுமையைக் கடுமை யாகப் பாராட்டாது நிலைமைக்கு ஏற்ப விள்க்கம் தரவேண்டும். கிராமப் பொருளாதார நிலையுடன் தொடர்புள்ள தொழில்களை ஒரு

பகுதியாகவும், பரந்த சந்தைகளுக்குப் போய் விற்பனையாகும் பொருள்களை வேறொரு பகுதியாகவும் நாம் பிரிக்கலாம். முதலில் கூறியதை முன்னரே விளக்கிவிட்டோம். இரண்டாவதாக, உள்ளதை இனி விளக்குவோம்.[1]

**20. சிறுபான்மைத் தொழிலுக்கு உதவியளிக்கும் சில முறைகள் :** போர்க்காலத்தில் உருவான அநேக சிறுபான்மைத் தொழில்கள் நாளடைவில் உருத்தெரியாமல் மறைந்தன அல்லது நசித்துப்போயின. ஆக்கப் பொருள் காலாகாலத்தில் கிடைக்காத காரணத்தாலும் தேவைக்கு மேலாக உற்பத்தியுள்ள காரணத்தாலும், சில சிக்கன முறையில் அமையாத காரணத்தாலும் நல்ல தரமான சரக்கினை உற்பத்தி செய்ய இயலாது போனதாலும் இவை நசித்தன எனலாம். சீரிய முறையில் கண்காணிப்பின்றி அநேக சிறுபான்மைத் தொழில்கள் தோன்றி வளர்ந்து அரசினரின் உதவியும் கண்காணிப்பும் பெறவில்லை எனலாம். இதுகாறும் சீரிய கொள்கையை அரசினர் இதில் ஏற்படுத்தவில்லை. விசை வேண்டுமா, வேண்டாமா என்றும், கட்டுப்பாடுள்ள பொருள்கள் கொடுக்கப்பட வேண்டுமா அல்லது வேண்டாமா என்றும் முடிவு செய்யத்தான் அலுவல் அதிகாரி நியமிக்கப்படுகிறார். விவசாயம், போக்குவரத்து முறை, இயந்திரத் தொழில், இவைகளுக்குத் திட்டம் அமைப்பது போல இதற்கும் திட்டம் போடவேண்டும். இதை அரசினர் மேற்கொண்டுள்ளனர்.

கைவேலைக்கான பொருள்களைப் பெரும்பாலும் தொழில் தெரிந்த நடுவர்களும், தரகர்களும் மேற்கொண்டுள்ளனர். அவ்வப்பொழுது, கிடைக்கும் உத்தரவுகளை மேற்கொண்டு சரக்கினைக் கொடுப்பது வழக்கம். நடப்பில் இந்தத் தொழில் சீராக அமைந்து வருதலால் திட்டப்படி உற்பத்திப் பெருக்கமும், தரமுயர்த்தலும் ஏற்பட இன்னும் காலமதிக மாகக்கூடும். அதன் முறைகளாலும் அமைப்பினாலும் இன்னும் எவ்வித வளர்ச்சியுமின்றிப் பழைய நிலையிலேயே உள்ளது. அயல்நாட்டினரின் தேவையை அதிகரித்தற்கான வழிகளை நாடவேண்டும். மிகவும் மதிப்பு அதிகமாயுள்ள பொருள்களைத் தயாரிப்பதைக் காட்டிலும், பொதுமக்கள் நுகர்வதற்கு அநுகூலமான பொருள்களை உற்பத்தி செய்வதால் சிறந்த விற்பனை ஏற்படும் என்பது திண்ணம். காண்பித்து அதன் அமைப்பையொட்டிப் பெற்ற உத்தரவுகளுக்கான சரக்கைப் பெருமளவில் மாதிரிக்குத் தக்கவாறு உற்பத்தி செய்ய

1. *இதில் விளக்கப்பட்ட தொழில்கள் அனைத்தும் கிராமத்தொழில்கள் எனக் கூறப்பட்டதன் காரணமென்னவெனில் அவை கிராமப் பகுதிகளில் உள்ளன என்பதால் அல்ல; கிராமங்களின் பொருளாதார வளர்ச்சிக்கு உகந்தனவாகக் கருதப்படுகின்றன. கிராமத்தொழில் அல்லது நகரத்தொழில் என்ற பாகுபாட்டை நாம் புள்ளி விவரங்கள் வாரியாக அறிய முடிவதில்லை எனலாம்.*

வேண்டும். இம்மாதிரி ஏற்படின், அமெரிக்கா போன்ற நாடுகளிலிருந்து நல்ல கிராக்கி ஏற்படக்கூடும். மத்திய இராச்சிய அரசினர் தக்க உதவிகளளித்துக் கூட்டுறவு நிறுவனங்கள் மூலம் அயல்நாட்டுக் கொள்முதல் செய்வோருடன் தொடர்பு கொள்ள வசதியமைத்துத் தருதல் இன்றியமையாதது.

கைவேலைகளைப் பொறுத்தமட்டில், தேவைக்கேற்ப உற்பத்தியை அதிகரிக்க முயலவேண்டும். தேவையை அதிகரிக்கவும் பல்வேறு வசதிகளை யமைக்கவேண்டும். இந் நாட்டவர்க்கு வாங்கப் போதிய நிதி வசதியின்மையால் இவைகளை வாங்க முடிவதில்லை. தரத்தை உயர்த்திச் செய்முறைகளைச் சீராக்கினால் விலைகளைக் குறைக்க ஏற்பாடு செய்யவியலும். விற்பனை நிலையங்களைத் திறந்தும், கைவேலைக்காரர்களுக்கும், சிற்பிகளுக்கும் அவ்வப்போது தேவைப்படும் அமைப்புகள் எவை என்று தகவல் கொடுத்துவரின், இத் துறையில் வளர்ச்சி ஏற்படக்கூடும். நுகர்வோரின் கூட்டுறவுச் சங்கங்களும், உற்பத்தியாளரின் கூட்டுறவுச் சங்கங்களும் தம்மில்கூடி உள்ளூர்த் தேவைகளை ஈடுசெய்வார்கள்.

கைவேலைக்காரர்கள் தரகரின் பிடியினின்று சிறிது சிறிதாக விலகவேண்டுமாயின் அவர்களுக்குத் தொழில்நுட்ப வசதியும் வழி காட்டியும் அமைத்துக் கொடுத்தலே நலம். இது சம்பந்தமான இரண்டு கொள்கைகளை நாம் இங்கு விவாதிப்போம்: (1) கூட்டுறவு அமைப்புகளை ஏற்படுத்திக் கொடுப்பது, (2) இவர்களுக்கிடையே சங்கங்களை அமைத்துக் கைவேலை உற்பத்தி நிலையங்களைக் கூட்டுறவு முறையின்கீழ் நிறுவவேண்டும். இவர்கள்ஒழுங்கான தரம் என்னவென்றும் அமைப்புகளும் மாதிரிகளும் என்னவென்றும் கைநுட்ப வேலைக்காரர்களை பாதிக்கும் நிலை என்னவென்றும் கருதவேண்டும்.

தொன்மையான புதிய சிறுதொழில்கள் என்று பிரித்ததோடு அல்லாமல் இப்பொழுது மூன்று வகையான பெரும் பிரிவுகளைக் கொடுப்போம்: (1) தனித்து இயங்குபவை[1] (2) ஒன்றோடு இணைந்த கைவேலைகள்[2] (3) பெரும்பான்மைத் தொழிலுடன் போட்டியிடத் தக்க தொழில்கள்: எடுத்துக்காட்டாக, கைத்தறி நெசவு முதல் பிரிவின் தேவை, கூட்டுறவு முறையின்கீழ் நிதி வசதி, சந்தைப்படுத்தும் முறை, விற்பனைக்கான வசதிகள் ஆகியவைகளே. இரண்டாவது பிரிவின்கீழ், சிறுபான்மைத் தொழிலில் குறிப்பிட்ட உற்பத்தியை இதற்கென ஒதுக்குதல் இன்றியமை

1. பூட்டு, சீல், மெழுகு வர்த்தி, காலணி, பொத்தான்கள் இவைகள் உதாரணங்கள்.

2. உதாரணமாக, சைக்கிள் பகுதிகள், மின்சாரப் பொருள்கள், வெட்டுக்கருவிகள், மட்பாண்டங்கள், விவசாயக் கருவிகள் முதலியவை.

யாதது. இதற்கென மத்திய திட்டம் வகுத்து அதன் கீழ்த் தொழில்கள் அனைத்தும் ஒருங்கு அமைக்கப்பட வேண்டும். மூன்றாவது பிரிவுக்கு நாம் முன்னரே நாலாவது பத்தியில் எவ்வாறு சீரமைக்க வேண்டுமென்று விளக்கியுள்ளோம்.

கிராமக் குடிசைத் தொழில், சிறுபான்மைத் தொழில் இவைகளுக்கான வளர்ச்சியைக் குறித்து இராச்சியங்கள் பெருமளவில் கொள்முதல் செய்ய முன்வரவேண்டும் குடிசைத் தொழிலில் சீரிய முறைகளில் கையாளத் தக்க கொள்கைகளை அரசினர் வகுக்க வேண்டும்.

புதியவிடங்களில் தொழில் உற்பத்தியை அமைத்து, அவற்றின் மூலம் சிறுபான்மைத் தொழில்களுக்கான வளர்ச்சியையும், ஆதரவையும் கொடுக்கவேண்டும். புதிய நகர அமைப்புகள் பழம் நகரங்கள் இவைகளில் இடவசதி, விசை கிடைக்கும் தன்மை இவைகளைப் பொறுத்துத் தொழில் சீரமைப்பு ஏற்படும். இதற்கு மத்திய அரசினரின் திட்டம் தேவை எனலாம்.

முதல் ஐந்தாண்டுத் திட்டம், ஆராய்ச்சி நிதி, பயிற்சி இவை சம்பந்தமான பிரச்சினைகளைக் கருதியுள்ளது. நிரந்தரமாக வேலை கிடைக்கக்கூடிய தொழில்களுக்கான பயிற்சி தருவதே முறையாகும். இரண்டாவதாக, சிறுபான்மைத் தொழில்களில் தொழில் நுட்பப் பயிற்சி, கைவினைஞர்களுக்குக் கிடைக்கவேண்டியது அவசியம் எனக் கூறுகிறது. புதிய ஆராய்ச்சிப் பகுதிகளைத் துவக்கி அவற்றின் மூலம் சிறுபான்மைத் தொழிலுக்கான வளர்ச்சியைக் கருதவேண்டும். நிதிகள் சம்பந்தமாக இராச்சியங்கள் உடனுக்குடனே வசதி காண முடியாமல் இருக்கும். அதற்கெனத் தொழில்நிதிக் கார்ப்பொரேஷன்களைத் தக்க அளவில் அமைத்துக் கொள்ளல் வேண்டும். இது சம்பந்தமாக, வட்டாரத் தொழில்நிதிக் கார்ப்பொரேஷன் அமைப்பைப்பற்றி நன்கு விவாதிக்கவேண்டும்.

**21. சிறிய தொழில்களைப்பற்றிப் பன்னாட்டுத் திட்டகுழுவினரின் அறிக்கை:** ஃபோர்டு (Ford) நிறுவனத்தின் ஆதரவில் துவக்கப்பட்ட பன்னாட்டுத் திட்டக்குழுவினர் இந்திய அரசாங்க அழைப்பின்பேரில் சிறுபான்மைத் தொழில்களைப்பற்றிய பிரச்சினைகளை ஆராய்ந்து, அதிக அளவில் வேலை கொடுப்பது சம்பந்தமான வழிகளைக் காணவந்து, அதன் முடிவாகக் கொடுத்த அறிக்கை (1954ஆம் ஆண்டு ஜூன் மாதத்தில் வெளியிடப்பட்டது). தவறான முறைகளில், நிர்வகிப்பதாலும் உற்பத்திகள் அதிகரிப்பதாலும் ஒழுங்கற்ற முறையில் நிறுவப்பட்டதாலும் இத்தொழில்கள்

பின்னடைந்துவிட்டன. இந்தியக் கைவினைஞர்களின் இயல்பான சக்தியைச் சீரான முறையில் பயன்படுத்தாது தவருன வழிகளில் பயன்படுத்துகிருர்கள்.

இவ் வறிக்கை அநேக யோசனைகளைக் கூறியுள்ளது. அவைகளில் (1) பலவகைப்பட்ட பாட இயல்களைப் போதிக்கும் தொழில் நுட்பக் கல்வி நிலையத்தை நான்கு வட்டாரங்களில் அமைத்தல், (2) தேசீய டிசைன் பள்ளிகளை நிறுவுதல், (3) நுகர்வோரின் தேவைகளைக் கண்காணித்துப் பின் பணிசெய்தல், (4) கார்ப்பொரேஷன் அமைத்தல், (5) ஏற்றுமதி வளர்ச்சி அலுவலகங்களில், ஒன்றை வட அமெரிக்காவிலும், மற்ருென்றை ஐரோப்பாவிலும் நிறுவுதல், (6) சிறு தொழில் கார்ப்பொரேஷன் ஒன்றை அமைத்தல், (7) உற்பத்தி, பயிற்சி இவைகளுக்கான இயந்திர வசதியும் செய்வதற்கான மாதிரிக் கருவிகளும், கடைசியாக ஏழு விற்பனைக் கார்ப்பொரேஷன்களும் நிறுவுதல் வேண்டும்.

இந்தியச் சந்தை உலகிலேயே மிகவும் பெரியது. உள்ளூர்த் தேவைகளை அனுசரித்து நகரங்களிலும், கிராமங்களிலும் இன்ன அளவில் இவைகள் உள்ளனவென்று அறிந்து, அதற்கேற்ப வசதிகளை அமைத்துக் கொடுக்கவேண்டும். தனியார் துறையில் வளர்ச்சி ஏற்படாதது எக் காலமும் அரசினர் உதவியை நாடுதல் தவறு என்று காட்டுகிறது. விஞ்ஞான முறையில் சிறுதொழில் எதுவும் நம் நாட்டில் அமைக்கப்படவில்லை என்றும், அதில் புதிய முறைகளைக் கையாண்டால் அதிகப்படியான மக்களுக்கு வேலை கிடைக்குமென்றும் அதன் விளைவாக நாட்டில் வறுமையை ஒருவாறு போக்க இயலும் என்றும் தொழில் முறையில் நவீன சாதனங்களை மேற்கொள்ள வேண்டும் என்றும் இக் குழுவினர் முடிவு செய்தனர்.

தொழில் வளர்ச்சிக்கான தனியார் முயற்சியை ஊக்குவிக்க வேண்டியது இன்றியமையாதது. பொறுப்பினை அரசினர் மேற்கொள்ளவேண்டுமென்றும் லாபத்தினைத் தனியார் பெற்றுக் கொள்ளவேண்டுமென்றும் கூறுவது பொருந்தாதது எனலாம். தொழில் வளர்ச்சியின் ஆரம்பகாலத்தில் அல்லது தோற்றுவாயில் தற்காலிகமாக அரசினர் உதவியை நாடுவதும் அவர்களது நிர்வாகத் திறமையைக் கோருவதும் சரியே. பின்னர், இத் தொழில் வன்மை பெற்றதும், அரசினர் தாமாகத் தொழிலினின்று நீங்க வேண்டும்.

சிறு தொழில்களை வளர்ச்சிசெய்யக் கொடுக்கும் உதவி எப்போதாவது கிடைக்கிறதேயொழிய நிரந்தரமாக இல்லை. அவ்வாருன வசதி ஒருசில தொழில்களுக்கே கிடைத்துவருகின்றது.

இதற்கெனக் கொடுக்கப்படும் உதவி ஒழுங்கான முறையில் அமைக்கப்படவில்லை. இவ்வாறு இருப்பின், இத் துறையில் வளர்ச்சி காண்பது மிகவும் கடினம். ஆக்கப்பொருள் வழங்குதல், உற்பத்திப் பொருளுக்கான டிசைன், தொழில் நுட்ப முறை, வர்த்தகம், மாதிரிக் கருவிப் பயிற்சி, அதி கரித்த உற்பத்தி, குறைந்த விலையில் உயர்தரமான பொருள், இவைகளைப் பற்றிய ஆராய்ச்சிகளை இக் குழுவினர் வெகுவாகக் கருதியுள்ளார்கள்.

நான்கு வட்டாரத் தொழில்நுட்பப் பயிற்சிப் பள்ளிகளைத் திறக்கவேண்டுமென்றும் அவற்றில் ஆராய்ச்சி, நிதியுதவி, பயிற்சி வசதி இவைகளைக் கொடுக்கவேண்டுமென்றும் பரிந்துரை செய் துள்ளனர்.[1] இத் தொழில் நுட்பப் பள்ளிகள் சிறுபான்மைத் தொழில் முதலாளிகளுக்கு ஊக்கமளித்து அவசியத்திற்கேற்ப நிதி உதவி செய்து தொழிற் பயிற்சி கொடுத்து; அவர்களை முன் னேற்றப்பாதையில் கொண்டு வந்து, அவர்களால் இத்தொழில்கள், சீரிய முறைகளில் நடத்தப்பட்டு வருகின்றனவா என்று கண் காணிக்கவேண்டும்.

தேசீய டிசைன் பள்ளியில் புதிய கொள்கைகளையும், புதிய தொழில் நுணுக்கங்களையும் உருவாக்க முயன்று வரவேண்டும். இதை வர்த்தக முறையில் பயன்படுத்தலாமா என்று ஆலோசித்து அதற்கான பயிற்சி, கண்காட்சி, தகவல் வெளியீடு, போக்கு வரத்து முறை இவைகளை அமைத்துக் கொடுக்கவேண்டும்.

நுகர்வோர்களுக்கான பிற்காலப் பணியாற்றல் நிறுவனம், நுகர்வோர்களுக்கான வசதிகளை இந்தியாவிலும் அயல் நாடு களிலும் செய்துகொடுக்க முன்வரவேண்டும்.

ஏற்றுமதி வளர்ச்சிக்கான நிறுவனங்கள் கைவேலைப் பொருள் களை வட அமெரிக்காவிலும், ஐரோப்பாவிலும், நுகருமளவில் வளர்ச்சிக்கான வழிகளைத் தேடவேண்டும். இதற்கென அவர் களைக் கண்டு பொருள்களின் தனிப்பட்ட மேன்மையை எடுத்துக் கூறவேண்டும்.

இவற்றிற்கான நிதியோ, கடன் வசதியோ, மூலதனமோ இல்லை என்பது அறிந்ததே; இக் குறைபாட்டை நீக்க முயல வேண்டும். நவீன இயந்திர சாதனங்களைப் பெறுவதற்கெனக் கடன் வசதி அளிக்கவேண்டும். வர்த்தகப் பாங்குகள் தங்கள் கிளைகளுக்குப் போதிய அனுமதி கொடுத்து, இச் சிறுதொழில் நிறுவனங்களுக்குக் கடன் கொடுக்குமாறு பணிக்கவேண்டும்.

1. இப் பரிந்துரையை அரசினர் ஏற்றுக் கொண்டுள்ளனர்.

கடன் வசதி முழுவதையும் ஆங்காங்கே பிரித்துக் கொடுத்தலே நலம் எனக் கருதுகிறோம். இயந்திரத் தொழில் துறைக்கும், கூட்டுறவுப் பாங்குகள் கடன் வசதி அளிக்க முன்வரவேண்டும். தொழில் நிறுவனங்களின் இட அடைமானத்தை மேற்கொண்டு கடன்கொடுக்க முன்வரலாம். போதிய நிதி உதவியை அரசினரும் கொடுக்க முன்வரவேண்டும்.

தற்போது நடப்பிலுள்ள உள்ளூர் இராச்சிய, தேசீய வர்த்தகச் சங்கங்களை வன்மைப்படுத்தி வளர்ச்சிக்குரிய வழிகளைத்தேடி இவற்றிற்கான பிரச்சினைகளை விவாதித்துத் தீர்வுகாணவேண்டும்.

கூட்டுறவுகள் சம்பந்தமாக இந்தக் குழுவினர் செய்துள்ள பரிந்துரைகள் : (1) அரசினர் தாமாகவே எந்த அமைப்பை ஏற்படுத்தினாலும், அவற்றை மெதுவாக அவர்கள்பால் விட்டுவிட வேண்டும். அவர்களுக்குப் போதிய கல்வி வசதியையும் அளித்து, தனித்து இயங்கும் வழிகளையும் கற்பிக்க வேண்டும். (2) குறுகிய காலப் போதனைப் பள்ளிகளையும் கூட்டுறவு மாநாடுகளையும் நடத்தி ஒவ்வோர் இராச்சியத்திலும் இதற்கான வழிகளை வகுக்க வேண்டும்.

சிறுபான்மைத் தொழில் மத்திய கார்ப்பொரேஷன் ஒன்றை நிறுவி, அதற்கான இராச்சியக் கிளைகளை ஏற்படுத்தி இராச்சியத்தின் தேவைகளை இதன்மூலம் பெறவேண்டும்.

சிறுதொழிலுக்கான ஊக்கமும், நிதிவசதியும், கொடுப்பதற்கென்று கூட்டுறவு முறை தொகுக்கப்படவேண்டும். நிரந்தரமாகப் பெறும் நாட்டின் தேவைகளைப் பூர்த்தி செய்வதற்கென்று அவர்களுக்கு நிதி உதவியும், நிர்வாக வசதியும், மாதிரிப் பயிற்சிகளும் செய்துகொடுக்கவேண்டும். பெரும்பான்மை உற்பத்திக்கான பயிற்சிகளை இதன் தொழிலாளர்களுக்குக் கொடுக்க வேண்டும். இதன்மூலம் அதிகப்படி தேவையான சரக்குகளை உற்பத்தி செய்வது எளிது.[1]

*1. கிராமச் சிறுபான்மைத் தொழில் (இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டக் குழுவினரின் அறிக்கை) 23-வது அதிகாரத்தில் விளக்கப்பட்டிருக்கிறது.*

# 14. பெருவாரித் தொழிலும் தீர்வைத் தண்டல் கொள்கையும்

1. இரும்பு எஃகுத் தொழில் : இன்றுள்ள எஃகுத் தொழில், 1873-ல் பீகாரில் உள்ள ஜரியா நிலக்கரிப் பிரதேசத்தில் உள்ள பாராகார் இரும்புத் தொழிற்சாலை என்ற பெயரில் உற்பத்தி யாகியது. 1889-ல் இத் தொழிற்சாலை வங்காள எஃகு இரும்புக் கம்பெனியாரால் வாங்கப்பட்டது. இதன் பிறகுதான் இதில் லாபம் ஏற்பட ஆரம்பித்தது. ஆயினும், எஃகு உற்பத்தியை ஆரம்பித்த உடனே இந்தக் கம்பெனி பலத்த நஷ்டத்தை யடைந் தது. 1910 ஆம் ஆண்டிற்குப் பிறகு சிங்பும் (Singhbhum) மான்பும் (Manbhum) மாவட்டப் பகுதிகளில் கிடைத்த புதிய இரும்புத் தாதுவினால் இக் கம்பெனியின் உற்பத்தியில் ஏற்றம் உண்டாகி, நிலைமையில் பலன் கண்டது. சிங்பும் மாவட்டத்தில் சக்சி (Sakchi) என்ற ஜெம்ஷெட்பூரில் டாட்டா கம்பெனி தோன்றியது. இதன் தோற்றுவாய், முதல் இரும்பு எஃகு வரலாற்றிலேயே புதிய மாற்றம் உண்டாகியது. 1913-ல் முதன்முதலில் வெற்றிகாணும் வகையில் இந்தியாவில் எஃகு உருவாகியது.

முதல் உலகப் போரினால் இத் தொழில் நிறுவனம் வன்மை யடைந்து, மேலும் 1917 முதல் 1924 வரையில் நவீன முறைகளில் விஸ்தரிப்புச் செய்யப்பட்டன. இதன் மூலம் கிடைத்த மாபெரும் வெற்றியின் காரணத்தால் இம்மாதிரியான புதிய நிறுவனங்கள் தோன்றின. 1918-ல் அஸன்ஸாலை அடுத்த ஹிராபூரில் (Hirapur) கல்கத்தாவிலுள்ள பர்ன் அண்டு கம்பெனியாரால் இந்தியன் எஃகு இரும்புக் கம்பெனி தொடங்கப்பட்டது. இந்தக் கம்பெனிக்குக் குல்டி (Kulti) யில் இன்னொரு உலையுள்ளது. இங்கு உள்ள இரும்புப் பட்டரை (Iron Foundry) கிழக்கிலேயே மிகவும் பெரியது எனலாம். 1936-ல் பர்ன் கம்பெனியார் ஸ்டீல் கார்ப்பரேஷன் ஆப் பெங்கால் என்ற கம்பெனியைத் தொடங்கி 1952-ல் இவ் விரு

கம்பெனிகளையும் ஒன்றுக இணைத்தனர். இன்னொரு முக்கியமான இரும்புத் தொழிற்சாலை, மைசூர் இராச்சிய இரும்புத் தொழிற்சாலை என்றபெயரால் பத்திராவதியில் 1923-ல் துவக்கப்பட்டது.[1] 1924-ல் உற்பத்தித் தற்காப்புக் கொள்கையை அனுசரித்து முதன்முதலில் இரும்பு எஃகுத் தொழிலுக்குத்தான் காப்பு அளிக்கப்பட்டது காப்பளிப்பின் ஆதரவில் இந்தத் தொழில் வளர்ச்சி பெற்று வந்திருந்தது. இந்த நூற்றுண்டின் ஆரம்பத்தில் வார்ப்பிரும்பு உற்பத்தி 35,000 டன்னிலிருந்து 1938-39-ல் 15,76,000 டன்களாகப் பரிணமித்தது. இதில் மூன்றில் ஒரு பங்கு ஏற்றுமதி யாகியது. இந்திய வார்ப்பு இரும்பைப் பெரும் அளவில் வாங்கிய வாடிக்கைக்காரர் ஜப்பான் நாடு. அமெரிக்காவும், இங்கிலாந்தும் பெரிய அளவில் கொள்முதல் செய்தனர். இந்திய உற்பத்தியில் வந்த வார்ப்பு இரும்பு இதரநாட்டு உற்பத்திகளுக்கு எந்த வகையி லும் தாழ்ந்ததன்று. தற்காலம் வார்ப்பிரும்பு இறக்குமதியாவ தில்லை எனலாம்.

1916ஆம் ஆண்டிலிருந்து எஃகு உற்பத்தி முன்னேற்றமடைய ஆரம்பித்தது. இரண்டாம் உலகப்போரின்போது இறக்குமதிகள் நின்றுபோன காரணத்தாலும், அரசினர், ரெயில்வேக்கள் இவை களால் கிடைத்த தேவையானவைகளை மேற்கொண்ட காரணத் தாலும் உற்பத்தியில் பெருக்கம் ஏற்பட்டது. தேவைகளைச் சமாளிக்க முடியாது, பங்கீட்டு முறையைக் கையாண்டனர். இதனுல் யுத்தத்திற்கும் நாட்டில் பொதுத் தேவைகளுக்கும் சம மாகப் பங்கீடு செய்யப்பட்டது. இந்தத் தொழில் வளர்ச்சிபெற்று, பல்வேறு திசைகளில் முன்னேறியது எனலாம். டாட்டா கம்பெனி இந்திய நாட்டிலேயே மிகவும் பெரிய நிறுவனம். அது இந்தியா வின் 75% தேவைகளைச் சமாளிக்கிறது. முதல் 5 ஆண்டுத் திட்டத்தில் தேவைகளை 100% அளவில் சமாளிக்க முடிவு செய்து அதற்கேற்ற நிலையில் உள்ள எஃகு உற்பத்திச் சாலைகளைப் பலப் படுத்தியும் புதுத் தொழிற்சாலைகளை அமைக்கவும் தீர்மானிக்கப் பட்டது. 1953ஆம் ஆண்டு ஜெர்மனி நாட்டின் க்ருப்ஸ் அன்ட் டிமாக் கம்பெனியாருடன் பேச்சு வார்த்தை நடத்தி நவீன எஃகுத் தொழிற்சாலை ஒன்றை அவர்களுடைய உதவியின் மூலம் நிறுவ முடிவு செய்யப்பட்டது. இந்தப் புதிய தொழிற்சாலை 1958-ல் உற்பத்தியில் ஈடுபடக்கூடும். இன்னும் இரண்டு பெரிய தொழிற் சாலைகளை மத்தியப் பிரதேசத்திலும், மேற்கு வங்காளத்திலும் அமைக்கலாமென்று கருதப்படுகிறது. தனியார் துறையில் உள்ள இரும்பு எஃகுத் தொழிற்சாலைகளையும் பலப்படுத்த உதவி

1. 1918-ல் பத்திராவதி இரும்புத் தொழிற்சாலை திறக்க அனுமதி கிடைத்து 1923-ல் வேலை தொடங்கியது.

கொடுக்கத் தீர்மானித்துள்ளனர். தலை ஒன்றுக்கு இவ்வளவு எஃகு உற்பத்தி என அளவிட்டால் அதுவே நம் நாட்டின் பொருள் வளர்ச்சிக்கான ஊன்றுகோல் எனக் கூறலாம். அதன் படி நம்நாட்டில் தலா 12 பவுண்டும் இங்கிலாந்தில் 630 பவுண்டும் அமெரிக்காவில் 1,300 பவுண்டும் உற்பத்தி எனக் கருதுகிறார்கள். இது மலைக்கும் மடுவுக்கும் உள்ள வேறுபாடு போன்று இருக்கிறது.

**2 பருத்தி நெசவுத் தொழில் :** இந்தியாவில் பருத்திநெசவுத் தொழில் பெருவாரியான உற்பத்தியாகும். ரூ. 104 கோடி முதலீடு செய்யப்பட்டும், 7,43,300 பணியாளர்களைத் தொழிலிலிருத்தியும் உள்ள இத்தொழில் இந்தியாவின் மிகவும் சிறப்பான பெருந் தொழில்களில் ஒன்றெனில் அது மிகையாகாது. 2,04,000 தறி களடங்கிய 453 நெசவாலைகள் இந்தியாவில் உள்ளன. 200 நெச வாலைகள் பம்பாய் இராச்சியத்தில் மட்டும் உள்ளன. பம்பாய் நகரில் 65-ம், அகமதாபாத்தில் 71-ம் உள்ளன. சென்னை இராச்சி யத்தில் 90 நெசவாலைகள் உள்ளன.

1854ஆம் ஆண்டு பம்பாயில் முதன் முதலாக ஒரு நெசவாலை நிறுவப்பட்டது. இதுவே முதன்முதலாக இந்தியாவில் பருத்தி யந்திர நெசவுக்கு ஆரம்பகாலம் எனலாம். மூலதனக் கடன் வசதி களும், ஈரப்பசையுள்ள தட்பவெப்ப நிலையை அனுசரித்துப் பம்பாயைப் புகலிடமாகக் கொண்டன. அவ்வமயம் சீன தேசத்துடன் பருத்தி ஏற்றுமதியில் ஈடுபட்டிருந்த காலம். மேலும், யந்திர சாதனங்களை எளிதில் இறக்குமதி செய்யவும், பல தரப்பட்ட மில் சாமான்களைக் கொண்டு வரவும், நிலக்கரி பெறவும் வசதியாகப் பம்பாய் அமைந்திருந்தது. ஆயினும், நாட்டு மூல தனக்காரர்கள் அதிகப்படியாக முன்வரவில்லையாதலாலும், சணல் நெசவுத் தொழில் மிகவும் செழுமையாக வளர்ச்சி பெற்றதாலும், 1905ஆம் ஆண்டு வரை கல்கத்தாவின் வட்டாரத்தில் பருத்தி நெசவு ஆலைகள் தோன்றவில்லை. 1877 முதல் உள்நாட்டுப்பகுதி களான நாகபுரி, ஷோலாப்பூர் முதலிய இடங்களில் பருத்தி நெசவு ஆலைகள் ஏற்பட்டன. தென்னாட்டில் பக்கிங்ஹாம் அண்ட் கர்னாடிக் மில்கள் ஏகபோக உரிமையான முறையில் போட்டியின்றி வளர்ந்துவந்தன. ஆயினும், தற்போது மதுரை, கோவை முதலிய இடங்களிலும் நெசவாலைகள் தோன்றியுள்ளன. கோவை மில் களுக்குப் பைகாரா நீர்வீழ்ச்சியிலிருந்து கிடைக்கும் மின்சாரத்தைக் கொடுக்கிறார்கள். அவ்வாறே மண்டியில் மின்சாரம் தோன்றிய பின்னர்தான் அமிர்தஸரஸில் நெசவாலைகள் உண்டாயின. இவ் உள்நாட்டுப் பகுதிகளில் இத் தொழில் முன்னேற்றமடைந்த

காரணங்களாவன : (1) உற்பத்திக்கான கச்சாப்பொருள்கள் மிகவும் மலிந்து கிடத்தல். (2) எண்ணற்ற தொழிலாளர் கிடைத்தல். (3) உள்நாட்டுச் சந்தை இவைகளே. ரெயில்வே போக்குவரத்து இன்னும் வளர்ச்சி பெற்றதால் பருத்தி நெசவுத் தொழில் மிகவும் முன்னேறியது. இந்நூற்ருண்டின் தொடக்கத்தில் சீனுவுடன் நடந்த பருத்தி வர்த்தகம் தடைப்பட்டதும் பம்பாய்க்கு இருந்த மதிப்பு சற்றுக்குறைய ஆரம்பித்தது. இதன் காரணங்களை இங்குக் குறிப்பிடுவோமாக : (1) இந்திய நாணயச்சாலை வெள்ளி நாணயம் அச்சிடுவதை நிறுத்தி அதனுல் ஏற்பட்ட பின்விளைவுகள், சீன நாட்டுடன் பணச் செலாவணியில் ஏற்பட்ட சிரமங்கள், (2) சீனுவில் நூற்புச் சாலைகள் தோன்றியமை, (3) முதல் உலகப் போரின் முடிவில் ஜப்பான் இத்துறையில் போட்டியாக அமைந்தது, (4) இந்திய உற்பத்தியாளர்கள் அயல்நாட்டுச் சந்தைகளைப் புறக்கணித்தமை. சுதேசி இயக்கத்தினுல் இந்நாட்டில் உற்பத்தியாகும் நூலனைத்தும் வெளிநாடுகளுக்கு ஏற்றுமதியாவதில்லை. அவை உள்நாட்டிலேயே பயன்பெற்று விடுகின்றன.

1917-23-ல் பருத்தி நெசவாலைத் தொழிலுக்குப் பெருத்த வர்த்தகத்தின் காரணமாக நல்ல ஆதாயம் கிடைத்தது. இதையடுத்து மந்தமேற்பட்ட காரணத்தால் விவசாயப் பொருள்களின் விலைகள் சரிந்தன. பருத்தியின் விலையும் மிகவும் குறைந்தது. தற்போது பருத்தி நெசவுத் தொழிலுக்கான இடர்களாவன : (1) நாட்டுப் பிரிவினைக்குப் பிறகு மூலப்பொருள் கிடைப்பதில்லை. (2) 150 சிக்கனமற்ற நெசவாலைகள் இந் நாட்டில் உள்ளன. (3) தொழிலாளர் தகராறுகளும், கூலி உயர்வும். (4) அயல் நாடுகளிலிருந்து இதற்கான பலத்தபோட்டி (5) கைத்தறி நெசவிற்கு மான்யமளித்து பெருந்தொழிலான பருத்தி நெசவாலைகளின்மீது தீர்வை விதித்து இதன் முன்னேற்றத்தைத் தடுத்தனர். (6) தேய்ந்து பழுதடைந்த பத்தாம்பசலி இயந்திரங்களை வைத்து ஆலைகள் நடந்து வந்தன. இத் தொழில்களனைத்தும் பம்பாயில் குவிந்திருந்தன.

பருத்தி நெசவாடைகளின் நுகர்வு கைத்தறியுட்பட 1939-40-ல் ஆள் ஒன்றுக்கு 16·23 கெஜமாகியது. 1950-ல் பங்கீட்டு முறையின் கீழ் 12 கெஜமாகக் குறைந்தது. முதல் ஐந்தாண்டுத் திட்டத்தின் இலக்கின 15 கெஜமாக அதிகப்படுத்த முடிவு செய்தனர். 1954-ல் இந்தியா, அமெரிக்கா, ரஷ்யா இவ்விரண்டினையும்அடுத்து, மூன்ருவது இடம்பெற்று, 5,025 மிலியன் கெஜங்கள் உற்பத்தி செய்தது. அதேபோல் ஏற்றுமதியில் ஜப்பானுக்கு அடுத்து, இரண்டாவது இடத்தைப் பிடித்துக்கொண்டு 834 மிலியன் கெஜத்தை ஏற்றுமதி செய்தது.

**3. சணல் நெசவுத் தொழில் :** 1855-ல் வங்கப் பகுதியில் சிராம்பூர் அருகில் உள்ள ரிஷ்ராவில் முதன்முதலாகச் சணல் நெசவாலை துவக்கப்பட்டது. முதல் 30 ஆண்டுகள் இதன் வளர்ச்சி மிகவும் நிதானமாகவே இருந்தது. 1868-73 வரை இதன் வளர்ச்சி அதிக லாபமுள்ளதாக அமைந்திருந்தது. இந்தத் தற்காலிக லாபத்தையும், மேம்பாட்டையும் கண்ணுற்று, அநேகர் அதிகப்படியான நெசவாலைகளைத் திறந்து, பலத்த போட்டியில் இறங்கி, அதன் விளைவாக லாபம் குறைந்ததெனலாம். முடிவாகப் பயனற்ற நெசவாலைகள் மூடப்பெற்றன. 1881-ல் இந்தத் தொழில் கொஞ்சம் கொஞ்சமாக முன்னேறியது. இக் காலத்தில் வங்காளத்தில் மட்டிலும் 5,000 விசைத் தறிகள் வேலை செய்தன. இரண்டு உலகப் போரினாலும், இத் தொழிலானது முன்னேற்றமடைந்தது. 1929-ல் ஏற்பட்ட மந்த நிலையின் காரணமாக எல்லாத் தொழில்களும் பாதிக்கப்பட்டன. அதேபோல் சணல் நெசவுத் தொழிலும் பாதிக்கப்பட்டது. ஆனால், செம்மையான முறைகளாலும் ரிஸர்வுகளாலும், தேவைக்கேற்பக் குறுகிய காலத்தொழில் அமைப்புகளாலும், அது பம்பாய் நெசவாலைகளைவிட நன்றாக நிலைமையைச் சமாளிக்க முடிந்தது. 1936 ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் வரை சுமார் 10 ஆண்டுகள் உற்பத்திக் கட்டுப்பாடுகள் கண்டிப்பாக இருந்து வந்தன. 1937-38-ல் நிலைமை கவலைக்கிடமான காரணத்தால் வங்க அரசினரே இத்தொழிலை மேற்கொண்டு, வார வேலை நேரத்தை 45 மணிகளாகச் சுருக்கினர். உலகப்போர் இரண்டாம் முறையாகத் தொடங்கியதும், கடல்கடந்த நாடுகளெல்லாம் சணல் உற்பத்திப் பொருளை வேண்டுமென்று கோரின. எனவே, கட்டுப்பாடுகளை நீக்கி முழுநேர வேலையுடன் இத் தொழில் வேலை செய்தது.

நாட்டுப் பிரிவினையின் காரணமாக, மூன்றில் இரண்டு பங்கு சணல் பயிரிடும் பகுதி பாகிஸ்தானில் சேர்ந்தது. உலகின் சணல் அனைத்தையும் கோரும்நாடு இந்தியாவெனினும், உலக உற்பத்தியில் முதலிடம் பெறுவது பாகிஸ்தான். இந்திய-பாக் உறவில் சீர்கேடான நிலை ஏற்பட்டதால் இந்திய நெசவாலைக்குப் பாகிஸ்தானிலிருந்து சணல் நார் வருவது தடைப்பட்டது. இந்தியா, ரூபாயின் மதிப்பைக் குறைத்தது. ஆயினும், பாகிஸ்தான் ரூபாயின் மதிப்பைக் குறைக்க மறுத்ததால் இன்னும் சிக்கல்கள் அதிகரித்தன.[1] இந்தியா அதிகப்படியான சணல் பயிர்செய்ய முயன்று வருகிறது. ஆயினும், இதில் இரு இடர்ப்பாடுகள் உள்ளன. ஒன்று, உணவு உற்பத்திக்குக் குந்தகம் ஏற்படுமளவில்தான் சணல் பயிரிடமுடியும். இரண்டாவதாக,

1. பாகிஸ்தான் 1955-ல் தன் நாணயத்தின் மதிப்பைக் குறைத்தது.

கிழக்கு வங்காளத்தில் பயிராகும் சணலைப் போன்ற துல்லியமான வகை வேறெங்கும் உற்பத்தி செய்யப்படவில்லை. இன்னும் அநேக காலம்வரை, பாகிஸ்தானிடம்தான் சணல்நார் பெறவேண்டி வரும். இதற்கிடையில் பாகிஸ்தானிலும் சணல் நெசவாலைகள் தோன்றிப் போட்டியிடுகின்றன. பாகிஸ்தான் நாட்டில் பண வசதியின்மையாலும், மின்விசை சௌகரியமில்லாத காரணத்தாலும் நெசவாலை மிகவும் நிதானமாகத்தான் முன்னேறும் எனலாம்.

பருத்தி நெசவுத் தொழிலுடன் ஒப்பிடும்போது, சணல் தொழில் உலக வர்த்தகத்தில் முதலிடம் பெற்றுள்ளது என்று கருதப்பட்டு வருகிறது. இந்தச் சூழ்நிலையில் சணல் நெசவுத் தொழில் முற்றுரிமை பெற்றிருந்தது என்ற வாதம் தவறெனலாம். சி. என். வக்கீல், இதை இருமுக முற்றுரிமை விற்பனை எனக் கூறுகிறார். அதாவது பாகிஸ்தான் பெரும் உற்பத்தியாளராகவும், இந்தியா பெரும் கொள்முதல் செய்பவராகவும் சந்தையில் வந்தனர் என்று கூறலாம்.[1]

மற்றொரு மாறுபாட்டினை இங்கு விளக்குவோமாக.

பருத்தி நெசவாலைத் தொழில் ஆரம்பமுதல், இந்திய மூலதனக்காரரால் நிறுவப்பட்டு, நாட்டு மூலதனத்துடன் முன்னேறியுள்ளது. சணல் தொழில், ஆங்கில மூலதனத்துடன் வளர்ந்து வந்துள்ளது. இரண்டாவது பாகுபாடு என்னவெனில், பருத்தி நெசவுத் தொழில், தனித்தனி நிறுவனங்களாக உள்ளது. ஆயினும், சணல் தொழிலோ கல்கத்தாவின் சுற்று வட்டாரத்திலே கூட்டாக இயங்குகிறது. இந்தக் காரணங்களால்தான் பருத்தி நெசவாலைத் தொழிலைவிட, இது முன்னேறியுள்ளது.

சணல் தொழில் அதிக அளவில் அயல் நாட்டுச் செலாவணியைப் பெறும் ஒரு பொருளாகும். 1954-55-ல் ரூபாய் 124 கோடி மதிப்புள்ள 8,52,300 டன் சணல் பொருள்கள் ஏற்றுமதி செய்யப்பட்டன. அந்த ஆண்டு ஏற்றுமதியில் 21% சணல் ஏற்றுமதியாகியது.[2] 1947-ல் 113 சணல் நெசவாலைகள் இருந்தன. அவற்றில் 3,10,000 பேர்களுக்கு வேலை கிடைத்து வந்தது. இத்தொழிலின் வளர்ச்சிக்கு இடையூறாக உள்ள காரணங்களாவன: (1) குறைவாயுள்ள மூலப் பொருள், (2) புதிய முறைகளில் ஆலைகளை மாற்றியமைக்கப் போதிய நிதி வசதியின்மை, (3) சணலுக்குப் பதிலாக நவீன முறைகள் ஏற்பட்ட காரணத்தால் சணலின் மதிப்பு போய்விட்டது

1. ஓ எச். ஸ்பேட் இண்டியா அண்ட் பாகிஸ்தான் என்ற புத்தகத்தில் சி. என் வக்கீலின் சொற்களைக் குறிப்பிடுகிறார்.
2. பிர்லாவின் இந்தியச் சணல் தொழில் - ஜர்னல் ஆப் காமர்ஸ் அண்ட் இண்டஸ்ட்ரி அனுபந்தம், நவம்பர் 1955.

**4. கம்பளித் தொழில் :** இந்தியாவில் தயாராகும் கம்பளி களைத் தரை விரிப்புகள், சால்வைகள், போர்வைகள் என்று மூன்று பெரும் பிரிவுகளாக வகைப்படுத்தலாம். மொகலாயப் பேரரசு அழிந்தவுடன் தரைவிரிப்பு நெசவுத்தொழில் நின்றுவிட்டது. ஆயினும், அயல் நாடுகளிலிருந்து அவைகளுக்கு ஏகப்பட்ட கிராக்கி யேற்பட்டுள்ளபடியால், இந்தத் தொழில் நடந்து வரு கிறது. அயல்நாட்டுக்கு அனுப்பவேண்டும் என்ற காரணத்தால், மலிவானசரக்குகளை மிகவும் மட்டமான முறையில் தயாரிக் கின்றனர். மேலும் அனிலைன் (aniline) சாயங்களிடுவதால் நைந்து போகின்றன. அயல் நாடுகளில் இதற்கான வர்த்த கத்தில், அதிக அளவில் தரகர்கள் வந்து குவிந்து அதிக லாபம் பெற்று இவற்றின் விலைகளையேற்றி விடுகின்றனர். தற்போதுள்ள உற்பத்தியில் 90% அயல்நாட்டுத் தேவைகளுக்கே செல்லு கின்றது.

இத் தொழிலில் 16 நூற்பு ஆலைகள், 70 விசைத் தறிகள், 24 நூற்பு நெசவு ஆலைகள் உள்ளன. ஆண்டுதோறும் கம்பளியும் முறுக்கிய கம்பளத் துணிகளுமாக 16 மிலியன் கெஜங்கள் உற்பத்தி யாகின்றன.

**5. கண்ணாடி உற்பத்தித் தொழில் :** 1892 முதல் 1908 வரை அநேக கண்ணாடித் தொழிற்சாலைகள் இந்திய, ஐரோப்பிய மூல தனத்துடன் ஆரம்பிக்கப்பட்டன. ஒரு தொழிற்சாலைகூட உருப் படியாக முன்னேறவில்லை. 1906 முதல் 1913 வரை சுதேசி இயக்கத்தின் காரணமாக, மறுபடியும் இத் தொழிலில் பெரிய வளர்ச்சி ஏற்பட்டது. அதிக மூலதனமிட்டுத் தொழில்களை நடத்தலாயினர். இவர்களில் ஒருசிலரே லாபத்தை அடைந்தனர். இவ்வளவு பயனற்ற தொழிலாக இருப்பினும்கூட, இந்தியர்களுக்கு இதில் உள்ள மோகம் குறைந்தபாடில்லை. ஆகவே, இத் தொழிற் சாலைகளை அமைத்துக் கொண்டே வருகின்றனர். இந் நாட்களில் 109 தொழிற்சாலை நிறுவனங்கள் உள்ளன. அவற்றில் 1,26,000 தொழிலாளர்கள் பணியாற்றி வருகின்றனர். இதில் இடப்பட்ட மூலதனம் 6 கோடி ரூபாய்கள். 1945ஆம் ஆண்டில் அரசினர், இந்தத் தொழில் நன்கு வளர்ச்சிபெற வேண்டும் என்ற நோக்கத் துடன் ஒரு குழுவினரை நியமித்தனர். இக் குழுவினர், ஆதாரத் தொழிலான காரணத்தால் இத் தொழிலைச் சீரிய முறையில் பதியு மாறு அமைத்தல் வேண்டும் என்று கூறினர். இத் தொழிலில் உள்ள இடர்ப்பாடுகளாவன : (1) அநுபவமற்ற நிர்வாகம், (2) பயிற்சியற்ற தொழிலாளர் மலிந்து கிடத்தல், (3) சோடா சாம்பல் (soda ash) எரிபொருள் இவை தேவைக்கேற்ற அளவு கிடைப்ப

தில்லை, (4) போதிய நிதி வசதியின்மை. இந்திய ஏற்றுமதி வர்த்தகத்தில் இது பெரிய பங்கு கொள்ளவில்லை எனலாம். 1951-52-ல் ரூ. 21·42 லட்சமாகவும், 1952-53-ல் ரூ. 24·24 லட்சமாகவும், 1953-54-ல் ரூ. 21·40 லட்சமாகவும் இருந்து குறைந்து 1954-55-ல் ரூ. 20·48 லட்சமாகியது. இத் தொழிலுக்கு வருங்காலம் ஒன்றும் மோசமில்லை. எனினும், குணத்தையும், தரத்தையும் உயர்த்திப் பல்வகை உற்பத்திகள் செய்ய முன்வரவேண்டும்.

**6. சிமெண்டுத் தொழில் :** சிமெண்டு பலவகைகளிலும் பயன்படுகிறது. 1918ஆம் ஆண்டிலிருந்தே, சிமெண்டிற்கு ஏகப் பட்ட தேவை யேற்பட்டுள்ளது. இன்று கான்கிரீட் (concrete) அதிகமாகப் பயன்படுகிறது. எல்லாவிதக் கட்டட வேலைக்கும், கனபரிமாணமுள்ள வாராவதிகள் முதலியவைகளுக்கும் இரும்பு, எஃகு பயன்பட்டது மாறி, கான்கிரீட்டிற்கு இடமளித்து மறைந்த தெனலாம். 1904ஆம் ஆண்டு சென்னையில் போர்ட்லாண்ட் சிமெண்டு தயாரிக்கப்பட்டது. இது தொடங்கிப் பத்தாண்டுகள் கழித்துத்தான் பெருமளவில் உற்பத்தி நடந்ததெனலாம். 1912லும் 1913லும் நிறுவப்பட்ட மூன்று கம்பெனிகளில் போர்பந்தரில் நிறுவியுள்ள இந்தியன் சிமெண்டு கம்பெனி முதலாக உற்பத்தியி லீடுபட்டது. இதையடுத்துக் கட்னி சிமெண்டு அண்ட் இண்டஸ்ட்ரியல் கம்பெனி தொழிலைத் துவக்கிப் பின்னர் மறைந்தது. புண்டி போர்ட்லாண்ட் சிமெண்டுக் கம்பெனியும் மூன்றுவதாக உற்பத்தி வழியில் வந்தது. 1914ஆம் ஆண்டில் 945 டன்கள் தான் உற்பத்தியாயின. 1924-ல் உற்பத்தி 2,36,746 டன்களாகப் பெருகியது. 1932-3-ல் 5,93,000 டன்களாக அமைந்து 1937-38-ல் இரட்டிப்பாகியது. பத்து முக்கிய சிமெண்டுக் கம் பெனிகள் ஒன்றுக இணைந்து அசோசியேடட் சிமெண்டுக் கம்பெனி லிமிடெட் என்ற நிறுவனம் உருவாகியது. (1936) தற் போதுள்ள நிலையில் சிமெண்டு உற்பத்தியை ஏற்றெடுத்து நடத்தும் வன்மை பெற்ற நிறுவனம் ஏ.ஸி ஸி. யும், டால்மியா நிறுவனமும், ஏ.ஸி.ஸி உற்பத்தியில் 80% செய்கிறது. இதர கம்பெனிகள், பகுதி உற்பத்தியே செய்கின்றன. ஏ.ஸி ஸி.யின் ஆதரவில் 12 தொழிற்சாலைகளும், டால்மியாவின் அமைப்பில் 4 தொழிற்சாலைகளும் இதர தனி நிறுவனங்கள் ஆறும் இருக் கின்றன. அந்த ஆறில் ஒன்று மைசூர் ராச்சிய அரசினரால் நடத்தப்படுகிறது. 1950-51-ல் விகிதப்படுத்தப்பட்ட ஆண்டு உற்பத்தி 3.28 மிலியன் டன்கள்.

உத்தரப்பிரதேசத்தில் மிர்ஸாபூருக்கருகில் ஆண்டுதோறும் 2 லட்சம் டன் உற்பத்தி செய்யக்கூடிய தொழிற்சாலை ஒன்றை அரசினர் நடத்தி வருகின்றனர். பம்பாய் ராச்சியத்தில் பாகல்

கோட்டில் இவ்வாறு அரசினரின் ஆதரவில் ஒரு தொழிற்சாலை நிறுவப்பட்டுள்ளது. இன்றைய நிலையில் உற்பத்தி 45 லட்சம் டன்கள். அவற்றில் 26 லட்சம் டன்களை ஏ. ஸி. ஸி. மட்டிலும் உற்பத்தி செய்கிறது. முதல் ஐந்தாண்டுத் திட்டத்தின் உற்பத்தி யிலக்கு 5·4 மிலியன் டன்களென்றும், இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டத்தின்படி 12 மிலியன் டன்களென்றும் ஏற்படுத்தினர்.

தலா நுகர்வினின்று, நம் நாட்டுச் சிமெண்ட் உற்பத்தியை அதிகப்படுத்த வேண்டியதின் அவசியத்தைக் காணலாம். அமெரிக்கா 516 பவு., இங்கிலாந்து 411 பவு., சுவீடன் 740 பவு., பெல்ஜியம் 716 பவு., டென்மார்க்கு 460 பவு., ஜப்பான் 90 பவு., இந்தியா 27 பவு.,[1]

7. **காகித உற்பத்தித் தொழில் :** இயந்திர முறையில் காகித உற்பத்தி 1870ஆம் ஆண்டில் முதன் முதலில், ஹூக்ளியில் பால்லி மில்களால் தயாரிக்கப்பட்டது. 1882-ல் தித்தாகூர் பேப்பர் மில்ஸ் நிறுவப்பட்டது. 1918-ல் இந்தியன் பேப்பர் பல்ப் கம்பெனி (இந்திய காகிதக் கூழ்) தோன்றியது. இது மூங்கிலின் வசதியால் கூழ் தயாரித்து, அதைக்கொண்டு காகிதம் உற்பத்தி செய்ய ஆரம்பித்தது. உள்நாட்டுப் பகுதிகளில் தோன்றிய நிறுவனங்களில் அப்பர் இண்டியா கௌப்பர் மில் லக்னௌ மிகவும் பெயர்பெற்ற நிறுவனம். இது 1879-ல் துவக்கப்பட்டது. 1885-ல் பூனாவில் டெக்கான் பேப்பர் மில் கம்பெனி துவக்கப்பட்டது. 1889-ல் ராணிகஞ்சில் மிகவும் பெரிய அளவில் பெங்கால் பேப்பர் மில் கம்பெனி ஆரம்பிக்கப்பட்டது. பாபர்புல் அபரிமிதமாகக் கிடைக்கும் காரணத்தால் ஷாரன்பூர் அருகில் உள்ள பஞ்சாப் பேப்பர் மில் கம்பெனி நல்ல முன்னேற்றத்தை யடைந்திருக்கிறது. 1939-ல் பத்திராவதியில் மைசூர் பேப்பர் மில்லும், 1942-ல் ஐதராபாத்தில் சிர்பூர் பேப்பர் மில்லிலும், வேலை தொடங்கின. இரண்டாம் உலகப் போரினால் காகித உற்பத்தித் தொழிலுக்கு நல்ல தேவையும் கிராக்கியும் உண்டாகியது. காகிதத்தின் விலை 300 சதவிகிதமாக அதிகரித்தது. 1955ஆம் ஆண்டில் காகிதமும் காகித அட்டைகளும் தயாரிக்க 20 காகித ஆலைகள் தோன்றிச் சற்றேறக்குறைய 27,500 தொழிலாளர்களுக்கு வேலை கொடுத்தன. 1952ஆம் ஆண்டில் இத் தொழிலிலிட்ட மூலதனம் ரூ. 24 கோடிகள். இத் தொழிலில் பலன் காணத் திட்டக்கமிஷன் கீழ்க் காணும் யோசனைகளைக் கூறியுள்ளது. அவை வருமாறு : (1) குறிப்பிட்ட காடுகளைத் தனியே இந்த ஆலைகளுக்கென ஒதுக்கி வைத்து நீண்ட காலக் குத்தகையின்கீழ்க் காகித ஆலைகளுக்கு

1. ஆர். ஆர், ஹட்டங்காடி 'சிமெண்ட் இண்டஸ்ட்ரி இன் இண்டியா' ஜர்னல் ஆப் காமர்ஸ் அண்ட் இண்டஸ்ட்ரி (அனுபந்தம்) நவ. 1955.

விட்டுவிடுதல், (2) அகில இந்திய அடிப்படையில் ஒரே விலை மதிப்பீடு செய்து சபாய் (sabai) புல்லும், மூங்கிலும் தொடர்ந்து, நீடித்துக் கிடைக்கும்படிச் செய்தல், (3) காட்டுப் பகுதிகளில் பாதைகளும், சாலைகளும் அமைந்து மூலப் பொருள்களைக் கொண்டுவரப் போக்குவரவு வசதி அமைத்தல், (4) துணி, சணல், நெசவுக் கழிவு, குப்பையிலிடப்பட்ட காகிதம் இவைகளை ஏற்றுமதி செய்வதைத் தடைப்படுத்துதல். இந் நாடு தற்போதுள்ள நிலைமையில் எழுதப் பயனுள்ள காகிதம், அச்சடிக்கப் பயன் உள்ள காகிதம், க்ராப்ட் (kraft) காகிதம், காகித அட்டை இவைகளில் சுய தேவை நிலையை அடைந்துவிட்டோம் எனலாம். செய்தித்தாள் தேவையைப் பூர்த்திசெய்ய இயலாது நாம் அயல் நாட்டினின்று இறக்குமதி செய்து வருகிறோம். நேஷனல் நியூஸ் ப்ரிண்ட் அண்ட் பேப்பர் மில்ஸ் லிமிடெட் நாகப்பூர் கம்பெனி, உற்பத்தித் தொடங்கும் வரை நாம் இதில் முன்னேற்றம் காண இயலாது எனலாம். இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டத்தில் இந்தத் தொழிலில் ரூபாய் 66 கோடி முதலீடு செய்துள்ளனர். எதிர்பார்க்கப்பட்ட உற்பத்தி ஆறு லட்சம் டன்களாகவும், பணியாளர்களின் எண்ணிக்கை 6,500 ஆகவும் அதிகரிக்கக் கூடும்.[1]

**8. எண்ணெய் உற்பத்தியாலைத் தொழில்:** பலரகமான எண்ணெய் வித்துக்கள் உற்பத்தியாயினும்கூட, இந் நாட்டில் நவீன முறையில் அமைப்புப்பெற்ற எண்ணெய் உற்பத்தி இயந்திர சாலைகள் இல்லாத காரணத்தால் பெரும்பாலான வித்துக்கள் ஏற்றுமதி செய்யப்படுகின்றன. முதல் உலகப் பெரும் போரின் காலத்திலிருந்து இத் துறையில் கவனம் செலுத்தி வருகின்றனர். எதிர்பார்த்த பலன் கிட்டியுள்ளதால் இன்னும் இத் தொழிலை வளர்ச்சி செய்யப்பாடு படுதல் வேண்டும். இதில் இடப்பட்ட முதலீடு நடப்பு நிலையில் ரூ. 30 கோடிகளாகும். இத் தொழிலில் ஈடுபட்டுள்ள பணியாளர் சற்றேறக் குறைய 28,000 பேர்கள் ஆவர்.

**9. வனஸ்பதி:**[2] இது தாவர எண்ணெய் உற்பத்தித் தொழிலில் ஒரு சிறிய பகுதியேயாயினும் இந்தியாவில் மிகவும் செம்மையாக அமைந்து சீரிய முறையில் செயலாற்றும் தொழில்களில் இது ஒன்றாகக் கருதப்படலாம். இதில் போடப்பட்ட மூலதனம் ரூ. 25 கோடி. இதில் பணியாற்றுபவரின் எண்ணிக்கை 15,000. இதைப் போல் 4 மடங்குள்ள மக்கள் இதில் மறைமுகமாகப் பணி செய்கின்றனர். இந் நாட்டில் சர்க்கரைத் தொழிலுக்கு அடுத்தபடியாக

1. என். கே. எஸ். அய்யங்கார் - ‘தி இண்டியன் பேப்பர் இண்டஸ்ட்ரீ’ ஜர்னல் ஆப் காமர்ஸ் அண்ட் இண்டஸ்ட்ரி (அனுபந்தம்) நவம்பர் 1955.

2. உண்ணத்தகும் சுத்திகரிக்கப்பட்ட கடலெண்ணெய்.

உணவு உற்பத்தி செய்யும் தொழிலில் இது இடம்பெறுகிறது. இந்தியாவில் மிகவும் நவீன முறைகளில் இயந்திர வசதிகளுடன் இத்தொழிலில் ஈடுபட்டுள்ள ஒரு நிறுவனம் கர்னூலில் துங்கபத்ரா இண்டஸ்ட்ரீஸ் லிமிடெட் என்ற பெயரில் நடைபெற்று வருகிறது. 56 தொழிற்சாலைகளுக்கு உரிமம் வழங்கப்பட்டு அவைகளில் 50 தொழிற்சாலைகளின் கட்டிட வேலைகள் முடிவாகியுள்ளன. 1954-ல் இந்தத்தொழிலின் உற்பத்தி பெருவாரியாக 2,30,600 டன்களாக இருக்கும் என்று அனுமானம் செய்யப்பட்டது.[1]

**10. தோல் பதனிடலும் தோல் பொருள் உற்பத்தியும் :** தோல்களைப் பொறுத்த மட்டில் இந்தியா சுயதேவையைப் பெற்றுள்ளது. ஆண்டுதோறும் 16·2 மிலியன் பசுமாட்டுத் தோல், 5·5 மிலியன் எருமைத்தோல், 23·2 மிலியன் வெள்ளாட்டுத் தோல், 15·1 மிலியன் ஆட்டுத் தோல் ஆகியவை கிடைக்கின்றன என்று கணக்கிட்டுள்ளனர். தோல் தீர்வை பற்றிய விசாரணைக் குழு (1930) இந்தியாவில் ரூ. 40 கோடி முதல் 50 கோடி மதிப்பிற்குத் தோல் உள்ளதென முடிவாக்கினர். மிலியன் கணக்கில் மலிந்துள்ள தாழ்த்தப்பட்டோரின்[2] பெரும் பகுதியினர் இதன்மூலந்தான் தங்கள் வாழ்வைப் பெறுகின்றனர். முறையாக எழுதப்பட்ட இத் தொழிலில் 2,00,000 தொழிலாளர்கள் வேலை செய்து வருகின்றனர். இராணுவத்தினர் முதன் முதலாக உயரிய தோல் வகையைப் பெற இந் நாட்டில் பதனிடல் முறையை ஆரம்பித்து வைத்தனர். 1860ஆம் ஆண்டில் கான்பூரில் அரசினர் தோல் தொழிற்சாலையை நிறுவினர். நவீன பதனிடும் முறைகளை இன்னும் இவ்விடத்தில் தான் காணலாம் எனத் திட்டமாகக் கூறலாம். தனியார் துறையில் பெரிய அளவில் நடத்தப்பட்டு வரும் காலணி உற்பத்திச்சாலை கான்பூரில் உள்ளது. பம்பாயில் ஆடம்ஜிபீர்பாய் அவர்களால் மேற்கிந்திய சைன்யத்திற்கான காலணித் தொழிற்சாலை என்ற பெயரில் ஒரு தொழிற்சாலை நிறுவப்பட்டது. கான்பூர், பம்பாய், சென்னை பதனிடும் சாலைகள் நீங்கலாக இதர இடங்களில் இயந்திரங்களை உபயோகிப்பது இல்லை. 1914ஆம் ஆண்டிற்கு முன்னர் இந் நாட்டிலிருந்து செய்யப்பட்ட பதனிட்ட தோல் ஏற்றுமதி அனைத்தும் தென்னிந்தியாவிலிருந்து நடந்து கொண்டிருந்தது. இதற்குக் காரணம் என்னவெனில் ஆவாரம்பட்டை என்ற ஒரு மரப் பட்டை சென்னையில் எளிதில் கிடைக்கிறது. இதைக்கொண்டு எண்ணற்ற தோல் பதனிடு சாலைகள் சென்னையில் தோன்றியுள்ளன. பம்பாயில் இந்த ஆவாரம் பட்டையை டார்வார் எனக்

1. *1954ஆம் ஆண்டறிக்கை, இந்திய வனஸ்பதி உற்பத்தியாளர் சங்கம்.*

2. *தோல் தீர்வை பற்றிய விசாரணைக் குழுவின் அறிக்கை, (1930) பாரா 138.*

கூறுகின்றனர். மிகவும் உயரிய தோல் பதனிடும் பொருள் வாட்டில் மரப்பட்டை (wattle bark) ஆகும். ஆயினும், இந்த மரப்பட்டை தென்னுப்பிரிக்காவிலிருந்து இறக்குமதி செய்யப்படுகிறது. இது நீலகிரியில் பயிரிடப் படக்கூடும் என்று சொல்லுகிருர்கள். சென்னையிலுள்ள மத்திய தோல் ஆராய்ச்சி நிறுவனம் மிகவும் உயரிய மாற்றுப் பொருளாகக் (karada) பட்டையை உபயோகித்து நல்ல முடிவு காணலாம் எனக் கூறியுள்ளது ; கிட்டத்தட்ட ஏற்றுமதியில் 40% தோல்களை கிப்ஸ் (kips) தயாரிக்கப் பயன்படுத்துகிருர்கள். நன்கு அமைக்கப் பட்ட தோல் பதனிடுசாலைகள் உற்பத்தியில் 15% தோல்களைப் பயன்படுத்துகின்றனர். க்ரோம் (chrome) முறையில் பதனிடல் செய்ய நல்ல வளர்ச்சி யேற்படவில்லை யெனலாம். இம்முறை சற்று மந்தமாகவே முன்னேறி வருகிறது. பெருமளவில் தோலின் மேற்பகுதியைக் க்ரோம் முறையில் பதனிட்டு வருகிருர்கள். கல் கத்தாவை யடுத்த பகுதியில் சீன நாட்டுக் கைவினைஞர்கள் க்ரோம் முறையில் பதனிட்டு வருகிருர்கள். மிகவும் நுட்பமான வேலைப்பாடும் அதிகப்படியான உபகரணங்களும் தேவைப்படும் காரணத்தால்தான் க்ரோம் முறையை உடனே பெரிய அளவில் புகுத்த முடியவில்லை. தனிப்பட்ட முயற்சியும், போதிய வசதி களும் கொடுத்து இத்துறையில் நல்ல பலனைக் காணலாம். இதற்கு வேண்டிய பசுமாட்டுத் தோல், ஆட்டுத் தோல் இவைகள் கிடைக்கின்றன.

**11. கப்பல் தொழில் :** 1944-ல் இந்திய அரசினரின் வெளியீட் டின்படி நீண்ட கடற்கரையும், உலகின்கண் அயல்நாட்டு வர்த்த கத்தில் பெரிய இடமும் கொண்ட இப் பெரிய நாட்டிற்கு அதிக ஆழ்கடலில் செல்லத்தகு மரக்கலங்களோ, கப்பல்களோ இல்லை யெனலாம். இரண்டாம் உலகப் பெரும்போரின் ஆரம்பத்தில் 1,50,000 டன்கள் உள்ள 53 கப்பல்களே இருந்தன. இந்திய அர சினர் 1945-ல் மறு அமைப்புக் கொள்கைக் குழு ஒன்றை (The Reconstruction Policy Sub-Committee) நிறுவினர். இக் குழு வினரின் அறிக்கையின்படி 2 மிலியன் டன் அளவில் கப்பல்கள் கட்டப்பட வேண்டுமென்றும் இதனுல் 10 மிலியன் டன்கள் சரக்கு அனுப்பவும், மூன்று மிலியன் பிரயாணிகளை ஆண்டுதோறும் ஏற்றிச் செல்லவும் பயனுள்ளதாக இருக்கும் என்று கருதினுர்கள். மற்றெரு பரிந்துரையாவது இந்திய கடற்கரை வர்த்தகத்தில் 100க்கு 100 இந்தியக் கப்பல்களால் ஆளப்படவேண்டும் என்றும், 75 சதவீதம் பர்மிய நாட்டுடன் செய்யப்படும் வர்த்தகம், அதே போல் இலங்கையுடனும், தூரநாட்டு வர்த்தகத்தில் 50%ம்

பண்டைக் காலங்களில் ஐரோப்பிய நாட்டுக் கப்பல்களில் நடந்த வர்த்தகத்தில் 30%ம் இந்தியக் கப்பல்களில் 5 முதல் 7 ஆண்டுகளுக்கு உள்ளாக மாற வேண்டியது. பின்னர் ஏற்பட்ட மாற்றங்கள் வருமாறு: (1) 1947ஆம் ஆண்டு நவம்பர் மாதத்தில் அனுமதிக்கப்பட்ட மூலதனம் ரூ. 10 கோடி வீதம் 3 கப்பல் நிறுவனங்களைத் தொடங்கத் திட்டம் வெளியிடப்பட்டது. இவைகளில் ஒன்ருன கீழ்ப்பகுதிக் கப்பல் நிறுவனம் 1950ஆம் ஆண்டு மார்ச் மாதத்தில் பதிவு செய்யப்பட்டது. (2) 1948ஆம் ஆண்டில் முதன் முதலாக இந்தியக் கப்பல்கள் அயல்நாட்டு வர்த்தகத்தில் ஈடுபட்டன. இந்தியா, இங்கிலாந்து, ஐரோப்பா கண்டக் கப்பற் சங்கத்தின் உறுப்பினராக இரண்டு நிறுவனங்கள் இருக்கின்றன. எனவே ஒவ்வொன்றும் 12 கப்பல்களைச் செலுத்தலாம். (3) 1950ஆம் ஆண்டிலிருந்து கடற்கரை வர்த்தகம் இந்தியக் கப்பல்களுக்கெனவே ஒதுக்கி விடப்பட்டது. இந்தியக் கப்பல் உரிமையாளர்கள் இதற்கெனப் புதிய கப்பல்களை வாங்காமலும் கட்டாமலும் வாடகைக் கப்பல்களைக் கொண்டே தொழில் நடத்தி வந்தனர். எனவே, இந்த முறையினுல் இந்தியக் கப்பல் தொழில் எவ்வகையிலும் முன்னேற்றமடையவில்லை. அயல்நாட்டுச் செலாவணியும் வாடகைக் கப்பல்கள் கொடுத்த நாடுகளுக்கே போய்ச் சேர்ந்தது. நம் நாட்டிற்கு யாதொரு பயனும் ஏற்படவில்லை. 1951ஆம் ஆண்டு ஜனவரி மாதம் 1ஆம் தேதி முதல் புதிய இந்தியக் கடற்கரை வர்த்தக சம்பந்தப்பட்ட ஒரு கூட்டம் நடைபெற்று அதன் விளைவாக, இந்தியக் கப்பல் கம்பெனிகள் கடற்கரை வர்த்தகத்தில் ஈடுபட்டுள்ளன. 2 ஆங்கிலேயக் கம்பெனிகளும் இக்கூட்டத்தில் உறுப்பினராகி உள்ளார்கள்.

1941ஆம் ஆண்டு, காலஞ்சென்ற வால்சந்து ஹிராச் சந்தின் தளரா முயற்சியினுல் முதன்முதலாக நவீன முறையில் விசாகப்பட்டினத்தில் கப்பல்கட்டும் தொழில் ஆரம்பிக்கப்பட்டது. இதற்கு உறுதுணையாக, தி சிண்டியா-ஸ்டீம் நாவிகேஷன் கம்பெனி லிமிடெட் இருந்தது. இக் கம்பெனியால் முதன் முதலாகக் கட்டப்பட்ட கப்பல் 'ஜல்உஷா' 1948ஆம் ஆண்டு ஜனவரி மாதத்தில் கடலில் விடப்பட்டது. 5 ஆண்டுகளுக்குள்ளாக 8,000 டன் எடையுள்ள 5 கப்பல்கள் உருவாக்கப்பட்டன. 1952ஆம் ஆண்டு ஜனவரி மாதத்தில் இந்துஸ்தான் ஷிப்யார்டு லிட்., என்ற அரசினர் நிறுவனம், சிந்தியா கம்பெனியினின்று இத் தொழிலை மேற்கொண்டது. இந்த அரசினர் நிறுவனத்தில் மூன்றில் இரு பங்கு மூலதனம் அரசினருடையது; மற்ருெரு பங்கு சிந்தியா கம்பெனிக்குக் கொடுக்கப்பட்டது.

பொதுக் கொள்கையைப் பற்றி யோசனைகூற இந்தியக் கப்பல் கம்பெனி உரிமையாளர்களைக் கொண்டதொரு ஆலோசனைக் குழுவினை அரசினர் நியமித்துள்ளனர். கனிஜ எண்ணெயினின்று சுத்திகரிக்கப்பட்ட பொருள்களை, இந்தியத் தனியார் கப்பல்களில் ஏற்றிச் செல்ல வசதியளிக்க வேண்டுமென்று கோரி, சர்க்காரைச் சம்மதிக்க வைத்தனர். இவர்கள் செய்த முயற்சி மெச்சத் தக்கது ஆகும். 3½ மிலியன் டன்கள் பெட்ரோல் கிட்டத்தட்ட அயல் நாட்டு வர்த்தகத்தில் 16% இத் துறையில் ஏற்பட்டும், இதில் ஒரு டன் கூட இந்தியக் கப்பல்கள் ஏற்றிச் செல்ல அனுமதிக்கப்பட வில்லை.

முதல் ஐந்தாண்டுத் திட்டமுடிவில் மொத்தப் பதிவு செய்யப் பட்ட டன்களை (மொ ப. ட.) 6,00,000 ஆக அதிகப்படுத்தத் திட்டம்[1] வகுக்கப்பட்டது. விசாகப்பட்டினத்தில் கப்பல் கட்டு வதற்கும், பழங்கப்பல்களை நீக்கிப் புதிய கப்பல்களைப் பெறவும் அரசினர் உதவி அளிப்பதற்காகத் தக்க நிதி அமைப்பு செய்யப் பட்டுள்ளது.[2] கடற்கரை வர்த்தகம் இந்தியக் கப்பல்களுக்கே ஒதுக்கப்பட்டுள்ளது. பர்மா, பாகிஸ்தான் முதலிய நாடுகளுடன் செய்யும் வர்த்தகத்தில் 50%ம் அயல்நாட்டு வர்த்தகத்தில் 5%ம் இந்தியக் கப்பல்கள் ஈடுபட்டுள்ளன. தனிக் கப்பல் வர்த்தகத்தில் எண்ணெய்க் கப்பல் வர்த்தகத்தைப்போல இந்தியக் கப்பல் களுக்குப் பங்கே கிடைப்பதில்லை. கடற்கரை வர்த்தகத்திற்கான மொத்தம் பதிவாக்கப்பட்ட டன்கள், 1954ஆம்[3] ஆண்டின் முடிவில் அயல்நாட்டு வாடகைக் கப்பல் டன்கள் 44,151 (மொ. ப. ட. உள்பட 3,31,063 மொ. ப. ட. 1956ஆம் ஆண்டில் மார்ச்சு மாதம் 1 ஆம் தேதி அயல்நாட்டு டன்கள் 2,25,560 ஆகும்.[4]

**12. ரசாயனத் தொழில்கள் :** கந்தகக் காடி (sulphuric acid) ஹைட்ரோகுளோரிக் காடி (hydrochloric acid), சுண்ணும்பு (lime) காஸ்டிக் சோடா (caustic soda) சோடியம் கார்பனேட் (sodium corbonate) நைட்ரிக் அமிலம் (nitric acid) இவைகள் அடிப்படைக் கன ரகத் தொழில்கள். இவற்றை நன்கு வளர்த்து இந்நாட்டின் ரஸாயனத் தொழிலைச் சீராக்கலாம். பல்வேறு ரஸாயனங்களை உற்பத்தி செய்வதிலும், இயற்கையான பல்வேறு மூலப்பொருள்களைப் பதனப்படுத்தவும், மற்றும் இவற்றினின்று தோன்றும் பொருள்களை மூலப்பொருள்களாகவும் பயன்படுத்த

1. குறைபாடு 1,00,000 மொ. ப. ட.
2. டைம்ஸ் ஆப் இண்டியா, டைரெக்டர் அண்ட் இயர் புக். 1955-56. பக்கம் 184.
3. இண்டியா, 1955, பக்கம் 313.
4. இண்டியா, 1956, பக்கம் 252.

லாம். கனரகத் தொழிலில் தோன்றும் ரஸாயனப் பொருள் களுடனும் ஆக்கசக்திக்கு மிகவும் தேவையுள்ள (1) எரிபொருள், (2) ரஸாயன உபகரணங்களின் அமைப்பு. இந்தியாவிலே இயற்கையாக படிகாரம், உப்புகள், சுண்ணும்புக்கல், வெடியுப்பு, சல்பைடுகள் (sulphides) மெக்னீஷியம் இவை கிடைக்கும் காரணத்தால், தாதுப்பொருள் வளம் போதிய அளவு நிரம்பியுள்ள தைக் காணலாம். எரிபொருள் மட்டும் ஏதோ ஒருசில பகுதி களில் நிலக்கரியாக அமைந்துள்ளதால் போதிய அளவு கிடைப் பதில்லை. குறைந்த செலவில் மின்சார உலோகத் தொழில் களுக்கும் மின்சார ரஸாயனத் தொழில்களுக்கும், மின்சாரம் கிடைக்க வசதி செய்தல் இன்றியமையாதது. இரண்டாம் உலகப் போரின் காரணத்தால், இந்தியாவில் கந்தகக் காடி (sulphuric acid) உற்பத்திக்கு ஊக்கம் உண்டாகியது. இன்றுவரை நிரந்தர மாக உற்பத்தியில் ஏற்றம் காணப்பட்டு வருகிறது. இது அதிக அளவில் முன்னேற்றமடையாது இருக்கக் காரணம் என்ன வெனில் இதற்கு வேண்டிய மூலப் பொருளான கந்தகம் (sulphur) இந்நாட்டில் கிடைப்பதில்லை. இதற்குப் பதிலாக உபயோகப் படுபவை ஜிப்ஸமும் பைரட்டும் (gypsum & pyrites) சிம்லாக் குன்றுகளிலும், பீகாரிலும், மைசூரிலும், ஜிப்ஸம் ராஜஸ்தானத் திலும்,திருச்சியின் அருகிலேயும் கிடைக்கின்றன. கந்தகக் காடித் தொழிற்சாலைகள் மிகவும் குறைந்த அளவில்தான் தயாரிக்கின்றன. டாட்டா அயர்ன் அண்ட் ஸ்டீல் ஒர்க்ஸ் தினமொன்றுக்கு 50 டன்கள் உற்பத்தி செய்கிறது. நாளொன்றுக்கு 100 டன்களுக்குக் குறையாது உற்பத்தி செய்தால்தான் சிக்கனமாக நடத்தலாம். கந்தகக் காடி உற்பத்தியில் ஏற்படும் இடர்ப்பாட்டைப் போலவே தான் காஸ்டிக் சோடா தயாரிப்புக்கும் ஏற்படுகிறது. காஸ்டிக் சோடா தயாரிப்புக்கு வேண்டிய மூலப்பொருள் மிகவும் மட்ட ரகமாக அமைந்துள்ளது. இந்தத் தயாரிப்புத் தொழிற்சாலைகள் மிகவும் சிறியவைகளே. தேவையான சுண்ணும்புக்கல், சுட்ட நிலக்கரி சலவைச்சோடா இவைகளைக் கொண்டுவர அதிகப்படி யான போக்குவரத்துச் செலவுகள் உண்டாகின்றன. சிந்திரியில் அம்மோனியம் ஸல்பேட்டு உரம் பெருமளவில் தயாரிக்கப்படு கிறது. சிந்திரி நாளடைவில் கனரக ரஸாயனத் தொழில்களுக்கு இடமாகக் கூடும் என்று கருதலாம். பொதுவாக, நாட்டில் தொழில் வளர்ச்சிக்கேற்ப ரஸாயனத் தொழில்கள் முன்னேற்ற மடையவில்லை.

**13. மருந்துகளும், ரசாயனப் பொருள்களும்:** முதல் உலகப் போருக்குப் பின்னர், இத்தொழிலில் பெரிய வளர்ச்சி தோன்றி யுள்ளது. ரூ. 10 கோடி வர்த்தகம் புரியும் 60 தொழிற்சாலைகள்

10,000 பணியாளரைக் கொண்டு பணியாற்றி வருகின்றன. 'தி பெங்கால் கெமிக்கல் அண்ட் பார்மக்யூடிகல் கம்பெனி' என்ற நிறுவனம் மிகவும் பெரியது. மேற்கிந்தியப் பகுதியிலேயே அலம்பிக் கெமிகல் ஒர்க்ஸ் எனப்படுவது மிகவும் பெரியது ஆகும். அயல் நாட்டுக்கூட்டுடன் நடக்கும் மிகவும் பெரிய நிறுவனம் ஸாராபாய் ஸ்க்விப்ஸ் (sarabhaii squibbs) ஆகும். பெருமளவில் மருந்துகளும், ரஸாயனப் பொருள்களும் இந்நாட்டில் தயாரிக்கப் படுகின்றன. இவைகளில் சில அபரிமிதமாகத் தயாராகின்றன எனலாம். அம்மைப்பால்கள் (Vaccines) சீரங்கள் (sera) காலனிகல்ஸ் (galenicals) கொய்னு, ராவோல்பியக (rauwolfia ) முதலியவை அளவுக்குமீறி, உற்பத்தியாகியுள்ளவை. இவைகளை லாபத்துடன் அண்டை நாடுகளுக்கு ஏற்றுமதி செய்யலாம். இருமல் மருந்து, லிவர் சத்துமருந்து, வைட்டமின் சத்துக்கள் ஆகியவை தேவைக்கதிகமாக இருப்பதால் பர்மா, இந்தோனேஷியா, ஆப்பிரிக்கா இந்நாடுகளுக்கு ஏற்றுமதி செய்ய முடிகிறது.

**14. வர்ணப் பூச்சுத் தொழில் :** முற்காலங்களில் நைட்ரோ-செலுலோஸ் (nitro-cellulose) மற்றும் முடிவு வர்ண நிறங்களும் மொத்த அளவில் இறக்குமதி செய்யப்பட்டன. இப் பொருள்களை மொத்த அளவில் உற்பத்தி செய்ய 125 தொழிற்சாலைகள் தோன்றியுள்ளன வார்னீசும்கூடப் பெருமளவில் இந்நாட்டில் தயாரிக்கப்படுகிறது. தற்போது இந்நாட்டிலேயே நைட்ரோ-செலுலோஸ் லேக்கர் (nitro-sellulose-lacquers) உற்பத்தி செய்யப்படுகிறது. செயற்கை முறையில் ரெஸின் (Synthetic resins) கூட உற்பத்தியாகிறது. எதிர்பார்க்கப்பட்ட மாதவாரி 6,000 டன் உற்பத்தியில் 5-ல் இரண்டு பங்கு அளவில் தயாரிக்கிறது. இதற்கான மூலதனம் ரூ $1\frac{1}{4}$ கோடிகள்.

**15. பிளாஸ்டிக் தொழில் :** அச்சில் வார்த்துச் செய்யப்படும் தொழிற்சாலைகள் 100 இந்தியாவில் உள்ளன. ஆண்டுக்கு ரூ. 5 கோடி மதிப்புள்ள பொருள்கள் செய்யப்படுகின்றன. இதிலிடப் பட்ட மூலதனம் ரூ 7·5 கோடி. 15,000 தொழிலாளர்கள் இத் தொழிலில் ஈடுபட்டுள்ளனர். இத்தொழிலின் மூன்று பெரும் பகுதி களாவன : அழுத்தத்தில் அச்சுவார்த்தல், இஞ்ஜெக்ஷன் முறையில் அச்சு வார்த்தல், தற்கால அமைப்பை நிறுவி அதன்மீது ப்ளாஸ்டிக்கைப் பரப்புதல் (fabrication by the extrusion process) இவை மூன்றும் இப்போது பெரிய அளவில் நடைபெற்று வருகின்றன. சாதாரண நுகர்வுப் பொருள்கள் உற்பத்தியாவதுடன், மூக்குக் கண்ணாடிப் பிரேம்கள், (சட்டங்கள்) பாலிதீன் பிலிம்கள், பிளாஸ்டிக் காகிதச் சுருள்கள் போன்ற புதிய பொருள்களும்

உற்பத்தி செய்யப்படுகின்றன. இந்து மஹா சமுத்திரம், அரபிக் கடல் ஆகியவைகளின் கரையோர நாடுகளுடன் ஏற்றுமதி வர்த்தகம் ஏற்பட்டுள்ளது. 1951-52-ல் ரூ. 6.45 லட்ச மதிப்புள்ள பொருள்களே ஏற்றுமதியாயின. ஆனால், 1954-55-ல் ரூ 14·41 லட்சம் மதிப்புள்ள பொருள்கள் ஏற்றுமதியாயின. இத் தொழில் தனது இளமைப் பருவத்திலேயே உள்ளதெனலாம். இது இன்னும் முன்னேறப் போதிய வசதியுள்ளது. தனி ஆள் நுகர்வு விகிதம் பல நாடுகளிலுள்ள நிலை இங்குக் காட்டப்பட்டுள்ளது. அமெரிக்கா 17 பவு. ; ஜெர்மனி 14·5 பவு. ; இங்கிலாந்து 8 பவு. ; இந்தியா 0·03 பவு.[1] இந் நாடு எவ்வளவு தூரம் முன்னேற வேண்டும் என்று இதனின்று புலனாகிறது.

**16. அலுமினியம் தொழில்:** பெரிய அளவில் இந்தியா உற்பத்தி செய்யக்கூடிய, இரும்பற்ற உலோகம் இது ஒன்றே. பன்னிரண்டு ஆண்டுகளுக்கு முன்னர்தான், முதன் முதலாக அலுமினியப் பாளத்தைத் தயாரித்தனர். இத் தொழிலில், பாக்ஸைட்டை (bauxite) கனிகளிலிருந்து வெட்டியெடுத்து, சுத்தம் செய்து பின்னர் அலுமினியத்தைக் கொண்டு அநேக பொருள்களைச் செய்கின்றனர். 1937-38-ல் தி அலுமினியம் கார்ப்பரேஷன் ஆப் இந்தியா லிமிடெட்டும் (இப்போது இந்தியன் அலுமினியக் கம்பெனி லிமிடெட்) கல்கத்தாவின் அருகில் தொழிற்சாலையை அமைத்துள்ளார்கள். ஆல்வாயில் 1943-ல் இம்மாதிரியான தொழிற்சாலையொன்றில், முதல் அலுமினியப் பாளத்தைத் தயாரித்தனர். இவ்விரு பெரிய அமைப்புகளினின்று உற்பத்தியாகும் மொத்த அலுமினியப் பாளங்கள் 7,200 முதல் 7,500 ஆகும். தகடுகள், பலகைகள், துண்டுகள், குழல்கள், கம்பிகள் முதலியன உற்பத்தி செய்யும் தொழிற்சாலைகள் அமைந்துள்ளன, அலுமினியத்தில் மெல்லிய தகடுகள் பெரிய அளவில் உற்பத்தியாகின்றன.

**17. ரேயான் பட்டுத் தொழில்:** போருக்குப் பிறகு தோன்றிய தொழில்களில் முக்கியமானது ரேயான் பட்டுத் தொழில். 1950-ல் முதன் முதலாக இந்தியா 25 பவுண்டு எடையுள்ள (விஸ்கோஸ்) நூலைத் தயாரித்தது. இப்போது 4 தொழிற்சாலைகள் உருவாகியுள்ளன. இவையனைத்தும் விஸ்கோஸ் நூலைத் தயாரிக்கின்றன. இவைகளில் ஒன்று அஸிடேட் பட்டைத் தயாரிக்கிறது. அரசினரால் நடத்தப்பட்டுவரும் தொழிற்சாலை இவைகளில் ஒன்று. அதன் பெயர் சர்சில்க் எனப்படுவது. விஸ்கோஸ் நூல் தயாரிக்க இன்னும் ஒரு தொழிற்சாலையை 1956-ல் நிறுவும் யோசனையுள்ளது.

*1, ஆர். வி. ஷாவின் 'ப்ளாஸ்டிக் மேக்' ஹிந்து ஸர்வே (இண்டியன்) இண்டஸ்ட்ரீஸ் (பேர்) 16 நவம்பர், 1955.*

75,000 கைத்தறிகளும் 35,000 விசைத் தறிகளும் ரேயான் பட்டு நூல், முறுக்கிய பட்டு அல்லது இவை இரண்டும் சேர்ந்த நெசவைச் செய்கின்றன. சன்மான ரேயான் நூல் சற்றேறக் குறைய 80 மிலியன் ராத்தலிலிருந்து 140 மிலியன் ராத்தலாக 1961-ல் அதிகரிக்கக்கூடும் என்று எதிர்பார்க்கப்படுகிறது. நடப்பில் 24 மிலியன் ராத்தல் அசிடேட் நூலும், 12 மிலியன் ராத்தல் நெசவுக்குரிய நூலும் உற்பத்தியாகின்றன. இரண்டாம் ஐந்தாண்டுத் திட்டத்தின் காலத்தில் உள்நாட்டுத் தேவை முழுவதையும் இந்தத் தொழிலினுல் ஈடு செய்ய முடியும். ரூ. 13 கோடிக்கு மேலாக மூலதனமும் 2 லட்சத்திற்குப் பக்கமாகப் பணியாளரும் உள்ள தொழில் இதுவே.

**18. இயந்திரக் கருவித்தொழில்** : 1939க்கு முன்னர் இந்தியாவில் இயந்திரக் கருவித் தொழில் ஏற்படவில்லை. இன்றைய நிலைமையிலும்கூட மொத்தத் தேவையில் 14% கூட உற்பத்தியாவது கடினமாக உள்ளது. 1941-ல் இந்திய அரசினர் இயந்திரக் கருவிக் கட்டுப்பாட்டு அதிகாரியை நியமித்தனர். இவர் உற்பத்தி, இறக்குமதி நவீன முறைகளை உற்பத்தியில் ஈடுபடுத்துதல் முதலியவற்றைக் கவனித்து வந்தார். உற்பத்தியாளர்களுக்கு உரிமத்தை வழங்கி உற்பத்தியைக் கண்காணித்து வந்தார். இந்தியாவில் இதுவே உற்பத்தியின் ஆரம்பத்திற்கு முதல் முயற்சி எனலாம். 1943-ல் ஜப்பான் போரில் நுழைந்ததும், மத்திய தரைக் கடல் வழி துண்டிக்கப்பட்டதும் இத் தொழிலுக்கு முற்றுப் புள்ளி ஏற்பட்டது. 1949-ல் இதன் நிலை மிகவும் சீர்கேடடைந்தது. உற்பத்தியும் விற்பனையும் திடீரெனச் சரிந்தன. உள்ளூர் உற்பத்தியாளருக்கு அயல்நாட்டு இறக்குமதி மீது ஏற்பட்ட வெறுப்பின் காரணத்தால், இம்மாதிரியான நிலையேற்பட்டதென்று கூறலாம். கொரியப் போர் காரணமாக இந்தத் தொழில் 1951-52-ல் மறுமலர்ச்சி பெற்றது. அண்மையில் பெருஞ் செலவில் பெரிய இயந்திரத் தொழிற்சாலை ஒன்றை (இந்துஸ்தான் இயந்திரக் கருவித் தொழிற்சாலை) பெங்களூருக்கு அருகில் அமைத்துள்ளனர். ஆறு ஆண்டுகளுக்கு மூன்று அமைப்புகளில் ஆண்டுதோறும் 1,600 இயந்திரக் கருவிகளை உற்பத்தி செய்யலாம் என்று திட்டமிட்டுள்ளனர்.

**19. ஆகாய விமான உற்பத்தி** : முதன் முயற்சியாக மைசூர் அரசினர் 1940-ல் காலஞ்சென்ற வால்சந்து ஹீராச்சந்துடன் சேர்ந்து இந்துஸ்தான் ஏர் க்ராப்ட் கம்பெனி (Hindusthan Air-craft Company Ltd.) என்ற நிறுவனத்தைத் தொடங்கினர். 1941ஆம் ஆண்டு ஜூலை மாதத்தில் இந்திய ஆகாய விமானம்

உருவாக்கப்பட்டது. 1942-ல் அரசினர் இந்தத் தொழிற்சாலையைப் போர்க் காலம் வரையிலாவது நீடிப்பது என்று முடிவு செய்தனர். ஹீராச் சந்தினுடைய உரிமைகளை மத்திய அரசினர் வாங்கிக் கொண்டனர். மைசூர் அரசினர் தங்கள் மேற்பார்வையை மத்திய அரசினரிடம் விட்டு விட்டனர். ஆயினும் பண சம்பந்தமாகக் கட்டுப்பாட்டை வைத்துக் கொண்டனர். 1946ஆம் ஆண்டில் தேசீய விமானத் தொழிற்சாலை ஒன்றை நிறுவி, அதன் மூலம் நாட்டின் இராணுவ, சிவில் சம்பந்தமான தேவைகளை இருபது ஆண்டுகளில் பூர்த்தி செய்வது என்று மத்திய அரசினர் முடிவு செய்தனர். ஷாரன்பூரில் இதற்கான பயிற்சி நிறுவனம் ஒன்றை அமைத்தனர்.

**20. நிர்வாகப் பதிலாள் நிறுவன முறை :** இந்திய நாட்டில் சீராக வளர்ந்துள்ள வர்த்தகத் தொழில் முறையில் தனிப்பட்ட வகையாகத் தோன்றியுள்ளது நிர்வாகப் பதிலாள் முறையாகும். 'நிர்வாகப் பதிலாள்' எனப்படுவது ஒரு தனி ஆளாகவோ, கூட்டு நிறுவனமாகவோ, கம்பெனியாகவோ இருந்து கூட்டுப் பங்குப் பொதுக் கம்பெனிகளின் முழு அமைப்பையோ பெரும் பகுதியையோ நிர்வாகம் செய்து வருவது. இவ்வாறு, அதிகாரத்தைக் கம்பெனியின் மெமோராண்டம் அல்லது ஆர்ட்டிகிள்ஸ் ஆப் அசோசியேஷன் (Memorandum of the Company or Articles of Association) மூலம் ஒப்பந்தப்படி பெறுகிறது. நெறியாளர்களின் கட்டுப்பாடுகளுக்கு அடங்கி ஒடுங்கி நடக்கும் நிர்வாகியைப் போலன்றி, ஒப்பந்தத்தில் கண்ட பிரிவின்படியே நெறியாளர்களுக்கு நிர்வாகப் பதிலாள் கட்டுப்படுவர்.[1] இவ் வேற்பாட்டின் கீழ், கம்பெனி நிர்வாகம் அனைத்தும் தங்கு தடையின்றிப் பங்குதாரர்கள் ஈடுபாடோ மற்றும் நெறியாளர்களுடைய ஈடுபாடோ இல்லாமல் செயல்முறையில் நடத்தப்படுகிறது. நிர்வாகப் பதிலாளின் பதவிக் காலம் வரம்பின்றி இருக்கும். மேலும் நிர்வாகப் பதிலாளை வெளியாக்குவதும் நீக்குவதும் எளிதல்ல. தற்போதுள்ள நிலையில் நிர்வாகப் பதிலாளின் பதவி, பரம்பரைப் பாத்தியதையாக அமைகிறது.

நிர்வாகப் பதிலாள் முறை, ஆங்கிலேய அடிப்படையில் தோன்றியது. பின்னர் இது இந்திய வர்த்தகத்திற்குப் பயனுள்ள முறையில் அமைந்துள்ளது. ஆங்கிலேயக் கம்பெனிகள் பெரிய நவீன தொழில்களில் முதன் முதலாக ஈடுபட்டன. நிலக்கரிச் சுரங்கங்களையும், சணற் சாலைகளையும், தேயிலைத் தோட்டங்களையும்

1. 1918ஆம் ஆண்டு இந்தியக் கம்பெனிச் சட்டம் ; திருத்தியமைத்த சட்டம் 1936-ல் மாற்றியமைதத்து பிரிவு 2 (9A) பிரகாரம்.

முதல் முதலாக அமைத்தவைகள் ஆங்கிலேயக் கம்பெனிகளே. இங்கிலாந்தில் பதிவு செய்யப்பட்ட கம்பெனிகள் இந்தியாவில் தங்கள் வர்த்தகத்தை நடத்தின. மேலும், இக் கம்பெனிகளின் நெறியாளர்கள் அனைவரும் இங்கிலாந்திலிருந்து வந்தனர். கம் பெனியின் அன்றுட அலுவல்களைக் கவனிக்க நெறியாளர் போர்டை இந்தியாவில் இருக்கும்படிச் செய்ய இயலாத காரணத்தி னுலும், இந்தியாவிலேயே வர்த்தகம் செய்து கொண்டிருந்த ஐரோப்பியர்கள் நிலைத்திராதவர்களாதலால் அவர்களை நெறியாளர் களாக நியமிப்பது கடினமாக இருந்த காரணத்தாலும் இத் தொழில் களை நிர்வகிக்கும் பொறுப்பினை நிர்வாகப் பதிலாளிடம் ஒப்படைக்க வேண்டியேற்பட்டது.

மேற்கிந்தியாவில் பருத்தி நெசவாலைகளைத் திறந்த இந்திய முதலாளிகள் எண்ணிக்கையில் அதிகமிருந்தும், நுட்ப அறிவுள்ள திறம் படைத்த வர்த்தகர்களாயிருந்தும் அவர்கள் வங்காளத்தில் வந்த ஆங்கில முறையைத் தழுவி, இந்த நிர்வாகப் பதிலாள் முறையைக் கடைப்பிடித்துவர முயன்றனர். போதிய நிதி வசதி பெறவேண்டிய நோக்கத்துடன்தான் இந்த முறையைக் கடைப் பிடித்தனர் என்று இந்திய வர்த்தகர்கள் விளக்கமாகக் கூறி வந்தனர். இந்திய நாட்டில் தொழிற்சாலைகளுக்குக் காலாகாலத்தில் போதிய அளவு நிதி வரத்தகு முறையில் சீரான நிதி நிறுவனம் ஏதும் உண்டாகவில்லை. இங்கிலாந்தில் உள்ள முதலீட்டுப் பாங்குகள் போன்ருே அல்லது கடன் வசதியளித்துவரக் கூடிய பாங்குகளோ ஏற்படவில்லை. புதிதாகத் தோன்றிவரும் கூட்டுப் பங்குக் கம்பெனிகளைப் பற்றிய தகவல்கள் ஒன்றும் தெரியாததால் பழங்காலச் சவுக்கார்களும் (Sahukars), மற்றும் பெதிஸ் (Pedhis) என்ற பாங்கு நிறுவனங்களும் கடன் வசதியளிக்க முன்வரவில்லை. பதிலாள் நிறுவன முறையின் தொடக்கத்திலிருந்த நிர்வாகப் பதி லாட்கள் தனிப் பண வசதியுடையவர்களாகவும், தொழிலில் ஊக்க முடையவராயும், புத்திக் கூர்மையும், தாமாகத் தனித்தியங்கும் வன்மை, திறன் முதலியன உடையவராகவும் இருந்தனர். அவர்கள் உருவாக்கிய கம்பெனிகளுக்குப் போதிய பணிக்கான மூல தனத்தை முதலாகப் போட்டனர். பாங்குகளில் தனி ஆள் உத்தர வாதத்தின் பேரில் கடன்பெற்றனர். தங்கள் உடல், பொருள், ஆவி அனைத்தையும் கம்பெனியின் தோற்றத்திற்காகவும், வளர்ச் சிக்காகவும் அளித்து, வெகுவாகப் பாடுபட்டதால் இவர்கள் அவ் வாருன கம்பெனிகளைத் தங்களுடைய ஆதிக்கத்திலேயே வைத்துக் கொண்டார்கள். 'ஒழுங்கான முறையில் முதலீடு செய்ய ஒரு சீரான நிறுவனம் இந் நாட்டில் தோன்ருதபோதும், நிர்வாகப் பயிற்சியும், தொழில் நுட்பமில்லாத காலத்திலும் இந்தப் பதிலாள்

நிறுவனங்கள், தேவையான மூலதனத்தைக் கொடுத்தும், இந்திய இயந்திரத் தொழில்களுக்குப் போதிய வழி முறை வகுத்தும் நிர்வாகம் செய்து வந்தனர். உண்மையில் இந் நாட்டில் தொழில் வளர்ச்சிக்கு உதவி அளித்தது நிர்வாகப் பதிலாள் நிறுவனம் என்பதில் ஐயமில்லை. இந் நிறுவனத்தின் உதவியின்றி இந் நாட்டில் எத் தொழிலும் முன்னேறவில்லை எனலாம். இப் பதிலாள் முறையில் அநேக குறைபாடுகள் ஏற்பட்டு, தவறான முறைகளில் ஈடுபட்டமையால் அண்மையில் நிர்வாகப் பதிலாள் நிறுவனத்தைக் குறித்துப் பல்வேறு வகையான எதிர்ப்புகள் தோன்ற ஆரம்பித்தன. கீழ்க்கண்ட காரணங்களினால் இப் பதிலாள் நிறுவனங்கள் கடுந்தாக்குதலுக்கு ஆளாகி உள்ளன : (1) மேற்கிந்தியாவில் உள்ள ஏஜன்சி நிறுவனங்கள் பரம்பரைச் சொத்தாகக் கருதப்பட்டு வலிமை மிக்க நிர்வாகிகளின், செயலற்ற, மதியற்ற மக்கள் வாரிசாக வந்து, முன்னேற்ற மடைந்த முதல்தரக் கம்பெனிகளை வெகு எளிதில் சீர்குலைய வைத்து, உருத் தெரியாமல் மூடுவதற்கு அடிகோலினர். (2) இவர்களுக்குக் கொடுக்கப்படும் ஊதியம், உற்பத்தி, விற்பனைக் கமிஷன் இவைகளைப் பொறுத்தே இருந்தது. நிகர லாபத்தை அடிப்படையாகக் கொள்ளவில்லை எனலாம். இதன் பின்விளைவாக மிதமிஞ்சிய உற்பத்தியைச் செய்து, இலாபம் தோன்றாத வகையில் விற்பனைகளையும் செய்து, பங்குதாரர்களுக்கு எந்த வகையிலும் பயன் ஏற்படாத முறையில் செயல் புரிந்து, கம்பெனியின் கொள்முதல், விற்பனை, இன்சூரன்சு இத் துறைகளில் லாபப் பங்கினைக் கள்ள முறையில் பெற்றுக் கம்பெனியைச் சுரண்டினர் என்றால் அது மிகையாகாது எனக் கூறலாம். இவர்கள், நெறியாளர்கள், பங்குதாரர்கள் முதலியவர்களுடைய அமைதியின்றித் தங்களுக்குக் கைப்பொம்மைகளாக இருக்கும் சில ஆட்களைத் தொழிலில் அமர்த்திக் கம்பெனியின் முன்னேற்றத்திற்குச் சொல்லொணா இடையூறுகளை விளைவித்தார்கள். (3) கம்பெனி நிர்வாகத்தில் இவர்களுக்குப் பெருமளவில் பொறுப்புகள் இருந்த காலத்தில் பெரும் பங்குதாரர்களாகவே இருந்து கம்பெனியின் முன்னேற்றத்திற்குத் தொடர்ந்து பாடுபட்டு வந்தனர். இவர்களது பொறுப்பு குறையக் குறைய, சொந்த முறையில் எவ்வளவு லாபம் சம்பாதிக்கலாம் என்றும், கம்பெனியின் ஆஸ்திகளை எவ்வகையில் தமது உடைமையாக்கிக் கொள்ளலாம் என்றும் அவர்கள் வழிகளை வகுத்து, பங்குதாரர்களுக்கு எதிராக நடந்ததில் ஐயம் ஒன்றும் இல்லை. அவர்கள் கையாண்ட தவறான வழிகளையும், பொறுப்பற்ற போக்கினையும் இங்கு விவரிப்போமாக: (4) தாங்கள் நடத்தி வரும் கம்பெனியின் பங்குகளை அதிகப்படியாகஊக வர்த்தகத்தில் ஈடுபடுத்துதல். (5) தங்கள் அமைப்பின் கீழ் உள்ள கம்பெனியின் நிதியை எவ்வகையிலும் வர்த்தக சம்பந்தமின்றித் தாமாகவே

கடன் வாங்கிக் கொண்டும், அல்லது பிறருக்குக் கடன் கொடுத்தும் கம்பெனியின் நிதி நிலைமையைத் தகராறில் விட்டு விடுவார்கள். (6) பலமற்ற கம்பெனிகளுக்கு வலிமையுள்ள கம்பெனியின் நிதியைப் பாய்ச்சி அதை ஊக்குவிப்பார்கள். (7) சிற்சில காலங்களில் எண்ணிறந்த கம்பெனிகளை ஏற்று நடத்த முன்வருவார்கள். இவைகள் சம்பந்தா சம்பந்தம் இல்லாத வெவ்வேறு கோட்பாடுடையவையாக இருக்கக்கூடும். (8) பல்வேறு கம்பெனிகளை உயர்தர முறையில் நடத்தி வருவதால், சிக்கன முறைகளைக் கையாளுகிருர்கள் என்றும், செம்மையான முறைகளில் நடத்தப்பட்டு வருகின்றன வென்றும், பெருவாரித் தொழில்களுக்கான ஆதாரங்கள் இவற்றில் கிடைக்கின்றன என்றும் கூறி வருகிருர்கள். எனவே, தனி உரிமையாளர் அல்லது கூட்டு உரிமையாளர் நிறுவனங்களை விட இத் துறையில் முன்னேற்றம் காணப்படுகிறது என்று கூறப்படுகிறது. ஆங்கில நாட்டில் நிர்வாகப் பதிலாள் முறை நிறுவனம் இன்றியே இந்த ஆதாயங்களைப் பெற்றுள்ளபடியால் இது ஒன்றும் வியக்கத்தகு முறையில் பலன் கொடுத்ததாகத் தெரியவில்லை எனலாம். (9) இவர்கள் நடத்தும் கம்பெனிகள் நிதியின்றி இலாபமின்றி இருந்தால் இவர்கள் தாங்கள் பெறவிருக்கும் ஊதியத்தை, வேண்டாமென்று அர்ப்பணம் செய்து விடுகின்ருர்கள். இம் முறையில் தற்காலிகமாக இவர்கள் கம்பெனியின் முன்னேற்றத்திற்குப் பாடுபடுவதுபோலத் தோன்றினலும், கக்பெனியினின்று கிடைக்கக்கூடிய கொள்முதல் விற்பனை இவற்றிற்கான கமிஷனை, இவர்கள் புறக்கணிப்பதில்லை. பொன் முட்டையிடும் வாத்தினை யாரே கொன்றுவிட ஆலோசிப்பார்கள்? இதன் பொருளாவது, கம்பெனி மூடப்படாமல் நடந்து கொண்டிருந்தால்தான் இவர்கள் பெறவேண்டிய ஊதியத்தை அவ்வப்பொழுது வாங்கிக் கொள்ளலாம். (10) கம்பெனி நெறியாளர்களைச் செயலற்றவர்களாக்கித் தங்கள் காலடியிலேயே கிடக்கும்படி இவர்கள் செய்வார்கள். சில கம்பெனி நெறியாளர்கள், அப் பதவியைப் பெற இவர்களின் பக்க பலத்தை நாடி வருகிருர்கள் என்ருல் மிகையாகாது. இந்த நெறியாளர்களும், கம்பெனி விவகாரங்களில் ஈடுபடாது இருந்து விடுவார்கள். பங்குதாரர்களோ, செயலற்று, சக்தியற்று இருப்பார்கள். கம்பெனி சம்பந்தப்பட்ட தகவல்களில் இவர்கள் எவ்வித அக்கறையும் காட்டுவதில்லை. கம்பெனியில் அதிகப்படியாக முதலீடு செய்யும்படிக் கோரும் சுற்றறிக்கைகளை, இவர்கள் பார்ப்பதுமில்லை. (11) பெரிய, வன்மையான தொழில் நிறுவனங்களையும், வர்த்தக அமைப்புகளையும் ஒரு சிறிய கும்பல், நிர்வாகப் பதிலாள் என்ற பெயருடன் நடத்தி வருகின்றது. இச் சிறு கும்பலின் விருப்பத்திற்கேற்பப் பெரிய கம்பெனிகளின் தலைவிதி அமைகிறது.

1936ஆம் ஆண்டு இந்தியக் கம்பெனிகள் திருத்தச் சட்டம் கீழ்க் கண்ட பிரிவுகளின் மூலம் நிர்வாகப் பதிலாள் முறையில் உள்ள கெடுதல்களைப் போக்கப் பாடுபடுகிறது: (1) நிர்வாகப் பதிலாள் என்ற பதவி[1] 20 ஆண்டுக் காலம் வரை என்று திட்டப் படுத்தி, அதன்பின்னர் விலக்கப்படவேண்டும் என்று குறிப்பிட்டுள்ளது. (2) நிர்வாகப் பதிலாள் இன்சால்வென்ட் (insolvent) ஆனாலோ, கிரிமினல் வழக்கிலீடுபட்டு ஜெயிலில் தள்ளப் பட்டாலோ, ஜாமீன் பெறத்தகா வழக்கிலீடுபட்டாலோ உடனே கம்பெனி அவரை அப் பதவியினின்று விலக்கிவிடலாம். (3) பங்கு தாரர்களின் அனுமதியின்றித் தங்கள் உரிமைகளை விற்கவோ, அடகு வைக்கவோ கூடாது. (4) நிகர லாபத்தை அனுசரித்து இவரது ஊதியம் குறைந்த அளவு இவ்வளவு என வரையறுத்து அமைந்திருக்கும். (5) நிர்வாகப் பதிலாளின் பொறுக்குதலில் வரக்கூடும் நெறியாளர்கள் மொத்தத்தில் மூன்றில் ஒரு பங்கு இருக்கக்கூடும். (6) ஒரே நிர்வாகப் பதிலாளின் கீழுள்ள கம்பெனிகள், தங்களுக்குள்ளாகக் கடன் வாங்கிக் கொள்ளுதல் கூடாது. (7) நிர்வாகப் பதிலாட்கள் தங்களுடைய கம்பெனிப் பங்குகளை ஊக வர்த்தகத்தில் ஈடுபடுத்தக்கூடாது. (8) கம்பெனி சம்பந்தமாகத் தனக்கு என்னென்ன வகையில் ஈடுபாடுகள் உள்ளன என்றும், தனக்குக் கிடைக்கும் ஊதியம் எவ்வளவு என்றும் நிர்வாகப் பதிலாள் பங்குதாரர்களுக்கு அவ்வப்போது விளக்கம் தருதல் வேண்டும்.

**21. இந்தியக் கம்பெனிகள் சட்டம், 1956:** 1952ஆம் ஆண்டில் இந்திய அரசினர் கம்பெனிச் சட்டக் குழுவினை நிறுவி, இந்தியக் கம்பெனிச் சட்டத்தைத் திருத்தங்களுடன் அமைக்க விழைந்தனர். குழுவினரும் கூட்டுக் குழுவினரும் சேர்ந்து செய்த பரிந்துரைகளைக்கொண்ட இந்தியர் கம்பெனி மசோதா 1955-ல் பாராளுமன்றத்தால் ஏற்றுக்கொள்ளப்பட்டுச் சட்டமாக மாறி 1956 ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 1ஆம் தேதி அமுலுக்கு வந்தது. நிர்வாகப் பதிலாள் முறையை நன்கு கட்டுப்படுத்த இதில் உள்ள பிரிவுகள் வருமாறு: (1) இச் சட்டம் அமலுக்கு வரும் தேதியன்று எந்தக் கம்பெனியாவது நிர்வாகப் பதிலாள் இல்லையென்றால் அந்தக் கம்பெனிக்கு நிர்வாகப் பதிலாள் புதிதாக அமைத்தல் அனுமதிக்கப்படமாட்டாது. (2) 1960ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் 15ஆம் தேதி வரையிலாவது அல்லது நடப்பு 6ஆம் தேதியிலிருந்து மூன்று ஆண்டுகளுக்குள்ளாவது எது மிகவும் குறைந்த காலமோ அதற்குள்ளாக நடப்பிலுள்ள எல்லாப் பதிலாள்

1. இதன் முதல் பத்தியில் நிர்வாகப் பதிலாளுக்கு இலக்கணம் கூறப் பட்டுள்ளது.

நிறுவனங்களும் வேலை தொடர்ந்து நடத்தக்கூடாது. (3) மத்திய அரசின் அனுமதியின்றி எவரையும் நிர்வாகப் பதிலாளாக அமைத்தல் கூடாது. பொது நன்மையைக் கோரி மத்திய அரசினர் அவ்வப்போது தங்கள் கொள்கைகளை விளக்கிவருவார்கள். (4) புதிதாகத் தொழிலில் அமர்த்தப்படும் நிர்வாகப் பதிலாளர்கள் 15 ஆண்டுகள் வரை நீடிக்கலாம். மறுமுறை நீடிக்கவேண்டுமானல் 10 ஆண்டுகள் வரை அப் பதவியை வகிக்கலாம். நியமனம் பெற்று இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட கால வரம்புடைய நிர்வாகப் பதிலாள் நிறுவனங்களுக்கு, மறுமுறை புதுப்பித்தல் அனுமதிக்கப்படுவதில்லை. (5) இனி, நிர்வாகப் பதிலாள் முறையைச் சந்ததி முறையில் நிறுத்திக் கொள்ள அனுமதி கொடுக்கப்படமாட்டாது. (6) நிர்வாகப் பதிலாள் நிறுவன அமைப்பில், மாறுதலோ அல்லது கம்பெனியின் நிர்வாக மாற்றம் செய்யவோ முற்படின் அதற்கு மத்திய அரசின் சம்மதம் பெறல் இன்றியமையாதது. (7) நிகர லாபத்தில் 11% அதிகப்படாமல் நிர்வாகப் பதிலாளுக்கு ஊதியமளிக்கப்படலாம். பதவியைக் குறித்துத் தனிப்பட்ட முறையில், அலுவலகச் செலவு எனக் கூடுதலாக எந்தத் தொகையும் கொடுக்கலாகாது. நியாயமான முறையில் கம்பெனி சம்பந்தமாக இவர்கள் ஏதேனும் செலவுகள் செய்திருப்பின் அவற்றைக் கொடுத்துவிடவேண்டும். (8) வேறெந்த வகையிலும் வருமானம் கிடைக்காத காரணத்தால் நிர்வாகப் பதிலாளுக்கு விற்பனை, கொள்முதல் இவற்றில் கமிஷன் கொடுக்க முன்வரலாம். 1957ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் முதல் தேதியன்று நடப்பிலுள்ள எல்லாக் கமிஷன் பெறக்கூடிய ஒப்பந்தங்களும் சட்டப்படி எற்றுக்கொள்ளத் தக்கவையல்ல. (9) தாங்கள் நடத்தும் கம்பெனிக்கு எதிராகப் போட்டியிடத்தகு வர்த்தகத்தை, நிர்வாகப் பதிலாளர்கள் நடத்தக் கூடாதென்று வரையறுக்கப்பட்டுள்ளது. (10) ஐந்து நெறியாளர் உள்ள கம்பெனிகளாயின், இரண்டு நெறியாளர்களையும் மூன்று நெறியாளர்கள் உள்ள கம்பெனிகளாயின், இரண்டு நெறியாளரையுமே நியமனம் செய்ய நிர்வாகப் பதிலாளுக்கு அனுமதி யளிக்கப்பட்டுள்ளது. (11) ஒரே சமயத்தில் பத்துக் கம்பெனிகளுக்கு மேலாக நிர்வாகப் பதிலாள் நடத்தக்கூடாது.

சட்டத்தின் அடிப்படைக் கொள்கையென்னவெனில் ஒரு சிலரின் கையில் செல்வம் குவிந்து தழைத்தோங்குவது தடைப் படுத்தப்பட்டும், கம்பெனி உருவாக்கலில் ஒழுங்குமுறையும், நேர்மையும் இன்றியமையாதவை என்ற அடிப்படையைக் கொண்டே வரையப்பட்டுள்ளன.

**22. தொழில்களுக்கான பாதுகாப்புகள் :** பொதுவாகப் புத்தக முறையில் பாதுகாப்பு சம்பந்தமாகக் கொடுக்கப்படும் விளக்கங்களை, இங்கு அதிகம் நீட்டாமல் சுருக்கமான முறையில் சிந்திப்போமாக. பொதுவாக, இந்திய நிலைமைக்குப் பாதுகாப்பு முறை எவ்வாறு அமைந்துள்ளது என்று விவரிப்போம். தொடக்க நிலையில் உள்ள தொழில்கள் என்ற காரணத்தினால் பாதுகாப்பான தேவை என்ற கொள்கைக்கேற்ப இதற்குப் பெரும் ஆதரவு உள்ளது. தக்க காலம்வரை நம் நாட்டில் பாதுகாப்பு முறைகள் ஏற்படின் அயல்நாடுகளைப்போல் அதே சிக்கனத்துடன் எந்தத் தொழிலையும் செவ்வனே நடத்தலாம். தேசீய நலனைக் கோரியும் சில முக்கியமான பொருள்களின் உற்பத்தியை இந் நாட்டில் செய்யவும், பாதுகாப்பு முறை இன்றியமையாததென்று கருதப் பட்டு வருகிறது. முன் கூறியுள்ள இரண்டு கொள்கையை அனுசரித்துப் பாதுகாப்பு வசதியளிப்பின், உற்பத்தி பெருகும் எனலாம்.

**23. தொழில் பாதுகாப்பிற்கான வசதியைக் கோரி இந்தியாவில் கிளர்ச்சி :** கட்டுப்பாடற்ற வர்த்தகம் அக் காலத்தில் ஆங்கில அரசினரால் அமலில் கொண்டுவரப்பட்டது. இம் முறை இங்கிலாந்திற்கு மிகவும் சாதகமானதெனக் கருதப்பட்டது. லங்காஷயரின் விருப்பத்திற்கு ஏற்ப இந்தியாவில் கொள்கையைக் கடைப்பிடித்ததைக் கண்டு, இந்திய மக்கள் சர்க்காரின்மீது வருத்தமுற்றனர். இந் நாட்டில் தொழில் வளர்ச்சி ஏற்பட வேண்டும் என்று மக்கள் வாதிட்டனர். எடுத்துக்காட்டாக, ஜப்பான், அமெரிக்க ஐக்கிய நாடு, ஜெர்மனி முதலிய நாடுகளிலிருந்து வரும் கோட்பாடுகளைக் காட்டி இங்கும் அவ்வாறு அமைதல் வேண்டும் என்று கருதினர். இங்கிலாந்திலும்கூடத் தொழில் முன்னேற்றம் ஏற்பட்டு, உறுதியாகும்வரையில் பாதுகாப்பு முறை நடப்பில் இருந்தது. 1915ஆம் ஆண்டுமுதல் இங்கிலாந்து கட்டுப்பாடற்ற வர்த்தக முறையிலிருந்து கட்டுப்பாடு முறைகளைக் கொஞ்சம் கொஞ்சமாக அனுசரித்து வருகிறது. 1914-18ஆம் ஆண்டுகளுக்குள்ளாகப் போர்க்கால நிலையை அனுசரித்து இறக்குமதித் தீர்வை விதிக்கப்பட்டது. இம் முறையில் இந்தியாவில் சில தொழில்களுக்குப் பாதுகாப்பு கிடைத்தது எனலாம். ஆயினும், இந்தப் பாதுகாப்புமுறை தற்காலிகமானதும், எப்பொழுதாவது கொடுக்கப்படுவதுமாக அமைந்திருந்தது. மெசபடோமியா, பாலஸ்தீனம் ஆகிய நாடுகளில் நடந்த போர்களின் முடிவில் இந்தியா தொழில் முன்னேற்றம் பெற்று இருந்தால் மிகவும் பலன் உள்ளதாக இருக்கும் என்று கருதப்பட்டது. எனவே, அரசினர் இந்தியாவைத் தொழில் மயமாக்குவதில்

முனைந்தனர். அதன் விளைவாக, பாதுகாப்பு முறை, தொழில் வளர்ச்சிக்கு மிகவும் பயன் உள்ளதாக இருக்கும் என்று கருதினார்கள். 1921ஆம் ஆண்டில் தீர்வைக் குழுவினர் (Fiscal Commission) நியமிக்கப்பட்டனர். இவர்கள் இந் நாட்டிற்கு வேற்றுமையுள்ள பாதுகாப்பு முறையைப் (discriminate protection) பரிந்துரைத்தனர். (1) பாதுகாப்பு அளிக்கவேண்டிய தொழிலுக்குத் தேவையான ஆக்கப் பொருள், இயற்கை வளம், உள்ளூர்ச் சந்தை, குறைந்த விலையில் விசைவசதிகள் முதலியவை கிடைக்க வேண்டும். (2) பாதுகாப்பு இன்றேல் தொழில் அமைக்க முடியாது போய்விடும்; அல்லது விரைவில் முன்னேற்றமடையா. (3) இவ்வாறு தோற்றுவிக்கப்பட்ட தொழில், முடிவில் பாதுகாப் பின்றி, உலகச் சந்தையில் போட்டியிட முன் வரலாம்.

தொழில்கள் வரம்புமீறிய ஆதாய விதியின்படி அமைந்திருப் பினும், நாட்டின் முழுத் தேவைகளையும் ஈடுபடுத்தக்கூடியதாக இருப்பினும் அவ்வாறான தொழில் பாதுகாப்பு வசதி பெறக்கூடும். பிற நாட்டுப் பண்டங்கள் திணிக்கப்படுதலையும், அயல் நாடுகளி லிருந்து தீர்வையற்ற பொருள்கள் வந்து குவிதலையும் தடுப்பதற்கு ஏற்றது, பாதுகாப்பு முறை என்று பலராலும் கருதப்பட்டு வருகிறது. பாதுகாப்பு வசதியைப் பெறத்தகு தொழில்கள் தொடக்கநிலையிலேயே இருக்கும். மந்த காலங்களில் நன்கு நிறுவப்பட்ட தொழிலாக இருக்கும். இத் தொழிலுக்குத் தற்காலிக மாகப் பாதுகாப்பு அளிக்கப்படும் தொழில்களை நிறுவுபவர்கள் கொடுக்கும் உத்தரவாதத்தை அனுசரித்துப் பாதுகாப்புக் கொடுப்பது வேண்டற்பாலது

**24. வேற்றுமையுள்ள பாதுகாப்பு முறையிலுள்ள குறைபாடு கள் :** இம்முறையின் கீழ் விளக்கம் செய்து இரும்பு-எஃகுத்தொழில், பருத்தி நெசவு, சர்க்கரை, காகிதக்கூழ், காகிதம் ஆகிய தொழில் களுக்குப் பாதுகாப்பு வசதியளிக்கப்பட்டது. அதேபோல் இன்றும் சில தொழில்களுக்கு, கொஞ்சகாலம் கழித்துப் பாது காப்பு முறையை எடுத்துவிடவேண்டும் என்றும் அது இனித் தேவையற்றது என்றும் முடிவு செய்யப்பட்டது. இந்த அடிப் படையில் 1941-ல் இரும்பு - எஃகுத் தொழிலில் காட்டப்பட்ட பாதுகாப்புச் சலுகை எடுபட்டது. 1947-ல் பருத்தி நெசவுத் தொழிலுக்கான பாதுகாப்பு நீக்கப்பட்டது. 1950-ல் சர்க்கரைத் தொழிலிலிருந்து பாதுகாப்பு விலக்கப்பட்டது.

வேற்றுமையுள்ள பாதுகாப்பு முறை, எதிர்பார்த்த அளவு தொழில் வளர்ச்சிக்கு ஏற்றவாறு அமையவில்லை. இதைக் குறித்து

விளக்கம் செய்துள்ள வாசகம் குறுகிய கொள்கையையும், பரந்த மனப்பான்மையற்ற அரசினர் கொள்கையையும் எடுத்துக்காட்டு கிறது. எடுத்துக்காட்டாக, ஒரு தொழிலுக்கு வேண்டிய ஆக்கப் பொருள்கள் அனைத்தும் இந் நாட்டிலேயே கிடைக்க வேண்டு மென்று கூறப்பட்டுள்ளது. குறிப்பாக அயல் நாடுகளிலிருந்தும் கூட, ஆக்கப்பொருள்கள் இறக்குமதி செய்யப்பட்டுத் தொழில் வளர்ச்சி ஏற்படுவதற்கு நியாயம் இருக்கிறது. அதைப்போல ஓர் உற்பத்திப் பொருளுக்கு, உள்ளூர்ச் சந்தை இல்லாவிடினுங்கூட, அயல் நாடுகளில் விற்பனை செய்ய வசதிகள் தேடிக் கொள்ள இடம் இருக்கிறது. இன்னொரு குறைபாடாவது, சில குறிப்பிட்ட தொழில்களுக்கு நாட்டில் தொழில் வளர்ச்சியைக் குறித்த வகை யில் பாதுகாப்பு உதவி அளிக்காத காரணத்தால், இம்முறை சீரான வகையில் அமைக்கப்படவில்லை என்று கருதப்படுகிறது.

அகன்ற மனப்பான்மையற்ற கொள்கையைப் பொறிக்கப் பட்டுள்ள வாசகம் கொண்ட இந்தத் திட்டம், உதவி செய்ய விருப்பமற்ற ஆங்கில அரசின் எண்ணத்தை எடுத்துக் காட்டியது. இன்னொரு குறைபாடாவது இம்முறையின் கீழ் வசதியளிக்கப் பட்ட ஒரு தொழிலுக்கு மறுமுறை நீட்டுவதைப் பற்றியோ, அல்லது தொடர்ந்து தருவது பற்றியோ ஆலோசனை நடத்தாது, அவ்வப்படியே விடப்பட்டமை. இதற்கென அமைந்த வர்த்தகப் பாதுகாப்புக் குழுவினர் அரசினரின் கட்டுப்பாடுகளுக்கும், விதி களுக்கும் அடங்கி நடந்து வரவேண்டி இருப்பதால், அவர் களுக்குத் தொழில் சம்பந்தப்பட்ட எவ்வகையிலும் நியாயமான முறையில், போதிய வசதிகள் அளிக்க முடியாது தவித்தனர். இவ்வாறு அமைக்கப்பட்ட குழுக்கள் தற்காலிகமாக அமைக்கப் பட்டவை. ஆதலால் அடிக்கடி, ஆள் மாற்றங்கள் ஏற்பட்டு வந்தன. எனவே, சீரிய முறையில், நீண்டகாலக் கொள்கைகளை வகுப்பதற்கும், தொழில் நுட்ப மறிந்த அனுபவம் பெற்ற குழுவாக இருப்பதற்கும் இயலாமற்போயிற்று. இக் கொள்கையை நடத்து வதிலுங்கூட, கீழ்க்கண்ட குறைபாடுகள் காணப்பட்டன: (1) இந்தப் போர்டுக்கு உதவியளிப்பதற்குத் தகவல் கொடுப்பதில் கால தாமதம் ஏற்படுதல். (2) இது சம்பந்தமாகப் போர்டு விசாரணை நடத்துவதில் ஏற்படும் தாமதம். (3) இவ் விசாரணையை யொட்டி அரசினர் எடுத்துக்கொள்ளும் முடிவு செய்தலில் கால தாமதம்.[1]

**25. வேற்றுமையுள்ள பாதுகாப்பு முறையின் விளைவுகள்:** முன்னர்க் கூறிய காரணங்களை யொட்டி, இம் முறையின் கீழ்த்

1. *தீர்வைக் குழுவினரின் அறிக்கை, 1952, பத்திகள் 48, 49.*

தொழில் வளர்ச்சி தலைகீழாகப் போயிற்று என்றும், பயனற்று அமைந்தது என்றும் கூறுவதில் வியப்பில்லை. தீர்வைக் குழுவினரின் கருணையற்ற மனப்போக்கின் விளைவாக ஏற்பட்டதா, அல்லது அரசினர் இவர்களுடைய பரிந்துரையை ஏற்காது புறக்கணித்த காரணத்தால் விளைந்ததா, அல்லது நியாயமான முறையில் வசதிகள் பெற வேண்டிய தொழிலுக்கு, வசதியளிக்காத காரணத்தால் ஏற்பட்டதா என்று நோக்கின், மாறுபாடான முடிவையே கொடுத்தது என்று சொல்லலாம். இது சம்பந்தமாகக் கண்ணாடித் தொழிலையும் தீப்பெட்டித் தொழிலையும் நாம் விளக்கம் செய்யலாம். பின்னால் கொடுக்கப்பட்டுள்ள சில பெரிய தொழில்களின் விளக்கங்களின் அடிப்படையினின்று, வேற்றுமையுள்ள பாதுகாப்பு முறை அனுகூலமாகவே இருந்தது என்று சொல்லலாம்.

(i) **நெசவுத் தொழில் :** 1926ஆம் ஆண்டில் ஏற்பட்ட மந்த நிலைமையினால், இத்தொழில் வெகுவாகப் பாதிக்கப்பட்டிருந்தது அப்போது இதற்குப் பாதுகாப்பு அளிப்பதென்ற பிரச்சினையை எழுப்பினர். தீர்வைக் குழுவினர் தங்களது 1927ஆம் ஆண்டு அறிக்கையில் இறக்குமதிகளின் மீது 11% முதல் 15% தீர்வை விதிக்க வேண்டுமென்றும், ஆலை சம்பந்தப்பட்ட இயந்திரங்கள், கருவிகள் இவைகளை எவ்விதத் தீர்வை விதிப்புமின்றி இறக்குமதி செய்ய அனுமதிக்கப்பட வேண்டுமென்றும், உயரிய எண்ணுள்ள, நூற்கப்படும் நூல்களுக்கு மான்ய வசதி அளிக்கப்பட வேண்டுமென்றும் இவர்கள் கோரினர். இயந்திர ஆலைக் கருவிகள்மீது இறக்குமதித் தீர்வை நீக்கப்பட்டது. ஒரு பவுண்டின்மீது 5% வீதம் அல்லது $1\frac{1}{2}$ அணாத் தீர்வை விதிக்க அரசினர் முடிவு செய்தார்கள். இவ்வுதவி, தகுந்த பலனைக் கொடுக்காததாலும், மிகவும் குறைவாக இருந்த காரணத்தினாலும் தொழில் மந்த நிலைமையிலேயே இருந்து வந்தது. பாதுகாப்பு வசதி தொடர்ந்து 1933 ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் 31ஆம் தேதி வரையிலும் நீடிக்கப்பட்டது. இந்த நீடிப்புச் சட்டம் 1930-ல் அமுலுக்கு வந்தது. இதையொட்டி 15% மதிப்பீட்டுத் தீர்வையும், பவுண்டு ஒன்றுக்கு $3\frac{1}{2}$ அணா அதிகப்படித் தீர்வையும் எல்லாச் சாதாரணத் துணிகள் மீதும் விதிக்கப்பட்டன. ஜப்பானியரின் போட்டியை எதிர்க்க வேண்டி ஆங்கில நாடு தவிர, மற்ற நாட்டுச் சரக்குகளின் மீது 5% அதிகப்படித் தீர்வை 1931-ல் தண்டல் செய்யப்பட்டது. அதே ஆண்டின் பிற்பகுதியில், நடப்பில் உள்ள தீர்வைகளின் மீது 25% கூடுதல் தீர்வையும் 5% மதிப்பீட்டுத் தீர்வையும் பருத்தி ஆடைகளின் மீது இடப்பட்டன. இதன் விளைவாகப் பவுண்டு ஒன்றுக்கு $4\frac{3}{8}$ அணாத் தீர்வை அல்லது 25% மதிப்பீட்டுத் தீர்வை

இவை இரண்டினுள் எது அதிகப்படியானதோ அது அமலில் கொண்டுவரப்பட்டது. இத் தண்டல்களனைத்தும் ஆங்கிலேயர் நாடற்ற, இதர நாட்டுச் சரக்குகளின் இறக்குமதியைக் குறித்துச் செய்யப்பட்டது. பருத்தி நெசவுத் தொழில் வளர்ச்சியைக் குறித்து, இறக்குமதியாகும் செயற்கைப்பட்டின்மீது 40% தீர்வை அதிக அளவில் விதிக்கப்பட்டது.

ஜப்பான் நாட்டின் எண் நாணயம் மதிப்பிழந்த காரணத்தால் குறைந்த விலையில் நிறைந்த சரக்குகள் அயல்நாட்டுச் சந்தைகளில் மலிய ஆரம்பித்தன. 1932ஆம் ஆண்டில் இது சம்பந்தமாக விசாரணையை நடத்துமாறு தீர்வைப் போர்டினை இந்திய மக்கள் கேட்டுக் கொண்டதன் காரணமாக, ஆங்கில நாடற்ற இதர நாடுகளிலிருந்து வரும் துணிகளின்மீது இடப்பட்ட தீர்வை $31\frac{1}{4}$%லிருந்து 50%க்கு அதிகரித்தது. இந் நாடுகளிலிருந்து வரும் சாதாரணத் துணிகளுக்கு, பவுண்டு ஒன்றுக்கு 1932ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் $5\frac{1}{4}$ வீதம் தீர்வை விதித்து, பின்னர் 1933 ஆம் ஆண்டு ஜூன் மாதம் $6\frac{3}{4}$ ஆக அதிகரிக்கப்பட்டது. அவ்வமயம் மதிப்பீட்டுத் தீர்வை 75% ஆக இருந்தது எனலாம். 19 4 ஆம் ஆண்டு, இந்தியத் தீர்வைத் துணி நெசவுப் பாதுகாப்புத் திருத்தச் சட்டத்தின்படி (The Indian Tariff Protection Amendment Act) ஜப்பானுடன் வர்த்தக ஒப்பந்தம் செய்து கொண்டுள்ள, அதன்படி ஒரு விகிதமுறை உருவாகியது. மோடி-லீஸ் ஒப்பந்தப்படி, ஆங்கிலேய நாடற்ற இதர நாடுகளிலிருந்து வரும் துணிகளுக்கு 5ʻ% மதிப்பீட்டுத் தீர்வை இடுவதென்றும், சாதாரண காடாத் துணிகளுக்குப் பவுண்டு ஒன்றுக்கு குறைந்த பட்சம் $5\frac{1}{4}$ அணு விதிப்பதென்றும், தீர்மானிக்கப்பட்டது. இங்கிலாந்திலிருந்து ஏற்படும் இறக்குமதிகளைத் தனிப்பட்ட தீர்வைப் போர்டு 1935-ல் கண்காணித்தது. 1936ஆம் ஆண்டு ஜூன் மாதம் 25ஆம் தேதி முதல் இங்கிலாந்திலிருந்து வரும் இறக்குமதிச் சரக்குகளுக்குக் கீழ்க் கண்டவாறு தீர்வை விகிதம் குறைக்கப்பட்டது. சாதாரண காடாத் துணியின்மீது ஒரு பவுண்டு எடைக்கு 25% மதிப்பீட்டுத் தீர்வை அல்லது $4\frac{3}{4}$ அணுவாக விதிக்கப்பட்டிருந்ததைக் குறைத்து, 20% மதிப்பீட்டுத் தீர்வை அல்லது $3\frac{1}{2}$ அணு ஒரு பவுண்டின் மீது வசூலிக்கப்பட்டது. கரைபோடப்பட்ட சலவை அல்லது வண்ணத் துணிகளின்மீது (அச்சு நீங்கலாக) 25% ஆக இருந்தது 20% மதிப்பீட்டுத் தீர்வையாகக் குறைக்கப்பட்டது.

இந்திய-ஆங்கிலேய வர்த்தக ஒப்பந்தத்தின் விளைவாக இந்தியத் தீர்வை 3ஆம் திருத்தச் சட்டம் 1939ஆம் ஆண்டு

ஏப்ரல் மாதம் அமலாக்கப்பட்டது. இதன்படி அச்சுத் துணி களின்மீது, இடப்பட்டிருந்த தீர்வை 17½% மதிப்பீட்டுத் தீர்வை யாகக் குறைக்கப்பட்டு, பின்னர் 15% மதிப்பீட்டுத் தீர்வை அல்லது பவுண்டு ஒன்றுக்கு 2 அணு 7½ பைசாவாக விதிக்கப் பட்டது. இவை இரண்டினுள் எது அதிகமாக இருந்ததோ, அது வண்ணத் துணிகளுக்கு அமலாக்கப்பட்டு, இதர துணிகளின்மீது 15% மதிப்பீட்டுத் தீர்வை இடப்பட்டது. இச் சட்டம், 1942ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் 31ஆம் தேதி வரை தொடர்ந்து நடப்பில் இருந்து வந்தது.

இக்காலத்தில் ஏற்பட்ட பாதுகாப்பினல், இந்நாட்டில் இத் தொழில் சீரிய முறையில் முன்னேற்றம் அடைந்தது. நெசவாலே களின் எண்ணிக்கை 1936-ல் 379 ஆக இருந்து 1947-ல் 423ஆக அதிகரித்தது. உற்பத்தி, 1922-ல் 1,731 மிலியன் கெஜங்களி லிருந்து 1947-ல் 3,810 மிலியன் கெஜங்களாக அதிகரித்து, 1953-ல் 4,905 கெஜங்களாக அதிகரித்தது. இந்திய நெசவாலே கள் உள்நாட்டுத் துணித் தேவையில் 1931-32-ல் 38% ஐயும், 1940-41-ல் 64·7%ஐயும், 1951-ல் 78·8% ஐயும் பூர்த்தி செய்தன. 1939-லேயே இத்தொழிலுக்குப் பாதுகாப்புத் தேவை யற்ற ஒரு நிலைமை ஏற்பட்டது. எனினும், 1947ஆம் ஆண்டு மார்ச்சு மாதத்தில் சட்டப்படிப் பாதுகாப்பு நீக்கம் பெற்றது.

**(ii) இரும்பு எஃகுத் தொழில் :** 1924ஆம் ஆண்டில் இத் தொழிலுக்கு முதன் முதலாகப் பாதுகாப்பு வசதியளிக்கப்பட்டது. இரும்புத் தண்டவாளங்கள், எஃகுப் பொருள்கள், வாகன்கள் இவற்றை உருவாக்கும் நோக்கத்துடன், இந்தப் பாதுகாப்பு முறை அமைப்பில் வந்ததெனலாம். 1927ஆம் ஆண்டில் பலவித விகிதத் தில் தீர்வைகள் இடப்பட்டு, இங்கிலாந்திலிருந்து இறக்குமதியாகும் இரும்பு, எஃகுப் பொருள்களுக்குக் குறைந்த விகிதத்திலும், இதர நாட்டிலிருந்து செய்யப்படும் இறக்குமதிகளுக்கு, உயரிய விகி தத்தையும் இட்டனர். ஒட்டாவா வர்த்தக ஒப்பந்தத்தின் அடிப் படையில் இந்தியத் தீர்வைத் திருத்தச்சட்டம் 1932-ல் தோன்றியது. இதன்படி, பாதுகாப்புத் தீர்வையற்ற பண்டங்களுக்குச் சலுகைகள் காட்டப்பட்டன. உதவி ஒப்பந்தத்தின் அடிப்படையில் துத்தநாகத் தகடுகளுக்குத் தீர்வை இன்னதென்று ஒழுங்குபடுத்தப்பட்டது. இந்திய மூலப் பொருளிலிருந்து இங்கிலாந்தில் உற்பத்தியாகும் தகடுக்கு, டன் ஒன்றுக்கு ரூபாய் 30 விதிப்பது என்றும், இந்தியா அல்லாத இதர நாட்டு மூலப் பொருளிலிருந்து உற்பத்தியாகும் தகடுகளுக்கு ரூ. 53 வீதம் தீர்வை விதிப்பதென்றும், இதர நாட்டுத் தகடுகளுக்கு ரூ. 83 வசூலிப்பதென்றும் முடிவு செய்தார்கள்.

1934ஆம் ஆண்டில் வந்த இரும்பு எஃகுத் தீர்வைகள் சட்டப்படித் துத்தநாகத்தகடுகள் சம்பந்தமாக, 1932-ல் செய்த உதவி ஒப்பந்தத் தீர்வுகளைத் தேவையில்லையென நீக்கினர். தீர்வைகள் குறைந்ததன் காரணமாக, வருமான நிலையில் ஏற்பட்ட இழப்பை ஈடுசெய்ய, டன் ஒன்றுக்கு ரூ. 4 வீதம், இந்தியாவில் உற்பத்தி யான எஃகுப் பாளங்களின்மீது விதிப்பதென்றும், இறக்குமதி யாகும் எஃகுப் பாளங்களின்மீது சுங்கவரி விதிப்பதென்றும் அரசினர் முடிவு செய்தனர். இதன் பின் விளைவாக, ஆங்கில நாட்டு எஃகின்மீது 10% மதிப்பீட்டுத் தீர்வையும், இதர நாட்டு எஃகின்மீது ரூ. 25 முதல் 43 வரையும் விதித்தார்கள்.

1933-ன் ஆரம்பத்திலேயே இந்திய உற்பத்தி நிறுவனங்கள், உள்நாட்டுத் தேவையில் 72%வரை ஈடுசெய்ததைத் தீர்வைப் போர்டு கவனிக்காமல் இல்லை. வார்ப் பிரும்பு உற்பத்தி 1933-34-ல் 11,09,000 டன்களிலிருந்து, 1949-ல் 33 87,000 டன்கள் வரை அதிகரித்தது. 1939-லேயே பாதுகாப்புத் தேவையில்லை என்று தெரிந்தபோதிலும், சில உற்பத்திகள் நீங்கலாக இதர வகைகளின் மீது இடப்பட்டிருந்த பாதுகாப்பு 1947ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் முடிவில்தான் நீக்கப்பட்டது.

(iii) **இரசாயன உற்பத்தித் தொழில்கள் :** தீர்வைப் போர்டு கனரக இரசாயனத் தொழிலுக்கு 1929-லேயே பாதுகாப்பு அளிக்க முடிவு செய்து, அதற்கேற்ப 1931-ல் கனரக இரசாயனத் தொழில் பாதுகாப்புச் சட்டமொன்றை அமலாக்கி, மக்னீசியம் குளோரைடு, மற்றும் இதர கனரக ரசாயனங்களின்மீது, வெவ்வேறு விகிதங்களில் தீர்வை விதித்தது. மக்னீசியம் குளோரைடுக்குக் கொடுக்கப்பட்ட பாதுகாப்பு 1939ஆம் ஆண்டு மார்ச் 31ஆம் தேதி வரை நீடிக்கப் பட்டது. இதர ரசாயனங்களுக்கு 1933ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் 31ஆம் தேதிவரை நீடிக்கப்பட்டது. 1937ஆம் ஆண்டில் ஏற்பட்ட தீர்வைப் போர்டு, மக்னீசியம் குளோரைடு அல்லாத இதர ரசாயனங்களுக்கும் 1933ஆம் ஆண்டிலிருந்தே, தொடர்ந்து பாதுகாப்பு அளிக்கப்படவேண்டும் என்று கூறியது. இந்தியத் தீர்வைத் திருத்தச்சட்டம் (1939) ஒரு அந்தர் வெய்ட் எடைக்கு 12 அணு விகிதத்தில் குறைக்கப்பட்ட தீர்வையை அமுலுக்குக் கொண்டு வந்தது.

இந்த கனரகத் தொழில் முற்றிலும் புதியதே. இரண்டாம் உலகப் போரின் காலத்திலிருந்தே இது பெருமளவில் தோன்றி, 1946-க்குப் பின்னர் விரைவில் முன்னேற்றம் அடைந்துள்ளது.

(iv) **காகிதத் தொழில்:** எழுதுவதற்கு உகந்ததும், அச்சிடப் பயனுள்ளதுமான காகிதத்தின்மீது, ஏழாண்டுகள் வரை 1925-லிருந்து, பவுண்டு 1 க்கு 1 அணு வீதம் தீர்வை போடப்பட்டது. மூங்கில் காகிதத் தொழில் பாதுகாப்புச் சட்டம் 1932-ல் அமலுக்கு வந்தது. அதன்படி இத் தொழிலுக்கு 1939ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் 31ஆம்தேதி வரை பாதுகாப்பு அளிக்கப்பட்டது. இறக்குமதி செய்யப்படும் மூங்கில் கூழின்மீது டன் ஒன்றுக்கு ரூ. 45 தீர்வை விதிக்கப்பட்டது. இதன் மூலம் மரக் கூழைப் பயன்படுத்த ஊக்குவிக்கப்பட்டது. 1937-38-ல் வந்த தீர்வைப்போர்டு, 1939ஆம் ஆண்டிற்குப் பின்னரும், பாதுகாப்பு உதவியை நீக்கவேண்டும் என்றும் முடிவு செய்தது. அரசினர் இந்தப் பரிந்துரையை ஏற்றுக்கொண்டு, பாதுகாப்பு, விகிதத்தைச் சற்றுக் குறைவாக அமைத்தனர். 1947ஆம் ஆண்டு மார்ச்சு மாதத்தில் காகிதத் தொழிலுக்குக் கொடுக்கப்பட்டிருந்த பாதுகாப்பு வசதியும் நீக்கப்பெற்றது.

1923ஆம் ஆண்டு முதல் இத் தொழில் மிகுந்த வளர்ச்சி பெற்றிருக்கிறது. 26,284 டன் காகித உற்பத்தி செய்யும் ஆறு தொழிற்சாலைகளிலிருந்து, 1949-ல் 1,03,195 டன்கள் உற்பத்தியாகும் பதினாறு தொழிற்சாலைகள் தோன்றியுள்ளன என்பதே இதற்குச் சான்றாகும். பாதுகாக்கப்பட்ட வகைகளில் தோன்றிய உள்நாட்டு உற்பத்தியில் 71%ஐ 1931 ஆம் ஆண்டிலிருந்தே இந்தியத் தொழிற்சாலைகள் ஈடுபடுத்தியுள்ளன.

(v) **தீப்பெட்டித் தொழில்:** இத் தொழிலின் நிலையே தனிப்பட்டதாகும். ஸ்வீடன் நாட்டுக் கம்பெனியுடன் தொடர்புடைய தி வெஸ்டர்ன் இன்டியா மாட்ச் கம்பெனி (விம்கோ) 11 தொழிற்சாலைகளை உடையது. 1948-ல் இவைகளில் 5 தொழிற்சாலைகள் 18 மிலியன் குரோஸ் தீக்குச்சிகளை உற்பத்தி செய்தன. ஏனைய 200 தொழிற்சாலைகளும் சேர்ந்து, 7·8 மிலியன் தீக்குச்சிகளையே உற்பத்தி செய்தன. இத் தொழிலுக்கு 1928-ல் பாதுகாப்பு உதவி அளிக்க ஒவ்வொன்றிலும் 100 குச்சிகள் கொண்ட ஒரு குரோஸ் தீப்பெட்டிக்கு ரூபாய் 1½ இறக்குமதித் தீர்வை விதிக்கப்பட்டது. தோய்க்கப்பட்ட தீக்குச்சிகளின்மீது பவுண்டு ஒன்றுக்கு 6 அணு வீதமும், தோய்க்கப்படாதவைகளின்மீது பவுண்டுக்கு 4½ அணு வீதமும் தீர்வை போடப்பட்டது. வன்மையான பாதுகாப்பரண் ஏற்படுத்திய காரணத்தினால் உள்ளூர்த் தேவைகளை இது பூர்த்தி செய்தது. இத் தொழிலுக்கு வேண்டிய மூலப்பொருள்களை அயல் நாட்டினின்று இறக்குமதி செய்வது நின்றுபோய்விட்டது. பாதுகாப்பின் பலனை முழுவதும் அனுபவித்தது ஸ்வீடன் தேசத்து நிறுவனமே ஆகும்.

(vi) **கண்ணாடித் தொழில்:** தகடுகள், மணிகள், வளைகள், பலகைகள், செயற்கை முத்துக்கள், இவைகள் அனைத்திற்கும் பாதுகாப்பு வசதி அளிக்கவேண்டுமென்று தீர்வை போர்டார், 1932-ல் சிபாரிசு செய்தனர். 1932 முதல் பாதுகாப்பு உதவி அளிக்கவேண்டுமென்ற போர்டாரின் பரிந்துரையை அரசினர் ஏற்க மறுத்து, 1935ஆம் ஆண்டுவரை வாளாயிருந்தனர். இத் தொழில் தனித்து, இயங்கப் போதிய சக்தி இல்லை என்றும் சோடா ஆஷ் (soda ash) இறக்குமதியை எதிர்பார்த்து இது நடக்கிற காரணத்தால், பாதுகாப்பு அளிக்க அவசியமில்லை என்றும் கூறியது. உள் நாட்டில் சோடா உற்பத்தி உண்டானால் அவ்வமயம் இதற்குப் பாதுகாப்பு வசதி அளிப்பதாக உறுதி கூறியது. ஆயினும் தற்காலிகமாக சோடா ஆஷ் இறக்குமதித் தீர்வையில் தள்ளுபடி அளித்தது.

**26. அண்மையில் ஏற்பட்ட மாறுதல்கள்:** தீர்வைக் குழுவினர் பரிந்துரை செய்தபடி, பாதுகாப்பு வசதி அளிப்பதற்கு உள்ள நியமங்களைச் சற்று எளிதாக்க வேண்டுமென்று இரண்டாம் உலகப் போர் நடந்த காலத்தில் தீர்மானிக்கப்பட்டது. 1940ஆம் ஆண்டு ஜூன் மாதத்தில் இந்திய அரசினர் விட்ட வெளியீட்டில் யுத்த காலத்தில் ஒரு சில தொழில்கள் மிகவும் தவிர்க்க இயலாதவை என்ற காரணத்தால் அவைகளுக்குப் போர்க்காலத்தின் பின்னர் கூடப் பாதுகாப்பு அளிக்கப்படும் என்று உறுதி கூறியது. இம் மாதிரி உறுதியளிக்கப்பட்ட தொழில் எஃகுக் குழாய்களும் ட்யூபுகளுமே ஆகும். 1945-ல் தற்காலிகத் தீர்வைபோர்டு ஒன்று நியமனம் செய்யப்பட்டு நிரந்தர போர்டு ஒன்று உருவாகும்வரை இத் தொழில்களுக்குப் பாதுகாப்பு அளிக்கும் நிலைமையைப் பற்றி ஆய்வு செய்தது. பல்வேறு தொழில்களுக்குத் தீர்வைப் பாதுகாப்பு மூன்று ஆண்டுகளுக்கு மேற்படாமல் கொடுப்பதற்கு இதற்கு அதிகாரம் வழங்கப்பட்டது.

1947-ல் தீர்வை போர்டு மாற்றியமைக்கப்பட்டது. தற்காலிக போர்டின் பணிகளைத் தொடர்ந்து கீழ்க்கண்ட பொறுப்புகளையும் இது ஏற்றுக் கொண்டது. அவை வருமாறு: (1) இந் நாட்டில் உற்பத்தியாகும் பொருளின் அடக்கவிலை இன்னதென்றும் அதன் மொத்த விலை, நிகர விலை எவ்வாறு உள்ளதென்றும் அது சம்பந்தமான தகவல்களை அரசினருக்குச் சேகரித்துக் கொடுக்கவும் இதற்கு அதிகாரம் அளிக்கப்பட்டது. (2) அயல் நாடுகளிலிருந்து வரும் பண்டங்கள் நம் நாட்டில் திணிக்கப்படுமாயின் அவ்வமயம் எவ்வகைகளால் இந்தியத் தொழில்களைப் பாதுகாப்பது என்று

அரசினருக்குப் பரிந்துரை செய்யவேண்டும். (3) பாதுகாக்கப் பட்ட தொழில்களின் முன்னேற்றம் எவ்வாறு உள்ளதென்றும் அவைகளுக்கு வகுத்த முறைப்படி உரிய பாதுகாப்பு அளிக்கப் பட்டனவா என்றும், அதன் விளைவாக அவ்வகைத் தொழில்கள் நன்கு நடைபெறுகின்றனவா என்றும் கண்காணித்தல் வேண்டும்.

**27. தீர்வைக் குழுவினர், 1950:** 1949ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 28 ஆம் தேதி அரசினர் செய்த பிரேரணைப்படி அமைக்கப் பட்ட தீர்வைக் குழுவினர், தற்காலீக போர்டுகள் இருப்பதைவிட நிரந்தரக் குழுவாக அமைப்பது நலம் என்றும் அம்மாதிரியான குழுவிற்கு அதிகப்படியான பொறுப்புகளும் அதிகாரங்களும் கொடுத்து நாட்டின் பொருளாதார வளர்ச்சியைக் குறித்துப் பல்வேறு தொழில்களுக்குப் பாதுகாப்பு வசதியளிக்க இவர்கள் ஏற்பாடு செய்யவேண்டுமென்றும் கருதினர். நடப்பில் உள்ள நிலைமையில் இக் குழுவினர் செய்த பரிந்துரைகள் கீழே விவரிக்கப் பட்டு இருக்கின்றன.

(1) திட்டம் வகுக்கப்பட்ட பகுதியின் பொருளாதாரத்தை அனுசரித்துத் தொழில்களைக் கீழ்க்கண்ட வகைகளில் பிரிக்கலாம்: (அ) நாட்டின் பாதுகாப்பும், இதர தவிர்க்க இயலாத் தொழில்கள், (ஆ) அடிப்படையும் திறவுகோல் போன்றதுமான தொழில்கள், (இ) இதர தொழில்கள். (அ) பிரிவில் வரும் தொழில்கள் தேசீய வளர்ச்சியின் அடிப்படையில் உள்ளதால் எக் காரணத்தைக் கொண்டும் அவைகளைப் பாதுகாக்க வேண்டியது இன்றியமை யாதது. (ஆ) பிரிவில் வரும் தொழில்களுக்கு மட்டும் எவ்வளவு பாதுகாப்பு வசதிகளை அளிக்கவேண்டும் என்றும், தீர்வை விதிப்பு அதிகாரி சட்டதிட்டங்களை அனுசரித்துத் தீர்வை இவ்வளவு என்று வரையறுத்தும் பாதுகாப்புக் கொடுக்கப்பட்ட தொழில்கள் சீரிய முறையில் பயன் பெற்று வருகின்றனவா என்றும் முடிவு செய்வார். (இ) பிரிவில் வரும் தொழில்களுக்குப் பாதுகாப்பு அளிப்பதுபற்றிக் கீழே விவாதித்து இருக்கிறோம். பொருள் வசதி உள்ள ஒரு தொழிலுக்கு அதன் அடக்க விலை இன்னதென்றும், அத்தொழில் பாதுகாப்புதவியின்றி, எவ்வளவு காலம் நடக்கு மென்றும் தேசீய நிலைமையில் அவைகளுக்குப் பணவசதி அளிக் கலாமா என்பதை நேர்முக, மறைமுக ஆதாயத்தை அனுசரித்தும், பாதுகாப்புச் செலவு இவ்வளவு ஆகுமென்று வரையறுத்தும், அரசினர் கொடுக்கும் உதவி பயன் உள்ளதா என்றும் முடிவு செய்யவேண்டும்.

(2) ஏற்றுக்கொள்ளப்பட்ட திட்டங்களில் சேராத சில தொழில்களைப் பற்றித் தீர்வைக் குழுவினர் ஆய்வுகள் செய்து,

பாதுகாப்பு வசதி அளிப்பதா வேண்டாமா என்று முடிவுசெய்து அரசினருக்குப் பரிந்துரை செய்வார்கள்.

(3) ஏற்றுக்கொள்ளக்கூடாத் திட்டமொன்றிருப்பின் அவ் வமயம் கீழ்க்கண்டவாறு வசதியளிக்கப்படலாம். (அ) என்ன செலவாயினும் சரி, தேசீய நிலைமையையொட்டி, பாதுகாப்புக்கும் இதர தொழில்களுக்கும் வசதியளிக்கப்படவேண்டும். (ஆ) இதர தொழில்களுக்கு அளிக்கப்படும் வசதி அல்லது வகுக்கப்படும் முறை முன்கூறிய (1) பிரிவில் கூறியதுபோல் அமையும்.

**28. பாதுகாப்புக் கொள்கையைப் பற்றிய சில தனிப்பட்ட கருத்துரைகள் :** (1) ஆக்கப்பொருள் கிடைக்கும் நிலைமை; உள்ளூரிலேயே ஆக்கப்பொருள்கள் எளிதில் கிடைப்பின், அவை களுக்குப் பாதுகாப்பு வசதி அளிக்கப்படவேண்டும் என்ற நியதி இல்லை. மேற்படித் தொழில் இதர பொருளாதார வசதிகள் பெற்றிருப்பின், குறிப்பாக, உள்ளூர்ச் சந்தை, தொழிலாளர் வசதி, இவைகள் ஏற்படின் பாதுகாப்பு அவசியம் இல்லை.

(2) புதிய ஆரம்ப நிலையில் உள்ள தொழில்களுக்குப் பாது காப்பு வசதி இன்றியமையாதது. புதிய தொழில் தோன்று முன்னரே, அவைகளுக்குப் பாதுகாப்பு அளிக்கப்படவேண்டும். அதிக மூலதனத்துடனும், தக்க தொழில் நுட்ப வசதிகளுடனும் பல காலமாக அயல் நாடுகளில் நன்கு நிலைபெற்ற தொழில்கள் இவை களுடன் போட்டி போட ஆரம்பிக்கும் என்பதில் ஐயமில்லை.

(3) விவசாயப் பொருள்கள் : நாட்டில் போதிய அளவு பாதுகாப்புப் பெறுதல் வேண்டும் குறிப்பாக, ஒரு சில விவசாயப் பொருள்களுக்கே பாதுகாப்பு அளித்தல் மேலாகக் கருதப்படும். இதற்கான கொள்கை வருமாறு : (அ) இத் தொழிலுக்கான கச்சாப் பொருள் வசதி, (ஆ) இத் தொழிலில் ஈடுபடும் மக்களின் எண்ணிக்கை, இதற்களிக்கப்படும் பாதுகாப்பு வசதி, தற்காலீக மாகக் குறுகியகால வரையறையுள் அமைதல் வேண்டும். சற்றேறக்குறைய 5 ஆண்டுகளுக்கு மேலாக இருக்கக்கூடாது என்று கருதப்படுகிறது. பாதுகாப்பு முறையும் விவசாயத்தொழில் வளர்ச்சியும் ஒன்றையொன்று தொடர்ந்தே அமைதல் வேண்டும். இப் பண்டங்கள் உற்பத்தியில் தொழில் நுட்ப வளர்ச்சி எவ்வாறு உள்ளதென்பதை அரசினருக்கு அவ்வப்பொழுது தீர்வை போர்டு அறிவிக்க வேண்டும்.

(4) பாதுகாக்கப்பட்ட பண்டங்களின்மீது உள்நாட்டுத் தீர்வை விதிப்பது நேர்மை அன்று. பட்ஜெட் முறைக்காக வென்றும், இதர துறைகளினின்று வருமானம் கிடைக்காது என்ற காரணத்தால்தான் இது அனுமதிக்கப்படுகிறது.

(5) சட்டத்தின் மூலம் காப்பாற்றப்படும் தொழில்களுக்கு வேண்டிய மூலப்பொருள்களுக்கு விலை இவ்வளவு என்று வரையறுக்கவேண்டும். இது சம்பந்தமாகத் தனித்தனியே ஒவ்வொரு இராச்சியமும் விலைக் கட்டுப்பாடு செய்தால் அநேக இடர்ப்பாடுகள் உண்டாகக்கூடும். பாதுகாப்பு முறைத் தீர்வையினின்று கிடைக்கும் வருமானத் தொகையிலிருந்து, ஆண்டுதோறும் ஒரு தனிப்பட்ட தொகையை வளர்ச்சி நிதியாக அமைத்து, அதனின்று தொழிலுக்கான நிதி உதவியளிக்க ஏற்பாடு செய்ய வேண்டும். தொழில் வசதிக்கான பின் கவனிப்பு இலாகா ஒன்று நிறுவப்பட்டு, அது தொழிலில் முன்னேற்றத்திற்கு வேண்டிய அளவு உதவியளித்து விரைவில் முன்னேற்றத்திற்கு வேண்டிய வசதிகளையளிக்க வேண்டும். உள்நாட்டு உற்பத்தித் தொழில்களில் எப்போதாவது உற்பத்தியின் அளவை இவ்வளவென்று திட்டப்படுத்தலாம் அல்லது கட்டுப்படுத்தலாம். எதிர்பாராது மிதமிஞ்சிய இறக்குமதி ஏற்படின், தாற்காலிக அளவின் கட்டுப்பாடு ஏற்படுவதில் தவறொன்றுமில்லை.

(6) **மானிய வசதிகள் :** பொதுவாக, பாதுகாப்பைவிட, மானியம் கொடுத்தலே கீழ்க்கண்ட அமைப்புகளில் நல்லது எனக் கருதலாம். (அ) உள்ளூர் உற்பத்தி உள்ளூர்த் தேவைகள் அனைத்தையும் பூர்த்தி செய்யாமல் ஒரு பகுதிக்கு மட்டும் உதவியாக இருப்பின், (ஆ) உற்பத்தியாகும் பண்டங்கள் கச்சாப் பொருளாகவே இருந்தால், (இ) உற்பத்தியின் சில தரங்களுக்கும், குறிப்பிட்ட எடை அளவிற்கும் ஏற்ப, இந் நாட்டில் உற்பத்தியாகுமெனில், அவைகளுக்குப் பாதுகாப்பு அளிக்க வேண்டியது மிகவும் இன்றியமையாதது.

(7) **ஒன்று திரட்டுதல் :** உற்பத்தியாகும் பொருள்கள் மிகவும் சிறந்தவையாகவும், உயர்ந்த முறையில் தரப்படுத்தப்பட்டவையாகவும் இருப்பின், அவைகளை ஒன்றுபடுத்த வேண்டுவது அவசியம். வர்த்தகத் தீர்வையிடும் அதிகாரி, எவ்வகைத்தொழில்களுக்கு ஒருங்கமைப்புச் செய்தலையும், திரட்டுதல் முறையையும் கையாளவேண்டுமென்பதை முடிவுசெய்வார். ஒரு பொருளின் உற்பத்தி விலை அல்லது அடக்கவிலை இன்னதென்று ஆராயும் போது எல்லாத் தொழில்களுக்கும் ஒரே மாதிரியான நியமங்களை

மேற்கொள்வார். ஒரே மாதிரியான முறையைக் கையாள விருப்பப்படின் தீர்வைவிதிக்கும் அதிகாரி தொழிலில் ஈடுபட்டுள்ள பல்வேறு பொறுப்புள்ளவர்களைக் கலந்து ஆலோசனை நடத்தி, நிர்வாகப்பதிலாளுக்கு எவ்வளவு ஊதியம் கிடைக்கும் என்பதையும் கண்ணுற்று, அடக்க விலையை இன்னதென்று கணக்கிடக் கொடுக்கப்படும் ஊதியம் சரிதானா என்பதையும் ஆராயக் கூடும். பாதுகாக்கப்பட்ட தொழிலில் இடப்பட்ட மூலதனத் திற்கு ஏற்பப் பெறக்கூடிய ஆதாயம் எவ்வளவு என்பதைத் தீர்மானிக்கவும், இடப்பட்ட மூலதனத்தின் விகிதம் இயல்பானது தானா என்பதைச் சீரிய முறையில் ஆராய்ச்சி நடத்தவும் வேண்டியது அரசினரின் பொறுப்பாகும். உள்நாட்டு உற்பத்தி யின் மீது நுகர்வாளர்களுக்கு வெறுப்பு[1] தோன்றக்கூடிய நிலைமை யில் இருப்பின், அத் தொழில்களுக்குப் போதிய அளவு ஆதாயத் தையும், பாதுகாப்பு உதவியுடன் சேர்க்கும்.

(8) ஸ்டோர் கொள்முதல் கொள்கை சம்பந்தமாக, அரசினர் உள்நாட்டுத் தொழில்கள் அனைத்திற்கும் அயல் நாட்டுப் பொருள் களைவிட எவ்வளவு சலுகை அளிக்கவேண்டுமென்பதைக் கீழ்க் கண்ட முறைகளால் முடிவு செய்யவேண்டும். (அ) இந்தியத் தரப்படுத்தும் நிறுவனம் செய்யும் சிபாரிசை ஒட்டி நடந்துவரும் தொழில்களுக்கு முதல் சலுகை அளிக்கவேண்டும். (ஆ) இந் நாட்டுக் குடிசைக் கைத்தொழில்களும் சிறுதொழில்களும் அரசினர் சட்டதிட்டங்களை அனுசரித்து நடந்துவரின் அவைகளுக்கு உயரிய விகிதத்தில் முதல் தரமான பாதுகாப்பு அளிக்கவேண்டுவது அவசியம் ஆகும்.

(9) பாதுகாப்பு அளிக்கப்படும் தொழில்களுக்கு, விலைக் கொள்கை உற்பத்தி, தரம், தொழில் நுட்ப முறைகளைக் கையாளுதல், ஆராய்ச்சி, தொழில் கற்கும் மாணவர்களுக்குக் கொடுக்கவேண்டிய பயிற்சி, தொழிலாளர்களின் தரம், இவை சம் பந்தமாகத் தக்க முடிவுகள் செய்யவேண்டும். இம் முடிவுகளை அரசினரின் ஆணையெனக் கருதி, தீர்வை விதிக்கும் அதிகாரிகள் நடக்கவேண்டும். தொழில்கள் இயல்பான முறையில் இவைகளை நடத்திவருதல் வேண்டும். பாதுகாப்பைக் கோரிவரும் தொழில் களுக்கு இம்முறையில் கட்டுப்பாட்டுத் திட்டங்கள் வகுத்து அவை களுக்கேற்ப எவ்வகையில் தங்களுக்குப் பொறுப்புகள் உள்ளன வென்றும், எவ்வளவு நிதி செலவிட வேண்டுமென்றும் தீர்மானிக்க வேண்டியது அரசினரின் கடமையாகும்.

1. தவறான எண்ணத்தால் அயல்நாட்டுச் சரக்குகள் மிகவும் உயர்ந்தவை; உள் நாட்டு உற்பத்தி மிகவும் மட்டமானது என்று நினைக்கும் மக்களின் வெறுப்பை இங்கு எடுத்துக்காட்டியுள்ளோம்.

**29. வர்த்தகப் பாதுகாப்புக் குழுவினர், 1952:** 1952-ல் வர்த்தகப் பாதுகாப்பு போர்டுக்குப் (Tariff Board) பதிலாக வர்த்தகப் பாதுகாப்புக் குழுவினர் (Tariff Commission) நியமிக்கப்பட்டதும், போர்டு ஐந்து தொழில்களுக்குப் பாதுகாப்புக் கொடுப்பதைப்பற்றிய பிரச்சினையைக் குழுவினரின் தீர்ப்புக்கு விட்டு விட்டது. அவையாவன: (1) கம்பளிப் பொருள்கள், (2) இரும்பு, எஃகு பால் பேரிங்குகள் (ball-bearings), இரும்புப் பூட்டுகள், (3) டிரான்ஸ் பார்மர்கள் (Transformers), (4) சணல் நாரால‌ான பொருள்கள், (5) சிறிய கருவித் தொழில்கள். மேலும் 42 தொழில்களுக்குப் பாதுகாப்பு அளிப்பதைப் பற்றியும் 3 தொழில்களுக்கு விலைகளின் ஏற்றத் தாழ்வைப் பரிசீலிக்கவும் குழுவுக்கு உரிமையளித்தது. 1954 ஆம் ஆண்டு ஜனவரி மாதம் முதல் தேதி முதல் எழுதும் மை, எழுதுகோல், வற்றிய மின்கலங்கள், (dry batteries) அயத்தாதுள்ள மணல் சம்பந்தப்பட்ட தொழில்கள் இவைகளுக்குக் காட்டப்பட்டுவந்த சலுகைகள் நீக்கப்பட்டு, பாதுகாப்பு அளிப்பதையும் நிறுத்தப்பட்டது. பிளாஸ்டிக் பொத்தான் தொழில் நீங்கலாக இதர பொத்தான் தொழில்களுக்கு அளித்து வந்த பாதுகாப்பு எடுக்கப்பட்டது. சணல் நார் சம்பந்தப்பட்ட தொழிலைப்பற்றி இக் குழுவினர் இறக்குமதித் தீர்வை விதிப்பினைக் குறைத்துக் கச்சாப் பொருள்களை எளிதில் கிடைக்கும்படிச் செய்து விட முயன்றனர். இத் தொழில்கள் அனைத்திலும் பயன்படுத்தப்படாத ஒரு பகுதி வீணாகி உள்ளதென்றும் அவற்றைப் பயனுள்ள முறையில் ஈடுபடுத்த வேண்டும் என்றும் கூறியுள்ளனர். எல்லா ரகங்களாலுமான சணல் பொருள்கள் கிட்டத்தட்ட 1,40,000 கெ. தேவைப்படுகின்றன. மும்முறை ஷிப்ட்டு (3 shift) வீதம் ஆறு மில்லியன் கெ. உற்பத்தி செய்ய வசதியுள்ளது. இதேபோலக் குளுகோஸ் தொழிலில் ஆண்டுதோறும் ஏற்படும் தேவை 3,500 டன்கள். ஆயினும், உற்பத்திப் பெருக்கோ 5,350 டன்கள் அளவில் ஆண்டுதோறும் வெளியாகும். மரத் திருகாணித் தொழில் போதிய பாதுகாப்பைப் பெற்று முன்னேற்ற மடைந்துள்ளது எனலாம். 1946-ல் முதன் முதலாகப் பாதுகாப்புக் கொடுத்தவுடன் 7 தொழிற்சாலைகள் இருந்தன. 1953-ல் 37 தொழிற்சாலைகளாக அதிகரித்தன. மேலும், 8 புதிய தொழிற்சாலைகள் தோன்றி, அவைகளும் உற்பத்தியில் ஈடுபடத் தொடங்கியுள்ளன.

இத் தொழில்களின் தரம் சம்பந்தப்பட்ட வகையில் திருப்திகரமான முன்னேற்றம் காணப்படவில்லை. குளுகோஸ், உலர்ந்த மின்கலங்கள், எழுதுகோல்கள் இவைகளில் நல்ல முறையில் தரத்தில் முன்னேற்றம் காணப்படுகின்றது என்று குழுவினர் கருதி

வருகின்றனர். எழுதும் மைத்தொழிலில் இன்னும் பெரிய அளவில் முன்னேற்றம் ஏற்படக்கூடும் என்றும் குழுவினர் எதிர்பார்க்கின்றனர்.

தொழில்களின் எல்லையளவுவரை உற்பத்தி செய்தால்தான் அடக்கவிலை குறையும். அவ்வாறு ஏற்படாதவரை அடக்கவிலை குறைவது மிகவும் கடினம். போதிய அளவு தேவை அதிகரிக்காததற்குக் காரணங்களாவன: (1) இந்தியத் தொழில்களின்மீது ஏற்பட்டுள்ள வெறுப்பு, (2) அரசினர் இவைகளுக்கு எவ்விதமான ஊக்கமும் அளிக்காதிருத்தல். இந் நாட்டிலுள்ள தொழில்கள் உயர்ந்த பண்டங்களை உற்பத்தி செய்யின், தேவைகள் அதிகரிக்கக்கூடும். அரசினர் தங்கள் கொள்கையை மாற்றி, ஊக்கமளிக்கத் தொடங்கக்கூடும். ஆயினும், பொதுமக்கள் இதை வெறுப்புடன் நோக்காதிருக்க வேண்டுமானால், இந்த நாட்டுத் தொழில்கள் அயல் நாட்டுத் தொழிலில் தோன்றும் பொருள்களுடன் போட்டியிட்டால்தான் முன்னேற்றம் காணும் எனலாம்.

வர்த்தகப் பாதுகாப்புக் குழுவினர் சதா ஓய்வு ஒழிவின்றி, எந்தத் தொழில்களுக்குப் பாதுகாப்பு அளிக்கலாம் என்று இடைவிடாது ஆலோசித்து வருகின்றனர். வசதியளிக்கப்பட்ட பழந் தொழில்களின் முன்னேற்றத்தைப் பற்றிப் பரிசீலனை செய்தும், அரசினர், புதிய தொழில்களுக்குப் பாதுகாப்பு அளிப்பதைப் பற்றித் தீவிர ஆலோசனை செய்தும் வருகின்றனர். மேலும், நடப்பிலுள்ள தீர்வை முறைகளைப்பற்றி ஆராய்ந்து வருகின்றனர். இது நிரந்தரக் குழுவாக இருப்பதாலும், சட்டப்படி அமைக்கப்பட்டதாலும் இது கையாளும் முறைகள் ஆய்ந்து முடிவுசெய்யப்பட்டு, ஒழுங்கு பெற அமைந்துள்ளன. முன்னரிருந்த தற்காலீக போர்டுகள் அதிக விரைவாகவும், அவசரமாகவும் கவனித்து வந்தன. நாட்டின் பொருளாதாரக் கொள்கை, தீர்வை முறை இவைகளைப்பற்றி ஆழ்ந்த முறையில் நாட்டிற்கு இக் குழுவினர் முடிவு கூறுவர். எனவே, நாட்டின் திட்டம், வளர்ச்சி இவை சம்பந்தமான தகவல்களில் இக்குழு ஈடுபட்டுள்ளதில் ஐயமொன்றுமில்லை எனலாம்.

# 15. தொழிலாளர்

நாடுபெயரும் தன்மையுள்ள இந்தியத் தொழிலாளி : இந் நாட்டுத் தொழிலாளர்களில் பெரும்பாலோர் தங்கள் கிராமத்துடன் தொடர்பு வைத்துக்கொள்கின்றனர். ஒரு சில ஆண்டுகள் கழித்துத் தங்கள் கிராமங்களுக்குப் போய் வருவார்கள். கிராமத்தினின்று நகரத் தொழிற்சாலைகளுக்குப் போகும் தொழிலாளிகள் தங்கள் குடும்பத்தினரைக் கிராமங்களிலேயே விட்டுவிட்டு நகர்ப்புற மெய்துவர். ஒருவேளை, தொழிலாளி தனது மனைவியுடன் நகரத்திற்குப் போக நேரிட்டால், பின்னர், மனைவி பிள்ளைப்பேறு அடைந்த காரணத்தால் அவளைத் தனது கிராமத்திற்கு அனுப்பி வைக்கிறான். தன் சிற்றூரில் நடைபெறும் விவசாயத்தை முன்னிட்டு, தொழிலாளி தனது கிராமத்திற்குத் திரும்பி விடுகிறான். இவ்வாறு அடிக்கடி நகரத்தினின்று கிராமத்தை நோக்கிப் போகும் தொழிலாளி விவசாயத்தின் காரணமாகப் போகிறான் என்று கூறினால் அது சரியன்று. அவன் விடுமுறையை விரும்பியே போகிறான் எனலாம். தனது ஊரிலிருந்து பணம் வருமென்று அவன் எதிர்பார்ப்பதில்லை. அதற்குப் பதிலாக அவன் தனது வருவாயிலிருந்து தனது கிராமத்திலிருக்கும் தன் குடும்பத்தினருக்கு பணம் அனுப்புகிறான். மேனாட்டுத் தொழிலாளருடன் ஒப்பிட்டுப் பார்த்தால் இந் நாட்டுத் தொழிலாளர்கள் நாடு பெயரும் தன்மையராவர். இவர்கள் அடிக்கடி வந்து போய்க்கொண்டு இருக்கிறார்கள். சிறிது காலமாக இந்த நிலையில் மாறுதல் ஏற்பட்டிருக்கிறது. தொழில் நகரங்களிலேயே இவர்கள் நிரந்தரமாகத் தங்கி விடுகின்றனர். ஆயினும், நாடு பெயரும் தன்மை இன்னும் முழுவதும் மறைந்தபாடில்லை.

விவசாயத்தில் ஈடுபட்டு ஒரு சிலர் தங்கள் வருமானத்தை அதிகமாக்கும் நிமித்தம் நகரங்களில் உள்ள தொழிற்சாலைகளில் தொழிலாளிகளாகப் பணிபுரிகின்றனர். இவர்களில் பெரும்பாலோர் தொழில் கேந்திரங்களையே தங்கள் நிரந்தர இருப்பிடமாக்கிக்

கொண்டனர். இவர்கள் அடிக்கடி இடம் மாறிக் கொண்டிருப்பதால் இவர்கள் தற்காலிகமாக வேலைக்கு அமர்த்தப்பட்டவர்களாகக் கருதப்படுகின்றனர்.

மக்கள் தொகை பெருகிய அளவில் உணவுப் பெருக்கம் ஏற்படாத காரணத்தால் நகரங்களை நோக்கிக் கிராம மக்கள் வந்தடைகின்றனர். இவ்வாறு வந்தடையும் மக்கள் நிலமற்ற தொழிலாளிகளாவர். பயனற்ற நிலம் பெற்ற நிலக்கிழார் தலைமுறையாகச் செய்துவந்த தொழிலை விட்டுவிட்டு நகர்ப்புறங்களில் உள்ள தொழிற்சாலைகளில் பணி செய்ய ஆரம்பிக்கின்றனர். நம் நாட்டில் உள்ள அநேக தவறுகளால் நம் நாட்டுத் தொழிலாளர் அடிக்கடி அலைந்துதிரியும் நிலையை எய்துகின்றனர். பொருளீட்டித் தனவந்தராக வேண்டுமென்ற நோக்கத்துடன் நகரத் தொழிற்சாலைகளை வந்தடைகின்றனர். கிராமங்களில் உள்ள கடன் கொடுத்தவரின் உடும்புப் பிடியினின்று தப்பி ஓடும் நோக்கத்துடன் நகரத் தொழிற்சாலைகளுக்கு வருகின்றனர். சிற்றூர்களில் உள்ள தாழ்த்தப்பட்டோர், சமூகக் கொடுமைகளுக்கு இலக்காகாது இருக்கவும், அதிகப்படியான பலவீனத்தினின்று நீக்கப்பெற்று, யாதொரு இடையூறுமின்றி நகரப் பகுதிகளுக்கு வருகின்றனர். இவற்றையெல்லாம் ஆராய்ந்து நோக்கின் தொழிற்குழுவினர் (Labour Commission) கொண்டுள்ள கருத்தைச் சரியெனக் கூறலாம். 'வாய்க்காலின் ஒரு புறத்தினின்று உந்தித் தள்ளப்படுவது போன்று கிராமங்களினின்று தொழிலாளர்கள் நகரப் புறங்களுக்குத் தள்ளப்படுகின்றனர். இது நாடு பெயருதலுக்குத் தக்க சான்றெனலாம். நகரத்தின் கவர்ச்சியைக் கண்ணுற்றுக் கிராமவாசி வருவதில்லை. ஒப்பற்ற குறிக்கோளின் நிமித்தம் ஒருவேளை நகருக்கு வரக்கூடுமோ என்றால் அவ்வாறு ஏற்படுவதில்லை எனலாம். நகரத்தின் ஆடம்பரம் அவனை வசீகரிப்பதில்லை. தன் வாழ்க்கைக்குத் தவிர்க்க இயலாப் பொருள்களைச் சேகரிப்பதற்கு மட்டுமே அவன் நகரங்களுக்கு வருகிறான். தேவைக்கு வேண்டிய உணவும், உடுக்க நல்ல உடையும், வசதிக் குறைவற்ற இருப்பிடமும் தன் கிராமத்திலேயே செவ்வனே அமைந்துவிட்டால் எந்தத் தொழிலாளியும் நகரத்திற்கு வர விழையமாட்டான். அவர்கள் நகர்ப்புறத்திற்குத் தள்ளப்படுகிறார்கள்; ஆனால், நகரங்களால் இழுக்கப்படுவதில்லை.'

தொழில் நகரங்களில் தொழிலாளிகளின் வாழ்க்கை விருப்பமின்றியும் வெறுக்கத்தக்க முறையிலும் நடப்பதற்குக் காரணங்களை ஆராய்வோம் : (1) முன் பின் அறியாத பழக்க வழக்கங்களுக்கு அவன் இலக்காகிறான். (2) மொழியின் காரணத்தால் ஏற்படும் இடையூறு. (3) சாக்கடை, துர்நாற்றம் முதலிய

சுகாதாரமற்ற சிறிய குடியிருப்புகளில் வசிப்பது. (4) கிராமத்தில் மன நிம்மதியுடன் வாழ்ந்த பெரிய குடும்பம் பிரிக்கப்பட்டுச் சிதறிப் போதல். (5) சுதந்தரமற்று, ஓய்வின்றி, அடக்குமுறையின் பிடியில் தத்தளித்து, தொடர்ந்து உழைப்பது. (6) நகரத்துள் காணும் தீய செய்கைகள் பல கிராமத் தொழிலாளியை மயக்கி அவனைத் தீய வழியில் செலுத்திவிடுகின்றன. அதனின்று அவனால் ஈடேற முடிவதில்லை. கிராமத்தில் தன் இச்சைப்படி வாழ்ந்த தொழிலாளி நகரத்தில் கூட்டு வாழ்க்கையின் சட்டதிட்டங்களுக்கும் கோட்பாடுகளுக்கும் உள்ளடங்கி நடக்கவியலாது தவிக்கிறான்.

அலைந்து திரியும் தன்மையுள்ள தொழிலாளர் அநேக வசதிக் குறைவினால் அவதியுறுகின்றனர். தன் கிராமத்திற்கும் நகரத் தொழிற்சாலைக்கும் இடையே அடிக்கடி போய்வந்துகொண்டிருக்கிற தொழிலாளிக்கு வேலையில் அக்கறை தோன்றுவதில்லை. அவன் தொழிலில் நிரந்தரமாகத் தங்காமல் இருப்பதால் ஊக்கமின்றி யிருப்பான். மேலும் தொழிலில் அவனை வல்லுநராக்க முடியாது அரைகுறைப் படிப்பினையே கொடுக்க முடியும். இத்தொழிலாளர்கள் அடிக்கடி தொழிலைவிட்டு விலகி, ஊர்ப்புறங்களுக்குப் போய்விடுவதால் வன்மையான தொழிற்சங்க நிறுவனம் அமைக்க இயலாது போய்விடுகிறது. தொழிலாளி தனது கிராமத்திலிருந்து திரும்பியவுடன் நடுவர் மூலமாகவும், தரகர்கள் உதவிகொண்டும் வேலைக்கு முயலவேண்டி ஏற்படுகிறது. சில சமயங்களில் நீண்டகாலம் வரை அவன் வேலையின்றிக் காலங்கழிக்க நேரிடுகிறது. அப்போதெல்லாம் அவன் கடன் கொடுப்பவர்களிடம் போய்ச் சிக்கிக்கொண்டுவிடுகிறான். இதையே தக்க தருணமென்றுள்ள சிலர் அவனைக்கொண்டு நல்ல ஆதாயத்தைப் பெறுகின்றனர்.

தொழில் குழு (1928) - (Labour Commission) கிராமத்துடன் தொடர்பு கொண்டுள்ள நகரத் தொழிலாளர்களிடம் பல நன்மைகளைக் கண்டது. தொழிலாளர்கள் கிராமங்களிலிருந்து வருவதால் நல்ல உடல் வன்மை பெற்று நகரத்திலுள்ளவர்களைக் காட்டிலும் நல்ல தேகக் கட்டுடையவராக இருப்பார்கள். மேலும், அடிக்கடி இவர்கள் கிராமங்களுக்குப் போய்வருவதால் மனோதிடமும், உடல் வலிவும் ஏற்படும் எனக் கருதலாம். வேலையற்ற நிலையிலும், உடல் நலம் குன்றிய காலத்திலும் தொழிலாளி கிராமத்திற்குப் போய்விடுகிறான். கிராமம் இவனுக்கென்றே தயாரிக்கப்பட்ட பாதுகாப்பிடம் போன்று அமைகிறது. கிராமங்களிலிருந்து நகரங்களுக்குப் போய்வரும் தொழி

லாளர்களுக்கு ஆதாயம் உண்டென்று தொழில் குழுவினர் கருது கின்றனர். தற்கால நிலையில் தொழிலாளர் கிராமங்களுடன் தொடர்பு வைத்துக்கொள்ளுவது போற்றத்தக்கது என்ற காரணத்தால் தொழில் குழுவினர் இதை ஊக்குவிக்க வேண்டு மென்றும், தடங்கல் செய்யக்கூடாதென்றும் முடிவாகக் கருதினர்[1]. ஆயினும், நகரங்களில் நிரந்தரமான தொழிலாளர் தொகை பெருகவும், தொழில் மேம்பாடு ஏற்படவும் தொழில் வளர்ச்சியை வரவேற்கலாம். இதன்மூலம் கூலியமைப்பு கூடவும், பாட்டாளியின் வாழ்க்கைத்தரம் உயரவும் கூடும்[2].

2. ஆள் சேர்க்கும் முறை: தொழில்களுக்கு வேண்டிய ஆள் சேர்க்கும் முறை கங்காணிகளைக்கொண்டு நடத்தப் படுகிறது. இந்நடுவர்களை இந்தியாவின் பல பாகங்களில் பல பெயரால் கூப்பிடுகின்றனர். அவர்களை, சர்தார், முக்காடம், மிஸ்டிரி என்றும் அழைக்கின்றனர். இந்தத் தரகர், தொழிலாளர் களின் அறியாமையையும், இல்லாமையையும் நன்கு பயன் படுத்திக்கொண்டு அதன் மூலம் ஊதியம் தேடிக்கொள்கின்றனர். அடிக்கடி இவர் கூலிக்காரர்களுக்குக் கடன் கொடுத்தும், அவர் களுக்கு ஆலோசனை கூறியும், சண்டை சச்சரவுகளைத் தீர்த்து வைத்தும் வருகிறார். இத்தரகர் மூலமாகக் கூலியாட்களுக்கு வேலை கிடைக்கிறபடியால் தொழிலாளி தரகருக்கு லஞ்சம் கொடுக்கிறான். வேலையாள், தன் பதவியில் நீடித்து இருக்க வேண்டுமானல் நடுவரைத் திருப்தியான நிலையில் வைத்திருக்க வேண்டும். அதன் நிமித்தம் அவர் தொடர்ந்து சிறிது சிறிதாகத்

1. ஸர் ஜான் மேகா (Sir John Megaw) சிற்றூர்களிலிருந்து நகரங்களுக்கு மக்கள் தொகை மாறும்போது நிரந்தரப் பேராபத்து உள்ளதென்று கருதுகிறார். 'இந்தியாவில் க்ஷயம் என்ற உருக்கி நோய் கீழ்க்கண்ட காரணங்களால் நன்கு வேரூன்றியுள்ளதாக அமைந்துள்ளது. (1) கிராம மக்களில் பெரும்பாலோர் உருக்கி நோய்க்கு இலக்காகாததால், திடீரென அவர்களிடையே தொத்துநோய் போன்று எளிதில் பரவிவிடும். (2) பெரிய நகரங்களிலிருந்துதான் இந்த நோய் சிற்றூர்களுக்குத் தொடர்ந்து பரவி வருகிறது. (3) இந்த நோய் தீவிரமாயுள்ள காரணத்தால் அந்தப் பகுதியின் மக்களது வாழ்க்கைத்தரம் எந்நிலையில் உள்ளது என்ற குறியீட்டை இதன் மூலம் அறியலாம். பொதுவாக மட்டமான குடியிருப்பின் காரணத்தாலும், பற்றா உணவின் காரணத்தாலும், இந்நோய் மக்களிடம் குடி கொண்டுவிடுகிறது. செம்மையான வாழ்வும், செழுமையான உணவு வசதியும் ஏற்பட்டால் இந்த நோய் மறைகிறது என்று கூறியதை திரு. பி. சிவராவ் தமது 'இந்தியத் தொழிற்சாலை வேலையாள்' (The Industrial Worker in India) என்ற நூலில் காட்டியிருக்கிறார்.'

2. 'தொழிலாளியின் பொதுநலப் பாதுகாப்புத் திட்டத்தின் நிமித்தம் கிராமங்களைச் செம்மையாக்க வேண்டும் என்ற கொள்கையை நாங்கள் ஏற்றுக் கொள்ள மாட்டோம். நகர்வாழ் தொழிலாளிகளின் அந்தஸ்தை உயர்த்தியும், தொழிற்சாலைகளில் வேலையைச் சீராக்கியும், அவர்களது கூலியை உயர்த்தியும், சத்துள்ள உணவு அளித்தும், சுகாதார வசதியுள்ள வீடுகளை அமைத்தும் அவர்களது வாழ்க்கைத் தரத்தை உயர்த்தலாம்'—தொழில் ஆய்வுக்குழு, 1946, பெரிய அறிக்கை, பக்கம் 78.

தொழிலாளியிடமிருந்து பண வசூல் செய்யத் தொடங்குவார். இம்மாதிரிக் காலங்களில் தொழிற்சாலைகளில் அடிக்கடி ஆள் எடுப்பு நடத்தப்பட வேண்டுமென்று இந்நடுவர் எதிர்பார்க்கிறார். அதன் நிமித்தம் அவர்களுக்கு வேலையற்றவர்களிடமிருந்து கமிஷன் கிடைக்கும். இந் நடுவர்கள் தூண்டுதல் செய்வதால்தான் தொழிலாளர்கள் ஒரு தொழிற்சாலையினின்று மற்றொரு தொழிற் சாலைக்கும் போய்க் கொண்டிருக்கின்றனர். இந்தச் சூழ் நிலையினின்று விலக்கம் பெற மில்லில் வேலைக்கு ஆள் எடுத்தலையும், உத்தியோகங்கள் அளித்தலையும், வேலையினின்று நீக்கம் செய்தலையும் மில் முதலாளிகளும், அலுவலர்களும் நேருக்கு நேரே செய்வது நன்மையெனலாம். பர்மா ஷெல் போன்ற பெரிய நிலையங்களில் தொழில் நலப் பாதுகாவலர்களை அமைத்து, வேலையாட்களைப் பொறுக்கி எடுக்க ஏற்பாடு செய்து வருகின்றனர். பம்பாயில் உள்ள மில் சொந்தக்காரர்கள் சங்கம் (Mill Owners' Association, Bombay) அடையாளச் சீட்டுள்ளவர் களிலிருந்துதான் வேலையாட்களைப் பொறுக்கி எடுக்கிறார்கள். இம் முறையில் தொழிலாளிகள் நடுவரின்றி எடுத்துக்கொள்ளப் படுகிறார்கள். இன்னும் சிற்சில பகுதிகளில் வேலை வாய்ப்பகங் கள் மூலம் தொழிற்சாலைகளுக்கு வேண்டிய வேலையாட்களைத் தேடிக்கொள்ளுகிறார்கள்.

3. **கூலி தரும் காலவரம்புகள் :** பல்வேறு இடங்களில் பல் வேறு தொழில்களுக்கேற்ப விதவிதமான முறைகளில் கூலி கொடுத்து வருகிறார்கள். பம்பாய்ப் பகுதிகளில் மாத முறையில் கூலிக் கணக்கெடுத்து ஆட்கள் தங்குவார்களா என்று கண்டு கொண்டு மாதம் முடிந்த பின்னர் ஒரு வாரம் அல்லது அதற்கு மேற்பட்ட நாட்கள் கழித்துத்தான் கூலியைக் கொடுப்பார்கள். தொழிற்சாலையிலுள்ள கூலியாட்கள் இந்த மாதிரியான கால தாமதத்தினால் அதிகப்படியான கடன் வாங்கிக் கடன்காரர் களாகின்றனர். கல்கத்தாவில் உள்ள சணல் தொழிற்சாலைகளில் தொழிலாளிகள் தங்கள் வாராந்திரக் கூலியைப் பெறுகிறார்கள். இலக்காக ஒரு வாரக் கூலி மட்டிலும் நிறுத்தி வைக்கப்படுகிறது. அகமதாபாத்தில் உள்ள மில்களில் இரண்டு வாரங்களுக்குப் பிறகு கூலி கொடுக்கிறார்கள்.

1936ஆம் ஆண்டில் இயற்றப்பட்ட கூலி கொடுக்கும் முறைச் சட்டப்படிக் கீழ்க்கண்ட கோட்பாடுகள் விளக்கம் செய்யப் பட்டுள்ளன: (1) கூலி கொடுக்கப்பட வேண்டிய காலம் ஒரு மாதத்திற்கும் கூடுதலாகப் போகக்கூடாது. (2) கூலி முழுமையும் பணமாகத் தர வேண்டும். (3) ஆயிரம் தொழிலாளிகளுக்கு

மேலாகப் பணியாற்றும் தொழிற்சாலை, அலுவலகங்கள், இருப்புப் பாதைத் தொழிற்சாலைகளில் ஏழாம் நாள் முடிவில் கூலி கொடுக்கப்படவேண்டும். முன்சொன்ன அளவிற்கு மாறுபட்ட இருப்புப் பாதை தொழிற்சாலை, அலுவலகம், இவைகளில் கூலி கொடுத்த பத்து நாட்கள் கழித்துக் கூலி கொடுத்தல் வேண்டும். கூலியில் செய்யப்படும் பிடித்தங்களைச் சீர்திருத்தியும் வரையறுத்தும் விளக்கம் செய்யப்பட்டுள்ளது. மேற்படி சட்டப்படிக் கீழ்க்கண்ட பிடித்தங்கள்தான் அனுமதிக்கப்பட்டிருக்கின்றன. (1) தண்டங்கள், (2) கடமைக்குவராத காரணத்தால் செய்யப்படும் பிடித்தம், (3) பணத்திற்கோ அல்லது பொருளிற்கோ பொறுப்பு ஏற்றுக்கொண்டவராஞல் அவைகளை ஒழுங்காக ஈடுகட்ட முடியாவிடில் அவரது கூலியிலிருந்து பிடித்துக்கொள்ளலாம். (4) வேலைக்கு எடுத்துக்கொள்ளப்பட்டவருக்கு வீட்டு வசதி செய்து கொடுத்தால் அதற்கேற்பக் குடிக்கூலியைப் பிடித்தம் செய்யலாம். (5) வருங்கால சேமிப்பு நிதிக்கெனச் சேர்க்கப்படும் பிடித்தமும், அதனின்று முன் பணமாக வாங்கியதற்காகக் கொடுக்கும் தவணைக்கென ஏற்படும் பிடித்தமும், சில குறிப்பிட்ட வேலைகளுக்கான காரணத்தாலும், செய்யவேண்டிய கடமையினின்று வழுவிய காரணத்தாலும் போடப்படும் பணத்தண்டனை. ஆயினும், முன்னறிவுப்புச் செய்தல் இன்றியமையாதது. கூலி போடும் ஒரு வேளையில் ரூபாயில் அரையணுவிற்கு மேற்படாமல் அபராதம் போடலாம். பதினைந்து வயதிற்குட்பட்டவர்களின் கூலியில் அபராதம் விதிக்கக்கூடாது. இம் முறையினுல் சட்ட முறையில் அபராதம் போடுவது நின்றுவிட்டதெனலாம். ஆனபோதிலும் தொழில் முதலாளிகள் கூலியில் பலவிதமான தராதர வீதமிட்டும், தொழிலாளிகளுக்குச் சம்பளமில்லா விடுமுறை கொடுத்தும் அவர்களைப் பணிய வைக்கிருர்கள்.

**4. வராதிருத்தலால் உள்ள தீமைகள் :** மில்களில் சீரிய முறையில் வேலை நடவாமற் போவதற்குக் காரணம், அடிக்கடி தொழிலாளர்கள் வராதிருத்தலேயாகும். மாரிக் காலத்தில் அதிகப்படியான தொழிலாளர்கள் வருவதேயில்லை. உற்சவ, கல்யாண மாதங்களாகிய, மார்ச் மாதம் முதல் ஜூன் மாதம் வரையில் இவர்கள் தங்கள் தொழிலுக்குத் திரும்புவதில்லை. டிசம்பர் மாதத்தில் அதிகப்படியான ஆட்கள் தொழிற்சாலைகளுக்கு வருகிருர்கள். கல்கத்தா போன்ற பெரிய நகரங்களில் கோடை மாதங்களில் தொழிலாளர்கள் சணல் மில்களுக்குப்போவதில்லை. வேலையளிப்பவர் தங்கள் வசம் நிரந்தரமாகத் தொழிலாளர் ஆஜர் பட்டியல் வைத்துள்ளனர். இதனுல் ஓரளவு வராமையைக் கண்டிக்க முடிகிறது. வராதவருக்குப் பதிலாக நியமிக்கப்படுபவர்

தொழிற் பயிற்சியற்றும், அனுபவமற்றும் இருக்கக்கூடும். நடுவரின் காரணத்தால்தான் வராமை உண்டாகிறது எனலாம்.

5. **திறனற்ற இந்தியத் தொழிலாளி :** மேல் நாட்டு, ஜப்பான், சீனத் தொழிலாளர்களுடன் ஒப்பிட்டு நோக்கின், நம் நாட்டுத் தொழிலாளர் திறனற்றவர் என்பதில் தவறொன்றுமில்லை. நம் நாட்டுத் தொழிலாளர்கள் மட்டரகமானவர் என்பதை மேனாட்டுப் புத்தகங்களில் சற்று மிகைப்படுத்திக் கூறியிருக்கிறார்கள். சில இன்றியமையாத அடிப்படைக் கொள்கைகளை அவர்கள் கருதாமையே இதற்குக் காரணம் எனலாம். எடுத்துக்காட்டாக, நம் நாட்டிலுள்ள பருத்தி நெசவாலைகளில், தறியில் அநேக நெசவாளர்களை அமர்த்தவேண்டி ஏற்படுகிறது. இந்திய நாட்டில் பிற நாட்டினைப் போலன்றி, அளவுக்கு மீறிய தொழிலாளர் இருப்பதே காரணமாகும். மேலும், தொழிலாளரின் பலவீனத்திற்கு வேறு பல காரணங்களும் உள்ளன. குறிப்பாக இந்தியத் தொழில் நிர்வாகிகள் செம்மையாக நடத்தாமை, ஆக்கத்திற்கு வேண்டிய மூலப்பொருள் பயனற்றதாக அமைதலும் ஆகும். தொழில் நடத்தவல்ல பொறி, மிகவும் பழங்காலத்தில் உண்டானதும், பத்தாம்பசலி போன்றதுமாகலாம். இவ்வளவு குறைபாடுகளைத் தவிர்த்த பிறகுங்கூட, இந்தியத் தொழிலாளியின் தரம் உயரவில்லை என்பதில் ஐயமில்லை. இந்தியத் தொழிலாளரின் தரத்தினை உயர்த்தப் பல யோசனைகளை அவர்கள் கூறாமல் இல்லை.

தொழிலாளர்களின் திறனற்ற முறைக்கு நிர்வாகமும், நிறுவனமும் காரணமென்பதோடன்றி, இன்னும் சில காரணங்களையும் இவ்விடம் தெளிவுபடுத்துவோம். அவற்றில் சில முன்னரே விளக்கப்பட்டன. (1) நிலை மாறும் எண்ணமுடைய தொழிலாளர், (2) வராமை என்னும் கொடிய தீமை, (3) ஊர்ப் புறங்களிலிருந்து வரும் கிராம வாசிகள், நகரிலுள்ள தொழிற்சாலை நிலைக்குத் தக்கவாறு மாறும் தன்மையில்லாமை, (4) தொழிற்சாலைகளில் சுகாதார நிலைக்கேற்ப வெளிச்சமின்மை, வசதியான குடி தண்ணீர் இல்லாமை, கழிப்பிடம் எனலாம். (5) தொழிலாளர்கட்கு வேண்டிய உடல் வலிமையின்மை. இந்தியத் தட்ப வெப்ப நிலையே இந் நாட்டுத் தொழிலாளர்களின் வன்மையைச் சீர்குலையச் செய்கிறது என்று கருதப்படுகிறது. ஆயினும், மனித உடல், தட்ப வெப்ப நிலைக்கேற்றவாறு அமையும் தன்மையுடைத்து எனலாம். ஆதலால், இதை ஒரு காரணமாகக் கருதுவது சரியன்று. இன்றைக்குச் சுமார் இருநூறு ஆண்டுகளுக்கு முன்னர், நம் நாட்டினர் தொழிலில் வன்மையான இடம் பெற்றிருந்தனர். அப்போதும் இதே தட்ப வெப்ப நிலையே இருந்தது. விஞ்ஞானத்

துறையில் முன்னேற்றங் கண்ட பின்னர் அவைகளின்மூலம் தட்ப வெப்ப நிலையைக்கூட வென்றுவிடலாம்.

**6. குடியிருப்பைப் பற்றிய பிரச்சினை:** நம் நாட்டுத் தொழில் நகரங்களில் உள்ள தொழிலாளர் தங்கும் உறைவிடங்கள் திருப்தி யற்றநிலையில் உள்ளனவெனலாம். பெரும்பாலான தொழிலாளர் கள் சாள் (chawls) என்ற ஓரறை வீடுகளிலும், கல்லா(gallas)என்ற ஈரறை வீடுகளிலும்தான் வசிக்கிறார்கள். இவ்வாறு இவர்கள் வசிக் கும் நிலையைப் பார்த்தால், ஏதோ கிடங்கில் சாமான்கள் வைக்கப் பட்டதுபோல் உள்ளனர் என்று பர்னெட் ஹர்ஸ்ட்[1] தமது நூலா கிய 'பம்பாயில் உள்ள தொழிலாளரும் அவர்களது இல்லங்களும்' என்பதில் கூறுகிறார். சற்று மேம்பாடான நோக்கங்கொண்ட ஆலை முதலாளிகள் பீகாரிலுள்ள ஜரியா நிலக்கரிக் கனிகளில் உள்ள தொழிலாளிகளுக்கும், இதர சர்க்கரை ஆலைகளில் பணி யாற்றும் தொழிலாளிகளுக்கும் வசதியான வீடுகள் கட்டிக் கொடுத் திருக்கிறார்கள். தொழிலதிபர்கள் பொறுப்புடன் இம்மாதிரி வசதி கள் அளிப்பது ஏதோ குறைந்த அளவில்தான் எனலாம். தொழி லாளர்களும் எங்காவது முதலாளியின் பிடியில் சிக்கிவிடுவோமோ என்று அஞ்சி, அவன் கொடுக்கும் வீட்டு வசதியைப் புறக்கணித்து விடுகின்றனர். முதலாளி அளிக்கும் வீட்டில் குடியிருந்தால் சுயேச்சையாகவும், தன் விருப்பப்படியும் கூட்டுக் கிளர்ச்சிகளில் சேரமுடியாது போகும் என்ற எண்ணமும் அவரைச் சூழ்ந்து கொள்ளும்.

அரசியலாரும் அரசியலாரின் அமைப்புப் பெற்ற இதர நிறு வனங்களும் தங்கள் தொழிலாளர்களுக்கு இருக்க இடம் தர முயலு கின்றனர். பம்பாய் வீட்டு வசதி டிரஸ்ட் 1898ஆம் ஆண்டில் திறக்கப்பட்டது. இந்த டிரஸ்ட் செம்மையான முறையில்-சுகாதார முறையில்-தொழிலாளர், ஏழை முதலானவர்களுக்கு வீடுகள் அமைத்துக் கொடுத்தனர். ஆயினும், பணமின்மையாலும், பம்பாய் நகராட்சி நிறுவனத்தின் ஒத்துழையாமையாலும் இம் முயற்சி கை கூடவில்லை. பம்பாய் நகராட்சி நிறுவனம் மட்டிலுமே தனது சிப்பந்திகளுக்கென 3,000 குடியிருப்புகளை 1920ஆம் ஆண்டில் அமைத்தது. முதல் உலகப் போர் முடிவு பெற்றவுடன் பம்பாய் அரசாங்கம், வளர்ச்சி நெறியாளர் அலுவலகத்தின் மூலம் ஒர்ளி (Worli) பகுதியில் ஓரறை வீடுகளையும், ஈரறை வீடுகளையும் கட்டித் தனி ஆள் தொழிலாளிகளுக்கும், தொழிலாளர் குடும்பங் களுக்கும் இட வசதியளித்தது. கட்டட வேலையில் அநேக குறை

1. பி. ஹர்ஸ்ட்டின் 'இந்தியத் தொழிலாளியும் குடியிருப்பும்' பக். எண். 20

பாடுகள் இருந்ததாலும், அங்காடிக்கு வெகு தொலைவில் அமைந்த காரணத்தாலும் இந்த இடங்களுக்குக் கிராக்கி ஏற்படவில்லை. ஆயினும், 1947ஆம் ஆண்டில் அதே பகுதியில் சர்க்கார் இன்னும் அநேக தனி இடங்களை அமைத்தனர். தொழிலாளியின் வரு வாய்க்கு ஏற்ப வாடகையை நிர்ணயம் செய்தார்கள். அதற்காக உதவித் தொகையும் சந்தாக்களும் கொடுக்கப்பட்டன. வீடுகட்டும் பொருள்கள் இல்லாமையாலும், நெருக்கடியான இடங்களில் இடம் கிடைக்காததாலும் காலிமனைகள் அகப்படாத காரணத் தாலும் வீடு கிடைத்து வாழ்வது முடியாத செயலாயிற்று எனலாம்.

1948ஆம் ஆண்டு ஏப்ரல் மாதத்தில் நம் நாட்டில் ஒரு மில்லியன் தொழிலாளர்களுக்குப் பத்து ஆண்டுகளுள் வீட்டு வசதி செய்யப் போவதாக இந்திய அரசாங்கம் அறிக்கை விடுத்தது. பண வசதியின்மையால் இந்த முயற்சி மிகவும் முன்னேறவில்லை. அண்மையில் பண உதவி பெற்ற தொழில் வீட்டு வசதித் திட்ட மொன்றை மத்திய சர்க்கார் தொடங்கி, அதன் மூலம் தொழிலாளர் களுக்கு வீட்டு வசதியளிக்க முயன்று வருகின்றனர். இராச்சிய அரசாங்கம், சட்டப்படி அமைத்துள்ள வீட்டு வசதி போர்டுகள், பதிவு பெற்ற கூட்டுறவு வீட்டு வசதிச் சங்கங்கள் இவைகள் மத் திய அரசாங்கத்திடமிருந்து பண உதவியும் கடனும் பெற்றுப் பணி யாற்றி வருகின்றன. பீகார், பம்பாய், மத்தியப் பிரதேசம், பஞ்சாப், உத்தரப் பிரதேசம், மைசூர், திருவாங்கூர்-கொச்சி ஆகிய இராச்சி யங்கள் தொழில் சம்பந்தப்பட்ட வீட்டு வசதித் திட்டங்களை உரு வாக்கியுள்ளன. மிகவும் போற்றத் தக்க முறையில் பம்பாய் மாகா ணத்தில் புதிய வீடுகள் கட்டப்பட்டு வருகின்றன.

வேலையளிப்போர் பற்பல வீடு அமைத்துக் கொடுக்கின்றனர். அவை அமைப்பிலும் தரத்திலும் மாறுபட்டனவாக உள்ளன. பருத்தி ஆலைகளில் பணியாற்றும் தொழிலாளிகளில் ஒரு சிலரே வீட்டு வசதி பெற்றுள்ளனர். கல்கத்தாவிலும், அதைச் சுற்றி யமைந்துள்ள சணல் தொழிற்சாலைகளிலும் உள்ள தொழிலாளர் களில் மூன்றில் ஒரு பங்கினருக்கு வீடு கொடுக்கப்பட்டுள்ளது. ஆனால், இவ் வீடுகள் ஒன்றுகூட வசதியானதன்று. பொறியியல் தொழிலில் பெரிய பகுதிகளாகிய டாடா இரும்பு எஃகுத் தொழிற் சாலைக் கம்பெனி தன் பணியாளர்களுக்கு வீட்டு வசதி செய்து கொடுத்திருக்கிறது. தன் தொழிலாளர்களுக்கு வீட்டு வசதி அமைத்துக் கொடுப்பதில் எல்லாத் தொழில்களிலும் மேம்பாடான முறையில், அதிகப்படியான தொழிலாளர்களுக்கு வசதியானபடி வீடு கொடுத்துள்ளது சிமெண்டுத் தொழிற்சாலை ஒன்றுதான்.

நிலக்கரிக் கனிகளில் உள்ள 80 சதவீதம் தொழிலாளர்களுக்குக் குடிக்கூலி யின்றி வீடுகள் கொடுக்கப்பட்டு உள்ளன. நிலக்கரிக் கனித் தொழிலாளர் நல வசதி நிதியிலிருந்து (Coal Mines Labour Welfare Fund) பணச் செலவில் 1,500-க்கு மேலான வீடுகளை யமைத்து வசதி செய்துள்ளனர். தோட்டங்களில் நிரந்தரமாயுள்ள தொழிலாளர்களுக்கு இட வசதி இதர நலன்களை யளிக்க 12 ஆண்டுகளில் செய்து முடிக்கும் திட்டம் வரையறுத்து, அதன்படி வசதி கொடுக்கப்பட்டு வருகிறது. ரெயில்வேயில் பணியாற்றும் 2 லட்சம் தொழிலாளிகளுக்கு வீட்டு வசதி செய்துள்ளனர். அக மதாபாத் பருத்தி நெசவு ஆலைத் தொழிலாளர் சங்கத்தின் சார்பில், அநேக வீடுகட்டும் கூட்டுறவுக் கழகங்கள் அமைக்கப்பட்டு வேலை செய்து வருகின்றன.

37 நகரங்களிலிருந்து கிடைத்த தகவல்களிலிருந்து, பெரு வாரித் தொழில்களில் ஈடுபட்டுள்ள 1·7 மிலியன் தொழிலாளர் களில் 4 முதல் 5 இலட்சம் தொழிலாளர்கள் வீடில்லாமல் இருக் கின்றனர். 1941 முதல் 1951 வரை, கடந்த பத்தாண்டுகளில் 74 நகரங்களின் மக்கள் தொகை 74 இலட்சம் வீதம் அதிகரித் துள்ளது. சிறிய நகரங்களில் 140 இலட்சம் வீதம் அதே கால எல்லையுள் கூடியுள்ளது. 1941-ல் தொழிலாளரின் வீட்டு வசதி மிகவும் திருப்தியற்ற நிலையில் இருந்தது எனலாம். வீட்டுப் பிரச்சினை எவ்வளவு கடுமையானது என்பது இதிலிருந்து வெளிப் படையாகத் தெரிகிறது. முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் தொழிலாளர் வீட்டு வசதிக்கென 48·69 கோடி நிதி ஒதுக்கி வைக் கப்பட்டது. அவற்றில் மத்திய சர்க்கார் 38·5 கோடி ரூபாய் செல விட்டது. இராச்சிய சர்க்கார் 10·19 கோடி செலவிட்டனர்.

**7. கடன்படுதலும் குடியின் தீச் செயல்களும்:** கிராமங் களிலுள்ள விவசாயிகள் கடனில் மூழ்கித் தத்தளிப்பதுபோல், தொழிலிலுள்ள தொழிலாளியும் கடனில் மூழ்கி விடுகிறுன். 300 ரூபாய்க்கும் குறைந்த ஊதியம் பெறும் தொழிலாளியின் வருமானம், அவன் கட்டும் சேமநிதி இவற்றை நீதிமன்ற உத்தரவின்கீழ் ஜப்தி செய்யக்கூடாதெனத் தொழில் குழுவினர் (Labour Commission) கண்டிருக்கின்றனர். ரூ. 100-க்குக் கீழ்ச் சம்பளம் வாங்கு பவரைக் கடனுக்காகக் கைது செய்து சிறையில் தள்ளக்கூடா தென்றும் முடிவு கூறினர். இந்திய சர்க்கார் சிவில் வழக்கு நடை முறை விதித் தொகுப்பில் (Civil Procedure Code) சம்பளம் ஓர் எல்லைக்குக் கீழாளுல் சட்டப்படி ஜப்தி செய்யக்கூடாது என்று முடிவாக்கியுள்ளனர். 1934-ல் பஞ்சாபில் கடன் நிவாரணச் சட்டம் கொண்டு வரப்பட்டது. அதன்படி கடன்பட்டவரைச்

சிறையிலடைக்கக் கூடாதென்றும், அப்படி அவர் ஜப்திக்கு உரிய சொத்து வைத்துக்கொண்டு கொடுக்க மறுத்தால்தான் கைது செய்யலாமென்று வரையறுக்கப்பட்டது. 1937-ல் அமலாக்கிய மத்திய மாகாணக் கடன்பட்டோர் பாதுகாப்புச் சட்டத்தின் கீழ்க் கடன்பட்டவரைத் துன்புறுத்தினால் அது பிடியாணை வேண்டாக் குற்றமாகக் கருதப்படும். அதே ஆண்டில் அமலாக்கிய மத்திய சர்க்கார் ஆணைப்படி ரூ. 100-க்கும் குறைந்த வருமானமுள்ளவர் எவரிடமும் சட்டப்படி ஜப்தி செய்யலாகாது என்று முடிவாக்கப் பட்டது. இவ்வளவு முயற்சி செய்தும் ஒரு வகையிலும் ஈடேற வில்லை. இந்தப் பிரச்சினையை எல்லா வகையிலும் ஆராய்ந்து முழுவதும் கவனிக்க வேண்டியிருக்கிறது.

கிராமங்களைவிட நகர்ப்புறத் தொழிலாளிகளிடையே மதுவின் தீச்செயல் அதிகம் எனலாம். குறைந்த கூலியாலும், சுகாதார மற்ற சுற்றுப்புறங்களின் காரணங்களாலும் தொழிலாளி தன்னை மறந்து குடி போதையில் ஆழ்ந்து விடுகிறான். குடியை ஒழித்துக் கட்ட மதுவிலக்கு முறையைச் சட்டமாக்கி அரசியலமைப்பின் கீழ்க்கொண்டுவந்தனர். பம்பாய், சென்னை இராச்சியங்களை மது விலக்குத் திட்டத்தின்கீழ்க் கொண்டுவந்துள்ளனர். இதர இராச்சி யங்களிலும் முடியுமா என்று முயன்று வருகின்றனர். மதுவிலக் கினால் எதிர்பார்த்த அளவு தீச்செயல்கள் ஒடுங்குமா என்பதைப் பற்றிக் கருத்து வேற்றுமைகள் உள்ளன. மதுவிலக்குத் திட்டத் தினால் தீமைகள் அதிகரித்துள்ளன எனலாம்.[1]

**8. இந்தியத் தொழிலாளரைப்பற்றிய சட்டமியற்ற உறு துணையான சக்திகள்** : தொழிலாளருக்கான சட்டம் இயற்று வதற்கு, உந்தும் சக்தியளித்தவர்கள் லங்காஷயர் முதலாளிகளே யாவர். அவர்கள் பார்லிமெண்டின்மூலம் இந்திய சர்க்காரைச் சட்டமியற்றத் தூண்டினர். இதன்மூலம் இந்தியத் தொழிலாள ருக்கு அதிகப்படியான ஆதாயம் கிடைக்கும். இந்தியத் தொழி லதிபர்களுக்கு அடக்க விலை கூடுதலாகும். அதன் நிமித்தம், லங்காஷயர் சரக்குடன் இந்திய மில்கள் போட்டிபோட முடியாமல் போய்விடும். முடிவில் லங்காஷயர் துணிகளுக்கு இந்தியச் சந்தையில் நிலைபெற்ற இடம் கிடைக்கும். இந்தியத் தொழிலாளி களே தங்களுடைய நிலையை உணர்ந்து, வாழ்க்கை நிலை உயர வேண்டுமென்ற அடிப்படையில் அரசியலார் சட்டமியற்ற வேண்டும் என்று வாதாடினர். அரசியலாரும், பாட்டாளிகள் படும் அவதிகளைக் கண்ணுற்றுத் தங்கள் கடமை என்று எண்ணிச்

1. மதுவிலக்குத் திட்டத்தைப் பற்றிய விவாதம் 22ஆம் அதிகாரத்தில் கொடுக்கப்பட்டுள்ளது.

சட்டமியற்ற முன்வந்தனர். உலகத் தொழிலாளர் நிறுவனத்தின் (I. L.O.) மூலம் வரும் வற்புறுத்தலின்பேரில் சட்டமியற்றினர். உலகத் தொழிலாளர் நிறுவனத்தின் தொடக்கத்தின்போது, நம் நாடு நிரந்தர இடம் பெற்று 100 கூட்டங்களின் முடிவுகளில் 19-ஐ ஒப்புக்கொண்டது. இதர நாட்டுக் கூட்ட முடிவுகளின் தக்க கொள்கைகளையும் நம் நாட்டுச் சட்டங்களில் புகுத்தியுள்ளது.

**9. 1881ஆம், 1891ஆம் ஆண்டுத் தொழிற்சாலைச் சட்டங்கள் :** முதல் தொழிற்சாலைச் சட்டம் 1881ஆம் ஆண்டில் கொண்டு வரப்பட்டது. 7 வயதுக்குட்பட்ட பாலகர்களைத் தொழிலில் சேர்த்துக்கொள்ளக்கூடாது. 7 முதல் 12 வயது வரையுள்ள குழந்தைகள் 9 மணி நேர வேலைக்கு மேல் செய்யக் கூடாது. ஒரு மணி நேர ஓய்வும், மாதத்தில் நான்கு நாட்கள் விடுமுறையும் பெற வேண்டும். 100 பேருக்கு மேலாக வேலை செய்யும் தொழிற் கூடங்களிலும், இயந்திர சக்தியுள்ள தொழிற்சாலைகளிலும் இந்தச் சட்டம் அமலாக்கப்பட்டது. இத் தொழிற்சாலைகளை மேற்பார்வையிட ஆய்வாளர் ஒருவரை நியமிக்கும்படிச் செய்தது. இரண்டாம் தொழிற்சாலைச் சட்டம் 1891-ல் உருப்பெற்றது. இதன் கீழ் 50 தொழிலாளருக்கு அதிகமாக வேலை செய்யும் நிறுவனங்களுக்கும், இயந்திர சக்தியுள்ள தொழிற்சாலைகளுக்கும் இது சட்டமாக அமைந்தது. உள்ளூர்ச் சர்க்கார் இதை 20 பேருக்குக் கீழான எண்ணுள்ள தொழிற்சாலைகளில்கூட அமலாக்கலாம் என்றது. சிறுவர்கள் என்ற சொல் 9 வயதிற்கு உட்படாமலும் 14 வயதிற்கு மேற்படாமலும் உள்ளவர்களைக் குறிக்கும் என்று கூறியது. அவர்கள் காலை 5 மணி முதல் இரவு 8 மணி வரைதான் வேலை செய்யலாம் என்றும், எந்த நாளிலும் 7 மணிக்கு அதிகமாக வேலை செய்யக்கூடாதெனவும் ஆணையிட்டது. ஆண் பெண் இருபாலாருக்கும் தொழிலில் விடுமுறை அளித்தது. பெண்பாலர் காலை 5 மணி முதல் மாலை 8 மணி வரைதான் பணியாற்றலாம் என்று வரையறுக்கப்பட்டது. அனுமதி பெற்ற ஷிப்டு (Shift) முறையில்லையென்றால் ஒரு நாளுக்கு 11 மணிக்கு மேல் வேலை செய்யக் கூடாதென்றும் அதற்கும் $1\frac{1}{2}$ மணி நேர ஓய்வு கொடுக்கவேண்டும் என்றும் ஏற்பட்டது. ஆடவருக்கு 12 முதல் 2 வரை பகலில் அரை மணிக்குக் குறைவின்றி ஒவ்வொரு நாளும் ஓய்வும், வாரமொரு நாள் விடுமுறையும் கொடுக்கவேண்டும் என்றுள்ளது. இட நெரிசலின்றியும், துப்புரவாகவும் வெளிச்சமுள்ளதாகத் தொழிற்சாலை வைக்கப்பட வேண்டும் என்றும் தொழிற்சாலைச் சட்டம் கூறுகிறது.

**10. 1911ஆம் ஆண்டுத் தொழிற் சட்டம் :** இத் தொழிற் சட்டம் ஒவ்வொரு தொழிலாளியும் வயதுபற்றிய அத்தாட்சி வைத்துக்கொள்ள வேண்டுமென்றும், பருவ காலத் தொழிற்சாலை களிலும் இவை செல்லும் என்றும், நெசவாலைகளில் சிறுவர்களுக்கு ஆறு மணிக்கு மேலாக வேலை இல்லையென்றும், பஞ்சாலைகளிலும் எண்ணெய் ஆலைகளிலும் மட்டும் இரவில் பெண்பாலர் வேலை செய்யலாமென்றும், ஆடவர்கள் நெசவாலைகளில் நாள் ஒன்றுக்கு 12 மணிக்குமேல் வேலை செய்யக்கூடாதென்றும், அனுமதிக்கப் பட்ட ஷிப்டு (shift) முறையற்ற எந்த நெசவாலையிலும், இரவு நேரங்களில் வேலை செய்யக்கூடாதென்றும் கூறியது. உடலைப் பற்றிய சுகாதாரம், தற்காப்பு விதிகள் ஆகியவைகளையும், இன்னும் ஆய்வாளரின் பணியைத் திட்டவட்டமாகவும் கூறியுள்ளது.

**11. 1922ஆம் ஆண்டுத் தொழிற்சாலைச் சட்டம் :** இயந்திர சக்தி உபயோகிக்கும் தொழிற்சாலைகளிலும், 20 பேர்களுக்குக் குறை யாமலிருப்பின், இது கண்காணிக்கப்படுகிறது. இராச்சிய சர்க்கார் இச் சட்டத்தை 10-க்கு மேல் 20-க்கு உட்பட்டுள்ள இயந்திரசக்தி யற்ற தொழிற்சாலைகளிலும் நடத்த உரிமையுண்டு. சிறுவர்களின் குறைவான வயது 12 ஆகவும் அதிகப்படியானது 15 ஆகவும் முடிவு கட்டியது. எந்தத் தொழிற்சாலையிலும் இவ் வயதெல்லையில் உள்ள சிறுவர்கள் 6 மணிக்கு மேலாக வேலை செய்ய வேண்டிய தில்லை. காலை 5-30 மணிக்கு முன்னும் இரவு 7 மணிக்குப் பிறகும் பெண்டிரைத் தொழிலில் அமர்த்தக்கூடாது. ஆடவர்களுக்கு வார முழுமையும் 60 மணியென்றும், 6 நாட்கள் வாரமாக அமைதல் வேண்டும் என்றும், தினமொன்றுக்கு 11 மணி நேர வேலை என்றும், வார விடுமுறை ஒரு தினம் எனவும், ஓய்வுநேரத்தை 6 மணி நேரம் தொடர்ந்து செய்த பின்னர், தொழிலாளியின் வேண்டுகோளின்படி ½ மணியாக 5 மணி நேர வேலை கழிந்ததும் விடலாம். தொழில் கேந்திரங்களில் முழுநேரத் தொழிற் பயிற்சி பெற்ற ஆய்வாளர்கள் நியமிக்கப்படவேண்டும். உள்ளூர் சர்க்கார் தொழிற்சாலைகளுக்கு எவ்விதமான வெளிச்ச அமைப்பு வேண்டும், ஈரக் கசிவு இருக்க வேண்டும் என்றும் கவனிக்க வேண்டும்.

ஆட்சி முறையில் ஏற்பட்ட சில இடையூறுகளை மட்டும் போக்கச் சில திருத்தங்கள் 1923, 1926, 1931ஆம் ஆண்டுச் சட்டங்களில் பதிவாக்கப்பட்டன.

**12. 1934ஆம் ஆண்டுத் தொழிற்சாலைச் சட்டம் ; 1946 ஆம் ஆண்டின் தொழிற்சாலைகள் திருத்தச் சட்டம்; 1948ஆம் ஆண்டுத் தொழிற்சாலைகள் சட்டம் :** 1934ஆம் ஆண்டுச் சட்டம்

1945 ஜனவரி மாதம் முதல் தேதி அமலுக்கு வந்தது. 3-வது பிரிவாக 15 முதல் 17 வயது வரையுள்ளவரை இளங்காளையர்கள் (adolescents) என்று பிரித்தது. இவர்கள் வயது நிருபணம் காட்டாவிடில், வேலைக்குஎடுத்துக்கொள்ளக்கூடா தெனப்பட்டது. நடப்பிலுள்ள நாள் ஒன்றுக்கு 11 மணி வீதமும் வாரத்துக்கு 60 மணி நேர வீதமும் உள்ளவை பருவ காலத் தொழிற்சாலைகளுக்கும் நாளொன்றுக்கு 10 மணிவீதமும் வாரம் 54 மணி வீதமும் சில குறிப்பிட்ட விதி விலக்குடன் நிரந்தரத் தொழிற்சாலைகளுக்குத் திட்டம் போடப்பட்டது. சிறுவர்களுக்கு எவ்வகைத் தொழிற்சாலையாக இருப்பினும், நாளொன்றுக்கு 5 மணி நேர வேலைதான் கொடுக்கப்படவேண்டுமென விதிக்கப்பட்டது. நாளுக்கான வேலை நேரத்தைப் பரப்புதலில் ஆடவருக்கு நாளொன்றுக்கு 13 மணி நேரத்திற்கு மேற்படாமலும் சிறுவர்களுக்கு 7½ மணி நேரத்திற்கு அதிகரிக்காமலும் அமைக்கப்பட்டன. இராச்சிய அரசாங்க ஏவலின் பேரில் ஓர் ஆய்வாளர் தொழிற்சாலையில் இன்றியமையாத இடங்களில் செயற்கை முறையில் தண்மையான காற்று வீசும்படிச் செய்ய மேலாளர்களை வற்புறுத்தவேண்டுமென ஏற்பாடு செய்யப்பட்டது. வேலை நேரம் போக ஓய்வு நேரங்களில் ஆடவர் தங்கவும், பெண்டிரின் குழந்தைகள் விளையாடவும், முதலுதவிப் பெட்டிகள் வைக்கப்படவும் ஏற்பாடுகள் செய்யப்பட்டன. தகுதியற்ற சிறுவர்களை நியமிப்பதினின்று தடுக்க இராச்சிய அரசினருக்கு அதிகாரம் கொடுக்கப்பட்டுள்ளது. தொழிலாளிக்கு ஆபத்தைத் தரும் எந்தப் பகுதியையும் உடனே மாற்றி யமைக்கும்படி கண்டித்துச் சொல்ல ஆய்வாளர்களுக்கு அதிகார மளிக்கப்பட்டது. மிகை நேர வேலைக் கட்டுப்பாடும், அதற்கான கூலியும் தெளிவாக்கப்பட்டன.

1946ஆம் ஆண்டின் தொழிற்சாலைச் சட்டப்படி நிரந்தரத் தொழிற்சாலைகளுக்கு வாரத்திற்கு 48 மணி நேரம் என்றும், பருவ காலத் தொழிற்சாலைகளுக்கு 54 மணி நேரமென்றும் வரையறுக்கப்பட்டது. பொதுநலனை யனுசரித்து இவ் வெல்லையை அதிகரிக்க இராச்சிய சர்க்காருக்கு அனுமதி உண்டு.

1948ஆம் ஆண்டுச் சட்டம் 1949 ஏப்ரல் முதல் தேதி அமலுக்கு வந்தது. இயந்திர சக்தியுள்ள தொழிற்சாலைகளில் 10-க்கு மேற்பட்ட தொழிலாளர் இருப்பினும், கையால் பணியாற்றும் தொழிற்சாலையில் 20 பேர்களுக்கு மேற்பட்டாலும், இது அமலாக்கப்பட்டது. இராச்சிய சர்க்கார் இந்த வரம்பை மீறி எவ்வகையான தொழிற்சாலையிலும் இதை அமலாக்கலாம். ஒரே குடும்பத்தினர், தனித்து வேலைக்கு ஆளின்றி நடத்தினால் விலக்கு

உண்டு. பருவ கால, நிரந்தரத் தொழிற்சாலைகள் என்ற வேறுபாடுகள் அகன்றன. இத்தொழிற்சாலைகளைப் பதிவு செய்துகொண்டு உரிமைக் கட்டணம் வசூலிக்க இராச்சிய சர்க்காருக்கு அனுமதியளிக்கப்பட்டது. தொழிற்சாலையைத் துவங்கும் முன்னரே அதன் முதலாளி தொழிற்சாலையைப் பற்றிய எல்லா விவரங்களையும் கொண்ட ஒரு விண்ணப்பம் தயாரித்துத் தலைமைத் தொழிற்சாலையின் சுகாதாரம், வெளிச்சம், தட்ப வெப்ப நிலை, தற்காப்பு முறைகள், வசதிகள், நெரிசலின்மை இவற்றைப்பற்றிச் சட்ட நுணுக்கங்கள் உள்ளன. அதிகப்படியான அளவில் வார வேலை 48 மணி என்றும், நாள் வேலை 9 மணி என்றும் வரையறுக்கப்பட்டது. ஒரு நாளின் வேலை மொத்தம் $10\frac{1}{2}$ மணிக்கு மேலிடாது ஒரு தொழிலாளி 5 மணி நேரம் தொடர்ந்து பணியாற்றிய பின்னர் $\frac{1}{2}$ மணி நேர ஓய்வு பெறுவர். மிகை நேர ஊழியம், நாள் ஊதியத்தைப் போல் இரட்டிப்பாக இருக்கவேண்டும். பெண்டிரைக் காலை 6 மணிக்கு முன்னதாகவும் மாலை 7 மணிக்குப் பின்னரும் வேலைக்கு அமர்த்தக் கூடாது. அவர்களுக்கும் வாரம் ஒரு தினம் விடுமுறை கொடுக்கவேண்டும். 14 வயது முதல் 18 வயது வரை உள்ள இளங் காளைகளை வயதுக்குரிய அறிகுறிப் பத்திரங்களுடன்தான் எடுத்துக் கொள்ளவேண்டும். நற்சாட்சிப் பத்திரம் அறுவை வைத்தியரே கொடுக்கவேண்டும். அவர்கள் நாளொன்றுக்கு $4\frac{1}{2}$ மணிக்குமேல் வேலை செய்தல் கூடாது. இரவு $7\frac{1}{2}$ மணி முதல் அடுத்த நாள் காலை 6 மணி வரை அவர்கள் தொழிற்சாலை வேலை செய்யக்கூடாது.

**13. பம்பாய் கடைகள், வணிக நிறுவனங்கள் சட்டம், 1939 :** கடைகள், கொட்டகைகள், உணவுச் சாலைகள் இவைகளில் பணியாற்றும் ஊழியர்களுடைய தின வேலையை $9\frac{1}{2}$ மணிக்குள்ளாகக் குறுக்கியும், 5 மணி நேர உழைப்பின் பிறகு $\frac{1}{2}$ மணி நேர ஓய்வு கொடுக்க வேண்டுமென்றும், வாரமொரு விடுமுறை நாள் அளிக்கப்பட வேண்டுமென்றும் வற்புறுத்தியது. 1941-ல் இம்மாதிரிச் சட்டம் வங்காளத்திலும், பஞ்சாப்பிலும் நடைமுறையில் கொண்டுவரப்பட்டது.

**14. குறுமக் கூலிச் சட்டம், 1948:**[1] இந்தியாவின் பல்வேறு பாகங்களில் பல்வேறு தொழில் துறைகளில் பல்வேறு விகிதத்தில் கூலி கொடுக்கப்படுகிறது. கம்பள விரிப்பு, நெசவு, அரிசி மாவரைத்தல், புகையிலை தயாரித்தல், துவரை அரைத்தல், பீடித் தொழில், ரப்பர், தேயிலை, காப்பித்தோட்டம், எண்ணெய்ச்செக்கு,

1. உ. தொ. நி. இந்தியத் தொழிலாளர் சட்ட நிறுவனம் (I.L.O.): 1937-38, பக்க எண் 30-40.

ஆலைகள், பஞ்சாயத்து ஆட்சியில் பிணைந்த நிறுவனம், சாலைகள் போடுதல், கட்டட வேலை, கல் உடைத்தல், அரக்கு உண்டாக்கல், அபிரகத் தொழில், தனியார் நடத்தும் மோட்டார் தொழில், தோல் பதனிடுதல், தோல் மண்டி இவைகளில் குறுமக் கூலிச் சட்டம் 1948-ல் கொண்டுவரப்பட்டது. இச் சட்டப்படி குறைந்த அளவுக் கூலி எவ்வளவு என்றும் வரையறுக்கப்பட்டது. மூன்று மாத முன்னறிவிப்புக் கொடுத்து, இதர தொழில்களுக்கும் இந்தச் சட்டத்தை அமலாக்க இராச்சிய அரசாங்கத்தினருக்கு அதிகாரம் கொடுக்கப்பட்டது. விவசாயத்தில் குறைந்த அளவான கூலி எவ்வளவு என்பதை முடிவு கட்ட இராச்சிய சர்க்காருக்கு அதிகாரம் கொடுக்கப்பட்டது. இச் சட்டத்தை நடப்பில் கொண்டு வருவதில் இடையூறும், காலதாமதமும் ஏற்பட்டன. இராச்சிய அரசாங்கங்கள் இவைகளில் சில பகுதிகளையே அமலாக்கின.

**15. தக்க கூலிப் பிரச்சினை :** ஒரு சராசரி நிலையிலுள்ள தொழிலாளியின் கூலியைப் பற்றிய ஒரேமுகமாக, உலகெலாம் அமைந்துள்ள எண்ணம், தொழிலாளியின் ஊதியம் மிகவும் குறைவு என்பதே. கூலியைக் கூட்டுவதைப்பற்றிப் பல எதிர்ப்புகள் தோன்றுகின்றன. குறிப்பாகத் தொழிலாளிக்கு அதிக கூலி கிடைப்பதால் அவன் குடிவெறியில் இறங்கிப் பணத்தைச் செல விட்டு மறுபடியும் சோம்பேறியாகிறான் என்று கருதுகின்றனர். இதனால் அவனது திறன் மழுங்கி மட்டமான நிலையை அடையும் எனக் கொள்ளலாம். இவ் வெதிர்ப்பைப் பேராசிரியர் பிகு, தமது பொருளாதார நலம் என்ற நூலில் பின்வருமாறு கூறியுள்ளார் : 'தொன்றுதொட்டு வறுமையில் ஆழ்ந்தவர்களுக்குத் திடீரெனப் பொருளாதார முன்னேற்றம் ஏற்பட்டவுடன் சூழ்நிலைக்குத் தக்க வாறு தங்களை உயர்த்திக் கொள்ள இயலாது. அறிவிலி போன்று பயனற்ற செயல் முறையில் இறங்கிச் செலவுகளைச் செய்வார்கள். இதனால் சமுதாய வளர்ச்சிக்கு எவ்விதத்திலும் பலனளிக்காது. ஆயினும், மேலோங்கிய வருமானம் நீடித்து நிலைத்து நின்றால் மூடச் செயல்கள் நின்றுவிடும். வருமான உயர்வு, சிறிது சிறிதாக உயர்ந்தால் மூடச் செய்கையும் தடைப்படும். இவர்களுடைய அறிவீனத்தை ஒரு மாபெரும் இலக்காகக் கொண்டு வாதாடத் துணிவது விநோத மனப்பான்மையையே காட்டுகிறது'.[1] தொழிலாளிக்கும் முதலாளி[illegible] அதே நிலையில் தன் கூலியைத் [illegible] மா[illegible] விலை பேச, போதிய சக்தியற்ற [illegible]ளிக்குப் போதிய ஊக்கமளித்து, [illegible]தாயத்தில், அவனுக்கு நியாயப்படி கிடைக்க

1. ஏ. ஸி. பிகுவின் 'நலனைப் பற்றிய பொருளாதாரம்', பக். 53-4.

வேண்டிய பங்கைக் கிடைக்கும்படிச் செய்ய வேண்டியது இன்றி யமையாதது. இலாபத்தின் அளவை எவ்வாறு கட்டுப்படுத்த வேண்டுமோ, அதேபோல் கூலியின் அளவையும் கட்டுப்படுத்த வேண்டிய நிர்ப்பந்தம் ஏற்படலாம். பண வீக்கத்தைத் தடுக்க லாபத்தையும், கூலியையும் கட்டுப்படுத்தும்படித் திட்ட ஆணைக் குழுவினர் (Planning Commission) ஐந்தாண்டுத் திட்டக் கால வரம்பில் வலியுறுத்தியுள்ளனர்.

**16. தேயிலை மாவட்டங்களில் குடியேற்றத் தொழிலாளர் சட்டம், 1932 :** தோட்டத் தொழிலாளர்களைப் பொறுக்கும் முறையில் சில சிக்கல்கள் உள்ளபடியால், இதை ஒரு தனிப்பட்ட பிரச்சினையாகக் கருதுகின்றனர். 1932ஆம் ஆண்டின் சட்டப்படி ஒவ்வோர் இராச்சிய சர்க்காரும், இந்திய சர்க்காரின் கட்டுப் பாட்டிற்கு ஏற்பத் தத்தம் இராச்சியங்களில் தோட்டத் தொழில் செய்ய வரும் ஆட்களுக்குக் குடியேற்ற வசதிகள் கொடுக்க வேண்டும். பட்டயம் பெற்ற தோட்டத் தலைவன் (garden sirdars) அல்லது உரிமைக் கட்டணம் கட்டி ஆள் பொறுக்கும் அதிகாரம் பெற்றவர்கள் மூலமாகவே வேலை கொடுப்பவர்கள் ஆளெடுக் கலாம். 16 வயதிற்கும் குறைவான வயதுள்ளவர்கள் குடியேற்றம் செய்ய முயலுவது சட்டத்திற்குப் புறம்பானது. மேலும் அவ்வாறு குடியேறுபவர் தமது பெற்றோர்களுடன் அல்லது காப்புப் பொறுப் பாளர்களுடன் வரவேண்டும். அஸ்ஸாமில் இவ்வாறு அனுமதிக் கப்படுகிறார்கள். தேக மெலிவு ஏற்பட்டாலும், தக்க வேலை கொடுக்கப்படாவிட்டாலும், கூலி கொடுக்கப்படாமல், நேர்மை யற்ற முறையில் நிறுத்தப்பட்டாலும் அஸ்ஸாமில் நுழைந்த மூன்று ஆண்டுகளுக்குள் தாய் நாட்டிற்குத் திரும்ப அனுமதிக்கப்படு கிறார்கள். சட்டப்படி மேற்பார்வையிடவும், குடியேற்றம் சம்பந்த மான தகவல்களைப் பரிசீலனை செய்யவும் குடியேற்றக் கட்டுப்பாடு அதிகாரி (Controller of Emigrants) ஒருவரை நியமிக்கச் சட்டத்தில் இடமிருக்கிறது. இது சம்பந்தமான செலவுகளை ஈடு கட்டக் குடியேற்றத் தொழிலாளர் வரி, தலைக்கு ரூ. 9 வீதம் வசூல் செய்யவேண்டும். அல்லது இந்தியக் கெஜட்டில் கண்ட தொகையை வசூல் செய்யவேண்டும்.

தோட்டத் தொழிலாளர் சட்டம் 1951-ன்படி, இத் தொழிலில் கல்வி, மருத்துவப் பணியாளர்களைப்பற்றிய நியமனம், தொழிலாளி யின் நலனைக் கோரி நல்ல குடிநீர் வசதி, சிற்றுண்டிச் சாலைகள், குழந்தைகளின் விடுதிகள் ஆகியவைகளை யமைத்தும், வேலை நேரத்தைச் செம்மைப்படுத்தியும், வார விடுமுறையை ஏற்பாடு செய்தும் தொழிலாளருக்கு உதவியது.

**17. கனிகளில் பணியாற்றுபவர்களுக்கான சட்டம் :** முதன் முதலாக அமைந்த சுரங்கச் சட்டம் (1901ஆம் ஆண்டிலேயே ஏற்பட்டது) ஆய்வாளர்களை நியமிக்க ஏற்பாடு செய்யப்பட்டது. 1923-ல் ஏற்பட்ட சட்டம், முதல் சட்டத்தை விரிவுபடுத்தி, நிலப் பரப்பில் வேலை செய்பவர்களுக்கு வாரம் 60 மணி நேர வேலை என்றும், சுரங்கங்களுள் வேலை செய்பவர்களுக்கு வாரத்தில் 54 மணி நேரம் வேலை என்றும் வரையறுத்தது. தரையின் கீழ் 13 வயதுக்குட்பட்ட சிறுவர்கள் வேலை செய்ய அனுமதிக்கப்பட வில்லை. சற்றேறக்குறைய நூற்றுக்கு 45 பேர் பெண்டிராக இருந்த தால் உடனே பெண்டிரைத் தடுக்க இயலவில்லை. 1929ஆம் ஆண்டில் இயற்றப்பட்ட சட்டத்தில் வங்காளம், பீஹார், ஒரிஸா, மத்திய மாகாண நிலக்கரிக் கனிகளிலிருந்த பெண் தொழிலாளர் களுக்கு விலக்கு அளித்தது. அதேபோன்று பஞ்சாபில் உள்ள உப்புச் சுரங்கங்களிலும் பெண் தொழிலாளர்கள் அனுமதிக்கப் பட்டனர். 1939ஆம் ஆண்டு ஜூலை மாதம் 1ஆம் தேதி முதல், பெண் தொழிலாளர்கள் இத் தொழில் சுரங்கங்களுள் வேலை செய்யக்கூடாதென முடிவு செய்யப்பட்டது. யுத்த காலத்தை முன்னிட்டு 1943-ல் தற்காலிகமாகப் பெண்களை வேலை செய்ய அனுமதித்தனர். யுத்தம் முடிவு பெற்றதும் 1946 ஆம் ஆண்டில் இச் சட்டத்தைப் பிரகடனம் செய்து அதன்படிப் பெண் தொழிலாளர்களை அனுமதிக்கவில்லை.

1923ஆம் ஆண்டுச் சட்டத்தைத் திருத்தி 1928-ல் வெளியிடப் பட்டது. அதன்படி நாளொன்றுக்கு எவ்வளவு மணி நேர வேலை என்று முடிவாகியது. 24 மணி நேரங்களுள் 12 மணி நேரத்திற்கு மேல் அதே தொழிலாளர்களைக் கொண்டு வேலை செய்ய அனுமதிக்கக் கூடாது. ஒரு வாரத்தில் ஆறு நாட்களுக்குமேல், தொழிலாளி வேலை செய்யக்கூடாதென்றும், நிலப் பரப்பின்மேல் வேலை செய்பவர் ஒரு வாரத்தில் 54 மணி நேரத்துக்கு அதிகப் படாமலும், தினமொன்றுக்கு 10 மணிக்கு மேற்படாமலும் வேலை செய்ய வேண்டும் என்றும், நாளொன்றுக்கு வேலையும் ஓய்வும் சேர்ந்து 12 மணிக்கு அதிகப்படக் கூடாதென்றும் 6 மணி தொடர்ந்து வேலை முடிந்தவுடன், ஒரு மணி நேர ஓய்வு தர வேண்டும் என்றும் 1935ஆம் ஆண்டுச் சுரங்கத் தொழிலாளர் சட்டம் வற்புறுத்தியது. நிலப் பரப்பின்கீழ் வேலை செய்பவர் எக் காரணத்தை முன்னிட்டும் 9 மணிக்கு மேலாக வேலை செய்தல் கூடாது. அஞ்சல் (relay) முறையில் வேலை செய்பவர்களுக்கு 9 மணி நேர வேலை பரவலாக அமைதல் வேண்டும். 15 வயதுக்கு உட்பட்ட சிறுவர்கள் எக் காரணத்தை முன்னிட்டும், எந்தச்

சுரங்கத்திலும் பணியாற்றக் கூடாது எனத் தடுப்புச் சட்டம் அமலாகியது.

சுரங்கத் தொழிலாளருக்கு வருங்காலச் சேமிப்பு நிதித் திட்டம் ஒன்று 1948ஆம் ஆண்டில் ஒரு மசோதாவாகக் கொண்டுவரப் பட்டது. அதன்படி வேலை கொடுப்போர் ரூபாய்க்கு ஓரணு வீதம் வேலையாளின் அடிப்படை ஊதியத்தின் மேல் கொடுக்க வேண்டும். வேலையாளும் அதற்குத் தக்க அளவு நிதியளிக்க வேண்டுமென்று முடிவாக்கப்பட்டது.

சுரங்கச் சட்டங்களை விதித்தபின், சுகாதாரக் குழு (Board of Health) ஒன்றை நியமனம் செய்து, தொழிலாளரின் சுக நலன் களைக் கண்காணித்து, அவர்களுக்குத் தக்க இருப்பிடம், குடிநீர், மருத்துவ உதவி, சுகாதாரச் சுற்றுப்புறம் இவைகளை அந்தந்த வேலை கொடுப்போர் அளிக்கிருரா என்று கவனிக்க ஏற்பாடு செய்யப்பட்டது.

சுரங்கங்களில் அநேக விபத்துக்கள் ஏற்பட்ட காரணத்தால் அதைத் தீவிரமாக ஆய்ந்து, தடுப்பு முறைகளைப் பற்றி முடிவு செய்ய 1937ஆம் ஆண்டில் வல்லுநர் கொண்ட குழு ஒன்றை மத்திய அரசாங்கம் நியமனம் செய்தது. இக் குழு தன்னறிக்கையில் நிலக்கரி எடுக்கும் வர்த்தகத் தொழிலை வெகு விளக்கமாக விவ ரிக்கும்போது "இத் தொழிலை விளையாட்டுப் பந்தய மொழியில் உருவகப்படுத்தி விளக்கம் கொடுப்போமாகில், லாபம் ஓட்டத்தில் முதலிடத்தை அடைகிறது; காப்பு முறை கிட்டத்தட்ட இரண்டா வது இடத்தை அடைய முயலுகிறது. செம்மையான தொழில் முறைகள் எனப்படுபவை 'அவைகளுங் கூட ஓடின' என்ற நிலையிலிருந்தன எனக் கூறலாம். தேசீய நலனெனப்படுவது இறந்த பரி போன்றதாகும். அதனல், அது கிளம்புமெனக் கூறயியலாது".[1]

**18. 1952 ஆம் ஆண்டுச் சுரங்கச் சட்டம்:** தொழிலில் முறைகளைச் சீர்படுத்தவும், சுரங்கங்களில் ஆபத்துகள் நிகழா வண்ணம் தடுக்கவும், முன்னியற்றப்பட்ட சட்ட திட்டங்களை ஒழுங்குபடுத்தித் திரட்டி, சுரங்கச் சட்டம் என்று 1952-ல் வெளி யிடப்பட்டது. 1952 ஆம் ஆண்டு ஜூலை மாதத்தில் இது அமலுக்கு வந்தது. ஜம்மு காஷ்மீர் பகுதிகள் நீங்கலாக, ஏனைய எல்லாப் பகுதிகளிலும் இது அமலுக்கு வந்தது. நிலப் பரப்பின் கீழ் வேலை செய்வோருக்கு நாளொன்றுக்கு 8 மணிக்கு மேற்

1. 'இந்தியாவின் தொழிலாளி' பக்கம் 239. பி. வெ. ரெஷ்.

படாமலும், வார மொன்றுக்கு 48 மணி நேர வேலை என்றும், நிலப் பரப்பின் மேல் பணி செய்பவருக்கு நாளொன்றுக்கு 9 மணி நேரத்திற்கு மேற்படாமலும் வாரமொன்றுக்கு 48 மணிக்கு மேற்படாமலும் வேலை செய்யலாமென்றும் வரையறுத்தது. நிலப்பரப்பின் கீழ் வேலை செய்வோருக்கு மிகை நேர ஊதியம் நாட்கூலியைப் போல் இரண்டுமடங்கு கொடுக்கப்பட வேண்டும் என்றும், நிலப் பரப்பின் மேல் பணியாற்றுபவர்களுக்கு நாட் கூலியைப் போல் 1½ மடங்கு கொடுக்க வேண்டும் என்று இயம்புகிறது. 15 வயதுக்கு உட்பட்ட சிறுவர்களை வேலையில் அமர்த்தக்கூடாதென்றும், பெண்டிரை நிலவறைகளில் பணி செய்ய அனுப்புதல் கூடாதென்றும், நிலப்பரப்பின் மேல் காலை 6 முதல் மாலை 7 வரையில்தான் வேலை செய்ய விடலாமென்றும், அதற்கு முன்போ, பின்போ, வேலை செய்ய வற்புறுத்தக்கூடாது என்றும் அது விதித்தது. 18 வயதுக்குட்பட்ட இளங்காளையரை மருத்துவப் பரிசீலனை செய்த உடல் நிலைச் சான்றுப்படி, தகுதி எனக் கொண்டால், நிலப் பரப்பின்கீழ் வேலை செய்ய அனுமதிக்கலாமென்றும், தகுதியற்றவர் வேலை 4½ மணி நேரத்திற்கு மேற்படக் கூடாதென்றும், தொழிலாளர்களுக்கு, மாதச் சம்பளம் பெறுபவராக இருப்பின், சம்பளத்துடன் ஓராண்டில் 14 நாட்கள் ஆண்டு விடுமுறை, கூலி பெறுபவர்களானாலும் வேலை மதிப்பீட்டின்பேரில் தொழில் செய்பவரானாலும் ஆண்டு விடுமுறை 7 நாட்கள் எனவும் வரையறுக்கப்பட்டதுடன், சுகாதாரத்தைப் பற்றிய விதிகளும் இயற்றப்பட்டன. மத்திய அரசு, 1948 ஆம் ஆண்டு ஆலைச் சட்டப்படி, சுரங்கங்களிலும் சுகாதாரத் தடுப்பு முறைகளைக் கையாளும்படி வற்புறுத்தலாம்.

**19. வேலையாள் இழப்பீட்டுச் சட்டம், 1923 : (பின்னர் திருத்தமுற்றது) :** முதன் முதலாக இச் சட்டம் 1923-ல் கொண்டு வரப்பட்டது. தலா 1926, 1929, 1931, 1933ஆம் ஆண்டுகளில் திருத்தங்கள் கொண்டுவரப்பட்டன. இந் நாட்டில் எல்லாத் தொழில்களிலும் பணியாற்றும் 7 மிலியன் தொழிலாளிகளுக்கும் இது சட்ட வழியே ஆதரவு அளிக்கிறது. கூலியாளின் சராசரி வருவாயைப் பொறுத்து இழப்பீட்டுத் தொகை இவ்வளவு என்று வரையறுக்கிறது. மாதக் கூலி ரூ. 10 உள்ள ஈட்டுறுதி செய்யப்பட்ட தொழிலாளி இறந்துவிட்டால் ரூ. 500 கொடுக்கப்படும். நிரந்தரமாக ஏற்படும் ஊனத்தின் காரணமாக ரூ. 700-ம் தற்காலிக ஊனத்திற்கு மாதக் கூலியில் ஒரு பகுதியும் கொடுக்கப்படும். அதே படியில் ரூ. 200 மாத ஊதியம் பெறுபவருக்கு ரூ 4,000, ரூ. 5,000 என்றும், மாதம் ரூ. 30 ஆக வரையறுக்கப்பட்டுள்ளது. சுரங்கக் கூலியாள் இறந்தால் ரூ. 200-ம் நிரந்தர ஊனத்திற்கு

ரூ. 1,200 எனவும் தற்கால ஊனத்திற்கு மாதக் கூலியில் பாதி எனவும் கூறுகிறது. 1933ஆம் ஆண்டில் கொண்டுவந்த சட்டம் இழப்பீடு பெறத் தகுதியுள்ள உறவினருடைய நலனைக் கோரிச் சாவைத் தரும் விபத்துகளை உடனுக்குடனே இராச்சிய அரசாங்கக் கமிஷனர்களுக்கு (ஆணையாளர்களுக்கு) அறிவித்துவிட வேண்டும் என்று வலியுறுத்துகிறது. வேலையாள் இழப்பீடு-திருத் தச் சட்டம் 1945-ல் வெளிவந்தது. இழப்பீடு கொடுக்க அதிகப் படியான மாத ஊதியம் ரூ.300-லிருந்து ரூ. 400 ஆக அதிகப்படுத்தப் பட்டது. ரூ. 300 முதல் ரூ.400 வரை மாத ஊதியம் பெறுபவருக்கான இழப்பீட்டுத் தொகை ஏற்ற விகிதத்தில் கணக்கிடப்பட்டது.

வேலையாள் அரசாங்க ஈட்டுறுதிச் சட்டமொன்று 1948ஆம் ஆண்டில் கொண்டுவரப்பட்டது. இழப்பீட்டுக்கு மேலாக மருத்துவ உதவி, ஊனம், வியாதி, சார்ந்தவர்கள், பிள்ளைப்பேறு இவை சம்பந்தமான வசதிகளும் கொடுக்கப்பட்டன. இதற்கான நிதியை அரசாங்கமும், வேலை கொடுப்போரும் வேலையாட்களும் கொடுக்கிறார்கள். மாத ஊதியம் ரூ. 40 !-க்குக் கீழ்ப்பட்ட தொழிலாளருக்கே இச் சட்டம் அனுமதி கொடுக்கிறது. வேலையாள் இழப்பீட்டுச் சட்டத்திற்குப் பதிலாக உயரிய முறையில் இது அமைக்கப்படலாம் என்று எதிர்பார்க்கப்படுகிறது.[1]

**20. ரெயில்வேக்களுக்கான தொழிலாளர் சட்டம்:** 1922ஆம் ஆண்டின் ஆலைச் சட்டம், ரெயில்வேத் தொழில் நிலையங்களையும் உட்படுத்தியிருந்தது. சில ஆண்டுகளுக்கு முன்னர்க் கால் மிலியன் ரெயில்வே தொழிலாளர்களது வேலை நேரம், உழைப்பு இவைகளைப் பற்றி யாதொருவிதமான சட்ட அமைப்பும் ஏற்பட வில்லை. 1919-ல் வாஷிங்டனில் இயற்றப்பட்ட பன்னாட்டு மரபுகளையும், 1921-ல் ஜெனிவாவில் தொகுக்கப்பட்ட பன்னாட்டு மரபினையும் அடிப்படையாகக் கொண்டு, இந்திய ரெயில்வே திருத்தச் சட்டம் 1930-ல் அமைக்கப்பட்டது. ரெயில்வே ஊழியர் வாரத்தில் 60 மணிக்கு மேலாகப் பணி செய்தல் கூடாது. விட்டு விட்டு வேலை செய்யும் தொழிலாயிருப்பின் வாரம் 84 மணிகள் தான் என்றும், வாரமொன்றுக்கு 24 மணி நேர ஓய்வு கிடைக்க வேண்டும் என்றும், இழந்த ஓய்வு நேரங்களுக்காகத் தக்கஇழப்பீடு செய்யவேண்டும் என்றும் கூறுகிறது. அவசர நிலையில் மேற்கண்ட சட்ட திட்டங்களை ரத்து செய்து, மிகை நேர ஊதியமாக அளித்தல் வேண்டும் என்றும் கண்டுள்ளது.

1. *உ. தொ. நி. இந்தியாவின் சட்ட நிறுவனம் (I.L.O.), 1937–52, பக்கம் 60-61.*

**21. இந்தியாவில் நிகழும் தொழில் வழக்குகள் :** முதல் உலக யுத்தத்திற்கு முன்னர் இந்தியாவில் தொழில் வழக்குகள் நிகழவில்லையெனக் கூறலாம். யுத்த முடிவின்போது குறுகிய காலத்துக்குள்ளேயே பல தொழில் தகராறுகளைக் காண நேர்ந்தது. 1919-20-ல் பம்பாயில் நடந்த மிகப் பெரிய வேலை நிறுத்தத்தில் 1,50,000 நெசவாலைத் தொழிலாளிகள் ஈடுபட்டிருந்தனர். யுத்த முடிவின் காரணமாக நிகழ்ந்த விலையேற்றத்தாலும், தொடர்ந்து வந்த மந்தத்தின் காரணத்தால் ஏற்பட்ட கூலி வெட்டுகளாலும் அகமதாபாத், பம்பாயில் உள்ள தொழிலாளர், வேலைநிறுத்தங்களைத் தொடங்கினர். 1928ஆம் ஆண்டில் நாடு முழுவதிலும் பெரும் வேலை நிறுத்தங்கள் ஏற்பட்டன. 1937-ல் சென்னை, பம்பாய், அகமதாபாத், கான்பூர் நகரங்களிலும், இன்னும் பெரிய தொழில் நகரங்களிலும் வேலை நிறுத்தங்கள் தொழிலாளர்களின் குமுறலின் காரணமாக வெடித்தெழுந்தன. இரண்டாம் உலகப் போரின்போதும் வேலை நிறுத்தங்கள் நீடித்தன. ஆயினும் இந்தியத் தற்காப்புச் சட்டத்தின் கீழ் வேலை நிறுத்தங்கள் செய்வோரைக் கைது செய்து அடக்கினர். பிற்காலங்களில் அரசியல் ஈடுபாட்டினுலும், கம்யூனிஸ்டுகளின் செயல்களாலும், குறைந்த கூலியும் அதிகவிலையாக விருந்த காரணத்தாலும், தொழிலாளிகளிடையே ஏற்பட்ட மனக் கசப்பினுலும், வேலை நிறுத்தங்கள் நிகழ்ந்தன.

**22. வழக்குகளை தடுக்கும் வழிகள் :** வழக்குகளும் பூசல்களும் தோன்று முன்னரே அவற்றைத் தடுக்க முயல்வது நலமாகும். அவை தோன்றிய பின்னர் தடுப்பது மிகக் கடினம். வேலை கொடுப்போர் வேலை செய்வோர் அடங்கிய சரியான நிறுவனங்கள்தான் இவைகளைச் சரிவரக் கவனித்து ஆவன செய்ய இயலும். இவ் வழியில் முடிவு காண முதற்படியாக 1926-ல் தொழிற்சங்க மசோதா தயாரிக்கப்பட்டது. இங்கிலாந்திலுள்ள விட்லி (Whitley Committees) குழுவினர்களைப் போல், நம் நாட்டிலும் இவ்வகைக் குழுவினர் நியமிக்கப் படவேண்டும் என்று 1922-ல் ஏற்பட்ட பம்பாய்த் தொழில் வழக்குக் குழுவும் (Bombay Industrial Disputes Committee) 1929-ல் வந்த தொழில் குழுவினரும் (Labour Commission) முடிவு செய்தனர். சர்க்காரும், வேலை கொடுப்போருள், குறிப்பாக டாட்டாவும் போதிய அளவுத் தொழிலாளர்களும், வேலை கொடுப்போரும் அடங்கியுள்ள குழுக்களை அமைத்திருக்கின்றனர். 1940 முதல் இத் துறையில் தக்க முயற்சிகளெடுத்து இந்தியத்தொழில் மாநாடு (Indian Labour Conference) அல்லது முக்கூட்டுத் தொழில் மாநாடு (Tripartite Labour Conference) என்ற ஓர்

ஆலோசனைக் குழுவினரைச் சர்க்கார் நிறுவியுள்ளது. ஆண்டிலொரு முறை முழுத்தொழில் மாநாடு (The Plenary Labour Conference) கூடி மன்றமமைத்துத் (forum) தொழிலதிபர்கள் அனைவரும் கூடித் தங்கள் வேற்றுமைக் கருத்துக்களை வெளிப்படுத்தி, வாதங்கள் புரிந்து முடிவில் வழக்குகளுக்கு ஒரு முடிவு காணுவார்கள். இதன் நிலையான குழுவினர் அடிக்கடிச் சந்தித்துப் பேசுவார்கள். தொழிலாளர்களுக்கும், வேலையளிப்போருக்கும் உள்ள சிக்கல்களைத் தீர்த்துவைத்து அதன் மூலம் கதவடைப்பையும், வேலை நிறுத்தத்தையும் முடிவு கட்டவே இவர்கள் கூடுகிறார்கள்.

**23. 1929 ஆம் ஆண்டுத் தொழில் தகராறுச் சட்டம்:** இவ்வாண்டில் இயற்றப்பட்ட சட்டம் வேலை கொடுப்போரும், வேலை செய்வோரும் சேர்ந்த ஒரு குழு உள்ளதென்ற முன்னேற்றுடன் பல அரிய பெரிய திருத்தங்களைக் கூறுகின்றது. விவரமற்றும், தன்னிச்சைப்படியும், கதவடைப்புக்களைக் கண்டிக்கவும், தான் தோன்றித்தனமாக நடத்தப்படும் வேலை நிறுத்தங்களை விட்டொழிக்க அவை உருவாகுமுன்னரே தொழிலாளர்களின் மனத்தாங்கல்களை அறிந்துகொண்டு, ஆவன செய்யவும் வேண்டுமென்று கூறுகிறது. விசாரணை நீதிமன்றங்களையும், சமரசக் குழுவினரையும், சர்க்கார் நியமனம் செய்ய வேண்டுகிறது. இந்த மன்றத்திற்குத் தொழிலாளரோ, அல்லது தொழிலாளியும் முதலாளியும் தங்கள் வழக்குகளைத் தனித்தோ அல்லது சேர்ந்தோ கொண்டுவரலாம். விசாரணை நீதி மன்றத்திற்கு ஒரு தலைவருண்டு. இவர் சர்க்காரின் கட்டுப்பாட்டுக்குட்படாது தன் முழுப் பொறுப்பில் இருப்பவர். இம்மாதிரியாக இருவர்களை நியமிக்க அரசாங்கத்திற்கு அதிகாரமுண்டு. அல்லது இவ்விசாரணை மன்றம் ஓர் ஆள் மன்றமாகவே இருக்கலாம். சமரசக் குழுவினரில் ஒருவர் தலைவர். இவரும் சர்க்காரின் கட்டுக்கடங்கியவரல்லர். இரண்டல்லது நான்கு இதர உறுப்பினர்கள் உளர். இவர்கள் தொழிலாளிக்கும், முதலாளிக்கும் ஒரேவித எண்ணில் அமைக்கப்படுவார்கள். ஒரு காலவரம்பினுள் தொழிலில் ஏற்பட்ட தகராறை, சுமுகமாகத் தீர்த்துவைக்க இக்குழுவினர் வற்புறுத்துகின்றனர். சமரசப் பேச்சு தோல்வியுற்றால், இவர்கள் நடந்த அனைத்தையும் விளக்கமாக எழுதி ஆளும் அரசியலாருக்கு விண்ணப்பம் செய்து கொள்ளுவார்கள். பொது மக்களின் நல்லெண்ணத்தைப் பெறும் நோக்கத்துடன் அரசினர் இந்தச் சமரசக் குழுவினரின் அறிக்கையை வெளியிடுகின்றனர்.

பொது வசதிப் பணியிலீடுபட்டவர்களுக்கான கோட்பாடுகள் இச் சட்டத்தில் தனிப்பட்ட முறையில் விளக்கப்பட்டிருக்கின்றன. இரண்டு வார முன்னறிவிப்பின்றி வேலை நிறுத்தம் செய்ய விழைந்த வேலை செய்வோருக்குத் தண்டனை விதிக்கிறது. அதே போல் முன்னறிவிப்பு இல்லாது கதவடைப்புச் செய்த முதலாளிகளுக்கு இன்னும் பெரிய அளவில் தண்டனை விதிக்கிறது. அனுதாப வேலை நிறுத்தங்களைச் சட்ட விரோதமானவை என மறைமுகமாகக் கூறுகிறது. ஒரு தொழிலில் ஏற்பட்ட தகராறு, அந்தத் தொழிலை மட்டுமே சார்ந்தது. பிறதொழில்களை எவ்வகையிலும் பீடிக்கக்கூடாது என்பதாகும். சட்டத்திற்குப் புறம்பான வேலை நிறுத்தத்திற்கு நல்ல விளக்கம், 1938ஆம் ஆண்டில் இயற்றப்பட்ட சட்டத்தில் கொடுக்கப்பட்டிருக்கிறது. இதர இராச்சிய அரசாங்கங்கள் தங்களுடைய தனிப்பட்ட நிலைக்காக வேண்டி அச் சட்டத்தில் புதிய மாற்றங்களையும், திருத்தங்களையும் கூட்டிக் கொண்டன. சமரச செயல்முறைகளை நடத்திக் கொடுக்க ஒவ்வோர் இராச்சிய சர்க்காரும் ஓர் அலுவலகம் நிறுவி, ஓர் அரசுப் பணியாளரை நியமனம் செய்யவேண்டியது என்று தொழில் குழு (1929) முடிவு செய்தது. அதன்படி, சென்னையிலுள்ள தொழில் ஆணையாளருக்கு (Commissioner of Labour) அதிகாரம் கொடுக்கப்பட்டது. பஞ்சாபில் உள்ள தொழில் இலாகா நெறியாளருக்கும், மத்திய மாகாணத்திலிருந்து புள்ளிவிவர நெறியாளர், தொழில் துறை நெறியாளர் உதவி நெறியாளர்களுக்கும் அதிகாரம் கொடுக்கப்பட்டன.

பம்பாய்த் தொழில் தகராறு சமரசச் சட்டம் 1934-ன்படி தொழில் ஆணையாளர், தலைமைச் சமரச அரசு ஆணையரென்றும் அவருடைய உதவிக்குத் தொழிலதிகாரி ஒருவரையும், மற்றும் உதவிச் சமரச அலுவலர்களையும் நியமனம் செய்யவும் ஏற்பாடாயிற்று. அதன்படி வங்காளம், உத்தரப்பிரதேசம், சென்னை, பீகார் பகுதிகளில் நியமனம் நடைபெற்றது.

**24. பம்பாய்த் தொழில் வழக்குச் சட்டம், 1938 :** இதுகாறும் நம் நாட்டில் இயற்றப்பட்ட தொழிலாளர்களுக்கான சட்டங்களுள் இதுவே மிக முன்னேற்றமடைந்துள்ளதும், மேம்பாடான முறையில் அமைந்ததுமாகும். கதவடைப்போ அல்லது வேலை நிறுத்தமோ அறிவிக்கப்படுமுன்னர் அந்தச் சங்கடத்தை நீக்கச் சட்டமுறையில் சொல்லப்பட்ட சமரச முறைகளைத் தவறாது கையாண்டு ஒரு முடிவு காண விழையவேண்டும் எனக் கூறுகிறது. இதை முன்னிட்டு, ஒரு தொழிலாளியோ அல்லது வேலை கொடுப்பவரோ, வேலை நேரமாற்றம், கூலி மாற்றம் அல்லது உத்தியோக

நிலையில் மாற்றங்கள் செய்ய விரும்பினால், அரசு அலுவலருக்குத் தக்க முன்னறிவிப்புச் செய்யவேண்டியது இன்றியமையாதது. இத் தகவல்கள் தமக்கு எட்டியவுடன், அலுவலர் சமரச முயற்சிக்கு அடிகோலுவார். சட்டப்படித் தொழிலாளர் சங்கங்கள் பதிவு செய்யப்படவேண்டும். அப்படிப்பட்ட சங்கங்கள் தொழிலளிப்போரால் ஏற்றுக்கொள்ளப்படவேண்டும். ஏற்றுக் கொள்ளப்பட்ட சங்கங்கள் இல்லையென்றால், தேர்ந்தெடுக்கப் பட்ட தொழிலாளிகளும், அரசின் தொழிலதிகாரியும், தொழிலாளர் நலனைக் கோரி, அடிப்படைப் பேச்சு வார்த்தைகளை ஆரம்பிப்பார். எல்லா ஒப்பந்தங்களும் பதிவு செய்யப்படவேண்டும். இதில் முடிவு காணவில்லையானால், அரசின் உத்தரவுபெற்ற சமரச ஆணையாளர் நுழைகிறார். அவராலும், வழக்கைச் சரியாக்க முடியாவிடின், சர்க்கார் உத்தரவுபெற்ற சமரசக் குழு நியமிக்கப்படும். முக்கியத் தொழில்களிலும், கேந்திரங்களிலும், வேலை கொடுப்போரும், சங்கங்களும் ஒரு வழக்கினைப் பொதுவர் தீர்ப்புக்கு விட முடிவு செய்தால் சர்க்கார் அதில் தலையீடு செய்வதில்லை. தாமாகவே பொதுவர் தீர்ப்பை ஏற்றுக்கொள்ள விழையும் தொழிலாளர், தொழிலளிப்போருடைய வழக்கினை விசாரணை செய்யத் தொழில் நீதி மன்றங்களை நிறுவ இச் சட்டம் உத்தரவு அளித்துள்ளது. சட்டத்தின் காரணமாக ஏற்படும் இடையூறுகளை விவாதிக்கும், மேல் கருணை மனு நீதி மன்றமாக இதைக் கருதலாம். நியமப்படி கதவடைப்போ, தொழிலிலிருந்து வேலை நிறுத்தம் செய்ததோ சட்டத்திற்குட்பட்டதா அல்லது புறம்பானதா என்று முடிவு கட்ட இந்த நீதி மன்றந்தான் தகுதியானது எனலாம்.

**25. 1947ஆம் ஆண்டின் தொழில் தகராறுச் சட்டம்:** சமரச முயற்சிக்கான விரிவான அமைப்பை இச் சட்டம் கூறி யிருக்கிறது. ஏதாவது ஒரு தொழிலில் வழக்குத் தோன்றியதென் றாலும், அல்லதுஏற்படுமென்கின்ற அறிகுறி தென்பட்டாலும் சமரச அதிகாரி அவ்விடம் போய்ச் சமரச முயற்சிக்கு ஏற்பாடு செய்வார். அவர் தாம் எடுத்த முயற்சிகளை, இராச்சிய சர்க்காருக்கு, அல்லது எந்த இராச்சியத்தில் நடைபெற்றதோ அந்த அரசினருக்கு 14 தினங்களுக்குள் அறிக்கையின் வடிவில் கொடுப்பார். தமது முயற்சியில் அவர் தோல்வியுற்றால் சமரசக் குழுவினர் பணியாற்றத் தொடங்குவர். அவர்கள் இந்த வேலையை 2 மாதங்களுள் முடிக்க வேண்டும். அவர்கள் கண்ட முடிவை ஆறு மாதங்கள் வரையும் அல்லது இருபிரிவினரும் உடன்பாடு கண்டு எத்தனை மாதங்கள் எனக் கூறுகின்றனரோ, அவ்வளவு காலம் வரையும் எது நீண்டுள்ளதோ அதைக் கொள்ளவேண்டும். தனிப்பட்ட மனிதருள்ள விசாரணை நீதிமன்றம் அமைக்கப்பட்டு அந்த

மனிதர் விசாரணை நடத்துவார். விசாரணை நடத்திய ஆறு மாதங்களுள் அவர்கள் தங்கள் முடிவைச் சர்க்காருக்குத் தெரிவிக்கவேண்டும். தொழிலுக்கெனத் தனிப்பட்ட வழக்குத் தீர்ப்பு மன்றங்களில் உயர்நீதி மன்ற நீதிபதிகளை நியமனம் செய்யலாம். அவர்களுடைய தீர்ப்பு ஆறுமாதங்கள் அல்லது சம்மதித்த கால வரம்பு ஆகியவற்றில் எது நீண்டதோ, அதைக் கணக்காகக் கொள்ளவேண்டும். சமரச முயற்சிகள் நடக்கும்போது கதவடைப்போ, வேலை நிறுத்தங்களோ செய்தல் கூடாது. தொழிற் குழுவினரும் தொழிலாளர் பிரதிநிதிகளும் ஒரே எண்ணிக்கையில் உள்ளபடி, தொழிற் குழு ஒன்றை அமைக்கச் சட்டம் இயம்புகிறது. 100 வேலையாட்களுக்கு மேலாகப் பணியாற்றும் எல்லாத் தொழில்களிலும், இம்மாதிரியான தொழிற்குழு அமைக்கப்படவேண்டும். அன்றாடம் எழும் புதிய பிரச்சினைகளை நட்பு முறையில் விவாதித்து முடிவு காணவே இது அமைக்கப்படுகிறது. கட்டாயப் பொதுவர் தீர்ப்புக்கு விடவேண்டுமென்பது கொள்கை எனலாம். தொழிலாளியின் தனிப்பட்ட உரிமையும் அவர்களை வாதிடுவதற்குத் தகுதியானவர்களாகச் செய்யவல்லதுமான வேலை நிறுத்தம் என்ற ஆயுதத்தை இது பயனற்றதாக்கி விடுகிறது என்ற காரணத்தால், தொழிலாளிகள் இதை எதிர்க்கின்றனர். பொதுமக்களின் நலனைப் பாதுகாக்கவே கட்டாயப் பொதுவர் தீர்ப்பு இன்றியமையாதது என வாதிடப்படுகிறது. ஒற்றுமையும், சமரசப் பேச்சும் பலனற்றுப் போனால்தான், இம்முறை கையாளப்படும் எனக் கூறப்படுகிறது. மேலும், அரசியலார் இம்முறையைக் கையாளுகிறார்கள் என்றறிந்தவுடன் தொழிலாளர்களும், வேலை கொடுப்பவர்களும் கடைசி முறைவரை போகமாட்டார்கள்.

**26. தொழில் வழக்குச் (மேல் முறையீடு விசாரணைத் தனிப்பட்ட வழக்குத் தீர்ப்பு மன்றம்) சட்டம், 1950 :** இதுகாறும் தனிப்பட்ட வழக்குத் தீர்ப்பு மன்றங்கள் ஒவ்வோர் இராச்சியத்திலும், முன்னுக்குப்பின் முரணாகவும், வெவ்வேறு முறையிலும் முடிவுகளை வழங்கின. 1947 ஆம் ஆண்டில் இயற்றிய தொழில் வழக்குச் சட்டத்தைத் திருத்தவும், புதிய கருத்துக்களைப் புகுத்தவும் 1950ஆம் ஆண்டில் மேற்கூறிய சட்டம் நிறைவேற்றப்பட்டது. அதன்படி, தொழில் மேல் முறையீட்டு டிரிப்யூனல் (Industrial Disputes Appellate Tribunal) ஒன்றை நியமிக்க இராச்சியச் சர்க்கார்களுக்கு அதிகாரம் கொடுக்கப்பட்டது. இத் தொழில், மேல் முறையீட்டு டிரிப்யூனல் கீழ் நீதிமன்றங்கள், அரசியல் சட்டப்படி ஏற்பட்ட நிறுவனங்கள் இதர தொழில் நீதிமன்றங்கள் முதலியவை கொடுத்த தீர்ப்பை ஆராய்ந்து, விசாரணை செய்து, தீர்ப்புக் கொடுக்கும். மேல் முறையீடு, சட்ட நுணுக்கத்தைப் பற்றியதானாலும், கூலி, போனஸ்

(Bonus) பிரயாணக் கட்டணம், ஓய்வுநிதிக்கு வேலை கொடுப்போர் செலுத்தவேண்டிய விகிதம், வேலையினின்று விலக்கல் செய்யும் போது, கொடுக்கவேண்டிய பணிக்கொடை (gratuity) தொழிலில் தரப்பிரிவு, வேலையினின்று நீக்குதல். இவைகளைப் பற்றிய தானும் விசாரணை செய்து தீர்ப்பு வழங்கும். 1949-ல் பாங்குக் கம்பெனிகளின் தொழில் வழக்கைக் கேட்டு முடிவுசெய்யச் சர்க்காரால் நியமிக்கப்பட்ட குழுவின் முடிவை எதிர்த்துவரும் எந்த மேல் முறையீட்டையும் இது கவனிக்காது. இரு கட்சியாளருடைய விருப்பின் பேரில், நியமித்த நடுவரின் முடிவை ஏற்றுக்கொண்டபின், அதை எதிர்த்து மனுக் கொடுத்தாலும் தள்ளப்படும். இரு கட்சியினரும் ஒத்துக்கொண்ட பின்னர், நியமனம் செய்யப்பட்ட மத்தியஸ்தரின் (arbitrator) முடிவை எதிர்த்து வரும் மனுக்களும் ஒப்புக்கொள்ளப்படமாட்டா. இராச்சிய சர்க்கார் இந்த மேல் முறையீட்டு டிரிப்யூனலின் முடிவை 30 நாட்களுள் மாற்றவும் புறக்கணிக்கவும் உரிமையுண்டு. இது சம்பந்தமான தகவல்களையும் விவரங்களையும் இராச்சியங்களிலுள்ள சபைகளில் நன்கு விவரித்துப் பின் முடிவு கட்டவேண்டும். இந்த டிரிப்யூனலின் முடிவை எதிர்த்து மேல் முறையீடு செய்யும் வேலை கொடுப்போர் 30 நாட்களுக்குள் திட்டத்தை மாற்றியமைத்தோ திருத்தங்கள் செய்தோ, காரியத்தைப் பலனற்றதாகச் செய்யக்கூடாது. டிரிப்யூனலின் எழுத்து மூலமான உத்தரவுபெற்ற பின்தான், தொழிலாளியைப் பழிவாங்குதலோ, தண்டிப்பதோ செய்யலாம்.

1942ஆம் ஆண்டு முதல் மத்திய அரசாங்கத்திலும், இராச்சிய அரசாங்கங்களிலும், தொழிலாளர் நலனைக் கோரும் நிறுவனங்கள் தோன்றியுள்ளன. மத்திய முக்கூட்டு நிறுவனத்தில், இந்தியத் தொழிலாளர் உறுப்பினர்கள், நிலையான தொழிற் குழுவினர், தோட்டத்தொழில், பருத்தி, சிமென்ட், தோல், நிலக்கரித் தொழில் ஆகியவைகளின் மத்தியத் தொழில் ஆலோசனைக் குழுவினர் (The Central Advisory and Industrial Committee) ஆகியோர் உள்ளனர். தொழில் மந்திரிகளின் மாநாடு இதையொட்டியே அமைந்துள்ளது. நம் நாட்டின் தொழிலாளர் பிரச்சினையையும் கொள்கைகள் எவ்வாறு அமைதல் வேண்டுமென்பதையும் நன்கு விவாதிப்பதற்கு இந்தியத் தொழில் மாநாட்டிலும், தொழில் மந்திரிகள் மாநாட்டிலும் இடமுண்டு. 'அநேக இராச்சிய அரசாங்கங்கள் தொழில் ஆலோசனைக் குழுவினை நிறுவியுள்ளனர். இதையும் மூவர்கொண்ட ஒரு குழுவெனலாம்.

1952ஆம் ஆண்டு ஜனவரி மாதத்தில்[1] இந்திய ரெயில்வேயில் இம் முக்கூட்டு நிறுவனம் ஏற்படுத்தப்பட்டது. அது ரெயில்வேயில் ஏற்படும் தொழில் தகராறுகளை முடிவுகட்ட முன்வந்தது.

கட்டாய மத்தியஸ்த முறையினால் வேலை நிறுத்தங்களைக் கட்டோடு நிறுத்த முடியவில்லை. ஆயினும், இதனால் அது அடிக்கடி ஏற்படாமல் குறைந்து வந்தது. தொழிலாளரும் அவர்கள் தலைவர்களும் இதை எதிர்க்கிறார்கள். ஏனெனில் அவர்களுடைய குறைபாடுகளை எடுத்துக் கூறுவதற்கும் தீர்ப்பதற்கும் உள்ள வாய்ப்பினை இழந்துவிடுகின்றனர். சம நோக்கோடும், இருக்கின்ற உறவை நிரந்தரமாக்கவும் கட்டாய மத்யஸ்தம் செய்யப்படுகிறது. தொழிலாளர்களும் அவர்களுடைய தலைவர்களும் நேருக்கு நேர் பேசித் தீர்வு காணவும், இல்லையென்றால் கூட்டுப்பேர முறையை நடைமுறையில் கொண்டு வரவும் விரும்புகிறார்கள். நம் நாட்டிற்குத் தற்போது இன்றியமையாத தேவை என்னவென்றால், தொழில் சம்பந்தமான எவ்வித வேலைநிறுத்தங்களும் கூடாதென்பதே. திட்டமான முறையில் நாட்டில் பெருக்க முறைகளை அமைத்தால் இந்த இடர்ப்பாடு மறைந்துவிடும். தொழிலாளரும், வேலைகொடுப்போரும் ஒருமித்து நியாயமான வழியில் வேலைசெய்தால் பொருட் செலவின்றிச் சண்டையிடாமல் முன்னேறலாம். இம் முக்கூட்டு நிறுவனமும், தொழில் மந்திரிகளின் மாநாடும் கூட்டு முறைகளைக் கையாண்டு நாட்டில் தொழில் முறையில் ஒற்றுமை காணலாம்.[2]

**27. தொழிலாளர் தொடர்புச் சட்டம், 1951 :** தொழில் குழுவினர்களும், சமரச அலுவலர்களும், விசாரணை அதிகாரிகளும் நியமிக்கப்பட்டனர். பதிவு அலுவலகங்களும், இன்னும் பல அடுக்கான நீதிமன்றங்களும் திறக்க இச் சட்டம் இடமளித்தது. தொழில் நீதிமன்றத்தின் முடிவை அனுசரித்துப்போகவாவது, அதைத் தள்ளிவிடவாவது இராச்சிய அரசாங்கத்திற்கு முழு உரிமையளிக்கிறது.

1. இந்தியா, 1955, பக்க எண் 309.

2. வட வங்காளம், அஸ்ஸாம் பகுதிகளில் உள்ள தேயிலைத் தோட்டத்தின் 8 லட்சம் தொழிலாளரும், பம்பாயில் உள்ள இரண்டரை லட்சம் ஆலைத் தொழிலாளரும கூட்டுப்பேரம மூலம் தங்களுக்கான போனஸ் பெறும் முறையைச் சீரிய முறையில் பெற்றனர் எனக் கூறலாம். இவை தக்க எடுத்துக்காட்டுக்கள். மத்திய தொழில் மந்திரி, திரு கந்துபாய் தேசாயின் உயர்ந்த உழைப்பால் இம்மாதிரி சமுகமான முறையில் கூட்டுப்பேரத்தில் வெற்றி கிடைத்தது. மூன்றாவதாக டாடா எஃகு-இரும்புத் தொழிற்சாலையுடன், ஜெம்ஷட்பூரிலுள்ள தொழிலாளர் யூனியன் ஒப்பந்தம் செய்துகொண்டு கடை மூடுதலைத் தவிர்த்ததால் எல்லாத் தொழிலாளரும், ஒற்றுமையுடனும், பச்சாதாபத்துடனும் வேலைசெய்து தொழிலாளி-முதலாளி உறவைப் பலனளிக்கச் செய்யும்படி முயன்றனர். (பொருளாதார வார ஏடு. 14 ஜனவரி, 1956.)

சட்டத்துக்குப் புறம்பான வேலை நிறுத்தங்களும், கதவடைப்பு களும் நீதிமன்ற எல்லைக்குட்பட்ட குற்றமாகு (Cognizable offence) மென்றும், சட்டத்திற்கு எதிரான ஒரு வேலை நிறுத்தத்தில் தொழிலாளர் பங்கு கொண்டால், அவர்களுக்குள்ள கூலி, போனஸ், வேலையளிப்போர் அவனுக்குக் கொடுக்கும் சேம நிதியின் பங்கு இவைகள் பறிக்கப்படும். சட்டத்திற்கு எதிரான முறையில் கதவடைப்புச் செய்தால், முதலாளி தன் பணி யாளருக்கு நாட்கூலியைப் போல இருமடங்கு அதிகம் கொடுக்க வேண்டும். நிரந்தர ஊழியனை முன்னறிவிப்பு இன்றியும், தன் புகாரை வெளியிட அவனுக்கு அனுமதி கொடுக்காதும் வேலை யிலிருந்து நீக்க முதலாளிக்கு அதிகாரம் இல்லை. அதிகப்படி யானவர்களை ஒரு மாத முன்னறிவிப்பின் பேரில் நீக்கிவிடலாம். தொழில் மன்றத்தின் முடிவை ஏற்று, அதன்படி செய்யாத, வேலை கொடுப்போருக்குப் பதிலாக இராச்சிய அரசாங்கம் அந்த முடிவை அவர்களுக்காக உடனே அமலாக்கிவிடும். ஒரு தகராறு முடிவு காணும் நிலையில் உள்ளபோது வேலைநிறுத்தமோ கதவடைப்போ செய்ய அரசு சம்மதிக்காது. அநுதாப வேலை நிறுத்தம், மந்தமாக வேலைசெய்யும் முறை, மற்றும் பொதுவசதி நிறுவனங்களில் உள்ள வேலை நிறுத்தம் இவைகளை அரசாங்கம் ஆராய்ந்து சட்டத்திற்குப் புறம்பானது என்று முடிவு கட்டலாம். சட்டப்படி நடக்கும் வேலை நிறுத்த காலத்தில், தொழிலாளர் களுக்கு நாள் விகிதப்படியுள்ள கூலியில் முக்கால் பங்கு கிடைக்க வேண்டும். நியாயமான முறையில் வேலையிலிருந்து நீக்கப் பட்டவர்களுக்கு அவர்கள் செய்த ஒவ்வொரு ஆண்டுப் பணியையும் பொறுத்து ஒரு மாதக் கூலியும், அதற் கேற்ப பஞ்சப்படியும் கொடுக்க இச் சட்டம் இடமளிக்கிறது.

மேற்படி சட்டத்திலுள்ள சிக்கல்களாலுண்டான விபரீதங்களை இங்கு விவரிப்போமாக : தகராறுகளில் முடிவுகாண்பது பல பிரதி நிதிகள் மூலமாக நடைபெறுவதால், காலதாமதம் ஏற்படுகிறது. இந்தப் பிரதிநிதிகளின் மூலம் காணும் முடிவைச் சர்க்காருக்கு எடுத்துக்கொள்ளவோ அல்லது வேண்டாமென்று அகற்றவோ இடமிருப்பதால், இதில் அரசியல் வேற்றுமை காரணமாக நேர்மைக்கு இடமில்லாது போகிறது. தொழிலாளியின்மேல் வேண் டாத தடைகளைப் போட்டுள்ளது. இடசாரித் தலைவர்களும், தொழிற்சங்க முதல்வர்களும் இதை ஆமோதிப்பதில்லை. எந்த நியாயமான வேலை நிறுத்தத்தையும் சட்டத்திற்குப் புறம்பானது என்று முடிவுகட்டச் சர்க்காருக்கு மிகவும் எளிது. பிற்போக்குச் சக்திகள் இந்தியாவில் தொழிற்சங்க வளர்ச்சிக்கு எல்லாவிதமான

தடைகளையும், தடுப்புகளையும் அரசியலார் மூலம் கொண்டு வரலாம்.

**28. இந்தியத் தொழிற் சங்க இயக்கம் :** முற்காலத்தொழிற் சங்கம், முதலாவது யுத்தத்திற்குப் பிறகு நாட்டில் ஏற்பட்ட தொழிற் கொந்தளிப்பின் காரணமாக உருவாகியது. அவைகள் 'சிறிய அளவில் உண்டான வேலை நிறுத்தக் குழுக்கள்' (Strike Committees) அவற்றில் சில அலுவலர்களும், சந்தா கொடுப்பவர் களும்மட்டும் உறுப்பினராக இருந்தனர்.[1] பின்னர், இந்த இயக்கம் நிலைபெற்று நிரந்தரமாகியது. ஆயினும், அதில் மிக்க குறைகள் இருந்தன. இதனுடைய பெரும் நன்மை என்ன வெனில் ஆரம்ப முதலே, இது அகில இந்தியத் தொழிற்சங்க இயக்கமாக இருந்ததுதான். குறிப்பாக, அகில இந்தியத் தொழிற் சங்க காங்கிரஸ் 1920 முதல் ஆண்டுதோறும் மாநாடு நடத்தி வந்தது.

**29. இந்தியாவில் இந்த இயக்கத்திற்குப் பலம் குன்றியதன் காரணம் :** இந்தியத் தொழிற்சங்கம் தோன்றிய நாள்முதல் பல மற்றிருக்கிறது. அதற்கான அடிப்படைக் காரணங்களை விளக்குவோமாக : (1) எல்லாத் தொழிலிடங்களிலும் உள்ள தொழிலாளர்கள் நிலையாக இராது பெயர்ந்து கொண்டிருந்தனர். (2) பல்வேறு மொழியினரும் பழக்க வழக்கங்களில் வேறுபாடு கள் உடையவராக இருந்தனர். (3) வறுமையின் பிடியில் சிக்கித் தவித்த காரணத்தால் தொழிற்சங்கத்திற்கு உரிய சந்தாத் தொகையைச் சரிவரக் கட்ட முடியவில்லை. (4) தொழிற்சங்கக் கோட்பாடுகளை மதித்தும், கட்டுப்பாடுகளுக்கு அடங்கியும் நடக்க விருப்பமின்மை. (5) கல்வியறிவு அற்ற தொழிலாளி களிடையே தக்க தலைவர்கள் தோன்றவில்லை. பிரிட்டிஷ் தொழிலாளர் சங்கத்தின் தலைவர்கள் கூட அறிவுத்திறன் வாய்ந்த மத்தியதரக் குடும்பத்திலிருந்துதான் தோன்றினர். இந்நிலை நிரந்தரமாக இல்லை. ஆனால், இந்தியாவிலோ, என்றும் தொழி லில் ஈடுபடாத வெளியாட்கள்தான் தொழிற்சங்க அலுவலர் களாகவும் தலைவர்களாகவும் பணியாற்றுகின்றனர். இவர்களுக்கு நேரிடை அனுபவமும் கிடையாது. தொழிலில் உள்ள இடையூறுகளையும், அறிந்திருக்க மாட்டார்கள். மேல்நாடுகளில் வெளியாரிடமிருந்து அபிப்பிராயங்களைக் கேட்பார்கள். அவர் களுடைய ஆலோசனைகளைக் கேட்டுக்கொள்வார்கள். ஆனால் அவர்களைக் கட்டுப்படுத்த விடுவதில்லை. இதற்கு எதிராக, இந்

1. பர்னெட் ஹர்ஸ்டின் பம்பாயில் இந்தியத் தொழிலாளியும் வீட்டமைப்பும் என்ற நூலில், பக்கம் 101.

நாட்டில் வெளியார்தான் தொழிற்சங்கத்தை நடத்திவருகின்றனர். இந் நாட்டில் உள்ள தொழிற்சங்கங்கள் வெளியாருக்குத் தக்க ஊதியம் கொடுக்கும் நிலை ஏற்படாத காரணத்தால், அவர்களுடைய விருப்பத்திற்கிணங்க நடக்க வேண்டி ஏற்படுகிறது. அரசியல் வேற்றுமை, கொள்கை வேற்றுமை இருந்தாலும் வெளியாளின் விருப்புக்கு இணங்கி வேலை செய்ய வேண்டி ஏற்படுகிறது. நம் நாட்டிலுள்ள தொழிலாளர் சங்கம் அரசியலுடன் ஒன்றிப் போயிருக்கிறது. கிரேட் பிரிட்டனில் அது தனித்தியங்கி வருகிறது. தொழிற் கட்சி தோன்றுமுன்னரே நல்ல தொழிற் சங்கங்கள் தோன்றிவிட்டன. பெரிய ஊர்வலங்கள் போதல், முதலாளிகளுக்கு எதிராக ஒத்துழையாமை, மிரட்டல்கள் இவற்றால் தங்களுக்குண்டான எதிர்ப்பைக் காட்டிக் கொண்டு வந்தனர். பிரிட்டனில் சட்டப்படி ஏற்பட்ட விதிகளை ஒற்றுமையாகக் கூடிப் பேசியும், கூட்டுப் பேரத்தினாலும் சரிக்கட்டுவர். ஆயினும், நம் நாட்டில் உலகத் தொழிலாளர் நிறுவனத்தின் முறைகளைச் சட்டமாக்கி அதன்மூலம் பலனளிக்க விழைகின்றனர். இச் சட்ட நுணுக்கங்கள் மிகப் பெரிய அளவில் ஏற்பட்டதால் வழக்கறிஞர்கள் புகுந்து நீதிமன்றங்கள் மூலம் வாதாட ஆரம்பிக்கின்றனர். எவ்வகைப்பட்ட கொள்கையும், சரியாவெனக் காண நீதிமன்றங்களுக்குப் போவது என்று முடிவுகட்டியுள்ளனர். சட்ட மொழியின் விளக்கத்தின்பேரில் சர்ச்சைகள் செய்து, அதில் முடிவு காணாவிடில் வேலை நிறுத்தம் ஏற்படும். அற்பசொற்பக் கொள்கைகளுக்குக்கூட ஒரு வேலை நிறுத்தம் காணலாம்.[1] மாநாட்டு மேஜையில் விவாதிப்பதைவிட, போர்க்களத்தையே விரும்புகிறார்கள்.

**30. 1926ஆம் ஆண்டின் தொழிற் சங்கச் சட்டம்:** தொழிற் சங்க அலுவலர்களின் தூண்டுதலால் வேலையாட்களும் தொழிலாளர்களும், தங்கள் முதலாளிகளிடம் செய்து கொண்ட ஒப்பந்தத்தை முறித்துக் கொண்டு, தொழிலினின்று விலகி வேலை நிறுத்தம் செய்ய உரிமை கிடையாது என்று, 1920 ஆம் ஆண்டில் சென்னை உயர்நீதி மன்றம் செய்த முடிவு இந்தியத் தொழிற்சங்கங்களுக்குப் பதிவும், பாதுகாப்பும் சட்ட பூர்வமாகத் தேவையென்பதைக் குறிப்பிட்டது. இப் பேரிடியினின்று சமாளிக்க, காலஞ்சென்ற தொழிலாளர் தலைவரான எம். என். ஜோஷி, இந்தியத் தொழிற் சங்கத்தைக் காக்கும் எண்ணத்துடன் அரும்பாடுபட்டுத் தொழிற் சங்கச் சட்டத்தை உருவாக்க முயன்றார். இச் சட்டம் தொழிற் சங்கத்திற்கு இலக்கணம் கூறி, அவைகள் பதிவு செய்யப்படவேண்டியது அவ்வளவு முக்கியமில்லை எனக் கூறியுள்ளது.

1. மூலதனம் (Capital) 'இந்தியாவில் தொழிற் சங்கம்' — ஐரோப்பியத் தொழிற் சங்க உறுப்பினன்.—17 டிசம்பர், 1953.

ஆயினும், பதிவு பெற்ற சங்கங்களுக்கு அநேக சலுகைகள் கொடுக்கப்படுகின்றன. பதிவு பெருதவைகளுக்கு அவ்வளவு சலுகைகள் இல்லையெனலாம். பதிவு செய்யப்பட்ட சங்கங்கள், தங்கள் கொள்கைகள் என்னவென்பதை வெளியிட வேண்டும். சங்கத்தின் அங்கத்தினர்களுக்கான ஒரு பட்டியலைத் தயார் செய்து பின்னர், அவ்வப்போது சேரும் நிதியையும், கணக்கையும், கணக்குத் தணிக்கைக்கு விடவேண்டும். இந்த நிதியை அங்கத்தினருக்குப் பயன்படும் முறையில் செலவிட வேண்டும். தொழிற் சங்கங்களில் பாதிக்கு மேலுள்ள அங்கத்தினர்கள் அந்தக் குறிப்பிட்ட தொழிலில் உழைப்பவர்களாக இருக்க வேண்டும். நியாயமான கோரிக்கைகளுக்காக இத் தொழிற்சங்க உறுப்பினர்கள் குற்றப் பொறுப்பினர்களாகத் தண்டிக்கப்படமாட்டார்கள். சதிகாரர்கள் என்ற குற்றத்தின் கீழும் அவர்கள் கைதாக்கப்படமாட்டார்கள். தொழிற்சங்க உறுப்பினர் ஒரு தொழில் தகராறின் போது செய்யும் பல செயல்களுக்காக, அவர்மீது தொடரப்படும் சிவில் வழக்குகள் எந்த நீதிமன்றத்திலும், எடுத்துக்கொள்ளப்படமாட்டா. அதேபோன்று, எந்தப் பதிவு பெற்ற தொழிற் சங்கத்தின் மேலும் தொடரப்பட்ட சிவில் வழக்குகளும் எடுத்துக் கொள்ளப்படமாட்டா. அரசியல் சமூக நலனுக்காக, ஒரு பதிவு பெற்ற தொழிற் சங்கம் நிதி திரட்டலாம். ஆயினும், அது உறுப்பினர்களால் விரும்பியே அளிக்கப்படவேண்டும்.

இந்தியத் தொழிற் சங்கங்களின் பட்டியலைக் கீழே உள்ள அட்டவணையில் காணலாம். இணைக்கப்பட்ட தொழிற் சங்கங்களும், அவைகளின் உறுப்பினர்கள் எண்ணிக்கையும் கொடுக்கப்பட்டுள்ளன. இதில் உள்ள எண்கள் தொழில் ஆண்டுப் புத்தகம் 1950-51-ல் 173ஆம் பக்கத்தில் உள்ளவை.

| நிறுவனத்தின் பெயர் | இணைப்புப் பெற்ற சங்கங்களின் எண்ணிக்கை | அதன் உறுப்பினர்கள் |
|---|---|---|
| இந்தியத் தேசீயத் தொழிற் சங்கக் காங்கிரஸ் | 1,232 | 15,48,568 |
| அகில இந்தியத் தொழிற் சங்கக் காங்கிரஸ் | 736 | 7,58,314 |
| இந்த் மஸ்தூர் சபை | 517 | 8,04,337 |
| இந்த் தொழிற்சங்கக் காங்கிரஸ் | 332 | 3,84,962 |

மூன்கூறிய நான்கிலும், இந்தியத் தேசீயத் தொழிற்சங்கக் காங்கிரஸ், காந்தீயத்தின் அடிப்படைக் கொள்கைகளைப் பின்பற்று கிறது. பூசலின்றி, சமாதான முறைகளைக் கையாண்டு ஒரு வழி காண விழைகிறது. இது சமாதான முறையில் நேருக்கு நேராகப் பேசி முடிவுகாண உழைக்கும் சங்கம்; வேலை நிறுத்தம் இதற்குப் புறம்பான ஒரு திட்டம். எல்லா வழிகளும் தோல்வியுற்ற பிறகு தான் இந்த முறையைக் கைக்கொள்ளக்கூடும். தற்போதுள்ள காங்கிரஸ் ஆட்சியாளர்களுக்கு இந்தத் தொழிற்சங்கக் காங்கிரஸ் மிகவும் விரும்பத் தக்கதாகத் தெரிகிறது. இது தொழிலாளர்களின் நலனுக்குப் பெரிதும் பாடுபடுவதாகக் கருதப்படுகிறது.

சென்ற 25 ஆண்டுகளுக்குள்ளாகத் தொழிற்சங்கம் மிகப் பெரிய அளவில் வளர்ந்துவிட்டது. 1927-28-ல் பதிவுபெற்ற தொழிற் சங்கங்களின் எண்ணிக்கை 29. அவற்றில் விவர அறிக்கை கொடுத்தவை 28. அவற்றின் மொத்த உறுப்பினர் 1,00,619. சராசரி உறுப்பினர் தொகை 3,594. 1950-51-ல் இதற்கு நேரான விவரம் வருமாறு: தொழிற்சங்கங்களின் எண்ணிக்கை 3,454. விவர அறிக்கை கொடுப்பவை 1,896. உறுப்பினர் 15,77,227. சராசரி உறுப்பினர் 832. இவைகளின் ஆண்டு வருமானம் ரூ. 60 லட்சம். சாரசரி வருமானம் ரூ. 3,200. இதனால் புலனாவது என்னவெனில், இவற்றின் செல்வநிலை மிகவும் வலிமையாக இல்லை என்பதே. இன்னொரு இடர் என்னவெனில், இது அரசியலில் புகுந்துகொண்டு நிலைமை யைக் குழப்புவதேயாகும். அகில இந்தியத் தொழிற்சங்கங்களுக் கிடையே உள்ளூர்ச் சங்கங்கள் வேறு உள்ளன. எடுத்துக் காட்டாக, அகமதாபாத்தில் உள்ள பருத்தியாடைத் தொழிலாளர் சங்கம் ஆகும். இது 1920ஆம் ஆண்டில் மகாத்மா காந்தியடி களால் துவக்கப்பட்டது. சில, மாகாணத்தையொட்டித் தோன்று கின்றன. உள்ளூர்ச் சங்கங்களின் தரமும், எண்ணிக்கையும் மாறுபட்டு இருக்கும். சில, வேலை நிறுத்தம் செய்வதற்கான குழுவின் உருவில் தோன்றி மறையக்கூடும். மற்றும் பல கைத்தொழில் (Craft) சங்கங்களாக அமையக்கூடும்.

**31. பொதுநலப் பாதுகாப்பை உறுதி செய்யும் முறை:** தக்க புள்ளி விவரங்களும் ஆக்சுவரியின் (Actuarial basis) கணக்கி யலும், இருந்தால்தான் தக்க முறையில் காப்புறுதி (Insurance) செய்யவியலும். நம் நாடு இந் நிலையை அடைந்த காரணத்தால் சமூகப் பாதுகாப்பு முறையைக் கொண்டுவரமுடிகிறது. தொழி லாளர் ஆய்வுக்குழு ஒன்று, 36 தொழில்களில் வேண்டிய அளவு நன்கு சர்வே நடத்திப் புள்ளி விவரங்களைத் தேடிக்கண்டு,

கொள்கையை அடைய வழி செய்துள்ளனர். இதற்கான பணம், தொழிலாளராலும், வேலை கொடுப்போராலும், அரசினராலும் கொடுக்கப்படவேண்டும்.

**32. வேலையாட்களுக்கான மாநிலப் பாதுகாப்புறுதிக் கூட்டு நிறுவனம் (Employees' State Insurance Corporation) :** தொழிலாளர்களின் உடல்நலனைக் கருதிக் கொண்டுவரப்பட்ட மசோதா வேலையாட்களின் மாநிலப் பாதுகாப்புறுதிக் கூட்டுச் சட்டம், 1948 ஆம் ஆண்டில் அமலுக்கு வந்தது. ரூ. 400 வரை மாதச் சம்பளமோ, கூலியோ பெறும் வேலையாட்களுக்காக இது திறக்கப்பட்டிருக்கிறது. சட்டப்படி, சரிவர நடத்திக் கொடுக்க அரசினர் ஆணைபெற்ற ஒரு குழு அமைக்கப்பட்டுள்ளது. அதற்கான நிலையான குழு இதை நடத்திவருகிறது. மருத்துவ உதவிக் குழு ஒன்று இந்தக்கூட்டு நிறுவனத்திற்கு உடல்நலச் சான்று நல்குதல் சம்பந்தமான ஆலோசனைகளைக் கொடுக்கிறது. இதன் குழு ஒரு முக்கூட்டு அமைப்பாகும். அரசினர், வேலை கொடுப்போர், தொழிலாளர் பிரதிநிதி, இவர்கள் மூவரும் உளர். உதவித் தொகையின் மூலம் இது நடத்தப்படுகிறது. திறக்கப்பட்ட முதல் 5 ஆண்டுகளுக்குள் ஏற்பட்ட செலவில் 2/3 பங்கை மத்திய அரசாங்கம் ஏற்றுக்கொண்டது. இதில் இன்ஸ்யூர் செய்து கொண்ட பேருக்கு அளிக்கப்படும் வசதிகள் : (1) வியாதிக் காலத்தில் வசதி, (2) பிள்ளைப் பேற்றின்போது உதவி, (3) உடலின் ஊனத்திற்காக உதவி, (4) இவரது ஆதரவில் இருப்பவர்களுக்கான வசதி, (5) மருத்துவ வசதி. நாடு முழுவதும் இம் மாதிரி வசதிகளுக்கு ஏற்பாடு செய்ய இயலாது. ஆதலால் இத் திட்டத்தைச் சிற்சில இடங்களில் மட்டும் தொடங்கியுள்ளனர். நடப்பில் டெல்லியிலும் (40,000 தொழிலாளர்) கான்பூரிலும் (84,000 பேர்) பஞ்சாப் மாநிலத்திலுள்ள லூதியானா, அமிர்தசரஸ் உட்பட முக்கிய நகரங்களிலும் (30,000 பேர்கள்) இதை விஸ்தரித்திருக்கிறார்கள்.

**33. மகப்பேறு கால வசதிகள் :** 1929ஆம் ஆண்டில் பம்பாயில் முதல் பேறுகால வசதிச் சட்டம் அமலாக்கப்பட்டது. இதைத் தழுவிய சட்டங்கள், முறையே சென்னை, வங்காளம், பஞ்சாப், பீகார், மத்தியப் பிரதேசம், உத்தரப்பிரதேசம், டெல்லி, ஆஜ்மீர் முதலிய இடங்களில் போடப்பட்டன. அஸ்ஸாமில் தொழிற்சாலையிலுள்ள பெண்டிர்க்கென இச் சட்டம் போடப்பட்டது. வங்காளத்தில் தோட்டத் தொழிலில் ஈடுபட்ட பெண்டிர்க்கும் இவ் வசதி கொடுக்கப்பட்டது. சுரங்கங்களில் பணி

யாற்றும் பெண்டிர்க்கு 1941-ல் நிறைவேற்றப்பட்ட சட்டம் வசதியளித்தது.

**34. நலன்களைப் பற்றிய செயல் முறைகள் :** நலன்களைப் பற்றிய செயல்முறைகள் எனப்படுபவை சற்று விரிவான அமைப்பாகும். உடல்நலன், காப்புமுறை, சுகாதாரம் இவைகள் அனைத்தும் நிரம்பிய தொழிலாகக் கருதலாம். இவற்றால், தொழிலாளியின் நலன்கள் நன்கு கவனிக்கப்பட்டு அதன் நிமித்தம் அவன் செவ்வனே வேலை செய்ய முன்வருகிறான். சுதந்தர நாடாகும் முன்னர், தொண்டு செய்யும் நிறுவனங்கள்தாம் இவற்றைக் கவனிக்க முன் வந்தன. ஆயினும், நடப்பில் தேசீய முன்னேற்றத் திட்டங்களில் இது முதலிடத்தைப் பெறுகிறது. நலன்களைப் பற்றிய முறைகள் தொழிற்சாலைக்குள் நடக்கலாம் ; அல்லது தொழிற்சாலைக்கப்பால், வெளியிலும் நடக்கலாம். ஓய்வு நேரத்தைப் பயனுள்ளதாக்கும் முறை, வீட்டு வசதி, காற்றோட்டமுள்ள இருப்பு, விளையாட்டு, பொழுதுபோக்கு வசதிகள், குடிநீர்வசதி, சுகாதாரமுள்ள சாக்கடைப் போக்கு, மலிவான விலையில் தானியங்கள், தேநீர்க் கடைகள், உணவு விடுதிகள் முதலியன.

இந்திய சர்க்கார் நலனைப் பற்றிய செயல்முறைகளில் அக்கறை காட்டியுள்ளனர். சர்க்கார் நிறுவனங்களிலுள்ள வேலை செய்வோருக்கு வசதியளிக்க, நிதி ஒன்று ஏற்படுத்தி, அதனின்று பொழுதுபோக்கு வசதி, விளையாடுமிடம், படிப்பகம் முதலியன திறக்க முடிவு செய்துள்ளனர். சர்க்கார் சிப்பந்திகள், நலனை உத்தேசித்து சர்க்கார், பம்பாய், உத்தரப்பிரதேசம், மைசூர், ஸௌராஷ்டிரம், திருவாங்கூர்-கொச்சி இராச்சியங்களிலும் நடத்தி வருகின்றனர். 1939-ல் பம்பாய் அரசாங்கம் 54 மாதிரி இடங்களை அமைத்து அவற்றை ஏ, பி, சி, டி, எனப் பகுத்து நடத்திவந்தனர்.

ஏ வகுப்பில் உள்ள இடத்தில் குழந்தைகளுக்கான வளர்ப்பிடப்பள்ளி, பெண்களுக்கான போதனைகள், கைவேலை, பின்னல் முதலியனவும், உடற்பயிற்சி வசதியும், ஆண்களுக்கு வெளிப்புற விளையாட்டு, உடற்பயிற்சி, தனித்தனியே குளிக்க வசதிகள், ஒலி பெருக்கி வசதியுடன் வாசகசாலை, புத்தகசாலைகள், சிறிய வைத்திய சாலை, மாதமொரு முறை படக்காட்சி முதலியனவும் உள்ளன.

பி பிரிவின்கீழ் மேற்கூறியவைகள் சற்றுக் குறைவான அளவில் செய்யப்படும்.

சி பிரிவில் பொழுது போக்குக்கான விளையாட்டு இடம், புத்தக சாலை, மருத்துவ சாலை, வாசக சாலை முதலியன உள்ளன.

டி பிரிவின்கீழ் வெளிப்பரப்பில், விளையாட்டு வசதி மட்டும் கொடுக்கப்படுகிறது.

வேலை கொடுப்போர் தற்போது மருத்துவ உதவியை ஒரு முதலுதவிப் பெட்டி அமைத்தல் முதல், பெரிய மருத்துவசாலை வைத்தல்வரை செய்துள்ளனர். நம் நாட்டிலுள்ள எல்லா ரெயில்வேக்களிலும், தலைமை மருத்துவ அலுவலரும், சுகாதார அலுவலரும் உளர். இவர்களுக்குக் கீழ் அநேக உதவி மருத்துவ அலுவலர்கள் பணிபுரிகிறார்கள்.

1947ஆம் ஆண்டு நிலக்கரிச் சுரங்கத் தொழிலாளர் நலனுக்கான நிதிச் சட்டத்தையொட்டி, நிலக்கரிச் சுரங்க சேமநலநிதி ஒன்று நிறுவினார்கள். அதன்மூலம் அத் தொழிலாளர்களுக்கான அநேக நலன்கோரும் செயல்களைச் செய்தனர். அதேபோலக் காக்கைப்பொன் சுரங்கத் (mica mines) தொழிலாளர்களுக்கான சேமநிதியும் திரட்டியுள்ளனர்.

அரசியலார் தொழிற்கூடங்களில் பணியாற்றும் மாதச் சம்பளக்காரருக்கும், வேலையின் பேரில் கூலி பெறுபவர்களுக்கும் 10 ஆண்டு உழைப்பிற்குப் பிறகு, ஓய்வுக்குப் பின் ஊதியம் கிடைக்கும். எல்லா ரெயில்வேத் தொழிலாளர்களுக்கும் உள்ளூர், அல்லது மாநில அமைப்புக்களில் வேலை செய்பவருக்கும் ஓய்வின்போது பணிக்கொடை கிடைக்கும். பெரிய தொழிற்சாலைகளில் ஒரு தொழிலாளியின் பேரில் கணக்குத் திறந்து இரண்டு வாரங்களுக்குச் சேரக்கூடிய கூலியை ஓர் ஆண்டுப் பணி கழிந்ததும் வரவு வைத்துவிடுகிறார்கள். அநேக தொழில்களில், பிராவிடண்டு பண்டு கட்டணம் உதவியளித்தோ அளிக்காமலோ கொடுக்கப்படுகிறது. கட்டாயமாகவோ அல்லது தற்காலிகமாகவோ வைக்கப்படுகிறது. சிமெண்டு, சிகரெட், பொறியியல், இரும்பு எஃகு, காகிதம், நெசவாலை இவைகளில் பிராவிடண்ட் நிதி கட்டாயமாக அமலில் உள்ளது.

73 மிலியன் பின்னிலை வகுப்பு வேலையாட்களுடைய நலன் கருதித்தான் ரூ. 29 கோடி முதலாவது ஐந்தாண்டுத் திட்டத்தில் ஒதுக்கப்பட்டுள்ளது. இத்துடன் மத்திய சர்க்கார் ரூ. 9 கோடி உதவியை இந்தியச் சட்டம் 275 பிரிவு (1) உதவிப் பிரிவின் படியும், வடகிழக்குப் பிரிவிலுள்ள மலைஜாதியினருக்காக ரூ. 3 கோடி அளித்திருக்கிறது. இந்த ரூ. 41 கோடியைக் கொண்டு, பிரதேசவாரியாகத் தக்க பணிபுரிந்து மக்கள் தொகையி

லுள்ள இப் பிரிவினருக்கு முன்னேற்றத் துறையினர் உதவு கின்றனர்.

**35. மத்திய சமுதாய நலன் கழகம் :** முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் பரிந்துரைத்துள்ள வசதிப்படி அதை நடத்திக் கொடுக்க மத்திய சமுதாய நலக் கழகம் ஒன்றைச் சட்ட அமைப்பின்கீழ் உருவாக்கினர். அதற்கான பணிகளை நடத்திக் கொடுக்க ரூ. 4 கோடி ஒதுக்கிவைக்கப்பட்டது. சமூகத்தில் தாண்டவமாடும் அநேக ஊழலான செயல்களைக் கண்டித்து அதன் காரணமாக உதவியற்று நிற்கும் பெண்டிரையும், பாலர்களையும் காப்பாற்ற முன் வருகிறது. தொண்டாற்றும் குழுவினருக்கான பணவசதி இதன் மூலம் செய்யப்படுகிறது. ஊர் மக்கள் அனைவரும் இந் நலனுள்ள பணிகளில் ஈடுபடத் தூண்டப் படுகிறார்கள். சேம நலனைப் பற்றிய செயல்முறை கிராமப் பகுதி களில் இல்லையெனலாம். நல விரிவாக்கத் திட்டங்களின் மூலம் நிறுவனங்களை ஏற்படுத்தி, உதவி கிடைக்காத பகுதிகளையும் இணைப்பதற்காக மாவட்டத்திற்கு ஒரு விரிவுத் திட்டம் அமைத் துள்ளனர். இவற்றில் காணப்படும் விரிவான குறிக்கோள்கள் வருமாறு : பெண்டிரும் பாலரும் சுகமாக இருக்கவேண்டி, அதற்கான அடிப்படை வசதிகள் அமைத்தல், நூல் நூற்றல், தையற்கலை முதலியன போதித்தல், பேறுகால முன்பணி, பின் பணியை அறிவுறுத்தல், ஓய்வுநேர வேலைகள், அடிப்படைக் கல்விபுகட்டல், கடமையினின்று தவறிய குழந்தைகளையும், பாலர் களையும் காப்பாற்றி மறுபடியும் சீர்படுத்த முயற்சி எடுத்தல், தொண்டாற்ற முன்வரும் பெண்டிரை இத் திட்டத்தில் உறுப்பினர் களாக அமைத்து, கிராம சேவிகை (பெண் உதவியாளர்)களைக் கொண்டும், கைவேலை ஆசிரியர்களைக்கொண்டும், பேறுகால உதவியாளர்களைக்கொண்டும், திட்ட வேலைகள் நடத்தப் படுகின்றன. கூடியவரையிலும், உள்ளூரில் இருப்பவர்களாகவே பொறுக்கி எடுத்துக்கொள்ளுவார்கள். இவை சமுதாய வளர்ச்சித் திட்டத்திற்கு உதவியாக அமையும். மாநில அரசாங்கத்தார் நடத்தும் கிராமத் திட்டங்களுக்கும், உதவிபுரியக்கூடும். மாநில அரசின் வளர்ச்சித் துறை, நலன் துறை இவைகளுடன் ஒட்டியே இந்தக் குழு வேலை செய்யவேண்டும். இதனால் பிழையின்றிச் செம்மையான முறையில் பணியாற்ற இயலும்.

மத்திய சமூக நலக் குழுவினர், திட்டங்களை உருவாக்கி இந் நாட்டின் எல்லாப் பகுதிகளிலும், இவை ஒழுங்குபெற நடைபெறு கின்றனவா என்றும், அந்தந்த வட்டாரங்களுக்கு நிதி சரியான

முறையில் கொடுக்கப்படுகிறதா என்றும், கண்காணித்து வருகிறார்கள். அநேக இடங்களில் தொழில் கூட்டுறவு நிறுவனங்களை அமைத்துள்ளனர். இதன் மூலம் பல குடும்பங்கள் நலனை யடைகின்றன. அம்மாதிரியான நான்கு திட்டங்களை டெல்லி, ஐதராபாத், பூனா, விஜயவாடா முதலிய இடங்களில் காணலாம். மேற்சொன்ன ஒவ்வோர் இடத்திலும் 500-க்கு மேற்பட்ட பெண்டிர் வேலை செய்கின்றனர். இவர்கள் குறைந்த வருமானமுள்ள மத்தியதரக் குடும்பத்துப் பெண்டிர் எனலாம். இவர்கள் தக்க பயிற்சி பெற்றுப் பின்னர்த் தொழிலில் ஈடுபடுகின்றனர்.

சமூக நலன் என்னும் பொருள் மிகவும் விரிவானது. இதர பகுதிகளின் ஒத்துழைப்பு இருந்தால்தான் அது நன்கு வளரும்.

# 16. போக்குவரத்து முறைகள்

**1. போக்குவரத்து முறைகளின் அவசியம்:** ஆட்சி, இராணுவ, கலாசார, சமூகப் பொருளாதார நிலைமைகளினின்று நோக்குங்கால் சீரமைந்து திருப்தியளிக்கவல்ல போக்குவரத்து முறை இன்றியமையாததெனலாம். நம்மை ஆண்ட ஆங்கிலேயரின் எண்ணம் எவ்வாறிருப்பினும், போக்குவரத்து முறையை ஊக்குவித்திருப்பவர்கள் அவர்களே. டல்ஹௌசி பிரபு, நாட்டில் ரெயில்வே முறையை அமைத்து இராச்சியத்தின் உள்நாட்டுப் பட்டணங்களிலிருந்து துறைமுகத்திற்குப் போக்குவரவு வசதியமைத்துக் கொடுக்க வேண்டுமென்றும், மற்றும் இதர மாகாணங்களுடன் இணைப்பு ஏற்பட வேண்டுமென்றும் கூறினர். இதனால் ஆங்கில ஆட்சி வலுப்பதோடு ஆங்கில மூலதனமும் பெருகும் என்றார். இராணுவக் காரணங்கள் இன்று எவ்வளவு அவசியமாகக் கருதப்படுகின்றனவோ அவ்வளவு முக்கியமாக அன்று ஆங்கிலக் கம்பெனியார் கருதினர். நாட்டின் எப் பகுதியிலாவது குழப்பமேற்பட்டால் அதை உடனே அடக்க நல்ல போக்குவரத்து வசதி ஏற்பட வேண்டியது இன்றியமையாதது.

ஒரு குறிப்பிட்ட வட்டாரத்தில் இயந்திர வழியுள்ள சாலைப் போக்குவரத்து வேண்டுமா, ரெயில் முறை தேவையா அல்லது வாய்க்கால் வழியே போகும் ஓடம், பரிசல் முதலியன நலமானவையா என்பதை வாதிட்டுத்தான் முடிவுகட்ட இயலும். எது எவ்வாறிருப்பினும் செம்மையாக அமைந்த போக்குவரவு முறை மிகவும் இன்றியமையாதது எனலாம். பற்பல பகுதிகளில் வாழும் மக்கள் தங்களுக்குள்ளாகத் தொடர்பு பெற்று வாழவில்லை

1. ஒவ்வொரு நிலைமையையும் அனுசரித்து அவ்வப்போது கொள்கை மாற்றப்பட்டது. எடுத்துக்காட்டாக, சமுதாய வளர்ச்சி, சாதி முறை ஒழிப்பு, மேற்கு நாட்டின் படிப்பு, கல்வி முறை, பழக்கவழக்கங்கள், மற்றும் வர்த்தகம், உள்நாட்டுப் பாதுகாப்பு (சீக்கியர்கள் கொதித்தெழுந்து யுத்தம்செய்தது 1857-ல்) அயல்நாட்டுத் தாக்குதல்களினின்று நாட்டைக் காப்பாற்ற, (1860-க்குப் பிறகு ரஷ்யா) பெரும் தாக்குதல் செய்யக்கூடிய நாடாக இருந்தது. முடிவாகப் பஞ்ச நிவாரணத்திற்காகவும் ரெயில்வேக்களை அமைத்துப் பஞ்சத்தைப் போக்க முற்பட்டது.

யென்ருல் தேசிய ஒருமைப்பாட்டுணர்ச்சி தோன்றுவது கடினம். ஆட்சியில் மேம்பாடும், பஞ்சத்தில் ஏற்படும் நிலையை அகற்றத்தகு நிவாரண முறைகளும், இயற்கை வளத்தின் பல பொருள்களைத் தக்க முறையில் பயன்படுத்தவும், தொழில் வளர்ச்சி, வர்த்தக வளர்ச்சி, இவையனைத்தும் நல்ல போக்குவரத்து முறையின் அமைப்பையொட்டியே அமைய வேண்டும். நவீன போக்குவரத்து முறைகளால் இதுவரை ஒதுங்கிக் கிடந்த பல கிராமங்கள் உலகின் பல பகுதிகளுடன் இணைப்பைப் பெற்றுள்ளன. இது எவ்வளவு பயனுள்ளதெனக் கூறவும் வேண்டுமோ? கிராமங்கள் தங்களுடைய சுய தேவைகளைப் பெறும் தன்மை பெற்றிருந்தன. அவை இக் குணத்தை இழந்தது சற்று வருந்தத் தக்கதெனினும், உலகின் பிற பகுதிகளுடன் தொடர்பு பெற்றுள்ளன. சில கிராமங்கள் அநேகமாகச் சுற்றுப்புற வட்டாரங் களுடன் சேர இயலாது அமைந்துள்ளன. இம்மாதிரி இடங்களை வந்தடைய முடியவில்லையே என மக்கள் சிந்தித்து இந்நிலையை மாற்றப் பாடுபடுகின்றனர்.[1] கிராமச் சீரமைப்புத் திட்டங்களில் நாட்டைப் புனரமைப்புச் செய்யவும், கிராம முன்னேற்றத்திற்கும், போக்குவரத்துச் சாதனம் மிகவும் தவிர்க்கவியலாது எனலாம். பொருளாதார வளர்ச்சியைக் கருதிப் போக்குவரத்து வசதிகளுடன் தந்தி தபால் வசதிகளும், வானொலிப் பெட்டி, திரைப்பட வசதி ஆகியவைகளும் இன்றியமையாதவை யெனலாம்.

**2. ரெயில்வே முறையின் தோற்றம் :** இந்திய ரெயில்வேயின் வரலாற்றைக் காலத்தையனுசரித்துப் பத்து பகுதிகளாகப் பிரிக் கலாம். அவை : (i) 1844 - 69 பழைய உத்தரவாத முறை, (ii) 1869 - 79 : இராச்சியப் பொறுப்பில் கட்டுதலும், மேற்பார்வை யிடுதலும், (iii) 1879-1900 புதிய உத்தரவாத முறை, (iv) 1900-14 வேகமாக விஸ்தரித்து வளர்ச்சி பெற்று இலாபம் பெற்ற காலம், (v) 1914-21 ரெயில்வே முறையில் பழுதின் காரணமாகப் பயனற்ற நிலை, (vi) 1921 - 24 மாற்றியமைக்க அக்வொர்த் குழுவினரின் பரிந்துரை, (vii) 1924 - 30 நிதியிலிருந்து பிரித்துத் தனியாக்க முடிவும் செழுமையும், (viii) 1930 - 36 மந்த நிலை, (ix) 1936 - 39 நிலைமையில் பகுதி சமாளிக்கப்பட்டது, (x) 1939-க்குப் பின்னர், ரெயில்வே முறை தோன்றியது முதல், நாளது தேதிவரை சொந்த உரிமை, நிர்வாகம் இவைகளைப் பற்றிக் கீழ்க் கண்ட வாக்கியங்

1. பண்டங்களைச் சந்தைகளுக்குக் கொண்டுபோகச் சரியான பாதைகள் வேண்டும். சரியான தொடர்புள்ள பாதைகள் இந் நாட்டின் பெரும் நிலப்பரப்பில் இல்லை என்பதை, மிகக் குறைந்த அகில இந்திய சாலைச் சராசரி 1 சதுர மைலுக்கு 0 22 மைல்கள் காண்பிக்கிறது. அமெரிக்கப் பாலைவனப் பகுதியிலுங்கூடச் சதுர மைலுக்கு 0·30 மைல் காட்டுகிறது. இந்தியாவில் அதைவிட மிகவும் குறைவாக உள்ளது. அகில இந்தியக் கிராமக் கடன் சர்வே அறிக்கை, பக். 23.

களில் சுருக்கி உரைக்கப்பட்டுள்ளது: நூறுண்டுகளுக்கு முன் ரெயில்வே, கம்பெனியாரின் நிர்வாகத்தில் இருந்தது. பிறகு (அ) கம்பெனியார் நிர்வாகம் செய்த ரெயில்வேயும், கம்பெனியாரின் சொந்த ரெயில்வேயும், (ஆ) அரசினரின் ரெயில்வேயும்-கம்பெனியார் நிர்வாகம் செய்த ரெயில்வேயும், (இ) அரசினரின் ரெயில்வேயும், அரசினர் நிர்வாகம் செய்த ரெயில்வேயும் இருந்தன. இந்தக் காலத்தில் ஆங்கிலப் பாராளுமன்றத்தின் மேற்பார்வையில் ரெயில்வே நிர்வாகம் அமைந்தது. இதன் முடிவில், ரெயில்வே நிர்வாகம் அரசினருக்குக் கிடைத்தது. இந்திய மக்களுக்குச் சுதந்தரம் கிடைத்தவுடன் அரசாங்கம் இந்திய மக்களால் நடத்தப்பட்டு வருகிறது.[1]

**3. பழைய உத்தரவாத முறை (1844-69):** இங்கிலாந்தில் இணைக்கப்பெற்ற ரெயில்வே கம்பெனிகளால் பண்டைக்கால ரெயில்வேக்கள் அமைக்கப்பட்டன. இந்த கம்பெனிகளின் முதலீட்டிற்குக் கிழக்கிந்தியக் கம்பெனியார் ஒரு குறிப்பிட்ட ஈவுப் பங்கினை உத்தரவாதமாகக் கொடுத்தனர். இந்திய அரசினர் இந்தப் பழைய உத்தரவாத முறையை எதிர்த்தனர். ஏனெனில் ரெயில்வேக்கள் போட வேண்டியதற்கான நிலங்களை இனமாகக் கொடுத்ததுடன், அதற்கும் மேலாக ஆதாயம் கொடுப்பது அதிகப்படி எனக் கூறினர். ஆயினும், அக் காலத்தில் கவர்னர் ஜெனரலாக இருந்த ஹார்டிஞ்சுப் பிரபு, தனியார் கம்பெனிகளை ஊக்குவிக்க இம்மாதிரியான வசதிகள் அளிக்க வேண்டியது அவசியம் எனக் கூறியதை ஒப்புக்கொண்டனர். அதற்கேற்ப புது ஒப்பந்தங்கள் பெரிய இந்தியத் தீபகற்ப ரெயில்வே கம்பெனி (Great Indian Peninsula Railway Company) யுடனும் கிழக்கிந்திய ரெயில்வே கம்பெனி (East Indian Railway Company) யுடனும் செய்துகொண்டனர். முதலில் சொல்லப்பட்ட கம்பெனி பம்பாய் அருகிலும், மற்றொரு கம்பெனி கல்கத்தா அருகிலும் ரெயில்வே பாதைகளை அமைத்து நடத்தினர். டல்ஹௌசி பிரபு 1853ஆம் ஆண்டில் விடுத்த புகழ்பெற்ற அறிக்கையில் எல்லாத் தலைநகரங்களையும், இராச்சியப் பகுதிகளையும் இணைக்கத் தக்க ரெயில்பாதைகள் போடவேண்டும் என்றும், தலைநகரங்களையும், துறைமுகங்களையும் இணைத்து அதன் மூலம் வர்த்தகத்தைச் செம்மைப்படுத்தலாம் என்றும் கண்டிருந்தார். 1854 முதல் 1860-க்குள் டல்ஹௌசி பிரபுவின் திட்டத்திற்கேற்ப எட்டுக் கம்பெனிகளுடன் ஒப்பந்தம் செய்யப்பட்டது. 1857ஆம் ஆண்டில் ஏற்பட்ட சுதந்தர எழுச்சியின் காரணமாகப் போக்குவரவு சாதனங்களை வலுப்படுத்தி, இராணுவத்தினரையும் தேவைப்பட்ட பொருள்களையும் கலகப்

1. இண்டியன் ரெயில்வேஸ்: ஒன் ஹன்ட்ரட் இயர்ஸ், 1853 - 1953, பக்கம் 40.

பகுதிகளுக்கு அவ்வப்போது உடனுக்குடனே அனுப்ப ஏற்பாடு செய்யப்பட்டது. பண்டை உத்தரவாத முறையின்கீழ் ரெயில்வே கம்பெனிகளுடன் செய்துகொண்ட ஒப்பந்தங்களின் கொள்கைகள் வருமாறு: (i) நிலம் இனமாக வழங்கப்பட்டது, (ii) $4\frac{1}{2}$ முதல் 5% வீதம் வட்டி உத்தரவாதம் செய்யப்பட்டு ரூ. 1=22 பென்ஸ் விகிதத்தில் பழைய பாக்கிகளைத் தீர்த்தும், உத்தரவாத முறைப் படி வட்டியைப்பெறவும், (iii) பணியாளரைப் பொறுக்கி எடுத் தலைத் தவிர இதர நிர்வாக அலுவல்களில் அரசினர் தங்கள் விருப்பத்திற்கேற்பத் தலையீடு செய்ய உரிமை பெற்றும், (iv) தக்க ஈட்டுத் தொகையை அளித்து 25 முதல் 50 ஆண்டுகளுக்குள் அரசினர் கம்பெனிகளிடமிருந்து ரெயில்வேயை வாங்கிக்கொள்ள வும் ஏற்பாடு செய்யப்பட்டது. இம் முறை இந்திய வரி செலுத்து வோருக்குப் பெருஞ் சுமையாக அமைந்திருந்தது. இந்த ரெயில்வே கம்பெனிகள் தோற்றத்தின்போது பெரும் நட்டத்தை உண்டாக்கி, அதன் பலனாக அந்தக் கடன் சுமை வரிப்பளுவாக வரி கொடுப் போர் தலையில் விழுந்தது. இங்கிலாந்திலும், இந்தியாவிலும் ஒரே மனதாக இம்முறையைப் பலமாகக் கண்டித்தனர். ரொமேஷ் சந்திர தத் இதைக் கண்டித்தவர்களுள் முக்கியமானவர். ஸர் வில்லியம் தார்ண்டன், பாராளுமன்றத்தில் இதை எதிர்த்துக் கீழ்க் கண்டவாறு கூறினார்: 'உத்தரவாத முறை எந்த வகையிலும் பயனற்றதாகவே இருக்கிறது. எவ்வகையிலும் இது உதவியளித்த தாகத் தெரியவில்லை. யார் இந்த உடன்படிக்கைகளை வரைந்து முடிவு செய்தனரோ தெரியவில்லை. ஆயினும் இதைப்போன்ற மட்டமானதும், இழுக்குமுள்ள வேறு ஒப்பந்தம் இருக்குமா என்பது பெரும் ஐயமே.' முன்னாள் இந்திய வைசிராயாக இருந்த ஸர் ஜான் லாரன்ஸ் என்பவர் தமது கொள்கையினை விளக்கும் போது 1873-ல் பாராளுமன்றக் குழுவினர்முன், வருமாறு கூறியுள்ளார்: 'ரெயில்வே அமைப்பதில் கண்டபடி செலவு செய்யப்பட்டது என்றும், அவ்வளவு செலவு தேவையற்றது என்றும், இது வீணாக இந்திய வருமானத்தைப் பாதிக்கிறது என்றும், இந்திய நாட்டுப் பல்வேறு வகுப்பினர் மிகவும் கேவல மாகச் சுட்டிக்காட்டி உள்ளனர்' என்றும் கூறினார். இவ்வாறு குற்றம் இன்னதென்று எடுத்துக் காட்டப்பட்ட காரணத்தால் அரசினர் ரெயில்வேக்களைத் தாங்களே அமைப்பது என்று முடிவு செய்தனர்.

**4. அரசினரின் நிர்மாணமும் நிர்வாகமும் (1869-79):** இவ்வாறு முடிவு செய்தவுடன் இந் நாட்டு அரசினர் பழைய கம்பெனிகளுடன் தங்கள் ஒப்பந்தங்களை மாற்றியமைத்துக் கொண்டனர். அதன்படிக் குறிப்பாக, கிரேட் இந்தியன் பெனின்

ஸ்டேலர் ரெயில்வேயில் கிடைத்த ஆதாயத்தில் ஒரு பாதியை ஒவ்வொரு அரையாண்டிலும் கோரினுர்கள். புதிய நிர்மாணங்களுக்கெல்லாம் உண்டான மூலதனச் செலவு அனைத்தையும் அரசினரே ஏற்றுக்கொண்டனர். ரூபாயின் மதிப்பு இறக்கத்தினுலும், 1874 - 79-ல் ஏற்பட்ட பஞ்சத்தின் காரணத்தினுலும் ஆப்கானிஸ்தானத்துடன் நடந்த போரினுலும் நிதியின்மை ஏற்பட்டு, அதன் காரணத்திஞல் நிர்மாண வேலையை அரசினரால் தொடர்ந்து நடத்த முடியவில்லை. 1880-ல் வந்த பஞ்சக்குழுவினர் உடனடியாக 5,000 மைல்கள் இருப்புப்பாதை போட்டு, மொத்தம் 20 ஆயிரம் மைல்கள் வரை நீட்டினுல்தான் பஞ்சத்தினின்று இந்நாடு ஒருவாறு விடுவிக்கப்படும் என்று கூறினுர்கள். அரசினர் அவ்வமயம் இம்மாதிரிப் பெருஞ்செயலில் இறங்கமுடியாத காரணத்தால் மறுமுறையும் கம்பெனிகளிடம் ஆக்க வேலையை ஒப்படைத்துவிட்டனர்.

**5. புதிய உத்தரவாத முறை (1879 - 1900):** இக்காலத்தில் தனியார் துறைக் கம்பெனிகளான வங்காள-நாக்பூர் கம்பெனி, தென்மராட்டா ரெயில்வே கம்பெனி போன்ற கம்பெனிகளுடன் அரசினர் ஒப்பந்தங்கள் செய்துகொண்டார்கள். இவ்வொப்பந்தங்களுக்கேற்பப் புதிய கொள்கைகளை அரசினர் மேற்கொண்டதாலும், அவை நடைமுறையிலுள்ள கொள்கைகளுக்கு மாறுபட்டு இருந்ததாலும் இப்புதிய கொள்கைகளுக்குப் புதிய உத்தரவாத முறை எனப் பெயரிடப்பட்டது. இவைகள் வருமாறு: (i) கம்பெனிகளால் புதியதாகக் கட்டப்படும் இருப்புப்பாதைகள் அனைத்தும் இந்திய மந்திரியின் சொந்த சொத்து என்றும், 25 ஆண்டுகளுக்குப் பின்னுல் ஒப்பந்தத்தை முடிவு கட்ட அவருக்கு முழு உரிமை உண்டென்றும், ஒப்பந்தத் தேதியிலிருந்து பத்து ஆண்டுகளுக்குள்ளாகச் சட்ட திட்டங்களை மாற்றியமைப்பதற்கு அவருக்கு உரிமை உண்டு என்றும், அந்த அடிப்படையில் இக் கம்பெனியார் போட்ட மூலத்தனத்தை எவ்வித ஏற்றத்தாழ்வுமின்றித் திருப்பிக் கொடுக்கலாம் என்றும் வரையப்பட்டு இருந்தது. (ii) முன்னுலிருந்த அதிகப்படியான வட்டி விகிதம் குறைக்கப்பட்டு எழுதப்பட்டது. அவ்வமயம் நடப்பிலிருந்த வட்டி $3\frac{1}{2}$ சதவீதம். (iii) அரசினர் உபரி இலாபத்தில் $\frac{3}{4}$ பகுதி பெரிய அளவில் தங்களுக்கென நிறுத்திக்கொண்டார்கள்.

பழைய உத்தரவாத முறையின்கீழ் ஒப்பந்தங்கள் காலாவதி ஆகும்போது, அரசினர் சில கம்பெனிகளுடன் இருந்த ஒப்பந்தத்தைப் புதுப்பிக்காமல் இருந்துவிட்டனர். அவ்வாருன ரெயில்வேக்கள் அரசாங்க ஆளுகைக் கீழ் வந்தன எனினும் பெரும்

பாலும் பழைய கம்பெனிகளிடமே திருத்தப்பட்ட ஒப்பந்தத்துடன் கொடுக்கப்பட்டன. புதிய உத்தரவாத முறையின்கீழ்த் தோன்றிய ரெயில்வேக்களையும்கூட, பழைய கம்பெனிகளை நடத்தச் செய்து, அரசினர் தங்களுக்கு அனுகூலமான முறையில் ஒப்பந்தங்களை மாற்றியமைத்துக்கொண்டனர்.

**6. துரிதமான நீட்சியும், வளர்ச்சியும், லாபம் காணுதலும் (1900-14) :** இவ் வமயத்தில் மிகவும் முன்னேற்றம் ஏற்பட்டது என்றும், ரெயில்வே ஆக்க வேலையில் பெரும் வளர்ச்சி ஏற்பட்டது என்றும் கூறலாம். இதுகாறும் ரெயில்வேக்கள் மராமத்து இலாக்காவின்கீழ்க் கவனிக்கப்பட்டு வந்தன. பின்னர் இம்முறை மாற்றப்பட்டுத் தனியே ரெயில்வே போர்டின் கண்காணிப்பின் கீழ் வந்தன. 1905-ல் தோன்றிய இந்த ரெயில்வே போர்டு ஒரு தலைவரையும், இரு உறுப்பினர்களையும் கொண்டதாக அமைந்தது. இவ் வுறுப்பினர்கள் வர்த்தக, தொழில் இலாக்காக்களில் பணியாற்றி வந்தார்கள். இக் காலத்தில் ரெயில்வே 1900-ல் 24,752 மைல்களாக இருந்து, 1913-14-ல் 34,656 மைல்களாக அதிகரித்தது. மற்றொரு வளர்ச்சிக்குரிய விவரம் என்னவெனில், 1900ஆம் ஆண்டிலிருந்து ரெயில்வே நிறுவனத்திற்கு லாபம் உண்டாயிற்று. இதற்கு முன் ஆண்டுகளில் உத்தரவாத முறையின் கீழ்ப் பெருமளவில் வட்டி மட்டுமே கிட்டத்தட்ட ரூ. 58 கோடி கொடுக்க வேண்டி ஏற்பட்டது. நாட்டின் பொருளாதார முன்னேற்றம் காரணமாக ரெயில்வேக்கள் லாபத்தைக் கொடுக்க ஆரம்பித்தன என்றால் மிகையாகாது. 1924 ஆம் ஆண்டில் இந் நாட்டு அரசினருக்கு ரெயில்வேக்கள் மூலம் கிடைத்த லாபம் ரூ. 103 கோடியாகும்.

**7. ரெயில்வே முறையில் ஏற்பட்ட சீர்குலைவு (1914-21) :** முதல் உலகப் போரின் காரணத்தாலும், அதனால் பின்விளைவாக ரெயில்வேக்களின்மீது பெரும் சுமையான போக்குவரத்துகள் நிகழ்ந்ததாலும் இவைகள் வெகுவிரைவிலேயே பழுதடைந்து விட்டன. துருப்புகளைப் பெருமளவில் அனுப்பியதாலும், போர்க் கருவிகளைப் போர்க்கேந்திரங்களுக்கு அனுப்பியதாலும் அதிகப்படியான தேய்மானம் ஏற்பட்டு, வெகு விரைவில் பழுதடைந்து போய்விட்டன. அவ்வமயம் போர் நடந்த களங்களாகிய கிழக்கு ஆப்பிரிக்கா, மெஸபொடோமியா முதலான இடங்களுக்குப் போர் வீரர்களையும், ஆயுதங்களையும் அனுப்பும் பொறுப்பு, இந்திய ரெயில்வேக்களுக்குக் கொடுக்கப்பட்டது. ரெயில்வே பட்டறைகள் போருக்குத் தேவையான வெடிகுண்டுகளும், பீரங்கிகளும், மருத்துவ வண்டிகளும் உற்பத்தி செய்யப் பயன்படுத்தப்பட்டன.

ஆண்டுதோறும் முதலீட்டுச் செலவினைத் தடுத்தனர். இதற்கான காரணம் ரெயில்வே நிறுவனத்திற்கு வேண்டிய கருவிகள் கிடைக்காததுதான். புதிய ரெயில்வேக்களையும் அமைக்க இயல வில்லை. மேலும் பழைய ரெயில்வேக்களையும் பழுதின்றி வைத்துக் கொள்ளுவது கடினமாக இருந்ததெனலாம். அக்வொர்த் குழு வினர், (Acworth Committee) இது சம்பந்தமாகத் தந்துள்ள விளக்கங்கள் வருமாறு : 'நவீன தேவைகளுக்கு ஏற்ப ரெயில்வே, பாரத்தைச் சுமந்துசென்றால் அவற்றைத் தாங்கக்கூடிய பலமுள்ள மரக்கட்டைகள் இல்லாத பாலங்கள் எண்ணிலடங்கா. பல தண்டவாளங்கள், நூற்றுக்கணக்கான நீராவி என்ஜின்கள், ஆயிரக்கணக்கான கூட்ஸ் பெட்டிகள் இவைகள் புதுப்பிக்க வேண்டிய காலம் கடந்து பல ஆண்டுகளாகிவிட்டன. ரெயில்வே ஆற்றும் பணி வர வரக் குறைந்து, மிகவும் பலவீனமடைந்து வரு வதைப்பற்றி இந்தியப் பொதுமக்களும், வர்த்தகர்களும் மிக அதிகமாகக் கண்டனத்தைத் தெரிவித்து வருவதும் அவர்கள் ரெயில்வே முறையைச் சீர்திருத்த வேண்டுமென்று பொதுத்தாள் கள் வாயிலாகவும், மற்றும் பல்வேறு முறைகளிலும் தெரிவித்து வருவதும் வெள்ளிடைமலை. 1919-ல் கிழக்கிந்திய ரெயில்வேக் கம்பெனியுடன் செய்துக்கொண்டிருந்த ஒப்பந்தம் முடிவடைந் தது. இந்த ஒப்பந்தத்தை முடித்து விடுவதாகக் கம்பெனிக்குத் தாக்கீது விடப்பட்டது. அரசினர், இந்த நிர்வாகத்தை மேற் கொள்ளுவதா அல்லது வேண்டாமா என்ற முடிவுக்கு வரவில்லை. பொதுமக்களோ, ரெயில்வே நிர்வாகத்தை அரசினர் மேற்கொள்ள வேண்டுமென்று வற்புறுத்தி வந்தனர். இந்த நிலையில்தான் சர் வில்லியம் அக்வொர்த் என்பவரைத் தலைவராக 1920-ல் நியமித்துக் கிழக்கிந்திய ரெயில்வேக் குழு (1920-21-ல்) தோற்றுவிக்கப் பட்டது.

**8. அக்வொர்த் குழுவினர் (1920-21) :** அக்வொர்த் குழு வினர் ஆங்கிலேயக் கம்பெனிகளிடம் இதுகாறும் விடப்பட்ட ரெயில்வே நிர்வாகத்தைத் திரும்ப மேற்கொள்ள வேண்டும். ஏனெனில் அவர்களுடைய சொந்த சொத்தில்லாத ரெயில்வேயை அவர்களிடமிருந்து எடுத்துக்கொள்ள வேண்டும். மேலும் இந்த ரெயில்வே கம்பெனிகளில் இவர்களிட்ட நிதி மிகவும் குறைவாகவே உள்ளது என்பதை ஏகமனதாய் ஒப்புக்கொண்டனர். பொது மக்களில் பெரும்பகுதியினர் இந்திய அரசியலாரின் நிர்வாகத்தைப் பொதுவாக விரும்புகின்றனர் என்பது தெளிவாயிற்று. இத் தனியார் நிர்வாகத்தினால் உதவித் தொழில்களுக்கான ஊக்கம் போதிய அளவு அளிக்கப்படவில்லை என்றும், தங்கள் விருப்பத் திற்கு ஏற்றபடி ஒரு வஞ்சனையுடன் ஏற்றுமதி இறக்குமதி வர்த்

தகத்தில் சலுகைகள் காட்டுகிறார்கள்.[1] என்றும், ரெயில்வே கம்பெனி நிர்வாகத்தில் கிடைக்கும் லாபம் ஆங்கிலேயக் கம்பெனிகளுக்கே போய்ச் சேருகின்றது என்றும், உயர்ந்த பதவிகளுக்கு இந்தியர்களை நியமிப்பதில்லை என்றும், அவர்களுக்குத் தகுந்த தொழில் நுட்பப் பயிற்சியும் கொடுப்பதில்லை என்றும் பொது மக்கள் புகார் செய்து வருகின்றனர். அரசினரே இதற்கு உண்மையான உரிமையாளர் என்பதைக் கம்பெனிகள் தெரிந்து, வேண்டுமென்றே தான்தோன்றித்தனமாக நடத்திவருகின்றார்கள். அரசினருக்கே அக்கறை இல்லாத இத் தொழிலைத் தனியார் திறுவனங்கள் எவ்வாறு சீரிய முறையில் நடத்துவார்கள் என்பது பெரும் பிரச்சினை. சுருங்கக் கூறின், கம்பெனி நிர்வாகத்தில் சர்க்கார் குறுக்கீடு செய்து, முன்னேற்றத்தைத் தடுத்து வந்தனர். மேலும், முன்னேற்றமற்றதும், பயனற்றதுமான ரெயில்வே கம்பெனிகளினுடைய கொள்கைகளால் அரசினரின் நிதி வீணாகச் செலவழிக்கப்பட்டது. அரசினர் இவற்றைக் கண்ணுற்று நாட்டின் பொருளாதார முன்னேற்றத்திற்கு இடையூறாக இருந்த செலவுகளைத் தடுக்கவில்லை. நடப்பிலுள்ள முறைகளுக்கு எதிராகப் பிறிதொரு முறையைப் பற்றி யோசனை கூறுவதில் குழுவினரில் பிரிவு ஏற்பட்டு முன்னுக்குப் பின் முரணான கொள்கையைக் கூறினர். இந்தியாவில் தோன்றிய கம்பெனிகளை ரெயில்வே நிர்வாகத்தில் ஈடுபடுத்தலாம் என்று சில உறுப்பினர்கள் கருதினார்கள். குழுவின் தலைவரும், இதர நான்கு உறுப்பினர்களும் அரசினர் நேரடியான நிர்வாகத்தையே மேற்கொள்ள வேண்டுமென்று வற்புறுத்தினர். இவர்களின் கொள்கையே நிலைபெற்றது. இந் நாட்டிலும் அயல்நாட்டிலும் மிகுந்த மதிப்புப் பெற்ற குழு ஒன்று இந் நாட்டிலுள்ள ரெயில்வேக்களின் நிர்வாகத்தை ஒரே இடத்தில் குவிக்காமல், வட்டாரத்திற்கேற்பப் பிரிவினை செய்து அந்தந்த மாகாண அரசினரிடம் நிர்வாகப் பொறுப்பினைக் கொடுக்கும்படி ஆலோசனை கூறியது. ஆயினும் அக்வொர்த் குழு இதை ஏற்க மறுத்தது. மத்திய நிர்வாகப் பொறுப்பை யேற்கத் தனி நிறுவனம் ஒன்று வேண்டுமென்று முடிவு செய்தது.

1. இந்திய வர்த்தகர்களும், உற்பத்தியாளர்களும் ரெயில்வே கம்பெனியின் மீது புகார் செய்தது உண்மையே. இந்தியாவின் பல்வேறு பகுதிகளிலிருந்து பண்டங்களை வாங்குவதிலும், அதேபோல் பல்வேறு சந்தைகளுக்குப் பண்டங்களை அனுப்புவதிலுங்கூட வேற்றுமை காட்டப்பட்டது. அமைதியின்மை ஏற்படுவதற்கு மற்றொரு காரணம் உண்டாயிற்று. அதாவது ரெயில்வேக் கம்பெனிகள் 'தடுப்பு விகிதங்களை' (block rates) அமைத்திருந்தனர். அதன் விவரமாவது வருமாறு: ஒரு சந்திப்பினை அடுத்துள்ள ரெயில்வே நிலையத்திலிருந்து குறுகிய தூரங்களுக்கு அதிகப்படியான விகிதத்தை ஏற்படுத்தினர். இதற்கான காரணமென்னவெனில் அனுப்பப்படும் சரக்குகள் வெகுதூரம் இதர ரெயில்வேக்களில் போகும் என்பதே. இதன் அடிப்படைக் கொள்கை என்னவெனில் ரெயில்வே கம்பெனி தன் வட்டாரத்திலிருந்து அனுப்பப்படும் சரக்குகள் பிறிதொரு ரெயில்வே கம்பெனிக்குப் போகாது இருக்கவும், தனக்கு அதிகப்படியான அளவு வர்த்தகம் கிடைக்கவும் இம்மாதிரியான தடுப்பு முறைகளைக் கையாண்டது.

நடப்பிலுள்ள ரெயில்வே போர்டை மாற்றியமைக்க வேண்டு மென்று இக் குழுவினர் கருதினர். ரெயில்வே போர்டில் மூன்று உறுப்பினர் உளர். அவர்களில் ஒருவர் தலைவர்; மற்றும் இருவர் உறுப்பினர் ஆவர். இதன் தலைவர் அரசினர் இலாக்காவின் செயலருடைய பொறுப்புகளுக்குச் சமமான பொறுப்பினைப் பெற்றுள்ளார். சில தொழில் வட்டாரங்களில் அவர் உயர்தரப் பொறுப்பைப் பெற்றிருந்தார். அவர் செய்யும் தீர்மானமே போர்டி னுடைய தீர்மானமாகக் கருதப்படும். இன்னும் சில சாதாரண தகவல்களில் போர்டு உறுப்பினர்களில் பெரும்பான்மையோரின் முடிவை அனுசரித்து நடக்கும் ரெயில்வே போர்டானது, அன்றாட அலுவல்களின் சுமையில் ஆழ்த்தப்பட்டும், பல்வேறு கட்டுப்பாடு களுக்கு அடங்கி ஒடுங்கியும் உள்ளூர் நிலவரம் இன்னதென்று அறியாது குழம்பியும் கிடந்தது. தொழில் நுட்ப வல்லுநர், ஆய்வாளர் முதலியோர் இந்தப் போர்டில் இருக்கவில்லை. இக் குழுவினர் கூறியபடி அரசினருக்கும், போர்டுக்கும் உள்ள தொடர்பு, மாற்றுந்தாய்க்கும் சேய்க்குமுள்ளது போன்று இருந் தது. இவர்களின் தேவைகளையும், கொள்கைகளையும் கவனிக் காமல் விட்டு விட்டனர். வைசிராய் கவுன்சிலில் இதற்கென்றே ஒரு தனி உறுப்பினரை நியமனம் செய்து, இவர்களது அன்றாடப் பணிகளைக் கவனிக்கும்படிச் செய்யவேண்டும் என்று இக் குழு வினர் முடிவாகக் கூறினர். ரெயில்வே போர்டு அன்றாடப் பணிகளை மேற்கொள்வதற்காக ஏற்படுத்தப்படவில்லை ரெயில்வேக்கள் செய்யும் பணியை ஊன்றிக் கவனித்து, ஆழ்ந்து யோசனை செய்து, முடிவாகத் திட்டமிடுவதற்கென்றே அமைக்கப் பட்டுள்ளது என்று இக் குழுவினர் கருதி வந்தனர். எனவே வைசிராய், கவுன்சிலில் உள்ள உறுப்பினரின்கீழ், போர்டு ஒன்றினை நியமனம் செய்து, அதற்குத் தலைமைக் கமிஷனர் ஒருவரையும், அவருக்கு உதவியாக நான்கு கமிஷனர்களையும் நியமனம் செய்யவேண்டும் என்று பரிந்துரை செய்தது. இந்த நான்கு கமிஷனர்களில் ஒருவர் நிதிக் கமிஷனராகவும், மற்ற மூவரும் முறையே தெற்கு, மேற்கு, கிழக்குப் பகுதிகளின் தலைமை யாளர்களாகவும் இருந்து பணியாற்றுவார்கள். இந்தப் போர்டில் ஆறு நெறியாளர்கள் இருப்பார்கள். அவர்கள், (i) கணக்கு, (ii) சிவில் பொறியியல், (iii) மெக்கானிக்கல் பொறியியல், (iv) டிராபிக் ஆபரேட்டிங், (v) டிராபிக் கமர்சியல், (vi) உள் நாட்டுக் கப்பலோட்டுதல், சாலைப் போக்குவரத்து ஆகிய துறை களைக் கவனிப்பார்கள். இந்தப் போர்டிற்கு ஒரு பொதுச் செயலரும் தனியே இயங்கும் புள்ளி விவர இலாக்காவும் இருக்கும். இந்த மத்திய ரெயில்வே நிறுவனம் புனரமைப்பு ஆனதும், சட்டப்படி தனித்து இயங்கும். இது அரசினரின் ஒரு பகுதியாக இருப்பினும்,

கொள்கைகள் சம்பந்தப்பட்ட பெரும் பிரச்சினைகளிலும், நிதி சம்பந்தப்பட்ட பெரும் பிரச்சினைகளிலும் இது அரசினருக்குக் கட்டுப்படும். ரெயில்வே நிறுவனங்களில் முதல்வர்களிடமே அன்றடப் பிரச்சினைகள், அன்றடச் செலவு, பணியாளர்கள் சம்பந்தமான தகவல்களை விட்டுவிடவேண்டும்.

நிதியைப் பொறுத்தமட்டில் ரெயில்வேக்கள் வர்த்தக அமைப்பைப் போன்றவை என இக் குழுவினர் வலியுறுத்திக் கூறினர். அரசினர் ரெயில்வேக்களின் மூலதனச் செலவுக்கெனவும், வளர்ச்சிக்கென்றும், நீட்சிக்கென்றும், தவிர்க்க இயலாச் செலவுகளுக்காகவும், பழுது பார்ப்பதற்கென்றும், புதுப்பிப்பதற்கென்றும் அவ்வப்போது நிதி ஒதுக்கீடு செய்யாத காரணத்தால் ரெயில்வேக்களில் பெரும் குறைகளும், சீர்கேடுகளும் தோன்றியுள்ளன என்று இவர்கள் கருதினர்கள். பொதுப் பட்ஜெட்டின் ஒரு பகுதியாக ரெயில்வே பட்ஜெட்டை அமைப்பதால் ஆட்சி வகைகளில் இடர்ப்பாடுகளும் ரெயில்வேக்களுக்கு இடைஞ்சல்களும் உண்டாகக் கூடும் என்று கருதப்பட்டது. வர்த்தக நிலவரத்தையும், பருவத்தையும் ஒட்டி ரெயில்வேக்களுக்கு லாபம் மாறி மாறி வந்து கொண்டிருந்தது. இது பொதுப் பட்ஜெட்டை எப்பொழுதும் ஒரு நிலையில்லாத தன்மையில் வைத்துக் கொண்டிருந்தது. பொதுப் பட்ஜெட்டில் இது இணைக்கப்பட்ட காரணத்தினுல் வர்த்தக முறையில் நடத்தப்பட முடியவில்லை. ஆண்டுதோறும் மார்ச்சுமாதம் 31ஆம் தேதி ரெயில்வே வர்த்தக முறை நிறுத்தப்பட்டதாகவும், அலுவலக ஆண்டின் தொடக்கத்தில் மீண்டும் தொடங்கப்பட்டதாகவும் ஓர் ஏற்பாடு செய்யப்பட்டது. இம் முறையினுல் ரெயில்வேக்களுக்கு இடர்ப்பாடுகளே தோன்றின எனலாம். 1937ஆம் ஆண்டில் வந்த மக்கே குழுவினர், அரசியலார் அவ்வப்பொழுது பருவத்தையொட்டி இவ்வளவுதான் மூலதனச் செலவு என்று திட்டப்படுத்தி, அதை எக்காலமும் மாற்ருது கொடுத்து வரவேண்டும் என்று பரிந்துரை செய்தனர். ஆனுல் நடப்பில் அவ்வாறு இல்லை. நாட்டின் பொது நிதித் தேவைகளையொட்டி நிதி மெம்பர்கள் ரெயில்வேக்களுக்கு அளிக்கவேண்டிய செலவுத் தொகையை வரம்பின்றி வெட்டிக் குறைவாகவே அளிப்பது வழக்கமாயிருந்தது. இதன் விளைவாக ரெயில்வேக்களில் மேற்கொண்ட புனரமைப்புகளும் நீட்சிகளும் அரைகுறையாக நின்றுவிடும். ரெயில்வே ஆண்டில் எடுத்து நடத்தப்படவேண்டிய செயல்களுக்கான சர்க்கார் மான்யம் திடீரென்று துண்டிக்கப்பட்டு மேற்கொள்ளப்பட்ட வேலைகள் முடிவு பெறுமல் நின்றுவிடும். எதிர்பாராதவித

மாக நிதி வசதி ஏற்பட்டாலோ, நிதி மெம்பர் உடனே மான்யத்திற்கு அனுமதி கொடுத்து, அதை அந்த ஆண்டினுாடே செலவு செய்துவிட வேண்டுமென்று வற்புறுத்துவார். இதன் விளைவாகச் சீரிய திட்டமில்லாத முறையில் முன் யோசனையின்றிச் செலவுகள் ஏற்படக் கூடும். இதனின்று விலக்குப் பெற வேண்டுமானால் ரெயில்வேக்களுக்கெனத் தனியே பட்ஜெட் அமைத்தலே நலம். இது பொது பட்ஜெட்டினின்று விலக்கப் பெறவேண்டும் என்று கருதினார்கள். எனவே, இக்குழுவினர் ரெயில்வேக்களைத் திருத்தியமைத்து, அவர்களது வருமானத்துக்கு அவர்களே பொறுப்பேற்றுக்கொள்ள வேண்டுமென்றும், அரசினர் போட்ட மூலதனத்திற்குச் சேரவேண்டிய வட்டியைக் கொடுத்துவிட வேண்டுமென்றும், அரசினரின் தலையீடின்றித் தங்கள் விருப்பத்திற்கு ஏற்றவாறு உபரியைச் செலவிட்டுக் கொள்ள உரிமை அளிக்கப்பட வேண்டுமென்றும் கூறினர்.

**9. ரெயில்வே நிதிக் குழுவினரும் இஞ்ச்கேப் குழுவினரும் :** அக்வொர்த் குழுவினரின் பரிந்துரைகளில் கண்ட கொள்கைகளை அரசினர் ஏற்றுக் கொண்டனர். அவைகளை விளக்கமான முறைகளில் அரசினருக்கு எடுத்துரைக்க வேண்டி, இன்னும் இரு குழு, வினர் நியமிக்கப்பட்டனர். அவைகளில் முதலாவதாக வந்த குழு • ரெயில்வே நிதிக்குழு (Railway Finance Committee), சர் மால்காம் ஹெய்லி (Sir Malcolm Hailey) தலைமையில் வந்தது. இதையடுத்து இரண்டாவதாக வந்த இந்தியப் பணியாளர் நீக்கக் குழு (Indian Retrenchment Committee) இஞ்ச்கேப் பிரபுவின் தலைமையின் கீழ் 1922-ல் பணியாற்றிற்று. ரெயில்வே நிதிக் குழுவினரின் பரிந்துரைகளாவன : (i) எடுத்துக்கொள்ளப்பட்ட நிர்மாண வேலைகளைச் சடுதியில் முடிக்கவும், தற்போதுள்ள இருப்புப் பாதைகளைச் செப்பனிட்டு வலுப்படுத்தவும் அதிகப்படி மூலதன நிதி ஒதுக்கங்கள் செய்யவேண்டும். (ii) ரெயில்வே திட்டங்களை ஐந்தாண்டுகளுக்கென ஏற்பாடு செய்து நடப்பு ஆண்டு முடிய இரண்டாண்டுகளுக்கு முன்னரே திட்டங்களை வரைதல் வேண்டும். (iii) அந்தந்த ஆண்டில் பயன்படுத்தப்படாத தொகையையும், உபயோகப்படுத்தப்படாத நிதியையும் அடுத்த ஆண்டிற்கு ஆரம்ப இருப்புத் தொகையாக வைத்துக்கொண்டு, ரெயில்வே ஆட்சிக்கென ஒதுக்கப்படவேண்டும். நடப்பிலுள்ள நிர்மாண வேலைகளை முடிக்கவும், இருப்புப் பாதைகளைச் செப்பனிட்டுத் திடப்படுத்துவதற்கென்றும் ஐந்தாண்டுகளுக்குள்ளாக ரூ. 150 கோடி செலவிடப்படவேண்டும் என்று கருதினர்.

இஞ்ச்கேப் குழுவினர் நிதியின்மையால் மேற்கூறிய பரிந்துரைகளை நிராகரித்தனர். ரெயில்வே சம்பந்தமான எவ்வகைச் செலவுகளையும் மேற்கொள்ள வேண்டுமானால் வருங்காலத்தில் அதிகப்படியான வருவாயைக் கொடுக்கும் என்ற சான்று காட்டப்பட்டால் ஏற்றுக் கொள்ளலாம். இல்லையேல் எவ்வகையான செலவினையும் நிராகரித்துவிட வேண்டும். ரெயில்வேக்களுக்கு அரசினர் போட்டுள்ள மூலதனத்திற்கு 5½% வட்டித் தொகையை ரெயில்வேக்கள் கொடுக்க வேண்டுமென்று கூறியது. தேய்மான நிதிக் (depreciation fund) கட்டுப்பாடு, பல்வேறு இலாக்காக்களுக்குப் பிரித்தல், ரெயில்வே கணக்குமுறை முதலியவற்றைப் பற்றி ஆய்வுகள் நடத்திப் பரிந்துரை செய்துள்ளனர். மேலே கூறிய மூன்று குழுவினரின் முக்கியமான பரிந்துரைகளை அரசினர் ஏற்றுக்கொண்டு அதன்படி பின்வரும் ஆண்டுகளில் நடத்தியுள்ளனர்.

**10. ரெயில்வே போர்டைத் திருத்தியமைத்தல் :** 1922-ல் ரெயில்வே போர்டைத் திருத்தியமைத்து, அதன் முதல் தலைமை ஆணையாளராக (Chief Commissioner) சர் க்ளெமண்ட் ஹிண்லேயை (Sir Clement Hindley) நியமித்தனர். நிதி ஆணையாளர் ஒருவரையும், அதன் பின்னர் இரு பணியாளர் உறுப்பினர்களையும் நியமனம் செய்தனர். ரெயில்வேக்களை மூன்று வட்டாரப் பகுதிகளாகப் பிரித்து ஆட்சிமுறை நடத்தவேண்டும் என்று அக்வொர்த் குழுவினர் செய்த பரிந்துரைக்குப் பதிலாக, ரெயில்வேயில் உள்ள பல்வேறு தகவல்களைக் கொண்ட அடிப்படையில் பிரித்தனர். ஓர் உறுப்பினர் தொழில் நுட்பப் பகுதியை கண்காணித்தார். இன்னொருவர் உறுப்பினர் பொது ஆட்சிப் பணியாளர், டிராபிக் (traffic) சம்பந்தமான செயல்களைக் கண்காணித்தார். நிதியாணையாளர், நிதி இலாக்காக்களின் பொறுப்பினை ஏற்றுக்கொண்டார். சிவில் பொறியியல், மெக்கானிக்கல் பொறியியல், டிராபிக், நிதி, பணியாளர் பகுதி என்ற பகுதிகளுக்கு 5 நெறியாளர்கள் இந்தப் போர்டில் இருந்து உதவி செய்தனர்.

**11. நிதிப் பிரிவினை :** 1924 ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் ரெயில்வே நிதி, பொது நிதியினின்று பிரிக்கப்பட்டது. இனி, ரெயில்வேயினின்று ஆண்டுதோறும் ஒரு குறிப்பிட்ட தொகை பொது நிதிக்குக் கொடுக்கப்படும். ரெயில்வே நிகர வருவாயிலிருந்து கொடுபடவேண்டிய முதல் செலவாக இது கருதப்படும். இது கொடுத்தபின்னர் ஏதாவது இருந்தால், அவற்றை ரெயில்வே ரிஸர்வாக மாற்றி ஆண்டுதோறும் 3 கோடியாகவும், அதற்கு மேற்பட்டால் அவ் வதிகத் தொகையில் மூன்றில் ஒரு பங்கு பொது நிதி

யில் சேர்க்கப்படவேண்டும். தொடங்கப்பட்ட ரெயில்வே ரிசர்வ், ஏதாவது ஓர் ஆண்டில் பொதுநிதிக்குச் சேர வேண்டிய தொகையைக் கொடுக்க முடியாவிடில் அதை ஈடுகட்டவும், தேய் மானத்திற்காகச் செலவிடவும், பயனற்றவைகளை நீக்கிப் புதுப் பிக்கவும், நிதி வசதி பெறவும் பயன்பட்டது. ரெயில்வேயின் நிதி நிலைமையை வலுப்படுத்தவும், பொதுமக்களுக்கு வேண்டிய வசதிகளை அளித்தும், கட்டண விகிதத்தைக் குறைக்கவும் இது பயன்பட்டது.

**12. வெட்ஜ்வுட் குழு** (Wedgwood Committee): 1922ஆம் ஆண்டிற்குப் பின்னர் ரெயில்வே முறையில் பெரும் மாறுதல்கள் ஏற்பட்டன. முதன் முதலாக அரசினர் ரெயில்வே நிர்வாகத்தை எடுத்துக்கொண்டனர். இதுகாறும் இந்திய மந்திரியிடமிருந்து நிதி உதவி பெற்று வந்த கம்பெனிகள், இந்திய மந்திரியின் உதவியை நாடவில்லை. அவை இந்தியப் பாராளுமன்றத்திற்கும் பொதுமக்கள் எண்ணத்திற்கும் ஏற்ப நடக்க ஆரம்பித்தன.

1925ஆம் ஆண்டு முதல் ரெயில்வேக்கள் எதிர்பாராத வர்த்தக ஏற்றம் பெற்றன. இந்த ஏற்றம் 1930 வரை இருந்தது. இருப்புப் பாதைகளை 5,000 மைல்களுக்குக் குறையாமல் அமைத்து ரெயில்வே போக்குவரவு முறையை விஸ்தரித்தனர். எனினும் மாக்கே (Mackay) குழுவினர், ரெயில்வே 1,00,000 மைல்களுக்குக் குறையாமல் விஸ்தரிக்கப்பட வேண்டுமென்று கூறியதில் ஒரு சிறிதளவு மட்டிலும் போடப்பட்டுள்ளது. இந்த வர்த்தக ஏற்றமுள்ள காலத்தில் இவர்களுக்குக் கிடைத்த அமித இலாபத்தை, எல்லாச் செலவுகளையும் தேய்மானக் கணக்குகளையும் ஈடுகட்டியது போக, மீதியுள்ள லாபத் தொகையைத் திட்டமான முறையில் செலவுகளுக்குப் பயன்படுத்தாது வரம்பின்றி வீணே செலவிட்டனர். 1930 ஆம் ஆண்டை அடுத்து வந்த காலத்தைப் பொருளாதார மந்தகாலம் என்று கூறலாம். 1930-லிருந்து 1937 வரை ரூ. 5.7 கோடித் தொகை ரெயில்வேக்களால் மத்திய அரசினருக்குக் கொடுக்கப்பட்டது. இத் தொகை 1931-32-ல் கொடுக்கப்பட்டது.[1] வர்த்தக மேம்பாடான காலத்திலுங்கூட ரூபாயின் மதிப்பீடு குறைந்துள்ளதைப் போக்க எண்ணி, ரூபாயில் உள்ள 100க்கு மேற்பட்ட குறைபாடுகளை அகற்ற அரசினர் முயன்றனர். 1936ஆம் ஆண்டில் இந்திய ரெயில்வே நிலையைப் பரிசீலனை செய்யச் சர் ரால்ப் வெட்ஜ்வுட் தலைமையில், ரெயில்வே விசாரணைக் குழு ஒன்று நியமிக்கப்பட்டது. இக் குழுவினர், ரெயில்வே வருமானத்தைச் செம்மைப்படுத்தியும், செலவினைச்

1. 'இண்டியன் ரெயில்வேஸ்: ஒன் அண்ரட் இயர்ஸ்' (1853—1953) பக.38.

சுருக்கியும், விசாரணைகள் நடத்தி, ரெயில்வே நிறுவனத்தைத் தனித்து நிற்குமொரு நிறுவனமாக மாற்றியமைக்க முயற்சி செய்தனர். 1932ஆம் ஆண்டு போப் குழுவினர் செய்த பரிந்துரைகளை இவர்களும் ஆமோதித்தனர். ரெயில்வே நிறுவனத்தின் பல்வேறு பணிகளை ஒழுங்குபெற விளக்கிக் கூறி, அவைகளைச் செய்வதற்கான செலவு இவ்வளவு என்று அறுதியிட்டு, அவற்றின் மூலம் சிக்கன முறைகளைக் கையாண்டு ரெயில்வேக்கள் உயரிய சேவை புரிய வழிவகுத்தனர். இக் குழுவினர் தேய்மான நிதி ஒன்றை ஆண்டுதோறும் முப்பது கோடிக்குக் குறையாமல் நிறுவி அதன்மூலம் ரெயில்வேக்களுக்கான தேய்மானத்தை ஈடுபடுத்தலாம் எனப் பரிந்துரை செய்தனர். இத்துடன் ரிசர்வு நிதி ஒன்றையும் ஒதுக்கீடு செய்து, அதனின்று வட்டிச் சமனுக்க நிதி (Equalization fund for payment of interest) ஒன்றை ஏற்படுத்தி வட்டிச் செலவுகளை அதனின்று ஈடுகட்டினர். வரவர ரெயில்வேயின் முக்கியத்தைப் பொதுமக்களுக்கு அறிவுறுத்தும்வண்ணம் செய்தித் தாள்கள் மூலமும், பொதுமக்கள் தொடர்பு அதிகாரிகளைக் கொண்டும், ரெயில்வே தகவல் வெளியீட்டு நிலையங்கள் மூலமாகவும், பொதுமக்களிடையே ரெயில்வே போக்குவரத்தின் இன்றியமையாத நிலையைச் சீரிய முறையில் விளக்கி, அதிகப்படியான பேர்களை ரெயில்வே பிரயாணத்தில் ஈடுபடும்படிச் செய்தனர்.

**13. இரண்டாம் உலகப் போரின் காலத்தில் ரெயில்வேக்களின் நிலை :** மந்த காலத்தின்போது ரெயில்வே வருமானம், இதில் ஈடுபடுத்தப்பட்ட மூலதனத்திற்கான வட்டியைக் கட்டுமளவில்கூட இல்லை. ரிசர்வு நிதியினின்று பெருமளவுத் தொகையை எடுத்து அதைப் பயனற்றதாக்கிவிட்டனர். தேய்மான நிதியினின்று அவர்கள் கொடுக்கும் குறைந்தளவு நிதியை அன்றுடப் பணிகளுக்குப் பயன்படுத்த முயன்றனர். 1935-36-ல் ரெயில்வேக்களின் நிலையை ஆலோசனை செய்து தற்காலிகமாகப் பொது வருமானத்திற்கும் வட்டி கொடுப்பதைக் காலந்தாழ்த்திப் போட்டனர். பின்னர் அதைத் தற்காலிகமாக நிறுத்தியும் வைத்தனர். இவற்றை நடத்தும் செலவினைக் கொஞ்சம் கொஞ்சமாகக் குறைத்துக்கொண்டே வந்து, பழுது பார்த்தல், புதுப்பித்தல் செலவினையும் குறைத்துக்கொண்டே வந்து முடிவில் அதைக் குறைந்த தொகையாக மாற்றியமைத்தனர். இதற்குள்ளாக இரண்டாவது உலகப்போர் துவங்கியது. நிதி சம்பந்தமாக ஆராய்ந்து நோக்கின், ரெயில்வேக்களுக்கு மிகவும் ஏற்றமான நிலையே ஏற்பட்டது. எதிர்பாராத நிலைமையில் ரெயில்வேக்களின் சேவை அதிகப்படியாகத் தேவைப்பட்டது. இந்தச் சந்தர்ப்பத்தில் ரிசர்வு நிதியினின்று எடுக்கப்பட்ட தொகையைத்

திருப்பிக் கொடுத்தும், பொது வருமானத்திற்குச் சேரவேண்டிய வட்டிப்பாக்கியை உடனுக்குடன் ஈடுபடுத்தியும் நிலைமையைச் சமாளித்துக்கொண்டது. அதேசமயத்தில் ரெயில்வே சாதனங்கள் வரவர அளவுக்கு மீறிப் பழுதடைந்து போவதை அவர்கள் பார்க்காமலில்லை. போர்க் காலத்தின்போது இந்திய ரெயில்வேக்கள், என்ஜின்கள், வாகின்கள், இருப்புப்பாதைகள் இவைகளைப் போர்க்கேந்திரங்களாகிய மத்திய கிழக்குப் பகுதிக்கு அனுப்பும்படி நேச நாடுகள் கோரின. ஏறத்தாழ 26 கிலோ இருப்புப்பாதைகளை அடியோடு எடுத்து அந்த இருப்புப்பாதைகளை இந்திய ரெயில்வேக்கள் அனுப்பி வைத்தன. முன்னர் நடந்த முதற் போரின்போது, எவ்வாறு ரெயில்வே இயந்திரப் பழுது பார்க்குமிடங்கள் யுத்தகாலத் தளவாட உற்பத்திக்கு உறுதுணையாக அமைந்தனவோ அதேபோன்று இப்போர்க் காலத்திலும் நிகழ்ந்தது. இவற்றின் முடிவாக இந்திய ரெயில்வேக்கள் சீர் குலைந்து போனதுடன் பழுது பார்ப்பதற்கும், புதுப்பிப்பதற்கும் அளவு கடந்த செலவு ஏற்பட்டது.

நாட்டில் சுதந்தரமேற்பட்டவுடன் நாடு துண்டிக்கப்பட்டது. இதன் விளைவாக எதிர்பாராத இடர்ப்பாடுகள் ஏற்பட்டு, நாடிழந்து வரும் மக்கள் எண்ணிக்கை அதிகரித்தது. கிராமப் புறங்களில் அமைதியற்ற நிலை ஏற்பட்டது. தேவையான பொருள்களையும், பண்டங்களையும் நாடு முழுதும் அனுப்புவதற்கும், ரெயில்வேக்கள் பயன்பட்டன என்பதில் ஐயமில்லை.

**14. ரெயில்வே கட்டண விகிதக் கொள்கை :** ரெயில்வேக்கள் கம்பெனிகளால் நடத்தப்பட்ட காலத்தில், தங்கள் லாபத்தை அனுசரித்துக் கட்டண விகிதங்கள் அமைந்திருந்தன. இந்த வாதம் ஏற்றுக்கொள்ளக் கூடியதெனலாம். இவர்கள்மீது சுமத்தப்பட்ட பெரும் குற்றம் என்னவெனில், கட்டண விகிதத்தை ஒரு தலையாக அமைத்து இந்திய வர்த்தகத்திற்கு இடர் ஏற்படுத்தி ஆங்கில வர்த்தகத்தை ஊக்குவித்தனர் என்பதாகும். தடுப்பு விகித[1] (block rates) முறைகூடப் பொதுமக்களின் கசப்பிற்கு மூலகாரணமாக இருந்ததெனலாம். ரெயில்வே கட்டணக் கொள்கை இந்தியாவிலுள்ள மூலப் பொருள்களை அயல்நாடுகளுக்கு ஏற்றுமதி செய்ய வசதியானதாக அமைய வேண்டும் என்று முடிவு செய்தது. ஆங்கில நாட்டிலிருந்து பொறி செய் பொருள்களை இறக்குமதி செய்ய வேண்டுமென்று எதிர் நோக்கியது. இதன் விளைவாகத் துறைமுகப் பட்டினங்களில் அளவுக்கு மீறிய தொழிற்சாலைகள்

1. பக்கம் 356-ல் உள்ள அடிக்குறிப்பைக் காணவும்.

தோன்றின. எனவே, சென்னை, பம்பாய், கல்கத்தா இந்த மூன்று துறைமுகங்கள் நீங்கலாக, இதர வட்டாரங்களில் தொழில் வளர்ச்சி தடைப்பட்டது எனலாம். அக்வொர்த் (Acworth) குழுவினர் ரெயில்வே கட்டண விகித நீதிமன்றத்தை அமைக்க வேண்டுமென்று பரிந்துரை செய்திருந்தனர். ஆனால், அதற்குப் பதிலாக ரெயில்வே கட்டண விகித ஆலோசனைக் குழு ஒன்றை யமைத்தனர். இக் குழுவினருக்கு ஒரு தலைவரும், பொது வர்த்தக மக்களின் பிரதிநிதியாக ஓர் உறுப்பினரும், ரெயில்வே பிரதிநிதியாக மற்றோர் உறுப்பினரும் இருப்பார்கள். ரெயில்வே கட்டண விகிதங்களில் உள்ள குறைபாடுகளையும், ஒருதலையாக விதித்திருப்பதால் வரும் குறைகளையும் கவனித்து ஆய்வு செய்து யோசனை கூறுவதே அவர்கள் வேலை. இக் குழுவினர் இத் துறையில் சீரிய முறையில் பணியாற்றினர். வர்த்தக, வியாபார சம்பந்தமான முடிவுகள் மிகவும் சீராக இருந்தமையால், தனித்தியங்கும் ஒரு நீதி மன்றத்தை நிறுவவேண்டுமென்றனர். 1949ஆம் ஆண்டில் சட்டப்படி ரெயில்வே கட்டண விகித நீதிமன்றம் துவக்கப் பட்டது. கட்டண விகிதம் சம்பந்தமாக ஏற்படும் வழக்குகளையும் தகராறுகளையும் தீர்த்து வைக்க இது பயன்படுகிறது.

அக்வொர்த் குழுவினர் பரிந்துரைப்படி, மக்கள் சபையில் உள்ள ஆலோசனைக் குழுவைத் தவிர எல்லா ரெயில்வேக் களுக்கும் அறிவுரை வழங்க வேறு குழுக்களும் அமைக்கப்பட்டன. பின்னர் ரெயில்வேயைப் பயன்படுத்துவோர் ஆலோசனைக் குழுக்களை வட்டார வாரியாக நாடு முழுதும் நியமித்து, ரெயில்வே ஆட்சியுடன் நெருங்கிய தொடர்பு கொள்ளுமாறு செய்தனர். ரெயில்வே பணிகளில் உயரிய இடங்களில் இந்தியர்களை நியமிக்க அவர்களுக்குப் போதிய பயிற்சி கொடுக்க வேண்டுமென்று அக்வொர்த் குழுவினர் யோசனை கூறினர். அதற்கேற்ப அரசாங்கம் இந்திய ரெயில்வே பணிகளில் 75% இந்தியர்களை நியமனம் செய்ய முற்பட்டது. மேலும் சுதந்தரம் கிடைத்த பின்னர், இந்திய மயமாக்கும் தன்மை வலியுறுத்தப்பட்டது.

மூன்றும் வகுப்புப் பிரயாணிகளுக்குப் போக்குவரத்து சௌகரியம் செய்து கொடுக்கவும், பொதுவாகப் பிரயாண வசதியை அதிகரிக்கவும் மற்றும், எஞ்சின் பகுதியான சக்கரங்களை அடிக்கடி புதுப்பிக்கவும் வேண்டுமென்ற அக்வொர்த் குழுவினரின் பரிந் துரையை அரசினர் ஏற்றுக்கொண்டனர். மூன்றும் வகுப்புப் பிரயாணிகளாலேயே அதிக வருமானம் ஏற்படுகின்ற காரணத்தால் அவர்களுக்குக் கிடைக்க வேண்டிய வசதிகள் மற்றெல்லோரைக் காட்டிலும் அதிகப்படியாக இருக்க வேண்டுமென்ற வாதம் ஏற்றுக்-

கொள்ளத் தக்க முறையில் இல்லை எனலாம். பொதுவாகவே, மெயில் பிரயாணம் செய்வோர்களுக்கு வசதிகள் அளிக்கப்பட வேண்டுவது இன்றியமையாதது. ஆனால் பொது நன்மையைக் குறித்து அதிகப்படி எண்ணிக்கையில் பிரயாணம் செய்வோருக்கும் வசதிகள் செய்துதரவேண்டியது இன்றியமையாதது எனலாம்.

**15. ரெயில்வே கூட்ட ஆலோசனைகளில் சில மாற்றங்கள் :** 1924ஆம் ஆண்டு நடந்த ரெயில்வே ஆலோசனைக் கூட்டம் 1943 ஆம் ஆண்டு முதன் முதலாக மாற்றியமைக்கப்பட்டது. 1949ஆம் ஆண்டில் மறுமுறை மாற்றியமைக்கப்பட்டது. 1943ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் இரண்டாம் தேதி மக்கள் சபை, 1924ஆம் ஆண்டு கொண்டுவரப்பட்ட ரெயில்வே ஆலோசனைக் கூட்டம் எதிர்பார்த்த அளவு பலனை அளிக்காத காரணத்தால், கீழ்க்கண்டவாறு அதை மாற்றியமைக்க வேண்டுமென்று ஆலோசனை கூறியது: (i) 1942-43ஆம் ஆண்டில் ரூ. 2,35,32,000-ஐ ரெயில்வே நிதியினின்று, நடப்பு விகிதத்திற்காகவும், பழைய பாக்கிக்காகவும் மாற்றவேண்டும். (ii) 1943ஆம் ஆண்டு ஏப்ரல் முதல் தேதியிலிருந்து பழைய விகிதங்கள் நிறுத்தப்படவேண்டும். (iii) 1943-44 ஆம் ஆண்டில் வர்த்தகத் துறையினின்று வரும் ஆதாயத்தைத் தேய்மான நிதியினின்று எடுக்கப்பட்ட கடனுக்காக ஈடுகட்ட வேண்டும். எனவே கிடைக்கும் இலாபத்தில் 25%ரெயில்வே ரிசர்வுக்கும், 75% பொது ரிசர்வுக்கும் ஈடுகட்டிவிட்டு, மிகவும் முக்கியமான இருப்புப் பாதையில் ஏற்படும் நஷ்டத்தைப் பொது ரிசர்வினின்று வாங்கிக்கொள்ள வேண்டும். மேலும் (iv) பொது ரிசர்விற்கும், வர்த்தகப் பாதைகளுக்கும் ரெயில்வே ரிசர்வுகளுக்குமுள்ள விகிதத்தைப் புதிய கூட்ட ஆலோசனை தோன்றும் வரை ஆண்டுதோறும் தேவைகளுக்கேற்ப மாற்றியமைத்துக் கொள்ள வேண்டும்.

**16. ஆலோசனைக் கூட்டங்களின் தீர்மானங்கள்—1949 ஆம் ஆண்டில் போடப்பட்டவை :** 1949ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 21ஆம் தேதி இந்திய மக்கள் சபை கீழ்க்கண்ட தீர்மானங்களை நிறைவேற்றியது. (1) ரெயில்வே நிதி, பொது நிதியினின்று தனித்திருக்க வேண்டும். (2) ரெயில்வே நிறுவனத்தின் பங்குதாரராக இருக்க வேண்டியவர் வரி கொடுப்போர்களே. (3) பொது நிதியினின்று ரெயில்வே நிறுவனத்திற்கு இடப்பட்ட மூலதனத்திற்கு, ஆண்டுதோறும் இவ்வளவு என்று அளவையிட்ட லாபப் பங்கைக் கொடுக்க வேண்டும், (4) 1950-51 முதல் ஐந்தாண்டுகளுக்கு ஆண்டுதோறும் கொடுக்கப்பட வேண்டிய லாபப் பங்கு,

இடப்பட்ட மூலதனத்திற்கு 4% வீதம் கணக்கிடப்பட்ட தொகைக்குக் குறையாமலும் இருக்க வேண்டும். எனினும், பயனற்ற சில முக்கிய இருப்புப் பாதைப் பகுதிகள், பொது ரிசர்வி னின்று பெற்ற மூலதனத்திற்காக லாபப் பங்கு கொடாமல் இருக்கும் அந்த ஆண்டிலேயே இது அமலாக்கப்படவேண்டும். (5) ஒவ்வொரு காலவரம்பின் முடிவிலும் மக்கள் சபையால் நியமிக்கப்பட்ட ஒரு குழுவினர் அரசினர் கடன் பெறும் நிலை, ரெயில்வேக்களின் வருமானம், செலவுமுறை இவைகளைப் பரிசீலனை செய்து, லாப விகிதப் பங்கு, முறைதானு என்றும், வரும் ஆண்டுகளில் அந்த விகிதத்தை மாற்றியமைக்க வேண்டுமா என்றும் முடிவு செய்வார்கள். (6) ரெயில்வே ரிசர்வு நிதி, வருமான ரிசர்வு நிதியென்று மாற்றியமைக்கப்பட்டு, ரெயில்வே நடப்பில் ஏற்படும் நஷ்டங்களைப் போக்கவும், பொது ரிசர்வு நிதிக்கு ஆண்டுதோறும் சேர வேண்டிய பணத்தை முறைப்படி கொடுப்பதற்கும் பயன்படுத்தப்படும். (7) வளர்ச்சி நிதி ஒன்றை நிறுவிப் புதிய ரெயில்வே நிர்மாணங்களுக்கென்றும், தொழிலாளர் நலன்களுக்கென்றும், பிரயாணிகளின் சௌகரியத்திற்கென்றும் ஏற்படும் செலவுகளை ஈடுகட்ட வேண்டும். (8) ஆண்டுதோறும் கிடைக்கும் ஆதாயத்திலிருந்து ரூ. 15 கோடியை, புதுப்பித்தல், மாற்றியமைத்தல் செலவுகளுக்கு அடுத்த ஐந்தாண்டுகளுக்குத் தேய்மான நிதி பெற்றுவரும். (9) வருமான ரிசர்வு நிதிக்கும் வளர்ச்சி நிதிக்கும் தேய்மான நிதிக்கும் ரெயில்வே லாபப்பங்கு பிரித்துக் கொடுக்கப்படவேண்டும். தேய்மான ரிசர்வு நிதி அளவுக்குமீறி வளர வேண்டுமென்ற காரணத்தால் அதிகப்படியாக லாபப் பங்கு ஒதுக்குதல் நியாயம் எனலாம்.

ரெயில்வே ஆலோசனைக் கூட்டக் குழுவினர் 1953-ல் நிறுவப் பட்டவுடன், முதல் பணியாகக் கூட்ட ஆலோசனை முறை தொடர்ந்து நடத்தப்படவேண்டுமென்று முடிவு செய்தனர். ரெயில்வே, சீரமைப்பு, புதுப்பித்தல் சம்பந்தமான செலவுகளைச் செய்யப் போதிய நிதி வசதி வேண்டுமென்று சில மாற்றங்களை மட்டிலும் செய்தனர். இன்னும் குறைந்த விகிதத்தில் ரெயில்வேக்கள் பொது ரிசர்வு நிதிக்கு லாபப் பங்கு கொடுத்தால் போதும் என்றனர்.[1] உபரி மூலதனத்தின் மீது அதாவது ரூ. 100 கோடியின்மீது கணக்கிட்டனர். பழம் பாக்கிகளைக் கொடுக்க வேண்டுமானல், ஏதாவது தனிப்பட்ட இருப்புப் பாதையில் செய்த வர்த்தகத்தில் லாபம் ஏற்

1. இந்திய அரசினர் தங்கள் வர்த்தக இலாக்காக்களிலிருந்து பெறக்கூடிய விகிதம் என்று முடிவு செய்தனர்.

பட்டால்தான், பொது ரிசர்வு நிதிக்குக் கொடுக்கலாம் என்று கூறினர். தேய்மான ரிசர்வு நிதியை ரூ. 30 கோடியிலிருந்து ரூ. 35 கோடியாக அதிகரிக்கும்படி கோரினர். மாற்றியமைக்கப்பட்ட புதிய ஆலோசனைக் கூட்டம் 1955ஆம் ஆண்டிற்குப் பின் அமலில் வரவேண்டியதென்றும், 1949ஆம் ஆண்டுக் கூட்டத்தின் சட்ட திட்டங்களுடன் புதிய இருப்புப் பாதைகளுக்கு ஏற்படும் நிர்மாணச் செலவுகள் அனைத்தையும் சற்றுத் தாமதமாகச் செய்யலாமென்றும், அதுவும் ஐந்தாண்டுகள் வரை காலம் தாழ்த்தலாம் என்றும் திட்டமிட்டனர்.[1]

**17. சீரமைத்தல், மாற்றியமைத்தல், நீட்சி :** இந் நூற்றுண்டின் முப்பதாவது ஆண்டுகளில் ஏற்பட்ட பொருளாதார மந்தத்தின் காரணமாக ரெயில்வேக்களில் ஏற்பட்ட குறைப்புகள், நீக்கங்கள் இவைகளைப் போர்க்காலத்தில் சீர்படுத்த இயலாது போயிற்று. சுதந்தரம் அடைந்த பின்னர் நாட்டுப் பிரிவினை ஏற்பட்டது. தொழில் வளர்ச்சி அதிகரித்தது. அதிகப்படியான எண்ணிக்கையுள்ள மக்கள் பிரயாணம் செய்யத் தொடங்கினர். சரக்குப் போக்குவரத்தும் அதிகரிக்க ஆரம்பித்தது. இயந்திரத் தொழில் வளர்ச்சியின் காரணமாகப் பெரிய ஆக்க வேலைகளும் புதிய பாதை அமைப்புகளும் இக்காலத்தில் நடந்தேறின. ரெயில்வே சீரமைப்பை இரு பெரும் பகுதிகளாகப் பிரிக்கலாம்: (1) தேய்ந்து பழுதடைந்த ஆஸ்திகள். (2) அளவுக்குமீறி வளர்ந்து வரும் பிரயாணிகளின் எண்ணிக்கை.

ரெயில்வேக்களின் முக்கிய சாதனங்களை அயல் நாடுகளினின்று எதிர்பார்ப்பதைத் தவிர்க்க எண்ணி, ரூ. 15 கோடி செலவில் ரெயில்வே என்ஜின்களைத் தயாரிக்கும் தொழிற்சாலை ஒன்றைச் சித்தரஞ்சனில் மத்திய அரசினர் தோற்றுவித்தனர். ஆண்டுதோறும் 120 என்ஜின்களையும் 50 கொதிகலன்களையும் உண்டாக்கத் தலைப்பட்டனர்.[2] டாடா லோக்கமோட்டிவ் என்ஜினியரிங் கம்பெனிக்கு அரசினர் நிதி உதவி செய்து, அவர்களுடைய மூலதனத்தில் ஏறத்தாழ ரூ. 2 கோடி ஈடுபடுத்தி

1. *இந்தியா, 1956, பக்கம் 243.*

2. *இதன் பின்னர் செய்த மதிப்பீட்டின்படி ஆண்டுதோறும் உற்பத்தி 200 என்ஜின்களாக 1958ஆம் ஆண்டுக்குள் விஸ்தரிப்புத் திட்டத்தை ஒட்டி நடத்தப்படும். இந்தத் தொழிற்சாலை இதுவரை (1956ஆம் ஆண்டு ஜனவரி மாதம் முடிய) 320 என்ஜின்கள் உருவாக்கியுள்ளது. 1955-56ஆம் ஆண்டில் 98 என்ஜின்களாயினும், 1954-55-ல் 64ஏ உற்பத்தியாயின. முதல் ஐந்தாண்டுத் திட்டக் காலவரம்பினுள் மொத்த என்ஜின் உற்பத்தி 250 ஆகக் கணக்கிடப்பட்டு இருந்தது. டாடா கம்பெனியாரின் நிறுவனமான டெல்கோவினை ரெயில்வே நிர்வாக பகுதியினர் 60-லிருந்து 75 என்ஜின்களை வரை ஆண்டுதோறும் உற்பத்தி செய்ய வேண்டுமென்று கோரினர். இவ்விதமாக இந்திய ரெயில்வேக்களின் தேவைகள் அனைத்தும் பூர்த்தி செய்யப்பட்டன.*

உள்ளனர். முதல் ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் இக் கம்பெனியார் 170 என்ஜின்கள் வழங்கினர்.

கும்பலால் ஏற்படும் நெருக்கடியைச் சமாளிப்பதற்கென்று அதிகப்படியான ரெயில்வேப் பெட்டிகளைக் கண்டுபிடிக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டது. முதல் ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் ரெயில் பெட்டிகளின் உள்நாட்டு உற்பத்தி மட்டும் 4,380. இதற்கு உறுதுணையாக மத்திய அரசினர், ரெயில் பெட்டி உற்பத்திச்சாலை ஒன்றை (இணைப்பு ரெயில் பெட்டித்தொழிற்சாலை) (Integral Coach Factory) பெரம்பூரில் ரூ. 4 கோடி செலவில் தொடங்கியுள்ளனர். அது ஆண்டுதோறும் 300 முதல் 350 பெட்டிகளை 1959-60 முதல் உற்பத்தி செய்யுமென எதிர்பார்க்கப்படுகிறது. முதல் ஐந்தாண்டுத் திட்டக் காலத்துக்குள் சரக்கு அனுப்பும் வண்டிகள் அன்றுட உற்பத்தியின் வாயிலாக 30 ஆயிரம் என்று அளவிட்டு இருந்தனர். முதல் திட்டக் காலத்தில் அயல் நாடுகளிலிருந்து 600 என்ஜின்களும், 1,294 ரெயில் பெட்டிகளும் 19,143[1] சரக்கு வாகின்களும், இறக்குமதி செய்வதென்று முடிவு செய்தனர். இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் 13,000 பிரயாணிகளுக்கான ரெயில் பெட்டிகளைக் கொள்முதல் செய்ய வேண்டுமென்று திட்டமிட்டனர். உள்நாட்டு உற்பத்தியினுல் ரெயில்வேக்களுக்குத் தேவைப்படும் தண்டவாளங்கள், வாகின்கள், ரெயில் பெட்டிகள், இவைகள் உள்நாட்டிலிருந்தே கிடைத்தன. எனவே புதிதாக அயல்நாட்டுக் கம்பெனிகளுக்கு உத்தரவு கொடுத்துக் கொள்முதல் செய்வதை நிறுத்திக்கொண்டு, முன்னரே உத்தரவு கொடுத்தவைகளை மாத்திரம் அனுப்பும்படி சொன்னுர்கள். 1950-51-ல் அரசினருக்குப் பாத்தியமான பங்களூரில் உள்ள இந்துஸ்தான் ஏர்கிராஃப்ட் லிமிடெட், முதல் தரமான எஃகினுல் மூன்ருவது வகுப்புப் பிரயாணிகளுக்கான ரெயில் பெட்டிகளில் முதலில் 100ஐயும், அடுத்த ஆண்டில் 150ஐயும் உற்பத்தி செய்து, 1954ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 9ஆம் தேதி வரை 500 ரெயில் பெட்டிகளை உற்பத்தி செய்தது.[2]

தண்டவாளங்களிடப்பட்ட தடம் படுமோசமாகப் பழுதடைந்து விட்டது. அதன் காரணமாக ஏற்பட்ட பிரச்சினை மிகவும் கடுமையாயின. முதல் ஐந்தாண்டுத் திட்டக் காலத்தில் ஒவ்வோர் ஆண்டிலும் 400 முதல் 500 மைல்கள் வரையுள்ள தடத்தைப் பரிசீலனை செய்து, புதுப்பித்து வர முடிவு செய்துள்ளனர். இப் புதுப்பித்தல் வேலைக்கெனத் தேவைப்படும் தண்டவாளம்,

1. முதல் ஐந்தாண்டுத் திட்டம், பக்கம் 465.
2. இந்தியா, 1955, பக். 307, 1956, பக். 246.

ஸ்லீபர் முதலியவற்றை இறக்குமதி செய்யாது, உள்நாட்டு உற்பத்தியினின்று சரிக்கட்டுவது என்றும், சிலீப்பர் (sleeper) கட்டை, இரும்பு ஆகியவற்றின் விலை மிகவும் அதிகமாக இருந்ததால் சிக்கன முறைகள் கையாளப்பட்டன. மரத்தை நீண்ட காலத்திற்குக் கெட்டுப்போகாமல் வைத்திருந்தால் செலவு குறைவதோடு, சிக்கன முறையைப் பின்பற்றலாம் என்ற காரணத்தால் ரெயில்வே திட்டத்தில் மரக்கட்டைகளுக்கு நீண்ட நாள் கெடாமல் இருக்க கிரியோஸோடிங் (creosoting) முறையை க்ளட்டர்பக்கஞ்சிலும், கோயம்புத்தூரிலும் உள்ள இரண்டு டெப்போக்களிலும் செய்து வருகின்றனர். இதற்கு முன்னரே பஞ்சாப் பிரதேசத்திலுள்ள டிலவான் என்ற ஊரிலும், அஸ்ஸாம் பகுதியிலுள்ள நாராகாடியா என்ற ஊரிலும் இம்மாதிரி வேலை நடைபெற்று வருகிறது.

1953-54-ல் ரெயில்வேயில் இடப்பட்ட மூலதனம் ரூ. 878·45 கோடிகள். ரெயில்வே தடத்தின் மொத்த நீளம் 34,406[1] மைல்கள். ரெயில்வே திட்டப்படி 1956ஆம் ஆண்டு முடிவடைவதற்குள் ஆண்டுதோறும் ரூ. 80 கோடி வீதம் செலவிடுவதென்றும், மொத்தத்தில் ரூ. 400[2] கோடி செலவிடுவது என்றும் வரையறை செய்யப்பட்டுள்ளது. புதிய பாதைகளைப் போட, திட்டத்தில் ரூ. 20 கோடி ஒதுக்கப்பட்டுள்ளது. ரெயில்வேக்களுக்கு ஏற்பட்டுள்ள மொத்தச் செலவு ரூ. 400 கோடி. மத்திய வருமானத்திலிருந்து ரூ. 80 கோடி கொடுக்கப்படும். மீதி ரூ. 320 கோடியை ரெயில்வேக்கள் தாமாகவே தங்கள் வருவாயினின்று சரிக்கட்ட வேண்டும் என்று திட்டத்தில் வலியுறுத்தியுள்ளனர்.

**18. ரெயில்வேக்களை மாற்றிக் கூட்டமைத்தல்:** முன்னர் ஒன்பது தனிப்பட்ட ரெயில்வே நிர்வாகப் பிரிவுகள் இருந்தன. இவைகளிடையே எவ்விதமான ஒற்றுமையும் தொடர்பும் இல்லாமல் இருந்தன. ரெயில்வே மத்திய நிறுவனமாக மாறியவுடன் ஆட்சி முறையை அனுசரித்து இவைகளை மாற்றியமைத்தனர். ஒன்பது நிர்வாகப் பிரிவாக இருந்ததை நிலப்பரப்பின் பிரிவை ஒட்டியும், வர்த்தக அமைப்பினை அனுசரித்தும் ஆறாகப் பிரித்தனர். தொடர்பைப் பலப்படுத்தும் நோக்கத்துடனும் ஆட்சி முறையில் சிக்கன முறைகளைக் கையாளலாம் என்ற காரணத்தாலும், இம்மாதிரியாகச் செய்தனர் எனலாம். கீழ்க்கண்ட அட்டவணையில்

*1. இந்தியா, 1956, பக்கம் 240. தடத்தின் நீளம் ரெயில்வே சைடிங்குகளையும் கொண்டது.*

*2. 1956ஆம் ஆண்டு முடிவடையும்வரை ரெயில்வேக்களுக்கான இயல்பான செலவு ரூ. 418 கோடிகளாகும் என்று கருதப்பட்டுள்ளது.*

வட்டார முறையில் ரெயில்வேக்களை மாற்றி அமைத்துள்ள விவரம் காண்க.[1]

| வட்டாரம் | இருப்புப்பாதை மைல்கள் (முழு எண்கள்) | தலைமையலுவலகம் |
|---|---|---|
| வடக்கு | 6,051 | டெல்லி |
| வடகிழக்கு | 4,709 | கோரக்பூர் |
| கிழக்கு | 2,321 | கல்கத்தா |
| தென்கிழக்கு | 3,399 | கல்கத்தா |
| தெற்கு | 6,058 | சென்னை |
| மேற்கு | 5,621 | பம்பாய் |
| மத்திய | 5,632 | பம்பாய் |

வட ரெயில்வேயில் கிழக்குப் பஞ்சாப், ஜோத்பூர், பிக்கானீர் மற்றும் கிழக்கிந்திய ரெயில்வேயின் மூன்று பிரிவுகளும் இணைக்கப் பட்டன. வடகிழக்கு ரெயில்வேயில் அவுத், திர்ஹூட், அஸ்ஸாம் ரெயில்வேக்கள் சேர்க்கப்பட்டன. தென் கிழக்கு ரெயில்வேயும், கீழ் ரெயில்வேயும், கிழக்கிந்திய ரெயில்வேயையும் (மூன்று பிரிவுகள் நீங்கலாக), வங்காள-நாகபுரி ரெயில்வே[2]யையும் கொண்டன. தென் ரெயில்வே, சென்னை மராட்டா ரெயில்வே, தென்னிந்திய ரெயில்வே, மைசூர் ரெயில்வேக்களைக்கொண்டு அமைக்கப்பட்டது. மேற்கு ரெயில்வே, பம்பாய், பரோடா மத்திய இந்திய ரெயில்வே, சௌராஷ்டிரம் கச், ராஜஸ்தான், ஜெய்பூர் ரெயில்வேக்களைக் கொண்டு அமைக்கப்பட்டது. மத்திய ரெயில்வே எனப்படுவது அகன்ற இந்தியத் தீபகற்ப ரெயில்வே (Great Indian Peninsular Railway) நைஜாம் இராச்சிய ரெயில்வே, சிந்தியா ரெயில்வே, தோல்பூர் ரெயில்வே ஆகியவைகளை இணைத்து

1. இந்தியா ; 1956, பக்கம் 242, மேலே காணும் புள்ளிகள் 1ஆம் தேதி ஆகஸ்டு மாதம் 1955-ல் வந்தவை.

2. 1955ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் முதல் தேதி முதல் 6 வட்டாரங்களாக இருந்தது. கீழ் ரெயில்வேயை இரண்டாகப் பகுத்து 7 பெரும் வட்டாரங்களாகப் பிரித்தனர். அதாவது : (i) கிழக்கிந்திய ரெயில்வே பகுதியில் உள்ள மொகல் சராய், ஷெல்டா பகுதி (Sealdah division) உட்படப் பிரித்தும், (ii) தென்னிந்திய ரெயில்வே பகுதியைப் பழம் வங்காள நாகபுரி பிரிவைக் கொண்டும் அமைத்தனர்.

நிறுவப்பட்டது. இம்மாதிரி இணைப்புகள் நடத்தப்படுவது ரெயில்வேயின் அன்றாட வேலையில் இடர்ப்பாடுகளைக் குறைப்பதற்கே. அக்கம்பக்கத்திலுள்ள ரெயில்வேக்களை இணைத்துத் தலைமை அலுவலகத்தை அருகில் ஒர்க்ஷாப் (Workshop) வசதியுள்ள இடத்தில் அமைத்தனர். இம்மாதிரி செய்ததன் பலனாக இத் துறையில் போதிய ஆராய்ச்சிகள் நடத்தவும் வட்டார முறையில் பல்வேறு பலன்களைப் பெறவும் வசதியாக இருந்தது எனலாம்.

**19. சாலைப் போக்குவரத்து முறை :** ரெயில்வேயின் வளர்ச்சியைத் தவிர வேறெந்த வகையான போக்குவரத்து வளர்ச்சியையும் இந் நாட்டில் இருந்த கிழக்கிந்தியக் கம்பெனியார் கவனிக்கவில்லை. பாதைகளும், நெடுஞ்சாலைகளும் அமைத்தலில் அவர்கள் சிறிதுகூட அக்கறை காண்பிக்கவில்லை. சிற்சில காலங்களில் ஆட்சிப் பொறுப்பிலிருந்த தனி நபர்கள் தாமாகவே சில முயற்சிகளை எடுத்துக்கொண்டு பாதைகள் இட ஆரம்பித்தனர். குறிப்பாகப் பெண்டிங் பிரபு நெடுஞ்சாலை அமைப்பதில் ஈடுபட்டார். ஆயினும், அது அக் காலத்திய அரசின் கொள்கையாக அமையவில்லை என்பதில் ஐயம் இல்லை. இவர் நெடுஞ்சாலை மூலம் வட இந்திய நகர்களான கல்கத்தா, பம்பாய், டெல்லி, பெஷாவர் ஆகியவைகளை இணைக்கப் பாடுபட்டார். டல்ஹௌசி பிரபு மிகவும் திட்டமான நெடுஞ்சாலைக் கொள்கையை அமைக்க எண்ணி மத்தியப் பொதுப்பணி இலாக்கா (Central Public Works Department) ஒன்றை 1855-ல் நிறுவினார். நாளடைவில் ரெயில்வே அமைப்பு வேலை தொடங்கியவுடன் அவைகளை இணைப்பதற்கெனச் சாலைகளும் பாதைகளும் போட வேண்டிய அவசியம் ஏற்பட்டது. சாலை அமைத்த பிறகு அவைகள் ரெயில்வேக்களுடன் போட்டியிடுவதைக் கண்ணுற்ற அரசினர், ரெயில்வேக்களை ஆதரிக்கத் தொடங்கி சலுகைகள் காட்டி அதன் மூலம் பாதைப் போக்குவரத்தினைச் சீர்கேடடையும்படி செய்தனர். மேயோ பிரபு, ரிப்பன் பிரபு காலங்களிலும் ஸ்தல சுயாட்சி (Local Self - Government) முறையை வலியுறுத்திய காரணத்தால் பாதைகள் போடுவதற்கான வாய்ப்பு ஏற்பட்டதெனலாம். நாளடைவில் போதிய நிதி வசதியின்மையால் மாவட்டக் கழகங்களும் நகராட்சி மன்றங்களும் சாலை போடும் முறையைக் கைவிட்டனர்.

இப்போது நான்கு பெரும் நெடுஞ்சாலைகள் நாடு முழுமையும் குறுக்கும் நெடுக்குமாகச் செல்லுகின்றன. இவைகளுடன் தொடர்பு கொண்டுள்ள இதர சாலைகளும், பாதைகளும் உள்ளன. இந் நெடுஞ்சாலைகளில் மூன்று கல்கத்தா—சென்னை, சென்னை—பம்பாய், பம்பாய்—டெல்லி, இவற்றை இணைக்கின்றன. நன்கு கப்பி போட்ட நெடுஞ்சாலைகளாக இவை நான்கும் இந் நாட்டில்

5,000 மைல் தூரம் உள்ளன. சீரிய முறையில் உயர்தரமான நிலையில் உள்ள பெருஞ்சாலைகள் தென்னிந்தியாவில் அமைந்துள்ளன. இதற்கு எதிராக இரங்கத்தகு நிலையில் உள்ள அகலமான பாதைகளை ராஜஸ்தான், கிழக்கு பஞ்சாப், ஒரிசா, வங்காளம் இவற்றில் காணலாம். முன்னாள் இந்திய அரசினரின் சாலைகள் கட்டுப்பாடு அதிகாரியாக இருந்த சர் கென்னத் மிச்சல் (Sir Kenneth Mitchell) கூறி வந்த குறிக்கோளாகிய 1000-க்குக் குறையாது மக்கள் தொகையுள்ள கிராமம் ஒவ்வொன்றும் நெடுஞ்சாலை ஒவ்வொன்றுக்கும் ½ மைல் தூரத்தில் அமைதல் வேண்டும் என்ற திட்டத்தையும், இலட்சியத்தையும் இந்தியா அடையவில்லை எனக் கூறவும் வேண்டுமோ. துண்டிக்கப்படாத பழைய இந்தியாவில் 7 லட்சம் கிராமங்கள் இருந்தன. இதர கிராமங்களை இணைக்கவும், ரெயில்வே நிலையங்களையும் சந்தைகளையும் இணைக்கவும் ஒவ்வொரு கிராமத்திற்கும் 1 மைல் வீதம் பாதைகள் போடவேண்டுமானால் இந் நாட்டில் மொத்தமாக 7,00,000 மைல் நீளமுள்ள சாலைகள் தேவைப்படும். ஆயினும், 30,000 மைல் தூரமே பாதை போடப்பட்டுள்ளது. 1948ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் 31ஆம் தேதி முடிய உள்ள நகராட்சி, அதிகப்படி சாலைகளின் கூட்டுத்தொகை 2,48,914-ம் அவற்றில் கப்பி போடப்பட்டவை 90,108-ம், சாதாரணப் பாதைகள் 1,58,806 மைல்களும் ஆகும். முதல் ஐந்தாண்டுத் திட்ட காலமுடிவில் கப்பி போடப்பட்ட பாதைகள் 97,000 மைல்களும், சாதாரணப் பாதைகள் 1,47,000 மைல்களும் இருந்தன. சில பாதைகள் மோட்டார்கள் போகக்கூடிய நிலைமையிலும் அமைந்திருந்தன. இதர நாடுகளுடன் இந்தியாவை ஒப்பிட்டு நோக்கின், இந்தியப் பாதைகள் மிகவும் குறைந்த அளவிலேயே உள்ளன என்பதைத் தெளிவாகக் காணலாம். ஒவ்வொரு நாட்டிலும் 100 சதுரமைல் பரப்பிலும் எவ்வளவு தூரம் பாதைகள் போடப்பட்டுள்ளன என்பதைக் காட்டியிருக்கிறோம். இங்கிலாந்து 202 மைல்கள், ஃபிரான்ஸ் 184 மைல்கள், அமெரிக்க ஐக்கிய நாடு 103 மைல்கள், ஜெர்மனி 95 மைல்கள், இலங்கை 70 மைல்கள், இந்தியா 22 மைல்கள்.[1]

**20. சாலைத் திட்டங்கள் :** 1943ஆம் ஆண்டில் வெளிவந்த நாகபுரி அறிக்கை போருக்குப்பின் பத்தாண்டுக் காலத்தில் கீழ்க்கண்ட வகையில் பாதைகள் அதிகரிக்கப்படவேண்டுமென்று எதிர்பார்த்தது. (1) அழுத்தமான, சீரான பாதைகள் 66,400 மைல்களிலிருந்து 1,22,000 மைல்களாக அதிகரிக்கப்படவேண்டும். (2) 1,22,000 மைல்களிலிருந்து 2,07,500 மைல்கள்

1. டைம்ஸ் ஆப் இண்டியா டைரக்டரி அண்ட் இயர் புக், 1955-56, பக்கம் 235.

சாதாரண மட்டப் பாதைகள் அதிகரிக்கப்படவேண்டும். (3) இப்போதுள்ள பாதைகளைச் சீர்படுத்தவேண்டும். இவ்வாறு செய்தால் இன்னும் 20 ஆண்டுகளுக்குள்ளாகப் போக்குவரத்துத் தேவைகளைப் பூர்த்தி செய்ய இயலும். விவசாய வட்டாரத்திலுள்ள எந்தக் கிராமத்திற்கும் 5 மைல்களுக்கு மேலாக, எந்த நெடுஞ்சாலையும் இருக்கக்கூடாது. எந்தச் சாலையும் தனியாக இருக்கக்கூடாது. அதற்குப் பதிலாக அது எல்லாச் சாலைகளையும் இணைக்கும் ஓர் உறுப்பாக இருக்க வேண்டும். இப்போதுள்ள போக்குவரத்து முறைகளை மேற்கொள்ளும் வசதி எல்லாப் பாதைகளுக்கும் ஏற்படுமளவு சீர் படுத்தவேண்டும். இதை வருங்காலத்தில் ஒரு பெரும் பிரச்சினை யாகக் கருதி முயற்சிகளைச் செய்யவேண்டும். இப்போதுள்ள விலைகளை அனுசரித்து அதன்படி திட்டமிட்டதில் ரூ. 744 கோடி தேவைப்படும். தேசீய நெடுஞ்சாலைகளுக்கென ரூ. 133 கோடி ஒதுக்கி வைக்கப்படும். ரூ. 611 கோடி இதர வகைப் பாதைகள் போடச் செலவிடப்படும். தொழில் நுட்பப் பயிற்சி பெற்ற பணி யாளரின்மையாலும், போதிய ஆக்கப் பொருள்கள் கிடைக்காத தாலும், நிதி வசதியின்மையாலும், நாகபுரி திட்ட காலத்தை நீடித்து, மத்திய அரசினரும் மாகாண அரசினரும் நிதி நிலைமையை அனுசரித்து, அத் திட்டத்தை நிறைவேற்றுவர். இதர துறைகளில் செய்யப்படும் வளர்ச்சியையொட்டி, உடன்தேவை யான நெடுஞ்சாலைகளை அமைக்க முற்படுவர். நடப்பு நிலையில் இதர வகைகளைவிட விவசாய உற்பத்திக்கு முதலிடமளித்து அவ் வகையான முறையில் முதற்படியாகப் பாதைகளைச் செப்பனிடு தலோ, அமைத்தலோ மேற்கொள்ளப்படும். அதேபோன்று அநேக ரெயில்வே சந்திப்புகளில் ஏற்படும் இட நெருக்கடியைச் சமாளிக்க, இணைப்புப் பாதைகளைப் போட்டு வர்த்தகப் பண்டங் களின் போக்குவரத்தைச் சீர்படுத்த முயலுவார்கள்.

**21. தேசீய நெடுஞ்சாலைகள் :** பாதைகள் மேற்கொள்ளும் பணியைப் பொறுத்து, அவைகளைப் பிரிக்கவேண்டும் என்று நாகபுரித் திட்டம் கூறுகிறது. இதன்படி தேசீய நெடுஞ்சாலை, இராச்சிய நெடுஞ்சாலை, மாவட்டப் பெரிய, சிறிய சாலைகள். கிராமப் பாதைகள் எனப் பிரிக்கலாம். தேசீய நெடுஞ்சாலைகள் என்பவை இராச்சியத் தலைநகரங்களையும், துறைமுகப் பட்டினங் களையும் இணைத்து, தேசீய செயல்களுக்குப் பெரிதும் பயன்படும் நெடுஞ்சாலையாக அமைந்து, நாட்டின் பாதுகாப்புக்காக நம் போர் வீரர்கள் போய்வருவதற்கு ஏற்றவையாக அமைந்துள்ளன. தேசீய நெடுஞ்சாலையின் நீளம் 13,800 மைல்கள்.[1] ஐந்தாண்டுக்

1. இந்தியா, 1956, பக்கம் 246.

காலத்துக்கு இவைகளின் வளர்ச்சிக்காக ரூ. 27 கோடி ஒதுக்கி வைக்கப்பட்டிருக்கிறது. இன்னும் ரூ. 4·24 கோடி மத்திய அரசினர் ஒரு சில முக்கிய சாலைகளைச் செப்பனிட ஒதுக்கி வைத்துள்ளனர். இன்னும் ஒவ்வொரு வட்டாரத்தையும் ஆராய்ந்து• பாதையமைப்பதற்காக மத்திய சாலை ஆராய்ச்சி நிறுவனத்திற்கு ரூ. 21·15 லட்சம் வழங்கப்பட்டுள்ளது.

**22. இராச்சியச் சாலைகளும், கிராமச் சாலைகளும் :** முதல் ஐந்தாண்டுத் திட்டத்தின் கீழ்ச் சாலைகளைச் செப்பனிடுவதற்காக ரூ. 118·88 கோடி ஒதுக்கியுள்ளனர். இத் தொகையைக் கீழ்க் கண்ட முறையில் பிரித்துள்ளனர். மத்திய அரசினர் ரூ. 31·54 கோடி (A) பிரிவு இராச்சியங்கள் 50·59 (B) பிரிவு இராச்சியங்கள் 15·83 கோடி, (C) பிரிவு இராச்சியங்கள் 6·27 கோடி, காஷ்மீர் இராச்சியம் 4·95 கோடி. கிராமச் சாலைகளைப் பெரும்பாலும் அடுத்துள்ள நகரங்களோடு இணைப்பதற்குத் திட்டமிடப் பட்டுள்ளது. இவைகளை மாவட்டத் தலைநகருடனும், சந்தை நகரங்களுடனும் சேர்க்க நல்ல சாலைகள் அமைக்கப்படுகின்றன. கிராமச் சாலைகளைக் கூட்டுறவு முறையில் செப்பனிட்டுச் சீராக்க லாம். தற்போதுள்ள சமூகநலத் திட்டங்களில் 16 முதல் 17 ஆயிரம் மைல்கள் வரை சாதாரண சாலைகளை அமைத்து இருக் கிறார்கள்.

**23. மோட்டார் போக்குவரத்து முறை :** 1920 ஆம் ஆண்டு முதல் இந் நாட்டில் வர்த்தக மோட்டார் போக்குவரத்து முறை தொடங்கியது. முதல் உலகப்போரின் முடிவில் இருந்த ராணுவ மோட்டார் வண்டிகளைச் சீரமைத்து இது துவக்கப்பட்டது. தனியார் மோட்டார் பஸ் நடத்துபவரிடையே பலத்த போட்டி ஏற் பட்டு அதன் விளைவாகக் கட்டணங்கள் குறைய ஆரம்பித்தன. இது ஒருபுறம் இருக்க, ரெயில்வே நிறுவனத்திற்கும், சாலைகளில் ஓடும். வண்டிகளுக்குமிடையே பலத்த போட்டி ஏற்பட்டது. 1930ஆம் ஆண்டில் அதிக எண்ணிக்கையில் பிரயாணிகள் ரெயில் பிரயாணத்தை நிறுத்தி, சாலைகளில் பிரயாணம் செய்ய ஆரம்பித் தனர். அதன் விளைவாக, ரெயில்வே நிறுவனத்திற்குப் பெரும் நஷ்டம் ஏற்பட்டது. இந்த ரெயில், சாலைகளுக்கிடையே உள்ள போட்டியை நன்கு ஆராய்ந்து 1939ஆம் ஆண்டு மோட்டார் வண்டிகள் சட்டம் ஒன்று கொண்டுவரப்பட்டது. அது நியாய மான முறையில் போட்டியிடுவதை வரவேற்றுத் தவறான முறையைக் கண்டித்தது.

மோட்டார் வண்டிகள் சட்டம் இரண்டு பெரும் பகுதிகளைக் கொண்டுள்ளது. (1) மோட்டார் வண்டிகளைக் கட்டுப்படுத்துவது.

(2) இதரவகைப் போக்குவரத்து முறைகளுடன் தொடர்பு கொள்ளும்படி செய்வது. இதற்கெனப் போக்குவரத்து அதிகாரி ஒருவர் மாகாணத்தில் ஒரு குறிப்பிட்ட இடத்தில் இருப்பார். அவர் பொதுமக்களிடமிருந்துவரும் அப்பீல்கள், புகார்கள் ஆகிய வைகளை விசாரணை செய்து முடிவுசெய்வார். மாகாணப் போக்கு வரத்து அதிகாரி ஒருவரும் இவைகளைக் கண்காணித்து வருவார். மோட்டார் வண்டி வைத்துக்கொண்டிருப்பவர் அனைவரும் பிராந் தியப் போக்குவரத்து அதிகாரியின் அனுமதிச் சீட்டினை வைத்துக் கொண்டிருக்கவேண்டும். இவர் மோட்டார் வண்டியின் வேகம், வண்டி ஓட்டுபவரின் வேலை நேரம் ஆகியவற்றைக் கவனிப்பார். (நாள் ஒன்றுக்கு 9 மணிக்கு மேற்படாமலும் வாரமொன்றிற்கு 54 மணிக்கு மேற்படாமலும், வேலை செய்யலாமென்றும், 5 மணி நேர வேலைக்குப் பிறகு ½ மணி நேரம் ஓய்வு பெறவேண்டு மென்றும் குறிக்கப்பட்டுள்ளது.) தேவைக்கேற்ப மோட்டார் பஸ்களுக்கும், பொதுமக்கள் பிரயாணம் செய்யும் கார்களுக்கும் அனுமதி கொடுக்கப்பட்டது. பயனற்ற போட்டியை நீக்க அரும்பாடுபட்டனர். நெடுந்தூரப் போக்குவரத்து ரெயில்வே களுக்கென ஒதுக்கிவிடப்பட்டது. ஒரு குறிப்பிட்ட பாதையில் செல்ல அனுமதி உரிமை பெற்றவர், தவறாது போக்குவரத்து வசதியைக் கொடுக்கவேண்டும். போக்குவரத்திற்கு உயர்ந்த, குறைந்த கட்டண விகிதங்களைத் தீர்மானிக்க வேண்டும். தனி நபர் விபத்தினைப் போக்க மோட்டார் வண்டிகளுக்கு இன்சூரன்சு கட்டாயமாகச் செய்ய வேண்டுமென்று சட்டம் வகுக்கப்பட்டது.

முக்கூட்டு உடன்படிக்கைப்படி தனிநபர்கள், அரசினர், ரெயில்வே இம்மூவரும் ஒன்றுசேர்ந்து 1946ஆம் ஆண்டில் கூட்டுப்போக்குவரத்து முறைக் கொள்கையை ஒத்துக் கொண்டமை முன்னேற்றத்தின் அறிகுறியைக் காட்டுகிறது. இதனால் பாதைப் போக்குவரத்து நிறுவனங்களின் சட்டம் 1948-ல் பல்வேறு இராச்சிய அரசாங்கங்களால் துவக்கப்பட்டு, 1950ஆம் ஆண்டு திருத்தச்சட்டமாக மாற்றியமைக்கப்பட்டது. இராச்சிய அரசினரால் நடத்தப்படும் பஸ் போக்குவரத்து, பல்வேறு வகைகளில் 21 இராச்சியங்களில் இன்றுவரை நடந்து வருகிறது.[1]

**24. சாலைகள் சம்பந்தப்பட்ட நிதி:** இந்திய சாலை வளர்ச் சிக்குழுவினர், (ஜெயகர் குழுவினர்) 1927-ல் சாலை வளர்ச்சி சம்பந்தப்பட்ட செலவு, மாகாண அரசினர்களின் சக்திக்கும்

1. *இந்தியா 1956, பக்கம் 251.*

அதற்குட்பட்ட ஆட்சி மன்றங்களின் சக்திக்கும் மீறி நடக்கிறது என்றும், இச் செலவை மத்திய அரசினர் ஏற்றுக்கொள்ள வேண்டுமென்றும் கூறினர். சாலைகளும் பாதைகளும் சீரான முறையில் அமைவதால் பொதுவாக நாட்டிற்கு முன்னேற்றம் ஏற்படுகிறது எனலாம். எனவே, மத்திய அரசினர் இச் செலவை மேற்கொள்ள வேண்டியது சரியானதே. நன்கமைந்த மோட்டார் வரிவிதிப்பு முறையின் மூலம் கிடைக்கும் வருமானத்தைப் பாதைகளையும், சாலைகளையும் சீர்படுத்துதற்குச் செலவிட வேண்டுமென்று கூறினர். ரெயில்வேக்களை இணைக்கும் பாதைகளை அமைப்பதற்கு ஆகும் செலவை ரெயில்வேக்கள் ஏற்றுக்கொள்ளவேண்டும். பின்னர், அடுத்து ஏற்படும் பாதுகாப்புச் செலவுகளையும் அவர்களே மேற்கொள்ள வேண்டும். தற்பொழுது அமலில் உள்ள சாலைகளுக்கான வரி விதிப்பு முறை அதிகக் கட்டுப்பாடுகளும், இடர்ப்பாடுகளும் கொண்ட வகைகளில் உள்ளதென்று அதை நீக்கி அதற்குப் பதிலாக, இராச்சியம் முழுமைக்கும் சீரான முறையில் இவ்வரி வசூலை நடத்தும் முறையை எடுத்துக்காட்டினர். கடன் முறையைக் கொண்டு பாதைகள் அமைக்கும் முறையை இக் குழுவினர் நிராகரித்தனர். இம்மாதிரியான முறையினால், இராச்சியத்தினுடைய வருமானம் முழுமையும் கடனுக்கே ஈடாக அமைந்துவிடும் என்றனர். குறுகிய காலக் கடன்களிலிருந்து இம்மாதிரியான சாலைப் போக்குவரத்தைச் செப்பனிடவோ சீர்படுத்தவோ அல்லது உருவாக்கவோ முயற்சி செய்யவேண்டும் என்றனர். வட்டி, தேய்மான ஒதுக்குநிதி, பாதைச் சீரமைப்புச் செலவு ஆகியவைகளை வருவாயினின்று ஈடுபடுத்தலாம் என்றும், நிரந்தரப் பாலங்கள் கட்டும் செலவாக இருப்பின் அவற்றிற்குக் கடன்கள் எழுப்பலாம் என்றும் கூறினர்.

கடன் வாங்கிச் சீரமைப்புச் செய்தலை இக் குழுவினர் கண்டிப்பது போல், மற்ற எந்த ஆலோசகர்களும், ஏற்றுக்கொள்ள முன்வரவில்லை. சாலைகள் திட்டத்திற்குக் கடன்கள் மூலம் நிதிவசதி பெறலாம் என்று விவசாயக் குழுவினர் கூறியுள்ளனர். 1933-ல் கூடிய ரெயில்பாதைகள், சாலைகள் கூட்டமைப்பு மாநாட்டில் கூடியவரையிலும் கையிலுள்ள பணவசதியையொட்டிச் செலவு செய்யவேண்டுமென்றும், பாதைகள் அமைக்க வேண்டும் என்றும் கூறப்பட்டது. 1940ஆம் ஆண்டில் இந்திய சாலைப்போக்குவரத்து சங்கத்தின் 12வது ஆண்டுக் கூட்டம் இது போன்ற கொள்கைகளை வெளியிட்டதுடன் ரெயில்வேக்கள் எவ்வாறு இந் நாட்டில் வளர்ச்சியுற்றன என்பதைச் சுட்டிக் காட்டி அதேபோன்று கடன்கள் மூலம் சாலைகளை அமைத்து

அவற்றைச் செப்பனிட வருவாயினின்று செலவிடலாம் என்று குறிப்பிட்டது. 1930-ல் நடந்த ஆலோசனைக் கூட்டத்தில் மத்திய மக்கள் சபை தற்காலிகமாக 5 ஆண்டுகளுக்கெனக் கீழ்க்கண்ட கொள்கைகளை மேற்கொள்ள வேண்டுமென்று கூறினர். (1) ஒரு காலன் மோட்டார் ஸ்பிரிட் விலையின்மீது இடப்பட்ட வரி விதிப்பை 4 அணுவிலிருந்து 6 அணுவாக அதிகரிப்பது. (2) இவ்வாறு கூடுதலாகக் கிடைத்த தீர்வையைப் பாதை, ரோடு செப்பனிடுவதற்கான ஒரு மொத்த மானியமாகக் கொடுப்பது. இதற்கெனப் பாதைகள் வளர்ச்சிச் சட்டம் என்ற தலைப்பின்கீழ்ப் பயன்படுத்தப்படாத தொகையை அவ்வாண்டிலேயே காலாவதி ஆக்காமல் பார்த்துக்கொள்வது. (3) ஆண்டுதோறும் கொடுக்கும் மான்யத்தொகை கீழ்க்கண்டவாறு பிரித்துக் கொடுத்தல் : (அ) இந்திய அரசினர் மக்களாட்சி சபைகளுக்கு வசதி அளிப்பதற்கென்று 10% அதற்கென ரிசர்வில் வைத்துக்கொள்ள வேண்டும். (ஆ) மிகுதித் தொகையைக் கடந்த ஆண்டு பெட்ரோல் நுகர்வு விகிதத்தில் மாகாண வாரியாகப் பிரித்துக்கொடுக்கவேண்டும். (4) கவர்னர் ஜெனரல், கௌன்சிலில் உள்ளபொழுது அங்கீகரிக்கப்பட்ட மாகாணத் திட்டங்களுக்கென மான்ய வசதி அளித்தல். (5) ஆண்டுதோறும் பாதைகள் சம்பந்தமாக யோசனைகள் கூறுவதற்கென ஆலோசனைக் குழு ஒன்றைக் கவர்னர் ஜெனரல் நியமனம் செய்ய வேண்டும்.

இந்த ஆலோசனைக் கூட்டம் மறுமுறை 1934-ல் கூடி, புதிய தீர்மானம் ஒன்றை மத்திய மக்கள் சபையில் கொண்டுவந்து அதன்படி மத்திய அரசினர் ரிசர்வாக அமைக்கும் நிதியை 10 லிருந்து 15% ஆக அதிகரிக்க வேண்டுமென்றும் முடிவு செய்தது. 1937ஆம் ஆண்டில் கூடிய ஆலோசனைக் கூட்டமொன்றில், புதிய சாலைகள் சம்பந்தமான தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன. அவற்றின் சுருக்கம் வருமாறு: (1) மாகாணங்களுக்கு ஒதுக்கப்படும் பங்குகளை மத்திய கேந்திரத்திலேயே இருத்திக்கொண்டு தேவைப்பட்டபொழுது மாகாணங்களுக்குக் கொடுக்கலாம் என்றும், (2) மாகாணங்களில் குறிப்பிட்ட காலத்தினுள் நடவடிக்கை எடுக்கத் தவறினால் மத்திய அரசினர் அவற்றைத் தாமே எடுத்து நடத்துவதென்றும், (3) மோட்டார் வண்டிகளைக் கட்டுப்பாடு செய்ய ஏதாவது மாகாணங்கள் மேற்கொள்ளத் தவறினால், கவர்னர் ஜெனரலுக்குப் பூர்ண அதிகாரம் கொடுத்து அப் பொறுப்பினை வகிக்கும்படிச் செய்யவும் தீர்மானிக்கப்பட்டது.

சாலைகள் வளர்ச்சிக் கணக்கு பற்றிய தீர்மானம் 1950-ல் பாராளுமன்றத்தால் அனுமதிக்கப்பட்டு, மத்திய அரசினரின் ரிசர்வ் பங்கினை 15%லிருந்து 20% ஆக அதிகரித்தது. இந்தத் தீர்மானப்படி 25%க்குக் குறைவு படாமல் இராச்சியப் பங்கினை, ரயில்வேயை இணைக்கும் சாலைகளுக்குச் செலவிட வேண்டு மென்றும் ரெயில்வேக்களுடன் போட்டியிடும் சாலைகளைச் செப்பனிட 25%க்கு மேற்படாமல் மாகாணங்கள் செலவிட வேண்டுமென்றும் கூறப்பட்டது.

**25. உள்நாட்டு நீர் நிலைப் போக்குவரத்து:** சற்றேறக்குறைய 26,000 மைல்கள் நீளமுள்ள, நாவாய் செலுத்த வன்மையுள்ள நீர் நிலைகளும், ஆழமும் அகலமும் உள்ள வடநாட்டு ஆறுகளும் மலிந்து கிடக்கும் இந்திய உபகண்டத்தில், இத் துறை எதிர் பார்த்த அளவு வளர்ச்சி பெறவில்லை என்பது தெரிந்ததே. முகலாயர்கள் ஆட்சி புரிந்த காலங்களில் வடநாட்டு ஆறுகளில் தொடர்ந்து படகுப் போக்குவரத்து நிறைந்திருந்தது. அக் காலங் களில் நதி, வர்த்தகப் போக்குவரத்திற்குப் பெரும் துணையாக இருந்தது. அதிகக் கால்வாய்களை அமைத்ததாலும், நீர்ப்பாசன வசதியை முன்னிட்டுப் பெரும் தேக்கங்களையமைத்த காரணத்தி னாலும் பெருமளவு நீர், பிற செயல்களுக்கு ஈடுபடுத்தப்பட் டதாலும் நதிகள் போக்குவரத்துக்குப் பயன்படாமற் போயின. ரெயில்வேக்கள் தோன்றியவுடனேயே நதிகள் சீர்கேடான நிலையில் பயனற்று விடப்பட்டன. 1916ஆம் ஆண்டில் இயந் திரத் தொழிற் குழுவினர் கீழ்க்கண்டவாறு கூறினர்: நீர்த்துறை களுக்கான பொறுப்பு வாய்ந்த உறுப்பினர் இல்லாத காரணத்தி னாலும், இவற்றின் முன்னேற்றத்திற்குப் பாடுபடத்தக்க மனிதர்கள் இல்லாத காரணத்தாலும் ரெயில்வேக்களின் முன்னேற்றத்தில் ஈடுபாடுள்ள அநேக அதிபர்கள் இதற்கு எதிராகப் பாடுபடுவதினாலும், இந் நாட்டில் நதிப் போக்குவரத்து சிதைவுபட்டதென்று இங்கு விளக்கத் தேவை இல்லை. 1872ஆம் ஆண்டில் சர். ஆர்தர் காட்டன் பாராளுமன்றக் குழுவினரின் முன்னர் ஒரு பெரும் நோக்குக் கொண்ட நீர் நிலை வளர்ச்சித் திட்டம் ஒன்றை வகுத்துக் காட்டினார். இதை நடத்துவதில் பெருஞ்செலவு ஏற்படும் என்று பாராளுமன்றக் குழுவினர் இதை ஏற்காது விட்டு விட்டனர். மத்திய அரசினர் ரெயில்வே வளர்ச் சியில் மிகவும் ஈடுபட்டதால் இதற்கு எதிராக உள்ள எதையும் ஏற்கத் தயாராக இல்லை. மேலும், இங்கிலாந்து சரித்திரத்திலேயே அவர்கள் பெற்ற பழம் அனுபவத்தைக் கொண்டு இதை ஏற்க மறுத்தனர். மத்திய நீர் நிலைகள் நீர்ப்பாசன நாவாய்க் குழுவினர்

உள்நாட்டு நீர் நிலைப் போக்குவரத்தை அதிகரிக்கவும், புதிய நீர் நிலைகளை அமைக்கவும், சீர்கேடடைந்த பழைய நீர் நிலைகளைச் செப்பனிடவும், முடிவு செய்தனர். ஒவ்வொரு பெரிய ஆறும் பல்வேறு இராச்சியங்களை இணைத்துக்கொண்டு போவதால் ஆற்றின் ஆரம்ப முதல் முடிவுவரையிலும் தக்க சீரமைப்புச் செய்து வளர்ச்சிக்குரிய வழிகளைக் காண முற்பட்டனர். இது சம்பந்தமாக, கங்கை, பிரம்மபுத்திரா நீர்ப் போக்குவரத்து நிறுவனம் ஒன்றை (Ganga and Brahmaputra Water Transport Board) நிறுவி உத்தரப் பிரதேசம், மேற்கு வங்காளம், பீகார், அஸ்ஸாம் முதலிய இராச்சியங்களில் நீர் நிலைப் போக்குவரத்தை எவ்வாறு பயன்தரும் வகையில் அமைக்கலாம் என்று திட்டமிடப் பட்டது.

**26. சிவில் விமானப் போக்குவரத்து:** இந்தியா, உள் நாட்டு, வெளி நாட்டு விமானப் போக்குவரத்தை நன்கு வளர்க்கும் வகையில் அமைந்துள்ளது. இதன் உள் நாட்டில் விமானப் போக்குவரத்து செய்ய அதிக நீளமுள்ள தூரமும், ஆண்டின் சற்றேறக்குறைய பெரும் பகுதி வரை சீரான பறக்கும் நிலை உள்ள காரணத்தால், உள்நாட்டுப் போக்குவரத்திற்கு ஆகாய விமான சர்வீஸைக் கொள்ளலாம். ஏறத்தாழ இந் நாட்டிலுள்ள முக்கிய வர்த்தக நகர்களும், தலை நகர்களும் ஆகாய விமானப் போக்கு வரத்தினால் இணைக்கப்பட்டுள்ளன. இரவு விமான சர்வீஸ் இந் நாட்டின் முக்கியமான நான்கு நகரங்களை இணைப்பது இந் நாடு விமானப் போக்குவரத்துடன் முக்கிய தொடர்பு கொண்டுள்ளது என்பதைக் காட்டுகிறது. அயல் நாட்டுப் போக்குவரத்தில் கீழ் நாடுகளையும் மேற்கத்திய நாடுகளையும் இணைக்கும் மத்திய நிலைமையை இந்தியா பெற்றுள்ளதால் விமானப் போக்குவரத்தில் ஒரு முக்கிய கேந்திரமாக இருக்கிறது. பன்னாட்டு விமானப் போக்குவரத்துக் கேற்ப, சீரிய முறையில் விமான தளங்களை வைத்திருக்க வேண்டுவது அரசினரின் பொறுப்பெனலாம். அயல் நாட்டு விமானப் போக்குவரத்தினை இந்தியாவும் நடத்தி வரு கின்றது. இந்திய விமானங்கள் மேற்கிலும், கிழக்கிலும் சென்று வருகின்றன. சிவில் விமான சர்வீஸ் இந்திய நாட்டின் தற்கால நிலைமைக்குப் போதிய அளவு பயனுறும் வகையில் பணியாற்றி வருகிற தெனலாம். அவசர நிலைமையில், குறிப்பாக நாட்டுப் பிரிவினையின் போதும், 1949-50-ல் மேற்கு வங்காளத்திலும், அஸ்ஸாமிலும் ஏற்பட்ட பெரும் வெள்ளத்தின் போதும், நில அதிர்ச்சியின் போதும் மக்களுக்கு ஏற்பட்ட இடரைப் போக்கும் வகையில் சிவில் விமான சர்வீஸ் உதவியளித்தது. முடிவாக, நாட்டின் பாதுகாப்பிலும், சிவில் விமானப் போக்குவரத்து பயன்

படுகிறது. சிவில் விமானப் போக்குவரத்து நிறுவனமும் கருவிகளும் தேவைக்கேற்ப நாட்டின் பாதுகாப்பிற்குப் பயன்படுவதோடு, இதில் பணிபுரிவோரும் நாட்டின் பாதுகாப்பில் முக்கிய பொறுப்பை வகிக்கிறார்கள். வருங்கால வளர்ச்சிக்கான திட்டங்களை வகுக்கும் முன்னர், வளரும் சிவில் விமானத் தேவைகளைக் கணக்கிட்டு அதற்கேற்பத் திட்டமிட வேண்டும்.

இரண்டாம் உலகப்போரின் முடிவில் ஆகாய விமான சர்வீசுகள் நடத்த, புதிய கம்பெனிகள் தோன்றின. யுத்தத்தின் பின் விளைவாகப் பொருளாதார ஏற்றத்தினால், விலைகள் ஏறிய நிலையில் இருந்த காரணத்தாலும், ஆகாய விமானத்துறையில் வர்த்தகம் புரிவதில் பெரும் லாபம் கிடைக்க வழியிருந்தது. மேலும், போரின்போது பயன்பட்ட பழைய விமானங்கள் மிகவும் மலிவான விலைக்குக் கிடைத்த காரணத்தால் இத் துறையில் பலர் ஊக்கம் காட்டினர். எனவே, அநேக புதிய கம்பெனிகள் உள் நாட்டு விமானப் போக்குவரத்தை மேற்கொள்ள முன்வந்தன. இவைகளில், பெரும்பாலான கம்பெனிகளின் செல்வ நிலை மிகவும் மட்டமாக இருந்ததெனலாம் ஆகாய விமானப் போக்குவரத்து விசாரணைக் குழுவினர் (The Air Transport Enquiry Committee) நடத்திய விசாரணையின் முடிவாக, இந் நாட்டில் உள்ள போக்குவரத்தினைச் சிக்கனமாகக் கையாளுவதற்கென்று எண்ணிறந்த கம்பெனிகள் தோன்றி, தங்களுக்குள்ளாகப் போட்டியில் ஈடுபடுகின்றன என்று கருதினர். மக்களின் ஏழ்மை நிலையின் காரணத்தால், பிரயாணிகள் சர்வீசுகளை விஸ்தரிக்க இயலாது போகிறதென்றும், இயந்திரத் தொழில் வளர்ச்சியின்மையால் விமான மூலம் சரக்கு அனுப்பும் போக்குவரத்து முறை வளர்ச்சி பெறவில்லை என்றும் கூறியுள்ளனர்.

1953 ஆம் ஆண்டில் நிறுவப்பட்ட ஆகாய விமானக் கார்ப்பரேஷன் சட்டப்படி இந் நாட்டின் ஆகாய விமானப் போக்குவரத்தைத் தேசீய மயமாக்கினர். உள் நாட்டுப் போக்குவரத்தை நிர்வாகம் செய்ய இந்திய ஆகாய விமானக் கார்ப்பரேஷனை (Indian Airlines Corporation) அமைத்தும், இந்தியாவினின்று வெளிநாடுகளுடன் நடத்தும் ஆகாய விமானப் போக்குவரத்தினை, ஏர் இந்தியா இண்டர் நேஷனல் கார்ப்பரேஷன் (Air India International Corporation) என்ற நிறுவனத்தின் மூலம் நடத்தி வருகின்றனர். புதிய விமான சர்வீசுகளைத் திறப்பதற்கும், பயனற்ற சர்வீசுகளை மூடுவதற்கும் மத்திய அரசாங்கம் உத்தர விடும். அதன்படி இந்தக் கார்ப்பரேஷன்கள் நடக்க வேண்டும். கால அட்டவணையைத் திருத்தி யமைப்பதற்கும் மத்திய அரசின

ருக்கு அதிகாரம் உள்ளது. மேலும், ஆண்டுதோறும், ஒவ்வொரு கார்ப்பரேஷனும் விமானத்துறையில் செய்துள்ள மாற்றங்கள், நீக்கங்கள், மொத்த வருமானம், விமான வளர்ச்சிகள், எண்ணிக்கைகள், தேய்மானம், கட்டண வரவு, இவை சம்பந்தமான ஆண்டறிக்கையொன்றைத் தயாரித்து அதைப் பாராளுமன்றத்தில் பரிசீலனை செய்வதற்கென அனுப்பி வைக்கவேண்டும். நிதி ஆண்டின் முடிவில் ஆகாய விமானக் கார்ப்பரேஷன்களின் அறிக்கைகளைப் பாராளுமன்றம் கண்ணுற்று, அதன் மீது விவாதித்துப் புதிய ஆண்டிற்கான கொள்கைகள் எவ்வாறு அமைதல் வேண்டும் என்று முடிவு செய்வார்கள்.

**27. ஆகாய விமானப் போக்குவரத்துக் கொள்கை :** இந்திய அரசினரின் பொதுத் தொடர்புத் துறையில் பணியாற்றும் சிவில் ஆகாயவிமானத் துறைத் தலைமை நெறியாளர் (Director General of Civil Aviation) 1952ஆம் ஆண்டு ஜனவரி மாதம் இந்நாட்டிலுள்ள ஆகாயவிமான சர்வீசை எடுத்து நடத்தும் உரிமையாளர்களைக் கூட்டி, ஒரு மாநாட்டை நடத்தினர். அதன்படி, பன்னாட்டு மார்க்கங்களுக்கும், இதர பெரிய அயல்நாட்டு வழிகளிலும், விமானத் தொடர்புண்டாவதென்றும், நீண்ட தூரங்களுக்குச் செல்லும் விமானத்திற்கு டகோடாவை நீக்கி, இதர நவீன விமானங்களைப் பயன்படுத்துவதென்றும் முடிவு செய்தனர். மேலும், அயல் நாட்டு ஆகாயவிமானக் கம்பெனிகளுடன் போட்டியிடச் சமமான திட்டங்கள் அமையவேண்டும் என்றும் முடிவு செய்தனர். அவ்வப்போது நாட்டில் ஆகாய விமானங்களைப் பழுதுபார்க்கவும், புதுப்பிக்கவும், போதிய திறனுடைய தொழில் நுட்பப் பயிற்சி கொடுப்பதென்றும் தீர்மானித்தனர். முதல் ஐந்தாண்டின் முடிவில் ரூ. 10 கோடி[1] மதிப்புள்ள 20 புதிய ஆகாய விமானங்கள் தேவைப்படலாம்.

**28. போக்குவரத்து ஒருங்கமைப்பு :** பலவகைப்பட்ட போக்குவரத்து முறைகளை இணைப்பது சம்பந்தமாகவும், அவற்றிற்கு எவ்வளவு நிதி ஒதுக்கவேண்டுமென்பது பற்றியும், தீவிர ஆலோசனைகள் செய்யப்பட்டுவருகின்றன. இவற்றில் வெற்றி ஏற்படவில்லையெனில், பெரும் குழப்பங்களும், சீர்கேடுகளும் விளையும் என்பதில் ஐயமில்லை. இத் துறையில் இடப்பட்ட மூலதனம் ஏறத்தாழ நிரந்தரமாக அமைந்த காரணத்தால், இவற்றைப் பொதுச் சேவைக்கெனப் பயன்படுத்தவேண்டும். மக்களின் நலனைக் கோரி, பொதுவாகத் தனியாரின் ஆதிக்கமின்றி நடை

1. முதல் ஐந்தாண்டுத் திட்டம், பக்கம் 477.

பெறத் திட்டவட்டமாகக் கட்டுப்பாடுகளைப் புகுத்தி, கூடியவரை யில் தேசீய மயமாக்கிக் கொள்ளவேண்டியது இன்றியமையாத தெனலாம்.

இதுகாறும் நம் நாட்டில் போக்குவரத்து முறைகள் சீரான வளர்ச்சியின்றியும், திட்டம் வகுக்கப்படாமலும், தேசீய நலனைக் கருதாது, தனிப்பட்ட முறையில் ஆதாயம் பெறும் குறுகிய மனப் பான்மையுடையவர்களின் கைப் பொம்மையாகவும் திகழ்ந்து வந்ததெனலாம். முன்பு நாம் கண்டதுபோல், ரெயில்வே வளர்ச்சிக்கு முன்னிருந்த அரசினர், தக்க வசதி கொடுத்து இதர போக்குவரத்து முறைகளைக் கவனியாது விட்டொழித்தனர். இதன் விளைவாக, நெடுஞ்சாலைகளும், நீர்த்துறைகளும் சீர் கேடான நிலையை எய்தின. போக்குவரத்து முறைகள் சம்பந்த மாக, மாகாண அரசினருக்கும், மத்திய அரசினருக்கும், முரண்பட்ட கொள்கைகள் இருந்தன. இது சம்பந்தமாக வெட்ஜ்வுட் குழுவினர் (Wedgwood Committee) கூறியது வருமாறு: 'மாகாண அரசினர்கள் ஒழுங்கற்ற மோசமான சாலைக் கொள்கையை ஊக்குவித்து, அதன் பலனைப் பொது மக்களுக்கு நம்பவியலாத வகையில் பாதைப் போக்குவரத்து இருந்து ரெயில்வே வளர்ச்சிக்கு இடர் விளைத்துவந்ததெனலாம். ஆனால் மத்திய அரசினரோ, கட்டுப்பாடுகளை நியமப்படி போட்டுப் பாதை களின் வளர்ச்சியை முன்னேற விடவில்லை. அதன் விளைவாக ஒன்றையொன்று எதிர்க்கும் இரு உலகங்களைக் கொண்டு, நாட் டைப் பாழ்படுத்தினார்கள். இலாபமற்ற ரெயில்வேக்களும், தேவைகளுக்கு வேண்டிய அளவு இல்லாத பாதைகளும் அவ்வெதிரான உலகங்களாகும்.[1]

பாதைகளும், சாலைகளும், மத்திய அரசினர், மாகாண அரசினர், நகராட்சி, மாவட்ட உள்ளாட்சி நிறுவனங்கள் ஆகியோ ரால் போடப்பட்டவுடன், ரெயில்வேக்களுக்கும், சாலை போக்கு வரத்திற்கும் எவ்வித போட்டியும் ஏற்படவில்லை. ரெயில்வேக் களுக்கு இணைந்தே சாலைகள் போடப்பட்டன. அவ்வமயம் மாட்டு வண்டிகள் போய் வந்தன. மாட்டு வண்டிகளுக்கும் ரெயில்வேக் களுக்கும் போட்டி ஏற்படும் என்று நாம் சிறிதும் கவலையுற வேண்டியதில்லை. நன்கமைந்த சாலைகளில் மோட்டார் பஸ்கள் தோன்றியவுடன் பலத்த போட்டி ஏற்பட்டது. மக்கள் ரெயில்வேக் களில் போகாது, பஸ்களையே நாடிச் சென்றனர். இதன் விளை வாக, ரெயில்வேக்கள் ஆண்டுதோறும் நஷ்டத்தில் நடந்து

1. அறிக்கை, பத்தி 138.

வந்தன. புதிய போட்டியாளர் உட்புகுந்து ரூ. 800 கோடி தேசீய முதலீடு செய்து துவக்கப்பட்ட ரெயில்வேக்களை எதிர்த்துச் சின்னுபின்னமாக்கி வருவதை எவ்வாறு தடுப்பதென்றும் அதற்காக மோட்டார்ப் போக்குவரத்தினை ஒரேயடியாக நீக்குவதும் முறையாகாதென்றும், அரசினர் இப் பெரும் பிரச்சினையைப் பற்றி ஆலோசிக்க ஆரம்பித்தனர். இதன் விளைவாக 1933ஆம் ஆண்டில் ரெயில்வேக்கள் சட்டம் திருத்தியமைக்கப்பட்டு, ரெயில்வேக்கள் தங்கள் சௌகரியத்திற்குவேண்டி, மோட்டார் பஸ் போக்குவரத்தை மேற்கொள்ளலாம் எனக் கொள்ளப்பட்டது. வெட்ஜ்வுட் குழுவினரும், ரெயில்வேக்கள் கண்டிப்பாக, சாலைப் போக்குவரத்தில் பங்கெடுக்க வேண்டும் என்று வற்புறுத்தினர். சாலைகளில் பஸ் போக்குவரத்தினை மேற்கொண்டும், அவற்றில் முதலீடு செய்தும், நடப்பிலுள்ள பஸ் நடத்தும் முதலாளிகளுடன் ஒப்பந்தம் செய்துகொண்டு ரெயில்வேக்களிலிருந்து எளிதில் பஸ்களில் பிரயாணம் செய்ய இணைப்பு முறைகளை ஏற்படுத்திக்கொள்ள வேண்டுமென்றும் கருதினர். மோட்டார் பஸ்களின் போட்டியைச் சமாளிக்கச் சடுதியில் போகும் வண்டிகளை யமைத்தும், சாதாரண மக்கள் போகும் வகுப்புகளில் வேண்டிய சௌகரியங்களைச் செய்து கொடுத்தும், பல்வேறு ரெயில்வே தொடர்புகளை ஏற்படுத்தியும் போட்டியை எதிர்க்கலாம் எனக்கருதினர்; கட்டண விகிதம் முழுமையும் குறைப்பதை அவர்கள் எதிர்த்தனர். ஏதாவது ஒரு பகுதியில் வர்த்தகமும், பிரயாணிகள் போக்குவரத்தும் திடீரென இதர போட்டியாளர் கையில் போய்விடும் என்ற நிலை யேற்படின், அவ்வமயம் இம்மாதிரியான கட்டணக் குறைப்பைச் செய்யலாம் என்று எண்ணினர். துரிதமாகப் போகும் சரக்கு வண்டிகள், சடுதியில் பண்டங்களை யேற்றிக்கொள்ளவும், இறக்கிக் கொடுக்கவும், சட்ட திட்டங்களைக் குறைத்து, பொதுமக்களுக்குப் புரியும் வண்ணம் அனுப்பும் முறைகளை எளிதாக்கல், சரக்குகளை அவரவர்களுடைய இருப்பிடங்களில் இறக்கிக் கொடுக்க வசதிகளை அமைத்தலால் போட்டியைச் சமாளிக்கலாம் என்று வழிகாட்டினர். வெட்ஜ்வுட் குழுவினர் கூறிய யோசனைகளைக் கிட்டத்தட்ட மேற்கொண்டனர். அண்மையில் ஏற்பட்ட மிதமிஞ்சிய பிரயாணிகள் எண்ணிக்கையாலும், சரக்குகள் அதிகப்படி இருந்தமையாலும் ரெயில்வேக்களுக்கும், சாலைகளுக்கும் இடையே உண்டான போட்டி சற்றுத் தணிந்துள்ளது எனலாம்.

இத் துறையில் தீர்வுகாண மற்ெருரு வகையான முடிவைக் கொடுத்துள்ளனர். மோட்டார்ப் போக்குவரத்தினைக் கண்டவாறு நீட்டாதும், பெருமளவில் அதற்கென ஒதுக்கீடு செய்யப்படுவது சரியல்லவென்றும் கூறியுள்ளனர். மோட்டார்ப் போக்குவரத்து

முறையைப் போட்டியில் ஈடுபடுத்தாது அமைக்கவும் இதனுல் மோட்டார்ப் போக்குவரத்து நடத்தும் முதலாளிகள் முதலிழந்து அவதியுருதிருக்கவும் வேண்டிய வழிகளை அரசினர் கடைப் பிடித்தனர். மோட்டார் வண்டிகள் சட்டம் இந்தக் கொள்கை களைக் கொண்டே உருவாக்கப்பட்டது.

நுகர்வோரின் நிலைமையினின்று நோக்குங்கால் பலவகைப் பட்ட போக்குவரத்து முறைகள் அமைவது எதிர்பார்க்கத் தக்கதே. இதன் விளைவாகப் பிரயாணிகளுக்குக் கட்டண விகிதத் தில் குறைவு ஏற்படுவதோடல்லாமல், பிரயாணத்தின்போது அளவுக்குமீறிய வசதிகள் ஏற்படும் என்பது திண்ணம். அவர் களும், தங்கள் வசதி, விருப்பத்திற்கேற்ப எந்தவகைப் போக்கு வரத்தையும், மேற்கொள்ள இடமுண்டு. குறைந்த தூரங்களுக் கும், குறைந்த சாமான்களைக் கொண்டு செல்லும் பிரயாணி களுக்கும் மோட்டார்ப் பிரயாணம் சௌகரியம் நிறைந்தது. ஆனுல், நீண்டதூரம் செல்லும் பிரயாணிகள் அதிக பளுவான பொருள்களைக் கொண்டு செல்லவேண்டி நேரிடின், ரெயில் பிரயாணத்தை மேற்கொள்வார்கள். அதிக விரைவில் போகும் வாகனத்தை விரும்புபவர்கள், ஆகாயவிமானத்தில் பிரயாணம் செய்வார்கள். இது ரெயில்வே, பஸ் இவைகளைக் காட்டிலும் அதிக விரைவில் செல்லும்.

நடப்பிலுள்ள போக்குவரத்து வசதிகள் குறைந்த கட்டணத் துடன் இருக்குமானுல் பலவகைப்பட்ட போக்குவரத்து முறை களைத் திரும்பத் திரும்ப அமைத்து நகல்படுத்தல் (duplication) கூடாது. அதற்குப் பதிலாக, இவ்வாறு செலவிடும் நிதியைப் போக்குவரத்து முறையே அமையாத வட்டாரத்தில் செலவிட்டு, அதை வசதியுள்ள பகுதியாக அமைத்தலே நலம். நடப்பிலுள்ள போக்குவரத்து நிலைமையை ஒட்டி, இந் நாட்டில் அதிகப்படியான எண்ணிக்கையில் பாதைகளும் சாலைகளும் அமையவேண்டுமே ஒழிய, முதல்தரமான சாலைகள் இருக்கவேண்டுமென்பதில்லை. நாடு முழுமைக்கும் எல்லாப் பருவ காலங்களிலும் செம்மையாகத் தாங்கக்கூடிய அதிக எண்ணிக்கையுள்ள சாலைகள்தான் தேவையே ஒழிய, குறைந்த அளவுள்ள - மிகவுமுயர்ந்த ரகமான பாதைகளோ அல்லது சாலைகளோ தேவையில்லை. அதற்கேற்ப நம் நாட்டில் பயன்படும் மோட்டார் வண்டிகள், மாட்டு வண்டிகள் இவைகள் அளவிற்கு மீறித் தேய்மானம் அடையாத வகையில் சாலைகளின் மேற்பரப்பு அமையவேண்டும். இதனுல் வண்டிகளை இழுக்கும் மிருகங்களை அதிகமாக வாட்டவும், சக்திக்குமீறி வேலை செய்யும்படியும் செய்ய வேண்டுவதில்லை. மாடுகளால் இழுக்கப்

படும் வண்டிகளை நடப்பிலுள்ள முறையினின்று மாற்றியமைத்தல் நலம். கூடியவரையில், சக்கரங்களில் மாட்டப்படும் இரும்புப் பட்டைகளை நீக்கி, அழுத்தத்தில் காற்றேற்றப்பட்ட ரப்பர் சக்கரங்களை மாட்டினுல், சாலைகளும் உராய்வதால் தேய்மானம் அதிகமடையாது. மாடுகளுக்கும் இழுப்பதால் ஏற்படும் அசதியும் குறைவுபடும். ஆயினும், தற்போதுள்ள கிராமப் பாதைகளில் ரப்பர்ச் சக்கரம் மாட்டிய கட்டை மாட்டு வண்டிகள் போக முடியாது. சாதாரண மாட்டு வண்டிகளே செல்லவியலும்.

ரெயில்வேக்கள், சாலைகள் இவைகளுக்கிடையே நிகழும் போட்டியைவிட, கூட்டுறவின் அடிப்படையும், ஒன்றையொன்று அடுத்துவாழும் நிலைமையும் எல்லோருடைய மனதிலும் பதிய வேண்டும். 1950ஆம் ஆண்டில் சாலைகள் சம்பந்தப்பட்ட தீர்மானத்தின் வாயிலாக, ரெயில்வேக்களுக்கான உதவிச் சாலைகள் போடப்படவேண்டும் என்பதால், போட்டியிடும் பாதைகளை அமைப்பதில்லை என்று அரசினரின் கொள்கை வெட்ட வெளிச்சமாகத் தெரிகிறது என்று அறிகிருேம். 1937ஆம் ஆண்டில் புதிய இலாக்கா ஒன்று போக்குவரத்துத் தொடர்புகள் என்ற பெயரில் நிறுவப்பட்டு, 1947ஆம் ஆண்டு முதல் ஒரு தனி மந்திரியின் மேற்பார்வையில் அமைக்கப்பட்டது. ரெயில்வேக்கள், தந்தி, தபால் நிறுவனம், சிவில் விமானப் போக்குவரத்து, ரேடியோ, செய்தி வெளியீடு, வானிலைப்பகுதி, சாலைகள், துறைமுகங்கள், உள்நாட்டு நாவாய்ப் போக்குவரத்து, இவையனைத்தையும், அவர் கண்காணித்து வந்தார்.

மாகாணக் குறுகிய மனப்பான்மையால் ரெயில்வேக்களின் மீது ஏற்பட்ட வெறுப்பைச் சரிக்கட்ட, நீமியர் (Niemeyer) விதியின்படி[1] வருமானவரியின் பங்கு, மாகாணங்களுக்குக் கிடைப்பது போன்று, ரெயில்வேக்களின் ஆதாயப் பங்கினையும் ஈவித்துக் கொடுக்கப்படும் என்ற காரணத்தால், மாகாணங்கள் ரெயில்வே போக்குவரத்திற்கு எதிராக மோட்டார் வண்டிகளின் போக்குவரத்தை வளரவிடவில்லை. இதனுல் ரெயில்வேக்கள் தாராளமாக லாபம் பெற்றன. தற்போதுள்ள நிலைமையில் மத்திய அரசினர் இதர போக்குவரத்து முறைகளுக்கு எதிராக ரெயில்வேக்களுக்குத் தனிச் சலுகை அளிக்கவேண்டிய அவசியமில்லை. மத்திய அரசினருக்கும், இராச்சிய அரசினருக்கும் இடையே சீரான இணைப்பு இருக்கவேண்டுமென்றும் பழைய குறுகிய மனப்பான்மை விட்டொழிக்கப்படவேண்டுமென்றும், முதல் ஐந்தாண்டுத் திட்டம் கூறுகிறது. இராச்சிய அரசினரும், மத்திய ஆட்சி

1. இப் புத்தகத்தில் 22ஆம் அதிகாரத்தைப் பார்க்கவும்.

யினரும், மனப்பான்மைகளை விட்டொழித்து அடிக்கடி கூட்டாலோசனைகளை நடத்தி, நாட்டின் பொது நன்மைகளை அனுசரித்த முறையில் இராச்சியப் பொதுத் திட்டங்கள் வகுக்கப்படவேண்டும். நாட்டின் பொது நலனையே குறிக்கோளாக ஒவ்வொரு இராச்சிய அரசினரும் கொள்ளவேண்டும் என்பது நியதி.

29. **செய்தித் தொடர்பும், போக்குவரத்து முறைகளும் :** ஒரு நூற்றாண்டாக இந்திய நாட்டில் தந்தி, தபால் வசதிகள் ஏற்பட்டுள்ளன. ஒழுங்கான வளர்ச்சி யேற்பட்டாலும்கூட நாட்டின் தேவைகளைப் பூர்த்தி செய்யுமளவில் முன்னேறவில்லை. ஐந்தாண்டுத் திட்டங்களின் பொருளாதார வளர்ச்சியையொட்டி, இந்தப் பணியில் கூடுதலான சுமையேறக்கூடும். சீரிய முறைகளில் தபால் வசதிகள் உண்டாகவேண்டியது இன்றியமையாததெனலாம். தந்தி, தபால் இலாக்காக்களை நல்ல வசதியுள்ள கட்டிடங்களில் நிறுவவேண்டியேற்படும். தந்தி, தபால் இலாக்காக்களுக்கான நவீன வசதிகளமைந்த இயந்திரப் பட்டறைகளை அமைக்கவேண்டும். கிராமப் பகுதிகளுக்கு இவ் வசதிகளை நீட்டியமைத்தல் வேண்டும். 2,000 பேர்களுக்கு மேலுள்ள கிராமங்கள் தோறும் தபால் அலுவலகம் வேண்டியது அவசியம். இதே ஒரு குறிக்கோளாகக் கொள்ளப்பட வேண்டும். நகரங்களிலும் பட்டணங்களிலும் மக்கள் தொகை பெருகுவதையொட்டி அதிக அளவில் தபால்வசதிகள் அளித்தல்வேண்டும். தொலைபேசி வசதியை இன்னும் அதிக அளவில் விஸ்தரிக்கலாம். ஆயினும், இந்தியா எவ்வளவு பிற்போக்கான நிலையில் உள்ளது என்று எடுத்துக் கூறவும் வேண்டுமா? அது சீனாவை விடப் பிற்போக்கானது. இந்திய நாட்டின் எல்லாத் தொலைபேசிகளையும் ஒன்று கூட்டிக் கணக்குப் பார்த்தால், ஆஸ்திரேலியா நாட்டிலுள்ள சிட்னி நகர் ஒன்றிலே அவ்வளவு தொலைபேசிகள் உள்ளன.

1935-க்கு முன்னர் இந்திய இராச்சிய பிரசாரத் தகவல் வெளியீடு இலாக்கா, இரண்டு ஒலிபரப்புக் கருவி நிலையங்களைப் பம்பாயிலும், கல்கத்தாவிலும் நிறுவி, 5,400 சதுரமைல் விஸ்தீரணத்தில் வாழும் 10 மிலியன் மக்களுக்குத் தகவல்களையும், செய்திகளையும் அறிவித்தனர். 1935 முதல் இதுதான் அகில இந்திய ரேடியோ எனக் கூறப்படுகிறது. நாட்டின் பல்வேறு பகுதிகளில் அநேக இடங்களில் ஒலிபரப்பும் கருவி அமைத்துள்ளனர். தற்போது 24 இடங்களில் நாடு முழுவதிலும், பலமொழிகளிலும், ஒலிபரப்பு நிலையங்களைத் திறந்துள்ளனர்.

# 17. வியாபாரம்

**1. உள்நாட்டு வியாபாரம்** (அ) **நில வாணிகம் :** இந்தியாவின் கண்டத்தை யொத்த நீள அகலங்களையும், அதனுடைய பெரும் மக்கள் தொகையையும், அது பெற்றுள்ள இயற்கை வளத்தையும், தட்பவெட்ப நிலையையும் நோக்கின், இந் நாட்டில் உள்நாட்டு வாணிகம் எவ்வளவு இன்றியமையாதது என்பது தெளிவாகப் புலப்படும். இவ் வாணிகத்தின் அளவு அமைப்பு, அதன் செறிவு, பரிமாணம் இவற்றைப் பற்றிய, புள்ளி விவரங்கள் நம்பத்தகு முறையில் கிடைப்பதில்லை. மொத்த உற்பத்தியைக் கணக்கிட்டு, அதனின்று ஏற்றுமதியைக் கழித்து எஞ்சியிருப்பது உள்நாட்டு வர்த்தகம் எனக் கணக்கிடுவது எளிதில் புலப்படக் கூடியதாக இருப்பினும், சரியான அளவை அது காட்டாதெனக் கூறலாம். ஏனெனில் உற்பத்தியின் ஒரு பகுதியை உற்பத்தியாளரே தம் நுகர்விற்கென எடுத்துக்கொள்கின்றனர். ரெயில்வே கட்டண வருமானத்தைக் கணக்கெடுத்து இந்த அடிப்படையில் உள்நாட்டு வர்த்தகத்தை நிர்ணயிக்கப் பார்க்கின்றனர். இத்துடன் நீர் மூலமாகவும், சாலைகள் மூலமாகவும், ஏற்படும் வியாபாரத்தைக் கூட்டினால்தான் சரி எனலாம். துறைமுக வழி வர்த்தகத்தின் தக்க புள்ளி விவரங்கள் கிடைத்த போதிலும், சாலை, ஆற்று வழிகளில் நடக்கும் வர்த்தகத்தைப் பற்றிய தகவல்கள் கிடைக்கவில்லை. 1921-22-ல் இந்திய உள்நாட்டு வர்த்தகம் ரூ. 2,500 கோடி என்று பேராசிரியர் கே. டி. ஷா (Prof. K. T. Shah) அனுமானித்தார். திரு. ஜே. என். சென்குப்தா (J. N. Sengupta) பிரிட்டிஷ் இந்தியாவின் 1925-9-ல் நடந்த உள் நாட்டு வாணிகம் ரூ. 6,000 கோடியாக ஆண்டுதோறும் இருக்கக் கூடும் என்றார். தேசீயத் திட்டக் குழுவினர் (National Planning Commission) 1948-ல் இந்தியாவின் உள்நாட்டு வர்த்தகத்தில் ஓராண்டுக் கணக்கு ரூ. 7,000 கோடிக்குக் குறைவின்றி நடந்தது எனக் கூறியுள்ளனர். இரண்டாவது உலகப் போரினால் ஏற்பட்ட உற்பத்திப் பெருக்கு, 1947-ல் நிகழ்ந்த நாட்டுப் பிரிவினை, சுதேச

அரசர்களுடைய இராச்சியங்களின் இணைப்புஆகிய காரணங்களால் உள்நாட்டு வர்த்தகம் மாறுபட்டு அதனுல் திட்டக் குழுவினரின் மதிப்பீடு ஏற்றுக் கொள்ளத் தகாத முறையி லிருந்தது. மேலும், முதல் ஐந்தாண்டுத் திட்டத்தில் போக்குவரத்து வளர்ச்சி அடைந் தது. அதனுல் உள்நாட்டு வியாபாரம் பெருகியது. ஆதலால் புதிய முறையில் விவரப்பட்டியல் சேகரிக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டது.

(ஆ) **கடற்கரை வாணிகம் :** இந்தியாவில் வெகு நீண்ட கடற்கரை அமைந்திருந்தபோதிலும், உள்நாட்டுக் கடற்கரை வாணிகம் குறைவாகவே ஏற்பட்டுள்ளதெனலாம். துறைமுக வளர்ச்சிக் குறைவாலும், கப்பல் வசதியின்மையாலும், உள்நாட்டு வாணிகம் அதிகரிக்கவில்லை. உள்நாட்டுக் கடற்கரை வியாபாரத் தைக் கணக்கெடுத்து 1938-39-ல் ரூ. 5,545 லட்சமென்றும் 1939-40-ல் ரூ. 6,996 லட்சமென்றும் மதிப்பிட்டனர்.[1] இந்த விவரத்தில் சர்க்கார் பண்டக சாலைகள், கருவூலம் ஆகியவற்றி லுள்ள பொருள்களும் சேர்ந்துள்ளன எனலாம். கூர்ந்து நோக்கின், கடற்கரை வாணிகம் எனப்படுவது உள்நாட்டு நில வாணிகத்தையும், கொண்டதெனலாம். அயல் நாட்டிலிருந்து இறக்குமதி செய்யப்பட்டவற்றின் மொத்தம் 1937-8-ல் ரூ. 495 லட்சமும், அந்தக் காலத்தில் நிகழ்ந்த ஏற்றுமதி ரூ. 650 லட்சமும் கடற்கரை வாணிகத்தில் சேர்க்கப்பட்டன. இந்திய நாட்டின் கடற்கரை வாணிகம் அதிகரிக்க வேண்டுமானுல், சிறந்த முறை யில் திட்டம் வகுத்து, கடற்கரையுள்ள துறைமுகத்தை நன்கமைத்து, கடற்கரை வாணிகத்துக்கும் ரெயில்வே போக்கு வரத்திற்கும் தொடர்புள்ள வகையில் திருத்தியமைக்க வேண்டும்.

**2. அயல் நாட்டு வாணிகம் - (அ) எல்லைகளுக்கு அப்பால் நடக்கும் வர்த்தகம் :** இதனையடுத்து வரும் அட்டவணையில் விளக்கப்பட்டுள்ளது. அதில் இந்தியாவின் இதர நாட்டு வர்த்தகத் தொகை கோடி ரூபாய்களாகக் கொடுக்கப்பட்டுள்ளது.

மத்திய ஆசிய நாடுகளான ஆப்கானிஸ்தானம், ஈரான், பாகிஸ்தான் இவற்றுடன் அயல்நாட்டுத் தரை வழி வாணிகம் இயங்குகிறது. இதே அதிகாரத்தில் 9-வது பிரிவின்கீழ் பாகிஸ் தானுடன் நடக்கும் வர்த்தகத்தைப்பற்றித் தனியே விளக்கப் பட்டுள்ளது. இந்திய ஆப்கானிய வர்த்தகத்தின் மேம்பாடான முறையைப் பெருமளவில் இந்தியா மூலமாக நடக்கும் போக்கு வரத்து வர்த்தகமாகக் கணக்கிடலாம். மிருகங்களின் தோல், வழ

1. இதற்குப் பின் ஆண்டுகளின் எண்ணிக்கை கிடைக்கவில்லை.

| | 1950-51 | 1951-52 | 1952-53 | 1953-54 | 1954-55 |
|---|---|---|---|---|---|
| **இறக்குமதி :** | | | | | |
| தானியங்கள், பருப்புகள், இதர மாவு வகைகள் ... | ·35 | 2·19 | ·05 | ·08 | ·18 |
| சணல் (மூலப்பொருள்) ... | 27·50[1] | 67·00[1] | 16·41 | 14·24 | 12·97 |
| வேதிப்பொருள், மருந்துகள் .. | ·62 | ·26 | ·13 | ·17 | ·17 |
| பழங்கள், காய்கறி, கொட்டைகள் .. | 4·06 | 4·07 | 4·43 | 3·89 | 4·55 |
| வாசனைத் திரவியங்கள் ... | 2·44 | 1·10 | ·47 | ·05 | ... |
| கம்பளி ரோமம் ... | ... | ·01 | ·05 | ·09 | ... |
| விதைகள் ... | 2·74 | 1·44 | ·41 | ·48 | ·12 |
| மொத்தம், இதர வகைகளுடன் ... | 42·87 | 80·45 | 25·16 | 22·93 | 23·39 |
| **ஏற்றுமதியும், மறு ஏற்றுமதியும் :** | | | | | |
| சணல் நூலும், அதன் தயாரிப்புகளும் ... | ·10 | ·18 | ·47 | ·03 | ·03 |
| தேயிலை ... | ·55 | ... | ... | ... | ... |
| பருத்தி நூலும், அதன் உற்பத்திகளும் ... | 1·73 | ·43 | ·75 | ·48 | ·19 |
| வாசனைத் திரவியங்கள் .. | ·17 | 2·60 | ·47 | ·08 | ·11 |
| எண்ணெய்கள் (தாவர வகை, மிருக வகை, கனி வகை) ... | 2·08 | 2·96 | 2·68 | ·03 | ·03 |
| புகையிலை ... | 3·25 | 5·12 | ·01 | ... | ... |
| பழங்கள், காய்கறி, கொட்டைகள் ... | 1·75 | 3·26 | 1·16 | ·23 | ·38 |
| வேதிப் பொருள்கள், மருந்து சாமான்கள் மருந்துகள் ... | ·66 | ·86 | 1·04 | ·01 | ... |
| மொத்தம் ... | 17·81 | 27·14 | 18·84 | 7·46 | 5·73 |

1. 1950-51-லும் 1951-52-லும் போக்குவரத்து வர்த்தகம் முறையே ரூ 80 லட்சமும், ரூ 60 லட்சமும், சணல் பாகிஸ்தானிலிருந்து இந்தியாவிற்கு வந்துள்ளதும் குறிப்பிடப்பட்டுள்ளது.

வழப்பான அடர் ரோமத்தோல் (Furs), பழவகைகள், காய்கறி, இவை ஆப்கன் நாட்டிலிருந்து இறக்குமதி செய்யப்படுகின்றன.

**(ஆ) மறு ஏற்றுமதி வர்த்தகம் :** முன்பு இறக்குமதி செய்யப் பட்ட பொருளை ஏற்றுமதி செய்தல், மறு ஏற்றுமதி எனக் கூறப் படும். நம் நாடு, கிழக்குக்கும், மேற்குக்கும் நடுப் பகுதியில் அமைந்துள்ளதால் இங்குப் பொருள்கள் வந்து குவிந்து, பின்னர் வழங்கப்படுகின்றன. அண்மையில் இந்தியாவின் மறு ஏற்றுமதி வருமாறு : 1920-21-ல் ரூ. 18·04 கோடி; 1931-32-ல் ரூ. 4·65 கோடி; 1941-42-ல் ரூ. 15·33 கோடி; 1951-52-ல் ரூ. 3·93 கோடி; 1952-53-ல் ரூ. 5·75 கோடி; 1953-54-ல் ரூ. 4·85 கோடி; 1954-55-ல் ரூ. 5·46 கோடி; முப்பதாவதாண்டுகளில் மறு ஏற்றுமதி குறைந்தது. இரண்டாவது உலகப் பெரும்போருக்குப் பிறகு அதிகரித்தது. 1941-42-ல் இதில் கலந்துகொண்ட நாடுகளின் சதவீத எண்ணிக்கை வருமாறு : அமெரிக்க ஐக்கிய நாடுகள் 8%; பர்மா 8%; ஏடன் மற்றும் அண்டியுள்ள பகுதிகள் 6%; அரேபியா 5%; இராக்கும், எகிப்தும் 4%; இலங்கை 3%. இவற்றில் பெரும்பகுதி கல்கத்தா, பம்பாய், கராச்சி முதலிய துறைமுகங்கள் வழியே ஏற்றுமதி செய்யப்பட்டது. கராச்சி வழியே செய்யப்பட்ட ஏற்றுமதி பாகிஸ்தானின் மறு ஏற்றுமதியாகக் கணக்கிடப்படும். ஆசியாவின் இதர நாடுகள் இந்தியா மூலமாக மறு ஏற்றுமதி முறையைக் கைவிட்டு நேருக்கு நேராக ஏற்றுமதி நாடுகளுடன் தொடர்பு வைத்துக்கொள்ள ஆரம்பித்துவிட்டன. மேலும், இந்தப் பிரிவினை ஏற்பட்டவுடன் இதனை ஒரு அயல் நாடாகக் கருதி மறு ஏற்றுமதியை நிறுத்திவிட்டதால் இந்தியாவில் மறு ஏற்றுமதி சரிந்துவிட்டது எனலாம்.

3. **வாணிகக் கொடுப்பல் நிலை :** அடுத்துள்ள அட்டவணையைக் காண்க. இதில் 1950-55வரையில் இந்தியாவின் இறக்குமதி, ஏற்றுமதி (மறு ஏற்றுமதி உட்பட)யும் வாணிகக் கொடுப்பல் நிலையும், எந்த அளவில் உள்ளனவென்று குறிப்பிடப்பட்டுள்ளது. இதில் கொடுக்கப்பட்டுள்ள புள்ளி விவரங்களில் ரூபாய் கோடிக் கணக்கில் காட்டப்பட்டுள்ளது. 1950-53-ல் நடைபெற்ற தேசப் பிரிவினையின் எதிரொலியாகவும், அடுத்து ஏற்பட்ட பஞ்சங்களின் தொடர்ச்சியாகவும் இந் நாட்டின் வாணிகக் கொடுப்பல் நிலை சரிந்து பாதகமாகவே முடிவுற்றது. மேலும் 1951-52-ல் அமெரிக்க ஐக்கிய நாடுகளிலிருந்து பெருமளவில் உணவுப் பொருள் இறக்குமதி செய்த காரணத்தால், பாதக வாணிகக் கொடுப்பல் நிலை ஏற்பட்டது. இவற்றையடுத்து, உள்நாட்டுத் தேவைகளுக்கான பருத்திக் கொள்முதலும், இந்தோ-பாகிஸ்தான்

| | 1950-51 | 1951-52 | 1952-53 | 1953-54[1] | 1954-55[1] |
|---|---|---|---|---|---|
| **இறக்குமதிகள் :** | | | | | |
| கடல்வழி, ஆகாயவழி ... | 566·57 | 860·14 | 639·07 | 557·86 | 612·90 |
| தரைமார்க்கமாகப் பாகிஸ்தான், ஈரான், ஆப்கன் நாடுகளிலிருந்து (ஆகஸ்ட் மாதம் 1951லிருந்து பர்மா உள்பட) ... | 42·87 | 105·91 | 25·16 | 22·93 | 23·39 |
| | 609·44 | 966·05 | 664·23 | 580·79 | 636·29 |
| போக்குவரத்து வர்த்தகம் நீக்கி ... | ·60 | ·80 | ·19[2] | ·12 | ·18 |
| மீதி இறக்குமதிகள் ... | 608·84 | 965·25 | 664·04 | 580·67 | 636·11 |
| **ஏற்றுமதிகளும், மறு ஏற்றுமதிகளும் :** | | | | | |
| கடல், ஆகாய வழிகளில் ... | 579·01 | 701·57 | 533·73 | 518·35 | 572·30 |
| நிலவழியாகப் பாகிஸ்தான், ஈரான் நாடுகளுக்கு ... | 17·81 | 27·14 | 18·84 | 7·46 | 5·73 |
| மொத்த ஏற்றுமதிகள் ... | 596·82 | 728·71 | 572·62 | 525.81 | 578·03 |
| கடல் ஆகாய வழியே, மறு ஏற்றுமதி ... | 27·83 | 13·76 | 5·74 | 4·85 | 5·46 |
| நிலவழியே மறு ஏற்றுமதி ... | ·01 | ... | ... | ... | ... |
| | 624·66 | 742·47 | 578·36 | 530·66 | 583·49 |
| போக்குவரவு வர்த்தகம் நீக்கி | 23·28 | 9·84 | 0·70[2] | ·04 | ·43 |
| மொத்த ஏற்றுமதி (மறுஏற்றுமதி உட்பட) ... | 601·38 | 732·63 | 577·66 | 530·62 | 583·06 |
| வாணிபக்கொடுப்பல் நிலை ... | (-) 7·46 | (-)232.62 | (-) 86·38 | (-)50·05 | (-)53·05 |

1. அகவுண்ட்ஸ் ரிலேடிங் டு பாரின் (ஸி, ஏர், லாண்டு) ட்ரேட் ஆப் இந்தியா மார்ச்சு 1954-55 (Accounts relating to Foreign(Sea, Air and Land) Trade of India, March, 1954 and March 1955). இதில் காணும் புள்ளி விவரங்களுக்கும் கரன்ஸி ரிப்போர்ட் (ரிஸர்வு பாங்கினது)டிலும் பேதம் உள்ள காரணம் தனிப்பட்ட இறக்குமதியாகிய தானியங்கள், பருப்புகள், மாவு இவைகள் சேர்க்கப்பட்டுள்ளன.

2. ஏப்ரல் 1952 முதல் பாகிஸ்தானின் போக்குவரத்து வர்த்தகம் நீக்கப்பட்டது.

வர்த்தக ஒப்பந்தப்படி சணல் இறக்குமதியும், இன்னும் இயந்திரம், எண்ணெய்கள், மருந்துகள், மருந்துச் சாமான்கள், வேதிப் பொருள்கள் இவற்றைத் தவிர்க்க இயலாப் பொருள்கள் நம் நாட்டிற்கு வேண்டும் என்ற காரணத்தால், அதிக விலை கொடுத்து வாங்க நேரிட்டது. அமெரிக்க ஐக்கிய நாடுகளிலிருந்து கடன்வழியே கொள்முதல் செய்த கோதுமையால் அயல்நாட்டுக் கொடுப்பல் நிலையில் ஒரு மாறுதலும் ஏற்படவில்லை. 1952-53-ல் உள்நாட்டு உணவு உற்பத்தியில் பெரிய மாறுதல் ஏற்பட்டது. அதனால் உணவு இறக்குமதி கொஞ்சம் கொஞ்சமாகக் குறைக்கப்பட்டது. இது பாதகக்கொடுப்பல் நிலையின் பின் விளைவுகளை ஒருவாறு குறைத்தது. சில பண்டங்கள் கிடைக்காமையாலும், நீண்ட காலங் கழித்து, சில பொருள்களைக் கொடுக்க வாக்களித்ததாலும், சிலவகையான இறக்குமதிகள் நீக்கம் செய்யப்பட்டன. இந்தோனேஷியா, இலங்கை முதலிய நாடுகளிலிருந்து தேயிலை ஏற்றுமதி பெருமளவில் நடந்து வந்தது. 1950-51-ல் ஏற்பட்ட பற்றுக் குறையான வாணிகக் கொடுப்பல் நிலைக்குக் காரணம் இந்திய ரூபாயை மதிப்புக் குறைப்புச் செய்ததுதான்.

4. **வாணிகக் கொடுப்பல் நிலையில் மாற்றங்கள் :** கடந்த இரண்டு மூன்று பத்தாண்டுகளாக (decades) இந்நாட்டின் வாணிகக் கொடுப்பல் நிலையில் மாற்றம் ஏற்பட்டுள்ளது. 1905ஆம் ஆண்டிற்குப் பிறகு இந்நாட்டின், அயல்நாட்டு வர்த்தகம் கூடுதலாகியுள்ளது. முதல் உலகப்போரின் முன் ஐந்து ஆண்டுகளில் பெரிய அளவில் மேம்பாடு ஏற்பட்டது. அக் காலத்தில் ரூபாயின் மதிப்புக் குன்றுது ஒரே நிலையில் அமைந்திருந்தது. ரெயில்வே வளர்ச்சியும், நீர்ப்பாசன முறைகளும் அதிகரித்தன. நாட்டின் பஞ்சமோ அல்லது தொத்துநோய்களோ கடந்த நூற்றுண்டின் இறுதியில் ஏற்பட்டதைப்போல் ஏற்படவில்லை. இந்தியாவின் சராசரி வரவு இருப்பு 78 கோடியாகும். 1914-18-ல் நடந்த யுத்தத்தின் விளைவாக வர்த்தகம் பாதிக்கப்பட்டபோதிலும், அடுத்து ஏற்பட்ட வியாபாரப் பெருக்கத்தினுல் இந்தியா விரோத நாடுகளுடனும் வர்த்தகம் செய்ய வாரம்பித்தது. மேற்கத்திய நாடுகளில், தொழிலைத் தொடங்க இந்திய ஆக்கப் பொருள்களின் தேவையேற்பட்டதால் இந்திய வர்த்தகம் ஏற்றத்தைக் காண முடிந்தது. யுத்தம் முடிந்த ஐந்தாண்டுகள் முடிய 1923-24-ல் சராசரி 53 கோடி ரூபாய் இந்தியாவின் கணக்கில் வரவிலிருந்தது ரெயில்வே போக்குவரத்து தடங்கல்களாலும், தொழிலாளர்களால் ஏற்பட்ட வேலைத் தகராறினுலும் நிலையற்ற அன்னிய நாட்டுச்

செலாவணியாலும், இத்தொகையில் குறைவு ஏற்பட்டது. 1919 முதல் 1924 வரையில் சற்றேறக்குறைய இந்நாட்டு வாணிபக் கொடுப்பல் நிலை சாதகமாகவே இருந்தது ஆயினும், 1920-21லும் 1921-22 லும் நம்நாட்டு வாணிபக்கொடுப்பல் நிலை குறைவுற்றது. அதன் காரணம் என்னவெனில் மத்திய ஐரோப்பிய நாடுகள், தங்கள் நாட்டு நிலையை யுத்தத்தின் பிறகு சீர்படுத்தவியலாததால் இந்திய மூலப்பொருள்களைக் கோரவில்லை. 1920-ல் போதிய அளவு மழையின்மையால் உணவுப்பொருள் ஏற்றுமதி கட்டுப் படுத்தப்பட்டது.

1922-23க்குப் பிறகு, இயல்பான வர்த்தக நிலை 1929-30 வரை ரூ.113 கோடியாக அமைந்தது. 1929-ல் ஏற்பட்ட மந்தம் காரண மாக, உலக விலைகளில் இறக்கம் ஏற்பட்டது. வால் தெரு (Wall Street) வாணிகம் முழுமையும் ஒரேயடியாகச் சரிந்தது. இதன் காரணத்தால் இந்தியாவின் அயல்நாட்டு வர்த்தகமும் குறைந்தது. 1929-30 முதல் 1933-34 வரையில் வர்த்தக இறக்கத்திற்கான காரணங்கள் வருமாறு: (1) ஆக்கப் பொருளும், மூலப் பொருளும், இயந்திரப் பொருள்களும் மிதமிஞ்சி உற்பத்தி செய்யப்பட்டதின் விளைவு, (2) உலகின் பொன் அனைத்தும் பணச் சுருக்கத்தின் காரணத்தால், அமெரிக்காவிற்கும் பிரான்சு நாட்டிற்கும் ஏற்றுமதி யான காரணம், (3) அரசியல் குழப்பங்கள், (4) இந்திய விவசாயப் பொருளுக்கு இதர நாடுகளில் கிராக்கி இல்லை. 1933-34-ல் மறுபடியும் சற்று விலையேற்றம் ஏற்பட்டதால் இந்திய வாணிகம் சிறிது தலைதூக்கியது. இந்தியாவின் வர்த்தகக் கணக்கில் 1932-33-ல் மிகக் குறைவாக இருந்த வரவுத் தொகை ரூ. 3 கோடி 1933-34-ல் 35 கோடியாகியது. 1934-35, 1935-36, 1936-37-ல் பொருளாதாரத் துறையில் ஏற்றம் ஏற்பட்டது. அமெரிக்க ஐக்கிய நாட்டில் பொருளாதாரத் துறையில் ஏற்றத்திற்கான திட்டங்கள் வகுத்ததால் இந்தியாவிற்கு அவை பேருதவியாக அமைந்து, இந்தியாவின் அயல்நாட்டு வர்த்தகமும் கூடுதலாகியது. ஒட்டாவா ஒப்பந்தப்படி ஆங்கில அரசின் நாடுகள் அனைத்தும், இதர ஐரோப்பிய நாடுகள் போட்டியின்றி இங்கிலாந்துடன் ஏற்றுமதி வர்த்தகம் செய்யவேண்டும் என முடிவாக்கின. 1934-ல் இந்தோ-ஜப்பான் ஒப்பந்தப்படி நம் நாட்டின் வர்த்தகம் ஜப்பானுடன் அதிகமாகி வந்தது. 1929-ல் ஏற்பட்ட மந்தத்தின் காரணமாக இந்தியாவின் ஆக்கப் பொருள்களும், விவசாயப் பொருள்களும் மிகவும் பாதிக்கப்பட்டன. ஆயினும், 1936-37-ல் விலையேற்றம் கண்டது. இதனால் நம் நாட்டின் ஏற்றுமதி அதிகரித்தது. 1936-37-ல் நமது வர்த்தக நிலையில் ரூ $77\frac{3}{4}$ கோடி வரவில் நின்றது. 1935-36-ல் இருந்த ரூ. $30\frac{1}{2}$ கோடி இரட்டிப்

பாக ஆகியது. 1937-ல் விலைகள் திடீரெனச் சரிய ஆரம்பித்தன. இது முதன் முதலில் அமெரிக்க ஐக்கிய நாடுகளில் தோன்றியது. இதனால் உலக வர்த்தகம் மிகவும் பாதிக்கப்பட்டு இந்தியாவின் வாணிகக் கொடுப்பல் நிலையை ரூ. 16 கோடியாகத் தாழ்த்தியது. பர்மா, நம் நாட்டிலிருந்து பிரிந்து போனதால் தேவையான உணவுப் பொருள்களை இறக்குமதி செய்ய நேரிட்டது. 1939-ன் ஆரம்பத்தில் வர்த்தகம் மேலோங்கியது. ஐரோப்பிய நாடுகள் ஆயுத ஏற்றத்தின் காரணமாக அதிகப்படியான வியாபாரத்திற்கு ஊக்கமளித்தன. அதிகப்படியான செலாவணி உற்பத்தியினாலும், மிகையான புதுச்செலவினாலும், அயல்நாட்டு வர்த்தகம் அதிகரித்தது எனலாம்.

1939 செப்டம்பரில் போர் தொடக்க அறிகுறியின் காரணமாக உலகில் வர்த்தக நிலையில் மாற்றம் தோன்றியது. கீழ்க்காணும் அட்டவணையில் போர்க் காலத்தில் நடந்த ஏற்றுமதி, இறக்குமதிகளைப் பற்றிய புள்ளி விவரம் கொடுக்கப்பட்டுள்ளது :

| ஆண்டு | இறக்குமதி | ஏற்றுமதி | நிகரம் |
|---|---|---|---|
| 1940-41 | 157 | 187 | + 30 |
| 1941-42 | 173 | 237 | + 64 |
| 1942-43 | 110 | 187 | + 77 |
| 1943-44 | 118 | 199 | + 81 |
| 1944-45 | 204 | 210 | + 6 |

காமன்வெல்த், நேச நாடுகளுடைய போர்ப் பொருள் கொள் முதல் சம்பந்தப்பட்ட புள்ளி விவரம் இதில் இணைக்கப்படவில்லை. இதில் ரெயில்வேக்கள் சம்பந்தமான கொள் முதல்களும், இந்திய சிற்றரசின் கொள்முதல்களும் சம்பந்தப்பட்ட புள்ளி விவரம் சேர்க்கப்படவில்லை. போர்க் காலத்தின்போது வியாபாரத்தின் போக்கை வாணிகக் கொடுப்பல் நிலை மூலமாக அறிவிக்கிறது. விரோத நாடுகளுடன் வர்த்தகம் செய்வது தடைப்படுத்தப் பட்டது. போகப் பொருட்களின் ஏற்றுமதியும் இறக்குமதியும் தடைப்படுத்தப்பட்டன. சில பொருள்களுக்கு முதற்படி சலுகைகள் காண்பிக்கப்பட்டும், சிலவற்றிற்கு லைசென்ஸ் பெற்ற பிறகு

வர்த்தகம் செய்யலாம் என்றும் சட்டம் இயற்றப்பட்டது. இவை களின் காரணமாக இந்தியாவின் அயல் நாட்டு வர்த்தகம் சின்ன பின்னமாக ஆயிற்று. இங்கிலாந்தும் மற்ற நேச நாடுகளும் போரில் மும்முரமாக ஈடுபட்டு இருந்ததால் உள்நாட்டிற்கு வேண்டிய ஆக்கப் பொருள், உணவுப் பண்டம், மனித சேவை இவைகளுக்காக இந்தியாவை எதிர்நோக்கி நின்றன. ஏற்று மதிக்கான பொருள் உற்பத்தி செய்வதில் தடங்கல் ஏற்பட்டதால் இந்த நாடுகள் அனைத்தும் இந்தியாவையே தங்கள் ஏற்றுமதிகளுக் காக எதிர்நோக்கியிருந்தனர். கப்பல் இடவசதி இன்மையால் அண்மையிலுள்ள நாடுகளிலிருந்து பொருள்களைக் கொள்முதல் செய்தும், இடரற்ற வழிகளின் மூலமாக அப்பொருள்களைக் கொண்டு வரவும் முயன்றது. தன் கிழக்குப் போர் அரங்கிற்கு வேண்டிய பொருள்களை அமெரிக்கா இந்தியாவிலிருந்து கொள்முதல் செய்து கொண்டது. இந்தியாவின் இறக்குமதிகள் ஒரேயடியாகச் சரிந்தன. அமெரிக்காவும், இங்கிலாந்தும் இந்தியாவிற்குத் தேவையான இயந்திரப் பொருள்களைக் கொடுக்க இயலவில்லை. இவை யனைத்தும் இந்தியாவிற்குச் சாதகமான வாணிகக் கொடுப்பல் நிலையில் முடிந்தது. ஆயினும், இந்தியாவின் மொத்த அயல் நாட்டு வாணிகம் குறைந்தது. இந்தியாவின் ஸ்டர்லிங் இருப்பு அதிகரித்தது. காணத்தகு வர்த்தக இருப்பினைக் கொண்டு அயல் நாட்டுக் கடனாகிய 320 மிலியன் பவுன் (ரூ. 425 கோடி) தொகையைக் கழித்துக் கொண்டது.

யுத்தத்தின் பிற்காலத்தில் முன் கண்டதுபோல், பாதகக் கொடுப்பல் நிலையேற்பட்டது. 1948-49-ல் ரூ. 175 கோடி, 1949-50-ல் ரூ. 134 கோடி, 1950-51-ல் ரூ. 7 கோடி, 1951-52-ல் ரூ. 232 கோடி, 1952-53-ல் ரூ. 86 கோடி, 1953-54-ல் ரூ. 50 கோடி, 1954-55-ல் ரூ. 53 கோடி.

**5. வர்த்தகத்தின் அமைப்பு :** இதனையடுத்து வரும் அட்டவணையிலுள்ள புள்ளி விவரங்கள், இந்தியாவிலிருந்து[1] ஏற்றுமதி இறக்குமதியாகும் பொருள்களைக் குறிக்கின்றன.

| ஏற்றுமதிகள் | 1951-2 | 1952-3 | 1953-4 | 1954-5 |
|---|---|---|---|---|
| சணல் நாரும் அதன் உற்பத்திகளும் ... | 269·73 | 128·92 | 113·77 | 123·97 |
| தேயிலை ... | 93·44 | 80 20 | 01·57 | 146·54 |
| பருத்தி நூலும் அதன் உற்பத்திகளும் ... | 58·09 | 69·59 | 71·83 | 66·21 |
| வாசனைத் திரவியம் ... | 27·89 | 20·84 | 16·63 | 11·34 |
| தோல் (பதனிட்டது) ... | 25.69 | 20·35 | 24·84 | 19·03 |
| பருத்திக் கழிவும், கச்சாவும் ... | 21·02 | 28·96 | 19·26 | 20·14 |
| எண்ணெய்கள் ... | 22·76 | 25·14 | 6·14 | 21·15 |
| உலோகத் தாதுக்கள் ... | 18.55 | 37·95 | 35·57 | 19·05 |
| புகையிலை ... | 16·93 | 13·85 | 11·26 | 11·07 |
| வெட்டுக் கருவிகளும் இரும்பு சாதனங்களும் ... | 2·13 | 2·21 | 2·43 | 2·33 |
| ரப்பர்ப் பொருள்கள் ... | 1·06 | 1·42 | 1·73 | 1·25 |
| ரசாயனங்களும், மருந்துக்கான பொருள்களும், மருந்துகளும் ... | 5.27 | 4·13 | 4·37 | 4·47 |

1. இதில் காணும் புள்ளி விவரங்களைக் கோடிக் கணக்கில் எடுத்துக்கொள்ள வேண்டும்-அகவுண்ட்ஸ் ரிலேடிங் டு பாரின் ட்ரேட் ஆப் இந்தியா, மார்ச்சு, 1955. தி டைம்ஸ் ஆப் இந்தியா டைரக்டரி அண்டு இயர் புக், பக்கம் 148, 1955-1956.

இந்த அட்டவணையில் தேயிலை ஏற்றுமதியில் பெருமிதமான அளவு நடைபெற்றுள்ளதைக் குறிக்கிறது. அதேபோல வாசனைத் திரவியம், புகையிலை இவைகளில் ஏற்றுமதி குறைந்துள்ளது எனலாம்.

| இறக்குமதி | 1951-2 | 1952-3 | 1953-4 | 1954-5 |
|---|---|---|---|---|
| தானியங்கள், பருப்புகள், மாவு ... | 228·12 | 153·10 | 63·65 | 68·01 |
| பருத்தி-கழிவு, கச்சாவகை.. | 138·99 | 76·67 | 52·71 | 58·45 |
| இயந்திரமும், பொறியியல் வேலையும் ... | 111·88 | 87·89 | 85·84 | 83·26 |
| எண்ணெய்கள் ... | 79·49 | 81·91 | 92·31 | 90·01 |
| உலோகங்கள் ... | 43·45 | 43·14 | 38·10 | 56·28 |
| ரசாயனங்கள், மருந்துப் பொருள்கள், மருந்துகள் | 35·97 | 24·88 | 25·78 | 31·88 |
| துணிகள், தயாரிப்புக்கான நூலும், தயாரிப்புகளும் | 35·08 | 21·31 | 27·03 | 19·79 |

அநேக பண்டங்களின் இறக்குமதி வரவரச் சீராகக் குறைந்து வந்துகொண்டுள்ளது. அவை உள்நாட்டிலேயே உற்பத்தியாகின்றன. மேலும், பருப்பு வகை தானிய வகை இவைகளின் இறக்குமதி குறைந்துள்ளதைக் கவனிக்க.

கடந்த 20, 30 ஆண்டுகளாக இந்தியாவின் அயல்நாட்டு வர்த்தகம் பல மாறுதல்களை அடைந்து வந்துள்ளது. 1920-21-ல் 84 சதவீத அளவில் இருந்துவந்த பொறிசெய்பொருள்களின் இறக்குமதி 1938-9-ல் 62·6% ஆகக் குறைந்தது. 1950-1-ல் 45·3% ஆகவும், 1952-3-ல் 43·1% ஆகியது. ஆக்கப்பொருளின் இறக்குமதி 1920-21-ல் 5% லிருந்து 1938-39-ல் 21·7% ஆகவும் 1945-46-ல் 48·5% ஆகவும் பின்னர் 1950-51-ல் 34·8%க்குக் குறைந்தும் 1951-52-ல் 29·3% ஆகி 1955-56-ல் 27·8% ஆகியது. உணவுப் பண்டங்களின் இறக்குமதியில் ஏற்ற இறக்கங்கள் தோன்றி, உள்நாட்டுத் தேவைகளை யொட்டியும், உலக உணவு

உற்பத்திக்கிசைந்தவாறும் அமைந்ததெனலாம். இவ் வட்டவணையில் சதவிகித மாற்றங்கள் காட்டப்பட்டிருக்கின்றன.[1]

| இறக்குமதிகள் | 1920-21 | 1938-9 | 1945-5 | 1955-6 |
|---|---|---|---|---|
| உணவு, பானம், புகையிலை ... | 11·0 | 15·7 | 9·3 | 9·2 |
| மூலப் பொருள்கள் ... | 5·0 | 21·7 | 48·5 | 27·8 |
| உற்பத்தி செய்யப்பட்ட பொருள்கள் முதலியன ... | 84·0 | 62·6 | 42·2 | 63·0 |

ஏற்றுமதிப் பகுதியில் மூலப் பொருளின் தொகை வரவரக் குறைந்து, உற்பத்தி செய்யப்பட்ட பொருளின் தொகை கூடுதலாகி வருவதாகத் தெரிகிறது. இதுகாறும் ஐரோப்பிய நாடுகளிடமிருந்து உற்பத்தி செய்யப்பட்ட பொருள்களை இறக்குமதி செய்து வந்த மத்திய கிழக்கு ஆசிய நாடுகள், இப்போது இந்தியாவை எதிர்பார்த்துள்ளன என விளங்கும். குறிப்பாக நெய்யப்பட்ட துணி வகைகள் ஏற்றுமதியாகின்றன. யுத்தத்தின் காரணமாக ஐரோப்பிய நாடுகளில் சமாதான காலத்து இயந்திரத் தொழில்கள் சீராக அமையாததுதான் காரணம். வரும் அட்டவணையில் இந்திய ஏற்றுமதியின் சதவீதம் கொடுக்கப்பட்டுள்ளது.

| ஏற்றுமதிகள் | 1920-21 | 1938-9 | 1945-6 | 1955-6 |
|---|---|---|---|---|
| உணவு, பானம், புகையிலை (தேயிலை உட்பட) ... | 28·0 | 27·8 | 22·5 | 28·1 |
| மூலப் பொருள்கள் ... | 35·0 | 34·1 | 26·5 | 28·8 |
| உற்பத்திசெய்யப்பட்ட பொருள்கள் ... | 37·0 | 38·1 | 51·0 | 43·1 |

1. இப்புள்ளி விவரம் அநேக குறைபாடுகள் உள்ளது. பிரிவினைக்கு முன்னும் பின்னும் நாட்டின் பரப்பு விகிதம் மாற்றப்பட்டுள்ளது. அரசினர் தனியார் கணக்கினை இணைத்து 1948 ஏப்ரல் முதல் ஒன்ருகக் காட்டப்பட்டுள்ளது. முன்பெல்லாம் தனியார் கணக்கு மட்டுமே வெளியிடக் கிடைத்துவந்தது. பொதுவாக வியாபாரத்தின் அமைப்பை அறியப் பயன்பட்டன. மற்றவைகளுடன் ஒப்பிடுவதாளுல் இப்புள்ளி விவரத்தில் அநேக மாற்றங்களைச் செய்தல் அவசியம். இந்திய அயல்நாட்டு வாணிக இருப்புக் கணக்கின் பேரில் சதவீதங்கள் கணக்கிடப்பட்டுள்ளன.

நாம் செய்யும் ஏற்றுமதிகளில் பெரும் பகுதி உணவுப் பண்டமாகவும் கச்சாப் பொருளாகவும் உள்ளன. பெரும்பாலும், சணல், பருத்தி, தேயிலை, எண்ணெய் வித்துக்கள், பிராணிகளின் தோல்கள், நம் இயந்திர உற்பத்திப் பொருள்கள், ஏற்றுமதியில் அதிகரித்துக்கொண்டே போகின்றன. கீழ்க்காணும் அட்டவணைகளில் பண்டங்களின் வழக்கு முறைச் சதவீதம் கொடுக்கப் பட்டுள்ளன.

| இறக்குமதிகள் | 1950-51 | 1951-52 | 1952-53 | 1953-54 |
|---|---|---|---|---|
| உணவு, பானம், புகையிலை | 18·7 | 30·37 | 27·6 | 17·1 |
| மூலப் பொருள்கள் | 34·8 | 29·30 | 28·1 | 31·3 |
| உற்பத்தி செய்யப்பட்ட பொருள்கள் | 45·3 | 39·37 | 43·1 | 50·9 |
| இதர வகைகள் | 1·2 | 0·96 | 1·2 | 0·7 |
| | 100·00 | 100·00 | 100·00 | 100·00 |

| ஏற்றுமதிகள் | 1950-51 | 1951-52 | 1952-53 | 1953-54 |
|---|---|---|---|---|
| உணவு, பானம், புகையிலை | 22·9 | 22·0 | 25·5 | 29·3 |
| மூலப்பொருள்கள் | 19·4 | 20·8 | 26·3 | 21·0 |
| உற்பத்தி செய்யப்பட்ட பொருள்கள் | 49·3 | 56·5 | 47·0 | 49·6 |
| இதர வகைகள் | 8·4 | 0·7 | 1·2 | 0·1 |
| | 100·00 | 100·00 | 100·00 | 100·00 |

**6. வர்த்தகத்தின் போக்கு:** வரும் அட்டவணைகளில் டாலர் செலாவணி நாடுகளில் நம் நாட்டு வர்த்தகம் காமன்வெல்த் நாடுகளைக் காட்டிலும் பெருகி வருவதைக் காணலாம். நம் நாட்டுக்குப் பயன்படக் கூடிய இயந்திரத் தொழில்களுக்கான இயந்திரக்

| | 1951-52 | 1952-53 | 1953-54 | 1954-55 |
|---|---|---|---|---|
| **ஏற்றுமதிகள்** [1] | | | | |
| இங்கிலாந்து ... | 184·74 | 122·44 | 150·08 | 184·75 |
| அமெரிக்கா ... | 129·93 | 111·74 | 89·95 | 87·38 |
| கனடா ... | 16·24 | 12·82 | 13·11 | 17·37 |
| அர்ஜன்டைனு ... | 17·52 | 6·83 | 19·57 | 12·51 |
| மே. ஜெர்மனி ... | 8·67 | 12·38 | 11·60 | 14·52 |
| நெதர்லாண்ட்ஸ் ... | 7·73 | 10·25 | 6·53 | 12·87 |
| நைஜீரியா ... | 7·21 | 6·43 | 8·56 | 8·27 |
| ரஷ்யா ... | 6·67 | 0·85 | 1·16 | 2·12 |
| **இறக்குமதிகள்** [1] | | | | |
| இங்கிலாந்து ... | 162·28 | 140·99 | 144·98 | 146·88 |
| அமெரிக்கா ... | 293·77 | 183·07 | 80·05 | 81·61 |
| கனடா ... | 19·34 | 29·58 | 14·14 | 10·13 |
| ஆஸ்திரேலியா ... | 17·62 | 12·38 | 25·82 | 19·55 |
| மே. ஜெர்மனி ... | 28·56 | 23·96 | 31·59 | 38·73 |
| எகிப்து ... | 40·53 | 15·12 | 27·71 | 19·68 |
| ஜப்பான் ... | 25·42 | 15·99 | 13·22 | 18·91 |
| பர்மா ... | 23·48 | 26·46 | 17·49 | 57·33 |
| ரஷ்யா ... | 1·38 | 0·24 | 0·59 | 1·61 |

1. ஏற்றுமதி வர்த்தகம் இங்கிலாந்தில் அதிகப் பகுதி நடைபெற்றதெனினும் ரஷ்யா, நெதர்லாண்ட்ஸ், மே. ஜெர்மனி, முதலிய புதிய இடங்களிலும் விஸ்தரித்திருக்கிறது. அதேபோன்று இறக்குமதியும் பர்மா, ஆஸ்திரேலியா, மே ஜெர்மனி இவைகளில் அதிகம் நடந்துள்ளது. கனடா, ஜப்பானில் நமது இறக்குமதிகள் குறைந்துள்ளன. ஜப்பாவின் புள்ளி விவரம் கோடி ரூபாயில் குறிக்கப்பட்டுள்ளது. (அகவுண்ட்ஸ் ரிலேடிங் டு பாரின் ட்ரேட், மார்ச் 1954 அண்ட் மார்ச் 1955).

கருவிகள், சுரங்கத் தொழிலிற்கான இயந்திரம், காற்று இயந்திரம் இயந்திரக் கலப்பை, எண்ணெய் பிழிந்து சுத்தம் செய்யும் இயந்திரம், மோட்டார் வண்டிகள், இவைகளுக்கான தொகைகளை மூலப் பொருள் ஏற்றுமதிகளின் மூலம் அடைத்தோம். அவ்வாறு ஏற்றுமதி செய்யப்பட்ட மூலப் பொருள்கள் சணல், சணலில் உற்பத்தி செய்யப்பட்ட பொருள்கள், பதனிட்ட, பதனிடாத் தோல், முந்திரிக் கொட்டை, சந்தன, தந்தப் பொருள்கள், ஆமணக் கெண்ணெய் வித்துக்கள், தேயிலை முதலியன. அமெரிக்க நாட்டிலிருந்து 1950-51-ல் ரூ.115.82 கோடி இறக்குமதியும் 1951-52-ல் ரூ.293.77 கோடியாக உயர்ந்தது. இந் நாட்டின் பஞ்ச நிலைமையைப் போக்க, கோதுமை இறக்குமதி செய்ய நேரிட்டதால் இம்மாதிரி இறக்குமதி அதிகரித்தது. அமெரிக்க நாட்டிற்குச் செய்த ஏற்றுமதி 1950-51-ல் ரூ. 110·10 கோடியாக இருந்து 1951-52-ல் ரூ. 129·93 கோடியாக அதிகரித்தது.

காமன்வெல்த் நாடுகளிலிருந்து டாலர் செலாவணி நாடுகளுக்கு அதிகப்படி வர்த்தகம் செய்ய நேரிடக் காரணமாவது, இந்தியா இங்கிலாந்தில் அதிக அளவில் ஸ்டர்லிங் சேமிப்புகள் வைத்திருந்தது. இவற்றைக் கொண்டு உள்நாட்டுச் செலவினை ஈடுகட்ட முடிந்தது. இங்கிலாந்திற்கு ஏற்றுமதி செய்ய அவசியம் ஏற்படவில்லை.

இங்கிலாந்துடன் நம் நாட்டு வர்த்தகம் அதிகப்பட்டது. சதவீத அட்டவணையில் இது சம்பந்தமான தகவல்கள் கிடைக்கும்.

| | இங்கிலாந்திலிருந்து இறக்குமதி | இங்கிலாந்திற்கு ஏற்றுமதி |
|---|---|---|
| 1913-14 | 64·1 | 23·4 |
| 1918-19 | | 2 |
| 1938-39 | 30·5 | 34·3 |
| 1945-46 | 25·3 | 28·2 |
| 1950-51 | 21·7 | 22·0 |
| 1951-52 | 16·3 | 25·7 |
| 1952-53 | 22·0 | 22·0 |
| 1953-54 | 27·0 | 29·0 |

இங்கிலாந்திலிருந்து செய்யப்படும் இறக்குமதி, அந் நாட்டிற்கான ஏற்றுமதியிலும், குறைவாக உள்ளது. வாணிகக் கொடுப்பல் நிலை இந்தியாவிற்குச் சாதகமாகவே உள்ளபடியால் (1) உள்ள கடன் தொகையைக் கொடுக்க நேர்முக ஏற்றுமதி செய்தும், (2) ஸ்டர்லிங் கடனைத் திருப்பிக் கொடுத்துத் தன் கடன் பளுவைக் குறைத்தும், (3) இலண்டனில் ஸ்டர்லிங் நிதியைச் சேமித்து ரிஸர்வு பாங்கில் இட்டும் வைத்தது.

7. **இந்திய-பர்மிய வர்த்தகம் :** 1937ஆம் ஆண்டு ஏப்ரல் மாதத்திற்கு முன்னர் பர்மாவுடன் செய்யும் வர்த்தகம் கடற்கரை வர்த்தகமாகக் கருதப்பட்டது. 1937ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 16ஆம் தேதி பர்மா தனி நாடாக இந்தியாவினின்று பிரிக்கப்பட்டதாகையால் அன்று முதல், அயல் நாட்டு வாணிகக் கணக்கில் வரையப்பட்டது. இந்தியாவினின்று அதிகப்படியான பொருள்களைப் பர்மா பெற்று வருகின்றது. அவை சணல் பொருள்கள், இரும்பு, எஃகு, மின்சாரப் பொருள்கள், போக்குவரவு சாதனங்கள், தேயிலை, வெட்டுக் கருவிகள், பருத்தித் துணி வகைகள் முதலியன. பர்மா இந் நாட்டிற்குத் தேக்கு, அரிசி, கனி எண்ணெய்கள் ஆகியவைகளைக் கொடுத்துவருகின்றது. இந்தியா வருங்காலத்தில் பர்மாவில் ஒரு பெரிய சந்தையைத் தனக்கென ஏற்படுத்திக் கொள்ள வியலும். 1963ஆம் ஆண்டு ஜூலையில் ஏற்படுத்திக் கொண்ட துணை ஒப்பந்தத்தின்படி (collateral agreement)இவ்விரு நாடுகளுக்குமிடையே வர்த்தகம் நடைபெறுகிறது.

8. **இந்தியாவும், மத்திய கிழக்கு நாடுகளும் :** முன்னர் இயம்பியதுபோல் இந்தியா தனக்கென மத்தியக் கிழக்கு நாடுகளில் ஒரு பெரும் சந்தையை ஏற்படுத்திக்கொண்டது. யுத்தத்தின் காரணமாக ஜப்பான், ஜெர்மனியின் போட்டி நின்று விட்டது. 1938-39-ல் ரூ. 31 கோடியாக இருந்த இறக்குமதி 1942-43-ல் ரூ. 10 கோடியாகக் குறைந்தது.

உணவுப் பொருள், கனி-எண்ணெய்கள், பருத்தி இவைகளை இந்தியா, சூடான், எகிப்து, ஈரான், கென்யா முதலிய நாடுகளிலிருந்து இறக்குமதி செய்கிறது. வருங்காலத்தில் மத்திய கிழக்கு நாடுகளுடன் பெரிய வர்த்தகம் நடத்தப் போதுமான வழிகள் பல உள்ளன. இந்த அட்டவணையில் கண்டதுபோல் மத்தியக் கிழக்கு நாடுகளுடன் வர்த்தகம் நடைபெற்று வருகிறது. ஏற்றுமதிகள் அதிகரித்து இறக்குமதிகள் குறைவதைக்[1] காணலாம்.

1. அகவுண்ட்ஸ் ரிலேடிங் டு பாரின் டிரேட், மார்ச் 1955.

| | இறக்குமதிகள் (கோடிரூபாய்களில்) | | | ஏற்றுமதிகள் (கோடி ரூபாய்களில்) | | |
|---|---|---|---|---|---|---|
| | 1952-53 | 1953-54 | 1954-55 | 1952-53 | 1953-54 | 1954-55 |
| எகிப்து | 15·12 | 27·71 | 19·68 | 5·68 | 3.47 | 8·18 |
| எதியோப்பியா | 0·02 | 0·35 | ... | 0·32 | 2·25 | 3·29 |
| த்ரிப்போலி | ... | ... | ... | 0·16 | 0·17 | 0·39 |
| சிரியா | ... | ... | 0·03 | 0·75 | 0·98 | 2·13 |
| சவுதி அரேபியா | 14·76 | ... | ... | 2·96 | 3·48 | ... |
| லெபனுன் | 0·01 | ... | ... | 0.28 | 0·18 | 0·52 |
| ஜார்டன் | ... | ... | ... | 0·23 | 0·19 | 0·32 |
| கென்யா | 20·57 | 15·32 | 18·39 | 6·54 | 5·99 | 6·98 |
| உகாண்டா | 1·21 | 1·58 | 0·07 | 0·70 | 0·81 | 0·82 |
| டாங்கனீக்கா | 1·98 | 1·14 | 2·46 | 3·67 | 3·37 | 4·46 |

**9. இந்திய-பாகிஸ்தான் வர்த்தகம் :** வர்த்தகத்தைப் பொறுத்த மட்டிலும் 1948ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் முதல் தேதி முதல் பாகிஸ்தான் அந்நிய நாடாகக் கருதப்பட்டது. மிகவும் தேவையான பொருள்களைச் சுருங்கியகால வரையறையுள் மாற்றிக் கொள்ளும்படியாக 1948ஆம் ஆண்டு மே மாதம் ஏற்பட்ட இந்தோ-பாகிஸ்தான் உடன்படிக்கை கூறியது. அதன்படி இந்தியா வழங்கிய பொருள்கள் : நிலக்கரி (23 லட்சம் டன்), துணியும் நூலும் (4 லட்சம் டன்), சணல் உற்பத்தி (50,000 டன்), இரும்பு, எஃகு (80,000 டன்), தாவர எண்ணெய்கள். பாகிஸ்தான் கொடுத்தவை: சணல் (50 லட்சம் சிப்பம்), பருத்தி (6·5 லட்சம் சிப்பம்), உணவுதானியம் (1·75 லட்சம் டன்). 1949ஆம் ஆண்டு ஜூன் மாதம் இந்த ஒப்பந்தம் புதுப்பிக்கப்பட்டது. ஆயினும், இரு நாடுகளுக்கும் இடையே ஏற்பட்ட அனேக பூசல்களால் இதைத் தொடர்ந்து நடத்த இயலவில்லை. 1949-ல் இந்தியா,

ரூபாயின் மதிப்பைக் குறைத்தது. ஆயினும், பாகிஸ்தான் டாலர் மதிப்புக்குத் தக்க அளவில் தங்கள் நாணயத்தை வைத்ததால் பாகிஸ்தானத்துப் பொருள்களின் விலை கூடுதலாக இருந்தது. மேலும், இந்தியக் கொள்முதலார்கள் (Indian buyers) பாகிஸ் தானுக்கு அதிகப் பணம் கொடுக்க வேண்டியேற்பட்டது. இதனால் இந்தியா, பாகிஸ்தான் ஏற்றுமதியையும், இறக்குமதியை யும் தடைசெய்தது. இதன் விளைவாக, இந்தியச் சணல் தொழி லுக்கான மூலப்பொருள் பாகிஸ்தானிலிருந்து வருவது நின்று போய்ச் சணல் தொழிலில் பெரும் தடங்கல் ஏற்பட்டது.

வர்த்தக சம்பந்தமேற்படுத்திக் கொள்ள வேண்டுமென்ற எண்ணத்துடன் 1950ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் 21ஆம் தேதி இரு நாடுகளுக்கிடையே ஒப்பந்தம் முடிவாயிற்று. செலாவணி விகிதம், பண்டங்களின் போக்குவரத்து, இவைகளைப் பற்றி முடிவு செய்யாவிட்டாலும், இந்திய ரூபாய்க் கணக்கில் ஏற்றுமதி இறக்கு மதிகளுக்கு இடையேயுள்ள பண வித்தியாசத்தை ஒன்றிற் கொன்று கொடுப்பதென முடிவு செய்யப்பட்டது. இந்த ஒப்பந் தத்தின் அடிப்படை என்னவெனில், இந்தியச் சணல் சாலைகளும், பாகிஸ்தான் சணல் போர்டும் தம்மிடையே ஒப்பந்தம் செய்து கொண்டன. அதன்படி 8 லட்சம் சணல் சிப்பங்களை இந்திய ரூபாயின் கணக்கில் பாகிஸ்தான் இந்தியாவுக்கு விற்றது. இத் தொகையைப் பாகிஸ்தான் இராச்சிய பாங்கில் வரவு வைத்து, இதன் மூலமாக இந்தியாவிலிருந்து குறிப்பிட்ட உற்பத்தி செய்யப் பட்ட பொருள்களை விற்க இந்தியா முன் வந்தது. சணல் பொருள்கள் 20,000 டன், பருத்தி ஆடைகள் 45,000 சிப்பங்கள், கடுகெண்ணெய் 7,000 டன், எஃகு 5,000 டன் இவைகளே விற்கப்பட்டன.[1] பாகிஸ்தான் ஒப்பந்தத்தில் கண்ட காலவரை யறையுள் சணல் உற்பத்திப் பொருளைக் கொடுக்க முன் வராத தால், இந்தியாவிலிருந்து பொருள்கள் ஏற்றுமதியாவதும் சற்று நிதானமாகவே நடந்தது. இவ்வாறு இருப்பினும், இந்தியாவுக்கும் பாகிஸ்தானுக்குமிடையே நடந்த வர்த்தகம், ஏப்ரல் முதல் செப்டம்பர் 1950 வரை ரூ. 43 கோடியாகும். (இறக்குமதிகள் ரூ. 24 கோடி; ஏற்றுமதி ரூ. 19 கோடி.)

1950ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் 30ஆம் தேதி இந்த ஒப்பந்தம் முடிவடைந்தது. இதற்கிடையில் பாகிஸ்தான் பன்னாட்டுச் செலாவணி நிதியில் உறுப்பினராகச் சேர்த்துக் கொள்ளப்பட்டது. அது தன்னுடைய ரூபாயின் மதிப்பு இவ்வளவு என்று நிதிக்கு அறிவித்தது கொரியாப் போரின்

1. ரிஸர்வு பாங்கியின் செலாவணி, பாங்கு அறிக்கை 1950-51, பாரா 77.

காரணமாக, உலகில் சணலினல் தயாரிக்கப்பட்ட கோணிப்பைகளுக்கு அதிகப்படியான கிராக்கி ஏற்பட்டது. அதனால் இந்தியாவில் மூலப் பொருளில்லாது பாகிஸ்தானை அணுக வேண்டிய அவசியம் ஏற்பட்டது. இந்த நிலைமையின் காரணத்தால், இந்தியா போதிய ஆக்கப்பொருள்களுக்காக வேண்டிப் பாகிஸ்தானுடன் பேச்சுவார்த்தைகள் நடத்தத் தொடங்கியது. 1951ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் 25ஆம் தேதி இவ் விரண்டு நாடுகளுக்கு மிடையே ஓர் ஒப்பந்தம் கையெழுத்தாயிற்று. அதன்படி கோட்டா (quota) முறையில் 35 லட்சம் டன் சணல் நார் சிப்பங்களும், 7·7 லட்சம் டன் உணவுப் பொருள்களும் பாகிஸ்தான் கொடுக்க முன் வந்தது. இதற்குப் பதிலாக, இந்தியா 21 லட்சம் டன் நிலக்கரியும், 75,000 சிப்பங்கள் மில் துணியும், 15,000 பருத்தி நூல் சிப்பங்களும், 62,000 சணல் உற்பத்திச் சிப்பங்களும் ஏற்றுமதி செய்ய ஒத்துக்கொண்டது. இரு நாடுகளுக்கும் இடையே வர்த்தகத் தொடர்பு மறுமுறை ஏற்பட்டது. ஆயினும், இதன் காரணமாகப் பாதக வாணிகக் கொடுப்பல் நிலையே ஏற்பட்டது எனலாம். இறக்குமதி செய்யப்பட்ட சணல் நாரின் விலை அதிகமாக இருந்ததாலும், இந்த ஏற்றுமதிப் பொருள்களான மில் துணிகளுக்கும் இதரவைகளுக்கும் பாகிஸ்தானில் போதிய கிராக்கி ஏற்படாத காரணத்தாலும் இந்திய ஏற்றுமதி சரிந்தது. அயல்நாட்டுக் கொடுப்பல் நிலையின்கீழ்ப் பாகிஸ்தான் நடப்புக் கணக்கின்படி 1951-ல் ரூ. 46·9 கோடி இந்தியாவின் பாக்கியாக நின்றது. 1952-ல் பாகிஸ்தானிலிருந்து சணல்நார் கொள்முதல் ரூ. 39 கோடி அளவில் குறைக்கப்பட்டது. 1951-ல் ரூ. 10 கோடிக்கு உணவுப் பொருள்கள் கொள்முதல் செய்யப்பட்டன. அடுத்த ஆண்டிலிருந்து இது அடியோடு நிறுத்தப்பட்டது. 1952-ல் இந்தியா செய்த ஏற்றுமதிகளாகிய நிலக்கரி, சணல் உற்பத்திகள், பருத்தி ஆடைகள், புகையிலை இவைகளில் அதிகப்படியான அளவு அனுப்பி அயல்நாட்டு வாணிகக் கொடுப்பல் நிலையில் ரூ. 32 கோடி உபரித்தொகையை இந்தியா பெற்றது. இதை அடுத்து வரும் அட்டவணை கடல், நிலம், ஆகாய மார்க்கமாக ஏற்றுமதி, இறக்குமதி செய்யப்பட்ட முக்கியமான பொருள்களைக் குறிப்பிடுகிறது. பாகிஸ்தானுக்கும் இந்தியாவுக்கும் இடையே நடந்த வர்த்தகத்தைக் காட்டும்[1] அந்த அட்டவணையில் உள்ள எண்கள் லட்சம் ரூபாய் அளவில் கொடுக்கப்பட்டுள்ளன.

**10. காமன்வெல்த் நாடுகளுடன் நடைபெற்ற வர்த்தகம் :** பின்வரும் இரண்டாவது அட்டவணை காமன்வெல்த் நாடுகளுடன்

1. செலாவணி நிதி அறிக்கை, 1952-53, பக். 200, 1953-54, பக். 200, 1954-55, பக். 200.

நடந்த வியாபாரத்தைக் குறிப்பிடுகிறது.[1] ஏற்றுமதியும் இறக்குமதியும் அதிகரித்துக்கொண்டு வருகின்றது. 1954-55-ல் இறக்குமதி குறைந்து ஏற்றுமதி அதிகரித்துள்ளது. கனடா, ஆஸ்திரேலியா, நியுஜீலந்து, ட்ரினிடாட், டோபேகோ, பிரிட்டிஷ் கயாநு, பிஜித் தீவுகள், ஆங்கிலோ எகிப்திய சூடான், தென் ரொடீஷியா, நைஜீரியா, டாங்கனீகா ஆகிய நாடுகளால், நம் நாட்டின் ஏற்றுமதிகள் அதிகரித்தன. இறக்குமதிகளின் கூடுதலுக்கான காரணம் சைப்ரஸ், இலங்கை, டாங்கனீகா, மலேயா பெடரேஷன் நாடு இவைகளாம். ஏற்றுமதியிலும், இறக்குமதியிலும் இங்கிலாந்து தலைமை இடம் பெறுகிறதென்பதில் ஐயம் ஏதும் இல்லை.

**இந்தியா-பாகிஸ்தான் வர்த்தகம்**

| | 1948-49 | 1951-52 | 1952-53 | 1953-54 | 1954-55 |
|---|---|---|---|---|---|
| **ஏற்றுமதிகள் :** | | | | | |
| பழங்கள், காய்கறிகள், வாசனைத் திரவியங்கள் | 417 | 973 | 258 | 16 | 31 |
| புகையிலை உற்பத்திகளும், தயாரிப்புகளும் | 600 | 700 | 234 | 7 | 26 |
| நிலக்கரி | 178[2] | 236 | 322 | 274 | 254 |
| பருத்தி நெசவினங்கள் | 2198 | 370 | 464 | 48 | 220 |
| சணல் உற்பத்திகள் | 551 | 438 | 307 | 4 | 4 |
| | 7501 | 4526 | 3110 | 801 | 977 |
| **இறக்குமதிகள் :** | | | | | |
| சணல்நார் | 7124 | 6708 | 1648[3] | 1432 | 1300 |
| பருத்தி | 1654 | 7 | ... | 4 | 2 |
| உணவுப்பொருள் | 471 | 1268 | 126 | 62 | 108[2] |
| | 10,929 | 8750 | 2188[2] | 1930 | 1938 |

1. எண்கள் கோடிக் கணக்கில் கொடுக்கப்பட்டுள்ளன. (அகௌண்ட்ஸ் ரிலேடிங் டு பாரின் டிரேட், மார்ச்சு 1955)

2. அரை குறையான தகவல். 3. தற்காலிகமானவை.

இந்தியா—காமன்வெல்த் நாடுகளுக்கிடையே நடந்த வியாபாரம்

| | 1951-52 | 1952-53 | 1953-54 | 1954-55 |
|---|---|---|---|---|
| **இறக்குமதிகள் :** | | | | |
| மொத்தம் ... | 874·94 | 635·49 | 542·30 | 610·59 |
| காமன்வெல்த் ... | 293·33 | 252·99 | 259·90 | 261·34 |
| | 33% | 40% | 47% | 43% |
| **ஏற்றுமதிகளும் மறு ஏற்றுமதிகளும் :** | | | | |
| மொத்தம் .. | 701·75 | 553·77 | 515·69 | 572·30 |
| காமன்வெல்த் ... | 365·13 | 263·36 | 267·15 | 318·69 |
| | 52% | 47% | 51% | 56% |

**11. இந்திய - சோவியத் வர்த்தகம்:** கொள்கைகளில் வேறுபாடு இருப்பினும்கூட, அதைக் கருதாது நல்லெண்ணத்துடன் வர்த்தகத் தொடர்பு கொள்ள இந்தியா விழைகிறதென்பதில் ஐயமில்லை. ரஷ்ய நாட்டிற்கும் இந் நாட்டிற்குமிடையே வர்த்தக ஒப்பந்தம் ஏற்பட்டுள்ளதை இதன்மூலம் நாம் அறிவோம். இந்தியா-சோவியத் ஒப்பந்தம், 1953ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் ஏற்பட்டது. அதன்படி இந்தியா, ரஷ்யாவிற்குச் சணல் உற்பத்திகள், தேயிலை, காப்பி, அவலரக்கு, மிளகு, வாசனைத் திரவியம், கம்பளி, பதனிட்ட, பதனிடாத்தோல், காய்கறிகள், இவைகளை ஏற்றுமதி செய்யும். ரஷ்யா இந்தியாவிற்குக் கோதுமை, பார்லி, சுத்தப்படுத்தப்படாத கனிஜ எண்ணெய்ப் பொருள்கள், மரம், காகிதம், இரும்பு எஃகுச் சாமான்கள், ரசாயனங்கள், சாயச் சாமான்கள், மருந்துத் தயாரிப்புகள், பேசும் படத்திற்கான பிலிம் நாடா, மற்றும் அநேக விவசாய, மின்சார, சாலையமைக்கும், சுரங்க இயந்திரங்களையும் அனுப்பும். இவ்வியந்திர சாதனங்களுக்கான பணியாற்றும் வசதியைத் தருவதற்குக் கூட ரஷ்யா சம்மதித்துள்ளது. இப் பண்டமாற்று முறை முதல் 5 ஆண்டுகள் வரை நீடிக்கும்.

**12. இந்தியா-சீனு வர்த்தகம்:** 1954ஆம் ஆண்டு அக்டோபர் மாதத்தில் இந்தியாவும், சீனுவும் பரஸ்பரம் வர்த்தக ஒப்பந்தம்

செய்துகொண்டன. ஆரம்ப காலத்தில் இவ்வொப்பந்தம் இரண்டாண்டுகள் நீடித்து வருவதென முடிவாகிறது. கணக்குத் தீர்வை, ரூபாயிலும் பவுனிலும் முடித்துக் கொள்ள உடன்பட்டன. நூற்றுக்கு மேற்பட்ட பண்டங்கள் குறிப்பாக, சைக்கிள், தையல் மிஷின், பம்பு, டயர், டியூப், மோட்டார், பருத்திச் சணல் நெசவுகள் ஏற்றுமதியாயின. சீனு செய்த ஏற்றுமதி இயந்திரத் தளவாடங்கள், இரசாயனம், மருந்துச் சாமான்கள், காய்கறித் தயாரிப்புகள் முதலியன.

**13. வர்த்தக ஒப்பந்தங்கள் :** இவைகளின் அமைப்பையும், போக்கையும் கொண்டு, அண்மை ஆண்டுகளில் நடந்த வர்த்தகத்தை ஆய்ந்தால், கீழ்க்கண்ட முடிவுகளைப் பெறலாம். இந்தியாவிற்கு'அநேகமாகப் பாதக வாணிகக் கொடுப்பல் நிலையும், டாலர் பஞ்சமும், இறக்குமதிகளில் மிகவும் தவிர்க்க வியலாப் பொருள்களுக்கு முதலிடம் கொடுத்திருப்பதையும் காணலாம். குறிப்பாக, நாட்டின் பொருள் வளர்ச்சியை முன்னிட்டும், உணவுப் பஞ்சத்தை யகற்றவும், இவைகளுக்கு முதலிடம் கொடுக்கப் பட்டன. அண்மையில் நடந்த வர்த்தக ஒப்பந்தங்களின் பொது நோக்குகள் : (1) குறைவான வழங்கு பொருள்களைச் சீராகக் கிடைக்கும்படி செய்தல், (2) தேவைக்கேற்பச் செலாவணி கிடைக்காத நாட்டுடன் வர்த்தகத்தைக் குறைத்து, கூடிய வரையில் எளிதில் கிடைக்கும் நாடுகளிலிருந்து கொள்முதல் செய்தல், (3) இந்தியப் பொருள்களுக்குத் தக்க அயல் நாட்டுச் சந்தையைக் காணல். ஜெர்மனி, ஜப்பான், கிழக்கு ஐரோப்பிய நாடுகள், ரஷ்யா, எகிப்து, அர்ஜண்டைனு, ஆஸ்திரேலியா, ஸ்வீடன், ஆப்கனிஸ்தான், ஈரான் முதலிய நாடுகளுடன், குறுகிய கால ஒப்பந்தத்திலும் பண்டத்திற்குப் பண்டம் மாற்றம் செய்யும் இருமுனை வர்த்தக ஒப்பந்தங்களிலும் இந்தியா கையெழுத்திட்டது.

பெரிய மந்த காலத்திலிருந்து வர்த்தக ஒப்பந்தம் செய்து கொள்ளுவது வழக்கமாகி விட்டது. அநேக நாடுகள் பொருளாதார ஒதுக்க முறையைக் (economic isolation) கையாண்டு அதன் விளைவாகச் சுங்கவரித் தடைகளை யெழுப்பினர். கோட்டா (quota) முறையைக் கையாண்டனர். மற்றும் சில நாடுகள் மிகவும் கண்டிப்பான அயல் நாட்டுச் செலாவணி விநியோகமும் செய்தன. ஐரோப்பிய நாடுகள் செலாவணியின்றியும், பண்ட மாற்று வசதிகளின்றியும் தவித்தன. இவற்றினுல் அயல் நாட்டு வர்த்தகம் தங்கு தடையின்றி நடக்கவில்லை. மிகவும் அவசியமான பண்டங்களுக்குத்தான் இந்த ஒப்பந்தப்படி போக்குவரத்து

நடைபெற்றுவந்தது. அவற்றிற்கான கொடுக்கல் வாங்கல்களை அவ்வப்போது முடிவு செய்தனர்.

**14. ஒட்டாவா ஒப்பந்தம் :** ஆங்கில ஆட்சிக்குட்பட்ட நாடுகள் 1932ஆம் ஆண்டு ஜூலை, ஆகஸ்ட் மாதங்களில் கூடிச் சலுகைப் பொருள்களைப் பரஸ்பரம் ஏற்றுக் கொண்டு ஒப்பந்தம் செய்துகொண்டன. இதன் முடிவே பேரரசுச் சலுகை (Imperial Reference) என்று கூறப்பட்டது. பேரரசின் உறுப்பினர்களுக்கிடையே ஏற்படக்கூடிய வர்த்தகத்தில், சலுகைகள் காட்டச் சுங்க வரியைக் குறைத்தனர். இந்திய அரசினரும், ஆங்கிலேய அரசும் ஒப்பந்தம் செய்துகொண்டபடி 1933ஆம் ஆண்டு ஜனவரி மாதம் முதல் தேதி முதல் இந்தியா, சிலவகை மோட்டார் சாதனங்களுக்கு $7\frac{1}{2}\%$ தள்ளுபடியும், மற்றும் சிலவற்றிற்கு 10% தள்ளுபடியும் கொடுத்தது.

பேரரசின் சலுகை முறையை இந்திய மக்கள் கட்டோடு எதிர்த்தனர். ஏனெனில் இந்தியா எந்நெந்தக் காலமும் ஆங்கில நாட்டிற்கு அடிமையாக இருப்பதோடு, புதிய மார்க்கெட்டுகளில் நுழையமுடியாமலும், இதர நாடுகளிலிருந்து மலிவாகக் கிடைக்கும் பொருள்களுக்கு மாற்றாக, வேறுபொருள் கொடுக்க முடியாமலும் போய்விடுகிறது எனக் கூறினர். ஒட்டாவா ஒப்பந்தத்தினால் எவ்வகையான பயன் கிடைக்கும் என்பது பெரும் பிரச்சினையாக இருந்தது. ஆளிவித்து, கம்பளம், ஜமக்காளம், அரிசி போன்ற ஏதோ சில பொருள்களுக்குத்தான் இந்த உடன்படிக்கையால் ஆதாயம் கிடைத்தது. 1937-ல் பர்மா இந்தியாவினின்று பிரிந்தவுடன் தேக்கு, அரிசி, ஈயக்கட்டிகள், பாரபின் மெழுகு (paraffin wax) போன்ற பொருள்கள் அந்தச் சலுகையினின்றும் நீக்கப்பெற்றன. ஒட்டாவா ஒப்பந்தம் உருவாகா திருந்தாலும் கூட, இங்கிலாந்துடன் இந்திய வர்த்தகம் தொடர்ந்து நடந்திருக்குமென்று கூறவும் வேண்டுமோ? பிரிட்டிஷ் நாட்டுப் பருத்தித் தொழில் இந்திய நாட்டின் பருத்தித் தொழிலுக்கான தீர்வையை அறவே நீக்கி, அதை இறக்குமதி செய்வதில் ஈடுபட்டிருந்தது. இது ஒரு சான்றாகும். இரண்டாவதாக, இந்திய நாடு ஆங்கில நாட்டிற்கு வாணிகக் கொடுப்பல் நிலைக்கெனத் தரவேண்டிய பணமும், மற்றும் நாடாளுபவரானதால் அதற்கான செலுத்துதல்களையும் கொடுக்க வேண்டிய காரணத்தால், இந்தியா ஆங்கில நாட்டுடன் வர்த்தகம் செய்துதான் ஆகவேண்டியேற்படுகிறது. ஒட்டாவாச் சலுகைகளினால் இந்தியாவைவிட இங்கிலாந்துதான் மிகவும் அதிக லாபம் பெற்றது என்பதில் ஐயமில்லை. ஒரு சில இந்தியப் பண்டங்களுக்குத்தான் சலுகைகள் கிடைத்தன.

ஆயினும், ஆங்கில நாட்டு 162 பொருள்கள் சலுகை அடைந்தன எனக் கூறத் தேவையில்லை. இதற்கெனத் தூதராகச் சென்ற இந்தியப் பிரதிநிதிக் குழு இந்திய வர்த்தக, வாணிக விவசாயப் பகுதிகளின் உண்மையான உறுப்பினரல்லர் என இந்திய மக்களால் கூக்குரல் எழுப்பப்பட்டது. 1936ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் 30ஆம் தேதி இந்த ஒப்பந்தத்தை இந்தியப் பாராளுமன்றம் வேண்டாமென்று முடிவாக்கியது.

**15. மோடி-லீஸ் உடன்பாடு (பம்பாய்-லங்காஷயர்) பருத்தி நெசவு உடன்படிக்கை:** சர் வில்லியம் கிளேர் லீஸ் என்பவர் தலைமையின்கீழ் ஆங்கில நெசவாளர் குழு ஒன்று இந்தியாவிற்கு வந்து 1933ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் பம்பாய் நெசவாலை உரிமையாளர்கள் சங்கத்தின் தலைவரான திரு. எச். பி. மோடி அவர்களுடன் பேச்சுவார்த்தைகள் நடத்தினர். இதைத்தான் மோடி-லீஸ் உடன்பாடு எனக் கூறுகிறார்கள். இந்த ஒப்பந்தப்படி பருத்தி நூல்களுக்கும், செயற்கைப் பட்டிற்கும் இறக்குமதித் தீர்வை மிகவும் குறைவாக்கப்பட்டது. இதற்குக் கைமாறாக ஆங்கிலப் பேரரசு நாடுகளில் ஆங்கிலச் சரக்கிற்குக் காட்டப்படும் சலுகை இந்தியாவிற்கும் காட்டப்படும். மேலும் இந்தியாவிற்கும் கோட்டாமுறை வைக்கப்படும். இந்திய நாட்டுப் பருத்தியை ஆங்கில நாட்டு ஆலைகளில் உபயோகிக்கும்படி வேண்டிய முயற்சிகள் செய்வதாக இந்தக் குழுவினர் உறுதியளித்தனர். 1935ஆம் ஆண்டு டிசம்பர் 31ஆம் தேதி வரை இந்த ஒப்பந்தம் அமலிலிருந்தது.

**16. இந்திய - ஆங்கிலத் துணை வர்த்தக உடன்படிக்கை, 1935:** பம்பாய்-லங்காஷயர் ஒப்பந்தம் முடிவுபெற்று, 1935ஆம் ஆண்டு ஜனவரி மாதம் இந்திய-ஆங்கிலேய வர்த்தக உடன்படிக்கையாக அமைந்தது. இந்த ஒப்பந்தப்படி இந்தியத் தொழில்கள் பெறும் காப்புத் தொகையை மீறி ஆங்கில நாட்டில் உற்பத்தி செய்யப்பட்ட பொருள்கள் மீது வரிவிதிப்புச் செய்தல் கூடாது. இந்தக் கோட்பாட்டிற்கிணங்கி ஆங்கில நாட்டு உற்பத்திப் பொருள்களின் மீது குறைவான தீர்வையை விதிக்க வேண்டும் என முடிவு செய்யப்பட்டது. ஒரு இந்தியத் தொழிலுக்குத் தீர்வை விதிப்புப் போர்டு (Indian Tariff Board) வசதி கொடுக்க முன்வரின், ஆங்கில நாட்டிலுள்ள அதே இயந்திரத் தொழிலின் அபிப்ராயத்தைக் கோரவேண்டுவதும் அவசியம் எனப்பட்டது. இந்தியாவில் எந்தப் பிரிட்டிஷ் சரக்குகளுக்குப் பேரரசுச் சலுகைகள் காட்டப்பட்டனவோ, அவற்றின் உற்பத்தியில் ஈடுபடுத்த இந்திய மூலப் பொருள்களையும், பகுதி உற்பத்திப்

பொருள்களையும் கொள்முதல் செய்ய இங்கிலாந்து ஏற்றுக் கொண்டது. இந்தியப் பருத்தியைப் பெரிய அளவில் இங்கிலாந்தில் உபயோகிக்க இந்தியாவினின்று தீர்வையின்றி இங்கிலாந்து தொடர்ந்து வாங்கிக் கொள்ள ஆரம்பித்தது. இவ் வொப்பந்தம் பயனற்றதென்றும் இது ஒருதலைப்பட்சமுள்ளதென்றும், இந்தியா பெரும் பொறுப்புகளை ஏற்றுக்கொண்ட போதிலும், இங்கிலாந்து பயனற்ற வாக்குறுதிகளையே அளித்தது என்றும் பொதுமக்கள் குறை கூறினர்.

**17. இந்திய-ஆங்கில வர்த்தக ஒப்பந்தம் (1939):** புதிய ஒப்பந்தப்படி 1939 மார்ச்சு முதல் ஆங்கில நாட்டிலிருந்து இறக்குமதியாகும் ரசாயனம், வர்ணங்கள், துணிகள், துண்டுகள், கம்பளம், தையல் மெஷின் போன்ற ஆங்கில நாட்டுப் பொருள்களுக்கு 10% தள்ளுபடிச் சலுகையும், மோட்டார், மோட்டார் சைக்கிள், ஸ்கூட்டர், பஸ்கள் இவைகளின்மீது $7\frac{1}{2}$% தள்ளுபடிச் சலுகையும் காட்டப்பட்டன. அதற்கீடாக இங்கிலாந்து அநேக சலுகைகளைக் கொடுத்தது. (1) எலும்புகள், ஆளி விதைகள், ஆமணக்கெண்ணெய் வித்துக்கள், நிலக்கடலை, சோயா அவரை, பதனிடப் பெருத் தோல், கயிறு, நூல், வாசனைத் திரவியங்கள் இவைகளுக்குச் சலுகை அளித்துப் பெறுமான விகித வரி (ad valorem) ஐ 10% அளித்தனர். (2) பாரபின் மெழுகு, எள்ளெண்ணெய், ஆளிவிதையெண்ணெய், கடலையெண்ணெய், நூல்சரடு, கயிறு, சணல் உற்பத்தி இவைகளின்மீது சலுகை போன்று 15% தள்ளுபடி அளித்தனர். (3) கயிற்றுப் பாய்கள், கித்தான்கள், அலகுகள் இவைகளின்மீது சலுகை போன்று 20% தள்ளுபடி செய்தனர். (4) குறிப்பிட்ட விகிதத்தில் சலுகைகள், மெக்னீஷியம் குளோரைட், (மீது 1 ஷில்லிங் அந்தர் வெயிட்டின் எடைக்கு) கையினால் தயாரித்த பின்னலாலான தரை விரிப்புகள், கம்பளங்கள் முதலியன வற்றின்மீது (கெஜத்திற்கு 4ஷி. 6 பெ. தள்ளுபடி) காப்பி (9 ஷி- 4பெ. அந்தர் வெயிட்டிற்கு) தேயிலை (2 ஷி. பவுண்டின் எடைக்கு) அரிசி ($\frac{1}{2}$ பென்ஸ் 1 பவுண்டின் எடைக்கு) ஆகியவைகளுக்குக் கொடுத்தது. மற்றும் சில பொருள்கள் தீர்வையின்றி அனுமதிக்கப்பட்டன. அப்ரகம், சணல், அரக்கு முதலியன தொடர்ந்து தீர்வையின்றி இந்தியாவிலிருந்து இறக்குமதியாயின. 1941ஆம் ஆண்டு மார்ச்சு 31ஆம் தேதி வரை வார்ப்பிரும்பின்மீது தீர்வை விதிக்கப்படவில்லை. எஃகு உற்பத்திக் காப்புச் சட்ட (1924)த்தின் கீழ்க் கூறிய வண்ணம், ஆங்கில நாட்டிலிருந்து இறக்குமதி செய்யப்பட்ட எஃகின்மீது வரிவிதிப்பு அதிகமாகவோ, குறை

வாகவோ இருப்பின் அதற்கேற்ப, கொள்கையடிப்படையில், ஆங்கில நாட்டிற்குப் பாதகமாக அமைந்த காரணத்தால், நம் நாட்டிலிருந்து இறக்குமதியான வார்ப்பிரும்பின்மீது தீர்வை போடப்பட்டது. பருத்தி நெசவுப் பொருள்களை இங்கிலாந்தி லிருந்து இறக்குமதி செய்வதற்கு ஏற்ப, நம் நாட்டின் பருத்தி மீது சரிவுமுறைத் தீர்வையிடப்பட்டது. மேலும், ஒப்பந்த ஷரத்துக் களில் அதிகம் விரும்பப்படும் நாடு என்ற ஷரத்தின் கீழ் இந்தியா வுக்கும், இதர பிரிட்டிஷ் பேரரசு நாடுகளுக்கிடையும் ஒப்பந்தம் ஏற்பட்டது.

இந்தப் புதிய உடன்படிக்கையை இந்திய நெசவுத் தொழி லாலும், இதர வர்த்தகங்களாலும் ஏற்றுக்கொள்ள முடியவில்லை. இந்திய பாங்கு, இன்சூரன்ஸ் கப்பல் வர்த்தகம் இவைகளில் ஓர் வஞ்சனையான கொள்கைகளை ஆங்கில வர்த்தகர்கள் கடைப் பிடித்தனர். இங்கிலாந்திற்குக் காண்பிக்கப்பட்ட சலுகைகள் அதற்கு லாபமுடையதாக அமைந்திருந்தன. ஆயினும், இந்தியா விற்குப் பயனுள்ள செயல் ஒன்றும் அமையவில்லை. மேலும் ஐரோப்பிய நாடுகளுடன் இருதுறைப் பண்ட விற்பனையைச் செய்ய இந்தியா இவைகளுக்குக் கொடுக்கக்கூடிய பண்டங்கள் ஏதும் இல்லையெனலாம். இங்கிலாந்திற்கு அனுப்பப்பட்ட பண்டங்களில் குறிப்பாகச் சணல் யுத்தத்திற்கும் மற்றும் இதர வர்த்தகத்திற்கும் மிகவும் பயன்பட்டது. இந்தியப் பருத்தி, சரிவு விலைவிகிதப் பட்டியலின்கீழ் லங்காஷயர் பருத்தி நெசவாலை களுக்கே பயன்பட்டன. வர்த்தக ஒப்பந்தத்தின் விளைவுகளை இங்கு மதிப்பிடுவது சற்றுக் கடினமெனலாம். இது சம்பந்தமான வர்த்தக ஆவணங்கள் ஆறு மாதங்களுக்கே கிடைத்துள்ளன. அதன்பின்னர், இரண்டாவது உலகப் பெரும்போர் நிகழ்ந்தது. ஏற்றுமதி இறக்குமதிக் கட்டுப்பாடுகள் நேர்ந்ததால் சலுகை களுக்கு முற்றுப்புள்ளி யிடப்பட்டது.

**18. இந்திய - ஜப்பானிய வர்த்தக உடன்படிக்கைகள் :** இந்தியாவிற்கும் ஜப்பானுக்குமிடையே நடந்த வர்த்தகம் 1904ஆம் ஆண்டு இந்திய ஜப்பானிய மாநாட்டுக் கொள்கைகளை அனுசரித்து இருந்தன. 1933ஆம் ஆண்டு ஏப்ரல் மாதம் இந்தியா மேற்படி கொள்கையை நிராகரித்தது. ஜப்பான் அதிகம் விரும்பப்பட்ட நாட்டின்கீழ் அமைந்திருந்தபோதிலுங்கூட இந்திய நெசவுத் தொழில் இதன் போட்டியினால் சின்னாபின்னமாயிற்று. ஆயினும் ஜப்பான்மீது எந்தவிதமான நடவடிக்கையும் இந்தியாவினால் எடுக்க முடியவில்லை. ஆங்கில நாடு நீங்கலாக, இதர அயல்நாடு கள் (ஜப்பான் உள்பட) செய்த பருத்தி நெசவுத் துணிகளின்மீது

75% பெறுமான வரிவிகித முறையை அமைத்து, சாதாரண வெள்ளைத் துணிகளின்மீது பவுண்டு ஒன்றுக்கு $6\frac{3}{4}$ அணு வீதம் இட்டது. இதன் விளைவாக, ஜப்பான் நாட்டிலிருந்து வர்த்தகக் குழு ஒன்று வர்த்தகப் பேச்சு நடத்த இந்தியாவிற்கு வந்தது. இதன் முடிவாக ஓர் ஒப்பந்தம் 1934-ல் கையெழுத்தாயிற்று. அதன்படி, இது இரு கூருக விளக்கம் பெற்றது. முதல் பகுதி 'கண்வெண்ஷன்' என்றும் இரண்டாம் பகுதி 'ப்ராட்டோ கோல்' என்றும் பெயர் பெற்றது. கண்வெண்ஷன்படி ஜப்பான் அதிகம் விரும்பப்பட்ட நாடு என்ற கொள்கை மறுமுறையும் ஏற்றுக்கொள்ளப்பட்டது. ஒவ்வொரு நாடும் தனது தொழில் வளர்ச்சிக்கேற்பத் தீர்வை இடுவதற்கு உரிமை உண்டு என்றும், 'என்' நாணயத்திற்கும், ரூபாய் நாணயத்திற்கும், ஏற்படக்கூடிய செலாவணி மாறுதல்களை ஈடு கட்டத் தனிச் சுங்கத் தீர்வை இடலாம் என்றும் முடிவுசெய்யப் பட்டது, ப்ராட்டோ கோல் பகுதியில் ஏற்றுமதி இறக்குமதித் தீர்வைகள் இவ்வளவென்று அறுதியிடப்பட்டன. இந்தியா, ஜப்பானிலிருந்து வரும் சாதாரணப் பருத்தித் துணிகளின்மீது 50% பெறுமான விகித வரியோ, பவுண்டு ஒன்றுக்கு $5\frac{1}{4}$ அணு வீதமோ, இவ் விரண்டில் எது அதிகத் தீர்வையாக அமையுமோ அதையே சுங்க வரியாக விதிக்கவும், மற்றும் இதர துணி வகைகளின்மீது 50% பெறுமான வரிவிதிப்பு முறையையே கையாளலாம் எனவும் முடிவு செய்யப்பட்டது. கோட்டா முறையும் இவைகளுக்கிடையே புகுத்தப்பட்டது. பருத்தி ஆண்டில் ஜப்பான் 10,000 பருத்திச் சிப்பங்களை இந்தியாவிலிருந்து இறக்குமதி செய்தால் அதற்கு ஈடாக இந்தியா 3,250 லட்ச கஜம் ஜப்பான் துணியை வாங்கிக்கொள்ளும். எந்த ஆண்டிலும் ஜப்பானிலிருந்து இறக்குமதியாகும் துணி 4,000 லட்ச கஜங்களுக்கு மேலாக இருக்கக்கூடாது. அவ்வாறு அதிகப்படவேண்டுமானுல், ஆண்டு ஒன்றுக்குப் பத்தாயிரம் பருத்திச் சிப்பங்களுக்கு ஈடாக 15 லட்ச கஜ துணி விகிதத்தில் அமைதல் வேண்டும் என்று முடிவு செய்யப்பட்டது. பலவகைப்பட்ட ஜப்பான் துணிகளை இந்தியா இறக்குமதி செய்ததால் அதற்கான சுங்கவரி விதிப்புகள் கீழ்க்கண்டவாறு வரையறை செய்யப்பட்டன. (1) சாதாரண துணி 45%, (2)கறை போடப்பட்ட துணிகள் 13%, (3) சலவையான வெள்ளைத் துணி 8%, (4) வர்ணத் துணிகள் (சாயம் தோய்க்கப்பட்டது, அச்சிடப்பட்டது, வர்ண நெசவு) இவைமீது 34%. கோட்டா திட்டத்திற்கு எதிராகப் பலத்த எதிர்ப்புகள் ஏற்பட்டன. அநேக சிக்கல்களுக்குக் காரணமாய் இருந்ததாலும் ஒப்பந்தத்தின் பொது நோக்கு பயனற்றுப் போனதாலும் இந்திய நாட்டிற்குப் பெறும் இடையூறு ஏற்பட்டதே

யொழிய ஆதாயம் இல்லை எனலாம்.[1] பென்ட் என்று சொல்லப் படும் குறைவு நீளமுள்ள துணிப் பகுதிகளும், செயற்கைப் பட்டுத் துணிகளும் அவ்வப்போது பெருமளவில் இந்தியாவில் இறக்குமதி யானலும்கூட, இவைகள் கோட்டாப் பகுதிகளில் சேர்க்கப்பட வில்லை. கோட்டா முறையை மீற ஜப்பான் தைத்த உடுப்புக்களை யும், மற்றும் ரெடிமேடு ஆடைகளையும் இந்தியாவில் கொண்டு வந்து குவித்து ஏராளமான செல்வத்தைத் திரட்டியது. மிகவும் விரும்பப்பட்ட நாடு என்ற கொள்கையின்கீழ்க் கண்ணாடிச் சாமான்கள், பீங்கான், காலணிகள், இரும்புச் சாமான்கள், கம்பளி உடுப்புகள், சைக்கிள், குடைகள் இவைகளை இந்தியாவிற்கு அனுப்பி இந் நாட்டில் உள்ள சிறுபான்மைத் தொழில்களை அழித்த தோடு இந் நாட்டின் குடிசைத் தொழிலையும் வளரவிடாமல் தடுத்தது. இந்தியாவிற்கு ஜப்பானின் ஏற்றுமதி நாளுக்குநாள் அதிகரித்தது. ஆயினும், இந்தியா செய்துவந்த ஏற்றுமதிகளான வார்ப்பிரும்பு, சணல், எண்ணெய் வித்துக்கள் ஆகியவை குறைந்தன.

1937ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் 31ஆம் தேதி செய்து கொண்ட ஒப்பந்தப்படி, அதிகம் விரும்பப்பட்ட நாடு என்ற கொள்கையை மேலும் மூன்று ஆண்டுகளுக்கு நீடிப்பது என முடிவு செய்யப்பட்டது. ஆண்டுதோறும் உள்ள அடிப்படைக் கோட்டா 3,250 லட்சம் கெஜங்களிலிருந்து, 2,830 லட்சம் கெஜங் களாகக் குறைக்கப்பட்டது. ஆயினும், 10 லட்சம் பருத்திச் சிப்பங்களை வாங்கிக்கொண்டது. கலர்த்துணி கொள்முதல் 34% லிருந்து 37 ஆகக் கூட்டப்பட்டது. பருத்தி பென்ட் (fents) என்ற குறைவு நீளத் துணிகளை ஆண்டுதோறும் 89,50,000 கெஜம் மட்டும் ஏற்றுமதி செய்ய ஜப்பான் சம்மதித்தது. இதற்காக இந்தியச் சுங்கவரியை 35% பெறுமான வரிக்குமேல் போடாமலிருக்க இந்தியா சம்மதித்தது. புதிய பொறிசெய் தொழில்களுக்கு இந்தச் சலுகை முறை பெரும் இடையூறாக அமைந்ததெனலாம். இதற்குப் பதிலாக ஜப்பானுடன் எல்லாச் சிறுபான்மைத் தொழில்களை யுத்தேசித்தும், நாட்டின் தொழில் வளர்ச்சியை முன்னிட்டும் எல்லா வகைகளிலும் அமைத்துள்ள ஒப்பந்தத்தைச் செய்து கொண்டிருந்தால் நலமாக இருந்திருக்கும். கண்ணாடி உற்பத்தி, பின்னல் துணி உற்பத்தி, எனமல் பூச்சு வேலை, ரசாயனத் தொழிற்சாலைகள் இவைகள் ஜப்பானியத் தொழில்களால் இடை யூறின்றி வளர்ந்திருக்கக்கூடும். பருத்தியைப் பருத்தித் துணி களுக்குப் பண்டமாற்றம் செய்த இம்முறை யாதொரு பலனும் கொடுக்கவில்லை.

1. குறைந்த சுங்கவரியில் தள்ளப்பட்ட இத் துண்டுகள் இந் நாட்டில் இறக்குமதி செய்யப்பட்டன.

1940ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் 31ஆம் தேதியோடு ப்ராடோகோல் (Protocol) உடன்படிக்கை முடிவடைந்தது. ஆங்கில அரசு ஜப்பானுடன் வர்த்தகப் பேச்சுவார்த்தையை 1941-ல் உதறித் தள்ளியது. அதன் பிறகு, இந்திய சுதந்திரம் வந்த பிறகு 1948-ல் தான் மறுமுறை ஒப்பந்தம் செய்துகொண்டது. 1941 முதல் 1948 வரையுள்ள நீண்ட கால இடைவெளிக்குக் காரணம் என்னவெனில், ஜப்பான், ஜெர்மனியுடன் போரில் சேர்ந்து கொண்டு நேச நாடுகளை எதிர்த்ததேயாகும். 1948ஆம் ஆண்டு நவம்பர் மாதம் 8ஆம் தேதி ஸ்டர்லிங் வட்டார ஒப்பந்தம் ஒன்றை ஜப்பானுடன் இந்தியா செய்துகொண்டது. இந்தியா ரூ. 8·8 கோடிக்கு இறக்குமதியையும் ரூ. 5·6 கோடிக்கு ஏற்றுமதியையும் செய்தது. இந்தியா செய்த இறக்குமதியில் இயந்திரங்களும், பருத்தித் துணிகளும், ஏற்றுமதியில், பருத்தி, சணல், இரும்பு ஆகியவைகளும் இடம் பெற்றன. ஆண்டுதோறும் இந்த ஒப்பந்தம் புதுப்பிக்கப்பட்டது.

**19. அயல்நாட்டு வர்த்தகக் கொள்கை :** கொஞ்ச காலமாகவே பாதக வாணிகக் கொடுப்பல் நிலை ஏற்படுவதைக் குறித்து நம்நாட்டு அரசினர் சற்றுத் துணுக்குறுகின்றனர். அமெரிக்காவிடமிருந்து பெற்ற கோதுமைக் கடனாலும், பழைய ஸ்டர்லிங் பாக்கிகள் கூடிய காரணத்தாலும், பாதகக் கொடுப்பல் நிலை ஏற்பட்டது. தொடர்ந்து பாதக வாணிகக் கொடுப்பல் நிலை ஏற்பட்டால் இந் நாட்டின் பொருளாதார நிலைக்கு இது மிகவும் பெரும் சுமையாகு மென்பதில் ஐயமில்லை. இது சம்பந்தமாக இரு முக்கியக் கொள்கைகள் வகுக்கப்பட்டன. (1) ஏற்றுமதி இறக்குமதிக் கட்டுப்பாடு முறைகள். (2) பணமதிப்புக் குறைப்புத் திட்டம். ஏற்றுமதி இறக்குமதிக் கட்டுப்பாடு (கண்ட்ரோல்) சட்டம், 1947-ல் கொண்டுவரப்பட்டது. 1949ஆம் ஆண்டு செப்டம்பர் முதல் பணமதிப்புக் குறைப்பு முறையைக் கையாண்டனர். இறக்குமதிக் கட்டுப்பாடு செய்து அதன் காரணமாகக் கிடைப்பதற்கரிய செலாவணி வட்டாரத்தி லிருந்து தேவைக்குரிய பொருள்களையும் மூலதனப் பொருள் களையும் மட்டிலும் இறக்குமதி செய்து நாட்டின் தேசீய வளர்ச்சிக்கு அடிகோலினர். கிடைப்பதற்கரிய செலாவணிப் பகுதி, எளிதில் தேவைக்கேற்பக் கிடைக்கும் செலாவணிப் பகுதிகளுக்கேற்ப உரிமங்கள் வழங்கப்பட்டன. காலத்திற்கேற்ப, உரிமங்களின் அடிப்படை யிலமைந்த பண்டங்களும், கட்டுப்பாடற்ற பண்டங் களும் மாற்றியமைக்கப்பட்டன. 1948-49-ல் போதிய அளவுக்கு இறக்குமதிக் கட்டுப்பாட்டைத் தளர்த்தினர். இந்நிலை 1949ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் வரை நீடித்ததெனலாம். ஸ்டர்லிங்கு

விடுதலைகள் தோன்றியமையாலும், பண வீக்கத்தின் அழுத்தத்தைத் தடுக்க, முடிந்ததென்பதில் யாதொரு ஐயமில்லை. திறந்த பொது உரிமம் (Open General Licence) 16ஆம் இலக்கமிட்டது, 1949 ஆகஸ்டில் ஏற்படுத்தப்பட்டது. இது கட்டுப்பாட்டின் அடிப்படையில் உருவானது. பொதுவாக நுகர்வுப் பண்டங்களான எண்ணெய்ப் பொருள், துணி, புகையிலை, இவைகளில் இறக்குமதியைப் பாதித்தது. சாயங்கள், ரசாயனங்கள், மருந்துகள், காகிதம் ஒட்டு அட்டைகள், வண்டிகள், மின்சாரப் பொருள்கள், வெட்டுக்கருவிகள், இரும்பு ஆகியவைகளின் இறக்குமதி மிகவும் குறைக்கப்பட்டது. 1949-50-ல் கொண்டு வரப்பட்ட இறக்குமதி குறைப்புக் கொள்கையைத் தொடர்ந்து சில ஆண்டுகளுக்குப் பொருள்களின் இறக்குமதியைக் குறைத்துத் தொழிற்சாலைகளுக்கு வேண்டிய மூலப்பொருள் இறக்குமதியை மட்டும் அனுமதித்தது. 1949ஆம் ஆண்டு செப்டம்பர் மாதத்திற்குப் பிறகு பாகிஸ்தானுடன் நடந்துவந்த நம் நாட்டு வர்த்தகம் திடீரென முற்றுப்பெற்றது. மேற்கூறிய நிலைமைகளால் நமது அயல்நாட்டுச் செலாவணி வகைகளில் பெரிய மாற்றங்கள் ஏற்பட்டன. எனவே, 1950-51-ல் இறக்குமதிகளிலிருந்த கட்டுப்பாடுகள் தளர்த்தப்பட்டன.

இறக்குமதிக் கட்டுப்பாட்டினைத் திடப்படுத்தவும், செம்மையாக்கவும், அநேக முயற்சிகளை அரசினர் 1950ஆம் ஆண்டு ஜூலை மாதத்துக்கு முன்னரே கையாள ஆரம்பித்தனர். இத் துறையில் ஆய்வு செய்ய ஒரு குழுவினரை அரசினர் நியமித்தனர். 1950ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் குழுவினர் பரிந்துரைகளைக் கூறினர். இறக்குமதிக் கட்டுப்பாட்டினை எவ்வாறு சீரிய முறையில் நடத்துவதென அவர்கள் விளக்கமாய்க் கூறியுள்ளனர். அவைகளில் காணப்பட்ட மூன்று முக்கிய பகுதிகள், இறக்குமதிக் கொள்கையில் செலாவணி ஒதுக்கல்கள் சில குறிப்பிட்ட பண்டங்களில் பொது உரிமங்கள் வழங்குதல், நிர்வாக முறைகளும் பழக்கங்களும் ஆகும். இறக்குமதிக் கொள்கை அதனுடைய அடிப்படையில் கீழ்க்கண்ட முறைகளில் அமைய வேண்டும். அவையாவன: (1) ஸ்டர்லிங் விடுத்தல்கள் உட்பட அயல்நாட்டுச் செலாவணி வருமானங்களின் மொத்தத்தில், அரசினர், வாணிகத் துறை இறக்குமதிகளைக் கட்டுப்படுத்துதல், (2) விவசாயம், இயந்திரத் தொழில் ஆகியவைகளில் திட்டப்படி வளர்ச்சியைக் காண, சேர்ந்துள்ள அன்னியச் செலாவணியை ஒழுங்குபெற வழங்கல், (3) முன் கூறியுள்ள கொள்கைகளின்படி, குறிப்பிட்ட சில பொருள்களின் விலைகளில் ஏற்றத் தாழ்வுகள் ஏற்படுவதை மிதப்படுத்துதல்.

விலைகளின் ஏற்றத்தாழ்வுகளை நிலைநிறுத்த ரூ. 400 கோடியை, மிகவும் குறைந்த அளவில் ஒதுக்கி வைப்பதென முடிவு செய்யப் பட்டது. இரண்டு ஆண்டுகளுக்கு இக் கொள்கையை நீடித்தனர். நடப்பிலுள்ள திறந்த பொது உரிமங்கள் முறையைக் காலவரம் பின்றி அமலில் வைப்பது என முடிவாக்கினர்கள். குறிப்பாக, இறக்குமதிகளை எளிதாக்கி, பொதுவான பண்டங்களுக்கு அளிக்கப்படும் முதலிடங்களைத் தேவைக்கேற்ப மாற்றியமைப்பது என முடிவாக்கினர். அத் திட்டத்தை நடைமுறையில் கொண்டு வருமுன் இரண்டாண்டுக் காலத்துக்குக் கீழ்க்கண்ட முறையில் பொருள்களுக்கு முதலிடம் அளிப்பது என முடிவு செய்யப் பட்டது.

அவைகளாவன :

(1) ஆக்கப் பொருள்கள் ; (2) இயந்திரப் பகுதிகளும், இதர உறுப்புகளும் ; (3) விவசாய உற்பத்திக் கருவிகளும், இயந்திரங்களும் ; (4) சமுதாய தனி மனிதன் வாழ்க்கைக்குத் தேவைப்படும் நுகர்வுப் பொருள்கள் ; (5) மாற்றங்களுக்கியைந்த இயந்திரங்கள்; (6) உற்பத்திப் பெருக்கத்துக்கும் விலைக் குறைப்பிற்கும் தேவையான இயந்திர சாதனங்களும், கருவி களும்; (7) புது இயந்திரத் தொழில்களுக்கான இயந்திரங்கள் ; (8) அவசியமற்ற போகப்பொருள்கள். பொதுவாகச் செய்யக் கூடிய இறக்குமதிகளின் காலவரம்பினை, சற்றேறக்குறைய ஓர் ஆண்டாக நிறுவுதல் இன்றியமையாதது என்று குழுவினர் முடிவு செய்தனர். உற்பத்திப் பொருள்கள், கன ரக மின் இயந்திரங்கள் இவைகளுக்கு உரிமம் வழங்கும் காலத்தை மூன்ருண்டுகளுக்கு நீடிப்பதென்று வரையறுக்கப்பட்டது. உரிமம் வழங்கும் முறையைப் பரவலாகவும், கட்டணம் இல்லாத உரிமம் வழங்கு முறையை நீடிக்கவும், தேசங்களுக்கு ஏற்ப உரிமம் வழங்குதலை நிறுத்தி, வட்டாரப் பிரிவின் கீழ் உரிமம் வழங்கவும், இறக்குமதி செய்வதற்குப் புதிதாக வரும், மனுதாரர்களுக்கு உரிமம் வழங்கவும், இறக்குமதிக் கட்டுப்பாட்டு அலுவலகத்தைச் சிறப்பான முறையில் நடத்தவும் ஏற்ற நடவடிக்கைகளை எடுக்க வேண்டுமென இறக்குமதிக் கட்டுப்பாடு பற்றி ஆய்வு நடத்திய குழுவினர் பரிந்துரைத்தனர்.

1951ஆம் ஆண்டு ஜனவரி மாதத்தில், மத்திய அரசினர் தங்கள் தீர்மானப்படி, இக் குழுவினரின் பரிந்துரைகளை ஏற்றுக் கொள்வதென்றும் நாட்டின் இறக்குமதித் தேவைகளை அனுசரித்து, அயல்நாட்டுச் செலாவணி பெறுமுறையை அதிகரித்தும் அதற்கு

இசைந்தபடி, இறக்குமதி முறைகளை வன்மையாக்குவதென்றும், சீரிய முறையில் அமைப்பதென்றும் முடிவு செய்தனர். நீண்டகால உரிமம் வழங்கும் முறையையும் தேவைக்கேற்ற அளவு செலாவணி கிடைக்காத பகுதிகளிலிருந்தும், எளிதில் செலாவணி பெறக்கூடிய பகுதிகளிலிருந்தும், இறக்குமதி செய்யவும், தனிப்பட்ட தேசங்களின் அடிப்படையில் உரிமம் வழங்குதலை நிறுத்தவும் திட்டமிட்டனர். இக் கொள்கையை 1951ஆம் ஆண்டு ஜனவரி, ஜூன் கால வரம்பில் முடிவு செய்தனர்.

இறக்குமதிகளை எளிதாக்கி, அதனால் இயந்திரத் தொழில்களின் நடப்புத் தேவைகளுக்கேற்பக் கொள்முதலைச் சீரமைப்பது என்றும், அதையே வர்த்தகக் கொள்கையாக அமைப்பதென்றும், பொருள் பட்டியல்களில் உள்ளவற்றை மறு நிறுவனம் செய்வது என்றும் முடிவு செய்தனர். இறக்குமதிகளின் செலவு ஏற்றத்தைக் குறைக்கக் கொள்கையில் சில மாறுதல்களைக் கொண்டு வந்தனர். இது 1961ஆம் ஆண்டு ஜூலை, டிசம்பர் மாதங்களில் செய்யப்பட்டு நடப்பில் வந்தது. இதை அடுத்து இறக்குமதிப் பண்டங்களின் எண்ணிக்கையைத் தளர்த்தியும் கட்டணங்கள் வழங்கு முறையைச் சீரமைத்தும் திட்டப்படுத்தினார்கள். எடுத்துக்காட்டாக, 1951-52 ல் மருந்துகள், ரசாயனங்கள் இவைகளுக்கான கட்டணம் இரட்டிப்பாக்கப்பட்டது.

1952-53-ல் இந்திய இறக்குமதியில் ஒரு பிற்போக்கான நிலைமை தோன்றியது. கொரிய யுத்தத்தின் பின் விளைவாகப் பெரும் பண வீக்கம் ஏற்பட்டது. கொள்முதல் செய்பவர்களின் சந்தையில் ஏற்ற நிலை தோன்றியது. ஏற்றுமதி, வளர்ச்சிக்கான அமைப்பாகப் பரிணமித்தது. டாலரற்ற இதர பகுதிகளில், இறக்குமதியின் மேம்பாடு நிலைத்ததெனலாம். டாலர் பகுதிகளிலிருந்து இறக்குமதியை மிகவும் கட்டுப்படுத்தி அதிகத் தேவையுள்ள பொருள்களை மட்டும் கொள்முதல் செய்தனர். இவ்வாறு மிகவும் கண்காணிப்புடன் ஸ்டர்லிங் வட்டாரத்தின் டாலர் இன்மையைக் கட்டுப்படுத்த முடிந்தது.

உள்நாட்டுத் தேவைகளுக்கு வேண்டிய பண்டங்கள் போக மீதியை முடிந்த அளவு ஏற்றுமதி செய்வதே, ஏற்றுமதிக் கட்டுப்பாட்டின் நோக்கம். கட்டுப்பாட்டினின்று நீக்கம் பெற்ற பண்டங்களும், பொருள்களும் நாளடைவில் அதிகரித்துக்கொண்டே வந்தன. முடிவில் 250 பண்டங்கள் அவ்வாறாகப் பட்டியலினின்று நீக்கமடைந்தன. அவைகளில் மைகா, அரக்கு, கம்பள விரிப்புகள், கம்பளங்கள், கயிறும், கயிற்றுப் பொருள்களும், பதனிடப்பட்ட

பதனிடப்படாத தோல், தேயிலை ஆகியவைகளைச் சிறப்பாகக் குறிப்பிடலாம். கடைசியில் சொல்லப்பட்ட பொருளுக்குக் கோட்டா முறை அமைந்திருந்தது. திறந்த பொது உரிமத்தின் கீழ் இவைகளைத் தங்கு தடையின்றி ஏற்றுமதி செய்யலாம் என ஏற்பாடு செய்யப்பட்டது. கட்டுப்பாடுள்ள பண்டங்களுக்குக் கோட்டா முறையின்படியும், வட்டாரத்தின் அடிப்படையிலும், ஏற்றுமதி செய்ய வசதியமைந்திருந்தது. இவைகளில் மிகவும் முக்கியமான ஏற்றுமதிகள் சணல், பருத்திஉற்பத்திகள் மாங்கனீஸ் இரும்புத்தாது, க்ரோமைட் முதலியன. ஏற்றுமதிக் கட்டுப்பாடு, நாட்டின் தேவைகளைப் பொறுத்து, இப் பண்டங்களின் மீது சிற்சில காலங்களில் மிகவும் கண்டிப்புடனே, அல்லது மிகவும் குறைவாகவோ இருந்தது.

1949ஆம் ஆண்டில் பண மதிப்புக் குறைப்பு ஏற்பட்ட காரணத்தால், டாலர் பகுதிகளிலும், டாலர் அல்லாத இதர பகுதிகளிலும் இந்தியப் பண்டங்களுக்குத் தேவை ஏற்பட்டது. காரணம் என்னவெனில் பணமதிப்புக் குறைப்பில் ஈடுபடா நாட்டில் இந்தியச் சரக்குகள் விலை குறைவாக இருந்தன. அமெரிக்க நாட்டின் வர்த்தகர்களுக்கு இந்தியாவிலிருந்து செய்யப்பட்ட இறக்குமதியினால் அதிகப்படியான ஆதாயம் கிடைத்து, அதன் காரணத்தால் அதிக ரூபாய்களை இந்திய ஏற்றுமதியாளர்களுக்குக் கொடுத்தனர். அநியாய விலை ஏற்றத்தைத் தடுப்பதற்கு அரசினர் ஏற்றுமதிக் கட்டுப்பாட்டை ஆதாரமாகக்கொண்டு தீர்வை விதித்து, குறிப்பாகச் சில பண்டங்களை மட்டிலும் கண்காணித்து வந்தார்கள். கடுகெண்ணெய் மீது பவுண்டு ஒன்றுக்கு 8 அணா வீதமும், கட்டுப்பாட்டின் கீழ்வரும் இரும்பு, எஃகு இவைகளின் மீது 45%, மதிப்பை ஒட்டிய தீர்வையும், இடப்பட்டன. சணல் சாக்கின் மீது தற்போதுள்ள ஏற்றுமதித் தீர்வையாகிய ரூ. 80, ரூ. 350 ஆக அதிகரிக்கப்பட்டது. சணல் வியாபாரத்தில் முன்னதாகவே வர்த்தகம் செய்யும் முறை தடை போடப்பட்டது. இதையடுத்து, 1949ஆம் ஆண்டு அக்டோபர் மாதத்தில் இந் நாட்டின் வருங்கால வர்த்தகத்தின் அமைப்பு எவ்வாறு இருக்க வேண்டும் என்றும், அந்நியச் செலாவணியை எவ்வளவு சிக்கனமாகச் செலவிட வேண்டும் என்றும் நாட்டின் முக்கியத் தேவைக்குரிய பொருள்களை மட்டுமே இறக்குமதி செய்ய வேண்டும் என்றும் வேற்றுமை ஏதும் இன்றி ஏற்றுமதி செய்யப்பட்ட பண்டங்கள் அந்நியச் செலாவணி கிடைப்பதற்கு அரிதான பகுதிகளுக்கு எவ்வகை முறையைக் கையாள வேண்டும் என்றும், எட்டுக் கொள்கைத் திட்டம் ஒன்றை வகுத்தார்கள். முதலில் கூறிய திட்டம் இறக்குமதிக் கட்டுப்பாடாகவும் பின்னர்க் கூறப்பட்ட திட்டம்

ஊக வாணிகத்தை அடக்கி அதன் வழியே விலை ஏற்றத்தைத் தடுப்பதற்காகவும் எடுத்துக்கொள்ளப்பட்ட முயற்சியாகும்.

அதே பண்டங்களைத் திறந்த பொது உரிமத்தின் கீழ் அமைத்தும் உரிமைக் கட்டணம் வழங்கும் முறையை எளிதாக்கியும், பணம் மதிப்புக் குறைப்பு செய்த காரணத்தாலும், 1950 ஆம் ஆண்டு முதல் 6 மாதங்களுக்குள்ளாக ஏற்றுமதித் தொகை பெருகியது. ஆயினும், 1950-51ஆம் ஆண்டில் ஏற்றுமதித் துறையில் இறக்கம் சற்று நிதானமாகவே காணப்பட்டது. இதற்கான காரியங்கள் பல உண்டு. அவையாவன: எளிதான ஏற்றுமதி முறையைக் கைவிட்டுத் தற்காலிக தடை விதிப்பு முறை கொண்டுவரப்பட்டது. அல்லது ஏற்றுமதி முழுவதும் நிறுத்தம் செய்யப்பட்டது; அல்லது ஏற்றுமதிக் கோட்டா முறையைக் கண்டிப்பாகக் கடைப்பிடித்தது. ஆட்டுரோமக் கம்பளி தற்காலிகமாக ஏற்றுமதி செய்வதைத் தடைப்படுத்தினார்கள்.[1] நிலக்கடலை ஏற்றுமதியைத் தடைப்படுத்தினார்கள். இன்னும் சில பண்டங்களின் மீது புதிதாகத் தீர்வை போட்டனர் அல்லது தீர்வை விகிதத்தை அதிகரித்தனர். இந்தக் கட்டுப்பாடுகள் கொரியாப் போரினால் ஏற்பட்ட பிற்கால விலையேற்றத்தை ஈடுகட்ட முடியாத உள்நாட்டுத் தேவைகளை அனுசரித்து வழங்கும் முறைகளைக் கையாளவே, 1951-52-ல் நீடிக்கப்பட்டன. மத்தியதர முரட்டுப் பருத்தி ஆடைகளுக்கும், நிலக்கடலைக்குமுள்ள அயல்நாட்டுத் தேவையை ஈடுகட்டவும், அவற்றின் விலையில் வெளிநாட்டுக்கும், உள்நாட்டுக்கு மிடையே உள்ள பெரும் வேறுபாட்டைக் குறைக்கவும் ஏற்றுமதித் தீர்வைகள் இடப்பட்டன.

1952ஆம் ஆண்டின் மூன்று மாதங்களில் விற்பனையாளர் சந்தையாகத் திகழ்ந்த நம் நாடு, கொள்முதல் செய்வோர் சந்தையாக மாறி அமைந்தது. 1951-லேயே இருந்த இந் நிலை 1952-ல் மிகவும் முக்கியத்துவம் பெற்றது. ஏற்றுமதித் தீர்வையில் மற்றொரு மாறுதலைச் செய்தது. கடுகெண்ணெயின் மீது எட்டணாவாக இருந்த தீர்வை மூன்றணாவாகக் குறைக்கப்பட்டது. சாக்கின் தீர்வை, பாதியாகக் குறைக்கப்பட்டது. பருத்தியின் மேல் 400 ரூபாயாக இருந்த தீர்வை 200 ரூபாயாகக் குறைக்கப்பட்டது. ஆட்டுரோமம், கடலெண்ணெய் மற்றும் இதர வித்துக்கள்மீது இடப்பட்ட தீர்வைமுழுவதும் நீக்கப்பட்டன.

இதுகாறும், திக்கை ஒட்டி இடப்பட்ட கட்டுப்பாடுகளைத் தளர்த்தி, அரசினர் ஏற்றுமதியை அதிகரிக்க முயன்றனர்.

1. இந்தத் தடைவிதிப்பு 1950 ஆம் ஆண்டு நவம்பர் மாதத்தில் நீக்கம் பெற்று 15 மிலியன் பவுண்டுகள் ஏற்றுமதி செய்யலாம் என வரையறுக்கப்பட்டது.

1949ஆம் ஆண்டு ஜூலை மாதம் ஏ. டி. கோர்வாலாவின் தலைமையின் கீழ் ஒரு குழுவினர் நியமிக்கப்பட்டனர். அவர்களது பரிந்துரையாவது : (1) ஏற்றுமதி தடைவிதித்தல், (2) ஏற்றுமதியைப் பாதிக்கும் வரிகளை நீக்கல், (3) ஏற்றுமதிப் பண்டங்களின்மீது, ஊக விற்பனையைத் தடைசெய்தல், (4) ஏற்றுமதிச் சரக்கினை, அதிக அளவில் உற்பத்தி செய்தல். இக் குழுவினரின் பரிந்துரைகளில் பெரும்பாலானவற்றை அரசினர் மேற்கொண்டனர். இதற்கான ஏற்றுமதி ஆலோசனைக் குழு ஒன்றை நியமித்து இது சம்பந்தமான செயல்களைக் கவனித்தனர். ஆறு மாதங்களுக்கு ஒருமுறை கொள்கைகளைப் பரிசீலனை செய்து, சில பண்டங்களை ஏற்றுமதியும், மற்றும் சிலவற்றை, நிலைமையை அனுசரித்து ஏற்றுமதியினின்று நீக்கமும் செய்தார்கள்.

இரு முனை வர்த்தக ஒப்பந்தங்களை அநுசரித்து ஏற்றுமதியை அதிகரித்து, அல்லது குறைத்து வந்தார்கள். ஹவாறு ஒப்பந்தம் பன்னாட்டு வர்த்தகத்தை அனுசரித்து ஏற்பட்டதால், இந்தியா அந்த உடன்பாட்டின்படி அயல்நாடுகளுடன் வர்த்தகப் போக்குவரத்து வைத்துக்கொண்டது.

**20. அண்மையில் ஏற்பட்ட நிலைமை :** அண்மையில் ஏற்பட்ட நிலைமையைச் சுருக்கமாகக் கீழ்வருமாறு விளக்கம் செய்யலாம் : (1) ஏற்றுமதி அளவில் குறைவு, (2) மூலப் பொருள்களின் இறக்குமதிக்காக அயல்நாடுகளை எதிர்ப்பார்த்திருத்தல், (3) டாலர் வட்டாரத்தில் என்றும் நிலையற்ற வாணிகக் கொடுப்பல் நிலையே அமைந்திருத்தல். நம் நாட்டின் அயல்நாட்டு வர்த்தகத்தை ஓரளவு ஐந்தாண்டுத் திட்டங்களின் காலத்தில் சீர்படுத்தலாம் என எதிர்பார்க்கப்படுகிறது. உள்நாட்டில் பருத்தி, சணல், விளைச்சல்களினால், இவ் விரண்டு பொருள்களில் நமது இறக்குமதிப் பளுவை ஒருவாறு எளிதாக்கிவிடலாம். அண்மையில் இந் நாட்டில் உணவுப் பொருள் உற்பத்தி ஏறுமுகமாக இருக்கும் காரணத்தால் முன்னர் உணவுப் பொருள்களுக்காக நாம் அயல்நாடுகளை எதிர்பார்த்த அவ்வளவு அதிகமாக எதிர்நோக்க வேண்டியதில்லை. உணவு நிலைமை தற்பொழுது ஏற்றவும் திருப்தி அளிக்கக்கூடிய நிலைமையில் இருக்கிறபடியால் கட்டுப்பாட்டு முறைகளும், பங்கீட்டுத் திட்டங்களும் நீக்கம் பெற்றன. ஏறத்தாழ, உணவுப் பொருள்கள் இறக்குமதியே இல்லையெனலாம்.

இந்தியாவின் ஏற்றுமதி அளவு, வருங்காலத்தில் அதிகரிக்கும் என்பதில் ஐயமில்லை. பருத்தித்துணி, சணல், நூல் உற்பத்திகள், மாங்கனீஸ் தாது, எண்ணெய்கள், நிலக்கரி, கல்கரி, மிளகு,

புகையிலை, கயிறு, கம்பளிப் பொருள்கள், தையல் இயந்திரம், நெசவு இயந்திரங்கள், மின்விசிறிகள், சைக்கிள்கள், சேமிப்பு மின்கலங்கள், சிறிய இயந்திரக் கருவிகள், வரட்சி செல்கள், சோப்பு, சிமெண்ட், ரசாயனங்கள், காகிதமும், காகித அட்டைகளும் இவைகள் இனி மிக அதிகப்படியான அளவில் ஏற்றுமதியாகும் என எதிர்பார்க்கப்படுகிறது. ஐந்தாண்டுத் திட்டங்களின் இணைப்பினால், இந் நாட்டின் இறக்குமதிக் கட்டுப்பாடு, நாட்டின் தேவைகளையும் அயல்நாட்டுச் செலாவணி கிடைக்கும் தன்மையையும் ஒட்டி அமைந்திருக்கும். எனினும், இயந்திர இறக்குமதி பெரிய அளவில் இரண்டாவது ஐந்தாண்டுத் திட்ட காலத்தில் நடக்கலாம் என எதிர்பார்க்கப்படுகிறது.

**21. நீண்டகால வர்த்தகக் கொள்கையில் பல அங்கங்கள்:** 1949 - 50-ல் ஏற்பட்ட தீர்வைக் குழுவினர் நீண்டகால வர்த்தகக் கொள்கை இந்தியாவில் எவ்வாறு அமையவேண்டுமென்று பிரிவு படுத்தி விளக்கியுள்ளனர். அவைகளாவன: முதற்படியாக இயந்திரப் பொருள்களைப் பெருமளவில் இறக்குமதி செய்து இந்தியாவின் இயந்திரத் தொழில்களை, குறிப்பாக, சுரங்கத்தொழில் அடிப்படை, நுகர்வுப் பொருள் உற்பத்தி இவைகளை வளப்படுத்த வேண்டும். அதன் காரணமாக இறக்குமதிகளில் பெருக்கமும், ஏற்றுமதிகளில் குறைவும் கூடும். பெருமளவில் மூலப் பொருள்களும், தாதுக்களும், இயந்திரங்கள் மூலம் உள்நாட்டு நுகர்வுக்குப் பயன்படுமளவில் மாற்றி அமைக்கப்படும். அயல்நாட்டுக் கடன், ஸ்டர்லிங் நிதி அதிகப்படியான ஏற்றுமதி இவைகளின் மூலம், இறக்குமதிச் செலவினை ஈடுகட்ட முடியும். அயல் நாட்டுச் செலாவணியின் மூலம் ஏற்படும் எதிர்பாராத பளுவினை நீக்க நுகர்வுப் பொருள் இறக்குமதியை கண்டிப்பாகக் கட்டுப்படுத்துவார்கள். இரண்டாம்படியாக, இயந்திரங்களின் இறக்குமதி குறைந்து, மூலப் பொருள்கள் முதலீட்டினால் தேசீய வருமானம் அதிகரித்திருப்பதால், அதற்கேற்ப உற்பத்தி பெருகாவிடில் நுகர்வுப் பொருள்களின் இறக்குமதி அதிகரிக்கக் கூடும். இது தவறினால், ஏற்றுமதியாக வேண்டிய பொருள்கள் உள்நாட்டு நுகர்வுக்கு எடுத்துக் கொள்ளப்பட்டு, அயல்நாட்டுச் செலாவணியில் பெரும் விடுப்புகள் ஏற்பட்டு, பாதகமான நிலைமை ஏற்படும். மூன்றாம்படியாக, இரண்டாம் வகை இயந்திரத் தொழில்கள் அதிகரித்து, வலுப் பெற்று, அதனால் இறக்குமதி குறைய ஆரம்பிக்கலாம். இரண்டாம் வகை இயந்திரத் தொழில்களினால், உற்பத்திப் பெருக்க மேற்பட்டு அதன் நிமித்தம் புதிய அயல்நாட்டுச் சந்தைகளில் உள்நாட்டு உற்பத்திப் பொருள்கள் போய்ச் சேர்ந்து, பெரும் லாபத்தை அளிக்கலாம். ஏற்றுமதிப் பெருக்கத்தின் காரணத்தால் உயர்ந்த

தரமான பண்டங்கள் உற்பத்தி செய்யப்பட்டு அயல்நாட்டு வாணிகக் கொடுப்பல் நிலையில் சாதகமான அமைப்பு ஏற்படலாம்.

இந் நாட்டின் திட்டங்களின் காரணமாக, இந்திய அயல் நாட்டு வர்த்தகம் பொது அமைப்பில் கீழ்க்கண்டவாறு திகழும் எனலாம். பெரிய அளவில் இயந்திரங்களின் இறக்குமதி, தொழில் வளர்ச்சியில் மேம்பாடு பெற்ற மேனுடுகளிலிருந்தும், ஆக்கப் பொருள்களுக்கான அடிப்படைப் பொருள்களின் இறக்குமதிப் பொருள் வளர்ச்சியற்ற கீழ் நாடுகளிலிருந்தும், இறக்குமதி செய்யப் படும். நாளடைவில் இந்தியா விவசாயப் பொருள்கள், சுரங்கப் பொருள்கள் இவைகளை மாற்றியமைக்கும். அவற்றையும் மற்றும் இதர உற்பத்திப் பொருள்களையும், நம் நாட்டினை அடுத்துள்ள ஆசிய, ஆப்பிரிக்கக் கண்டங்களுக்கு ஏற்றுமதி செய்யும். இது சம்பந்தமாக, அரசினர் துறையிலும் தனியார் துறையிலும் தக்க முயற்சிகள் எடுக்கப்பட்டு, உள்நாட்டுப் பொருளாதார நிலை செம்மையாக்கப்படும். இவ்விதமாகப் புதிய ஏற்றுமதி முறை மேற்கொள்ளப்படும்.[1]

**22. வாணிகக் கொடுப்பல் நிலையின் பொருள்:** ஒரு நாட்டின் வாணிகக் கொடுப்பல் நிலை, இதர நாடுகளுடன் கொள்ளும் எல்லா வகையான வர்த்தகத் தொடர்புகளையும் பொறுத்து அமையும். வர்த்தக நிலுவை என்பது, காணத்தகு பொருள்களின் வர்த்தகத் தைப் பற்றிக் கூறப்படுவது. காணத்தகு பொருள்கள் எனப் படுவன, கஸ்டம்ஸ் இலாகாவினுல் விவரப்படுத்தப்படும் ஆவணங்களும், பொதுப் புள்ளி விவரங்களும் ஆகும். இவைகளி னின்று, காணத்தகா வர்த்தகம் விலக்கப்பட்டுள்ளன. ஆயினும், சீர்படுத்தப்பட்ட கணக்கின் முடிவினை எய்த காணத்தகு, காணத் தகாப் பொருள்களின் வர்த்தகத்தையும் சேர்த்துக்கொள்ள வேண்டியது இன்றியமையாதது. அம்மாதிரி வர்த்தகத்தை இங்கு விவரப்படுத்துவோமாக: (1) வர்த்தகப் பொருள்கள், நிதிக்குவை ஆகியவைகளின் ஏற்றுமதியும் இறக்குமதியும், (2) கடன் தொகைகள் பெறுதலும், ஈதலும், (3) கடனுக்கான வட்டி யைக் கொடுத்தல், (4) அயல்நாடுகளிலிருந்து பணம் பெறுதல், அல்லது அயல்நாடுகளுக்குப் பணம் அனுப்புதல், (5) கடன்களைத் திரும்பித் தருதல், (6) சுற்றுலாவினரின் செலவினங்கள், (7) பாங்கு, இன்சூரன்ஸ் நிறுவனங்களின் லாபங்கள், (8) கப்பல் கம்பெனிகளின் கட்டணங்கள், (9) அயல்நாடுகளில், இந் நாட்டு அரசினர் செய்யும் செலவுகளும், இந்நாட்டில் அயல்நாட்டு

1. *தீர்வைக் குழுவினரின் அறிக்கை (1949-50), பத்தி 148.*

அரசினர் செய்யும் செலவுகளும், (10) அயல்நாட்டு மாணவர்கள் இந் நாட்டில் செய்யும் படிப்புச் செலவுகளும், அல்லது நம் நாட்டு மாணவர்கள் அயல்நாட்டில் படிப்பதனால் உண்டாகும் செலவுகளும் இவற்றின் கீழ் அடங்கும் எனலாம். இந்தப் பட்டியல் முழுவதும் ஒருங்கமையப்பட்ட நிலையில் கொடுக்கப்படவில்லை. எனினும், பணப் போக்குவரத்தைக் குறித்துக் காட்டவே கொடுக்கப்பட்டிருக்கிறது. இதை அடுத்துவரும் அட்டவணையில் விவரமாக முறையே 1952, 53, 54 ஆண்டுகளின் வாணிகக் கொடுப்பல் நிலை விளக்கமாகக் காட்டப்பட்டிருக்கிறது.

**23. சில தனிப்பட்ட கொள்கைகளின் விளக்கங்கள் :** நடப்புக் கணக்கையும், மூலதனக் கணக்கையும், இந்த அட்டவணையில் காணலாம். இவ்வாறு பிரிவினை காட்டுவதன் காரணம் என்னவெனில், சிலவற்றில் பொருள்கள், பணிகள் இவைகள் கைமாறும்; மற்றவைகளில் பணத்தில் கணக்கீடு செய்து நிதி மாற்றமாக அமையும். அல்லது முதலீட்டிற்கான முதல்வர் யாரென முடிவாக்கப்படும். முதல் பகுதியில் வருவது **நேர்முக** வர்த்தக வகையாகவும், பின் வருவது **நிதி வகையாகவும்** கணக்கிடப்படும். ஒவ்வொரு நேர்முக வர்த்தகத்தையும் நிதிக்கணக்கிற்கு ஈவித்தல் நியதி. வரவிற்கும் செலவிற்கும் ஈடுகட்டி நடப்புக்கணக்கின் அமைப்பிற்கேற்ப மூலதனக் கணக்கில் நிதிவகையில் ஈடு செய்யப்படும். எனவே, நடப்புக் கணக்கும், மூலதனக் கணக்கும் ஒன்றையொன்று சரிசெய்துகொள்ளுகின்றன.

பன்னாட்டுச் செலாவணி நிறுவனத்தின் பரிந்துரைகளுக்கேற்ப இந்த அட்டவணை விவரப்படுத்தப்பட்டுள்ளது. நடப்புக் கணக்கு வரவு செலவுக் கணக்கின் அடிப்படையில் அமைந்துள்ளது. கூட்டல் அடையாளக் குறி ஏற்றுமதி, இறக்குமதியைக் காட்டிலும் அதிகமென்பதைக் குறிக்கிறது. அதாவது அயல் நாட்டுச் செலாவணியில் வருமானம் ஆயினும் வட்டி விகிதங்களும் லாபப் பங்குகளும் குறைவின்றி நிறைவாகவே இருந்தன. அவை 1923-ல் ரூ. 32.37 கோடி, 1926-ல் ரூ. 29·78 கோடி, 1931-ல் ரூ. 34·76 கோடி, 1934-ல் ரூ. 32·51 கோடியாக நின்றது.[1]

யுத்த காலத்தில் வாணிகக் கொடுப்பல் நிலை சாதகமாகவே இருந்து வந்தது. அதன் விளைவாக, ஸ்டர்லிங் நிதி சேர்ந்து கொண்டிருந்தது. வட்டி கொடுப்பதும் குறைந்தது. ஏற்றுமதி வர்த்தகத்தில் சாதகமான நிலை ஏற்பட்டு, விவசாயப் பொருள்

1. கே. என். ராஜன் எழுதிய தி போஸ்ட் வார் பேலன்ச ஆப் பேமென்ட்ஸ் பக்கம் 5, அட்டவணை 1.

| | 1952 | | | 1953 | | | 1954 | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| | வரவு | செலவு | நிகரம் | வரவு | செலவு | நிகரம் | வரவு | செலவு | நிகரம் |
| **நடப்புக் கணக்கு :** | | | | | | | | | |
| வர்த்தகம் (ஏற்றுமதி கப்பல் செலவு உள்பட இறக்குமதி இன்சூரன்ஸ், செலவடக்கம்) | | | | | | | | | |
| தனியார் ... | 607·0 | 509·0 | + 98·0 | 527·9 | 425·9 | + 102·0 | 547·4 | 507·3 | + 40.1 |
| அரசினர், உணவு, ஸ்டோர் ... | 5·8 | 237·7 | — 231·9 | 5·0 | 140·4 | — 135·4 | 1·4 | 117·2 | — 115·8 |
| பணக் கணக்கற்ற பொன் போக்குவரத்து ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... |
| அயல்நாட்டில் சுற்றுலா ... | 0·6 | 10·1 | — 9·5 | 0·9 | 10·4 | — 9·5 | 1·6 | 10·2 | — 8·6 |
| போக்குவரத்து ... | 34·4 | 19 8 | + 14·5 | 30·8 | 13·5 | + 17·3 | 32·8 | 10·4 | + 22·4 |
| இன்சூரன்ஸ் .. | 6·0 | 3·7 | + 2 3 | 5 7 | 3·9 | + 1·8 | 5·1 | 3·9 | + 1·2 |
| முதலீட்டு வருமானம் ... | 16·2 | 26·6 | — 10·4 | 18·3 | 30 0 | — 11·7 | 21·9 | 26·7 | — 4.8 |
| முன்னர் குறிப்பிடப்படாத, அரசினர் வகை | 31·2 | 21·0 | + 10·2 | 28·2 | 16·5 | + 11·7 | 23·0 | 15·4 | + 7·6 |
| இதர வகைகள் ... | 27·8 | 9·3 | + 18·5 | 25·6 | 8·9 | + 16·6 | 26·6 | 12·4 | + 14·2 |
| வெகுமதிகள் அரசினர் ... | 12·5 | ... | + 12·5 | 17·8 | ... | + 17.8 | 5 0 | ... | + 5·0 |
| ,, தனியார் ... | 22·3 | 5·5 | + 16·8 | 19·2 | 5·0 | + 14·2 | 21·6 | 15·7 | + 5·9 |
| வகுப்பு இல்லாதவை ... | 47·7 | 6·2 | + 41 5 | 41·3 | 7·0 | + 34·3 | 39·2 | 2·7 | + 36·5 |
| தவறுகளும், விடுதல்களும் ... | ... | ... | — 0·1 | ... | ... | + 0·1 | ... | ... | + 8·2 |
| மொத்த நடப்பு வர்த்தகம் .. | 811·5 | 848·9 | — 37·4 | 720·7 | 661·5 | + 59·2 | 725·6 | 721·9 | + 3.7 |

| | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| **மூலதனக் கணக்கு:** | | | | | | | | | |
| **மூலதன, பொன் போக்குவரத்தின் நிகரம்:** | | | | | | | | | |
| அதிகரித்தால் (+) ... | —9·9 | —16·6 | +6·7 | —10·2 | —12·2 | + 2·0 | — 6·8 | — 9·4 | + 2·6 |
| குறைதல் (—) ... | ... | + 2·0 | —2·0 | — 0·1 | — 7·8 | + 7·7 | + 0·1 | — 5·3 | + 5·4 |
| **னியார் துறை :** (பாங்குக் கம்பெனிகள் நீங்கலாக)— | | | | | | | | | |
| நீண்டகால முதல் ... | ... | +55·3 | —55·3 | ... | + 1·7 | — 1·7 | ... | + 0.9 | — 0·9 |
| குறுகியகால முதல் ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... |
| **பொது, பாங்கு நிறுவனங்கள் :** | | | | | | | | | |
| நீண்டகால முதல் | | | | | | | | | |
| பாங்குக் கடன் ... | —0·2 | — 2·3 | +2·1 | ... | + 0·8 | — 0·8 | + 0·2 | + 2·3 | — 2·1 |
| முதலீட்டு விவரங்கள் ... | —7.4 | —12·8 | +5·3 | — 9·0 | —12·0 | — 3·0 | —16·1 | —10·9 | — 5.2 |
| நீண்டகாலத் தவணை | | | | | | | | | |
| ஒப்பந்தக்கொடுப்பல். இதர வகைகள் ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... |
| இதர வகைகள் ... | ... | — 3·2 | +3·2 | ... | ... | ... | ... | — 0·6 | + 0·6 |
| குறுகிய கால மூலதனம் | | | | | | | | | |
| செலுத்தினங்களும், தீர்வக ஒப்பந்தங்களும் ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... |
| பன்னாட்டுச் செலாவணி, பாங்கு மற்றும் உலகபாங்குக்கு ஏற்பட்ட பொறுப்புகள் | ... | ... | ... | ... | ... | ... | ... | —22·2 | + 22·2 |
| இதர அரசினர், பாங்கு நிறுவனங்களுக்கு உள்ள பாக்கிகள் ... | ... | —37·4 | +37·4 | ... | — 4·4 | + 4·4 | ... | +15·4 | —15·4 |
| இதர வகைகள் ... | —65·3 | —30·4 | — 34·8 | +28·2 | —16·3 | +44·6 | + 1·1 | — 3·6 | + 4·7 |
| நிதி சம்பந்தப்பட்ட பொன் வகை ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... | ... |
| நிதி சம்பந்தப்பட்ட பொன், மற்றும் மூலதனப் போக்குவரத்துகளின் மொத்தம் ... | —82·8 | —45·4 | —37·4 | + 8·9 | —50·2 | +59·2 | —21·5 | —33·4 | + 11·9 |

**ஆதாரங்கள் :** செலாவணி, நிதி சம்பந்தப்பட்ட அறிக்கை (ரிஸர்வு பாங்கு) 1952-53 பக், 184–85, 1953–54, பக. 182–83, 1954–55, பக. 194-95 ,இதில் காணும் எண்கள் கோடி ரூபாய்க் கணக்கிலுள்ளன.

களின் விலையும் நிலைபெற்றது. யுத்த காலத்தில் இறக்குமதி தடைப்படுத்தப்பட்டது. இவற்றால் சாதகமான வாணிகக் கொடுப்பல் நிலை ஏற்பட்டது.

யுத்தத்திற்குப் பிறகு வர்த்தக நிலை அநுகூலமாய் இருந்த தனால், நடப்புக் கணக்கில் நிகரமான நிலையை ஒருவாறு அநுமானிக்க முடிந்தது. 1946-ல் இந்தியாவிற்கு, அரசிற்காகச் செய்யப்பட்ட செலவினங்களுக்காக ஆங்கிலநாட்டிலிருந்து பணம் கிடைத்த காரணத்தால் சாதகமான நிலை இருந்தது எனலாம். 1947-ல் இந்த நிலைமையில் திடீர் மாற்றங்கள் தோன்றி, அடிக்கடி தொடர்ந்தாற் போலப் பற்றுக்குறையுள்ள கணக்குகள் தலைகாட்ட ஆரம்பித்தன. இந்த ஆண்டில் பற்றுக்குறைக் கணக்கின்கீழ் ரூ. 100 கோடி தென்பட்டது. ஆயினும், இதனால் பெரிய இடர்ப்பாடுகள் தோன்றவில்லை.

அவ்வமயம் ஆங்கில அரசினர் ஸ்டர்லிங் நிதியைக் கொடுக்காததே இதற்குக் காரணமாகும். 1949-ல் நடப்புக் கணக்கில் பற்றுக்குறை 1948-ல் காட்டிய ரூ. 83 கோடியிலிருந்து ரூ. 146·6 கோடியாக அதிகரித்தது. இதன் அடிப்படைக் காரணம் இறக்குமதிக் கட்டுப்பாட்டினைத் தளர்த்தியதே எனலாம். செலாவணி கிடைப்பதற்கு அரிதான வட்டாரங்களிலிருந்து நேர்ந்த பற்றுக்குறை 1948ஆம் ஆண்டு முதற்பகுதியில் ரூ 10·4 கோடியாகவும், பிற்பகுதியில் ரூ. 32·3 கோடியாகவும், அதற்கடுத்த ஆண்டில் முதற்பகுதியில் ரூ. 49·5 கோடியாகவும் இருந்தது.[1] இந்த வட்டாரத்திற்கு ஏற்றுமதிகள் வரவர கீழ் நிலைக்குச் சரிந்தன. அரசியலார் கணக்கின் அடிப்படையில் இறக்குமதிகள் கூடுதலாகி வந்தன. அச் சமயத்தில், அதிக நாடுகள் டாலர் பற்றுக்குறையைச் சமாளிக்க வேண்டித் தங்கள் பணமதிப்புகளை வரம்பின்றிக் குறைத்தன. இப் பணமதிப்புக் குறைப்புமுறை டாலர் விகிதத்திற்கு ஏற்ப 1949ஆம் ஆண்டு செப்டம்பரில் அமலுக்கு வந்தது. அந்நாடுகளில் இந்தியாவும் ஒன்றாக இருந்தது. டாலர் வட்டாரத்திலிருந்து இறக்குமதி செய்வதைத் தீவிரமாகத் தடைப்படுத்தினர். முடிவில் இந்தியப் பொருள்களுக்கு டாலர், மற்றும் டாலர் அல்லாத பகுதிகளில் மிகவும் கிராக்கி ஏற்பட்டது. இதன் விளைவாகவும், பின்னர் அடுத்துவந்த கொரியாப் போரினாலும், இந்தியாவின் அயல்நாட்டு வாணிகக் கொடுப்பல் நிலை 1950-ல் மட்டற்ற மகிழ்ச்சி தரும் முறையில் சாதகமான நிலை ஏற்பட்டது எனலாம். பாகிஸ்தானுடன் அந்த ஆண்டில் நடத்திய வர்த்தகத்தை நீக்கியும்கூட ரூ. 61·5 கோடி உபரியாக நின்றது. ஆயினும், 1949-ன் பற்றுக்

1. கரன்சி அண்டு பினான்ஸ் அறிக்கை, 1949-50, பக்கம் 99.

குறையான ரூ. 169·3 கோடியை இத்துடன் ஒப்பிட்டு நோக்க வேண்டும். செலாவணி கிடைப்பதற்கு அரிதான பகுதிகளில் 1941-ல் இருந்த பற்றுக்குறை ரூ. 53 கோடியிலிருந்து 1950-ல் 29 கோடி உபரியாக அமைந்தது. 1951ஆம் ஆண்டில் மறுபடியும் பாதகமான நிலை தோன்றியது. இக் காலத்தில் ரூ. 93·5 கோடி பற்றுக்குறையாக இருந்து, ஸ்டர்லிங் அல்லாத பகுதிகளிலிருந்து நடத்திய வியாபாரத்தின் காரணமாக, நடப்புக் கணக்கில் இவ்வாறு அமைந்தது. இக் காலத்தில் ஏற்றமான நிலை, பருத்தி, இயந்திரங் கள், தவிர்க்க இயலாப் பண்டங்கள், அரசினர் கணக்கில் உணவுத் தானியங்கள் ஆகியவை இறக்குமதி செய்ததால் நிகழ்ந்தன எனலாம். 1952-ல் பாதகக் கொடுப்பல் நிலை குறைவாகவே இருந் தது. பணவீக்க எதிர்ப்பு முறைகளாலும், இறக்குமதிக் கட்டுப் பாட்டைத் தளர்த்தியதாலும், வர்த்தகப் பற்றுக்குறை, 1951-ல் ரூ. 113 கோடியிலிருந்து ரூ. 134 கோடியாக அதிகரித்தது எனினும், காணத்தகா ஏற்றுமதி வர்த்தகமும் வெகுமதிகளும் கூடியதால், நிகர பற்றுக்குறை குறைந்தது. 1953-ல் நடப்புக் கணக்கில் உபரி ஏற்பட்டது. சணல் உற்பத்திகளின் ஏற்றுமதியும் உணவு இறக்குமதியின்மையும் இதற்குக் காரணமாகக் கூறலாம்.

இந்தியா, தன்னுடைய இறக்குமதிகளுக்காகக் கொடுக்க வேண்டிய தொகையை, அயல்நாட்டுச் செலாவணியினின்று விடுவிக்காமல் இருக்கவேண்டுமானுல், என்றும் சாதகமான வர்த்தக நிகர முறையைக் கையாள வேண்டியது இன்றி யமையாதது எனலாம். இவ்வாறு ஏற்படின், அயல்நாட்டுச் செலாவணி கழித்தல் அடையாளக் குறி, ஏற்றுமதியைவிட இறக்கு மதி அதிகமாக இருந்து, அதனுல் பாதகமான நிலையைக் குறிப் பிடுகிறது. (அயல் நாட்டுச் செலாவணி கொடுக்கப்படும் தன்மையைக் குறிப்பிடுகிறது.) மூலதனக் கணக்கில் கூட்டல், கழித்தல், அடையாளக் குறிகள், நிகர ஆஸ்தியில் அதிகம், அல்லது குறைவை விளக்கம் செய்கின்றன. கூட்டல் குறி இருந்தால் நிகர ஆஸ்தி அதிகரிக்கிறது. கழித்தல் குறி காணப்படின் நிகர ஆஸ்தி குறைகிறது. நடப்புக் கணக்கில் செலவைவிட வருமானம் அதிகரிப்பின் மூலதனக் கணக்கில் நிகர ஆஸ்தியை அதிகரிக்கச் செய்கிறது. (இதுவும் கூட்டல் அடையாளக் குறியில் காட்டப்படுகிறது.)

**24. போருக்கு முன்னர் இருந்த வாணிகக் கொடுப்பல் நிலை :** இரண்டாம் உலகப்போருக்கு முன்னர், இந்தியாவின் அயல்நாட்டு வாணிகக் கொடுப்பல் நிலை பாதகமாகவே இருந்தது. அதாவது, ஏற்றுமதி அதிகமாகவும், இறக்குமதி குறைவாகவும்

இருந்தன. நாட்டை நடத்தும் செலவு, வட்டி கொடுப்பவர்கள் (அயல் நாடுகளிலிருந்து பெற்ற கடன்களுக்காக, ராணுவ அரசினர், பணியாளர்களின் சம்பளங்கள், அயல்நாட்டுக் கப்பல் கட்டணங்கள், அயல்நாட்டு இன்சூரன்சு செலவினங்கள்) இந் நாட்டில் தொழில் நடத்தும் பாங்கர்களின் இலாபம் அனைத்தையும் இவற்றின்மீது விதித்ததால், இந்தியா அநேக வகைகளில் இங்கிலாந்திற்குப் பணச் செலவு செய்தும், ஆங்கில சர்க்கார் இந்தியாவிற்காகச் செய்த செலவினங்களை ஈடுகட்ட வேண்டி ஏற்பட்டது. இவைகள் அனைத்தும் உள்நாட்டுச் செலவினங் களின்கீழ்க் குறிக்கப்பட்டுள்ளன.

1930-32-ல் ஏற்பட்ட மந்த நிலையினால் வர்த்தக நிகரத்திற்கும் வாணிகக் கொடுப்பல் நிலைக்கும் பாதகமான நிலைமை தோன் றியது. அது வரவர, அதிகரித்துக் கொண்டே வந்தது. முடிவில், வர்த்தக நிகரக் கணக்கு பாதகமாகவே முடிவுபெற்றது. ஆண்டு தோறும் நாட்டுச் செலவுகள், சம்பள விகிதங்கள், பணியாளர்க் கான ஊதியங்கள் ஆகியவை மேன்மேலும் அதிகரித்துக் கொண்டே வந்தன. 1923-24-ல் வர்த்தகக் கணக்கின் தொகை ரூ. 110·53 கோடி. இது 1926-ல் ரூ. 35·10 கோடியாகவும், 1931-ல் ரூ. 22·26 கோடியாகவும்; 1934-ல் ரூ 11·24 கோடியாகவும் சரிந்துவிட்டது. மீதங்களைக் கொண்டு இந் நாட்டுப் பொருளாதார நிலையை உயர்த்தும் குறிக்கோளுடன் இயந்திரங்களைக் கொள் முதல் செய்யலாம். இயந்திர இறக்குமதிக்கு முதலிடம் அளித்து, இதர இறக்குமதிகளைக் கட்டுப்படுத்த வேண்டும் என்பதே நியதி. இந் நாட்டின் ஏற்றுமதியும் சில பண்டங்களில் மட்டுமின்றிப் பல்வேறு துறைகளிலும் அதிகப்படியான ஏற்றுமதிகள் செய்தலைத் தலையாய கடன் என நம் நாட்டினர் கொள்ளவேண்டும்.

# 18. தேசீய வருமானம்[1]

**1. இலக்கணம் :** தேசீயப் பொருளாதார முறையில் நாட்டின் உற்பத்திக் காரணிகள், உற்பத்தியின் மூலம் பெறும் வருமானம் அனைத்தையும் தேசீய வருமானம் எனக் கூறலாம். தொழிலாளர் பெறும் கூலி, கடன் மூலதனம், முதலீடு பத்திரங்களுக்கான வட்டித் தொகை, இதர தொழில்களிலிருந்து கிடைக்கும் இலாபப் பங்கு இவையனைத்தும் இதன்கீழ்க் கணக்கிடப் படுகின்றன. இவ் வருமானம் நுகர்வுப் பொருள்களில் செலவிடப் படுகிறது. ஒரு பகுதி சேமிப்பில் வைக்கப்படுகிறது, மற்றப் பகுதி முதற் கருவிகளில் ஈடுபடுத்தப்படுகிறது. ஓர் ஆண்டில் உற்பத்தி செய்யப்படும் பொருள்கள், புரியும் பணி இவற்றின் கூட்டுத் தொகையைத் தேசீய வருமானம் எனலாம். விளக்கிக் கூறின், குறிப்பிட்ட ஆண்டில், நுகர்வுக்குவரும் பண்டங்களின் விலைகளையும், பணிகளையும் மதிப்பீடு செய்து, மூலதனத்துக்குச் சேர்க்க வேண்டியவை இவ்வளவு என முடிவாக்கி, அவற்றினின்று தேய்மானத்திற்கான தொகையையும், உற்பத்திப் பொருள் பழமையாவதற்கான மதிப்பினையும் கழிக்க வேண்டும். நடைமுறையிலுள்ள விலையில் பங்குகளுக்கும், முதலீட்டுப் பத்திரங்களுக்கும் சேரக்கூடிய ஆண்டின் வரவைக் கூட்டி, அதனின்று பிரிந்துபோன எடுப்புகளை கழித்தல் வேண்டும். அரசினராலும், பஞ்சாயத்து நிர்வாகங்களாலும் செய்யப்பட்ட பணிகளை (எடுத்துக்காட்டாக அரசினரில் தபால் தந்தி முறையும், நகராட்சி டிராம்வண்டி முதலியன) மொத்தச் செலவுக் கணக்கில் கூட்ட வேண்டும்.

நடப்பு ஆண்டில் உற்பத்தி செய்யப்படும் பண்டங்களும், பணிகளும் நடப்பில் உள்ள விலைகளை யனுசரித்து அவற்றின் எதிராக்க மதிப்பினை முடிவு காட்ட வேண்டும். அவ்வாறு ரொக்க மதிப்பு இன்னதென்று வரையறுக்கு முன், சற்று

1 தேசீய வருமானக் குழுவினரின் முதல் கடை அறிக்கைகளையொட்டி, இந்த அதிகாரம் எழுதப்பட்டது.

எச்சரிக்கையுடன் விலை இவ்வளவு என முடிவு செய்ய வேண்டும். இவற்றில் சில பொருள்களும் பண்டங்களும் கைமாறும்போது, அதாவது ஓர் உற்பத்தியாளரிடமிருந்து இன்னொருவரிடம் மாறும் போது, இரட்டைக் கூட்டல் (double counting) முறையைக் கொள்ளக் கூடாது. முடிவான (final) பண்டங்கள், பணிகளின் நிகரவிலை மதிப்பை மட்டும் கணக்கில் எடுத்துக்கொண்டால் இம்மாதிரியான குறைபாடு நீங்கும்.

**2. முன்னர் நிகழ்த்திய மதிப்பீடுகள் :** அடுத்து வரும் பக்கத் திலுள்ள அட்டவணையில், அவ்வப்போது செய்த மதிப்பீடுகள் கொடுக்கப்பட்டுள்ளன.

நுட்பமாகவும் ஆழ்ந்த விளக்கத்துடன் நடத்திய தேசீய வருமான மதிப்பீடு 1931-32-ல் டாக்டர் வீ. கே. ஆர். வி. ராவ் அவர்களால் செய்யப்பட்டது. தலா வருமானம் ரூ. 65 என மதிப்பீடு செய்தபோது குற்ற வரம்பென + அல்லது —6 சதவீதம் கணக்கில் கொள்ள வேண்டும். அன்னாரின் மதிப்பீடுகளை 449ஆம் பக்கத்தில் கொடுத்திருக்கிறோம்.

**3. தேசீய வருமானக் குழுவின் மதிப்பீடு :** ஆட்சியினரின் மதிப்பீடுகள்[1] 1948-49, 1950-51ஆம் ஆண்டுகளுக்கான 1951, 1954ஆம் ஆண்டுகளில், இதுகாறும் வெளியான புள்ளி விவரங் களனைத்தைக் காட்டிலும் மிகவும் திருப்திகரமானவை. அவர்கள் அடிப்படையாகக் கொண்ட தகவல்களையும், மற்றும் இதர புள்ளி விவரத் தகவல்களையும் மிகவும் சீரிய முறையில் மேற் கொண்டுள்ளனர். இதனையடுத்து வரும் அட்டவணையில், வருமான அடிப்படையில் மதிப்பீடுகள் கூறப்பட்டுள்ளன. முன் கூறியதில் நிகர உற்பத்தி முறையைக் கணக்கிட்டனர். இதற்காக மொத்த உற்பத்தி மதிப்பைக் கணக்கிட்டும் (விற்பனை + சுயநுகர்வு + பங்கு முதலீட்டுப் பத்திரம் இவைகளைக் கூட்டி) இதர நாட்டினர்களிடமிருந்து செய்த கொள்முதலைக் கழித்தும், உற்பத்தியில் செலவிட்ட கருவிகளின் மதிப்பைக் (தேய் மானத்தை) கழித்தும் கண்டுபிடித்தனர். மற்றொரு திக்கினின்று நோக்கின் இது கூலி, லாபம், மற்றும் இதர வருவாய்கள் உற்பத்தி யினின்று தோன்றுபவை எனக்கூறலாம். இம்மாதிரியான வருவாய்

1 1949 ஆம் ஆண்டு ஆகஸ்டு மாதம் தேசீய வருமானக் குழுவின் தலைவராகப் பேராசிரியர் பி. ஸி. மகலநோபிஸ் (Prof. P. C. Mahalanobis) அவர்களை நியமித் தது. தேசீய வருமானத்தையும், அது சம்பந்தமான இதர தகவல்களையும் கவனித் துப் புள்ளி விவரங்களை எவ்வகையில் சரிவரத் தயார் செய்யலாமென்றும், மிகவும் முக்கிய புள்ளிவிவரங்களைச் சேகரிக்க வேண்டிய முறைகளைப் பகர்ந்தும், தேசீய வரிமானத்தைப் பற்றிய முழு விவரங்களில் பொதுமக்கள் அக்கறை காட்டும் முறை யில் அமைக்கவேண்டும் என்றும் இக் குழு கூறியது. இக் குழுவின் மதிப்பீடுகள் ஏப்ரல் 1954 லிலும், பிப்ரவரி 1954 லிலும் வெளியிடப்பட்டு அரசியலாரின் புள்ளி விவரம் (Offical estimates) எனக் கூறப்பட்டது.

| ஆக்கியோர் | | ஆண்டின் விவரம் | மதிப்பீடு தலைக்கு இவ்வளவு வருமானம் (ரூபாயில்) |
|---|---|---|---|
| தாதாபாய் நௌரோஜி | ... | 1868 | 20 |
| எப். ஜே. அட்கிஸன் | ... | 1875 | 30·5 |
| ஈ. பாரிங் & அடி. பார்பர் | ... | 1882 | 27 |
| எப். ஜே. அட்கின்ஸன் | ... | 1895 | 39·5 |
| கர்ஸன் பிரபு | ... | 1897-98 | 30 |
| வில்லியம் டிக்பி | ... | 1899 | 18 |
| வக்கீலும் முரஞ்சனும் | ... | 1910-14 | 58·5 |
| பி. என். சர்மா | ... | 1911 | 50 |
| பி. ஏ. வாடியாவும், ஜி. என். ஜோஷியும் | ... | 1913-14 | 44·5 |
| ஜி. பிஜ்லே ஷிர்ராஸ் | ... | 1921 | 107 |
| கே. டி. ஷாவும், கே. ஜே. காம்பெட்டிவும் | ... | 1921 | 74 |
| வி. கே. ஆர். வி. ராவ் | ... | 1925-29 | 78 |
| வி. கே. ஆர். வி. ராவ் | ... | 1931-32 | 65 |
| ஆர். ஸி. தேசாய் | ... | 1931-32 முதல் 1940-41 வரை | 85 |
| ஈஸ்டர்ன் எகானமிஸ்ட் | ... | 1940-41 | 70 |
| இந்திய அரசு (தேசிய வருமானக் குழுவின் அறிக்கை) | ... | 1948-49 | 246.9[1] |
| | | 1949-50 | 253·9 |
| | | 1950-51 | 265·2 |
| | | 1951-52 | 274·5 |
| | | 1952-53 | 267·4 |
| | | 1953-54 | 283·9 |
| | | 1955-56 | 280.0[2] |

களிலிருந்து கிடைக்கும் மொத்த தொகையையே தேசீய வருமானம் என்கிறோம். விவசாயம், கால்நடை, மீன்பிடித்தல், உலோகம் வெட்டியெடுத்தல் இவைகளில் கிடைக்கும் பொருள்களின் அமைப்பில் கணக்கெடுப்பு நடைபெறுகிறது. போக்குவரத்து, பொது ஆட்சி, இதர அலுவல்கள் இவற்றை வருமான முறையில் கணக்கிடப்படுகிறது. கணக்கிடுதலை எளிதாக்கப் பொருளனைத்தையும் பல்வேறு பகுதிகளில் பிரித்து அடுத்து 449ஆம் பக்கத்தில்

1. நடப்பிலுள்ள விலை விகிதத்தில் - 1948 - 54 புள்ளி விவரம் கொடுக்கப் பட்டுள்ளது.

2. 1952-53ஆம் ஆண்டு விலைகளின் விகிதத்தில் இது கணக்கிடப்பட்டது. (இரண்டாவது திட்டத்தின் டிராப்ட்).

| விளக்கம் | மதிப்பு மிலியன் ரூபாய்க் கணக்கில் | தவற்றின் வரம்பு சதவீதம் |
|---|---|---|
| விவசாய உற்பத்தியின் மதிப்பு ... | 5,927 | ... |
| கால்நடை ,, ... | 2,683 | ± 10 |
| மீன் பிடித்தலும், வேட்டையாடலும். | 120 | ∓ 20 |
| காட்டின் பொருள் மதிப்பு ... | 92 | ... |
| சுரங்கப் பொருள் மதிப்பு ... | 180 | ... |
| வருமான வரி கொடுக்க, முடிவான வருவாய் ... | 2,161 | ... |
| வருமான வரிக்கு உட்படாத வகையில் வருமானம் பெறும் தொழில் உள்ள கூலிக் களங்கள் ... | 2,100 | ± 17 |
| வருமான வரி கொடுக்க வேண்டாமென்ற திட்டத்தில் குறைந்த ஊதியம் பெறும் பணியாளர், ரெயில், தபால், தந்தி, இலாக்கா, அரசினர் அலுவலகங்களில் உள்ளவர்... | 590 | ... |
| வருமானவரி கொடுக்க வேண்டாமென்ற திட்டத்தில் குறைந்த ஊதியம் - பெறுவோர் - வர்த்தகத்தில் ஈடுபட்டவர்கள் ... | 1,233 | ± 15 |
| வரிமானவரி - கொடுக்க - வேண்டிய அவசியமற்றவர்கள் - பணியிலும், கலைகளிலும் ஈடுபட்டவர்கள் ... | 416 | ± 15 |
| வருமானவரி கொடுக்க வேண்டிய அவசியமில்லாதவர்-ரெயில், தபால், தந்தி இவை நீங்கலாக இதர போக்கு வரவுத் தொழிலில் ஈடுபட்டவர்கள்... | 283 | ± 20 |
| வருமானவரி கொடுக்க வேண்டிய அவசியம்இல்லாதவர்-குடும்ப வேலைகளில் ஈடுபட்டவர்கள் ... | 325 | ± 20 |
| இதர வகை ... | 780 | ± 10 |
| மொத்தம் ... | 16,890 | ± 6 |

அட்டவணையில் காட்டப்பட்டுள்ளது. நிகர உற்பத்தி இவ்வளவு என்றும், அதைக் கூட்டிய பிறகு மொத்த தேசீய வருமானம் இவ்வளவு என்றும் அது காட்டுகிறது.

**4. கிடைக்கும் தகவல்களில் உள்ள குறைபாடுகள் :** இம் மதிப்பீடுகள் ஆட்சியாளர்களின் புள்ளி விவரத்தை அடிப்படையாகக் கொண்டவை. இவை மத்திய, இராச்சிய அரசுகளின் புள்ளி விவரங்கள். இராச்சிய, மத்திய இலாக்காக்களில் வெளியிடாத் தகவல்களும்கூட உள்ளன. இவைகளில் பெரும் குறைகள் உள்ளன.

விவசாயம் சம்பந்தமான விலைகளும், செலவினங்களும், மற்றும் அத்துடன் தொடர்புள்ள இதர விவரங்களும் அரைகுறையாக உள்ளன. மிகவும் முக்கியமான ஒரு சில தொழிற்சாலைகளின் விவரங்களே கிடைத்துள்ளன. அரசினரின் செயல்களையும், பணிகளையும் பொருளியல் இலக்கணப்படி பிரிவுபடுத்திக் கூறுவது சற்றுக் கடினமாகும். உற்பத்திப் பொருளை விலை மதிப்பிடுவது சற்றுச் சிரமமானதுதான். ஏனெனில், இந்தியாவில் பெரும் பகுதி பணத்திற்கு மாற்றிக் கொடுப்பதில்லை. பொதுவாக அவை உற்பத்தியாளரால் நுகரப்படும்; அல்லது பண்டமாற்று வகையில் இதர பொருள்களுக்காகக் கொடுக்கப்படும்; அல்லது பணியாற்றுபவர்களுக்கும் பொருளாகக் கொடுக்கப்படும்; மக்களின் அறியாமைக் காரணத்தையும், கணக்கெழுதும் பழக்கமின்மையையும் முன்னேற்றத்திற்குத் தடங்கலாகக் கருதலாம். விவசாய உற்பத்தியின் மதிப்பீடு செய்யும்போது இவ்வளவு இருக்கலாம், அல்லது அவ்வளவு இருக்கக்கூடும் என்று ஊகித்துக் கொண்டு, மதிப்புப் போடுகிற காரணத்தால் அநுமானம் செய்ய வேண்டிய அவசியம் ஏற்படுகிறது. சிறிய விவசாயிகளுடைய உற்பத்தியிலும், வீட்டுத் தொழில்களிலும் இம்மாதிரியான அநுமானம் செய்யவேண்டி யேற்படுகிறது. இவையனைத்தும் இந்தியப் பொருளாதாரத்தில் பெரும் பகுதியானவை. ஆகவே, இந்தியத் தேசீய வருமானத்தை மொத்தத்தில் அளவிடும்போது தவற்றின் வரம்பு போய்விடுகிறது. ஆட்சியினர் கொடுக்கும் புள்ளி விவரத்தில் தவற்றின் வரம்பு சுமார் 10 சதவீதத்திற்குள் இருக்கும் எனக் கருதுகிறார்கள்.[1]

**5. தேசீய வருமானத்தின் வழங்கு முறைகள் :** பின் காட்டப்பட்டுள்ள கணக்கின்படி சற்றேறக்குறைய 50% விவசாயத்திலிருந்து, 16% சுரங்க வேலைகள், உற்பத்தி, கைத்தொழில் முதலியவற்றிலி

1. தேசீய வருமானக் குழுவின் முடிவான அறிக்கை, பக். 105.

**இந்திய யூனியனின் தேசிய வருமானம்—தொழிலின் தோற்றுவாயுடன்**[1]

| தகவல்கள் | 1950-51 | | 1949-50 | | 1948-49 | |
|---|---|---|---|---|---|---|
| | நிகர உற்பத்தி[2] | சத விகிதம் | நிகர உற்பத்தி[2] | சத விகிதம் | நிகர உற்பத்தி[2] | சத விகிதம் |
| **விவசாயம் :** | | | | | | |
| விவசாயம், கால்நடை இதர உட்பிரிவுத் தொழில்கள் ... | 47·8 | 50·2 | 43·8 | 48·6 | 41·6 | 48·1 |
| காட்டுத் தொழில் ... | 0·7 | 0·7 | 0·7 | 0·8 | 0·6 | 0·7 |
| மீன் பிடித்தல் ... | 0·4 | 0·4 | 0·4 | 0·4 | 0·3 | 0·3 |
| விவசாயத்தின் மொத்தம் ... | 48·9 | 51·3 | 44·9 | 49·8 | 42·5 | 49·1 |
| **சுரங்கத் தொழில் இயந்திரத் தொழில், கைத்தொழில்கள் :** | | | | | | |
| சுரங்க வேலை ... | 0·7 | 0·7 | 0·6 | 0·7 | 0·6 | 0·7 |
| தொழிற்சாலை நிறுவனங்கள் ... | 5·5 | 5·8 | 5·4 | 6·0 | 5·5 | 6·4 |
| சிறு தொழில்கள் ... | 9·1 | 9·6 | 9·0 | 10·0 | 8·7 | 10·0 |
| சுரங்கத் தொழில் மொத்தம் ... | 15·3 | 1[illegible]·1 | 15·0 | 16·7 | 14·8 | 17·1 |
| **வர்த்தகமும் போக்குவரத்து வசதிகளும் :** | | | | | | |
| (போக்குவரத்துகள் தந்தி, தபால், தொலைபேசி) ... | 0·4 | 0·4 | 0·3 | 0·3 | 0·3 | 0·3 |
| ரெயில்வேக்கள் ... | 1·8 | 1·9 | 1·8 | 2·0 | 1·7 | 2·0 |
| சீரமைந்த பாங்குகளும், இன்சூரன்ஸும் ... | 0·7 | 0·7 | 0·6 | 0·7 | 0·5 | 0·6 |
| இதர வர்த்தகமும் போக்குவரத்து முறைகளும் ... | 14·0 | 14·7 | 13·9 | 15·4 | 13·5 | 15·6 |
| வர்த்தகம், போக்குவரத்தின் மொத்தம் ... | 16·9 | 17·7 | 16·6 | 18·4 | 16·0 | 18·5 |

1. தேசிய வருமானக் குழுவினரின் முடிவான அறிக்கை, 1954ஆம் ஆண்டு, பிப்ரவரியில் வெளியிடப்பட்டது, பக்கம் 106. இதில் விவசாயப் பொருள்களைச் சந்தைக்கு அனுப்பும் நிலையில் சரியாக்கும் தொடர்புள்ள தொழில்களும், விவசாயி செய்யும் கைவினையால் உண்டாகும் பொருள்களும் எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளன.

2. 100 கோடிகள் ரூபாய் ($=10^9$).

| | | | | | | |
|---|---|---|---|---|---|---|
| **இதர பணிகள் :** | | | | | | |
| உத்தியோகம் பிறபண்பட்ட அலுவல்கள் ... | 4·7 | 4·9 | 4·5 | 5·0 | 4·3 | 5·0 |
| அரசினர் பணி (ஆட்சி) ... | 4·3 | 4·5 | 4·1 | 4·6 | 4·0 | 4·6 |
| வீட்டு வேலைகள் ... | 1·3 | 1·4 | 1·2 | 1·3 | 1·2 | 1·4 |
| வீட்டுச் சொத்துகள் ... | 4·1 | 4·3 | 4·0 | 4·4 | 3·9 | 4·5 |
| இதர பணிகளின் மொத்தம் ... | 14·4 | 15·1 | 13·8 | 15·3 | 13·4 | 15·5 |
| நிகர வீட்டு உற்பத்திக் காரணிகள் அடக்க விலையில் ... | 95·5 | 100·2 | 90·3 | 100·2 | 86·7 | 100·2 |
| அயல் நாடுகளிலிருந்து சம்பாதித்த நிகர வருமானம் ... | — 0·2 | - 0·2 | — 0·2 | — 0·2 | —0.2 | — 0·2 |
| நிகர தேசீய உற்பத்திக் காரணி அடக்க விலையில் ( = தேசீய வருமானம்) ... | 95·3 | 100·0 | 90·1 | 100·0 | 86·5 | 100·0 |

ருந்தும், 15% உத்தியோகங்களிலிருந்தும், பணிகளிலிருந்தும் வருமானம் கணக்கிடப்படுகிறது. அதிகப்படியான மக்கள் விவசாயத்தைக் கொண்டு பிழைக்கிறார்கள். எனினும், விவசாயத்தில் நேர்முகமாக ஈடுபட்டவர்களுக்குத் தலா விவசாயத்தினின்று, வருமானம் ரூ. 500 எவ்வளவு குறைவெனக் கூற வேண்டிய அவசியமில்லை. வீட்டுப்பணியில் ஈடுபட்டவர்களுக்குக் கிடைக்கும் ஊதியம் எல்லாவற்றைக் காட்டிலும் மிகவும் குறைவு (ரூ. 400). இதர புள்ளிவிவரங்கள் வருமாறு: நிகர வீட்டுற்பத்திக் காரணியின் அடக்க விலையில் ரூ. 670; உத்தியோகங்களும் இதர பண்பட்ட அலுவல்களும் ரூ. 700; வாணிகம், போக்குவரத்து முதலியவைகளின் மொத்தம் ரூ. 1,500. அரசினர் அலுவல் நீங்கலாக, இதர அலுவல்களின் கூட்டுத்தொகை ரூ. 500. சிறுபான்மைத் தொழில்கள் ரூ. 500; பாங்குத் தொழிலும் இன்சூரன்ஸுப் போக்குவரத்து வர்த்தகம் நீங்கலாக ரூ. 1,000; ரெயில்வேக்களும் மற்ற தொடர்புகளும் ரூ. 1,600; தொழிற்சாலை நிறுவனம் ரூ. 1,700.[1] 1950-51-ல் அரசினரின் பகுதி உள்நாட்டு உற்பத்தியில் (வெளிநாட்டு வரவு செலவு நீங்கலாக) ரூ. 7·2 நூறு கோடி. சர்க்கார் எடுத்து நடத்தும் தொழில்களில் நிகர வருமானம் ரூ. 2·9 நூறு கோடி. அரசியல் ஆட்சி வழியே பெற்ற நிகர வருமானம் ரூ. 4·3 நூறு கோடி. இதர உள்நாட்டு உற்பத்திகளில் தனியார் துறைகளிலிருந்து பெற்ற வருமானம் ரூ. 88·3 நூறு கோடி. நிகர உற்பத்தியில் இது ரூ. 92·4 சதவீதமாகும்.

**6. இந்தியாவின் தேசீயக் கணக்குகள்:** முன் பக்கத்தில் கொடுக்கப்பட்டுள்ள அட்டவணைப்படி தேசீய வருமானக் கணக்கு கொடுக்கப்படுவதால், பொருளாதார சம்பந்தமான பலவகைப் பட்ட அலுவல்களைப் பிரித்துக் காட்ட முடிகிறது. (1) குறிப்பாக, மூன்று பெரும் பிரிவுகளான உற்பத்தி, நுகர்வு, செல்வத்துடன் சேர்மானங்கள் இவைகளைப் பற்றியும், (2) அரசினர், தனியார் துறைகளில் ஏற்படும் வருமான விவரமும், தனியார் துறையில், தொழில், வீட்டு வருமானமெனவும் பிரித்துக் கூறப்படுகிறது. (3) பலவகைப்பட்ட வரவு செலவினங்களில், பொருளும் பணியும் மாற்றிக் கொள்ளப்படுகின்றன. இதர வகைகள் ஒரேவகைச் செலுத்தினங்களாக அமைகின்றன. உலகின் மற்றைய வகைகள் இவற்றுடன் கூடுதல் கணக்காகக் கொள்ளப்படுகின்றன.

456, 457, 458 பக்க உள்ள அட்டவணை 5 வகைக் கணக்குகளை விவரிக்கின்றது. அவை: (i) வீட்டுற்பத்தி,

1. இந்த விவரம் 1950-51ஆம் ஆண்டைப் பற்றியது. தேசீய வருமானக் குழுவினரின் முடிவான அறிக்கையைக் காண்க. பக்கம் 108, அட்டவணை 30.

(ii) தனியார் ஒதுக்கீட்டுக் கணக்கு, (Private Appropriation Account), (iii) அரசினர் ஒதுக்கீட்டுக் கணக்கு, (iv) ஒருங்கிணைப்புச் செய்து தங்கிய கணக்கு, (v) உலகின் நிகரப் பகுதிக் கணக்கு. இக் கணக்குகளனைத்தும் ஒன்றுக்கொன்று தொடர்பு கொண்டுள்ளன. ஒவ்வொரு கணக்கிலும் தோன்றும் வகைகள் கணக்கின் மற்றொரு பகுதியிலும் தோன்றும். ஒவ்வொரு பதிவுக்கும் எண்ணிக்கை கொடுக்கப்பட்டுள்ளது. அடைப்புகளில் காண்பிக்கப்பட்டுள்ள எண் மற்றொரு பகுதியில் அதுபோன்ற பதிவுள்ளதைக் காட்டுகிறது.

உள்நாட்டு உற்பத்திக் கணக்கு இயல்பான செயல் முறையுடையது. பகுதி வேறுபாடின்றி இந்திய யூனியனில் செய்யப்படும் உற்பத்திகளனைத்தும், இக் கணக்கில் காட்டப்படும். இதர நான்கு தேசீயக் கணக்குகளை இது குவித்து, ஒருங்கிணைப்புச் செய்கிறது. இது நுகர்வுச் செலவினம், மொத்த முதலீட்டுச் செலவினம், தனியார், அரசினர் துறைகளின் மூலமாக நடக்கும் ஏற்றுமதிப் பொருள்களின் தொகை ஆகியவைகளைக் காட்டுகிறது. இச் செலவினங்கள் தனியார் ஒதுக்கீட்டுக் கணக்கில், பற்றுக் கலனில் காட்டப்பட்டுள்ளன. அதேபோல் அரசினர் ஒதுக்கீட்டுக் கணக்கிலும், பற்றுக் கலனில் காட்டப்பட்டுள்ளது. இதே கணக்குகள் உள்நாட்டு உற்பத்திக் கணக்கில் வரவுக் கலனில் காட்டப்பட்டுள்ளன. உள்நாட்டு உற்பத்திக் கணக்கில் செலவினத்தில் காட்டப்படும் மொத்தக் கூட்டுத்தொகை, உற்பத்திக் காரணிகளுக்குக் கொடுக்கப்படும் தொகையெனலாம். இது பொருளாதார உழைப்பில் தோன்றும் உற்பத்தியைக் காட்டும். தேய்மானம் (depreciation), மறைமுகவரி, இதர கட்டணங்கள் முதலியவைகளுக்கான சரிக்கட்டல்களும் செய்யப்பட்டுள்ளன. செலவுப் பகுதியினமும், வருமானப் பகுதியினமும் கொண்டும் உள்நாட்டு உற்பத்திக் கணக்கினைக் கொண்டும் இருவழிகளால் தேசீய வருமானத்தை அளவிடலாம். (1) மொத்த வருமானத்தைக் கூட்டியது எல்லாக் காரணிகளுக்கும் கிடைத்த வருமானம் என முடிவுகட்டுவது. (2) மொத்த உற்பத்திப் பொருள்களையும் பணிகளையும், கூட்டி ஆண்டு முழுமைக்கும் இவ்வளவு எனத் தீர்மானம் செய்வது. எனவே ஒரே முறையின் இருதலைப்பட்ட கணக்கானபடியால் அவை இரண்டினையும் கூட்ட வேண்டும்.

**தனியார் ஒதுக்கீட்டுக் கணக்கின் வரவினங்களில், தனியார் துறையிலிருந்து பலவகைப்பட்ட வருமானங்கள் இன்னவென்றும் லாபம், கூலி, சம்பளம் போன்ற வரவுகள் தனியார் வீட்டுக்**

கணக்கின் பேரிலும் இதர நிறுவனங்கள் (firms) வகையிலும் காட்டப்பட்டிருக்கின்றன. இவை இந்திய யூனியனில் சம்பாதிக்கப் பட்டவை. மேலும், அரசினருக்குக் கொடுத்த கடன்மீது பெறும் வட்டியும் இதில் சேர்க்கப்பட்டுள்ளது. இறக்குமதிகளுக்கான செலுத்தினங்களால் ஏற்படும் நஷ்டத்தையும் சரிக்கட்டி வரவுப் பகுதியில் காண்பிக்கப்பட்டுள்ளது. 1950-51ஆம் ஆண்டில் இது ரூ. 20 கோடியாகக் கணக்கிடப்பட்டது. செலவினங்கள் பக்கத்தில் இவ்வாறு சம்பாதிக்கப்பட்ட வருமானங்கள் சொந்த நுகர்விற்கும், அரசினர்க்கு வரியாகக் கொடுக்கப்பட்டதும் போக, மிகுதி எவ்வளவு சேமிப்பாக உள்ளது என விளக்குகிறது. தனியார் துறையில் நுகர்வினுக்கும் சேமிப்பிற்குமான எண் தொகை கிடைக்காத காரணத்தால், அந்தக் கணக்கில் ந. நு. என்ற எழுத்துக்களால் நடப்பு நுகர்வினையும் சே என்ற எழுத்தால் சேமிப்பையும் காட்டியிருக்கிறது.

வரிகள் எனப்படுபவை தனியார்களிடமிருந்து அரசினருக்கு மாற்றிக் கொடுக்கப்படும் வருமானமாதலால், அரசினர் ஒதுக்கீட்டுக் கணக்கில் வருமானப் பகுதியில் சேர்க்கப் பட்டுள்ளது. அரசினரின் தொழிற்சாலைகளிலிருந்து விற்கப்பட்ட பொருள்கள், அவர்களது பணி, இவைகளும் வருமானப் பகுதியில் சேர்க்கப்பட்டுள்ளன. செலவினப் பகுதியில் அரசினர் சமுதாயத்திற்கு வழங்கும் பொருள், பணி முதலிய செலவினங்கள் (கல்வி, சுகாதாரம், ஆட்சி, பாதுகாப்பு இவைகள்) மற்றும் இதர மான்யங்கள், அரசினரின் சேமிப்புகள் ஆகியவை காட்டப் பட்டுள்ளன.

இந்திய யூனியன் மூலதன, வரவு செலவினங்கள் உள் நாட்டுச் செலவினங்களை ஈடுகட்ட, அந்நிய நாட்டுக் கடன் வகைகள், உள்நாட்டுச் சேமிப்பு, தேய்மான வகை, (தனியார் துறையும், அரசினர் வகைகளும்) ஆகியவைகளை, ஒருங்கிணைப்புச் செய்து தங்கிய கணக்கின் மூலம் காணலாம். ஐந்தாவதும் கடைசியுமான கணக்கு இந்திய யூனியனுக்கும் இதர நாடுகளுக்கு மிடையே நடந்த வரவு செலவு இனங்களைக் குறிக்கிறது.

**7. தேசீயக் கணக்குகளில் உள்ள இடைவெளிகள் :** எங்கெல்லாம் எண்ணுல் விவரமளிக்க இயலவில்லையோ, அங்குத் தொழிலை யனுசரித்து எழுத்துக்களைப் போட்டிருக்கிறது. 'தே' என்ற எழுத்து தேய்மானத்தைக் குறிக்கிறது. 'ந. செ.' என்பவை நடப்புச் செலவினம் என்றும் 'சே' என்பது தனியாரின்

சேமிப்பும் 'த. மு.' என்பவை தனியார் முதலீடு எனவும் கொள்ள லாம். இந்த நான்கு இனங்களையும் இரு தனிப்பட்ட ஒற்றுமை களைக் கொண்டு கீழ்க்கண்டவாறு எழுதலாம்.

(ந. செ.)+(த. மு.)—தே=ரூ. 91·5 நூறுகோடி
(ந. செ.)+சே. =ரூ. 93·4 நூறுகோடி

இந்த எழுத்துகளுக்கான தொகைகளை நாம் இன்னும் அறியாத காரணத்தால், தேசியக் கணக்குகளை எளிதில் தயார் செய்ய முடிய வில்லை. முதலீடுகள் எவ்வளவு, நுகர்வோரின் செலவுகள் எவ்வளவு என்பதை விவரமாகக் குறிக்க முடியும். நம் நாட்டின் பொருளா தார வளர்ச்சி எவ்வகையில் உள்ளது என்றும் நாம் கொள்கையாக அமைக்க வியலும். எழுத்துகளுக்கான புள்ளி விவரம் இல்லாத நிலையால் குறியீட்டெண்களைச் சேகரித்துவர நம் நாட்டுப் புள்ளி விவரச் செயலர்கள் ஊக்கத்துடன் கடமைபுரிவது இன்றியமை யாதது.

**இந்திய யூனியனின் தேசீயக் கணக்கு, 1950 - 51**[1]

| செலவினங்கள் | | வரவினங்கள் | |
|---|---|---|---|
| **உள்நாட்டு உற்பத்திக் கணக்கு** | | | |
| 1. மறை முகவரிகள் | | 5. நடப்புச் செலவினங்கள் பொருள்களிலும் பணி யிலும் | |
| 1·1 வரிகள் (25·1) | 4·3 | | |
| 1·2 சில்லறைக்கட்ட ணங்கள் (25·2) | 1·1 | 5·1 நுகர்பவர் (10) | ந·செ· |
| | | 5·2 அரசினர் துறை (20) | 5·6 |
| 2. தேய்மானத்திற்கான ஒதுக்கீடு (33) | தே | 6. மொத்த உள்நாட்டு முதல் அமைப்பு | |
| | | 6·1 தனியார் துறை (30·1) | த·மு· |
| | | 6·2 அரசினர் துறை (30·2) | 2·7 |
| 3. நிகர உற்பத்தி | | 7. நிகர ஏற்றுமதிகள் பொருளும் பணியும் (39) | —0·7 |
| 3·1 தனியார் துறை (14) | 94·8 | | |
| 3·2 அரசினர் துறை (27) | 0·7 | | |
| | | 8. மான்யங்கள் (21) | 0·4 |
| 4. மொத்தம் | தே+100·9 | 9. மொத்தம் | ந.செ. + த.மு·+8·0 |

1. தேசிய வருமானக் குழுவின் அறிக்கையில் 7வது அட்டவணையை அனுசரித் தும் 1948 - 49, 51-52 ஆண்டுகளின் மதிப்பீட்டினைக் கொண்டும் மத்திய புள்ளி விவர நிறுவனத்தால் வெளியிடப்பட்டவை. இது தயாரிக்கப்பட்டுள்ளது. இந்த எண்கள் 100 கோடி ரூபாய் மதிப்பினைக் காட்டுகின்றன.

### தனியார் ஒதுக்கீட்டுக் கணக்கு

| செலவினங்கள் | | வரவினங்கள் | |
|---|---|---|---|
| 10. நுகர்பவரின் செலவினம் (5·1) | ந· செ. | 14. உள்நாட்டு உற்பத்தியிலிருந்து வருமானம் (3·1) | 94·8 |
| 11. நேர்முக வரிகள் (26) | 2·3 | 15. தேசீயக் கடனுக்கான வட்டி (28) | 0·4 |
| 12. தனியார் சேமிப்பு (34·1) | சே. | 16. அயல்நாடுகளிலிருந்து சம்பாதித்த நிகர வருமானம் (40) | —0·2 |
| | | 17. மாற்றுச் செலுத்தினங்கள் (22) | 0·6 |
| | | 18. அயல்நாடுகளிலிருந்து நிகர பண உதவிகள் (36) | 0·1 |
| 13. மொத்தம் ந.செ.+சே.+ | 2·3 | 19. மொத்தம் | 95·7 |

### அரசினர் ஒதுக்கீட்டுக் கணக்கு

| செலவினங்கள் | | வரவினங்கள் | |
|---|---|---|---|
| 20. பொருளிலும் பணியிலும் அரசினர் செலவினங்கள் (5·2) | 5·6 | 25. மறைமுக வரிகள் (1) வரிகள் (1·1) | 4.3 |
| | | (2) இதர சில்லறைக் கட்டணங்கள்(1·2) | 1·1 |
| 21. மான்யங்கள் (8) | 0·4 | 26. நேர்முக வரிகள் (11) | 2·3 |
| 22. மாற்றுச் செலுத்தினங்கள் (17) | 0·6 | 27. உள்நாட்டு உற்பத்தியினின்றுவருமானம்(3·2) | 0·7 |
| 23. அரசினர்சேமிப்பு(34·2) | 1·4 | 28. தேசீயக் கடனுக்கு வட்டி (15) | —0·4 |
| 24. மொத்தம் | 8·0 | 29. மொத்தம் | 8.0 |

| செலவினங்கள் | | வரவினங்கள் | |
|---|---|---|---|
| **ஒருங்கிணைப்புச் செய்து தங்கிய கணக்கு** | | | |
| 30. மொத்த உள்நாட்டு மூலதன உற்பத்தி | | 33. தேய்மானத்திற்கான ஒதுக்கீடு (2) | தே |
| (1) தனியார் துறை (6·1) | த.மு. | 34. சேமிப்பு | |
| (2) அரசினர் துறை (6·2) | 2·7 | (1) தனியார் துறை (12) | சே |
| 31. அயல்நாட்டு நிகரக் கடன்கள் (37) | 0·6 | (2) அரசினர் „ (23) | 1·4 |
| 32. மொத்தம் | த.மு.+3·3 | 35. மொத்தம் | தே+சே+1·4 |

| செலவினங்கள் | | வரவினங்கள் | |
|---|---|---|---|
| **உலகின் நிகரப் பகுதி கணக்கு** | | | |
| 36. இந்தியாவிற்கு வந்த நிகரப் பண உதவிகள் (18) | 0·1 | 39. இந்தியாவிற்கு ஏற்றுமதி செய்யப்பட்ட பொருளும் பணிகளும் (7) | —0·7 |
| 37. இந்தியாவிற்கு நிகரக் கடன் உதவி (31) | —0·6 | 40. இந்தியாவினின்று பெற்ற நிகர வருமானம் (16) | 0·2 |
| 38. மொத்தம் | —0·5 | 41. மொத்தம் | —0·5 |

**8. நிகர தேசீய உற்பத்தியில் மாற்றங்கள் :** தேசீய வருமான மதிப்பீடுகள், பொருளாதாரத்தின் பல துறைகளின் உற்பத்தி, வழங்குதல், நுகர்வு இவற்றைச் சார்ந்த தகவல்களைக் கொடுக்கின்றன. பல தரப்பட்ட துறைகளின் எடையளவையும் விகிதங்களையும் கொடுக்கும் காரணத்தினால், வருங்காலத்தின் பொருளாதாரக் கொள்கையை அமைக்க முடிகிறது. இந்தத் தகவல்கள் ஓர் ஆண்டிற்கு மேலாகக் கிடைப்பின் உற்பத்தி, வருமானம், செலவு, இம் மூன்றையும் ஆண்டுதோறும் ஒற்றுமை, வேற்றுமைப்படுத்தி மதிப்பீடு செய்வதற்கும், பலதரப்பட்ட பொருளாதாரப் பகுதிகளின் மாறுதல்களைப் பற்றிச் சிந்திக்கவும் பயன்படும். தேசத்தின் பொருள் வளர்ச்சி எவ்வகையில் மாறுபடுகிறது என்பதையும் எளிதில் காணமுடியும். அடுத்துள்ள அட்டவணையில் 1948-49, 1949-50, 1950-51 இந்த மூன்று ஆண்டுகளின் நடப்பு விலைகளில் தேசீய உற்பத்தி எவ்வளவென்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. இவற்றை ஒப்பிட வேண்டுமானாலும், மாறுதல்களைக் குறிக்க வேண்டுமானாலும், விலை மாறுதல்களையொட்டிப் பொருத்தப்பாடுகளைச் செய்ய வேண்டி நேரிடுகிறது. 1948-49 விலைகளில் நிகர உற்பத்தியும், ஒரு நபருக்கு[1] (தலா) உற்பத்தி இன்னதென்றும் காண்பிக்கப்பட்டிருக்கிறது.

| | நிகர உற்பத்தி[2] | | ஒரு நபருக்கு (தலா) உற்பத்தி (ரூபாயில்) | |
|---|---|---|---|---|
| | நடப்பு விலைகள் | 1948-9 விலைகள் | நடப்பு விலைகள் | 1948-9 விலைகள் |
| 1948-49 | 86·5 | 86·5 | 246·9 | 246·9 |
| 1949-50 | 90·1 | 88·2 | 253·9 | 248·6 |
| 1950-51 | 95·3 | 88·5 | 265·2 | 246·3 |

ஒரு நபருக்கு (தலா) உற்பத்தி 1948 - 49-லிருந்து 1950-51-ல் 10% அதிகரித்துள்ளது. ஆனால், மேலெழுந்தவாரியாகப் பார்த்தால் மாறுதல்கள் ஏதும் காணப்படவில்லை. மாறாத விலைகளில் கணக்கிட்டால், இம்மாதிரியான நிலைமை நன்கு புரிகிறது. இந்த எண்கள் 1949-50-ல் 0·7% அதிகரித்தும் 1950-51-ல் முன்

1. தேசீய வருமானக் குழுவினரின் முடிவான அறிக்கை, பக்கம் 144.

2. 100 கோடி ரூபாயில் கணக்கிடவும்.

ஆண்டைவிட 0·9% குறைவாக இருந்துள்ளது.[1] எனினும், இவைகளிலிருந்து தேசீய வருமானத்தைக் குறித்துக் கொள்கைகளும், முடிவுகளும் செய்வது மிகவும் ஆபத்து எனலாம்.

**9. உலக நாடுகளுடன் ஒப்பிடுதல் :** உண்மையான நபர் வாரியான வருமானம் எவ்வளவிருக்கும் என்பதைக் கணக்கிட்டு திரு. கோலின் கிளார்க் பல நாடுகளின் வருமானத்தை அதே விலை மட்டத்திலும், நபர் ஒன்றுக்கு இவ்வளவு என்று தீர்மானம் செய்ய இவ்வளவு மக்கள் தொகை என்ற அடிப்படையிலும் கணக்கிட்டு 1925-34-ல் 200 என்றும், அமெரிக்காவிற்கு 1,381 என்றும், இங்கிலாந்திற்கு 1,069 என்றும், இத்தாலிக்கு 343 என்றும், பல்கேரியாவுக்கு 259 என்றும் கணக்கிட்டார். இந்தியாவில் 1955-ல் வெளிவந்த ஸ்டாடிஸ்டிகல் அவுட்லைன் ஆப் இந்தியா என்ற செய்தித்தாளில் டாட்டா தொழில் நிறுவனங்கள் (பொருளாதாரப் புள்ளி விவர இலாகா, அட்டவணை 5) கொடுத்தவை.

| தேசம் | நபர் வாரியாக, தேசீய வருமானம் ரூபாயில் | தேசம் | நபர் வாரியாக தேசீயவருமானம் ரூபாயில் |
|---|---|---|---|
| இந்தியா | 258 | ஜப்பான் | 820 |
| ஆஸ்திரேலியா | 4,340 | இங்கிலாந்து | 3,590 |
| கனடா | 6,160 | அமெரிக்கா | 8,840 |
| ஃபிரான்சு | 3,280 | | |

இதில் காணப்படும் புள்ளி விவரம் பொதுவான நிலையை எடுத்துக் காட்டுகிறது. இதைக்கொண்டு பல்வேறு நாடுகளில் உள்ள நல்வாழ்வு நிலையை அறுதியிட்டுக் கூற முற்படுவது பொருந்தாத செயலாகும். சர் ஜோஸய்யா ஸ்டாம்பு (Sir Josiah Stamp) அவர்கள் கூறியது போல் ஒரு நாட்டுடன் இன்னொரு நாட்டினை ஒப்பிடும்போது, அந் நாடுகளிலுள்ள மக்கள் வாழ்க்கை நிலை ஒரே தராதரத்தில் அமையக்கூடிய ஒற்றுமைக்குரிய முறைகளைப் பொறுத்துத்தான் நாடுகளின் வருமான நிலையை ஒப்பிடவேண்டும். தேசங்களில் பல்வேறு வேற்றுமைகள் இருப்பின், ஒற்றுமைப்படுத்திக் கூற முயல்வது சரியல்ல. ஏ. எல். பௌளி இது சம்பந்தமான தகவலை வெளி

1. தேசிய வருமானக் குழுவினரின் முடிவான அறிக்கை, பக்கம் 116.

யிட்டுள்ளது கவனிக்கத் தக்கது எனலாம். எண்ணிக்கை யளவினைக்கொண்டு இரண்டு தேசங்களின் விகிதங்களை ஒப்பிடுவது முறையல்ல. குடியிருப்பினைக் கொண்டோ, உடை யளவு, வீடுகள், உணவு ஆகியவைகளைக் கொண்டோ முடிவுக்கு வருவதும் பொருந்தாது. ஆதலால் இடைவெளிகள் அனைத்தும் நிரப்பப்பட வேண்டுமானால், வருமானக் கணக்கினை உபயோகிக்க வேண்டும். வருமான வழியிலும் மதிப்பீடுகளைச் செய்து இரண்டு வகையான புள்ளி விவரங்களைத் தயார் செய்து தனித்தனியே ஒன்றை மற்றொன்றுடன் ஒப்பிடலாம். கூலி, சம்பளம் பெற்றுத் தாமாகவே பணியாற்றும் தொழிலாளர்களைப் பற்றிய வருமான விவரங்களை ஒன்று திரட்டி, கணக்கெடுப்பு ஆண்டுக்கான தகவல் களைச் சேர்த்து அவற்றைக் கணக்கெடுப்புப் புள்ளி விவரத்துடன் ஒப்பிடவேண்டும். ஆண்டுதோறும் தொழிலாளிகளது கூலியி னின்று பிடித்தம் செய்யப்படும் பிராவிடண்ட் நிதி, ஓய்வு நிதி, சமூகப் பாதுகாப்பு நிதி, இவைகளைப் பற்றிய முழு விவரங்களையும் காட்டுதல் இன்றியமையாதது. விவசாயத் தொழிலாளர்கள், வீட்டு வேலையாட்கள் இவர்களைப் பற்றிய ஸர்வேக்கள் நடத்தித் தகவல்களைச் சேகரித்தல் அவசியம். நாளாக, நாளாக இம்மாதிரி யான அரைகுறைக் கணக்கெடுப்பு ஆண்டுதோறும் செய்யப்பட வேண்டியது[1] விரும்பத்தக்கது. நபர் வருமானம், வீட்டு வாடகை கள் குடிக்கூலிகள் இவைகளைப் பற்றி மிகவும் தனிப்பட்ட கவனத் துடன் தகவல்களைச் சேகரித்தல் இன்றியமையாத தெனலாம். வருமானவரித் தகவல்களைச் சேகரித்தலிலும், சிறுமாறுதல் தேவையெனலாம். நடப்பில் விவசாய வருமான வரிக் கணக்கில் எடுத்துக் கொள்ளப்படவில்லையாதலால், வருமானவரித் தகவல் சீரான அளவில், ஏற்றுக்கொள்ளத் தக்க முறையில் இல்லை. சிற்சில இராச்சியங்களில் விவசாய வருமான வரி விதிப்பு முறையைக் கையாண்டு வருவதால் விவசாய வருமானக் கணக்கெடுப்பது பற்றியோ, உணவின் அமைப்பினைக் கொண்டோ மாறுதல் காட்டும் நிலைமையுடன் ஒப்பிடுதல் சரியானதன்று. கூலியில்லாத இதர வருமானங்கள் வேறுபாடு உள்ளவைகளாக அமையக்கூடும். அநேக பொருள்கள்-உள்நாட்டில் தயாரிக்கப்படாதவை-வெளி நாட்டிலிருந்து இறக்குமதி செய்யப்படும். வேறு சில நாடுகளில் சில பண்டங்கள் இயற்கையிலேயே வசதியாகக் கிடைக்கின்றன. சிற்சில சமயங்களில் தேவையற்ற பொருள்களைக் கொண்டு வர நேரிடும். இயந்திரத் தொழில்களில் குறிப்பாகக் கட்டட வேலை, அச்சுத்தொழில், பொறியியல் இவைகளில் ஈடுபட்ட தொழிலாளர் வருமானத்தை ஒப்பிடுவது சரியல்ல. ஒவ்வொரு

1. அதாவது முழுக் கணக்கெடுப்பும் 5 ஆண்டுகள் காலவரையறையில் இருக்க வேண்டும்.

நாட்டின் அமைப்பு முறையைப் பொறுத்துதான் கூலி நிலை அமைந்துள்ளது. எனவே, பொதுப்படையான சில முடிவுகளை மேற்கொண்ட பின்னர், அவற்றின் எல்லைக்குட்பட்டால்[1] ஒப்பிடலாம். விளைவாக்கப்படும் உணவுப் பொருள் அனைத்தையும் விவசாயி சந்தைக்கு எடுத்துச் செல்லாது, தானே நுகர்ந்து கொள்ளுகிறன். குறிப்பாக, இது தேசீய வருமானக் கணக்கில் எப் பகுதியிலும் கவனிக்கப்படவில்லை. இந்தியாவின் தட்பவெப்ப நிலை மேற்குநாடுகளுடன் மாறுபடுவதால் உணவு, எரிபொருள், குடியிருப்பு, உடை இவைகளில் குறைந்த அளவில் செலவிட வேண்டியேற்படுகிறது. விலை விகிதங்களில் மாறுபாடுள்ள நாடுகளை ஒப்பிடுவது முறையல்ல.

**10. மூலதன ஆக்கம் :** நபர்வாரி அல்லது தலா வருமானம் மிகவும் குறைவாக அமைந்ததற்கு முக்கிய காரணம் இந் நாட்டில் மிகவும் குறைவான மூலதன ஆக்கம் ஏற்பட்டதே. உற்பத்திப் பொருள்களான இயந்திரங்கள், கட்டடங்கள், மின்விசை அமைப்புகள், போக்குவரவு வசதிகள் ஆகியவைகளில் ஆண்டுதோறும் நிகர அதிகரிப்பு மிகவும் குறைந்துள்ளது. திட்டக்கமிஷன் மூலதன ஆக்கம், 5 ஆண்டுத் திட்டப்படி, ஆண்டுதோறும் 5% ஆகக் கணக்கிட்டது. 1870 முதல் 1913 வரை இங்கிலாந்தில் 10% அதிகமாக மூலதன ஆக்கம் அமைந்திருந்தது. மிகவும் மேம்பாடான, ஆண்டுகளில் 15% வீதம் கூடியது. 1869-1913 வரை அமெரிக்க நாட்டிலும் மூலதன ஆக்கம் மிகவும் கூடுதலாகவே இருந்ததெனலாம். நிகர மூலதன ஆக்கச் சதவிகிதம் 13 முதல் 16 வரையும் மொத்த மூலதன ஆக்கம் சதவிகிதம் 21 முதல் 24 சதவிகிதம் வரையும் அமைந்தது. ஜப்பான் நாட்டில் 1900-09-ல் சராசரி 12% மூலதன ஆக்கம் ஏற்பட்டதாக மதிப்பீடு செய்யப்படுகிறது. ரஷ்ய நாட்டில் 1928 முதல் 38 வரையுள்ள பத்தாண்டுகளில் 20 சதவிகித அளவில் மூலதன ஆக்கமுண்டாயிற்று. இங்கிலாந்தில் 1870 முதல் 1913 வரை 10 முதல் 15 சதவிகிதமாக மாறுபட்டு அமைந்திருந்தது. அவ்வமயம் தேசீய வருமானம் 150 சதவிகிதத்திலிருந்தது. இந்த மதிப்பீடுகளிலிருந்து நாம் தெரிந்து கொள்வது என்னவெனில் தேசீய வருமானம் இரட்டிப்பாக ஒவ்வொரு நாட்டிலும் ஒரு தலைமுறை (25 முதல் 30 ஆண்டுகள்) ஆகியிருக்கிறது. இக் கால வரையறையுள் 12 முதல் 15 சதவிகித அதிகரிப்பு நிகர முதலீடும் செய்யப்பட்டுள்ளது. கடந்த பத்தாண்டுகளில் மக்கள் தொகை எந்த நிலையில் அதிகரித்ததோ,

1. ஏ. எல். பௌலியின் 'தி நேச்சர் அண் பர்ப்பஸ் ஆப் தி மெஷர்மெண்ட் ஆப் சோஷியல் ஃபெனுமினு' என்பதைப் பொருளாதார விசாரணைக் குழுவினர் தங்கள் அறிக்கையில் பக்கம் 117-ல் கூறியுள்ளனர்.

அதேபோல் அதிகரித்தால்தான் இந்த மேற்கோளை எடுத்துக் கொள்ளலாம். அதாவது மக்கள் தொகை ஆண்டுதோறும் 1¼% அதிகரித்தால்தான் 22 ஆண்டுகளில் 160 சதவிகிதத்திலும் கூடுதலாகத் தேசீய வருமானம் அதிகரிக்கும். மொத்த அதிக வருமானத்தில் மூன்றில் இரண்டு பங்கினை ஒதுக்கிவைத்தால்தான் நபர்வாரி வருமானத்தை இரட்டிப்பாக்க இயலும். திட்டக் கமிஷன் இதைப்பற்றிக் கூறும்போது, ஆரம்பகாலத்தில் விரைவாகவும், அதிகப்படி யளவான தொகையை முதலீடு செய்யவும் முற்படின், இது அதிக சிரமத்தைக் கொடுப்பதோடல்லாது மக்களுடைய நுகர்விற்குப் பெருத்த அளவு செலவிடப்படுமாதலால், நபர்வாரி வருமானம் 10 முதல் 15 ஆண்டுகள் வரை குறைவாகவே இருக்கும்.[1] மூலதன ஆக்க வளர்ச்சியைப் பற்றிக் குறிப்பிடும் காலத்தில் தேசீய வருமானத்தில் 1950-51-ல் 5 சதவிகிதம் அதிக ரித்து 1955-56-ல் 6¼% அதிகமாகி 1960-61-ல் 11% ஆகிவரலாம். நபர்வாரி வருமானம் 27 ஆண்டுகளில், அதாவது 1977-ல் இப்போதுள்ளதைப்போல் இரட்டிப்பாகலாம்.

**11. புள்ளி விவரத் தகவல்கள்—மாறுதல்கள் :** குறைபாடு களுள்ள புள்ளி விவரத் தகவல்களை மாற்றியமைக்கத் தேசீய வருமானக் குழுவினர் சில யோசனைகளைக் கூறியுள்ளனர். வட்டாரம் வட்டாரமாகப் புள்ளி விவரம் சேகரித்தலை ஐந்தாண்டுக் கொருமுறை அல்லது ஆண்டுதோறும், தீவிரமான முறையில் அல்லது, அரைகுறைக் கணக்கெடுப்பு முறையில் செய்தல் இன்றி யமையாதது. முடி மன்னர்களது நாட்டுப் பகுதிகள் நமது பல் வேறு இராச்சியங்களுடன் இணைப்புப் பெற்றவுடன் கணக்கெடுப்பு செய்யப்படாத இடங்களும், புள்ளிவிவரம் சேகரிக்கப்படாத இடங் களும் அதிகரித்தன. எனவே, அவ்வாறு உள்ள பகுதிகளையும் சேர்த்துக் கணக்கெடுப்பு நடத்தவேண்டும். தகவல் கொடுக்கும் நிறுவனமே நிலவரி சம்பந்தமானவைகளுக்கும் ஆட்சிப் பொறுப்பு களை ஏற்றுக் கொள்ளவேண்டும். விளைச்சலின் மதிப்பைக் கணக் கிட இப்போது நடைமுறையிலுள்ள 'அனிவாரி' முறையை மாற்றி, அதற்குப் பதிலாகத் தோட்டப்பயிர் வளர்ச்சிகளை ஆராய்ந்து தனியே பயிர் வளர்ச்சிக்கான தராதரத்தைக் கணக்கிட்டுத் தனியே அறுவடை புரிந்து இவ்வளவென்று கூறவேண்டும். விவசாய விலைகளைச் சிந்திக்கும்போது கிராமத்திலுள்ள உற்பத்தியாளர், தரகர், விவசாயிகளின் பொது விலைகளை எடுத்துக் கொள்ளுவதை விட, சில குறிப்பிட்ட சந்தைகளில் உள்ள விலைகளை மேற் கொள்ளுதல் நலம். கிராமச் சந்தைகளை (1) விற்பனையாளர்கள்

1. முதல் ஐந்தாண்டுத் திட்டம், பக்கம். 13 – 20.

அனைவரும் பயிரிடுபவர்கள். (2) விற்பனையாளர்கள் வெறும் தரகர்களே என இருவகையாகப் பிரிக்கலாம். முதற்பகுதியில் கூறப்பட்ட சந்தைகள் (அ) தனிப்பண்டச் சந்தை, (ஆ) ஒழுங்கு படுத்தப்பெருத சந்தைகள். இந்த அமைப்புகளைக் கொண்டு விலை மதிப்பீடுகள் செய்து உடனே அவ்வப்போது சீராக வர்த்தகம் செய்ய வேண்டும். தேசீய வருமான மதிப்பீட்டிற்கு, சுலபமாக விவசாய வருமானக் கணக்கினை ஆழ்ந்த அளவில் எடுக்கவியலும்.

1950ஆம் ஆண்டில் தேசீய மாதிரி ஸர்வே (National Sample Survey) என்ற நிறுவனத்தை மத்திய அரசினர் நியமித்து வெகு விரைவில் புள்ளிவிவரத்தைத் தயாரித்தும் சேகரித்தும் சீராக்கிக் கொடுக்க ஏற்படுத்தப்பட்டது. மத்திய அரசினர், இராச்சிய அரசினர், பஞ்சாயத்து ஆகியவைகள் அவ்வப்போது சேகரம் செய்யும் முறையைத் தொடர்ந்து நடத்தி வரவேண்டும். இவைகள் செய்யும் முறைகளைச் சரிவர நடத்தக் களப்பணி நிறுவனங்கள் (Field Agencies) அமைத்துப் பொருளாதார, புள்ளிவிவர அமைப்புகளை இந்திய தேசீய வருமான அலகினுல் (Indian National Income Unit) பராமரிக்க வேண்டும். இந்தத் தேசீய மாதிரி ஸர்வே நுகர்வோருடைய செலவினத்திற்கான புள்ளிவிவரங்களைச் சேகரிக்க வேண்டும். கிராமப் பகுதிகளில் மூலதன ஆக்கத்தைப் பற்றிய விவரங்களைக் கொடுக்கவேண்டும். தேசீய வருமான மதிப்பீடுகளைத் தயாரித்து அவற்றைப் பற்றிய ஆராய்ச்சிகள் நடத்தவேண்டியது மிகவும் அவசியம். இதற்காகத் தேசீய மாதிரி ஸர்வேயில் யோசனை கூற நல்ல திறமையுள்ள தொழில் நுட்பக் குழுவினர் இருப்பது அவசியம். திட்டக் குழுவினருக்கு ஆலோசனை கூற ஆராய்ச்சித் திட்டக் குழுவினர் போன்று இவர்கள் பணியாற்ற வேண்டும். இவ் விரண்டிற்குமிடையே தொடர்பு அமைதல் நலம் எனலாம். ஆராய்ச்சித் திட்டக் குழுவினரும், இந்தியப் புள்ளிவிவர நிறுவனத்தின் உறுப்பினர்கள் கூட்டாக இந்திய தேசீய வருமானத் தகவல்களைச் சரியா எனக் கண்காணிக்கவேண்டும். இந்தக் கூட்டுக்குழு அவ்வப்போது இந்தத் தகவல்களை மாற்றியோ, இன்னும் வலுப்படுத்தியோ அல்லது கூட்டியோ ஆராய்ச்சித் திட்டக்குழுவிற்கு ஒரு அறிக்கையைத் தருதல் வேண்டும். அதன் அடிப்படையில் தேசீயு வருமானக் குழுவினர் அதை எவ்வாறு அமைக்கலாம் என முடிவு செய்வார்கள். இவ்வாருன முறைகளால் தேசீய வருமானக் குழுவினர் பொருளாதாரத் திட்டத் துறைகளில் போதிய பயனுள்ள ஆராய்ச்சிகள் நடத்தி மிகவும் விவரமடங்கிய புள்ளி விவரங்களைக் கொடுக்க முயலுவர். தேசீய வருமானக் கணக்கு, தொடர்ந்து

நடக்கவேண்டிய பணியாதலால் தேசீய வருமான அலகு (National Income Unit) நிரந்தர அமைப்பாக ஏற்படுவது சரியே. தற்போது மத்திய அரசினரின் பொருளாதாரத் துறையில் இது ஒரு பகுதியாக உள்ளது. தேசீய வருமான அலகு, புள்ளி விவரங்களைச் சேகரிப்பதில் ஈடுபட்டுள்ள காரணத்தால் இதை மத்தியப் புள்ளி விவர நிறுவனத்துடன் (Central Statistical Organization) இணைப்பதுதான் முறை. இம்மாதிரி இணைப்புப் பெற்றால் ஒரே பணியை இரு தடவைகள் தொடர்ந்து செய்ய வேண்டி ஏற்படாது. மத்தியப் புள்ளிவிவர நிறுவனத்துக்குக் கிடைக்கும் தகவல்கள் உடனுக்குடனே தேசீய வருமான அலகுக்கும் கிடைக்கும். ஆங்கில நாட்டில் தேசீய வருமானத்திற்கு விடப்படும் வெள்ளை அறிக்கை (White Paper) போன்று தேசீய வருமான அலகும் ஆண்டுதோறும் ஓர் அறிக்கையை வெளியிடலாம்

# 19. செலாவணியும் நாணயமாற்றும்

**1. இந்தியச் செலாவணி முதற் காலம் (1801-35):** செலாவணி முறையைப் பிழையின்றி அறிய வரலாற்று முறையில் படிக்க வேண்டும். கிழக்கிந்தியக் கம்பெனி நம் நாட்டில் தோன்றிய காலத்தில் நம் நாட்டுச் செலாவணிமுறை அதிகப்படியான குழப்பத்தில் ஆழ்ந்திருந்தது. சற்றேறக்குறைய தரத்திலும் எடையிலும் வேறுபட்ட 994 வகையில் அமைந்த பொன், வெள்ளி நாணயங்கள் புழக்கத்தில் இருந்தன. தன் வியாபாரத்திற்கு இது இடர்ப்பாடானதால் இம் முறையை அறவே நீக்கி, சட்டப்படி விகிதமுள்ளதும் கம்பெனியின் முத்திரைச்சின்னம் இடப்பட்டதுமான பொன், வெள்ளி நாணயங்களை உருவாக்கிப் புழக்கத்தில் கொண்டு வந்தது. ஆயினும் பொன், வெள்ளியின் விலைகளில் ஏற்ற இறக்கங்கள் ஏற்பட்ட காரணத்தால் அலுவலக வீதத்திற்கும் அங்காடி விலைக்கும் ஒற்றுமையில்லாத காரணத்தால் தங்கம் மறைய ஆரம்பித்தது. இக் காலத்தில் இங்கிலாந்தில் இருந்த லிவர்ப்பூல் பிரபு தமது 'இராச்சியத்தில் உள்ள நாணயங்களைப் பற்றிய ஆராய்ச்சி' என்ற நூலில் ஒரே வகையான உலோகந்தான் இருப்பது நலம் என்று அறிவுறுத்தினர். கிழக்கிந்தியக் கம்பெனி நிர்வாகிகள் (directors) லிவர்ப்பூல் பிரபுவின் திட்டத்தை ஏற்றுக்கொண்டு வெள்ளி உலோகத்தையே நாணயமாகச் செய்தனர். இத் திட்டத்திற்கு முரணாக 1806-ல் சென்னைக்கும் வங்காளத்திற்கும் அனுப்பிய நாணயத்தில் பொன் நாணயத்தை அங்காடியிலிருந்து ஓட்டிவிடுவது அவர்களுடைய குறிக்கோள் இல்லை எனக் கண்டிருந்தனர். ஒரே உலோகத்தை ஏற்றுக் கொள்ளும் பொருட்டு அதிக காலம்வரை இரு நாணய விகிதத்தை அமலில் இருக்கவிட்டனர். பின்னர் 1818 முதல் சென்னை மாகாணத்தில் இந்தப் பொன் நாணயமாகிய பகோடா என்பது நீக்கப்பட்டது. $\frac{11}{12}$ பகுதியளவில் தூய்மையுள்ள, 180 குண்டுமணி எடையுள்ள தங்க நாணயங்களும் தங்க மோகராக்களும் அங்காடியிலிருந்தன. பகோடா நாணயங்கள் நடப்பில் இல்லாது

போதுலும், வர்த்தக முறைக்கு 15 : 1 என்ற விகிதத்தில் தங்கம் வெள்ளிகளிடையே விகித முறை நடந்துவந்தது. 1823-ல் பம்பாய் மாகாண ரூபாயும், சென்னை மாகாண ரூபாயும் ஒரே எடையிலும், ஒரே விகிதத்திலுமிருந்ததால், 1835 ல் கம்பெனி ஆணையின்படி கம்பெனி ஆளுகைக்குட்பட்ட எல்லாப் பிரிவுகளிலும் சென்னை ரூபாய் நாணயத்தைத் திட்டப் பணமாக்கினர்.

**2. இரண்டாம் காலம் (1835 - 74) :** பொதுமக்களின் விருப்பத்திற்கு இணங்கத் தங்கத்தில் மோகராக்கள், 5 ரூபாய், 10 ரூபாய், 30 ரூபாய் நாணயங்களை உற்பத்தி செய்ய 1835-ல் சட்டம் பிறப்பிக்கப்பட்டது. ஒரு பொது அறிக்கையின்படி கருவூலங்களில் பொதுப் பாக்கிகளின் நிமித்தம் தங்க மோகராக்களை 15 : 1 என்ற விகிதத்தில் பெற்றுக்கொள்ளலாம் எனக் கண்டிருந்தது. இதனுல் இரட்டை உலோக முறை கண்டிப்பற்ற முறையில் நடைபெற்றது. 1848-ல் உலகத்தின் பொன் உற்பத்தி அதிகரித்தது. அதனுல் அதன் விலை சரிந்தது. இதைக் கண்ணுற்ற மக்கள் கடனைப் பொன் நாணயத்தில் கொடுத்து ஆதாயமடைந்தனர். இதை அறிந்த கம்பெனியார் தாங்கள் விடுத்த 1841ஆம் ஆண்டின் அறிக்கையைத் திரும்பப் பெற்று, பொன் நாணயத்தை நாணய முறையினின்று அகற்றினர். 1850-ல் வெள்ளி உற்பத்தியில் ஏற்பட்ட குறைவினுல் வெள்ளி விலை மேலேறியது. உடனே பொதுமக்கள் வெள்ளி நாணயமாக வைத்திருப்பதைவிட உலோகமாக மாற்றினுல் ஆதாயமாக இருக்குமென்று உருக்கி உலோகமாக்கினர். அக் காலத்தில் பாங்குத் தொழில் வசதியின்மையாலும், தங்க நாணயம் விலக்கப் பட்டதாலும், பொதுமக்களால் வெள்ளி நாணயம் உருக்கி உலோக மாக்கினதாலும் செலாவணி முறையில் பெரிய இடர்ப்பாடு ஏற்பட்டது. நாணயக் குறைவின் காரணத்தால் வர்த்தக முறைகளில் பணத்திற்குப் பதிலாக தங்கக் கட்டிகளை உபயோகித்தனர். இன்னும் சில பகுதிகளில் அமெரிக்க உள்நாட்டுப் போராட்டத்தினுல் கிடைத்த உலோகக் கட்டிகளை நாணயக் கணக்கில் ஈடு கட்டினர். ஆதலால், 1864-ல் சர்க்கார் கருவூலங்களில் 10 ரூபாய், 5 ரூபாய் மதிப்புள்ள தங்க நாணயம் முழு மதிப்பும் அரை மதிப்புமுடையது வாங்கிக்கொள்ளப்படும் என்றும், தேவை என்று கேட்பவர்களுக்கு வசதிக்கேற்ப முழுச்சவரனிலும் அரைச்சவரனிலும் கொடுக்கப்படும் என்றும் விதித்தது.

1866-ல் அரசினர் மேன்ஸ்பீல்ட் குழுவினரை (Mansfield Commission) நியமித்து நிலையைப் பரிசீலனை செய்து, அதற்கேற்ப வழியைக் கண்டுபிடித்துப் பகருமாறு கேட்டனர். இக் குழுவினர்

செய்த பரிந்துரைகள் வருமாறு : (1) பொன் நாணயங்கள் ரூ. 15, ரூ. 10, ரூ. 5 அளவில் தயாரித்து வெளியிடுதல் வேண்டும். (2) நாட்டின் செலாவணி, தங்கம், வெள்ளி, காகிதம் இவற்றால் அமைதல் வேண்டும். அவசரமான முறையில் அரசினர் நடத்த விருப்பமின்றி, சற்று மந்தமான முறையில் இவற்றை நடப்பில் கொண்டுவரப் பிரயாசைப்பட்டனர். இதற்கிடையில் வெள்ளிக்கும் பொன்னுக்கும் இடையே உள்ள விகிதத்தில் ஆட்டம் கண்டது பொன் விலை ஏறவே 1868-ல் அரசினர் தங்க மோகராக்களை எடுத்துக் கொள்ளும்போது ரூ. 10, ரூ. 5-க்குப் பதிலாக ரூ. 10-8 என்றும் ரூ. 5-4 எனவும் எடுத்துக்கொண்டனர்.

**3. மூன்றும் காலம் (1874-92)** : மேற்கு ஐரோப்பிய நாடுகளில் 1873 முதல் வெள்ளியைச் செல்லாததாக்கி, பொன் திட்டத்தை உருவாக்க முயன்று கொண்டிருந்தனர். 1873-ல் ஜெர்மனி பொன் திட்டத்தில் சேர்ந்தது. அதற்கு ஓர் ஆண்டிற்குப் பிறகு முறையே ஸ்வீடன், டென்மார்க், நார்வே, லத்தீன் தேசங்கள் பின்பற்றின. அதிகப்படியான அளவில் செல்லாத வெள்ளி நாணயங்கள் அங்காடியில் மலிந்து கிடந்தன. உலக உற்பத்தியிலும் வெள்ளி அதிகப்படியாகியது. இதற்கு எதிராகத் தங்கத்தின் நிலை அமைந்தது. தேவை அதிகப்பட்டது. ஆனால், உற்பத்தியோ மிகக் குறைவாக இருந்தது. அதிகப்படியான வர்த்தகத்திற்கு ஏற்ப அதிகப்படியான நாணயச் செலாவணி உண்டாயிற்று. அதிகப்படி செலாவணி என்றால், அதிகப்படியான பொன் நாணயத்திற்குத் தேவை ஏற்பட்டது. எல்லா ஐரோப்பிய நாடுகளும், அமெரிக்க ஐக்கிய நாடும் இந்தப் பொன் திட்டத்தில் ஈடுபட்டன. இவ்வாறு செலாவணியினின்று புறக்கணிக்கப்பட்ட வெள்ளியை இந்தியாவில் இறக்குமதி செய்து நாணயமாக அமைத்தனர். இதன் முடிவாக அதிக அளவில் ரூபாய் நாணயங்கள் ஏற்பட்டன. அதனால் விலையேற்றம் கண்டது. நாணயமாற்று விதியில் ரூபாயின் தரம் குறைந்தது. 1875-ல் 58 பென்ஸ் விலைக்கு வந்த 1 அவுன்ஸ் எடையுள்ள வெள்ளி 1892-ல் $37\frac{1}{2}$ பென்ஸ் விலைக்குக் கீழிறங்கியது. 1871-ல் 2 ஷில்லிங் மதிப்பிலிருந்த 1 ரூபாய் நாணயம் 18.2-ல் 1 ஷில்லிங் 2 பென்ஸாகச் சரிந்தது.

1874 முதற் கொண்டே பொன் திட்டமும், பொன் நாணயமும் அமைத்தல் வேண்டுமென்று தொடர்ந்து பொதுமக்கள் கிளர்ச்சி புரிந்தனர். உலக நாடுகளில் இரட்டை உலோக (bimetallism) முறை சீரமைந்து வெற்றிபெற்று அதன் நிமித்தம் உலக நாடுகளனைத்தும் இரட்டை உலோக முறைகளைப் பின்பற்ற நேரும் என்று இந்திய அரசு கருதியது. அவ்வாறு ஏற்படின், வெள்ளி

நாணயம் மறுபடியும் மதிப்புப் பெற்று பொன் நாணயத்துடன் பழைய விகிதத்தில் அமைந்துவிடும். அதன் நிமித்தம் அரசினருக்கு ஏற்பட்ட இடர்களனைத்தும் போய்விடும் என்று வாளா இருந்தனர். 1867 முதல் 1899 வரை நான்கு முறை உலக நாணய மாநாடுகள் கூடி விவாதித்துங்கூடப் பழையபடி இரட்டை உலோக அமைப்பு ஏற்படவில்லை. ஏனெனில், இங்கிலாந்தும் இன்னும் மற்ற ஐரோப்பிய நாடுகளும் அந்த முறையை எதிர்த்தனர். இந்திய நாடும் பொன் திட்டத்தில் சேர்ந்தால் உலகத் தங்கத்தின் பெரும் பகுதி அகண்ட இந்திய நாட்டின் முழுமைக்கும் உரியதாகும். அதனால் இதர நாடுகளுக்குச் செலாவணிக்கேற்ப அளவில் தங்கம் இல்லாதுபோகும் என்ற காரணத்தால் விவாதத்தின்போது மேலே கூறிய நாடுகள் எதிர்த்தன.

**4. நான்காம் காலம் (1892-1914) ஹெர்ஷெல் குழுவினர்** (Herschell Committee, 1892): இக் காலத்தில் எதிர்பாராத விதமாகப் பொன் பரிவர்த்தனைத்திட்டம் உருவாகியது. சந்தர்ப்ப நடவடிக்கைகளுக்கேற்ப இது அமைந்தது. 1907-08-ல் ஏற்பட்ட பொருளாதார நெருக்கடியின்போது இது ஒருவாறு சமாளித்து வந்து முதல் உலக யுத்த ஆரம்பம் வரையில் (1914) நீடித்தது.

வெள்ளியின் உலகச் சந்தையில் விலை சரிந்துகொண்டே வந்தது அதனால் உலக நாணயமாற்று நிலையில் வெள்ளி ரூபாயின் மதிப்பு மிகவும் குறைந்தது. இதற்கான காரணங்களை ஆராய்வோம்: அமெரிக்க ஐக்கிய நாடுகளில் ஷெர்மன் சட்டத்தை[1] எடுத்து விடும்படியாக அங்கு ஏற்பட்ட மாபெரும் கிளர்ச்சியின் காரணமாக இந்தச் சங்கட நிலை ஏற்பட்டது. 1892-ல் பிரஸ்ஸல்ஸ் (Brussels) நகரில் உலக மாநாடு ஒன்று கூடி இதைப்பற்றி விவாதித்தது. இதனால் தக்க முடிவு காணலாம் என்றிருந்த இந்திய அரசாங்கத்திற்கு ஏமாற்றமே உண்டாயிற்று. உள்நாட்டுச் செலவிற்காக[2] இந்திய சர்க்கார் இங்கிலாந்திற்கு ஆண்டு

1. ஷெர்மன் சட்டப்படி (Sherman Act) அமெரிக்க ஐக்கிய நாட்டு அரசினர் ஆண்டுதோறும் 54 மிலியன் அவுன்ஸ் வெள்ளி வாங்கி, நாணயமாக அடித்துப் புழக்கத்தில் விட்டனர். இச் சட்டத்தை நீக்கம் செய்ய வேண்டி ஏற்பட்டால உலகச் சந்தையில் பெரும் அளவில் கொள்முதல் செய்யும் வாடிக்கைகாரரான அமெரிக்க ஐக்கிய நாடு வாங்காது போகும். அதனால் வெள்ளியின் தேவைகள் திடீரெனக் குறையலாம.

2. உள்நாட்டுச் செலவுகளுக்கான தொகையை இந்திய அரசாங்கம் இங்கிலாந்திற்குக் கொடுக்கவேண்டும. அச் செலவுகள் வருமாறு: வயது கடந்தவர்களுக்கான ஓய்வு கால ஊதியம (சிவில், ராணுவம்) பர்லோ விடுமுறை ஊதியம(furlough allowances) பொதுக் கடன்களுக்கும் ரெயில்வே கடன்களுக்கும் கொடுக்கப்பட வேண்டிய வட்டித் தொகை, ரெயில்வே ஆனுயிட்டீஸ் என்ற ஆண்டுத் தொகைகளும் கடன் கழிவு நிதிகளும் (ராணுவ சேவையினர் ஓய்வு ஊதியம் நீங்கலாக).

தோறும் பெருந்தொகை பொன் கணக்கில் செலுத்தவேண்டி ஏற்பட்டது. அதற்கு ஈடான ஒரு தொகையை வெள்ளி ரூபாயில் கொடுக்கும் போதெல்லாம், நாணயமாற்றில் ஏற்படும் விலைச்சரிவினால் எவ்வளவு ரூபாய் அனுப்புவதற்காக ஒதுக்கப் படவேண்டும் என்று வரையறுக்க முடியாதுபோயிற்று. இதனால் பட்ஜெட்டில் (Budget) எவ்வளவு தொகை இங்கிலாந் திற்கு அனுப்புவதற்காக ஒதுக்கவேண்டும் என்பதை அளவிட முடியாமல் போயிற்று.

அரசுப் பணியிலும் இதர தனியார் பிரிவில் பணியாற்றும் ஐரோப்பிய மக்கள் தங்கள் நாட்டிற்குப் பணம் அனுப்புவதில் ஏற்பட்ட இடர் அதிகரித்ததைக்கண்டு இந்த நிலைக்கு ஒரு தீர்வு காணவேண்டுமென்று புகார் செய்தனர். இந் நாட்டில் அவர்கள் தங்கள் சம்பளத்தை ரூபாயில் பெற்றனர். ஆனால், தங்கள் சொந்த நாட்டிற்கு ஸ்டர்லிங் நாணயத்தில் மாற்றி அனுப்ப நேரிட்டது. ஆதலால் சம்பளத்தில் பெரும் பகுதி செலவிட ஏற்பட்டது. மதிப்பு குறைவு பெறும் ரூபாய் நாணயமுள்ள இந்திய நாட்டினுள் இங்கிலாந்தின் மூலதனம் நுழைய மறுத்தது. ஆங்கிலேயர் தொழில் துறையிலோ அரசினரின் கடன் பத்திரங் களிலோ தங்கள் நிதிக்குவையைப் போடத் துணியவில்லை. இங்கிலாந்து மக்கள் தங்கள் மூலதனத்தைத் திரும்பப் பெறுதலிலும், தாம் பெற்ற லாபப்பங்கினை இங்கிலாந்திற்குக் கொண்டு போவதிலும் அதிக இழப்பு ஏற்படுவதைக் கண்டனர். வர்த்தகத்தினருக்கு இதனால் தொழிலில் அதிக இழப்புகள் உண்டாயின. 1892-ல் அரசினரால் அமைக்கப்பட்ட ஹெர்ஷல் குழுவினர் (Herschell Committee) இச் சங்கடமான நிலைகளைக் கண்ணுற்று, அதற்கேற்ற பரிகார முறைகளை எடுத்துக் கூறும்படி உத்தரவு இடப்பட்டனர். அதன்படி இக் குழுவினர் பகர்ந்த முறைகளாவன: (1) தங்கத்திலோ அல்லது வெள்ளியிலோ மாற்ற இயலா ஒருவகை நொண்டிச் செலாவணித் திட்டம் அமைத்தல், (2) அரைகுறையான அளவில் தற்காலிகமாகப் பொன்னைச் செலாவணி உருவில் வைத்துக்கொண்டு அதன் முடிவில் பொன் திட்டத்தை நிரந்தரமாக அமைப்பது.

அரசினர் இந்த யோசனைகளை ஏற்றுக்கொண்டு அதன்படி ஒழுங்கு முறைகளை நடப்பில் கொண்டுவந்தனர். 1870ஆம் ஆண்டிலுண்டான இந்திய நாணயச் சட்டத்தையும் 1882-ல் ஏற்பட்ட செலாவணித் தாள்கள் (paper Currency) சட்டத்தை யும் திருத்தி அமைத்தனர். (2) இந்திய நாணயச் சாலைகளில் வெள்ளி நாணயம் அச்சடிப்பது தடுக்கப்பட்டது. அரசினர்

தங்கள் விருப்பத்திற்கேற்ப வெள்ளி ரூபாயைத் திரும்பவும் அச்சடிக்கலாம். (3) சர்க்கார் மூன்று அறிக்கைகள் (three notificatioꝑs) விடுத்தனர். முதலாவது அறிக்கையின்படி பொன் நாணயங்களை நாணய சாலைகளில் ரூபாய்க்கு 16 பென்ஸ் வீதத்தில் மாற்றிக்கொள்ளலாம் என்றும், இரண்டாவது அறிக்கையின்படி முழுச் சவரனிலும் அரைச் சவரனிலும் முன் கூறிய விகிதத்தில் பொதுக் கடன்களைக் கட்டலாமென்றும், மூன்ருவது அறிக்கையின்படி செலாவணித் தாள்களை முன்கூறிய விகிதத்தில் கரன்ஸி அலுவலகத்திலிருந்து பெறலாம் என்றும் முடிவு செய்யப் பட்டது. அதன் விளைவாகப் பொதுமக்கள் பொன் அல்லது பொன் நாணயங்களை ரூபாய் அல்லது கரன்ஸி நோட்டாக மாற்ற வசதி பெற்றனர். ரூபாய்க்கு 1 ஷில்லிங் 4 பென்ஸ் விகிதத்தில் பொன் நாணயங்களைக் கடன்கட்டும் வகையிலும், செலாவணித் தாள்கள் பெறும் வகையிலும் மாற்றிக்கொண்டனர்.

செலவின்றி வெள்ளி நாணயம் அச்சடித்துத் தருவதை நிறுத்திய காரணத்தால் நம் நாட்டினுள் வெள்ளி இறக்குமதி யாவது நின்றுவிடும். இரண்டாவது, அந்த வெள்ளியை நாணயமாக அடிப்பதும் தவிர்க்கப்படும். இந்தத் தடுப்பு முறையினுல் வெள்ளி ரூபாயின் மதிப்புக் கூடலாம் என்று எதிர்பார்த்தனர். அவற்றின் விளைவாக இங்கிலாந்துக்கு உள் நாட்டுச் செலவு குறையுமென்றும், அந்நிய நாட்டு மூலதனம் நம் நாட்டிற்கு அபரிமிதமாகக் கிடைக்கும் என்றும் எதிர்பார்த்தனர். அரைகுறை முறையில் பொன் திட்டம் ஆரம்பிக்கப்பட்டதால் ஒரு குறிப்பிட்ட காலத்தின்பின் பொன் நாணயத் திட்டம் நிரந்தர மாக வேரூன்றும் என்று எண்ணினர்.

5. **பௌலர் குழுவினர்** (Fowler Committee) **1898 :** 1898 வரையில் நிலை மாறும் காலமாக இருந்தது. அப்போது செலாவணித் திட்டத்தில் ஏற்பட்ட குழப்பத்தில் தீர்வு காணவே பௌலர் குழுவினர் வந்தனர். இந்தக் காலத்தில் நாணயமாற்று விகிதம் இயல்பாகவே 1 ஷில்லிங் 4 பென்ஸாக அமைந்தது. இக் குழுவினர்முன் பல திட்டமுறைகளைப் பலர் பிரஸ்தாபித்தனர். முன்னுல் வங்காள பாங்கின் முதல்வரான எ. எம். லின்ஸே (A. M Lindsay) விவரித்த பொன் பரிவர்த்தனைத் திட்டம் ஏற்றுக் கொள்ளப்பட்டு, அமலுக்கு வந்தது.

தடங்கலில்லாத பொன் போக்குவரத்துள்ள சக்தியான பொன் திட்டம்தான் இந்திய நிலைமைக்கு உகந்தது என்று இயம்பினர். இம் முடிவை எய்த அந்தக் குழுவினர் இட்ட

திட்டங்கள் : (1) முழுச் சவரன், அரைச் சவரன், இவைகளைக் கூலியின்றி அச்சடிக்கவேண்டும். ஆயினும், வெள்ளி நாணயங்கள் அச்சடித்தல் கூடாது. (2) நாணய மாற்று விகிதம், 1 ரூபாய்=1 ஷில்லிங் 4 பென்ஸ் என்பது நிரந்தரமாக அமைய வேண்டும். (3) வெள்ளி ரூபாய் எல்லையற்ற செலாவணி யாக இருக்கவேண்டும். (4) அரசினர் பொன்னிற்கு ஈடாக ரூபாய்கள் கொடுக்கலாம். ஆயினும், ரூபாய்க்கு ஈடாக பொன் கொடுக்கவேண்டுமென்ற அவசியம் கிடையாது. (5) ரூபாயைப் பொன் சவரனுக மாற்ற, நாணயச் சாலைகளில் வெள்ளி ரூபாய்களை அச்சடித்து வரும் லாபத்தைப் பொன் நிதியில் போடவேண்டும். கருவூலங்களிலிருந்து வரக்கூடிய கரன்ஸித்தான் நிதியிலிருந்தும் தொகைகளிலிருந்தும் அதைத் தனியே வைக்கவேண்டும். இதை இனி யடுத்துவரும் பாதக வாணிகக் கொடுப்பல்முறைக்குப் பயன் படுத்தலாம்.

பௌலர் குழுவினரின் யோசனைகளை அரசினர் ஏற்றுக்கொண் டனர். அதன்படி முழுச் சவரனும் அரைச் சவரனும் நாடு முழுமையும் செலாவணிக்கு உகந்தவை என்று 1899-ல் சட்டமி யற்றினர். குழுவினர் திட்டமிட்ட விகிதத்திலே அவைகள் மாற்றப் படும் எனக் கண்டிருந்தது. 1900-ல் அரசினர் ரூபாய் நாணய மடித்ததில் பெற்ற லாபத்தைப் பொன் திட்ட நிதி என்ற கணக்கில் போட்டு வைத்தனர். இம் முறையே மறுபடியும் நடப்பில் இருந்து வந்தது.

**6. 1898 முதல் 1907 வரையில் ஏற்பட்ட வளர்ச்சிகள் :** மக்கள் பெருக்கமும் தொழில் வர்த்தகமும் கூடியதன் காரணத் தாலும் செலவின்றி நாணயமடித்தல் தவிர்க்கப்பட்டதாலும் நெருக்கடி தோன்றியது. இதைச் சமாளிக்க 1898ஆம் ஆண்டின் இரண்டாம் சட்டம் என்ற ஒன்றை அமலாக்கினர். அதற்கேற்பத் தற்காலிகமாய், இந்திய மந்திரி (Secretary of State) இந்திய கௌன்சில் உண்டியல்களை[1] லண்டனில் விற்கலாமென்றும் விற்று வந்த தொகையைப் பொன்னில் இந்திய செலாவணித்தாள் நிதிக்

1. ஒப்ப அறிவிப்பின் மூலம் வாரம் ஒரு முறை புதன்கிழமைதோறும் இந்திய மந்திரி கௌன்சில், உண்டியலை விற்பனைக்குக் கொண்டு வருவார்கள். இதற்கு மேலாக இன்னும் சில தனிப்பட்ட உண்டியலகளையும் இதர தினங்களில் விற்பனை செய்கிறார். பொதுவாக 2 வார அளவில் இந்த உண்டியல்கள் பணமாக மாறி இந்தியாவிற்கு வந்து சேருகின்றன. இக்கால எல்லை வரையிலும் வட்டி இழக்க விரும்பாதவர் தாங்கள் அனுப்பவேண்டியதைத் தந்திமூலம் அனுப்பலாம். இம் முறையில் ரூபாய்கள் கொடுக்கப்படும். கௌன்சில் உண்டியல்கள் எனப்படுபவை ஒரு பொது வகையான பெயரைக் குறிக்கும். மேலே விவரிக்கப்பட்ட எல்லா உண்டி யல்களையும் அவ்வாறே அழைக்கவேண்டும். (சேம்பர்லின் குழுவினரின் அறிக்கையில் பாரா எண் 170-171-ம் ஜே. எம். கீன்ஸ் அவர்களுடைய நூலாகிய 'இந்திய நாணயமும் நிதிமுறையும்' பக்க எண் 104-105).

கணக்கில் வரவு வைத்துக்கொள்ளலாமென்றும் முடிவாயிற்று. இவ்வாறு சேர்ந்துள்ள பொன்னுக்கு ஈடாக இந்திய நாட்டில் இந்தியக் கருவூலங்களைப் பாதிக்காது தனியாகக் கரன்ஸித் தாள்கள் அச்சடித்துக் கொடுக்கலாம். பொன் நாணயச் செலாவணியை நிலைநிறுத்தப் பாடுபட்டனர். ரெயில்வேக்க ளிலும், தபால் நிலையங்களிலும் இதர சர்க்கார் அலுவலகங்க ளிலும் பொன் நாணயத்தை நடைமுறையில் கொண்டுவரும்படி பொதுமக்களுக்குப் போதித்தும் எதிர்பார்த்த அளவு பயன் கிடைக்கவில்லை. 1900த்தில் பெருமிதமான அளவில் வெள்ளி நாணயங்களைத் திரும்பவும் அரசினர் புகுத்தினர். செலாவணித் தாள் பெட்டியில் (Paper Currency Chest) சேர்ந்திருந்த பொன்னைக் கொண்டு வேண்டிய அளவு வெள்ளியை வாங்கினர். 1898-ல் இயற்றப்பட்ட இரண்டாவது சட்டம் தற்காலிகமானது தான். செலாவணித் தாள்கள், பெட்டியில் சேர்ந்துள்ள பொன் லண்டனிலுள்ள இந்திய மந்திரியின் கைவசத்தில் இருக்கும். அவர் அத்தொகை அனைத்தையும் இந்திய அரசினருக்கு மாற்றலாம் அல்லது இந்திய அரசாங்கம் அங்குச் சேர்ந்துள்ள ஒதுக்கு நிதிக் கேற்ற அளவில் ரூபாய் நாணயங்களையும் அவர்கள் ஈடு கொடுக்கும் இதர கரன்சி நோட்டுகளுடன் சேர்த்து வெளி யிடலாம். இச் சட்டம் 1900லிருந்து இரண்டு ஆண்டுகளுக்கு நீடிக்கப்பட்டது. அவ்வமயம் இந்திய மந்திரி ரிசர்வில் உள்ள பொன்னைக்கொண்டு வெள்ளியை வாங்கியனுப்பினர். இலண் டனில் சேர்த்துள்ள ரிசர்வ் நிதியை எவ்வகையான குறிப்பான முறைகளில் செலவிட்டனர் என்பவை வருமாறு: (1) இந்தியாவில் நாணய வெளியீட்டிற்குத் தேவைப்படும்போதெல்லாம் வெள்ளி வாங்கலாம். (2) கவுன்ஸில் உண்டியல்களைக் கேட்பவரில் லாமல்செய்து விற்பனையைக் காப்பாற்றலாம்.[1] (3) இது ஒரு நிதி போன்றது. இதில் தனக்குத் தேவையற்றபோது கிடைக்கும் பணத்தைப் போட்டு வைக்கலாம். எடுத்துக்காட்டாக இந்தியா மந்திரிக்குத் தேவையற்றபோதுகூட கௌன்சில் உண்டியலை விற்கலாம். இது நாணய விகிதம் 1 ஷி. 4 பென்ஸை விடக் கூடியோ குறைந்தோ போகக்கூடாது என்றுள்ளது. இந்தச் சட்ட நுணுக்கங்கள் 1902 ஆம் ஆண்டில் ஏற்பட்டன. 1905ஆம் ஆண்டில் 5 மிலியன் பவுன் மதிப்புள்ள தங்க நிதியை இந்தியா வினின்று கப்பல்மூலம் இங்கிலாந்துக்கு அனுப்பினர். லண்டனி

1. இம்முறையின்படி கௌன்சில் உண்டியல்களை எதிர்முறையில் பயன்படுத்தி ரூபாய நாணயங்களைக் கிடைக்காதபடி செய்தனர். இந்திய நாணயப் பரிவர்த்தனை சக்தியற்ற நிலையில் இருப்பின், சர்க்கார் திட்ட விகிதமாகிய 1 ஷி. 4 பென்ஸுக்கு ரூபாய்கள் கிடைப்பதில்லை. அவ்வமயம் இந்தியா மந்திரி கௌன்சில் உண்டியல மூலம் பணம் சேகரிக்க முடியாதுபோய், இந்தியா மீது கடன் எழுப்பியோ எதிர் கௌன்சில் உண்டியல் எழுதியோ வாங்கிக் கொள்வர்.

லுள்ள பாங்க் ஆப் இங்கிலாந்தில் (Bank of England) உள்ள செலாவணித்தாள் பெட்டியில் (Paper Currency Chest) இத் தொகையைப் போட்டு வைத்தனர். முதன் முதலில் 'கான்ஸல்' கடன் பத்திரங்களில் இத் தொகையைப் போட்டனர். பின்னர் 1903-ல் தேசீய யுத்தக் கடன் பத்திரங்களிலும் இதர கடன் பத்திரங்களிலும் போடத் தலைப்பட்டனர். இதனால் பௌலர் குழுவினரின் யோசனையிலிருந்து வழுவ ஆரம்பித்தனர். இம் மூன்று நிதிகள் காகிதச் செலாவணி நிதி, பொன் நிதி (1906 முதல் இதைப் பொன் திட்ட நிதி என்றழைத்தனர்) இந்தியா மந்திரிக் கணக்கின் இருப்பு எனப்படும். இவை மூன்றையும் ஒன்றாக்கி அவசியத்திற்கேற்ப நிதி சம்பந்தமானதும், வரி விதிப்பு சம்பந்தமானதுமான செயல்களுக்குப் பேதமின்றி உபயோகித்தனர்.[1]

ரூபாயை அச்சிடுவதால் வரும் ஆதாயத்தை லண்டனுக்கு அனுப்பி அதைப் பலனுள்ள முதலீட்டில் போடச் செய்தனர்.[2] இதற்கான முறையைக் கையாளும் வகையை நோக்கின், லண்டனில் உள்ள பொன் ரிசர்வ் நிதியிலிருந்து பொன்னை எடுக்க இந்தியாவில் அதிகப்படியான கரன்சித் தாள்கள் அச்சடித்து வெளியிட்டனர் என்பது தெளிவாகும். எடுத்துக் காட்டாக, இந்தியாவில் 15,000 ரூபாய் பெறுமான தாள்கள் அச்சடித்தவுடன் இந்தியா மந்திரி 1,000 பவுன் நிதியை எடுத்து முதலீட்டில் போடுவார். 1906ஆம் ஆண்டில் கரன்சி ரிசர்வ் நிதிக்குப் பதிலாக வெள்ளி நாணய ரிசர்வு நிதியை அமைத்து அதைப் பொன் திட்டத்தின் கிளையென அழைத்தனர். நாணயப் பரிவர்த்தனையில் 1 ஷில்லிங் 4 பென்ஸ் வீதத்திற்கு மேல் ஏற்றமேற்பட்டால், சர்க்கார் சந்தைக்கு எதிராக ஏலங்கேட்டு சர்க்கார் வீதத்தில் வெள்ளி ரூபாய்களைக் கொண்டு வருவார்கள். 1904ஆம் ஆண்டில் இந்தியா மந்திரியின் அறிக்கைப்படி லண்டனில்

1. சேம்பர்லின் குழுவினர் அறிக்கை அக்காலநிலையைப் பின்வரும் முறையில் பகருகின்றது. 'இந்திய சர்க்காரின் வசம் இருந்த நிதியும், லண்டனில் மந்திரி காரியாலயத்தில் இருந்த நிதியும, பொன்திட்ட நிதி லண்டனிலும், செலாவணித்தாள் ரிசர்வ் நிதி இந்தியாவிலும் இருந்தன. ஆயினும், பின்வரும் விளக்கத்தின் மூலம் ஒரே நிதியைச் சேர்ந்தவை எனலாம். இந்த நிதியின் பற்பல பிரிவுகளில் காணப்பட்ட தலைப்புகளினின்று அவை எவ்வகைப் பொறுப்புகளுக்கும், செயல்முறைகளுக்கும் உரியவை எனப் புலப்படும். ஒவ்வொரு பகுதியிலும் கொடுக்கப்பட்ட பெயர் அந்தப் பகுதிக்கான பணியைப் புரிகிறது. கொள்கையிலும் நடைமுறையிலும் அதில் கண்டுள்ள தனிப்பட்ட பகுதிகளைத் தனிபட்ட வேலைகளுக்காக நிதி போனறு அமைக்கவில்லை எனலாம். (அறிக்கை, 9வது பாரா.)

2. ஒரு ரூபாயில் உள்ள வெள்ளியின் மதிப்பீட்டு விலை 10 பென்ஸ் ஆகும். ஆயினும், அதற்குக் கொடுக்கப்பட்ட மதிப்பு 1 ஷில்லிங் 4 பென்ஸ். நாணயமாக்கப்பட்ட ஒவ்வொரு ரூபாயிலும் 6 பென்ஸ் ஆதாயம் கிடைத்தது. இதில் கிடைத்த ஆதாயத்தில் பாதியை ரெயில்வேக்களுக்குச் செலவிடவேண்டுமென்று இந்தியா மந்திரி தீர்மானித்தார். ஆனால், அது நடைமுறையில் கொண்டுவரப்படவில்லை.

வாங்கும் கௌன்சில் உண்டியல்கள் 1 ஷில்லிங் 4 பென்ஸ் விகிதத்திற்கு சற்றேறத்தாழக் கொடுக்க இயலும் என வரையறுக்கப்பட்டது.[1] இவை இந்தியாவில் செலுத்தப்பட்டால் உடனுக்குடனே வெள்ளி நிதியிலிருந்து சரிகட்டிக் கொடுக்கப்படும்.

**7. 1907-08ஆம் ஆண்டின் நெருக்கடி :** இந்தியாவில் 1907-08-ல் ஏற்பட்ட மட்டமான விளைச்சலால் அறுவடை மிகக் குறைந்து, ஐரோப்பிய நாடுகளில் மந்த நிலை (Depression) ஏற்பட்ட காரணத்தால் இந்திய நாணயப் பரிவர்த்தனையில் தளர்ச்சி கண்டது. கோதுமை, சணல், பருத்தி இவற்றை ஏற்றுமதி செய்து வந்திருந்தும் இந்த காலத்தில் அவற்றைக் கேட்பாரில்லாது போயினர். வெள்ளி இறக்குமதி அதிகரித்த காரணத்தால் விலைகளில் கடும் இறக்கம் ஏற்பட்டது. வெளி நாட்டினர் பொன்னிலே கணக்கைப் பெற விழைந்தனர். இதனுல் ரிசர்வ் நிதியிலிருக்கும் பொன்னும், கரன்சித்தாள் ரிசர்வு நிதியிலிருக்கும் பொன்னும் எடுத்துச் செலவழிக்கப்பட்டன. இம் முறைகள் எதிர் பார்த்த பலனளிக்கவில்லை. இந் நிலையை எவ்வாறு ஈடுபடுத்துவது என்று ஆலோசனை செய்து இந்தியா மந்திரி இந்திய அரசாங்கத்தை இந்தியக் கௌன்சிலின் எதிர் உண்டியல்[2] என்ற பெயரால் தந்தி மூலமாக 1 ஷில்லிங் $3\frac{29}{32}$ பென்ஸ் விகிதத்தில் ஏற்றுக் கொள்ளும்படி கூறினுர். எதிர் உண்டியல்களைக் கொடுப்பதற்கான தங்கத்தைக் கரன்சித்தாள் ரிசர்விலிருந்து எடுத்துக்கொண்டு, அதற்கு ஈடாக ரூபாய்களை இந்தியக் கருவூலங்களிலிருந்து மாற்றினுர்கள்.[3] தங்கத் திட்ட நிதியில் உள்ள ஸ்டர்லிங் (Sterling)

1. 1893ஆம் ஆண்டு வரை கௌன்சில் உண்டியலின் விற்பனை, இந்திய அரசாங்கம் இந்திய மந்திரிக்கு உள்நாட்டு நிர்வாகத்திற்காகக் கொடுக்க வேண்டிய தொகைக்கானது. இந்த உண்டியல்கள் இன்னும் பல முறைகளிலும் பலனுள்ளவையாக அமைந்தன. இந்தியாவிற்குப் பணம் அனுப்ப இது ஒரு தக்க முறையாகும். 1898ஆம் ஆண்டிற்குப் பிறகு நாணயப் பரிவர்த்தனை ஒழுங்கான நிலைபெற இது தக்க உதவி புரிந்தது.

2. இவை கௌன்சில் உண்டியல்களுக்கு எதிர் முறையில் இருந்ததால் இப்பெயர் பெற்றன. கௌன்சில் உண்டியல்களை இந்தியா மந்திரி லண்டனிலிருந்து வெளியிட்டார். எதிர் கௌன்சில் உண்டியல்களை இந்தியச் சர்க்கார் வெளியிட்டனர். கௌன்சில் உண்டியல் ஸ்டர்லிங் அல்லது பொன்னிற்கேற்ற அளவு ரூபாய் நாணயம் கொடுக்கவல்லது. எதிர் கௌன்சில் உண்டியல் ரூபாய்க்கு ஏற்பத் தங்கம் கொடுக்கும் தன்மையுடையது நாணய பரிவர்த்தனையினின்று நோக்குங்கால், கௌன்சில் உண்டியல் விகிதத்தை 1 ஷில்லிங் 4 பென்ஸுக்கு மேற்போகாது தடங்கல் செய்தது. எதிரிடை உண்டியல் அவ்விதம் 1ஷில்லிங் 4 பென்ஸுக்குக் கீழ்ப் போகாமல் தடுத்தது.

3. இந்திய செலாவணித்தாள் முறையைப்பற்றிப் பின்னர் நோக்கின் இந்தியாவில் பொன், வெள்ளி (நாணயமும் உலோகமும்) ரூபாய் பத்திரங்களும், லண்டனில் ஸ்டர்லிங்கும் தங்கமும் இருந்தன. ஒரு பகுதியில் நிதியில் இறக்கம் ஏற்பட்டால் இன்னொரு பகுதியில் அதற்கு ஈடான தங்கமோ வெள்ளியோ கூட்டினுல் சரிகட்ட முடியும்.

பத்திரங்களை மிக்க நஷ்டமான விலையில் விற்று, இந்த எதிர் உண்டியல்களைக் கொடுத்தார்.

இம் முறைகளால் லண்டனில் உள்ள செலாவணித் தாள் பெட்டியிலிருந்த நிதி 7 மிலியன் பவுன் பொன்னிலிருந்து $1\frac{1}{2}$ மிலியனுகக் குறைந்தது. இந்தியாவில் நிதியிலிருந்த தங்கம் முழுமையும் குறைந்தது. இந்த நெருக்கடியிலிருந்து தெரிந்துகொண்ட படிப்பினை என்னவெனில், நிலைமையைச் சமாளிக்க வேண்டிய அளவிற்கு நிதி பொன்னில் வைத்திருப்பது இன்றியமையாதது. 1912-ல் இந்திய மந்திரி இந்திய அரசினர், பொதுமக்கள் எண்ணங்களுக்கேற்ப 25 மிலியன் பவுன் தங்கத் திட்ட நிதியாக அமைதல் நலமென்று, அதற்காக 5 மிலியன் பவுன் தங்கத்தைப் பாங்க் ஆப் இங்கிலாந்தில் (Bank of England) டிபாஸிட்டாகக் கட்டி வைக்க வேண்டுமென்ருர். இந்திய அரசினரின் எதிர்ப்பினைச் சமாளிக்க வேண்டிப் பொன் திட்ட ரிசர்வு நிதியிலிருந்து ஒரு பகுதியை 'கான்ஸல்' பத்திரங்களிலும், சிலவற்றைக் கடன் பத்திரங்களிலும் மற்றும் அங்கீகாரம் பெற்ற, லண்டன், கடன் வாங்குவோருக்கும் கொடுத்தார். இச் செய்கை இந்தியப் பொதுமக்களுக்கு வெறுப்பை ஏற்படுத்தியது. அவர்கள் இச் செய்கையைக் கண்டித்துக் கூக்குரலிட்டனர்.

**8. பொன் பரிவர்த்தனைத் திட்ட முறை:** 1907-08-ல் ஏற்பட்ட நெருக்கடியின் நிமித்தம் நிலைமையைச் சமாளிக்க அரசினர் பல்வேறு மாற்றங்களை ஏற்படுத்தினர். அதன்படி 1893-ல் நாணயச் சாலைகளை இழுத்துப் பூட்டினர். அதன் பின்னர், பொன் பரிவர்த்தனைத் திட்டம் என்ற ஒரு முறையைக் கையாண்டனர். 1893-லும் அல்லது 1899-லும்கூட இந்தியச் சர்க்காரோ அல்லது அவ்வப்போது வந்த பௌலர் குழுவினரோ இந்த முறையை வரவேற்கவில்லை. இதை அடியோடு வெறுத்தனர் எனக் கூறினல் மிகையாகாது. இந்திய அரசினர் இக் குழப்பங்களை எதிர்த்துப் போகும் தருணம் அலைந்து திரிந்து இதில் விழுந்தனர். சிற்சில பொது இந்திய மந்திரியின் வற்புறுத்தலின் காரணத்தாலும், உறக்கத்தின்போது நடப்பவர் போன்றும், ஞாபகப் பிசகாக எதிர்பாராது சிக்கிக் கொண்டவர் போலவும் இந்திய சர்க்கார் தத்தளித்தனர். வேண்டா வெறுப்புடன் இதில் ஈடுபட்டனர். கொஞ்ச காலம் கழிந்த பின்னர் இதில் இரண்டறக் கலந்தனர். பின்னர் இம் முறையில் மாருத காதல் கொண்டனர் என்ருல் மிகைபடாது.

இத் திட்டத்தின் கீழ், செலாவணிமுறை பொன்னுடன் இணைக்கப்படும். இவ் விணைப்பு நேர்முகமாக இராது. அதற்குப் பதிலாக நம் நாட்டின் செலாவணி இன்னொரு நாட்டின் செலாவணியுடன் இணைக்கப்படும். ஆயினும், அந் நாடோ பொன் திட்டத்தில் உரிய இடம் பெற்றிருக்கும். அதன்படி நம் நாட்டின் ரூபாய் இங்கிலாந்து நாணயமாகிய ஸ்டர்லிங்குடன் இணைக்கப் பட்டது. அவ்வமயம் இங்கிலாந்தில் பொன் நாணயத்திட்டம் நடப்பிலிருந்தது. அந் நாடும் பொன் திட்டத்தில் ஓர் உறுப்பினராக இருந்து வந்தது. இம் முறையின்படி வெள்ளி ரூபாய் நாணயம் தங்க நாணயமாக மாறமுடியாது. அதற்குப் பதிலாக இதை ஒரு விகிதத்தில் ஸ்டர்லிங்கில் மாற்றிப் பின்னர்த் தங்கத் திட்டத்தின்படித் தங்க நாணயமாக்க முயலலாம். கீன்ஸ் பிரபு (Lord Keynes) பொன் பரிவர்த்தனைத் திட்டத்திற்கான முக்கிய இயல்புகளை இங்குக் குறிப்பிடுகிறார். 'உள்ளூர்ச் செலாவணி பொன்னில்லாததாக அமைந்துள்ளது. 'உள்ளூர்ச் செலாவணிக் கேற்பப் பொன் கொடுக்க விருப்பமின்மை, அதற்குப் பதிலாக பொன்னில்லாத அயல்நாட்டுப் பரிவர்த்தனைப் பொருள்களை உள்நாட்டு நாணயத்திற்குப் பதிலாகக் கொடுக்க முன் வருதல், அதற்காக வெளிநாட்டு நாணயத்தைப் பயன்படுத்திக் கொள்ளல் ஆகியவை.[1]'

அதற்கான விளக்கப்படி (1) ரூபாய்க்கு எல்லையற்ற அளவில் செலாவணியுண்டு. சட்டப்படி அதை மாற்ற இயலாது. (2) சவரன் 1 பவுண்டு 15 ரூபாய் மதிப்பீட்டில் எல்லையற்ற அளவில் மாற்றியமையக் கூடியது. 1893ஆம் ஆண்டின் அரசினரின் ஆணையைத் திரும்பப் பெறுதவரை இது அனுமதிக்கப்படும். (3) ஆட்சி முறையை முன்னிட்டு அரசினர் இந்த விகிதத்தில் ரூபாய்க்குப் பொன் தர விழைந்தனர். (4) அதே கணக்கில் ஆட்சியாளர் கல்கத்தாவில் கொடுக்கப்பட்ட ரூபாய்களுக்கு லண்டன் உண்டியல் 1 ஷி. $3\frac{29}{32}$ விகிதத்தில் அதிக நஷ்டத்தில் கொடுக்கத் தலைப்பட்டனர். (இதில் கண்ட நான்காவது ஷரத்து (fourth provision) ரூபாயின் ஸ்டர்லிங் மதிப்பைத் (Sterling value) தீர்மானிப்பதால் இது மிகவும் இன்றியமையாத சட்ட நுணுக்கம் எனலாம். இம் முறையில் நிரந்தரமாக வைக்க முடியுவில்லையானால் என்றும் இது அவலமாகிப் போகும் எனலாம்.) இரண்டாவது சட்ட நுணுக்கத்தினால் ஸ்டர்லிங் மதிப்பு 1 ஷி. 4 பென்ஸைவிட அதிகரித்துப்போகாமல் இருக்கத் தடை செய்கிறது. நாலாவது

1. ஜா. மே. கீன்ஸின் இந்திய நாணயமும் நிதியும் என்ற புத்தகம், பக்கம் 29

ஷரத்து ஸ்டர்லிங் மதிப்பு 1 ஷி. $3\frac{2}{32}$ [1] பென்ஸுக்குக் கீழ்போவதைத் தடை செய்கிறது. இதனால் ஸ்டர்லிங்கின் உயரிய மதிப்பு 1 ஷி. $4\frac{1}{8}$ பென்ஸும் தாழ்ந்த மதிப்பு 1 ஷி. $3\frac{29}{112}$ [2] பெ. ஆகும்.

**9. சேம்பர்லின் குழுவினர் (1913):** பொதுமக்கள் இந்தியாவில் இந்தப் பொன் பரிவர்த்தனைத் திட்டத்தை ஏற்றுக்கொள்ள மறுத்தனர். இது சரியான முறையில் தீர்மானிக்கப்பட்டு உருப் பெருததால் அவர்களுக்கு இம்முறை நலமாகத் தோன்றவில்லை. அவர்கள் பௌலர் குழுவினர் இயம்பியபடி பொன் திட்டம் ஒன்றை உருவாக்கி, அதைச் சர்க்கார் நடத்தவேண்டுமெனக் கோரினர். உலகில் உள்ள வளர்ச்சி பெற்ற எல்லா நாடுகளும் பொன் திட்டத்தில் உள்ள போது தனித்து இந்தியாவிற்கு மட்டும் அது இல்லாமல் செய்தது நியாயமற்ற செய்கை என வாதாடப்பட்டது. பொதுமக்களின் வேண்டுகோளுக்கிணங்கி இந்திய அரசாங்கம் சேம்பர்லின் குழுவினரை 1913ஆம் ஆண்டு ஏப்ரல் மாதத்தில் நியமனம் செய்தது. இக் குழுவின் தலைவர் ஆஸ்டன் சேம்பர்லின் ஆயினும், இக் குழு இந்தப் பொன் பரிவர்த்தனைத் திட்டத்தை முழு மனதுடன் ஆதரித்துச் சென்றது. இக் குழு இந்தியாவில் முன்னரே பொன் நாணயத் திட்டம் இருந்தது எனக் கூறியது. குறிப்பாக நாட்டின் பொன் நாணயம் அதிக வழக்கிலில்லை; இந்தியாவின் தேவைக் கேற்ற அளவில் ரூபாய்களும் கரன்ஸித் தாள்களும் இருந்தால் போதுமானது. தங்க நாணயச் சாலை வேண்டுவதில்லை. அதனால் செலாவணிக்கோ நாணயப் பரிவர்த்தனைக்கோ முக்கிய உதவி யேற்படுவதில்லை. இருப்பினும், இதில் இந்தியரின் மனக் கோட்பாடே இன்றியமையாதது எனலாம். மக்கள் கோரும் செலாவணிமுறை (தங்க நாணயமோ, வெள்ளி ரூபாயோ அல்லது கரன்ஸித் தாள்களோ) எதுவோ அதை அரசினர் தயார் செய்து கொடுப்பது இன்றியமையாதது. போதிய அளவில் தங்க ஸ்டர்லிங் ரிசர்வின் மூலம் உள்நாட்டுச் செலாவணியும் நாணயப் பரிவர்த்தனைக்கு உதவியாக அமைய வேண்டும். பொன் திட்ட ரிசர்வு நிதிக்கு எல்லையற்ற அளவில் நிதி சேர்க்க வேண்டும். பொன் திட்ட ரிசர்வின் இந்தியக் கிளையை நீக்கி எடுத்துவிட வேண்டும். லண்டன் மட்டுமே பொன் திட்ட ரிசர்வு நிதி முழுமையும் அமைய வேண்டிய இடமாகும். கேட்டபொழுது எவ்

*1. இந்த இரண்டாவது ஷரத்தின்படி லண்டனில் கௌன்சில் உண்டியலை இந்திய மந்திரி விற்பனை செய்வதில் நாணயப் பரிவர்த்தனை முறையில் ஏற்றத்தைத் தடைசெய்து இருக்கிறார்.*

*2. இந்த எல்லைக் கோடுகளை இந்தியாவிற்குப் பொன் ஏற்றுமதி இறக்குமதிப் புள்ளிகள் எனலாம்.*

விதத் தடங்கலுமின்றி 1 ரூபாய்க்கு 1 ஷி. - $3\frac{29}{32}$ பென்ஸ் வீதத்தில் லண்டன் உண்டியல்கள் விற்கப்பட வேண்டும்.[1]

**10. முதல் உலகப் போரினால் இந்திய நாணயத்தில் ஏற்பட்ட மாறுதல் :** யுத்தம் தோன்றிய காரணத்தால் நாடெங்கும் பொதுமக்கள் பீதியுடனும் நம்பிக்கையிழந்தும் இருந்தனர். நாணயப் பரிவர்த்தனை வரவரப் பலம் குன்றியது. சேவிங்ஸ் பாங்கியிலிருந்து பெரும் தொகையை எடுக்க ஆரம்பித்தனர். பொன் இருப்பிலிருந்து (gold stocks) கொஞ்சம் கொஞ்சமாக எடுக்க ஆரம்பித்தனர். பெரிய அளவில் இருந்த செலாவணித் தாள்களை ரூபாயாக மாற்ற விழைந்தனர். இத் தேவைகளை யாதொரு செலவும் இன்னலுமின்றி அரசினர் மாற்றிக் கொடுத்தனர். பரிவர்த்தனைக்கேற்ப 1915 பிப்ரவரி மாதத்திற்குள் 8 மிலியன் பவுன் மதிப்புள்ள எதிர் கௌன்சில் உண்டியல்கள் விற்கப்பட்டன. பொதுமக்களுடைய நன்னம்பிக்கையைப் பெற 8 கோடி ரூபாய் சேவிங்ஸ் நிதியிலிருந்து கொடுக்கப்பட்டன. பின்னர் கௌன்சில் உண்டியல்களுக்கு அமோகத் தேவை உண்டாயிற்று. 1915-ன் முடிவில் டிபாஸிட்டுகள் வந்து குவிந்தன. பொன்னிருப்பிலிருந்து (gold stock) அதிகப்படியான தொகை எடுக்கப்பட்டது. சர்க்காரின் கரன்ஸித்தாள்களுக்கு ஏற்ற அளவில் பொன் கொடுக்கவேண்டும் என்று கோரினர். தனி நபர்களுக்குக் கரன்ஸிக்கான (தாள்) பொன் கொடுக்க மறுத்து அறிக்கை வெளியிடப்பட்டது. அதற்குப் பின் கரன்ஸித்தாள்களுக்குண்டான மதிப்பை வெள்ளி ரூபாயில் கொடுத்தனர். 1915ஆம் ஆண்டு மார்ச்சு மாத முடிவில் ரூ. 10 கோடி செலாவணித்தாள்கள் வெள்ளி நாணயத்தில் மாற்றிக் கொண்டனர். பின்னர் செலாவணித்தாள்கள் அதிகப்படியாகப் புழக்கத்துக்கு வந்தன.

இயல்பான நிலை மறுபடியும் ஏற்பட்டது. 1916ஆம் ஆண்டின் இறுதியில் சில சிக்கல்கள் தோன்றின.[2] யுத்தத் தேவைக்கான ஏற்றுமதிகள் ஆயின; ஆனால் இறக்குமதி செய்யப்படவில்லை. யுத்தத்தின் தேவைகளைக் கண்டிப்பாக ஏற்றுமதிகள் மூலம் ஈடுபடுத்தவேண்டிய நிர்ப்பந்தம் தோன்றியது. யுத்தத்திற்கு முன்

*1. தனது எதிரிடைக் குறிப்பில் ஸர் ஜேம்ஸ் பெக்பீ (Sir James Begbie) தங்க நாணயமமைந்த பொன் திட்டம் உருவாக்கப்பட வேண்டுமென்றார். அதற்கு அவர் காரணங்கள்: (1) ஒப்பு நாணயமாக இருத்தலைக் காட்டிலும் வழக்கிலிருப்பது தான் பரிவர்த்தனைக்குத் தூண் போன்றது. (2) திட்டமாகப் பொன் அமைந்தால் மக்களிடையே உள்ள பதுக்கல் முறை ஒழியும். முன்பெல்லாம் ஒப்பு நாணயமாக இருந்ததால் அதிகப்படி ரூபாய்களை கொடுக்கவேண்டியிருந்தது. அதனால் அதன் மதிப்பு மாறிக்கொண்டிருந்தது.*

*2. 1898 முதல் 1916 வரை பொன் பரிவர்த்தனைத் திட்டம் நடப்பில் இருந்தது. (அவ் வமயம் ரூபாயின் மதிப்பு 1 ஷி. 4 பெ.)*

பெல்லாம் நமது ஏற்றுமதிகள் இறக்குமதிகளைவிடக் கூடுதலாக இருந்தன. இந்த வேறுபாட்டைப் போக்க உயரிய மதிப்புள்ள உலோகங்களை இறக்குமதி செய்து வந்தனர். யுத்த காலத்தின் போது தங்கப் போக்குவரத்தைத் தடுத்தனர். இந்தியாவிற்குக் கொடுக்கவேண்டிய தொகைக்கு இந்தியா மந்திரி, கௌன்சில் உண்டியல்களை விற்பனை செய்தார். இந்த உண்டியல்களைக் கொடுக்க, வேண்டிய அளவு ரூபாய்களைத் தயார் செய்யவேண்டியேற்பட்டது. பிரிட்டிஷ் சர்க்காருக்கு வேண்டி இந்திய அரசினர் யுத்தத்தை முன்னிட்டு அதிகப்படியான செலவு செய்யவும், இதர காலனிகளுக்கும் டொமினியன்களுக்கும் பிரிட்டிஷ் அரசினர் வாங்கிய பொருள்களுக்கு இந்திய ரூபாய்கள் கொடுக்க வேண்டி ஏற்பட்டது. இந்தியப் பொருள்களை இறக்குமதி செய்யும் ஆப்பிரிக்க வியாபாரிகட்கு வசதி செய்யவேண்டி ஏற்பட்டது. பெரும் அளவில் வெள்ளி உற்பத்திசெய்யும் நாடான மெக்ஸிகோவில் அரசியல் குழப்பங்களால் வெள்ளியின் அடக்கவிலை அதிகரித்தது. தோற்றுப்போன நாடுகளும், சமாதானமாகத் தலையிடாக் கொள்கையுள்ள நாடுகளும் பொன்னை வெளிவிட மறுத்ததால் பொன் கிடைக்கவில்லை. ஆகவே, நாணய உற்பத்திக்கு வெள்ளி இன்றியமையாததாகியது. முன்கூறிய அவ்வளவு செலவுகளையும் இந்திய அரசினர் தாங்குவதற்கான அளவில் வெள்ளி ரூபாய்களை உற்பத்தி செய்ய அதிக விலையில் வெள்ளியை வாங்கினர். 1915 முதல் 1920 வரையில் வெள்ளி 1 அவுன்ஸின் விலை 27 பென்ஸ் முதல் 89 பென்ஸ் வரை அதிகரித்தது.[1] 1919 மார்ச்சு முடிவில் யுத்தம் தொடங்கும் முன்னர் இருந்த விகிதமாகிய 1 பவுன் ஸ்டர்லிங்குக்கு 4·86 டாலர்களிலிருந்து 3·40 டாலருக்கு இறங்கியது. இந்தக் காரணத்திற்காக 1 ரூபாய் 1 ஷி. 4 பெ. என்ற மதிப்பில் நிறுத்தி வைக்கப்பட்டது. அமெரிக்காவிற்கு டாலர் நாணயத்தில் கொடுக்க அதிக ரூபாய்கள் தேவைப்பட்டன.

**11. அரசினரால் எடுத்துக்கொள்ளப்பட்ட முயற்சிகள் :** இந்தியப் பொருள்களைக் கொள்முதல் செய்த வெளிநாட்டார்களுக்குப் பெருமளவில் உண்டியல் விற்பனை செய்ததைக் குறித்து முன்னரே படித்தோம். இந்த உண்டியல்களுக்கான ரூபாய்களைக் கொடுத்ததில் நம் நாட்டின் ரூபாய்களின் இருப்பு மிகவும் பாதிக்கப்

*1. 43 பென்ஸ் மதிப்பு வந்ததும் ரூபாயின் மதிப்பு கூடியது. அதை உருக்கினால் ஆதாயமானது எனக் கண்டுகொண்டனர். அலுவலக விதம் அவ் வமயம 1 ரூபாய் 1 ஷி. 4 பெ. ஆயினும், ரூபாயில இடபபட்ட வெள்ளியின் எடை (165 குண்டுமணி) அது 1 ஷி. 4 பென்ஸைவிடக் கூட இருந்தது. ஆகவே உலகச சந்தையில் இதன் மதிப்பு 1 ஷி. 4 பென்ஸைவிட அதிகம் ஆயிற்று. சட்டப்படி தடுத்துங்கூட வெள்ளி நாணயம வழக்கிலிருந்து மறைய ஆரம்பித்தது. அதைப் பொதுமக்கள் உருக்க ஆரம்பித்தனர். இவவாறு மறைந்த ரூபாய் நாணயங்களுக்குப் பதிலாக புதிய ரூபாய் நாணயங்களை அச்சிட்டு ஈடுசெய்தனர்.*

பட்டது. வெள்ளி ரூபாய்க்கு ஈடான கரன்ஸித்தாள் மாற்றும் முறையும் நம் நாட்டின் வெள்ளி ரூபாய் இருப்பை மிகவும் பாதித்தது. முதற்படியாக, கௌன்சில் உண்டியல் விற்பனையை 1916 டிசம்பர் முதல் ஒடுக்கினர். பின்னர் இடைநிலை கௌன்சில் உண்டியலை நிறுத்தினர். கௌன்சில் உண்டியல்களை வாங்க ஒரு சில பாங்கிகளுக்கே உரிமை உண்டென்றும், ஒரு சில பொருள்களில் ஈடுபட்ட வியாபாரிகள்தான் ஒரு குறிப்பிட்ட வீதத்தில் வாங்கலாம் என்றும் சட்டமியற்றப்பட்டது. வெள்ளியின் விலையேற்றத்தால் அரசினரின் அலுவலக வீதமான 1 ஷி. 4 பென்ஸை நிலையாக வைத்திருக்க முடியவில்லை. அவ்வாறே வைத்திருக்கும் முயற்சி பலனற்றது எனலாம். அச்சிலேற்றப்படும் ஒவ்வொரு நாணயத்திலும் அரசினர் நஷ்டம் அடைந்தனர். இந்த இக்கட்டான நிலையைச் சமாளிக்க சர்க்கார் ரூபாய் ஸ்டர்லிங் விகிதத்தை உயர்த்த முயன்றனர். அவ்வாறு உயர்த்த முயன்றதில் ரூபாயில் உள்ள வெள்ளியின் மதிப்பிற்கேற்ப ரூபாயின் வெளி மதிப்பை உயர்த்துவது எனலாம். இதன் பொருள் என்னவென்றால் பொன் பரிவர்த்தனைத் திட்டத்தை எடுத்துவிட்டு, அதற்கு ஈடாக வெள்ளித் திட்டத்தைக் கடைப்பிடிக்க முயன்றனர் எனலாம். ஆயினும், அரசினர் எந்தச் சட்டமும் இயற்றாது இம்முறையை நடப்பில் கொணர்ந்தனர். அடுத்தடுத்துப் பல காலங்களில் இதன் மதிப்பேற்றத்தைக் காணலாம். 1917-ல் 1 ஷி. -4$\frac{1}{4}$ பெ. இருந்தது 1917-ல் 2 ஷி. 4 பெ.; பின்னர் 1920 மார்ச்சு மாதத்தில் 2 ஷி. 6 பெ. இருந்தது, 2ஷி.-11 பெ. வரை எட்டியது. 1920-க்குப் பின்னர் எதிர் கௌன்சில் உண்டியலை விற்கத் துணிந்தது. நாணய உற்பத்திக்கு வெள்ளி எளிதில் கிடைக்க வேண்டிய காரணத்திற்காக 1917 செப்டம்பர் மாதத்திலிருந்து தனியார் வெள்ளியை இறக்குமதி செய்யக்கூடாது எனச் சட்டமியற்றப்பட்டது 1918-ல் அரசினர் அமெரிக்க ஐக்கிய நாட்டின் அரசினரிடமிருந்து 200 மிலியன் அவுன்ஸ் வெள்ளியைச் சுத்தமான ரீதியில் 101$\frac{1}{2}$ செண்டு வீதம் வாங்க முற்பட்டது.[1]

வெள்ளியின் செலவைக் கட்டுப்படுத்தவும் தேவையான செலாவணியை நிலைநிறுத்தியும், அவ்வப்போது நிகழும் இறக்குமதிகளுக்கு ஈடு கொடுத்தும் வர, கீழ்க்கண்ட முறைகளை

1. அமெரிக்க ஐக்கிய காங்கிரஸ் பிட்மன் சட்டம் ஒன்றை ஏப்ரல் 1918-ல் ஏற்படுத்தி, இதர ராச்சிய அரசாங்கங்களுக்கு 35,00,00,000 வெள்ளி டாலர்களைத் தங்கள் டாலர் இருப்பிலிருந்து விற்க அனுமதித்தனர், இந்திய சர்க்காரின் தேவைக்கேற்ப 200 மிலியன் அவுன்ஸ் வெள்ளியைக் கொடுத்து, (1914 முதல் இது உலக உற்பத்தியின் மேலான தொகையாகும்.) செலாவணிப் பரிவர்த்தனையைச் சீர்படுத்தினர். இதனால் செலாவணியில் ஏற்பட்ட இடரை அகற்றினர். (பாபிஸ்டன் ஸ்மித் குழுவினரின் அறிக்கை, பாரா 23).

அமலாக்கினர்: (1) 1917 ஜூன் மாதத்தில் வெள்ளி, தங்க நாணயங்களின் ஏற்றுமதி தடை செய்யப்பட்டது. அவற்றை உருக்கவும் அனுமதி தரப்படவில்லை. (2) 1 ரூபாய், 2½ ரூபாய் மதிப்புள்ள செலாவணித்தாள்கள் அச்சிடப்பட்டு 1917 டிசம்பரில் புழக்கத்திற்குக் கொண்டுவரப்பட்டன. 1918 ஜனவரியில் 2 அணு, 4 அணு, 8 அணு நிக்கல் நாணயங்கள் அச்சடிக்கப்பட்டுப் புழக்கத்தில் வந்தன. (3) தனிக் கணக்கில் இறக்குமதி செய்த பொன் மோகராக்கள், சவரன்கள் இவற்றைக்கொண்டு வெள்ளி நாணயத்தை ஈடுகட்ட முயன்றனர்.[1] 1919 ஆகஸ்டு மாதம் சர்க்கார் பொதுமக்களுக்குத் தங்க விற்பனை செய்தும், தங்க இறக்குமதியை ஆதரித்தும் விலையின் சொல்லொணு ஏற்றத்தைக் கட்டுப்படுத்தினர். (4) அதிகப்படியான செலாவணித் தாள்களை தக்க உலோகப் பின்னமைப்பு இல்லாது வெளியிட்டனர். அவற்றைப் பணமாக அடைய இருந்த சட்ட முறைகளை அகற்றினர். (5) பொதுச் செலவுகளைக் கட்டுப்படுத்தியும் வரிதண்டியும், கடனெழுப்பியும் நிலையைச் சமாளித்தனர்.

**12. பாபிங்டன் ஸ்மித் குழுவினர் (1919):** யுத்தத்தினுல் ஏற்பட்ட சூழ்நிலையினுல் நிதி, செலாவணி முறைகளில் சேம்பர்லின் குழுவினர் பரிந்துரைத்தவை பயனற்றவையாயின. இதை ஆராய்ந்து புதிய திட்டங்களை வகுக்க வல்லுநர் குழு ஒன்றை நியமித்தனர். இதன் தலைவர் ஸர் ஹென்றி பாபிங்டன். 1919ஆம் ஆண்டில் இக் குழு தனது அறிக்கையை வெளியிட்டது. நாணயப் பரிவர்த்தனையில் ஏற்றத் தாழ்வுகள் வரம்புகடந்து போவதாலும், பொருளாதார நிலையில் ஏற்படும் திடீர்ச் சிக்கல்களாலும் விலையேற்ற இறக்கங்களாலும் அரசியலாரால் ஒன்றுஞ் செய்ய இயலாதநிலை ஏற்படும். ஆகவே இந் நாட்டிற்கு நிரந்தர நிலையில் நாணயப் பரிவர்த்தனை வேண்டும் என்று இயம்பினர். அதற்கான சில கோட்பாடுகளாவன: (1) ரூபாய் நாணயம் வரம்பின்றிச் சட்டமுறைப் பணமாக அமைதல் வேண்டும். (2) 2 ஷி. மதிப்பில் அதாவது பொன்னில் விளக்கினுல் 11·30016 குண்டுமணி பொன் அல்லது $\frac{1}{10}$ பங்கு நாணயமாற்று அமைக்கப்பட வேண்டும். (3) சவரன் சட்ட முறைப் பணமாக 1 : 10 என்ற விகிதத்தில் இருக்கவேண்டும். (4) கட்டுப்பாடற்ற ஏற்றுமதி இறக்குமதி பொன்னில் இருக்கவேண்டும். தங்கசாலை ஒன்றைப் பம்பாயில் நிறுவிப் பொதுமக்களுக்கு அச்சிட்டுத் தர வேண்டும்.

1. தங்க மோகரா என்பது 15 ரூபாய் நாணயம். இதுவும் சவரனும் ஓரே மதிப்பு எடையுள்ளவை. சவரன் அச்சடிக்க 1918-ல், பம்பாயில், அரசினரால் தங்க நாணயச் சாலை ஒன்று திறக்கப்பட்டது. 1919 ஏப்ரலில் இது பணியாளரின் தொல்லைகளால் மூடப்பட்டது.

(5) சவரன்களை ரூபாய்களாக மாற்றுதல் கூடாது. (6) வெள்ளியின்மீதுள்ள இறக்குமதி வரி நீக்கப்பட வேண்டும். (7) பெரிய அளவில் பொன் திட்ட நிதி தங்கத்திலும் இதர நாட்டு அரசினரின் 1 ஆண்டில் முடிவடைகிற கடன் பத்திரங்களிலும் இருக்க வேண்டும். நிதியில் பாதிக்குமேலுள்ள பொன் இந்தியாவில் வைக்கப்படுதல் வேண்டும்.

வர்த்தகத் துறை பாதிக்கப்படாத அளவில் 1 ரூபாய் 2 ஷி. மதிப்பு நிரந்தரமாகவேண்டும் என்று கூறினர். உள்நாட்டின் அடக்கவிலை அதிகரிப்பதாலும், உலகவிலைகள் ஏறுவதாலும் 2 ஷி. மதிப்பீடு சரியானது எனக் கூறப்பட்டது. 2 ஷி. என முடிவு கட்டியதால் இந்தியாவிற்கு உள்நாட்டுச் செலவுக்கு ஈட்டுத் தொகை கொடுப்பதில் இடர்ப்பாடு ஏற்படாது என்றும், இறக்குமதியால் அதிகப்படி ரூபாய்கள் கிடைக்குமென்றும், உணவுப் பற்றுக்குறையால், ஏற்றுமதியாகும் இந்தியப் பொருள்களுக்கு உலகில் நல்ல கிராக்கி ஏற்படுமென்றும் கூறியது.

**13. அறிக்கையின்படி அரசினரின் செயல்கள் :** குறைந்த விகிதம் இல்லாமல் கௌன்சில் உண்டியலும் தந்தி மாற்றங்களும் டெண்டர் மூலம் இலண்டன்பேரில் கொடுக்கப்படும். அதே போலத் தந்தி மாற்றமும் எதிர் கௌன்சில் உண்டியல் 11·30016 சுத்தத் தங்க வீதத்தில் இந்தியாவின்பேரில் விடப்படும். இது டாலர் ஸ்டர்லிங் பரிவர்த்தனைத் திட்டப்படி தங்கம் அனுப்பும் செலவு நீக்கப்பெற்றது. (2) 1920 பிப்ரவரிக்குப் பிறகு வெள்ளி இறக்குமதிக் கட்டுப்பாடு தளர்த்தப்பட்டு, அதன் மேலுள்ள வரி எடுக்கப்பட்டது. யுத்தகாலக் கட்டுப்பாடுகளைத் தளர்த்தினர். செலாவணியில்லா இதர காரியங்களுக்கு வேண்டிய பொன் வெள்ளியை இறக்குமதி செய்ய அனுமதித்தனர். வெள்ளியின் விலை இறக்கத்தினாலும், 1920 மே முதல் வெள்ளி நாணயங்கள் மறுபடியும் வந்து குவிந்ததாலும் வெள்ளி, பொன்மீது இருந்த எல்லாக் கட்டுப்பாடுகளையும் எடுத்தனர். அரசினர்க்குச் சேர வேண்டிய தொகை எந்த முறையிலும் கட்ட அனுமதி அளிக்கப்பட்டு, அதனால் வெள்ளி ரூபாயாகக் கட்ட வேண்டும் என்ற சட்டம் புறக்கணிக்கப்பட்டது. (3) செலாவணித் தாள்களை ரூபாயாக மாற்றும் வகைக்கு ஏற்படும் சட்ட வசதிகளை மறுபடியும் புகுத்தினர். (4) அரசினரின் இரு வார விற்பனை 1919 செப்டம்பர் முதல் நடந்து வந்தது. அதில் தங்கத்திற்கு மதிப்பு உயரியதாக இருந்தது. அதனால் அரசினர் பிப்ரவரியிலிருந்து செப்டம்பர் 1920-ல் தோலா ரூ. 22 வீதம் தங்கத்தை விற்க ஆரம்பித்தனர். அக்டோபர் மாதத்தில் சர்க்காரால் விற்பனை நிறுத்தப்பட்டது.

பொன்னின் விலை கட்டுக்கடங்காது வெகுவிரைவில் மேலேறியது. 1920ஆம் ஆண்டு ஜூன் மாதத்தில் அரசினர் மூன்றாவது அவசரச் சட்டத்தை அமலாக்கி, அதன்படி ரூ. 15 விகிதத்தில் வழக்கிலிருந்த அரைச்சவரன், சவரன் ஆகியவை சட்டப் பணமல்ல என நிராகரித்தனர். ஆயினும், மூன்று வாரக் கடன் நீடிப்பு அல்லது ஒத்திவைப்பின்போது பழைய விகிதத்தில் கொள்ள அனுமதிக்கப்பட்டனர். இந்திய நாணயத் திருத்தச் சட்டம் எண் III, 1920 ஜூன் மாதத்தில் வெளியிடப்பட்டது. சவரனும் அரைச் சவரனும் ரூ. 10, ரூ. 5 மதிப்பில் வெளியிடப்பட்டன. சவரனின் சந்தை மதிப்பு ரூ. 10-ஐ விட அதிகமாக இருந்ததால் அது நாணயமாக வழக்கிலில்லை. பம்பாயில் தங்கசாலையைத் திறக்க ஸ்மித் குழுவினர் அனுமதித்தனர்.

**14. சர்க்கார் கொள்கையினால் ஏற்பட்ட விளைவுகள் :** ஸ்மித் குழுவினரின் அறிக்கை வெளியிட்ட அன்றைய தினம் டாலர் ஸ்டர்லிங் விகிதம் 1 பவு. = $ 3·65 ஆகும். ஸ்டர்லிங்கு ரூபாய் விகிதம் ஏறுவதற்கான அறிகுறிகள் தோன்றின. ஏனெனில், 2 ஷி. பொன் விகிதமான காரணம் எனலாம். இந்திய ஏற்றுமதியாளர் தங்கள் கையில் உள்ள ஸ்டர்லிங்கு உண்டியல்களை உடனே மாற்றத் தீர்மானித்தனர். இல்லையெனில், விலையேற்றத்தினால் பாதிக்கப்படுவர்.[1] இதன் காரணமாகப் பரிவர்த்தனையில் தீவிரம் ஏற்பட்டது. அதனால் அதிகப்படியான ரூபாய்களுக்கு ஏற்பட்ட கிராக்கி ஏற்படவே இந்த அறிக்கை வந்த மூன்று தினங்களுள் 2 ஷி. விகிதத்தில் இருந்த பரிவர்த்தனை 2 ஷி. $8\frac{1}{2}$ பென்ஸுக்கு அதிகரித்துப் பின்னர் பிப்ரவரி 1920-ல் 2 ஷி. $10\frac{1}{2}$ பென்ஸின் உச்சநிலையை அடைந்தது. இதற்கு மூல காரணம் டாலர் ஸ்டர்லிங் விகிதத்தில் எதிர்பாராத சரிவு ஏற்பட்டதெனலாம். இதன் பிறகு எதிர்ப்புறமாகப் பரிவர்த்தனையில் இறக்கம் கண்டது. அநேகர் யுத்தத்தின் காரணமாக அதிக ஆதாயங்களைப் பெற்றதனால் நாட்டில் பெருமளவில் வியாபாரப் பெருக்கங்கள் ஏற்பட்டன. புதிய தொழில்கள் திறக்கப்பட்டன. அயல் நாட்டு இயந்திரச் சாமான்களுக்கு ஆர்டர்கள் கொடுக்கப்பட்டன. இவற்றிற்கான விலைகளை, ஏறிய பரிவர்த்தனை விகிதத்தில் கட்ட வேண்டியிருந்தது. இதனால் ஸ்டர்லிங் தேவை அதிகப்படியாக ஏற்பட்டது. மேலும், பரிவர்த்தனை முறையை மிகவும் பயன்படுத்திய ஊக வணிகர்களால் விலையேற்றம் ஏற்பட்டது. 1920-க்குப் பின் இந்தியாவிற்குப் பாதக வாணிகக் கொடுப்பல்

1. ஸ்டர்லிங் ஏற்றத்தினால் அதன் மூலம் கிடைக்கும் ரூபாய் நாணயம் குறைவுபடக்கூடும். இலாபம் சம்பாதிப்பதற்குப் பதிலாக நஷ்டந்தான் ஏற்படும். ஏற்றுமதி இந்த நஷ்டத்தை உண்டு பண்ணும்.

நிலையே ஏற்பட்டது. அதன் நிமித்தம் நம் பரிவர்த்தனை நிலையில் சரிவு கண்டது. இக் காரணங்கள் நம் ரூபாயின் மதிப்பைக் கீழ் இறக்கின. நம் சர்க்கார் மிகவும் வீரத்துடன் எதிர் கௌன்சில் உண்டியல்களைப் பெரிய அளவில் விற்பனை செய்து, நாணயப் பரிவர்த்தனையைச் சரிக்கட்டியது. 1920 ஜனவரி முதல் செப்டம்பர் முடிய அதன் விற்பனை 5,53,82,000 பவுன்கள் எனலாம். இது விலைச் சரிவைப் பொறுத்து நிகழ்ந்தது. ஆயினும் அரசினர் 2 ஷி. விகிதத்தில் விற்க முயன்றும் பயனளிக்கவில்லை. எதிர் கௌன்சில் உண்டியல்களுக்குக் கொடுக்கவேண்டி, இந்தியா மந்திரி ஸ்டர்லிங் செக்யூரிடிகளையும், கருவூல உண்டியல்களையும் தாள் நிதியிலிருந்து எடுத்து ரூ. 7, ரூ. 10 என்ற வீதத்தில் இலண்டனில் விற்பனை செய்தார். ஆயினும், அவர்கள் 1 பவுன் ரூ. 15 வீதம் கொள்முதல் செய்தனர். இந்தியாவிலிருந்து எதிர் கௌன்சில் உண்டியல்களை விற்பனை செய்ததால் 35 கோடி ரூபாய் நம் நாட்டிற்கு நஷ்டம் ஏற்பட்டது.

எதிர் கௌன்சில் உண்டியல்களுக்காகக் கிடைத்த செலாவணித்தாள்களை ரத்து செய்து சற்றேறக் குறைய 27 கோடி ரூபாய் மதிப்புள்ள செலாவணித் தாள்களைப் பிப்ரவரி முதல் தேதியிலிருந்து செப்டம்பர் 16ஆம் தேதிக்குள்ளாகச் சுருக்கினர். இதனால் பண முடக்கம் ஏற்பட்டது. பொதுமக்களிடையே பண நெருக்கடி ஏற்பட்டது. நாணயப் பரிவர்த்தனை விகிதம் மிகவும் ஆட்டம் கண்டு சரிவுற்றது. இதன் விளைவாக விலைகள் பெருமளவில் அதிர்ச்சி கண்டன. வர்த்தகர்களும், வியாபாரிகளும் எவ் விலையாயினும் சரி என்று கையிலுள்ள பொருள்களை விற்று நஷ்டமடைந்தனர். வெளி நாட்டிலிருந்து வரும் சாமான்களின் விலை குறைவாக இருப்பினும், பரிவர்த்தனையின் காரணமாக அதிகப் படியான ரூபாய்கள் கொடுத்து வாங்கியதால் நஷ்டப்பட்டு நொடித்துப் போயினர்.

**15. அரசினரின் கொள்கையைக் கண்டித்தல்:** ஸ்மித் குழுவினரின் சிபார்சின்படி பரிவர்த்தனை விகிதம் 2 ஷி. என முடிவாக்கியது தவறான கொள்கை எனலாம். மேலும், இது குழப்பத்தை உண்டாக்கிப் பொருளாதார நிலையை ஆட்டத்தில் கொண்டுவிட்டது என்று பல ஆராய்ச்சியாளர்கள் கண்டித்தனர். ஸர் ஸ்டான்லி ரீட் (Sir Stanley Reed) அவர்களது கருத்து வருமாறு: 'நாணயப் பரிவர்த்தனையை ஆட்டமின்றி ஒரே நிலையில் நிறுத்திவிட வேண்டும் என்ற அரசினரின் கோட்பாடு செல்வ நிலையில் இருந்த நாட்டில் நாணயப் பரிவர்த்தனையைத் திடீர்மாற்றங்களுக்கு இலக்காக்கி, வியாபாரிகளைத்

துன்பத்தில் வீழ்த்தி, பெரிய வியாபாரிகளை ஒரே கணத்தில் நொடித்துப் போகும்படி செய்தது'.[1] அரசினரின் கொள்கைகளைக் கண்டித்துப் பின்வருமாறு கூறப்பட்டது: (1) 1920 ஆகஸ்ட் மாதத்தில் பொன்னின் விலை 1 தோலா 23¼ ரூபாய் பரிவர்த்தனை விகிதம் 1 ரூ.—2 ஷி. ஆகுமேயானால், பொன்னின் விலை ரூ. 15-14-0 ஆக இருக்கவேண்டும். இம்மாதிரி 2 ஷி. எனப் பரிவர்த்தனை விகிதம் இட்டது எட்டவியலா வரம்பு என்பதில் ஐயமில்லை. (2) வெள்ளியின் விலை இறக்கம் கண்டு 1 அவுன்ஸு 44 பென்ஸிற்குக் கிடைத்தது. இக் குறைவின் காரணத்தால் வெள்ளி ரூபாயை உருக்குபவர் ஒருவருமிலர். இவ்வாறு உருக்காது இருக்கப் போடப்பட்ட சட்டமும் நீக்கமுற்றது. ஆயினும், ஊக வியாபாரிகளின் திறனால் வெள்ளி விலை ஏறியது. இது ஒரு தற்காலிகக் குழப்பமானதால் விகிதத்தின் ஏற்றத்தை அரசினர் முத்திரையிட்டது தவறாகும். (3) ரூபாயுடன் ஒப்பிடும்போது ஸ்டர்லிங்கின் விலை சரிகிறது. இது வாங்குந்திறன் சமநிலைக்கு (Purchasing Power Parity) ஏற்ப அமைகிறது. எனினும் வெள்ளியின் விலைக்கான ஏற்றத்தைப் பொறுத்ததன்று. (4) சந்தை அனுபவத்தையொட்டி 1 ரூ. = 2 ஷி. எனக்காட்டியது ஒற்றுமை இல்லாதது. 11·30016 குண்டுமணி எடையான சுத்தப் பொன்னுக்கு ஈடாக 2 ஷி. பொன் அதாவது 1 ரூபாய் பரிவர்த்தனை வீதம். இவ்வீதப்படி பொன்னின் உச்ச விலை ரூ. 15-14-0 ஆகும். ஆயினும், சந்தையில் ரூ. 23¼ ஆகும். இப் புதிய வீதம் ரூபாயின் மதிப்பை உயர்த்திவிட்டது. (5) வெள்ளி ரூபாய் பொன்னுடன் வீதத்தின் பேரில் இணைக்கப்பட வேண்டுமானால் பொன்னின் ஏற்ற இறக்கங்களை ஆராய்ந்து அது நிலையான ஓர் எல்லையை எய்தியதும் அல்லது உலக வர்த்தகத்தின் மூலம் அதன் மதிப்பை நிரந்தரப்படுத்தியபின் இணைப்பது சரியானது.

**16. பின் விளைவு:** பெருவாரியாக எதிர் கௌன்சில் உண்டியல்களை விற்பனை செய்துங்கூடப் புதிய விகிதத்தை நிலை நிறுத்த முடியவில்லை எனக் கண்டோம். இதற்காகப் பணச் சுருக்கம் செய்ய முயல்வது முடியாத செயல். ஆதலால், இம்முறையைப்பற்றி ஆலோசனைகூட செய்தல் கூடாது எனலாம். 1920 ஜூன் மாதத்தில் சர்க்கார் இந்தத் திட்டப்படி அதிக விகிதத்தில் நிறுத்த எடுத்த முயற்சிகள் கைகூடாமல் போயின. அந்த ஆண்டின் செப்டம்பர் இறுதிவரையிலும் இந்த விகிதத்தை வற்புறுத்தியதுமல்லாது நிலைநிறுத்த முயன்று அதன் காரணத்தால் இந்தியக் கருவூலத்திற்குப் பெருத்த நஷ்டம் ஏற்பட்டது.[1] உலக

1. 14-வது எண்ணுள்ள பாராவைப் பார்க்க.

விலைச் சரிவுகளாலும், இங்கிலாந்தில் ஸ்டர்லிங்கு மதிப்பின் சரிவி னாலும் இந்திய ஏற்றுமதி மிகவும் குறைந்தது. அவ்வமயம் ரூபாய்க்கு ஈடான ஸ்டர்லிங்கின் மதிப்பு உயரவாரம்பித்தது. ஆனதால் ரூபாயின் தரக்குறைவு ஏற்பட்டது. 1921ஆம் ஆண்டின் முடிவில் ரூ. 31,58,000 பெறுமான ரூபாய்கள் நாணயச் செலாவணியில் குறைக்கப்பட்டுங்கூடப் பரிவர்த்தனை விகிதம் குறைந்தது. இதன் விகிதம் 1 ஷி. 3பெ. ஆக மாறியது. 1921-22, 1922-23 ஆம் செலாவணித்தாள் சுருக்கமுறைகள் கையாளப் பட்டன. இதற்காக ஸ்டர்லிங் கடன் பத்திரங்களை இந்திய மந்தி ரிக்கு மாற்றிக்கொடுத்தனர். கௌன்சில் உண்டியல்களை விற்பதைத் தடைப்படுத்தினர். இதனால் ரூபாயின் மதிப்பு உயரும் எனக் கருதப்பட்டது. 1923ஆம் ஆண்டின் முடிவில் நல்ல அறுவடைகளின் காரணத்தாலும், நம் நாட்டின் பொருள் களுக்கு ஏற்பட்ட கிராக்கியின் காரணத்தாலும் நிலைமை சௌகரி யமாகியது. அவ் வாண்டின் செப்டம்பர் இறுதியில் 1 ஷி. $3\frac{1}{8}$பென்ஸ் வீதத்தில் நின்றது. இந்திய வர்த்தகக் கழகம் யுத்தத் திற்கு முன்பு இருந்த 1 ஷி. 4 பென்ஸ் விகிதத்தில் நிலையாக்கும்படி வேண்டிக்கொண்டனர். அரசினர் 1ஷி. 6 பென்ஸ் நிலை வரும ளவும் காத்திருக்கத் தீர்மானித்தனரே தவிர, ஒரு நடவடிக்கையும் எடுக்கவில்லை. சர்க்காருக்குக் கட்டவேண்டுவதற்காகப் புதிய செலாவணித்தாள்களை வெளியிட்டனர். பணமின்மையை ஓர் அளவு இது சமாளித்தது. 1925-ல் 1ஷி. 6 பெ. அளவில் பொன் விகிதத்தை எட்டிப் பிடித்தது.

**17. இந்தியச் செலாவணித்தாள் வளர்ச்சி:** 1809, 1840, 1843ஆம் ஆண்டுகளில் பிறப்பிக்கப்பட்ட சட்டங்களில் முறையே இந்தியச் செலாவணியைப் பற்றிக் காணலாம். அவ்வமயம் வங்காளம், பம்பாய், சென்னை மாகாண பாங்கிகள் திறக்கப் பட்டன. இந்தப் பாங்கு ஒவ்வொன்றும் சட்டப்படி இவ்வளவு செலாவணித்தாள்கள்தான் வெளியிடலாம் என வரம்பிடப்பட்டி ருக்கிறது. 1861ஆம் ஆண்டின் செலாவணித்தாள் சட்டம் 1844-ல் நிறைவேற்றப்பட்ட இங்கிலாந்து பாங்கிப் பட்டயச் சட்டத்தையொட்டி இயற்றப்பட்டது. அதன்படி நாட்டைக் கல்கத்தா, சென்னை, பம்பாய் என்று மூன்று பகுதிகளாகப் பிரித்து, தாளை வெளியிட அனுமதித்தது. 1910ஆம் ஆண்டு வரை இன்னும் 4 வட்டங்கள் ரங்கூன், கராச்சி, கான்பூர், லாகூர் என்பன சேர்க்கப்பட்டன. முதல் வெளியீட்டில் ரூ. 10, 20, 50, 100, 500, 1,000, 10,000 தாள்களும் 5 ரூபாய்த்தாளும் 1891-ல் வெளியாயின. ஆங்கிலப் பொன் நாணயத்திற்கும், தங்கக்கட்

டிக்கும், வெள்ளி ரூபாய்க்கும் சமஞன செலாவணித்தாள்கள் அதன் கட்டுப்பாட்டு அதிகாரியிடமிருந்து மாற்றிப் பெற்றுக் கொள்ளலாம். இவைகள் எந்த வட்டாரத்தில் வெளியாயினவோ, அந்த வட்டாரத்தில் மட்டும் சட்டப்படிப் பணமாகக் கருதப்படும். இதற்காக ஈடுகாட்டியுள்ள கடன் பத்திரங்களில் ஒரு சிறிய தொகையாகிய நான்கு கோடி மட்டிலுந்தான் கடன் பத்திரங்களிலும் மிகுதி பொன், வெள்ளி நாணய நிதியாக உள்ளது. சர்க்கார் கணக்கிற்குக் கட்ட எந்த வட்டாரத்தாளாஞலும் அனுமதிக்கப்பட்டு வந்தது. ஊர்ப்பிரயாணிகளுக்கும் இச்சலுகையைக் காட்டப்பட்டது. ரெயில்வே கம்பெனிகளும் எந்த வட்டாரத் தாள்களையும் இன்னெரு வட்டாரத்தில் மாற்றிக் கொள்ளலாம். 1903-ல் 5 ரூபாய்த் தாள் சட்டப்படி நாணயப் பணம் என வெளியிடப்பட்டது.[1] ரூ. 10, ரூ. 50 தாள்கள், சட்டப்படி நாடு முழுமைக்கும் செல்லும் என 1910-ல் கொண்டு வரப்பட்டது. 1911-ல் 100 ரூபாய்த் தாள் அவ்வாறே சட்டப்படி கொண்டுவரப் பட்டது. 1931-32 வரையிலும் 500 ரூபாய், ஆயிரம் ரூபாய்த் தாள்கள் நாடு முழுமையிலும் ஒரே முறையில் அமையவில்லை. சர்க்கார்க் கருவூலங்களில் இந்தத் தாள்களை மாற்றுவதற்காகத் தக்க சட்ட வசதிகள் பாங்கிகள் மூலமும் ஏற்படுத்தப்பட்டன. 1861-ல் ஆரம்ப திட்டமாக இருந்த 4 கோடிக் கடன் பத்திர ஈட்டை 1905-ல் 12 கோடியாக அமைத்து, அதன்மூலம் செலாவணித் தாளைக் கூட்டவும் குறைக்கவும் இடமளித்தது. 1905ஆம் ஆண்டின் சட்டப்படி 2 கோடி நிதியை இலண்டனில் ஸ்டர்லிங் கடன் பத்திரத்தில் வைக்கத் தீர்மானித்தது. 1911-ல் ஸ்டர்லிங் பகுதி கடன் பத்திரங்களை 4 கோடியாக்கிப் பின்னர் எல்லாக் கடன் பத்திரங்களையும் 14 கோடியாக்கியது.

எந்த அளவிற்கு வேண்டுமாஞலும் பொன் நாணயங்களாக வைத்துக்கொள்ளலாம் என்று 1898 ஆம் ஆண்டுப் பொன் சட்டம் இயம்பியது. 1900-த்தில் பொன் நாணயத்தின் ஒரு பகுதி லண்டனில் வைக்கப்பட வேண்டுமென்றது. 1905-ல் ரிசர்வு நிதியைப் பொன் நாணயமாகவோ, அல்லது கட்டியாகவோ, வெள்ளி நாணயமாகவோ அல்லது கட்டியாகவோ இலண்டனிலாவது இந்தியாவிலாவது தன்னிச்சைப்படி வைத்துக்கொள்ள இந்திய அரசினருக்கு அனுமதி தரப்பட்டது. இதன் ஒரு தவிர்க்கவியலாக் கோட்பாடு என்னவெனில், ரூபாய் நிதி இந்தியாவில்தான் வைக்கப்படவேண்டும் நம்பிக்கை வெளியீட்டின் அதிகப்படியான எல்லையை வரையறுத்ததால்,

1. 1909 ஆம் ஆண்டுவரை பர்மா விதி விலக்காகியது.

அதிகப்படியான தாள்கள் வெளியிடும்போதெல்லாம், அதற்கேற்ப மொத்த நிதியில் உலோக நிதி (கடன்பத்திர உருவிலும், உலோகக் கட்டிகளாகவும்) யின் விகிதமும் உயர்ந்துகொண்டே சென்றது. எடுத்துக்காட்டாக 1914-ல் உலோக நிதி (Metallic-reserve) வெளியிட்ட தாள்களின் மதிப்பில் 78·9 சதவீதம் அமைந்தது. இது மிகவும் அதிகப்படி எனக் கருதினார்கள். ஆயினும், இவற்றால் நாணயப் பரிவர்த்தனையை நன்கு காக்க முடிந்தது. அநேக ஆராய்ச்சியாளர்கள் இம் முறை பயனற்றது என்று கண்டனம் தெரிவித்தனர். இம் முறையில் இன்னொரு சிரமம் என்னவெனில், காலா காலங்களில் தேவைக்கேற்பச் செலாவணித்தாள் அதிகரிப்பு செய்ய முடியாமல்போகும். அதற்காக அயல்நாட்டிலிருந்து கௌன்சில் உண்டியல்களையோ, நிதியையோ, பொன்னையோ தருவித்து, ஈடுகட்டவேண்டிய அவசியம் ஏற்படும். நம்பிக்கை வெளியீட்டின் உச்ச வரம்பை அதிகப்படுத்தவேண்டுமானால் அதற்கான சட்டமன்றங்கள்மூலம் தனிப்பட்ட சட்டம் இயற்றுதல் வேண்டும். இம் முறை இணக்க மற்றதாகிறது.[1] இந்த உச்ச வரம்புள்ள நம்பிக்கை வெளியீட்டுத் திட்டம் இங்கிலாந்தில் இவ்வளவு கடுமையாகத் தோன்றவில்லை. அங்குச் செக் (Cheque) முறையும், அதிகப்படியான பாங்க் முறைகளும் டெபாசிட்டுகளும் உள்ளன. மேலும், இந்தியாவில் செலாவணித்தாள் விடுப்புக்கும் பாங்க் முறைகளுக்கும் எந்தவிதத் தொடர்பும் இல்லை. இந் நாட்டின் பாங்குகளைக் கவனித்து இத் தொழிலை முறைப்படி நடத்த மத்திய பாங்கு ஒன்றும் உண்டாக வில்லை. பொதுப்பணம் பெருமளவில் கருவூலங்களில் தேங்கிக் கிடந்தது. அதில் ஒரு பகுதி மட்டுமே மாகாண பாங்குகளில் இருந்தன. வியாபாரம் சுறுசுறுப்பான காலங்களில் பணமுடக்கம் ஏற்பட்டு அவதியுறுவார்கள்.

**18. முதல் உலகப் போர்க் (1914-18) காலத்தில் செலாவணித்தாள்கள் :** போரின் முதலாண்டில் பண நெருக்கடி அதிகரித்தது. செலாவணித்தாள் அலுவலகத்தில் மக்கள் சென்று மாற்ற முயன்றனர். அது பெரும்பீதியை உண்டாக்கியது. அதற்கு இங்கு அதிகப்படியான விளக்கம் தேவையில்லை. 1915ஆம் ஆண்டுக்குப் பின்னர் இந்தச் செலாவணித் தாள்கள் மீது பெரும் பளு ஏற்பட்டு, அதன் நிமித்தம் பொதுமக்கள் அதிகப்படியான ரூபாய்களைக் கேட்க ஆரம்பித்தனர். அதைச் சரிக்கட்ட புது நாணயங்களை வெளியிட முயன்றும் ஈடுகட்டாது

1. 1914-18ஆம் ஆண்டுகளில் போரின் காரணமாக நிலைமை சமாளிக்க முடியாது போகவே அடிக்கடி சட்டமன்றங்கள்மூலம் சட்டங்கள் போடப்பட்டன, 18ஆம் எண்ணுள்ள பாராவைக் கவனிக்கவும்.

போகவே நம்பிக்கை வெளியீட்டின் இறுதி வரம்பு 1861-ல் 4 கோடியாக இருந்ததை 1911-ல் 14 கோடியாக்கி 1915 வரையிலும் அவ்வாறு இருக்க விட்டனர். கீழ்க்கண்ட அட்டவணை, போர்க் காலத்தில் உச்ச வரம்பு அதிகரித்தது என்பதை விளக்குகிறது.

| சட்டங்கள் | நிரந்தர முதலீடுகள் | அனுமதிக்கப் பட்ட தாற்காலிக முதலீடுகள் | மொத்தம் |
|---|---|---|---|
| சட்ட எண் 1915-ல் | 14 | 6 | 20 |
| ,, 1916-ல் | 14 | 12 | 26 |
| ,, 1917-ல் | 14 | 36 | 50 |
| ,, 1917-ல் | 14 | 48 | 42 |
| ,, 1918-ல் | 14 | 72 | 86 |

மொத்த நிதியில் சீரான முறையில் ஏற்றமடைந்த கடன்பத்திரங்களின் சதவீதப் பட்டியலைக் கீழ்க்கண்ட அட்டவணையில் காணலாம்.[1]

| மார்ச்ச மாதம் கடைசித் தேதி வரையிலும் | வழக்கிலுள்ள தாள்களின் மொத்தம் | ரிசர்வ் நிதியின் அமைப்பும், தன் இருப்பிடமும் (இலட்ச ரூபாய்க் கணக்கில்) | | | | | | | கடன் பத்திரங்களின் கூட்டுத் தொகை மொத்த நிதியில் (Total Reserve) உள்ள சதவீதம். |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| | | வெள்ளி | பொன் | | | கடன்பத்திரங்கள் (கொள் முதல் விலை) | | | |
| | | இந்தியா | இந்தியா | இங்கிலாந்து | மொத்தம் | இந்தியா | இங்கிலாந்து | மொத்தம் | |
| 1914 | 66·22 | 2,053 | 2,244 | 915 | 3,159 | 3,159 | 400 | 1,400 | 21 |
| 1915 | 61·63 | 3,234 | 764 | 765 | 1,529 | 1,000 | 400 | 1,400 | 23 |
| 1916 | 6,773 | 2,357 | 1,224 | 1,192 | 2,416 | 1,000 | 1,000 | 2,0C0 | 29 |
| 1917 | 8,637 | 1,921 | 1,200 | 667 | 1,867 | 1,000 | 3,849 | 4,849 | 56 |
| 1918 | 9,979 | 1,079 | 2,685 | 67 | 2,752 | 1,000 | 5,148 | 6,148 | 62 |

1. ஷிர்ராஸ் எழுதிய பொது நிதியியலில், பக்கம் 284 (2-வது வெளியீடு).

**19. போருக்குப்பின் செலாவணித்தாள்கள் :** போர்க் காலத்தின்போது தோன்றிய செலாவணித் தாள்களின் பெருக்கம் போர் முடிந்துங்கூட தொடர்ந்து இருந்தது. 1919 ஆம் ஆண்டில் நம்பிக்கை முறையின் வரம்பின் நிதி (fiduciary limit) கீழ்க்கண்டவாறு அதிகரிக்கப்பட்டது. இப் பட்டியலில் காணப்படும் எண்கள் கோடிக்கணக்கிலுள்ளன.

| சட்டங்கள் | நிரந்தர முதலீடுகள் | அனுமதிக்கப் பட்டதாற்காலீக முதலீடுகள் | மொத்தம் |
|---|---|---|---|
| சட்ட எண் 11 1919-ல் | 14 | 86 | 100 |
| ,, 1919-ல் | 20 | 100 பிரிட்டனின் கருவூல உண்டியல்கள் | 120 |

1920 ஆம் ஆண்டு மார்ச்சு மாதத்தில் ஆறு மாதங்கள் வரை அமலில் இருக்க ஒரு சட்டம் தற்காலீகமாகப் பிறப்பிக்கப்பட்டது. அதன்படி முதலீடுகளின் (ஸ்டர்லிங் அல்லது ரூபாய்) தன்மை அல்லது அவை எங்கிருக்கப்பட வேண்டுமென்ற வரம்பை நீக்கியது. செலாவணித்தாள் நிதியின்மையால் இந்தியா மந்திரி ஸ்டர்லிங் கடன் பத்திரங்களை விற்று இலண்டனுக்குச் செலுத்த வேண்டிய தொகைகளைக் கட்டினர். இதற்குச் சமமான செலாவணித் தாள்களை ரத்து செய்ய வேண்டியமைந்தது. அதன் மாற்று வீதம் : ரூ. 15 = 1 பவுன்.

1920ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் முதல் தேதியில் வெளியான இந்தியச் செலாவணித்தாள் திருத்தச் சட்டம் இரண்டு முக்கிய பகுதிகளைக் கொண்டிருந்தது. அவை நிரந்தர நிலையும் மாறும் தன்மையுமாகும்.

(1) **நிரந்தரநிலைச் சட்டத்தின் ஷரத்து :** மொத்த ரிசர்வ் நிதியில், உலோக ரிசர்வ் மட்டும் 50 சதவீதம் இருக்கவேண்டும். (ஸ்மித் குழுவினர் 40 சதவீதமென முடிவாக்கினர்) 20 கோடி ரூபாய் பெறுமான முதலீடுகள் இந்தியாவிலும் மற்றவை அந்த ரிசர்வ் நிதியிலிருந்து குறுகிய காலக் கடன் பத்திரங்களில் இடப்பட்டு இலண்டனிலும் இருக்க வேண்டும். 90 நாட்களில் காலா

வதியாகக் கூடிய உண்டியல்களின் பேரில் ரூ. 5 கோடி மதிப்புள்ள செலாவணித்தாள்களை வெளியிட, செலாவணித்தாள் கட்டுப்பாடு அதிகாரிக்கு உத்தரவு இடப்பட்டது. 1923 ஆம் ஆண்டின் செலாவணித்தாள் திருத்தச் சட்டப்படி இந்த வெளியீடு 5-லிருந்து 12 கோடியாக ஆக்கப்பட்டது. இந்த அதிகப்படியான வெளியீட்டை 50 சதவீத உலோக ரிசர்வ் கணக்கில் சேர்க்கக் கூடாது. இந்தியா மந்திரி 5 மிலியனுக்கு அதிகமாகப் பொன் கட்டிகள் இலண்டனில் வைத்துக்கொள்ளக் கூடாது என்று, பொன் ரிசர்வு வரையறுக்கப்பட்டது.

(2) **மாற்றமுள்ள ஷரத்துகள்** : புதிய வீதப்படி இலண்டனில் உள்ள பொன் ஸ்டர்லிங் கடன் பத்திரங்கள் மதிப்பீடு செய்யக் கையாளும் முறைகள் இச் சட்டத்தில் சேர்க்கப்பட்டன. புதிய மதிப்பீட்டின் காரணமாக உலோக நிதி 50 சதவீதத்திற்கும் குறைவாகியது. முதலீட்டில் போட்ட தொகை 85 கோடி ரிசர்வு எனத் தற்காலிகமாகக் கருதப்பட்டது. மறுமுறை மதிப்பீட்டில் முன் விலைக்கு ⅔ பங்காதலால் இதில் ஏற்பட்ட குறைவை ஈடுகட்ட ஸ்டர்லிங் பொன் கடன் பத்திரங்களுடன் அதற்கென உண்டாக்கப்பட்ட ரூபாய் முதலீடு பத்திரங்களைச் செலாவணித்தாள் நிதியுடன் இணைத்து விடலாம். மேலும், ரூபாய் முதலீட்டுக் கடன் பத்திரங்களில், அரசினர், சட்டத்தின் எல்லைக் கோட்டை மீறியதால், அதிகப்படியான தொகையை ஸ்டர்லிங் கடன்பத்திரங்களைக் கொண்டு ஈடுபடுத்த வேண்டும். ஸ்டர்லிங் கடன்பத்திரங்களை வாங்குவதற்கான நிதியைப் பெறக் கீழ்க்கண்ட முறைகளை அனுசரித்தனர் : (1) நிதியில் உள்ள கடன்பத்திரங்களினின்று கிடைக்கும் வட்டி, (2) புதிய ரூபாய் நாணயங்கள் அடிப்பதில் ஏற்படும் லாபம், (3) பொன் திட்ட நிதியில் 40 மிலியன் பவுண்டுகளுக்கு மேலிட்டால் வரும் வட்டித் தொகை, (4) செலாவணித்தாள் கட்டுப்பாடு அதிகாரியிடம் உள்ள வர்த்தக உண்டியல்களினின்று கிடைக்கும் வட்டி. 1921-22 ஆம் ஆண்டில் மட்டிலும் பொன் நிதியில் இருந்து பணம் எடுத்து அதற்கென நிறுவப்பட்ட கடன்பத்திரங்களைக் கொடுத்துக் கழித்தனர். இதர ஆண்டுகளில் முன் கூறிய வழிகளில் இலாப நஷ்டக் கணக்கில் கொண்டுவந்து அதற்கென ஏற்பட்ட கடன் பத்திரங்களை முடிவாகத் தீர்த்துக் கட்டினர்.

1927 ஆம் ஆண்டில் பொன், ஸ்டர்லிங் கடன் பத்திரங்களை மறு முறை மதிப்பீடு செய்யச் சட்டமியற்றினர். அதன்படி வெள்ளி ரூபாய்க்கும், பவுனிற்கும் ஏற்ப வீதம் 1 பவுன் = ரூ. 13-1-3 ஆகும்.[1] இதனால் ஸ்டர்லிங் கடன்பத்திரங்களின்

1. 29 ஆம் எண்ணுள்ள பாராவைப் பார்க்க.

மதிப்புக் கூடியது. அதற்கியைந்த 930 லட்சம் பெறுமானமுள்ள கருவூல உண்டியல்கள் அடித்து எடுக்கப்பட்டன.

**20. 1925 முதல் 1935 வரை செலாவணித்தாள் ரிசர்வ் நிதி :**[1] இதையடுத்து வரும் அட்டவணையில் காணும் பத்து ஆண்டுகளுக்கான ரிசர்வ் நிதியின் அமைப்பும் இருப்பிடமும் நமக்குக் கவர்ச்சியளிக்குமளவில் அமைந்துள்ளன.

1929 முதல் 1932 வரை அரசியல் கொந்தளிப்பும் வர்த்தகத்தில் பெரும் சரிவும் ஏற்பட்டன. உள்நாட்டு விலைகள் சரிந்தன. வழக்கிலிருந்த செலாவணித் தாள்களில் குறைவு ஏற்பட்டது. நாணயப் பரிவர்த்தனையும் சக்தியின்றி நிகழ்ந்தது. உள்நாட்டு அரசியல் குழப்பத்தினுல் வெளி நாட்டு மூலதனம் வெளியேற முயன்றது. இதனுல் ஊக வர்த்தகர்கள்[2] பெரும் லாபம் அடைந்தனர். இயல்பான முறையில் இந்திய மந்திரிக்கு உள் நாட்டுச் செலவுக்காகப் பணம் அனுப்புவதில் இடர்ப்பாடுகள் ஏற்பட்டன. ஆதலால் அவர் ஸ்டர்லிங் கடன் பத்திரங்களை இலண்டனில் விற்பனை செய்து தமக்குச் சேர வேண்டிய உள்நாட்டுச் செலவின் தொகையை எடுத்துக்கொண்டார். அந்த அளவிற்கு இந்தியாவில் செலாவணித் தாள்களைச் சுருக்க வேண்டியதாயிற்று. இவ்விதமான சுருக்கத்தால் ரூபாய்க் கடன் பத்திரங்களின் அளவு குறைந்தது. அடுத்த பக்கம் அட்டவணை பார்க்க.

முன் குறிப்பிட்டது உலோகமற்ற ரிசர்வ் நிதிகளைப் பற்றிய குறிப்பீடு ஆகும். உலோகப் பகுதியில் பொன் இருப்பின், அளவில் வீழ்ச்சி ஏற்பட்டது. ஊக வியாபார காரணத்தாலும், அரசியல் குழப்பங்களினுலும், பொதுமக்களின் தேவைக்கு ஏற்ப 6·2 மிலியன் பவுன் மதிப்புள்ள கடன்பத்திரங்களுக்காகப் பொன் திட்ட நிதியிலிருந்து ரூ. $8\frac{1}{3}$ கோடி மதிப்புள்ள பொன்னை எடுத்தனர். இவற்றுல் உள்நாட்டுக் கருவூல இருப்பும், ஸ்டர்லிங் விற்பனையும் 1 ஷி. $5\frac{49}{64}$ பை. விகிதத்தில் போயிற்று.

1929 முதல் 1931 வரை வெள்ளி நாணயம் 94·9 கோடியிலிருந்து 117·8 கோடியாக மாறியது. 1927 முதல் 1937 வரை நம் நாட்டரசினர் வேண்டிய அளவு வெள்ளியை விற்பனை செய்யா

1. செலாவணித் தாள் கட்டுப்பாடு அதிகாரியின் அறிக்கையைப் பார்க்க.

2. நடப்பில் இருந்த 1 ஷி. 6 பெ. விகிதத்தில் ரூபாய்களை ஸ்டர்லிங்காக மாற்றிப் பழைய வீதமான 1 ஷி. 4 பெ. ஆகும் என்றும் அதனுல் பெருத்த லாபமடையலாம் என்றும் வாளா இருந்தனர்.

திருப்பின் இன்னும் அதிகப்படியான அளவு வெள்ளி நாணயம் இருந்திருக்கக்கூடும். இவற்றால் (1) பழக்கத்திலுள்ள வெள்ளி நாணய எண்ணிக்கை குறைந்தது. (2) வெள்ளி, நாணயம், பொன் கட்டி, இவைகள் தாள் செலாவணி இருப்பில் குறைந்தன. (3) செலாவணித்தாள் நிதிக்கான பொன்கட்டி அதிகரித்தது. இதன்

| மார்ச் மாதம் 31-ஆம் தேதிக்குள் | மொத்த செலாவணித் தாள்கள் புழக்கத்திலுள்ள போது[1] | இந்தியாவில் உள்ள வெள்ளி நாணயம் | இந்தியாவில் உள்ள பொன் நாணயம் | நாணய உற்பத்திக்காக ஏற்பட்ட வெள்ளிக்கட்டி | கடன் பத்திரங்கள்: இந்தியாவில் உள்ள ரூபாய் | கடன் பத்திரங்கள்: இங்கிலாந்தில் உள்ள ஸ்டர்லிங் | உள்நாட்டு உண்டியல்கள் | மொத்த ரிஸர்வ் நிதியில் கடன் பத்திரங்களின் சதவீதம் |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1925 | 184·1 | 70·2 | 22·3 | 6·7 | 57·1 | 20·1 | 8·0 | 40·8 |
| 1926 | 193·3 | 77·2 | 22·3 | 7·6 | 57·1 | 29·0 | ... | 44·6 |
| 1927 | 184·1 | 95·9 | 22·3 | 8·5 | 49·7 | 5·5 | 2·0 | 31·1 |
| 1928 | 184·8 | 98·7 | 29·7 | 7·6 | 37·9 | 3·7 | 7·0 | 26·4 |
| 1929 | 188·0 | 94·5 | 32·2 | 4·9 | 43·2 | 10·6 | 2·0 | 28·7 |
| 1930 | 177·2 | 108·1 | 32·1 | 2·8 | 33·8 | 0·1 | ... | 19·1 |
| 1931 | 160·8 | 117·2 | 25·8 | 6·9 | 10·2 | ... | ... | 6·3 |
| 1932 | 178·1 | 102·0 | 5·2 | 9·2 | 57·9 | ... | 3·8 | 32·4 |
| 1933 | 176·9 | 96·3 | 26·0 | 15·5 | 39.1 | ... | ... | 22·1 |
| 1934 | 177·2 | 86·5 | 41·5 | 11.5 | 29·5 | 8·2 | ... | 21·2 |
| 1935 | 186·1 | 77·2 | 41·6 | 13·1 | 35.9 | 18·3 | ... | 29·7 |

1. இதில் காணும் புள்ளி விவரம் கோடிக்கணக்கில் கொடுக்கப்பட்டுள்ளது.

நிமித்தம் வெள்ளி ரூபாய்க் கடன்பத்திரங்கள் மதிப்பிழந்தன. கடைசியில் விளக்கப்பட்ட குறிக்கோளைப் பின்கண்டவாறு அடைந்தோம். வெள்ளி விற்பனையால் ஏற்பட்ட தொகையைக் கொண்டு, ஸ்டர்லிங் கடன் பத்திரங்களை வாங்கி, அதனுல் பொன் திட்ட நிதியினுக்கான பொன்னைச் சேர்க்க முடிந்தது. இதிலுள்ள பொன்னைச் செலாவணித்தாள் ரிசர்வ் நிதிக்கு மாற்றி, அதன்மூலம் அதற்குஈடான ரூபாய்க்கடன்பத்திரங்களைக் குறைத்துவிட்டோம். பிற்காலங்களில் உள்நாட்டுக் கருவூல இருப்புகளின் மூலம் அதிகப்படியான ஸ்டர்லிங் கடன்பத்திரங்களை வாங்கி அதனுல் ஸ்டர்லிங் ஆஸ்தியை அதிகரிக்க முடிந்தது.

**21. புழக்கத்தில் உள்ள செலாவணித் தாள்களும் அவற்றின் மொத்த எண்ணிக்கையும்:** புழக்கத்திலுள்ள மொத்தச் செலாவணித் தாள்கள் என்பதால் கொடுபடாதவைகளும் புழக்கத்தில் உள்ளவை எனக் கொள்ளலாம். அச்சிட்ட மொத்த எண்ணிக்கையில் ரிசர்வ் பாங்கின் பாங்க் பகுதி நிறுத்திவைத்தது போக, புழக்கத்திலுள்ள தாள்கள்தான் நடப்பில் சென்றுகொண்டிருப்பவை. மந்தமான காலத்தில் தாள் உருவில் பெரிய பணக்காரர் கைகளிலும், பாங்குகளிலும் இவை கிடைக்கும். மந்தமான காலங்களில் மொத்த செலாவணித்தாள் கூடுதலாகும். நல்ல சுறுசுறுப்பான காலங்களில் அறுவடைப் பொருள்களை இடம்விட்டு இடம் கொண்டுபோகவும் விவசாயிக்குப் பணம் கொடுக்க வேண்டியிருக்கிறது. ஏனெனில், ரூபாய் நாணயத்தைத்தான் இவர்கள் விரும்புகிருர்கள் ஆகவே பாங்குகளும், பெரிய செல்வர்களும் கையில் உள்ள செலாவணித் தாள்களை வெள்ளிப் பணமாக மாற்றுகின்றனர். (நாளடைவில் விவசாயிகள் கூட, கரன்சித்தாள் வைத்துக்கொள்ளும் பழக்கம் பெற்றுவிட்டனர்.) ஆதலால், சுறுசுறுப்பான காலங்களில் மொத்த செலாவணித்தாள் குறைகிறது.[1]

**22. இல்டன் யங் குழுவினர் (1925):** 1921ஆம் ஆண்டிலிருந்து 1925ஆம் ஆண்டுவரை, அரசினரின் இந்தியச் செலாவணி முறை பொதுவாகச் செயலற்று இருந்தது. எதற்கும் அசைந்து கொடுக்காத தன்மையையே இங்கு நாம் கருதவேண்டும். 2ஷி. வீதத்தில் பொன் மாற்ற முறை தோல்வியடைந்தது. அரசினரும் அதை ஒப்புக்கொண்டனர். பரிவர்த்தனையில் அளவிறந்த முறையில் இறக்கம் ஏற்படாமல் பார்த்துக் கொண்டிருந்தது. நாணயப் பரிவர்த்தனை 1 ஷி. 6 பெ. விகிதத்திற்கு எட்டியதும், இந்த

1. ஜே. எம். கீன்ஸின் இந்தியச் செலாவணியும், நிதியும் என்ற நூலில், பக்கம் 53.

முறையை நிரந்தரமாக்க அடிகோலியது. அதை ஆராய எண்ணி அரசினரால் ஒரு குழுவினர் இல்டன் யங் தலைமையில் ஆகஸ்டு மாதம் 15ஆம் தேதி 1925-ல் நியமிக்கப்பட்டனர் இக் குழுவினர் செலாவணி நிலையை நன்கு ஆராய்ந்து கீழ்க்கண்ட பரிந்துரைகளைக் கூறினர் : (1) நடப்பில் உள்ள முறை யாருக்கும் புலப்படுவதாகவும், விளங்கும்படியாகவும் அமையவில்லை என்றும், இதில் இரண்டு அடையாள நாணயங்களுக்கு (ரூபாயும், ரூபாய்த் தாள்களும்) ஈடான முழு மதிப்புள்ள சவரன் நாணயங்களும் புழக்கத்தில் இல்லை. இவைகள் தேவையற்றவை. பின்னால் இயம்பியவை கடினமாக இருந்தும் கூட வெள்ளியின் நிலை 4½ பென்ஸாக உயர்விளுல் உடனே இது கிடைப்பது அரிதாகும். (2) சட்டப்படி எதிர் கௌன்சில் உண்டியல்களை விற்பனை செய்ய உரிமை இல்லாததால், நிரந்தரப் பரிவர்த்தனை வீதத்திலிருந்து விலை இறக்கம் ஏற்படாமல் சட்டப்படி காப்புமுறை ஏற்படவில்லை. (3) அளவுக்குமீறி, பாரமான முறையில் திரும்பத் திரும்பச் செய்யப்பட்ட ரிசர்வ் நிதிகள் உள்ளன. எடுத்துக் காட்டாகப் பொன் திட்ட நிதி, செலாவணித்தாள் நிதி, பாங்கு நிதி இந் நிதிகளால் செலாவணிக் கட்டுப்பாடும், கடன் கொள்கையும் நேர்மையான முறையில் அமைக்கப்படவில்லை எனலாம். (4) தாளுகவே செலாவணிச் சுருக்கமும் பெருக்கமும் ஏற்படவேண்டியது போக, சர்க்காரின் விருப்பத்திற்கு ஏற்பச் செய்யப்படுகின்றன. ரிசர்வ் நிதிகள் தேய்வதின் மூலம் செலாவணி, தாளுகவே சுருங்கவில்லை. அதேபோல எதிர் கௌன்சில் உண்டியல்களைக் கொடுப்பதற்காகச் செலாவணித் தாள் நிதியில் உள்ள ஸ்டர்லிங் கடன் பத்திரங்களை மாற்றிளுல், உடனே செலாவணித்தாள் நிதியில் சுருக்கம் ஏற்படுகிறது. ஆயினும், பொன் திட்ட நிதியிலிருந்து நிதியைக் கடளுகப் பெற்ருல் செலாவணித்தாள் சுருக்கம் ஏற்படுவதில்லை. செலாவணிப் பெருக்கத்திற்காகத் தங்கள் கடமை வழுவாது ஸ்டர்லிங் கடன்பத்திரங்களை வாங்கிளுல், அதற்காகக் கருவூல இருப்புகளிலிருந்து முதலாக வாங்க முற்படவேண்டும். அப்படிச் செய்வதால் செலாவணித்தாளின் பெருக்கம் ஏற்படுவதில்லை.[1] (5) இந்த முறை இயல்பாகவே சுருங்கி விரியும் தன்மையைப் பெறவில்லை. 1920ஆம் ஆண்டின் திருத்தச் சட்டப்படி செலாவணித் தாள் கட்டுப்பாட்டு அதிகாரி, குறுகிய கால உண்டியல்களின் பேரில் செலாவணித் தாள்கள் வெளியிடலாம். ஆயினும், நம் நாட்டில் உண்மையான வர்த்தக உண்டியல்களின் குறைவால் இந்த ஷரத்து நடைமுறையில் பயன்படவில்லை

1. சேம்பர்லின் குழுவினரின் பரிந்துரைக்குத் தன் எதிர்ப்பைத் தெரிவிக்கும் போது பேராசிரியர் நிக்கல்சன கூறுவதாவது : ரூபாய் மாற்றுவது அரைகுறையாகவும், நிறுத்தப்பட்டும் இருப்பதால் புதிய அளவில் ரூபாய்களை விசரச் சேர வில ஏற்றம் ஏற்படுவதைத் தடுக்கவியலாது.

**23. பொன்கட்டித் திட்டம்:** நடைமுறையில் உள்ள திட்டங்களில் காணும் பிழைகளை நீக்கி, பொதுமக்களின் நன்மதிப்பைக் கோரி, ஒரு புதிய திட்டத்தை வகுத்தனர். நிரந்தர அமைப்பை முன்னிட்ட வெளிநாட்டில் மாற்றும் தன்மையோடு நில்லாது உள்நாட்டு நாணயத்திற்கும் பொன்னுக மாற்றும் திட்டம் ஒன்றை ஏற்படுத்தினர். நிதி இலாக்கா அலுவலர்கள் பரிந்துரைத்த பொன் நாணயத் திட்டத்தையும், பொன் திட்டத்தையும் அவர்கள் ஒப்புக்கொள்ளவில்லை. ஏனெனில், (1) பொன்னின் விலை ஏற்றத்தின்போதும் உலக விலைச் சரிவின்போதும் பெரிதும் கடன் தொல்லைகள் ஏற்படும். உலக வியாபாரத்தில் இந்தியாவிற்கு நிரந்தரமாகப் பாதக வாணிகக் கொடுப்பல் நிலைதான் ஏற்படும் (2) மிக உயரிய மதிப்புள்ள பொன் நாணயத்தை ஏற்படுத்தினுல், செலாவணித்தாளைப் பொதுமக்களிடையே பரப்புதல் கடினமாகும். (3) இந்தக் கொள்கையின் ஒரு பிரிவாக வெள்ளி, சட்டப்படி பணமாக இராவிடில், உலகச் சந்தையில் வெள்ளி விலை திடீரெனக் குறைந்து, அதனுல் அநேக சிக்கல்கள் தோன்றக்கூடும். எடுத்துக்காட்டாக, இதேபோல வெள்ளித் திட்டத்தில் ஈடுபட்ட சைனு தேசத்திற்கும், இந்தியாவிற்கும் உள்ள வியாபார வர்த்தக முறைகள் நின்றுபோய்விடும். வெள்ளியை நாணய முறையிலிருந்து விலக்கிப் பொன்னை ஈடுபடுத்தினுல் அது உலகச் சந்தையின் விலைகளை மிகவும் பாதித்து, இந்தியாவிற்கும் இதர நாடுகளுக்கும் தீங்கு ஏற்படுத்தும். இத் திட்ட மாற்றத்தை, அமெரிக்க ஐக்கிய நாடுகள் வெள்ளி விற்பனையிலீடுபட்டிருப்பதால் எதிர்க்கும். மேலும், பொன்னுக்காக வேண்டி இந்தியா அமெரிக்க ஐக்கிய நாட்டை எதிர்நோக்கியிருக்கவேண்டி நேரும். இவ்விதமான சந்தர்ப்பங்களில் ஐக்கிய நாடுகள் உதவி அளிக்கும் என எதிர்பார்ப்பது கடினம். (4) இத் திட்டத்தின் அடக்கவிலை மிகவும் அதிகமாகப் போகலாம்.

ஆகையால் இக் குழுவினர், பொன் நாணயமில்லாத, பொன் கட்டித் திட்டம் ஒன்றை வகுத்தனர். அதன் பெயர்தான் பொன் கட்டித் திட்டம். வழக்கப்படி வெள்ளி ரூபாயும், செலாவணித் தாள்களும் செலாவணியில் இருந்துவரும். எல்லாச் செயல் முறைகளுக்கும் பொன் விகிதத்தில் மாற்றிக் கொடுக்கும் முறை ஏற்படுகிறது. ஆனுல், பொன், வெள்ளி நாணயத்தைப் போன்று புழக்கத்தில் இராது. 'அது முதன் முதலாகப் புழக்கத்திலும் நடப்பிலும் இருக்கக்கூடாது. அது நிரந்தரமாகப் புழக்கத்தில் வரக்கூடாது'.[1] ஒரு நிலையான விகிதத்தில் பொன்னைக் குறிப்பிட்ட அளவில் செலாவணி அதிகாரி சட்டப்படி பொன்னை

1. இல்டன் யங் குழுவினரின் அறிக்கை, பாரா. 33-54.

வாங்கவோ விற்கவோ ஏற்பாடு செய்யவேண்டும் எனத் திட்டம் ஏற்படுத்தியது.[1] அதாவது 400 அவுன்ஸ் (அல்லது 1,065 தோலா) எடையுள்ள பொன்கட்டியைப் பெறலாம். (1) வெள்ளி ரூபாய்களைப் பொன்கட்டியாக மாற்றிக்கொள்ளலாம். பொன் நாணயமாகச் செய்வது முடியாது. (2) இதுகாறும் பதுக்கப்பட்டிருந்த சவரன்கள் மறுபடி புழக்கத்தில் வருவதைத் தடுக்கச் சவரன்களைச் சட்டப்படி செல்லாதவைகளாக்கினர். (3) பொன் சேமிப்புப் பத்திரங்களை வாங்கிக் கொள்ளும்படிப் பொது மக்களை ஊக்குவித்தனர். இந்தப் பொன் சேமிப்பு நிதிப்பத்திரங்கள் 3 முதல் 5 ஆண்டுகளுக்குள்ளாக வெள்ளிப் பணமாகவோ, அல்லது பொன்னுகவோ அல்லது பத்திரம் வாங்கியவரின் விருப்பத்திற்கு இயைந்தவாறே திருப்பிக் கொடுக்கப்படும். இம் முறைகளால், பதுக்கல் கொள்கைகளைக் கடைப்பிடிப்பவர்கள் வட்டி விகிதம், விலை முதலியவைகளில் செய்யும் மாறுதல்களைத் தடுக்கலாம். நடப்பில் உள்ள செலாவணித்தாள்களுக்கு, மாற்றத்திற்காக வெள்ளி ரூபாய் கொடுக்கலாம். ஆயினும் இனி வரும் புதிய தாள்களுக்கு வெள்ளி நாணயம் கொடுக்கவேண்டிய கட்டாயமில்லை. வெள்ளியின் விலையேற்றத்தைத் தடுப்பதே இதன் நோக்கம். செலாவணித்தாள் அதிகாரியின் விருப்பத்திற்கிணங்க, பெரிய செலாவணித்தாள்களுக்குச் சிறிய தாள்களையோ அல்லது ரூபாய் நாணயமோ கொடுக்கலாம். பொதுமக்களின் விருப்பத்திற்கு இணங்க உலோகச் செலாவணி கொடுத்தலே நலம்.

**24. ரிசர்வ் நிதியின் முறைகள் :** நாம் முன்னர் இலண்டனிலும் இந்தியாவிலும் செலாவணிநிதி இருந்ததைப் பார்த்தோம். இம் முறையை நடத்தி வருதல் அவசியமென்பதற்கான காரணங்கள் : (1) இலண்டன் உலகக் கடன் சந்தையாகவும், எல்லா ஊர்களுக்கும் கணக்குத் தீர்வகமாகவும் (clearing house) இருந்தது. (2) வர்த்தகப் பொறுப்புகளுக்காகவும், இந்திய மந்திரியின் செலவுகளுக்காகவும் இலண்டன் நகரில் எக்காலமும் பணத்திற்குத் தேவையிருந்தது. (3) ரிசர்வ்நிதியை இந்தியாவில் விட்டுவைப்பதால் காலதாமதமும் கப்பலில் அனுப்புவதால் ஏற்படும் செலவும் உண்டாகின்றன. (4) இந்தியாவிற்குக் குறைந்த காலச் சந்தை

1. குழுவினர் நியமித்த விகித ஒற்றுமை 1ஷி. 6 பெ. (8·47 குண்டுமணி எடைப் பொன்) அதை 1 பவு. = 13·37 ரூபாயாக மதிப்பிட்டது. வாங்கி விற்றதில கீழ்க் கண்டவைகளைக் கூடக் கவனிக்கவேண்டும். (1) இறக்குமதியில் அடக்க விலை, (2) ரூபாயின் பரிவர்த்தனையால் ஏற்பட்ட ஏற்றத் தாழ்வு இல்லையெனில் செலாவணி அதிகாரி தாங்களே சாதாரண சந்தை விற்பனையைப் போல் செய்து வெளி விலையை விடக் குறைவு செய்து விடுபவர் ஆவர்.

கிடையாது. அம் முறையில் கிடைக்கக்கூடிய வட்டி இல்லாமல் போய்விடுகிறது. (5) இந்திய நிதியை இலண்டனில் வைத்திருப்பது சில ஐரோப்பிய நாட்டு மத்திய பாங்குகள் அயல் நாட்டு உண்டியல்களை வைத்திருப்பது போலாகும்.[1]

இந்த வாதங்கள் கட்டுப்படுத்தக் கூடியவையாக இல்லை. எடுத்துக்காட்டாக இலண்டனில் நிதியைச் சேர்க்க இந்தியாவிலிருந்து சிரமப்பட்டுக் கப்பலில் அனுப்பவேண்டிய நிர்ப்பந்தம் இல்லை. இதர முறையிலுங்கூட அனுப்பவியலும். வர்த்தக சம்பந்தமான கணக்குக்கு இந்தியாவிற்குச் சேரவேண்டிய தொகைக்கென இந்தியாவில் இருப்பு வைப்பதில்லை. இந்தியாவின் பரிவர்த்தனை மிகவும் குறைவாக இருந்தது என்ற வாதம் சரியில்லை. ஏனெனில், இந்தியாவிற்கு அயல்நாட்டு வாணிகத்தில் நல்ல ஏற்றமிருந்தது. குறுகிய கால வரம்பில் பணத்தை வட்டிக்குவிட்டு நல்ல ஆதாயம் பெறலாம் என்ற முடிவு சரியானதே. ஆனால், இதை அவ்வளவு பெரிய கொள்கையெனக் கருதவியலாது. இந்தியாவிலும் குறுகிய காலச் சந்தை ஒன்றை நடத்த முயற்சி செய்திருக்கலாம். வெள்ளி கொள்முதலுக்கு ஏற்ற இடம் இலண்டன்தான் என்ற கொள்கையைப் போல வேறு இடங்களுக்கும் கூறவியலும். செலாவணித்தாள் நிதியமைப்பின் கொள்கை என்னவெனில், செலாவணித்தாளை வெள்ளிப் பணமாக மாற்ற எளிய முறைகள் அமைதல் வேண்டும். இதைச் செம்மையாகக் கவனிக்க அதற்கான நிதியை 6,000 மைல்களுக்கு அப்பால் அமைத்து, அதனால் தீர்வுகாண முடியுமென்பது தவறு.

**25. பணம் அனுப்பும் முறைகளை நிர்வகித்தல்:** கௌன்சில் உண்டியல்மூலம் விற்பனைசெய்து இந்தியாவில் உள்ள பணத்தை இங்கிலாந்திற்கு அனுப்புவது, கிழக்கிந்தியக் கம்பெனி கால முதலே நடைபெற்றுவருகிறது. 1893-க்கு முன்பெல்லாம் உள்நாட்டுச் செலவுக்கான தொகைக்கேற்ப விற்பனையைச் செய்து இலண்டனுக்கு அனுப்புவது இம் முறையில் இலண்டனுக்குப் பணம் சேர வழியாயிற்று. இந்திய மந்திரி தன் விருப்பப்படிக் கௌன்சில் உண்டியல்களை மிகவும் கூடிய விலைக்கோ அல்லது குறைந்த விலைக்கோ விற்று வந்தார். சில சமயங்களில் எந்தக் காரணமும் இன்றியும் விற்று விடுவார். இந்தக் கௌன்சில் உண்டியல்களை வாங்கி இந்தியாவிலிருந்து இறக்குமதி செய்தவர்கள் பணம் அனுப்ப இதையே நல்ல முறையாகக் கையாண்டனர். இந்தக் கௌன்சில் உண்டியல்கள் இதைவிட இன்னும் பலனுள்ளவையாக இருந்தன. இம் முறையால் இந்தியச் செலாவணிப் பரிவர்த்தனையைச் செம்மையாகக் காப்பாற்ற மற்றும் இந்தியாவி

1. நம் நாட்டில் சுதந்தரம் பெற்ற பின்னுங்கூட ரிசர்வ் பாங்கின் ஆஸ்தியாக சில வகை டாலர்களின் உண்டியல் வைத்துள்ளோம்.

லுள்ள நிதியை இலண்டனுக்கு அவ்வப்போதுவும் மாற்றவும், இது பயன்பட்டது. இந்திய நிதியை வேண்டாது மாற்றுவதில்லை. வருங்காலத்தில் இலண்டனில் ஏற்படும் தேவைகளைப் பூர்த்தி செய்யவே அனுப்பிவந்தனர். மிகவும் குறைந்த வட்டிக்கு இங்கிலாந்தில் உள்ள நிதியை இந்திய மந்திரி தம்மிடம் உள்ள ஜாபிதாப்படி, கடன் வாங்க அருகதை உடையவர்களுக்குக் கொடுத்துவந்தார். அதிலுங்கூட, தன் விருப்பப்படிக் கடன் கொடுத்துவந்தார் என்ற புகார் உண்டாயிற்று. இந்தியாவின் நிதி இந் நாட்டில் அவதிப்படும் வியாபாரிகளுக்குக் கிடைக்கவில்லை. அயல்நாட்டிலுள்ள வர்த்தகர்களுக்குக் கிடைக்கிறதே என்று புலம்பினர். ஸர் ஸ்டான்லி ரீட் தம் எழுத்தோலையில் கீழ்க்கண்டவாறு குறிப்பிடுகிறார்: 6,000 மைல்களுக்கப்பால் உள்ள இந்திய மந்திரி இந்திய மக்களில் பெரும்பான்மையோருடைய கண்களுக்கு, சந்தேகத்துக்குரியவராகத் தோன்றுகிறார். அந்த இந்திய மந்திரியைச் சுற்றி எண்ணத்திலும், கொள்கைகளிலும் இந்தியர்களுக்கு எதிரானவர்களே இருக்கிறார்கள். அவர் இரகசியமாக வேலை செய்துவந்தார். இந்தியாவிற்காக எந்த நல்ல செயல்களைப் புரிந்தாலும் அவற்றை இவ் வுலகமக்கள் புரிந்துகொள்ள முடியவில்லை. அவ்வாறான பெரும் பொறுப்புகளையுடையவர்கள் ரகசியமாகச் செயல் புரிந்தாலும் அச் செயல்கள் அரசியல் குழப்பங்கள் அமைந்தவையானால் அவர்களிடமிருந்து, அப்பாலுள்ள மக்களின் நிலையை விளக்க இயலாது எனலாம்.

கொள்கை வாயிலாக நோக்கின், பரிவர்த்தனைக் கட்டுப்பாட்டு முறை வரவேற்கத் தக்கதன்று. இதைச் செம்மையான முறையில் நடத்த வல்லுநர்கள் இல்லை. மிக நுட்பமானதும், சிக்கலானதுமான பல பிரச்சினைகள் அடங்கிய இச் செயல்களை நடத்த இதர முன்னேற்றமடைந்த நாடுகளில் அதற்கெனத் தொழில் புரியும் மத்திய பாங்குகள் உள்ளன. இதை நடத்திவந்த இந்திய அரசினரே மிகவும் சீர்கேடான வழியில் நடத்தினர்.[1]

1. இங்கு இந்தியாவிலோ அரசினர் அளவுக்கு மீறிச் செலாவணியை உற்பத்தி செய்து நாட்டின் செலாவணியை ஈடுகட்ட முயல்கின்றனர். வெவ்வேறு காலங்களுக்கு ஏற்ற வகையில் கூட்டியோ குறைத்தோ பணிசெய்துவருகின்றனர். மேலிடத்திலிருந்து வரும் தாக்கீதுகளுக்கு ஈடு கொடுக்க வேண்டியிருக்கிறது. இதர நாடுகளில் இச் செயல்கள் தனியாக ஒரு பாங்கிக்குக்கூடக் கொடுக்கப்படவில்லை. இந்திய நாணயச்சாலைகளை மூடிய பிறகு, இங்கிலாந்திலிருந்து வரும் ஒவ்வோர் அதிகாரியின் தனிப்பட்ட கொள்கைக்கேற்ப மாற்றியமைக்கப்படுகிறது. அவ்வாறு இந்தியாவிற்கு வரும் ஒருவர் இந்தச் செலாவணியை அளவுக்கு மீறி வெளியிடுவார். பின்னர் வரக்கூடியவர் இதற்கு மாறாக அந்தச் செலாவணியை அடிவரையிலும் வற்றவிடுவார்; போய்விடுவார். எவரும் ஒரு திட்டமின்றித் தம் விருப்பப்படிப் பரிசோதனையை நடத்தத் தங்கசாலையைத் திறக்கலாம். தலை தூக்காதவண்ணம் அதிக வரியை வெளிக்காட்டி அல்லது எதன்மீதாகிலும் இடக்கூடும் - சேம்பர்லின் குழுவினரிடம் மோரப் பரியுவனின் சாட்சியம்.

தொடர்பு இல்லாதவரும், இந்தியப் பொதுமக்களின் வெறுப்புக்கு ஆளான வருமான இந்திய மந்திரியின் தலையீடு இதை இன்னும் மோசமான நிலைக்குக் கொண்டு சென்றது.

**26. ரிஸர்வுகள் சம்பந்தப்பட்ட பரிந்துரைகள் :** செலாவணி நிதியையும், பொன்திட்ட நிதியையும் ஒன்றாக இணைத்துக் கீழ்க் கண்டவாறு கூறியுள்ளனர்: (1) ஒன்று சேர்க்கப்பட்ட நிதியைச் சட்டப்படி அமைத்து இயல்பாகவே செலாவணி கூடுதலும், குறைதலும் ஏற்படுமாறு செய்யவேண்டும். இதன் மூலம் நம் நாட்டின் நாணயப் பரிவர்த்தனையைச் சரிக் கட்டவேண்டும். (2) பொன்னும், பொன் கடன்பத்திரங்களும் நிதியில் 40 சதவீதத் திற்குக் குறைவுபடாமலும் முடிவில் 50-லிருந்து 60 சதவீதம் வரையும் அமையவேண்டும். பொன் இருப்பு 13 சதவீத அளவில் இப்பொழுது இருப்பது 5 ஆண்டுகளுக்குள் 20 சதவீதமாகவும் 10 ஆண்டுகளுக்குள் 25 சதவீதமாகவும் மாறவேண்டும். இக் காலவரம்பினுள் இந்தியாவில் உள்ள பொன் இருப்பை நன்கு காப்பாற்றவேண்டும். (3) இந்தப் பத்து ஆண்டுகளுக்குள்ளான காலமாற்றத்தில் வெள்ளி இருப்பை நிதியிலிருந்து படிப்படியாகக் குறைத்துக்கொண்டே வந்து 25 கோடி ரூபாய் மதிப்பளவில் வைக்கப்படவேண்டும். (4) தானாகவே மாற்றம்பெறும் வர்த்தக உண்டியல்களும், இந்திய அரசினர் கடன்பத்திரங்களும் இந்த ரிசர்வ் நிதியின் பகுதிகளாக அமையவேண்டும். இத் 'தோற்றுவிக் கப்பட்ட கடன்பத்திரங்கள்' சந்தைக்குக் கொண்டுபோகப்படும் கடன் பத்திரங்களால் விலக்கப்பட்டு, 10 ஆண்டுகளில் வர்த்தகக் கடன் பத்திரங்களாகவே இருக்கவேண்டும். (5) புழக்கத்தில் உள்ள வெள்ளி நாணயங்களைச் சுருக்குவதற்காக, அதாவது அதன் முகமதிப்பில் 5-ல் 1 பங்கு சுருக்கப்படுவதற்காக எடுத்துக் கொள்ளப்பட்ட பொறுப்பிற்கேற்ப, எடுத்த எடுப்பில் 50 கோடி ரூபாய் முதலாவதாக அமைக்கப்படவேண்டும். இம் முறைகளால் பலப்படுத்தப்பட்ட பொன் நிதி, பொன் கடன்பத்திரங்களைப் பணமாக மாற்றவும், அவசியப்பட்டால் பொன் நாணயச் செலா வணி கொண்டுவரவும் தேவைப்படலாம் என, இக்குழுவினர் முடிவாக்கினார்கள். பொன் திட்ட முறையில் வெள்ளிக்கிடமில்லை. ஆயினும் வெள்ளியினால் அச்சடிக்கப்பட்ட நாணயங்களில் பெரும் பகுதி நடை முறையில் இருந்து வருவதால், வெள்ளியைப் புறக் கணிப்பது எளிதன்று. இதே காரணத்தினால்தான் வெள்ளி நிதி தங்கத் திட்டத்திலும் கூடத் தங்கிவருகிறது. நிதியில் எவ்வளவு ரூபாய்க் கடன்பத்திரங்கள் இருக்கவேண்டும் என்பதைக் குறித்து இக் குழுவினர் கீழ்க்கண்டவாறு குறிப்பிடுகின்றனர்: 'சர்க்காரின் கடன் எல்லையைப் பாதிக்காமலும், சந்தையில் வெகு எளிதில்

ரூபாயாக மாற்றக்கூடிய அளவிலும், புறக்கத்திலிருந்து என்றுமே விடுவிக்கப்படாத அளவிலும் உள்ள செலாவணித்தாள்களின் மதிப்பிற்கு ஈடாக ரூபாய்க் கடன்பத்திரங்கள் நிதியில் இருக்க வேண்டும்' என்று இக் குழுவினர் கருதுகிருர்கள்.

**27. பொன்கட்டித் திட்டத்தின் குறைபாடுகளைப்பற்றிய விவரம் :** சர்க்கார் எடுத்து நடத்தும் நாணயப் பரிவர்த்தனை முறையையும் செலாவணித் திட்டத்தையும் இக்குழுவினர் கண்டித்த தோடு பொன் பரிவர்த்தனைத் திட்டத்தையும் ஒரே முகமாகத்தாக்கி யுள்ளமை பொதுமக்களுக்கு மனத்திருப்தியை அளித்தது என லாம்.[1] இவர்கள் பிரஸ்தாபித்த பொன் கட்டித் திட்டத்தையும், பொதுமக்கள் ஏற்க முன்வரவில்லை. பொதுமக்களின் நன்மதிப் பைப் பெற அரசினர் இந்நாட்டின் செலாவணியைப் பொன்னுடன் இணைக்க விரும்பியது நியாயமே. அவ்வாறு இணைப்பு செய்யப் படுவது கண்கூடாகத் தெரியவேண்டும். இத் திட்டத்தின்படி எவரால் 400 அவுன்சு தங்கம் வாங்க முடியும்? இம்முறையின்படி பாங்குகளும், பாங்குத் தொழில் நடத்துவோருமே இம் முறையைச் சரிவர நடத்தவியலும் பொதுமக்களுக்கு, செலாவணியைத் தங்க மாக மாற்றுவது, உண்மையானதாகவும், காணத்தக்கதாகவும் இருக்குமென்று கூற முடியாது. 1925-ல் பொன் கட்டித் திட்டத்தை இங்கிலாந்தில் அமலாக்கிய முறையை, இக் குழுவினர் பின்பற்றி இருக்கவேண்டும். பொன் கட்டித் திட்டத்தின் முறையை ஆதரிப்பவர்கள் ஜெனிவா மாநாட்டில் 192.-ல் மாற வொண்ணு உள்நாட்டுச் செலாவணித்தாள்கள் உள்ள நாடுகளிலேதான் இம் முறை பலனுள்ளதாக இருக்கும் எனக் கருதினர். வெளிநாட்டுக் கடன்களைக் கையிலுள்ள பொன்னைக் கொண்டு தீர்ப்பதற்கும் இது பலனுள்ளதாக அமைகிறது. பொன் செலாவணித் திட்டமே இந்திய நாட்டிற்கு இயல்பானது என்று பொருளாதார நிபுணர்களான டாக்டர் கேனனும், டாக்டர் கிரி கோரியும் ஜெனிவா மாநாட்டிற்கு முன்னரே அபிப்பிராயம் கொண்டிருந்தனர். இதற்கு அடுத்தபடியாகக் கொண்டுவரப் பட்டது ஜெனிவா மாநாட்டுப் பரிந்துரையே எனலாம். இக் கொள்கையினின்று நோக்குங்கால் சவரனைச் சட்டப்படிச் செல்லத் தக்கதன்று என ஒதுக்கியது பிற்போக்கான பொருளாதாரத்தின் அறிகுறி எனலாம் கையில் எண்ணிறந்த அளவில் சவரன்

1. நாட்டின் செலாவணிக் கொள்கையும், கடன் கொள்கையும் ஒருமித்து இருக்க இக் குழுவினர் இந்தியாவிற்கு மத்திய பாங்கு கண்டிப்பாகத் திறக்கப்பட வேண்டும் என்று இயம்பினர். இது இந்நாட்டுப் பொதுமக்களின் ஒரே முகமான எண்ணம் என்றுகூடக் கொள்ளலாம். ஆயினும் இதைப் பற்றிய பலதரப்பட்ட எண்ண வேறுபாடுகளால் இப் பரிந்துரையை அரசினர் ஏற்கவில்லை. ஆயினும் 1935-ல் தான் மத்திய பாங்கியைத் திறக்க முன்வந்தனர்.

வைத்துக்கொண்டிருந்த பெரும் மக்கள் கூட்டம் இதனால் அவதி யுற்றது என்றால் மிகையாகாது.

**28. விகிதத்தைத் திடப்படுத்துதல் :** ரூபாயும் பொன்னும் விகிதப்படி நிரந்தரமாக 1 ஷி. 6 பென்ஸில் நிலைக்க, குழுவினர் செய்த பரிந்துரைகள் வருமாறு: 1922 டிசம்பர் முதல் 1924 ஜூன் வரை ரூபாயின் பரிவர்த்தனை நிரந்தரமாக நின்றது. அவ்வமயம் 1 ஷி. 3 பெ. ஆகும். அதே சமயத்தில் ரூபாய் விலைமட்டம் சுமார் 176 ஆக இருந்தது. 1924 ஜூலை முதல் 1925 ஜூன் மாதத்துக்குள் ரூபாய் விலை மட்டம் 179-லிருந்து 158-க்குப் பக்க மாகக் குறைந்தது. (1) 18 மாதங்களில் ரூபாய் மதிப்பு பொன்னில் 1 ஷி. 3 பெ. இருந்தபொழுது விலை மட்டம் சுமார் 176 ஆக இருந்தது. (2) அதற்கடுத்த ஆண்டில் ரூபாயின் மதிப்பு 1 ஷி. 6 பெ. ஆனபோது ரூபாய் விலை மட்டம் 160-க்கும் கீழே சென்றது. (3) அவ்வமயம் முதற்கொண்டு 1 ஷி. 6 பெ. நிலையில் ரூபாயின் மதிப்பு நிலைத்திருந்தபோது, ரூபாயின் விலை மட்டம் சுமார் 158 ஆக இருந்தது. ஆரம்ப காலத்தில் பொன் விலையின் மட்டம், ஒரே நிலையில் அமைந்திருந்தது. மாற்றம் ஏற்பட்ட காலத்தில் விலையும் பரிவர்த்தனையும் ஒன்றையொன்று பின் தொடர்ந்து, விலைகளும் செலாவணிப்பரிவர்த்தனையும் சமநிலையை அடைந்தன. இந்த நிலைமை 1925 வரை நடைமுறையில் இருந்து வந்தது. சணல் தொழில் சம்பந்தப்பட்ட சில புள்ளி விவரங்களின் அடிப்படையின்கீழ் இக்குழுவினர் மேற்கண்ட வாதங்களைப் புரிந்தனர். 1 ஷி. 4 பெ. விகிதம் இயற்கையான பரி வர்த்தனை விகிதம் என்ற கருத்துக்கொண்டவர்களுக்குச் செலா வணியின் அளவு அயல்நாட்டுவிலைகளும் சமநிலையில் இருந்தால் தான் இயற்கை எனக்கூறலாம் என்று குழுவினர் வலியுறுத்தினர். 1 ஷி. 6 பெ. விகிதம் இந்தச் சோதனையில் திருப்தியளித்தது என அவர்கள் கருதினர். மேலும் 1 ஷி. 6 பென்ஸ் விகிதத்தில் போதிய அளவு பொருத்தப்பாடுகள் தோன்றுவதைக்கொண்டு 1 ஷி. 4 பெ. விகிதத்தில் அது ஏற்பட்டது எனக் கூறவியலாது.

ஸர் புருஷோத்தம்தாஸ் தாகுர்தாஸ் தன் எதிர்ப்பை வலி யுறுத்தும் அறிக்கையில், யுத்தத்திற்கு முன்பிருந்த விகிதமாகிய 1 ஷி. 4 பெ. முறையை நிலைநிறுத்த, 1924 செப்டம்பர்-அக்டோபர் மாதங்களிலிருந்த சூழ்நிலையை வேண்டுமென்றே அரசினர் விட்டு விட்டு அதிகப்படியான விகிதமாகிய 1 ஷி. 6 பெ. ஆக அதிகரிப் பதையே நோக்கமாகக் கொண்டிருந்தனர் என்று கூறினர். இவைகள்தாம் பொருத்தமான கொள்கைகள் என்பதை நாம் முன்னரே வலியுறுத்தினோம். இக் குழுவினர் நியமனம் செய்யப்

பட்ட காலத்தில் இருந்த சூழ்நிலையில், எந்த விகிதம் சரியான தென்ற பிரச்சினைக்கு, முன் கூறப்பட்ட பதில் பொருந்தாது.

இவ் வாதப் பிரதிவாதங்களில் பழக்கமில்லாதவரும், சம்பந்த மற்றவர்களும் நோக்கின் மாற்றியமைக்கப்பட்ட 1 ஷி. 6 பெ. விகிதம் சரியாக அமையவில்லை என்பது தெளிவாகும். பொதுவாக, 1 ஷி. 4 பெ. விகிதத்தில் அமைக்க நேரிட்டால் 12½ சதவீத அளவில் விலையேற்ற மேற்படும் என்று வாதம் செய்கின்றனர். அதனுல் படித்த நடுத்தர வகுப்பினரும், கூலி வாங்குபவர்களும் சிரமப்படுவார்கள் என்றனர். இதே முறையில், 1 ஷி. 6 பெ. விகிதத்தில் அமைந்தாலும் வெளி நாட்டவர் இந்தியாவில் தங்கள் பொருள்களை விற்பனை செய்து 12½ சதவீத அரசாங்கக் கொடை பெறுவார்கள். இந்தப் புதிய விகிதத்தால் 12½ சதவீத விலையிறக்கம் ஏற்பட்டு, அதனுல் கடன்பட்டவர்களின் மீது பெருஞ்சுமை ஏற்படும்[1] என்று ஸர் புருஷோத்தம்தாஸ் கூறினுர். இருதரப்பினரும் 12½% தொல்லைகள் தரக்கூடியது என்றும், அது ஒரு குறிப்பிட்ட விகிதத்தின் காரணத்தால் ஏற்படுகின்றது என்றும், அதற்கு அவர்கள் உண்மையில் என்ன செய்ய வேண்டும் என்றும் ஆலோசித்தனர். பெரும்பாலோர் சொல்லிய படி 1 ஷி 4 பெ. விகிதத்தில் இருப்பின் 12½% விலையேற்றம் ஏற்படும் என்று கூறுவதால் 1 ஷி. 6 பெ. அளவில் முழுமாற்றம் ஏற்பட்டது என்று கொள்ளவேண்டும். விகிதம் 1 ஷி. 6 பென்ஸிற்கு வந்தால் ஸர் புருஷோத்தம்தாஸ் கூறுவதுபோல் 12½% விலையிறக்கம் ஏற்பட்டு அரசாங்கக் கொடை பெறுவர். இதனுல் ஏழை எளியோர், நடுத்தரக் குடும்பத்தினர் ஆகியோர் பாதிக்கப்படுவர். ஆனுல் 1 ஷி. 4 பெ. ஆக இருந்தால் அது தொழிலாளிகளைப் பாதிக்காது. ஏனெனில், விலைஏற்றம் அதிகத் தொழிலை ஏற்படுத்தி, வேலையின்மையைப் போக்கிவிடும். முன்னரே கூலி உயர்வு உள்ளது. அதனுல் இன்னும் உயர்வு ஏற்படினும் வாழ்க்கைத்தரம் பாதிக்கப்படாது. 1 ஷி. 4 பெ. நிலையில் முழுச் சரிக்கட்டலையும் ஏற்படுத்தும் 12½ சதவீதத்தால் விலையேற்றம் ஏற்படுகிறது என்பது நிலையானதன்று. முழுச்சரிக்கட்டல் நிலைமை வரும்வரை மட்டுமே விலையேற்றங்கள் இருந்துவரக்கூடும்.

இவ்வாதங்களில் ஈடுபட்ட அனைவரும் தங்கள்பால் கிடைத்துள்ள குறியீட்டெண்களை அடிப்படையாக அமைத்துக்

1. 16 பெ. விருந்து 18 பெ.-க்கு மாறினுல் 16 க்கு 2 பெ. அதாவது 12½% ஆகும். 18-லிருந்து 16-க்குமாறினுல் 18-க்கு 2 பெ. அதாவது 11% ஆகும். இரு தரப்பினரும் 12½ சதவீதத்திற்கு ஒப்பாக இரு வழிகளிலும் சரியான ஏற்பாட்டைக் கருதமுடியுமென்பதை வெளிப்படையாக ஒப்புக்கொண்டனர்.

கொண்டுள்ளனர். அக் குறியீட்டெண்கள் மிகவும் தவறானவை; நம்பத்தகாதனவும், போதாதனவுமான புள்ளி விவரங்களைக் கொண்டு நிரப்பப்பட்ட குறியீட்டெண்களைக் கொண்டு எவ்வகையிலும் தவறான முடிவுகளையே காண்கின்றனர்.

இவற்றால் இயற்கையாக விளங்குவது என்னவென்றால், அழகாகத் திரிக்கப்பட்ட குறியீட்டெண்களை நம்புவதைக் காட்டிலும், பொது நிலைமைகளை ஆராய்ந்து அவற்றை அடிப்படையாகக் கொள்ளலாம். இக் கொள்கையினின்று நோக்குங்கால் பெரும்பாலோரின் அபிப்பிராய மென்னவெனில், கடந்த ஓர் ஆண்டாக உயரிய விகிதம் இருந்ததென்றும் அதற்கு ஏற்றவாறு விலைகள் தாமே ஈடுசெய்துகொண்டு நிலைபெற்றன[1] என்பதாகும். இவ் வாதங்களில் 1 ஷி. 4 பெ.-க்கு மிகவும் உயரியதாகக் கருதப்படுவதும் அதை அமலாக்குவதும் பொதுமக்களுக்கான நன்மையைத் தரவல்லவை எனலாம். சுதந்தரத்தின் முற்கால வரலாற்றில், செலாவணிப் பிரிவில் பிரிட்டிஷ் அரசினரும், வர்த்தகர்களும் நம் நாட்டின்மீது வெறுப்பைக் காட்டிக்கொள்ள வேண்டி, ரூபாய்க்கு அதிகப்படியான பரிவர்த்தனையை அமைத்தனர்; தாழ்ந்த விகிதத்தை ஏற்க மறுத்தனர். இதன் பொருள் என்னவெனில், பவுன், ஷில்லிங், பென்ஸ் கணக்கில் இவ்வளவு அதிக ரூபாய்களைப் பெறவேண்டும் என்பதுதான். இந்திய அரசினரைப்பற்றிய குறைகாண்போர், இரகசியமானதும், வெளியிடப்பட விரும்பாததுமாகிய ரூபாயின் மதிப்பை ஒவ்வொரு தடவையும் ஏற்றிக்கொண்டு போகும் செயலைக் கண்டித்தனர். 1 ஷி. 4 பெ. விகிதத்தில் இவர்கள் இதை அமைத்திருப்பின், சர்க்காரின் கொள்கையைப்பற்றிய ஐயப்பாடு ஏற்பட்டிருக்கும். சாட்சியங்களிலிருந்து, அவ்வப்போது குழு வெளியிட்ட அறிக்கையில் அதிக விகிதமாகிய 1 ஷி. 6 பெ. அவர்கள் வலியுறுத்திய அளவுக்குப் பொருந்தக் கூடியதாக இல்லை என்பது தெளிவாகிறது. ஒவ்வொரு முறையும், செலாவணியிலும், நாணயப் பரிவர்த்தனையிலும் விகிதத்தைக் கூட்டியமைத்துப் பொதுமக்களின் எதிர்ப்பையும், வெறுப்பையும் பெற்றனர். 1929-ல் அமெரிக்க ஐக்கிய நாட்டில் ஏற்பட்ட பொருளாதாரக் குழப்பங்களின் காரணமாக, இந்தியாவில் கடுமையான மந்தம் ஏற்பட்டது. இதைத் தொடர்ந்து விலைச்சரிவு தோன்றியது. விவசாயப் பொருள்களின் மீது ஏற்பட்ட விலைச் சரிவு மிகக் கடுமையாக

1. இதற்கெதிராக ஸர் புருஷோத்தம்தாஸ் தாக்குர்தாஸின் வாதத்தை நோக்கின்–அதாவது இங்கிலாந்தினைப் போன்ற ஒரு நாட்டில் 10 சதவீத மாற்றம் பரிவர்த்தனையில் ஏற்பட—2 ஆண்டுகள் பிடிக்குமானால் உள்நாட்டு வியாபாரமே அதிகப்படியானதும், வெளிநாட்டு வியாபாரம் குறைவானதுமான இந்தியாவில் இன்னும் அதிகப்படியான ஆண்டுகள் பிடிக்குமென்பதில் ஐயமில்லை.

இருந்தது. அரசியல் குழப்பங்கள் உண்டாயின. இதனால் வியாபார முடக்கம் ஏற்பட்டது. வெளிநாட்டு மூலதனம் இந்தியாவை விட்டகல முயன்றது. இதனால் பரிவர்த்தனை மிகவும் பலவீனமடைந்து அதன் காரணமாக அரசினர் செலாவணியைச் சுருக்கத் தலைப்பட்டனர். இம்பீரியல் பாங்கின் விகிதத்தைக் கூட்டியும், இன்னும் பலதரப்பட்ட வழிகளிலும் தள்ளாடிக் கீழே விழக்கூடிய நிலையிலிருந்த பரிவர்த்தனை முறையைக் காப்பாற்ற முயன்றனர். இதுதான் தக்க தருணம் என்று இந்திய சர்க்காரின் போக்கைக் கண்டித்துக் குறை கூறுபவர் பழைய விகிதத்தைப் பற்றிய விவாதத்தை மறுபடியும் கிளப்பினர். சட்டப் புத்தகத்தில் புது விகிதத்தை எழுதி அதன்படி நடக்க முயன்றும் கூட, சூழ்நிலை அதற்கேற்ப அமையவில்லை. கடந்த 3 அல்லது 4 ஆண்டுகளாக பெரும் இடர்ப்பாடுகளும் அவதியும் ஏற்படுகின்றன என்றும், முன்னர் இருந்த விகிதமே ஏற்றதென்றும் அவர்கள் எடுத்துக்காட்டினர்.

1931ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் முதல் நடைபெற்ற அதிகப்படியான தங்க ஏற்றுமதிகளால் பரிவர்த்தனையை உயர் நிலையில் வைக்க முடிந்தது.[1] இந்தியச் செலாவணியைப்பற்றிக் குறைகூறுவோர்க்கு இன்னுமோர் அரிய வாய்ப்புக் கிடைத்தது பற்பல தலைமுறைகளாகச் சேர்த்துவைத்திருந்த பொன் நிதியைப் புதிய விகிதத்திற்கு ஏற்ப ஏற்றுமதி செய்து மக்களின் நிலையை அரசினர் மிகவும் தாழ்த்தினர். முன் நடந்தவற்றை ஊன்றி நோக்கி இல்டன் யங் குழு (Hilton - Young Commission) வினரின் அறிக்கையின்படி அரசினர் நடந்தனரா என்று பார்க்கவேண்டும்.

**29. 1927ஆம் ஆண்டின் செலாவணிச் சட்டம்:** அரசினர் இக் குழுவினரின் அறிக்கையை ஏற்றுக்கொண்டனர். அவற்றை மூன்று மசோதாக்களில் புகுத்தினர். முதல் மசோதா பொன் நாணயத் திட்ட அமைப்பும், ரிசர்வ் பாங்க் திறப்பதற்கும் ஆகும். இரண்டாவது மசோதா 1920 ஆம் ஆண்டின் இம்பீரியல் பாங்க் சட்டத்தில் திருத்தம் செய்ய வேண்டிய பாகுபாடு என்றும், மூன்றுவது மசோதா 1906ஆம் ஆண்டின் இந்திய நாணயச் சட்டத்திலும் 1923ஆம் ஆண்டில் ஏற்பட்ட செலாவணித்தாள் சட்டத்திலும் சில திருத்தங்களைக் கொண்டுவரவேண்டுமென்றும் இயற்றப்பட்டன. மூன்றுவது மசோதா, 1927 ஆம் ஆண்டில் சட்டமாக வந்தது. அச் சட்டத்தின் சில முக்கியமான அம்சங்கள் : (1) பொன் விகிதத்தை 1 ஷி. 6 பென்சில் நிலைநிறுத்தி, அதற்கு

1. 31 என்னுள்ள பாராவைக் காண்க.

ஈடான 8·47 கிராம் நல்ல பொன்னைக் கொடுக்க முன்வந்தனர். இம் முறையை நன்கு நடத்த அரசினர் பம்பாய் நாணயச் சாலைகளில் 15 அவுன்சு அல்லது 40 தோலா பொன்னை, தோலா ரூ. 21-3-10 வீதம் வாங்கத் தலைப்பட்டனர். (2) தோலா எடை ரூ. 21-3-10, விலையின் ஸ்டர்லிங்கிலோ, பொன்னிலோ 400 அவுன்சு அல்லது 1,065 தோலா எடையுள்ள தங்கத்தை உடனே கேட்ட அளவுகளில் இலண்டனில் விற்றனர். அரசினர் விருப்பத்திற்கேற்ப ரூபாய்களையும் இந்தியச் செலாவணித்தாளை மாற்றக் கூடியதாக அமைத்துக் கொடுத்தனர். (3) முழு எடையுள்ள சவரன்களையும், அரைச் சவரன்களையும் புழக்கத்திலிருந்து நீக்கி, செலாவணி அலுவலகங்களிலும், சர்க்கார் அலுவலகங்களிலும் ரூ. 13-5-24-க்கு மாற்றிக்கொடுத்தனர். இம்மாதிரி அமைத்த திட்டத்தைப் பொன் கட்டி ஸ்டர்லிங் பரிவர்த்தனைத் திட்டம் என்றும் 1931 செப்டம்பர் மாதம் 20-ம் தேதி வரை ஸ்டர்லிங்கும், பொன்னும் ஒரே விகிதத்தில் அமைந்ததால் இதைப் பொன் பரிவர்த்தனைத் திட்டம் என்றும் கூறலாம். இந்தப் புதிய திட்டம், பழைய திட்டத்திலிருந்து கீழ்க்கண்ட வகையில் மாறுபட்டது எனலாம். முன்னதாகவே கூறப்பட்ட கரூர் விலைக்கு ஏற்ப அரசினர் பொன்னையோ ஸ்டர்லிங்கையோ வாங்கி விற்கச் சட்டப்படி அவசியமேற்பட்டது.

**30. 1927ஆம் ஆண்டுச் செலாவணிச் சட்டத்தை அமலாக்குவதில் சில இடர்ப்பாடுகள் :** நல்ல தூய்மையான தங்கக் கட்டி முறையை, எதிர்பார்த்த அளவில் அமலாக்க முயன்றும் நடத்த முடியாது போனதற்கான சில காரணங்கள் வருமாறு : 1931ஆம் ஆண்டு செப்டம்பர் 21ஆம் தேதி இங்கிலாந்து பொன் திட்ட முறையிலிருந்து விலகியது. ஆதலால், பொன்னுக்கும் ஸ்டர்லிங்குக்கும் இருந்த தொடர்பு அறுபட்டது. அதே சமயத்தில் இந்தியாவின் கவர்னர் ஜெனரல் அவசரச் சட்டம் பிறப்பித்துப் பொன் விற்பனையையும், கொள்முதலையும் நிறுத்தினர். ஆயினும், இந்திய மந்திரியின் 1 ஷி. 6 பென்ஸ்[1] விகிதத்தில் ஸ்டர்லிங் ரூபாய் விகிதத்தை நிலைநிறுத்தக் கொடுத்த வாக்குறுதிக்கேற்பச் செப்டம்பர் மாதம் 24 ஆம் தேதி மற்றொரு பிரகடனம் மூலம் (பொன் ஸ்டர்லிங் விற்பனைக் கட்டுப்பாட்டு அவசரச் சட்டம்) ஒரு கட்டுப்படுத்தப்பட்ட ஸ்டர்லிங் பரிவர்த்தனைத் திட்டத்தை உருவாக்கினர். அது முதல் ஸ்டர்லிங் விற்பனை 5$\frac{49}{64}$ பெ. விகிதத்தில் அங்கீகாரம் பெற்ற பாங்குகளுக்கும், வர்த்தகத் தேவைகளுக்கும் 21 செப்டம்பர் முன்னர் ஒப்பந்தம்

1. இந்திய மந்திரி இந்தியச் சட்டமன்றத்தைக் கேட்காமல் செய்தது பெரும் ஆத்திரத்தை விளைவித்தது.

செய்து கொண்ட தொழில்முறைகளுக்கும் நியாயமான வீட்டுச் செலவினங்களுக்கும் செய்யப்படும் என்று கூறப்பட்டது. இந்தியாவிலிருந்து அயல்நாட்டு மூலதனம் வெளியேருது தடுக்கவும், அரசினரின் அளவற்ற அயர்வைப் போக்கவும், பரிவர்த்தனையைச் சீராக்கவும் இதை இம்பீரியல் பாங்கின் மூலம் விற்பனை செய்ய ஏற்பாடு ஆகியது.

பொன்னின் விலை ஸ்டர்லிங் முறையில் ஏற்றம் கண்டவுடன் அதற்கேற்ப ரூபாயின் விலையும் ஏறியது. 1931 ஆகஸ்டு மாதத்தில் ரூ. 21-13-3 ஆக இருந்த தோலா எடைத் தங்கம் 4 மாதங்களில் (டிசம்பரில்) ரூ 29-2-0 ஆக ஏறியது. பொன்னின் ஏறிய சந்தை விலை, அதனுடன் பொருளாதார நிலையில் ஏற்பட்ட சரிவு இவ்விரண்டும் கூடியதால், மக்கள் தங்கள் வசமுள்ள பொன்னை விற்க ஆரம்பித்தனர். பெருமளவில் ரூ. 50 கோடி பெறுமான தங்கம் 1932ஆம் ஆண்டு பிப்ரவரி மாதத்திற்குள் ஏற்றுமதி செய்யப்பட்டது. இவ் வேற்றுமதியால் நல்ல பயனைப் பெற்றனர். தேவைக்குமேல் ஸ்டர்லிங் நமக்குக் கிடைத்தது. ஸ்டர்லிங் விற்பனையில் கட்டுப்பாடு செய்ததை நீக்க 1932 ஜனவரி மாதத்தில் சட்டம் போடப்பட்டது. அதுமுதல் கட்டுப்பாடு இல்லாத ஸ்டர்லிங் பரிவர்த்தனைத் திட்டமாக இந்தியாவிற்கு அமைந்தது எனலாம். தொழில் முறையில் ஆராயின் 1927 ஆம் ஆண்டுச் செலாவணித் திட்டம் முழுமுறையில் ஈடேறியது. அரசினர் எண்ணியது ஒன்று,[1] நடந்தது மற்றென்ருகப் பல தடவைகள் நிகழ்ந்ததுபோல், இம் முறையும் நடந்தது. நிலையற்ற முறையில் ரூபாயின் மதிப்பைக் காண விழைவது கடினம். ஆயினும் ஸ்டர்லிங்குடன் ஒரு கருரான விலை விகிதத்தைக் கொள்வது நலம் என்று வாதிக்கப்பட்டது சுமார் 32 மிலியன் பவுன் ஸ்டர்லிங் ஓர் ஆண்டினுள் இந்தியா கடன் பட்டது. 1932-ல் 15 மிலியன் பவுன் ஸ்டர்லிங் கடனைத் திரும்பித் தர வேண்டிய நிர்ப்பந்தமும் ஏற்பட்டது. பட்ஜெட் தயாரிப்பது ஓர் ஏமாற்றத்தை உண்டாக்கக் கூடியதாக இல்லாதிருந்தால், இதற்குச் சமமான ரூபாய் எவ்வளவு என வரையறுக்கலாம். ஸ்டர்லிங் நாடுகளுடனும் இங்கிலாந்துடனும் பெரும் பகுதியான உலக வர்த்தகம் நாம் நடத்துவதால் ஸ்டர்லிங்குடன் ரூபாய், தொடர்பு கொள்ளுதல் இன்றியமையாதது.

இதற்கு எதிராகச் செய்யப்பட்ட வாதம் வருமாறு : ஸ்டர்லிங் விகிதத்துடன் இணைக்கப்பட்டால், ஸ்டர்லிங்கின் ஏற்றத்தாழ்வு இந்திய ரூபாயையும் பாதிக்கும். மேலும், இங்கிலாந்தில்

1. 8 ஆம் பகுதியைப் பார்க்க.

ஏற்பட்ட பொருளாதாரச் சீரழிவிற்கு இந்தியாவும் ஈடுகொடுத்து இங்கு நிலைமை மோசமாகும். இந்த 1 ஷி, 6 பெ. விகிதம் மிகவும் கூடுதல் என்றும், இதனால் ஏற்றுமதி பாதிக்கப்படும் என்றும் கூறினர். ஜப்பான் போன்ற நாடுகள் தங்கள் நாணயங்களின் மதிப்பைக் குறைத்தலின் மூலம் இந்தியாவைவிட அதிகப் படியான வர்த்தகமும் உலகச் சந்தையில் பெரிய வியாபாரமும் செய்கின்றன.

**31. பொன் ஏற்றுமதியும் அதன் விளக்கமும்:** 1931ஆம் ஆண்டு செப்டம்பர் மாதத்திலிருந்து 1932 பிப்ரவரி முடிவு வரையில் பெரும் அளவில் பொன் ஏற்றுமதி ஆகிவந்தது. பொன் நம் நாட்டை விட்டு வெளியேற ஆரம்பித்ததும் இங்குப் பெரும்பாலோர் இதைத் தாக்கியும் எதிர்த்தும் பேசினார்கள். 1940ஆம் ஆண்டு ஜனவரி மாத முடிவில் இந் நாட்டிற்கு ஏற்பட்ட நஷ்டம் ரூ. 351.4 கோடியில் நின்றது.[1] எனவே, இம் மாதிரி பெரிய அளவில் தங்க ஏற்றுமதியாவது நன்மை பயக்க வல்லதா, நியாயமானதா என்றும் அதைச் சீர்திருத்த என்ன செய்யவேண்டும் என்றும், பலர் அநேக விவாதங்களைச் செய்தனர். இது அடாத செயல் என்ற முறையில் விவாதித்த வர்கள். அமெரிக்க நாட்டில் தோன்றிய மந்தம் உலகெலாம் பரவி, அதனால் அவதியுற்ற மக்கள், தங்கள் வசம் உள்ள பொன்னைப் பணமாக மாற்றி ஆபத்தைத் தவிர்த்தனர். ஆகவே முறைப்படி அப் பொன் அவதியுற்ற மக்களிடமே திரும்பிவிட வேண்டியதுதான் என்றனர். இதனால் ஏற்பட்ட பெரும் இடரைப் போக்கத் தங்க விற்பனை பெரிதும் பயன்பட்டது. அதனால் விலை அதிகமாகியது. ஆயினும் நம் நாட்டில் மந்தம் ஏற்படவில்லை. உபயோகமற்று உறங்கிக் கிடந்த பொன்னைக் கொணர்ந்து அதனால் செலாவணியை ஊக்குவித்ததால் தொழில் வளர்ந்தது. வர்த்தகமும் பெருகியது. நம் நாட்டுத் தொழிலும் வர்த்தகமும் மந்தத்திலிருந்து விடுபட்டன. பொதுமக்கள் இவ்வாறு பொன்னை விற்றுச் சேமிப்பு நிதிக்கணக்கிலும் (போஸ்டல்) தபால் சேவிங்ஸ் பத்திரங்களிலும் முதலீடு செய்தனர். பொன் ஏற்றுமதியின் காரணமாக நம் நாட்டிற்குச் சாதகமான வாணிகக் கொடுப்பல்நிலை ஏற்பட்டது. இதனால் ஸ்டர்லிங் ரிஸர்வ் அதிகரித்தது. இந்திய மந்திரிக்குப் பணம் அனுப்புதல் சௌகரியமாக அமைந்தது. தங்க ஏற்றுமதியினால் பொன் திட்டம் உருவாகாது என்ற வாதம் பலனற்றது. தங்கம்

1. தனிப்பட்ட முறையில் நோக்கின் இத் தொகை மிகவும் பெரியது என்பதில் ஐயமில்லை. நம நாட்டின பொன் இருப்பைக் கணக்கிட்டால் 750 மில்லியன் பவுன் (1000 கோடி ரூபாய் மதிப்பு) சிறிய அளவுதான் எனலாம்.

ஏற்றுமதி செய்யப்பட்டது. விற்பனைக்குரிய பொன், செலாவணிக்கான பொன் அன்று. இது தனியார் இருப்பில் பதுங்கிக் கிடந்த தங்கம்; ரிசர்விலிருந்து எடுக்கப்பட்டதன்று. நம் நாட்டில், நாட்டுப் பாங்கர்களின் வியாபாரம் குறைந்தது. ஏனெனில், பொன்னின் ஈட்டின் பேரில்தான் நாட்டுப் பாங்கர்கள், சவுக்கார்கள் முதலியோர் கடன் கொடுக்க முன்வருகின்றனர். ஒருவன் தேவைக்குரிய கடன் வாங்கப் போதிய ஈடு வேண்டும். அதற்கான பொன்னும் ஏற்றுமதி செய்யப்பட்டால் இருவர் பாடும் திண்டாட்டம் ஆகிவிடும். பொன் ஏற்றுமதியைத் தடைசெய்யச் சட்டமியற்றும்படிக் கிளர்ச்சி செய்தனர். இப் பொன்னை அரசினராவது ரிசர்வ் பாங்காவது வாங்கிக்கொள்ள வேண்டுமென்றனர். இந்தக் கூற்றை அரசினர் ஏற்க மறுத்தனர்.

**32. ரிசர்வ் பாங்கும் விகிதமும்:** 1933ஆம் ஆண்டில் வெளியிட்ட வெள்ளை அறிக்கையில் இந்தியாவில் பெரிய மாற்றங்களைச் செய்யுமுன்னர் அரசியல் கட்சி ஈடுபாடு இல்லாத நிதியை நடத்த ஒரு ரிசர்வ் பாங்கியைத் துவக்கம் செய்ய வேண்டுமென்று கருதியது. இந்தக் கோரிக்கையை இலண்டன் குழுவினர் நன்கு பரிசீலனை செய்து முன்போல் இந்தியா ஸ்டர்லிங் பரிவர்த்தனைத் திட்டத்தில் இருந்துகொண்டும், அதே முறையில் செலாவணி அமைத்துக்கொண்டும், வந்ததனால் செலாவணியில் எந்த மாறுதலும் அனுமதிக்கக் கூடாது என்றனர். இந்தியச் செலாவணிக் கழகம் (Indian Currency League) இதை எதிர்த்துப் பரிவர்த்தனை விகிதத்தைக் குறைக்கும்படி நாடு முழுவதும் பிரசாரம் செய்தது. இந்திய ரிஸர்வ் பாங்குச் சட்டத்திலும் இந்த ஷரத்துக்களைக் குறிப்பிடவேண்டும் என்று பிரச்சாரம் செய்தது. உலக முழுவதும் இருக்கும் நிதிக்குழப்பம் முடிந்து உலகத்தில் செலாவணித் திட்டம் நிரந்தரமாக உருவான பின்னர், இந்தியாவின் செலாவணியைச் சீரமைத்தலே நலம் என்று எல்லோருடைய பொது அபிப்பிராயமும் ஏற்பட்டது. அந்தச் சமயத்தில் நடைமுறையில் உள்ள ரூபாய் ஸ்டர்லிங் விகிதம் எப்படியிருந்ததோ, அதன்படி அமைத்துவிடக் கருதினர். அதன்படி 1934ஆம் ஆண்டில் 1 ஷி. 6 பெ. விகிதத்தில் வரையறுத்து, ரிசர்வ் பாங்க் இலண்டனில் கொடுக்கப்பட வேண்டிய ஸ்டர்லிங்கை 1ஷி. $5\frac{49}{64}$ பென்ஸுக்குக்கீழ் விற்பனை செய்யாமலும், 1ஷி $6\frac{3}{16}$ பெ-க்கு மேலாகப் போகாமலும் இதற்கு ஏற்படும் இருபுறப் போக்குவரத்துச் செலவுகளை ஈடுசெய்து கொள்ளவேண்டும் என்று முடிவாயிற்று.[1] இரண்டு தனிப்பட்ட செலாவணி நிதிகள் ஒழிக்கப்

1. இது சம்பந்தமான ஷரத்துக்கள் 1947 ஆம் ஆண்டில் நீக்கப்பெற்றன.

பட்டு, அது முதல் ரிசர்வ் பாங்க், செலாவணியை எடுத்து நடத்த ஆரம்பித்தது. இந்திய அரசினரிடமிருந்து இந்த நாணய வழங்கு முறை, செலாவணி, செலாவணி நிதி ஆகியவை ரிசர்வ் பாங்கிற்கு மாறின.

**33. மதிப்புக் குறைப்புப் பிரச்சினை:** ரிசர்வ் பாங்குச் சட்டம் பிறப்பித்த பிறகும், விகிதத்தைப் பற்றிய சர்ச்சைகள் ஓயவில்லை. மதிப்புக் குறைப்புச் சம்பந்தமான கிளர்ச்சி நாளுக்கு நாள் அதிகரித்தது. 1936 ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம், ஃபிரான்சும் இதர பொன் திட்ட நாடுகளும் தங்கள் செலாவணியின் மதிப்பைக் குறைத்தன. மதிப்புக் குறைப்பினால் முதலுற்பத்திப் பொருள்களின் அகவிலை ஏறும்; ஏற்றுமதி அதிகமாகும்; வெளியேறும் பொன்னும் தடைப்படும் என்று கூறினார்கள். வியாபார முன்னேற்றத்திற்கு அடிகோலுமாயினும், அரசினர் இதற்கு எதிர் முகமாக வாதிட்டனர். விகிதத்தில் எவ்விதமான மாறுதல் செய்தாலும், நாட்டில் செலாவணி முறையில் உறுதியற்ற நிலையே ஏற்படும். உலகின் பல்வேறு வல்லரசுகள் கூடிச் செலாவணியைத் திடப்படுத்துவதற்கு முயலும்போது இந்நாட்டில் மட்டும் உறுதியற்ற நிலை ஏற்படுவானேன்? மேலும், உலக வர்த்தகம், தங்குதடையின்றி நடக்க ஏற்பாடு வேண்டும்.[1] அரசினர் மதிப்புக் குறைத்தலைப் பற்றிக் கூறும்போது, விவசாயிக்குப் பாதகமாக, உலகில் உற்பத்திப் பொருள்கள் ஏற்ற விலையிலும், விவசாயப் பொருள்கள் விலை மதிப்பிழந்தும் அமையும் என்றனர். குறைந்த மதிப்புடன், அதிக அளவிலும் கிடைக்கக் கூடிய பண நிலை ஊக வியாபாரத்தை அதிகமாக்கி, சீர்கேடான பொருளாதார சூழ்நிலையை ஏற்படுத்தும். இந்தியா தன் நாணயத்தின் மதிப்பைக் குறைக்க முயன்றால் இதர நாடுகளும் அதற்கெதிராகப் பொருளாதாரக் கட்டுப்பாடுகளைக் கொண்டு வருவார்கள். இதர ஐரோப்பிய நாடுகள் தங்கள் நாணயங்களின் மதிப்பைக் குறைப்பதால் இந்தியாவிற்கு எந்த விதத்திலும் பாதகம் ஏற்படவில்லை. மேலும் சுங்கவரிச் சட்டப்படி (1894) இதர நாடுகள் நம் நாட்டில் இறக்குமதிப் பொருள்களைத் திணித்தால் எதிர்க்க உரிமையுண்டு. உலக நாடுகளிடையே உள்ள தொல்லைகள் அரசியல் நிலைமையினால் ஏற்பட்டவை. இவை அளவுக்கு மீறிய தேசீய உணர்ச்சியின் விளைவுகள். மதிப்புக் குறைப்பு இப் பிரச்சினைகளைத் தீர்க்க வியலாது. ஸ்டர்லிங்குடன் இணைக்கப்பட்டபொழுது பொன் விகிதத்தில் இந்திய ரூபாயின்

*1. 'செலாவணித் திட்டத்தை ஏற்றி இறக்கிக் குரங்கு வேலை செய்ய நான் விடமாட்டேன்' என்று கூறிப் பிறர் வெறுப்பைத் தேடிக்கொண்டார், முன்னாள் நிதிமந்திரி சர் ஜேம்ஸ் கிரிக்.*

மதிப்புக் குறைந்து போயிற்று. ஸ்டர்லிங் வட்டாரத்தில் வியாபாரப் பெருக்கம் ஏற்பட்டால், அதன் பலன் இந்தியாவிற்குக் கிடைக்கும் எனலாம். பட்ஜெட்டில் பற்றுக்குறையோ, (Budget deficits), உயர் பண வீதங்களோ, வர்த்தக இருப்புக் குறைவுபடுதலோ அல்லது நிதியிலிருந்து பொன் வெளியேறவோ இல்லாததால் செலாவணி அளவுக்கு மீறிய மதிப்பீடு பெறவில்லை எனலாம்.

1937-38-ல் ஏற்பட்ட தற்காலிகப் பின்னிறக்கத்தின் காரணமாக வருங்காலப் பரிவர்த்தனை விகிதத்தில் சற்றுக் குறைவு ஏற்பட்டது. ஆனால், பரிவர்த்தனை விகிதம் நிரந்தரமாக இருந்து, 1939-ல் 1 ஷி. $5\frac{3}{3}\frac{1}{2}$ பென்ஸுக்கு ஏறியது. இரண்டாவது உலகப் போரின் விளைவால் இந்தியாவின் வர்த்தக நிலை வரவரப் பெருகிக் கொண்டே வந்தது. இனி இந்திய ரூபாயின் மதிப்பு உயரக் காரணமில்லை எனக் கூறலாம். அதற்குப் பதிலாக அதன் மதிப்பு குறைக்கப்பட்டது.

**34. 1939-க்குப் பின் இந்தியச் செலாவணியும் பரிவர்த்தனை நிலையும் :** இந்தியச் சரக்குகளுக்கு வெளிநாட்டில் அதிக கிராக்கி இருந்தபடியால் இரண்டாவது உலகப் போரின் ஆரம்ப காலத்தில் இந்தியாவின் பொருளாதார நிலை செம்மையாக இருந்தது. முதல் உலகப்போரின் ஆரம்ப காலத்தில் ஸ்டர்லிங்-ரூபாய் பிணைப்பு சக்தியற்று இருந்தது. ஆயினும், இரண்டாவது உலகப் போரின் காரணமாகப் பிணைப்பு வன்மையாக அமைந்திருந்தது. வெளி நாட்டுச் செலாவணி ரிசர்வுக்காகப் பெரிய அளவில் ஸ்டர்லிங்கை ரிசர்வு பாங்கு வாங்குகிறது. டாலரோடு ஒப்பிடும்போது ஸ்டர்லிங்கும் அதனுடன் ரூபாயும் விலைகுறைந்தன. டாலர் ஸ்டர்லிங் விகிதம் 1 பவுனுக்கு 4·02 டாலர்களாகச் செயற்கை முறையில் மதிப்புக் கட்டப்பட்டபோதும்கூட 100 டாலருக்கு 332 ரூபாயாக அமைந்தது. அதிகப் பொருத்தமான வியாபாரத்திற்காகப் புதிய நோட்டுகள் முன்பே வாங்கியிருந்த ஸ்டர்லிங்குடன் பத்திரத்தின் பேரில் அச்சடித்துச் செப்டம்பர் 1939 முதல் ஜூன் 1940க்குள் 50 கோடி ரூபாய் மதிப்புள்ள செலாவணி நோட்டுகள் புழக்கத்தில் இருந்தன. யுத்த முயற்சி ஈடேற, பரிவர்த்தனை விவகாரங்களைக் கட்டுப்படுத்தல் நலமென்று கருதி அரசினர் ஓர் அவசரச் சட்டத்தைப் பிறப்பித்தனர். அதன்படி ரிசர்வ் பாங்கு, நாணயம், கட்டிகள் முதலீடுகள் பற்றிய வர்த்தகத்தைக் கட்டுப்பாடு செய்ய அதிகாரம் கொடுக்கப்பட்டது. பேரரசில்லாத இதர நாட்டு நாணயங்களை நியாயமான வர்த்தகத்திற்கும், பிரயாணச் செலவிற்கும் தனிப்பட்ட முறையில் அனுப்புவதற்கும் உள்ள

அளவில் வைத்துக்கொள்ள அனுமதித்துக் கட்டுப்படுத்தியது. அயல்நாட்டுக் கடன் பத்திரங்களை வாங்குவதையும், உள் நாட்டுக் கடன்பத்திரங்களை ஏற்றுமதி செய்வதையும் ரிசர்வ் பாங்குகள் அனுமதியின் பேரில்தான் செய்யலாமென்றும் விதிக்கப்பட்டது. இம்மாதிரியான கட்டுப்பாட்டு முறைகள் ஊக வர்த்தகத்தைத் தடைசெய்யவே ஏற்பட்டன.

1940ஆம் ஆண்டில் கடினச் செலாவணி வட்டாரத்திலிருந்து கட்டுப்பாடுள்ள விகிதத்தில் செலாவணி கிடைக்கவேண்டி அந்த வட்டாரத்திற்குச் செய்யப்படும் ஏற்றுமதிகளால் வரும் பரிவர்த்தனைத் தொகையனைத்தையும் ஒரே இடத்தில் கூட்டி அமைத்துப் பேரரசின் திட்டமாகப் பிரிட்டிஷ் அரசினர் செய்தனர்.

பரிவர்த்தனைத் தடுப்பு முறைகளை இயற்றியதும் இறக்குமதியின் மீதும் கட்டுப்பாடுகள் விதிக்கப்பட்டன. வெளிநாட்டுப் பரிவர்த்தனையை வீணாக்காது இருக்கவும், அப்போது யுத்தத்தில் ஈடுபட்டு அதற்கான உற்பத்தி செய்துவரும் அமெரிக்காவினின்று இதர சரக்குகளைப் பெறுவதைக் குறைக்கவும் கட்டுப்பாடுகள் பயன் பட்டன. மற்றொரு காரணம் 1942-43-ல் இறக்குமதிக்கான டாலர்கள் கொடுக்க வேண்டிய அவசியம் ஏற்படவில்லை. எஃகு, இயந்திரச் சாமான்கள் கடன் குத்தகை முறையில் விடப்பட்டதால் இவ்விதம் செய்யப்பட்டது. 1944-45-ல் ஸ்டர்லிங் வட்டாரத்திற்கு அப்பாலுள்ள பிரதேசங்களுக்குச் செலாவணி விற்பனை தடுக்கப்பட்டது. அந்நியப் பரிவர்த்தனை செய்ய அனுமதி பெற்றவர்களுக்கு அந்நியச் செலாவணியால் வரும் ஆதாரத்தைக் கொடுப்பதனால் ஸ்டர்லிங் அல்லாத தேசங்களுக்கு ஏற்றுமதி அனுமதிக்கப்பட்டது. 1945-46-ல் நுகர்வுப் பொருள்களை இறக்குமதி செய்வதற்கு அளவு வகுக்கப்பட்டது. அதை, சற்றுச் சுலபமாகச் செய்து அதன் மூலம் பணவீக்கத்தைக் குறைக்க முயன்றனர். அளவிறந்த இறக்குமதி அமெரிக்காவிலிருந்து ஏற்பட்டு அயல்நாட்டுக் கொடுப்பல் நிலை பாதகமாகியது. அமெரிக்க டாலர்களின் செலவினைக் கட்டுப்பாடு செய்யச் சட்ட மியற்றினர்.

செலாவணிப் பரிவர்த்தனைக் கட்டுப்பாட்டில் பொன் ஏற்றுமதி இறக்குமதி கட்டுப்பாடும் செய்யப்பட்டது. இந்த உலோக ஏற்றுமதி இறக்குமதி செய்ய ரிசர்வ் பாங்குக்கு உரிமம் (licence) கொடுக்கப்பட்டது. இறக்குமதிக் கட்டுப்பாடு அவ்வளவு இல்லை. ஆயினும், ஏற்றுமதி செய்ய விரும்பினால் அமெரிக்க ஃபெடரல் பாங்குக்கும் இங்கிலாந்திலுள்ள பாங்க் ஆப் இங்கிலாந்திற்குந்தான் செய்யவேண்டும். இதன் அடிப்படைக் கொள்கை என்ன

வெனில் இந்தியாவிற்காகவாவது இங்கிலாந்திற்காகவாவது பொன்னைக் கணக்கில் வைத்திருக்கவேண்டும்.

**35. இரண்டாவது உலகப்போரின் போது நாணயங்களும் செலாவணித்தாள்களும் :** 1940 ஆம் ஆண்டு மே, ஜூன் மாத யுத்த நிலவரம் பீதியடையச் செய்யும் நிலையிலும், நேச நாடுகளுக்குக் கிலேசத்தை விளைவிக்கும்படியாகவும் இருந்த நிலைமையில் இந்திய மக்களின் செலாவணித்தாள்களை நாணயமாக மாற்றித்தர பெரிய தேவை ஏற்பட்டது. நாணய வெளியீட்டு இலாக்காவில் கைவசம் ரூபாய் நாணயமில்லாது போய்விட்டது. தன் வியாபாரம் அல்லது சொந்த உபயோகத்திற்கும் மீறிய அளவில் யார் ரூபாய் நாணயம் வைத்திருந்தாலும் அது குற்றமாகக் கருதப்படும் என அரசினர் சட்ட மொன்றை 1940 ஜூன் மாதம் 25 ஆம் தேதி வெளியிட்டனர். வெள்ளி நாணயங்கள் அடிக்கடி பதுக்கப்பட்டு ஓடி ஒளிவதைத் தடுக்க ரிசர்வ் பாங்கியின் கூட்டுறவுடன் ' ரூபாய்த்தாள் ' அச்சிடப்பட்டது. இதைப் பதுக்கி வைத்திருக்க இயலாது. மேலும் அதற்கு ஈடாக வெள்ளி நாணயம் கேட்க உரிமையும் கிடையாது. செலாவணித்தாள்களில் மிகவும் குறைவானது 5 ரூபாய். அதற்கும் கீழ் மதிப்பில் ஒரு செலாவணித்தாள் இல்லையே என்ற எண்ணம் ஈடேறியது. இது சட்டப் பணமாக எல்லையற்று வழங்கப்பட்டது. வெள்ளியை வீணாக்காது சேமிக்க, 4 அணா, 8 அணா, 1 ரூபாய் நாணயங்களிலுள்ள வெள்ளி வீதத்தைக் குறைத்தனர். 1947-ல் நிக்கல் உலோக ரூபாயை ஈடுபடுத்தி வெள்ளி ரூபாயை எடுத்துவிட்டனர். கடன் குத்தகை முறையின் மூலம் அமெரிக்காவிற்குச் சேர வேண்டிய 226 மிலியன் அவுன்ஸ் வெள்ளி வைத்திருந்து இச் சேமிப்புகளின் மூலம் பெறப்பட்டுக் கடன் தீர்க்கப்பட்டது.

**36. பேரரசின் டாலர் தொகுப்பும், யுத்தப் பிற்கால டாலர் நிதியும் :** யுத்தத்திற்கு முன் ஸ்டர்லிங் வட்டாரத்தில் பங்குள்ள பல தேசங்கள் தங்கள் வழக்கப்படித் தங்களுடைய அயல்நாட்டுப் பரிவர்த்தனை இருப்புகளை இலண்டனில் வைத்திருந்தன. அவற்றைக் கொண்டு அவ்வப்போது வேற்று நாடுகளுக்குக் கொடுக்க வேண்டியவற்றைக் கொடுத்துத் தீர்த்தன. இதன் அடிப்படை என்னவென்றால் ஸ்டர்லிங் எளிதில் மாற்றக்கூடியது. யுத்தத்தின்போது இந் நிலையில் மாற்றம் கண்டது. அந்நியநாட்டுப் பரிவர்த்தனை கிடைப்பதற்காகக் கட்டுப்பாடுகள் சில போடப்பட்டன. இதன் பின்னர், ஸ்டர்லிங் வட்டாரம் என்பது ஸ்டர்லிங் நிலப்பகுதி (Sterling Area) என்ற பெயர் பெற்றது. இதில் உறுப்பினராக

இருந்த நாடுகள் அனைத்தும் தங்கள் நாட்டுப் பரிவர்த்தனைத் தொகைகளை மாற்றுவதற்கு வசதியான ஒரே இடத்தில் தொகுத்து வைப்பதென்றும், அதற்கு இலக்காக இங்கிலாந்துக் கருவூலத்திலாவது, பாங்க் ஆப் இங்கிலாந்திலாவது அதற்கெனத் திறக்கப்பட்ட காலத்தில்போடுவது என்றும் முடிவு செய்யப்பட்டது. இதில் முக்கியமான செலாவணி அமெரிக்க டாலர். இதற்குப் பேரரசு டாலர்த் தொகுப்பு எனப்பெயர். ஒவ்வொரு தேசமும் தன் தவிர்க்க இயலாத் தேவைகளுக்கு வேண்டிய அளவில் அயல் நாட்டுச் செலாவணியைக் கேட்டுப் பெற்றுக்கொள்ளலாம். மேலும், ஸ்டர்லிங் நிலப்பரப்பில் அவற்றைப் பெறமுடியாது. ஒவ்வோர் உறுப்பின நாடும் தன் தேவைகளைப் பெறமுடியுமா என்பதைச் சோதனை செய்து பார்த்துக்கொள்ளவும் அனுமதிக்கப்பட்டது.

1945-46-ல் இந்தத் தொகுப்பிற்கு இந்தியா 124 கோடி ரூபாயைத் தன் சந்தாவாகக் கட்டியது. யுத்த முடிவின்போது இந்தியா அளவு கடந்த இறக்குமதி செய்தது; அதிகமாக உணவுப் பொருளை இறக்குமதி செய்தது; இதன்மூலம் எல்லாத் தொகைகளையும் திரும்ப வாங்கிக் கடனை அடைக்கமுயன்றது.

1943-44-ல் யுத்தப் பிற்கால டாலர் நிதி என்ற ஒன்று துவக்கப்பட்டது. பேரரசு டாலர்த் தொகுப்பு இந்தியாவின் கணக்கிற்காக அதில் 20 மிலியன் வரவு வைத்தது. அமெரிக்க ஐக்கிய நாட்டில் மூலதனச் செலவுகளைச் செய்யவும் மறுமுறை சேர்த்துவைக்கவும், இதைப் பயன்படுத்தலாம். இதற்கேற்ப ஒதுக்கீடு 1945-லும் செய்யப்பட்டது. பேரரசு டாலர்த் தொகுப்பிலிருந்து கடன் கேட்குமுன் இந்த நிதியிலிருந்து உபயோகித்துக்கொள்ள இந்தியாவிற்கு அனுமதி கொடுக்கப்பட்டது.

கட்டுப்பாட்டுத் திட்டங்களை எளிதாக்கியும், தளர்த்தியும் பொருளாதார முன்னேற்றத்திற்கும், வர்த்தகத்திற்கும் வசதி செய்து கொடுக்க ஏற்ற கொள்கையை அரசினர் பின்னர் அமைத்தனர். இதன்படிச் சில பொருள்களின்மீது இருந்த இறக்குமதிக் கட்டுப்பாடு நீக்கப்பெற்றது. எத் தேசத்தினின்றும் இறக்குமதி செய்யலாம் என்றும் கூறப்பட்டது. பின்னர் ஸ்டர்லிங் வட்டாரத்திலுள்ள சில சரக்குகள் சுங்கமின்றி இறக்குமதியை அனுமதித்தன.

பரிவர்த்தனைக் கட்டுப்பாடு சற்றுத் தளர்த்தப்பட்டது. இறக்குமதிக்காக உரிமம் வழங்கப்பட்டது. அதனால் நாட்டின் முன்னேற்றமே குறிக்கோள் எனக்கொள்ளப்பட்டது. அயல்

நாட்டுச் செலாவணியைக் கிடைக்கின்ற முறையில் அமைத்து, எந்தச் செலாவணி எளிதில் கிடைக்குமோ அந்த நாட்டிலிருந்து இறக்குமதிக் கட்டுப்பாடுகளைத் தளர்த்தினர். அதுமுதல் கிடைக்காத தன்மை எனப்படுவது அநேக விவரங்களையொட்டி இருக்கும் குறிப்பாகத் தரம், விலை மதிப்பு, பொருளைக் கொடுக்கும் காலம் ஆகியவைகளை யொட்டியிருக்கும். ஓர் இறக்குமதி ஸ்டர்லிங் வட்டாரத்தில் கிடைக்கவில்லை என்பதால், அதை இதர வட்டாரத்திலிருந்து இறக்குமதி செய்ய அனுமதி கொடுக்கும் உரிமையும் அது இன்றியமையாதது என்று நிரூபிக்க வேண்டிய பொறுப்பும் அரசினரிடம் இருந்தன.

**37 பன்னாட்டுச் செலாவணியும், ரூபாயின் இயைந்த மதிப்பும் :** 1945-ல் பன்னாட்டுச் செலாவணி நிதி, பன்னாட்டுச் சீரமைப்பு முன்னேற்ற பாங்கு இவ் விரண்டையும் துவக்கி, அதனால் உலக நாடுகளிடையே நிதித் தொடர்புகளில் கூட்டுறவு ஏற்பட்டது எனலாம். இவ் விரண்டு நிறுவனங்களிலும் இந்தியா பங்கு எடுத்துக்கொண்டது. துவக்கிய நாள்முதலே சேர்ந்ததால் இதற்கெனச் சேரவேண்டிய பங்கும், வருமானமும் பெற்றதோடு, நிர்வாக இயக்குநர் பதவியும் இந்தியாவுக்குக் கிடைத்தது. இந்திய விலைகளைவிட, இங்கிலாந்திலும் அமெரிக்காவிலும் விலைகள் குறைவாயுள்ளன. இதைச் செம்மை செய்த பின்னர்தான் நாணய மதிப்புப் பிரச்சினைக்குத் தீர்வுகாணமுடியும். நாணய மதிப்புக் குறைப்பினால் இந்திய விலைகள் அந்நிய நாட்டு விலைகளைவிட அதிகரிக்கும். இதனால் இறக்குமதியாகும் மூலதனப் பொருள்களும் இயந்திரங்களும், விலை அதிகரிக்கக்கூடும். ப. செ. நி. திட்டப்படி உறுப்பினர் நாட்டின் விகிதப் பொறுப்பு சுருங்கி விரியும் தன்மையுடையது அதற்கான காரணங்கள் : (1) எச் சமயத்திலும் 10 சதவீத ஏற்றத்தாழ்வுப் பரிவர்த்தனை முறையில் செய்து கொள்ளலாம். (2) அடிப்படையில் ஏற்பட்ட சலன நிலையைச் சீர்திருத்த, நிதியின் உத்தரவுடன், இந்த அளவைவிட அதிக மாறுதல் ஏற்பட முடியும்.

**38. 1949-ல் மதிப்புக் குறைவு :** 1949 ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் இங்கிலாந்து ஸ்டர்லிங் மதிப்பை 4·03 டாலரிலிருந்து 2·80-க்குக் கொணர்ந்தது. இதையடுத்து, இந்தியா 1=30·225 சதவீதங்களிலிருந்து 21 சதங்களுக்குக் கொணர்ந்தது. ஆயினும், இந்திய ஸ்டர்லிங் விகிதமாகிய 1 ஷி. 6 பெ. மாற்றியமைக்கப்படவில்லை. பாகிஸ்தானைத் தவிர ஏனைய நாடுகள் (இந்தியா உட்பட) நாணய மதிப்புக் குறைப்பைச் செய்தன. தன்னுடைய ஏற்றுமதி நிலை வன்மையாக இருந்தமையால்,

மதிப்புக் குறைப்பினல் யாதொரு இலாபமுமில்லை என்று வாளாயிருந்தது. பாகிஸ்தானின் ஏற்றுமதி, கச்சாப் பொருள் களாதலால் அவர்களின் உற்பத்திப்பொருள்கள் அனைத்தையும் வெகு எளிதில் ஏற்றுமதி செய்ய முடிந்தது. நிலைமை மாருத முறையில் அமைந்திருத்தலால் மூலதன இறக்குமதிக்குக் குறைந்த அளவில் செலவிட்டது. மேலும், அதன் நிமித்தம் தன் தொழில் வளர்ச்சியைச் சீர்திருத்த முயன்றது. இந்த முடிவு இந்தியாவுடன் செய்த சணல் வியாபாரத்தில் பெரும் சிக்கல்களை உண்டாக்கி யது. இந்திய ரூபாயின் மதிப்பு குறைக்கப்பட்டதால் பாகிஸ்தான் ரூபாயுடன் சமநிலையிலில்லை அதாவது புதிய முறைப்படி 100 பாகிஸ்தானி ரூபாய் 144 இந்திய ரூபாய்க்குச் சமம். இந்த உயரிய விகிதத்தில் இந்தியா கொடுக்க மறுத்ததால் இந்தியாவிற்கும், பாகிஸ்தானுக்கும் இடையே பெரிய வியாபாரத் தேக்கம் ஏற்பட்டு முடிவில் தடைப்பட்டது. இதனுல் இரு தரப் பினரும் அதிக நஷ்டம் அடைந்தனர்.

# 20. விலைகள்

1. விலைகளின் பொதுவான போக்கு: ஒரு நாட்டின் பொருளாதாரம் விரிவடைகிறதா அல்லது சுருங்கிவருகிறதா என்ற குறிப்பை அந் நாட்டின் விலைக் குறியீட்டெண்கள் மூலம் காணலாம். தக்க ஒப்புக்கொள்ளக்கூடிய குறியீட்டெண்கள்மூலம் விலைவாசிகளின் போக்கை அறியலாம். சரியான புள்ளிவிவரம் நம் நாட்டில் கிடைப்பதில்லை. பம்பாய், கல்கத்தா முதலான பெரிய நகரங்களில் நிலவிவரும் மொத்த விலைகளைக் கொண்டு கணக்கிடுகிறோம். மிகப் பெரிய தேசமாதலால் நாடு முழுமைக்கும் புள்ளிவிவரம் சேகரிப்பது கடினம்.

வளர்ச்சியுறாத விவசாய அடிப்படையுள்ள இந் நாட்டில் விலைகளின் போக்கு காலத்தையொட்டி அமையும். அவைகளை 'அறுவடைச் சுழற்சி' எனக் கூறலாம். தொழிற்பகுதி அண்மையில் தோன்றியது ; ஆதலின் வளர்ச்சி ஏற்படவில்லை. வியாபாரச் சுழற்சியால்தான் விலைமாற்றங்கள் ஏற்படவில்லை. ஆயினும், வெளி நாட்டு விலைகளால் இந் நாட்டு விலைகள்கூடப் பாதிக்கப்படுகின்றன. நவீன போக்குவரவுச் சாதனங்கள் இந் நாட்டில் தோன்றும் முன்னர், பழக்கவழக்கத்தையொட்டி விலைகள் தீர்மானிக்கப்பட்டுவந்தன. பண்டங்களை ஒரு பகுதியினின்று மற்றொரு பகுதிக்கு எடுத்துச் செல்வதில் அநேக இடர்களும், ஆபத்துக்களும் இருந்தன. உள்ளூர் நிலைமைகளுக்கு ஏற்றவாறு விலைகள் படிந்திருந்தன. ஆனபடியால் இடத்திற்கு இடம் விலைவேறுபாடுகள் நிரந்தரமாக இருந்தன. ரெயில்வேப் போக்குவரத்தும், நெடுஞ்சாலைகளும் ஏற்பட்ட பிறகு போட்டிமுறைகள் உண்டாயின. ஓரிடத்திலிருந்து மற்றோரிடம் தனித்திருந்தது மாறிவிட்டது. அயல் நாடுகளுடன் இந்தியா பெருமளவில் வர்த்தகம் புரிய ஆரம்பித்தது. இதனால் உலக விலைத்தரமும் இந்திய விலைகளைப் பாதித்தது எனலாம். நிதானமான முன்னேற்றத்தை 1860 முதல் 1893

வரையில் காணலாம். 1861 முதல் 1955 வரையில் விலைகளின் போக்கை அடுத்த பக்கத்திற் காணலாம்.

| | | |
|---|---|---|
| 1861-66 | ... | ஏறிய விலை |
| 1866-83 | ... | சரியும் விலை |
| 1883-93 | ... | ஏறிய விலை |
| 1893-99 | ... | சரியும் விலை |
| 1899-1912 } 1913-20 } | ... | ஏறிய விலை |
| 1921-39 | ... | சரியும் விலை (1936-37-ல் சிறிய அளவில் ஏற்றம்) |
| 1939-51 (ஏப்ரல்) | ... | பொதுவாக ஏற்றமுள்ள விலை |
| 1953-55 (டிசம்பர்) | ... | இறக்கமுள்ள விலை |

**2. விலை வேறுபாடுகளுக்கான காரணங்கள் :** (1) அமெரிக்க உள்நாட்டுப் போரினால் பருத்தி கிடைப்பது அரிதாக இருந்தது. ஆதலால் 1861-66-ல் விலையேற்றம் கண்டது. இந்த நிலையில் அளவிறந்த பருத்தி ஏற்றுமதி ஏற்பட்டதால் நாணயப்பெருக்கம் ஏற்பட்டது. இந் நாணயப் பெருக்கத்தால், விலைகள் ஏறின. அயல்நாட்டு நிலைமையால் இந்திய உள்நாட்டு விலைகள் பாதிக்கப் பட்டதற்கு இது ஒரு சான்று. (2) 1866 முதல் 1883 வரையில் உலகத்தின் பொது விலைச்சரிவின்படி, இந் நாட்டிலும் விலை சரிந்தது. இதற்குக் காரணம், வர்த்தகம் உற்பத்தி இவைகளுக் கேற்பப் பொன் இல்லாது போதல் எனக் கூறப்படுகிறது. (3) 1883-93-ல் ரூபாயின் மதிப்பு வரவரத் தேய்ந்துகொண்டே போன தால் விலைகள் ஏறின. (4) 1893-99-ல் நாணயச்சாலைகள், மேலும் வெள்ளி ரூபாய்களை அடிப்பதை நிறுத்தியதாலும் செலாவணியில் சுருக்க மேற்பட்டது. உடனே விலைகள் சரிந்தன. (5) 1899-க்குப் பிறகு விலையேற்றமுள்ள காலத்தைக் காண முடிகிறது. 1899 முதல் 1910 வரை விலையேற்றம் தொடர்ந்திருந்தது. 1910-ல் தத்தாக் குழுவினர் (Datta Committee of 1910) விலையேற்றத்துக் கான காரணங்களைப் பின்வருமாறு கூறியுள்ளனர் : (அ) வேண்டாத காலங்களில் மழைபெய்து, அதனால் உணவுப் பொருளும் மூலப்பொருளும் உற்பத்தி செய்தல் தடைப்படுதல், உணவுப் பொருள் உற்பத்தி செய்ய வேண்டிய பகுதிகளில் உணவற்ற பயிர்களைச் சாகுபடி செய்தல், (ஆ) மக்கள்தொகை அளவுக்குமேல் கூடுதல், (இ) இந்திய உள்நாட்டுப் பகுதிகளில் தக்க போக்குவரவு வசதிகள் அமைதல், (ஈ) வணிகப் பாங்கு வசதிகள் ஏற்படுதல் ஆகியவை. உலகத்தின் காரணங்களாலும்

இந்திய விலைகள் மிகவும் பாதிக்கப்பட்டன என்று மேற்படிக் குழுவினர் பின்வரும் காரணங்களைக் காட்டுகின்றனர் : (அ) உலக வர்த்தகத்தில் ஆதாரமான மூலப் பொருள்களுக்கான தேவை கூடியும் அது கிடைப்பதற்கு அரிதாகவும் இருத்தல், (ஆ) பொன் கிடைப்பது அதிகரித்தல், (இ) கடன் வசதிகளின் வளர்ச்சி, (ஈ) மேற்கத்திய நாடுகளிலும், அமெரிக்காவிலும் இராணுவச் செலவின் பெருக்கம். இக் குழுவினர் கூறத் தவறிய காரணம், மேற்கத்திய நாடுகளில் பணவீக்கம் ஏற்பட்டது என்பதாகும். (6) 1914-18 போரில் நேர்முகமாக ஈடுபட்ட நாடுகளில் விலையேற்றம் ஏற்பட்ட அளவு, இந்தியாவில் விலையேற்றம் ஏற்படவில்லை எனலாம். அரசினர் விலைக்கட்டுப்பாடு ஏற்படுத்தியும் நாணய இறக்குமதிசெய்தல் கூடாதென்றும் வற்புறுத்தியதால் விலையேற்றம் அவ்வளவாக ஏற்படவில்லை. (7) 1921 முதல் 1939 வரை யுத்தகால நடுவில் திடீரெனப் பெருமளவில் விலைச்சரிவு ஏற்பட்டது. 1920-ல் எதிர்க் கவுன்சில் உண்டியல்களை விற்றதனுலும், செலாவணியின் மதிப்பீட்டைச் சுருக்கியதன் விளைவாகவும் இது நேரிட்டது. 1 ஷி. 6 பெ. விகிதம் எவ்வாறு இந்திய விலையை மிகவும் சரியும்படி செய்தது என்பதை முன் அத்தியாயத்தில் பார்த்தோம். அமெரிக்க நாட்டிலுள்ள வால்தெரு (Wall Street) ரொக்க பாங்கு வியாபாரம் திடீரென ஸ்தம்பித்ததன் விளைவாக உலகம் முழுவதும் பெருமந்தம் (Great world Depression) உண்டாகியது. இதனுல் தொழில் வன்மையுள்ள நாடுகள் பாதிக்கப்படவில்லை. ஆனுல், விவசாயத்தில் ஈடுபட்ட இந்தியாவைப் போன்ற நாடுகள் மிகவும் நொறுங்கின. 1929-ல் விலைகள் சரிவின் சதவீதம், இந்தியாவில் 44·3%. இதை இதர நாடுகளின் விலைச் சதவீதங்களுடன் ஒப்பிட்டுப் பார்க்கலாம். இங்கிலாந்தில் 30·4 சதவீதம், அமெரிக்க ஐக்கிய நாடுகளில் 38·0%, ஆஸ்திரேலியாவில் 28·5%, ஜப்பானில் 35·8%. ஆக்கப் பொருள்களின் விலை இயந்திரப் பொருள்களின் விலையை விடக் குறைந்துபோயிற்று 1929ஆம் ஆண்டு செப்டம்பர் மாதம் முதல் 1933 மார்ச்சு மாதம் வரை 51% வரை (கல்கத்தாக் குறிப்பெண்களின்படி ஏற்றுமதியிலும் (ஆக்கப்பொருள்கள் மட்டிலும்) 27% இறக்குமதிப் பொருள்களிலும் விலைக் குறைவு ஏற்பட்டது. இந்திய விவசாயப் பொருள்களின் விலைச்சரிவினுல் இந்திய விவசாயிகளின் வருமானம் அதிகமாகப் பாதிக்கப்பட்டது. ஆயினும் அவர்கள் கொடுக்கவேண்டிய குத்தகை அல்லது வாரத் தொகை, நிலவரி, வட்டியினங்கள், அரசினருக்குக் கொடுக்க வேண்டிய வாடகை, உப்புவரி இவைகள் முன்னிருந்த விகிதத்தைக் காட்டிலும், அதிகச் சுமையாயின. முன்பிருந்த பண வருமானத்தை நீடிக்க உற்பத்தியை அதிகரிக்க வேண்டி

ஏற்பட்டது. 1933 ஏப்ரல்முதல் 1937 ஆகஸ்ட் மாதம் வரையில் விலைகள் சற்று முன்னேறின. இது ஆயுத பலத்தைப் பெற ஏற்பட்ட இயக்கத்தின் அடிப்படையாகும். அமெரிக்க ஐக்கிய நாடுகளிலும் இன்னும் இதர தேசங்களிலும் ஏற்பட்ட வர்த்தக நிலைமைகளால் மறுமுறை விலைச்சரிவு ஏற்பட்டது. கல்கத்தாக் குறியீட்டெண், 1937ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதத்தில் 105 (ஜூலை 1914=100) ஆக இருந்தது 1939 ஜனவரியில் 95 ஆகச் சரிந்தது.

**3. இரண்டாம் உலகப் போரின்போது விலைகளின் நிலவரம்:** இரண்டாம் உலகப்போர் ஆரம்பித்த காலத்தில் விலைகள் ஏறத்தொடங்கின. அடுத்துள்ள அட்டவணை யுத்தகாலத்தில் மொத்த விலைகளின் நிலவரத்தைக் காட்டுகிறது. (இதன் குறியீட்டு எண்களின் அடித்தளம் 1939 ஆகஸ்ட் மாதம் =100):[1]

| ஆண்டு | விவசாயப் பொருள்கள் | ஆக்கப் பொருள்கள் | ஆதாரப் பொருள்கள் | உற்பத்தி செய்யப்பட்ட பொருள்கள் | பொதுக் குறியீட்டெண் |
|---|---|---|---|---|---|
| 1939 - 40 | 127·5 | 118·8 | 124·2 | 131·5 | 125·6 |
| 1940 - 41 | 108·6 | 121·5 | 113·4 | 119·8 | 114·8 |
| 1941 - 42 | 124·2 | 146·9 | 132·5 | 154·5 | 137·0 |
| 1942 - 43 | 166·2 | 165·9 | 166·0 | 190·4 | 171·0 |
| 1943 - 44 | 268·7 | 185·0 | 232·5 | 251·7 | 236·5 |
| 1944 - 45 | 265·4 | 206·0 | 240·5 | 258·3 | 244·2 |
| 1945 - 46 | 272·6 | 210·0 | 246·2 | 240·0 | 244·9 |

1940-41 ஐத் தவிர, இதர ஆண்டுகளில் விலைகள் தொடர்ந்து செங்குத்தாக முன்னேறின. 1945-46-ல் விலை-குறியீட்டெண், 1939-40 ஐப்போல் இரட்டிப்பாகியது. யுத்தம் தொடங்கியவுடன்

1. ரிசர்வ் பாங்கின நாணயச் செலாவணியும் நிதியும் என்ற அறிக்கை, 1950-51, பக்கம் 147.

உற்பத்தி செய்யப்பட்ட பொருள்கள், ஆதாரப் பொருள்கள் இவை யனைத்தும் விலையேறின. செம்மையான காலம் வரும் என்ற நோக்குடன் இருந்ததால் இம்மாதிரி விலையேற்றம் கண்டதெனக் கூறப்படுகிறது. ஆயினும், 1940 ஆம் ஆண்டு ஜனவரி மாதம் முதல் ஜூன்வரை மறுமுறை விலைச்சரிவு ஏற்பட்டது. இது இக் காலத்திற்கு முன்னர் ஏற்பட்ட ஊக வர்த்தகத்தின் எதிரொலியாக இருக்கக் கூடும். இதர காரணங்கள் வருமாறு: ஏற்றுமதித் தடை செய்தும், நாணய மாற்று முறையைக் கட்டுப்பாடு செய்தும், புழக்கத்திலுள்ள (உருமாற்றத்திலுள்ள) செலாவணியினின்று 40 கோடி ரூபாயை விலக்கினர். 1941ஆம் ஆண்டு டிசம்பரில் யுத்தம் இந்தியாவின் அண்மையில் நடக்க ஆரம்பித்தது. இதன் காரணத்தால் 1942-லும் 1943-லும் விலைகள் ஏற்றமெடுத்து விண்ணெட்டும் அளவில் மேலோங்கின. 1943ஆம் ஆண்டின் இறுதி மாதங்களில்தான் கட்டுப்பாட்டு முறைகளும், வழங்குதல் முறைகளும் சட்டதிட்டமாகக் கொண்டுவரப்பட்டன. சேகரிக்கும் முறைகளும் பங்கீட்டுமுறைகளும் இல்லாத காரணத்தால் கள்ள வர்த்தகமுறை மேற்கத்திய நாடுகளைக் காட்டிலும் பெருமளவில் இந்தியா முழுவதும் ஏற்பட்டது.

பிரிட்டிஷ் அரசு, யுத்தத்தின் நிமித்தம் தனக்கும் தன்னுடன் சேர்ந்த நேச நாடுகளுக்கும் வேண்டிய சரக்குகளையும் பணியையும் இந்தியாவிலிருந்து பெற்றது. இந்திய அரசாங்கம் செலாவணித் தாள்களை வேண்டிய அளவில் அச்சிட்டு, செலவுகளைச் சமாளித்து, இச் செலவிற்கான ஸ்டர்லிங் நிதி லண்டனிலுள்ள ரிசர்வ் பாங்குக் கணக்கில் வரவு வைக்கப்பட்டது. பாதுகாப்புச் செலவினங்கள் அதிகரித்தன. இதற்குக் காரணம், நாணயப் பெருக்கமும், செலாவணி அதிகரிப்பும், வரவு செலவுத் திட்ட மதிப் பீடுகளில் ஏற்பட்ட பற்றுக் குறையுமே ஆகும். அதே சமயத்தில் உணவுப்பொருள் இறக்குமதியும், உற்பத்திசெய்யப்பட்ட பொருள் களின் இறக்குமதியும் செய்வதற்கு ஏற்ப, கப்பல் வசதியின்மையால் இவை தடுக்கப்பட்டன. பர்மா, மலேயா, தாய்லந்து இவை யனைத்தும் போரின்போது ஜப்பானியர் ஆளுகைக்குட்பட்ட காரணத்தால் இந் நாடுகளிலிருந்து அரிசி இறக்குமதி தடை செய்யப்பட்டது. முக்கியப் பொருள்களும், உணவு, உடையும் கிடைப்பது கடினமாயிற்று. எல்லாப் பொருள்களும் யுத்தமுனை களுக்கு எடுத்துக்கொள்ளப்பட்டதால், நுகர்வுப் பொருள்களும், உற்பத்திப் பொருள்களும் சிவிலியன்களுக்குக் கிடைப்பது அரிதாகியது மக்கள் கையிலுள்ள அதிகப்படிச் செலாவணியை அரசினர் அதிகப்படியான வரியாகவும் கடனுகவும் வாங்க

இயலாதுபோகவே, பணவீக்கம் ஏற்பட்டது. இதனுல் போர்க் காலங்களில் விலையேற்றம் ஏற்பட்டது.

அதிகப்படியான வரி விதித்தலாலும், மக்களிடமிருந்து கடன் பெற்றும், நுகர்வுப் பொருள் உற்பத்திக்குக் கட்டுப்பாடு விதித்தும், பங்கீட்டு முறையாலும் அரசினர் விலைகளைக் கட்டுப்படுத்தியிருக்க முடியும். உற்பத்தியைக் கட்டுப்படுத்தியிருந்தால் தனியார் துறையுடன் போட்டியின்றிச் சேகரிக்கும் முறையை நடத்தியிருக்கக்கூடும். பங்கீட்டு முறைகளாலும், விலைக்கட்டுப்பாட்டினுலும் பொதுமக்களிடம் அதிக அளவில் செல்வம் செழித்திருக்கக் கூடும். அவற்றை பாங்குகளிலும், சேமிப்பு நிதிகளிலும் போட்டிருந்தால் அவற்றை யுத்தப் பத்திரங்களில் முதலீடு செய்திருக்கக்கூடும். யுத்தப்பத்திரங்களை வாங்க வேண்டும் என்றும், அரசினரின் கடன் பத்திரங்களில் முதலீடு செய்ய வேண்டும் என்றும் பாங்குகளைப் பணித்திருந்தால் நலமாக இருக்கும். அரசினர் இத் துறைகளில் சீரிய முறையில் முயற்சி எடுத்துக் கட்டுப்பாடு செய்திருந்தால் பணவீக்கம், கள்ள வர்த்தகம், இடர்கள், வருமானம் குறைந்தவர்களுக்குப் பற்றுக் குறை உணவு நிலை இவைகளைத் தவிர்த்திருக்கலாம்.

**4. யுத்தத்திற்குப் பின் விலைகள்:** யுத்தத்திற்குப் பின் விலைகளில் ஏற்பட்ட மாற்றம் பின்கண்ட அட்டவணையில் கொடுக்கப்பட்டுள்ளது. (1939 ஆகஸ்ட் மாதம் 19ஆம் தேதி முடிவடையும் வாரம் வரையிலும் குறியீட்டெண் 100): [1]

| ஆண்டு | விவசாயப் பொருள்கள் | உற்பத்தி செய்யப்பட்ட பொருள்கள் | பொதுக் குறியீட்டெண் |
|---|---|---|---|
| 1945 - 46 | 272·6 | 240·0 | 244·9 |
| 1946 - 47 | 313·8 | 59·1 | 275 4 |
| 1947 - 48 | 356·9 | 287·8 | 307·0 |

1. ரிசர்வ் பாங்கின் புல்லட்டின் பிப்ரவரி, 1956, பக்கம், 122. செலாவணி நிதியைப் பற்றிய 1950-51 ஆண்டறிக்கை.

| ஆண்டு | உணவுப் பண்டங்கள் | தொழிற்கானக்கச்சாப் பொருள்கள் | அரைகுறையாக உற்பத்திசெய்யப் பட்ட பொருள்கள் | உற்பத்தி செய்யப் பட்ட பொருள்கள் | இதர பொருள்கள் | பொதுக் குறியீட்டெண் |
|---|---|---|---|---|---|---|
| 1947-48 | 306·1 | 377·5 | 261·6 | 286·4 | 456·2 | 308·2 |
| 1948-49 | 382·9 | 444·8 | 327·3 | 346·1 | 525·2 | 376·2 |
| 1949-50 | 391·3 | 471·7 | 331·6 | 347·2 | 570·7 | 385·4 |
| 1950-51 | 416·4 | 523·1 | 348·9 | 354·2 | 707·4 | 409·7 |
| 1951-52 | 398·6 | 591·9 | 374·4 | 401·5 | 721·6 | 434·6 |
| 1952-53 | 357·8 | 436·9 | 343·8 | 371·2 | 614·1 | 380·6 |
| 1953-54 | 384·4 | 467·7 | 359·2 | 367·4 | 686·6 | 397·5 |
| 1954-55 | 339·8 | 436·2 | 350·3 | 377·3 | 612·4 | 377·4 |
| 1955 டிசம்பர் | 334·0 | 438·0 | 347·0 | 373·0 | 544·0 | 368·0 |

விலைகளில் அதிகப்படியான ஏற்றத்திற்கான முக்கிய காரணங்கள் வருமாறு : (1) போர்க் காலங்களில் தேவைகள் கட்டுப்படுத்தி வைக்கப்பட்டிருந்தன. போர் முடிவுபெற்றவுடன் அவை அதிகரித்துத் தேவையையும் அதிகரித்து விட்டன. (2) செலாவணி வழங்குதல் அதிகப்பட்டது. (3) மத்திய, இராச்சிய அரசுகளின் வரவு செலவுத் திட்ட மதிப்பீடுகளில் அதிகப்படிப் பற்றுக்குறை ஏற்படல். (4) விவசாய, தொழில் உற்பத்திக் குறைவுகள். இந்தியா பிரிக்கப்பட்டதாலும், பஞ்சத்தினாலும் வெள்ளப் பெருக்கினாலும் நிலைமை இன்னும் மோசமாகியது. ஊக வர்த்தகமும், பதுக்கல் முறைகளும் அதிகரித்தன. அதனால் கொரியாப் போர்க் காலங்களில் திடீரென விலைகள் அதிகரித்தன. 1950ஆம் ஆண்டு ஜூன் மாதத்தில் பொதுக் குறியீட்டெண் 395·6 லிருந்து 10 புள்ளிகள் கூடுதலாகி, 405·6 ஆயிற்று. அரசினர் இந் நிலையில் தலையிட்டு விலைகளைக் கட்டுப்

படுத்தியும் வழங்கு முறை, அளிப்புத் தன்மை இவைகளை ஒழுங்குபடுத்தியும் ஏற்றுமதித் தீர்வைகளை விதித்து ஏற்றுமதியைக் குறைத்தும், அவ்வாண்டு ஜூலை மாதத்தில் விலையேற்றம் ஏற்படா வண்ணம் செய்தனர். கொரியாப் போரில் சீனர்களின் தலையீட்டால் 1951 மார்ச்சு மாதத்தில் பொதுக் குறியீட்டெண் 438·6 ஐத் தொட்டது. யுத்தப் பிரகடனத்தின் காரணத்தால் இறக்குமதிப் பண்டங்களின் விலை அதிகரித்தது. அயல் நாடுகளில் கையிருப்புச் சரக்கினைச் சேமித்துவைத்து, யுத்தத் தேவைகளுக்குப் பயன் படுத்த முடிவு செய்ததன் விளைவாக மேற்சொன்ன விலையேற்றம் உண்டாயிற்று. அதிக அளவில் ஏற்றுமதி செய்யவேண்டுமென அரசினர் பொறுப்பேற்றுக் கொண்ட காரணத்தால் கட்டுப்பாடு செய்யப்பட்ட அநேக பண்டங்களின் விலை அதிகரித்தது. குறிப்பாகச் சர்க்கரை, கரும்பு, வெல்லம், உணவுத் தானியங்கள், பருத்தி ஆடைகள், ரப்பர் முதலியன. உற்பத்தியாளர்களுக்கு அடக்கவிலையில் ஏற்றம் கண்ட காரணத்தால் அவர்கள் பாதிக்கப் படாமலிருக்க விலையேற்றத்தை அரசினரே அனுமதித்தனர்.

1950ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதத்தில் நிதி மந்திரி எட்டு அம்சத் திட்டமொன்றை வகுத்து, அதன்மூலம் விலைக்கோட்டைக் கட்டுப்படுத்தவும், பணவீக்க அழுத்தங்களைக் கையைவிட்டு அகலாவண்ணம் செய்யவும் இயலும் எனக் கூறினார். சில முக்கியமான பண்டங்கள், இரும்பு கலவா உலோகங்கள், மிதி வண்டியும் அதன் உறுப்புகளும், மின்சார விளக்குகள், கச்சா ரப்பர், குழந்தைகளுடைய உணவுப் பொருள் இவற்றின் வழங்கு முறையை அரசினர் ஏற்றுக்கொண்டு நடத்திவரலாயினர். வர்த்தக தொழில் அதிபர்களை உறுப்பினர்களாகக் கொண்ட விலை நிர்ணயக் குழு ஒன்றை நியமித்தனர்.

5. **1951-லிருந்து கீழ்நோக்கியமைந்த விலைகள் :** 1951ஆம் ஆண்டு ஏப்ரல் நடுவிலிருந்து விலைகள் கீழ்நோக்கிச் செல்ல வாரம்பித்தன. கட்டுப்பாடு செய்யப்பட்ட பண்டங்களுக்கு அரசினர் உயர்ந்த விலையைக் குறித்ததாலும், இதர நாடுகளில் ஏற்பட்ட பல காரணங்களாலும் இவ் விலைச்சரிவு ஏற்பட்ட தெனலாம். மொத்த விலைக் குறியீட்டெண்கள் 1951ஆம் ஆண்டு ஏப்ரல் மாத நடுவில் 462·0-ல் நின்று, 1951 மார்ச்சு மாதமுடிவில் 378·2-க்கு இறங்கி, 15·9% சரிவு ஏற்பட்டது. 1951ஆம் ஆண்டு மார்ச்சு மாதத்தில் அமெரிக்க ஐக்கிய நாட்டினர் உற்பத்திப் பண்டங்களைச் சேமித்து வைக்கத் தொடங்கினர். இதன் விளைவாக, சில பொருள்கள் விலையேறத் தொடங்கின. உலகில் தேவைப்படும் சில நுகர்வுப் பொருள்களும் ஆதாரப் பொருள்களில்

குறிப்பாக நிலக்கரி, பண்படுத்தப்படா எஃகு, ரப்பர், பெட்ரோலியம், பருத்தி, கம்பளி ஆகியவைகளும் கிடைக்க ஆரம்பித்தன. மேற்கு ஜெர்மனி, ஜப்பான் முதலிய நாடுகளிலிருந்து போட்டி ஏற்பட்டவுடன் விலை நிலைத்தது.

உள் நாட்டில் பணவீக்கக் குறைப்பு முறைகளாவன: (1) நாட்டிலுள்ள தொழில்களுக்கு வேண்டிய கச்சாப் பொருளைப் பெறுவதற்காகவும், சேகரிப்பதற்காகவும் இறக்குமதியை விரிவாக்கினர். (2) உள்நாட்டுத் தேவையை ஈடுகட்டவேண்டி ஏற்றுமதியைக் கட்டுப்படுத்தினர். குறிப்பாக, எண்ணெய் வித்துக்கள், முரட்டுத் துணி, மெல்லிய ஆடை இவைகளின்மீது தீர்வை புதிதாக இட்டோ, அல்லது முன்னிருந்த விகிதத்தைக் கூட்டியோ கட்டுப்படுத்தினர். (3) கிடைப்பதற்கு அரிதான பொருள்களின்மீது கட்டுப்பாடு விதித்தனர். அவைகளாவன: உணவுத் தானியம், இரும்பு எஃகு, பருத்தி, பருத்தி நெசவினம் கச்சா ரப்பர், நிலக்கரி, சர்க்கரை. (4) காட்டிய உபரிவரும் னக் கணக்கு. (5) 1951ஆம் ஆண்டு நவம்பர் மாத மத்தியிலிருந்து பணக்கட்டுப்பாட்டு முறைகளைச் செய்து, பாங்கு விகிதத்தை 3 லிருந்து $3\frac{1}{2}$ சதவீதமாக உயர்த்தி, அதிகப்படியான கடன்முறை குறையச் செய்து, பணவீக்கத்தைக் குறைத்தனர். இம் முறைகள் தேவைப்பட்ட அளவுக்கு மேலேயே இருந்தன. 1952-ல் இவை ஏறும் விலைகளைத் தடுத்ததோடல்லாது கீழே இறக்கவும் செய்தன. 1952ஆம் ஆண்டு டிசம்பர் மாத முடிவில் பொதுக் குறியீட்டெண் 11 சதவீத இறக்கம் கண்டு, 1951 டிசம்பர் மாதத்தில் 432·2 ஆக நின்ற எண், 1952 டிசம்பரில் 374·5-க்குச் சரிந்தது. உடனடியாக 1952 ஆம் ஆண்டு பிப்ரவரி மார்ச்சு மாதங்களில் இவ் விலைச்சரிவைக் காண முடிந்தது. ஆயினும், அரசினரின் முயற்சிகளால் விலையில் நிலை பேருக்கம் செய்ய முடிந்தது. அதனால் விலைச்சரிவு ஏற்படவில்லை எனக் கூறலாம். ஏற்றுமதியை அதிகப்படுத்தும் நோக்கத்துடன் சணல் மீது இடப்பட்ட தீர்வையைக் குறைத்தும், இதர பண்டங்களின் மீது இடப்பட்ட கட்டுப்பாடுகளை நீக்கியும் பருத்தி, துணி, கம்பளி, உப்பு, எண்ணெய் வித்துக்கள், தாவர எண்ணெய்கள் இவைகளை ஏற்றுமதி செய்ய அனுமதித்தனர். பொறிசெய்-பொருள் உற்பத்தியில் ஏற்றம்கண்ட காரணத்தால் அவற்றின் விலைகள் அதிகமாக மாருத நிலையை எய்தின. பன்னாட்டுச் செலாவணி நிதியின் தூதுக் குழுவினர் 1953ஆம் ஆண்டு ஜூன் மாதத்தின் மொத்த விலைக் குறியீட்டெண்ணை பரிசீலனை செய்து, முடிவில் 1948 ஆம் ஆண்டின் விலைகளைவிட 10 சதவீதம் கூடுதலாக இருந்தபோதிலும் இதர

நாடுகளுடன்[1] ஒப்பிடும்போது இவ் வேற்றம் மிகவும் தாழ்ந்ததே என்றனர். ரிசர்வ் பாங்கு நெறியாளர்களின் அறிக்கை வருமாறு[2] '1953-54-ல் பண்டங்களுக்கான சந்தையிலும் பணத்திற்கான சந்தையிலும் மொத்தத் தேவைகளுக்கும் வழங்குதற்கும் இடையே ஏற்பட்ட இருப்பு முன் ஆண்டுகளை விடக் கூடுதலாக உள்ளது.' ஆண்டின் இந்த ஏற்பாடு அதிக நாட்கள்வரை விலையில் மாறுத நிலையைச் செய்தது.

**1953-54-ல்[3] விலை நிலையாக இருந்ததைக் காட்டும் அட்டவணை**

| | மார்ச்சு 1953 | மார்ச்சு 1954 | சதவீத மாற்றம் |
|---|---|---|---|
| உணவுப் பண்டங்கள் | 365 0 | 371·4 | + 1·8 |
| தொழிற்கான ஆக்கப் பொருள்கள் | 453·1 | 462·5 | + 2·1 |
| அரைகுறை உற்பத்திப் பொருள்கள் | 349·8 | 355·8 | + 1·7 |
| உற்பத்தி செய்யப்பட்ட பொருள்கள் | 369·0 | 373·9 | + 1·3 |
| இதர பொருள்கள் | 585·0 | 686·9 | + 17·3 |
| பொதுக் குறியீட்டெண் | 385·2 | 394·0 | + 2·3 |

சிறு அளவில் தோன்றிய மொத்த ஏற்றம் இதர பொருள்கள் என்ற தலைப்பின்கீழ்க் காணப்படுகின்றது. அத் தலைப்பின்கீழ் மிளகு, முந்திரிப் பருப்பு, புகையிலை ஆகியவை அடங்கும். ஏற்றுமதித் தீர்வையை அரசினர் நீக்கியதன் விளைவாகப் புகையிலையின் விலை அதிகரித்தது. அதன் காரணமாக, விலை ஏற்றத்தை அந்தப் பகுதியில் காணலாம்.

1. இத் தூதுக் குழுவினர் 1953-ல் இந்தியாவிற்கு வந்தனர். இக் குழுவின் அறிக்கை இந்தியச் சர்க்காருக்குக் கொடுக்கப்பட்டது. அதன் பெயர் எகனமிக் டெவலப்மெண்ட் வித ஸ்டபிலிட்டி. (Economic Development with Stability) இதைப் பெர்னிஸ்டீன் அறிக்கை (Bernstein Report) எனக் கூறுவர். இக் குழுவின் தலைவர் பெயர் பெர்னிஸ்டீன்.

2. அறிக்கையின் பக்கம் 11.

3. ரிசர்வ் பாங்க் ஆப் இந்தியாவின் அறிக்கை (செலாவணியும் நாணயமும், 1953-54), பக்கம் 112.

ஆயினும், 1954-55-ல் இந்தியாவின் வர்த்தகப்படம் வேறொரு நிலையில் தென்படுகிறது. இவ் வாண்டில் பண்டங்களின் விலைகள் மிகக் குறைவாக உள்ளன. நாட்டில் அளவற்ற பெருவிளைச்சல் காரணமாகவும், கையிருப்பிலிருந்த பண்டங்களை நுகர்வுக்கு விடுத்ததாலும், இயந்திர உற்பத்திப் பெருக்கினாலும் கட்டுப்பா டற்ற இறக்குமதிகளாலும் விலைக்குறைவு ஏற்பட்டது. 1953-54-ல் ஏற்பட்ட பெருமிதமான உணவுத்தானிய உற்பத்தியாலும் 1954 ஜூலை மாதம் முதல் உணவுக் கட்டுப்பாட்டை நீக்கியதன் விளை வாகவும், பதுக்கப்பட்ட உணவுத் தானியங்கள் சந்தையை வந்த டைந்தன. சந்தையில் குவிந்த பண்டங்களால் விலைச்சரிவு அதிகரித்து அதன் விளைவாகச் சில இராச்சியங்களில் விலை சரியா

**விலைச்சரிவின் அட்டவணை**[1]

| | மார்ச்சு 1954 | மார்ச்சு 1955 | சதவீத மாற்றம் |
|---|---|---|---|
| உணவுப் பண்டங்கள் | 371·4 | 297·0 | —20·0 |
| தொழிற்கான ஆக்கப் பொருள்கள் | 462·5 | 412·7 | — 10·8 |
| அரைகுறையாக உற்பத்தி செய்யப்பட்ட பொருள் | 355·8 | 333·5 | —6·3 |
| உற்பத்தி செய்யப்பட்ட பொருள்கள் | 373·9 | 376·3 | + 0·6 |
| இதர பொருள்கள் | 686·9 | 553·3 | —19·4 |
| பொதுக் குறியீட்டெண் | 394·0 | 353·8 | —10·2 |

திருக்க, காப்பு முறைகளைக் கையாண்டனர். நிரந்தரமாக நின்ற உற்பத்தி செய்யப்பட்ட பொருள்களைத் தவிர, இதர பொருள் களில் விலையிறக்கம் ஏற்பட்டது. 1953-54-ல் 4·4 சதவீத விலை யேற்றமும், 1954-55-ல் 5·1 சதவீத விலையிறக்கமும் ஏற்பட்டன. செப்டம்பர் 1954 வரையிலும் விலைச்சரிவு நீடித்தது. அதிகப் படியான அறுவடைகளும், கட்டுப்பாடற்ற சர்க்கரை, பருத்தி,

1. ரிசர்வ் பாங்கின் செலாவணியும், நாணயமும் என்ற அறிக்கை, 1954-55, பக்கம் 32.

அரிசி இறக்குமதியும் அயல் நாட்டில் நம் நாட்டுச் சரக்குகளுக்குத் தேவை ஏற்படாமையும் விலைச்சரிவுக்குக் காரணங்களாகும்.

**6. மே 1955 முதல் ஜனவரி 1956 வரையில் :** 1955ஆம் ஆண்டு மே மாதம் வரை விலைகள் சரிந்து கொண்டிருந்தன. அதன் பின்னர், அதாவது டிசம்பர் 1955 வரையில் 7·7 சதவீத அளவில் அதிகரித்தன. உணவு வகைகள் 17·2%ம், தொழிற்கான கச்சாப் பொருள்கள் 10·6%ம், அரைகுறையாக உற்பத்தி செய்யப்பட்ட பொருள்கள் 5·2%ம் விலையேறின. உற்பத்தி செய்யப்பட்ட பொருள்களும், இதர பொருள்களும் நிலைமாற்றமடையாமல் அவ்வாறே இருந்தன. மழையின்மை, வெள்ளம் ஆகிய காரணங்களால் விளைச்சல் குறைவுபடும் என்ற முன்னோக்கோடு உணவுத் தானியங்களின் விலை ஏற்றமடைந்தது. மேலும், இராச்சிய அரசினர் விலை இறக்கத் தடைக்காப்பிட்ட காரணத்தாலும், விலை ஏற்றமடைந்தன. 25,000 டன்கள் வெல்ல ஏற்றுமதியை அரசு இணங்கி அனுமதித்ததாலும் கட்டுப்பாடற்ற தாராள ஏற்றுமதிக் கொள்கையை மேற்கொண்ட காரணத்தாலும் விலைகள் முன்னேறத் தொடங்கின. தொழிற்கான ஆக்கப்பொருள்களைத் தனியார் பின்னர்க் கிடைப்பது அரிது என்று சேமித்த காரணத்தாலும் தேவைக்கான அளவு வழங்குதலின்றிக் கிடந்ததாலும் விலையேற்றம் ஏற்பட்டது. அக்டோபர் மாதத்திலிருந்து டிசம்பர் மாதத்திற்குள் பருத்தியின் விலை 19 சதவீத ஏற்றம் கண்டது. இதற்கான காரணங்களை ஆராய்ந்தால் அந்த விளைச்சல் காலத்தில் பஞ்சாலைகள் பருத்தியிருப்பினை அதிகரிக்கத் தொடங்கின. இதனால் முன்கணக்கின்படி 55 லட்சம் சிப்பங்களுக்குப் பதிலாக 48 லட்சம் சிப்பங்களே சந்தைக்கு வந்தன. அயல் நாடுகளின் அளவிறந்த தேவைகளாலும் நாட்டில் ஏற்பட்ட உற்பத்திக் குறைவினாலும் நிலக்கடலை, எண்ணெய்வித்துக்கள் இவைகளில் விலையேற்றம் ஏற்பட்டது. வரும் அட்டவணையில் சில பண்டங்களின் செங்குத்தான விலை ஏற்றத்தைக் காணலாம் :

| | ஜனவரி - நவம்பர் 1954 (டன் கணக்கில்) | ஜனவரி - நவம்பர் 1955 (டன் கணக்கில்) |
|---|---|---|
| எண்ணெய் வித்துக்கள் | 27,500 | 63,100 |
| நிலக்கடலை | 7,400 | 29,800 |
| ஆளி விதை எண்ணெய் | 28,000 | 13,37,000 |
| கடலை எண்ணெய் | 3,09,000 | 30,11,000 |

பர்சிய வளைகுடா நாடுகள் விதை இறக்குமதியை அதிகரித்தன. பிரிட்டனும், இதர ஐரோப்பிய நாடுகளும் எண்ணெய் இறக்குமதியை அதிகரித்தன. பிரிட்டனுக்குக் கப்பல் கட்டணம் குறைவான காரணத்தால் எண்ணெய் ஏற்றுமதி அதிகமாயிற்று எனலாம். மாங்கனீஸ் தாது, ஆமணக்கு விதை, ஆளிவிதை இவையனைத்தும் அயல் நாட்டு வர்த்தகத்தில் ஈடுபட்டவை. அவைகளுக்கு வெளிநாடுகளில் தேவை அதிகம் எனலாம். பிரேசில் நாட்டில் ஆமணக்கு விதை உற்பத்தி குறைந்த காரணத்தாலும் அர்ஜன்டைனு நாட்டில் ஆளிவிதை உற்பத்திக் குறைவினாலும் இம்மாதிரி நிலை ஏற்பட்டது. ஆனால், மாங்கனீஸ் தாதுவுக்கு அமெரிக்க நாட்டில் அதிகக் கிராக்கி ஏற்பட்டது. தேயிலை விலையும் சர்க்கரை விலையும்குறைந்தன. ஜனவரி 1955முதல் டிசம்பர் 1955க்குள் தேயிலையின் விலை 57% குறைந்தது. இதன் காரணம் என்னவெனில் அதிகப்படி உற்பத்தியும் வெளிநாடுகளில் குறைவான தேவையுமே எனலாம். 1955 அக்டோபர் முதல் டிசம்பர் வரையில் சணல் உற்பத்திகளின் விலைகள் ஏறின. உள்நாட்டிலும் அயல் நாடுகளிலும் இதற்கான தேவை அதிகரித்ததே அதற்கான காரணம் எனலாம். பருத்தித் துணிரகங்களின் விலை நிரந்தரமாயிருந்தது. ஆண்டின் முடிவில் நெசவாலைகளில் இருந்த அதிகப்படிச் சரக்கினாலும், ஏற்றுமதித் தேவை குறைவுபட்டதாலும் விலை தாழ்ந்துபோய்விட்டது. இதர பண்டங்களின்கீழ் மிளகின் விலையும் குறைவுபட்டது. சிங்கப்பூர், இந்தோனேஷியா இவையிரண்டின் அதிகப்படி ஏற்றுமதியும் அமெரிக்க ஐக்கிய நாட்டின் தேவைக் குறைவும் விலை குறைந்ததற்குக் காரணங்களாகும்.

**7. விலை ஏற்றங்களைத் தடுக்க அரசு கையாண்ட வழிகள்:** விலை ஏற்றங்களைத் தடுக்க அரசினர் கீழ்க்கண்ட முறைகளைக் கையாண்டனர். (1) கோதுமை இருப்பினைச் சந்தை விலைக்குக் குறைவாக வெளியிட்டனர்; 2,50,000 டன் இறக்குமதியும் செய்தனர். (2) கோதுமையால் தயாரித்த பண்டங்கள், உமி நீக்கிய அரிசி, ஜோவர் பயிறு, பயிற்று மா இவைகளை ஏற்றுமதி செய்யக்கூடாதெனத் தடுக்கப்பட்டன. (3) கடலை எண்ணெய் ஏற்றுமதிக்குப் புதிய வீதப் பங்கு கேட்டுவரும் புதிய மனுக்கள் நிராகரிக்கப்பட்டன. (4) பருத்தியின் வருங்காலச் சந்தை வர்த்தக முறையை நிறுத்த உத்தரவிடப்பட்டது. (5) தேயிலையில் ஏற்றுமதி வீதப் பங்கை அதிகரித்தனர். இவற்றால் அரிசி, தோதுமை, ஜோவர் இவற்றில் சிறிதளவு விலையிறக்கம் ஏற்பட்டது.

உணவுப் பொருள்களின் விலையேற்றத்தைப்பற்றி நாடு முழுவதும் கவலையில் ஆழ்ந்துள்ளது. 1956ஆம் ஆண்டு ஆகஸ்ட் மாதம் இராச்சிய சபையில் உணவு மந்திரி விலையேற்றத்தைப்

பற்றிப் பேசுகையில் பின்வருமாறு கூறினர்: 'காரிப் (kharif) பயிர்கள் குறைவுபட்டன; ஊக வர்த்தகம் அதிகரித்தது; பதுக்கல் முறைகள் நடைமுறையில் இருந்துவந்தன; பற்றுக்குறை நிதியாக்கல் முறை, பணவீக்கம், மற்றும் கிழக்குப் பாகிஸ்தானுக்கு உணவுப் பொருள் கடத்தப்படுதல் ஆகிய காரணங்களால் விலையேற்றம் ஏற்படுகிறது என்றும் கூறினர். இதைக் கட்டுப்படுத்த அரசினர் கையாண்ட முறைகள் : (1) ஏற்றுமதியாகும் அரிசி, உணவுப் பண்டங்களின்மீது தீர்வை போடுதல், (2) நியாய விலைக் கடைகள் மூலம் அரிசி, கோதுமை வழங்குதல், (3) உள்ளூர்ச் சந்தைகளில் அரசினர் நடத்தும் கொள்முதல் முறையை நிறுத்தி விடல், (4) அரிசி, நெல் இருப்பின் ஈட்டில் பாங்குகள் முன்பணம் கொடுத்தலைத் தவிர்த்தல், (5) முக்கியமான சந்தைகளில் மத்திய அரசு தமது இருப்பிலிருந்து பண்டத்தை வழங்குதல். அமெரிக்க ஐக்கிய நாடுகள், ஆஸ்திரேலியா, நியூஸிலாந்து, பர்மா முதலிய நாடுகளிலிருந்து உணவுப் பண்டங்களைக் கொள்முதல் செய்து, தேவை, வழங்குதல் இவற்றைச் சமாளிக்க இடிதாங்கி போன்ற பண்ட இருப்பினைச் (buffer stocks) சர்க்கார் ஏற்பாடு செய்தது. அமெரிக்க நாட்டுடன் ஒப்பந்தம் செய்துகொண்டு, அதன்படி 1956 ஆகஸ்டு மாதம் முதல் 3 ஆண்டுகளுக்குள்ளாக 3·5 மிலியன் டன் கோதுமையும், 2,00,000 டன் அரிசியும், 5,00,000 டன் பருத்திச் சிப்பமும் வாங்கியது. வருங்காலத்தில் ஏற்படும் பண வீக்கத்தைக்கூட இச் சேமிப்புகளைக் கொண்டு சமாளிக்க ஏற்பாடு செய்யப்பட்டது.

**8. விலைகளுக்கு ஏற்ப நாணய வழங்குதல் முறை :** நாணயச் செலாவணி முறைக்கும், விலைக்கும் உள்ள நேர் தொடர்பைக் காரணம்காட்டி விளக்குவது கடினம். இந்தியாவில் பணப் புழக்கத்தைப் பற்றிய புள்ளி விவரங்களும், பணவழங்கு பகுதியைப் பற்றிய விவரங்களும் போதிய அளவு ஏற்படவில்லை எனலாம். ஜூலை 1950 முதல் டிசம்பர் 1955 வரையில் ஏற்பட்ட பொருள் சம்பந்தப்பட்ட செயல்களாலும் கொரியாப் போரினாலும் பொருளாதார வீக்கம் ஏற்பட்டது. இந்தக் காலத்தில் பொதுமக்களிடையே புழங்கிய நாணயம் 30% அதிகரித்தது. பாங்குச் செலாவணியில் 10% கூடுதல் ஏற்பட்டது. ஆயினும், பொதுக் குறியீட்டெண் 7% இறங்கியது. அதிகப்படியான பணம் நியாயமாகவே ஏறியது என்றும், தேவைக்கேற்ப வழங்குதல் இருந்தது என்றும் கூறலாம். 1955ஆம் ஆண்டு மே மாதம் முதல் டிசம்பர் வரை 200 கோடி ரூபாய் அதிகரித்தது. ஆயினும் இது விலைகளைப் பாதிக்கவில்லை எனலாம்.

**9. விலைக் கொள்கை:** நாட்டின் பொருளாதார அமைப்பிற்கு விலை ஏற்ற இறக்கங்கள் கொள்ளத் தக்கவையல்ல. ஏறிய விலை,

ஒரு வகையில் நலமே என்றாலும், வியாபாரிகளுக்கு நல்ல ஊக்க மளித்தாலும் குறிப்பிட்ட வருமானம் உடையவர்களுக்கும் கூலி பெறுவோருக்கும் இது வாழ்க்கைத்தரத்தைக் குறைக்கிறது. பொருளின் அடக்க விலை ஏறுகிறது. அதனால் தொழில் நடத்துவோன் (entrepreneurs) லாபக்குறைவை அடைகிறான். உற்பத்திச் செயல்கள் குறைகின்றன. அநேகர் வேலையின்றி வெளியேறுகிறார்கள். 1948 முதல் 1953 வரையில் இந்தியாவில் சராசரி விலைகள் 10% ஏறின. பம்பாயில் கூலி வேலை செய்யும் வகுப்பினரின் குறியீட்டெண் 22 சதவீதம் அதிகரித்தது. பண வீக்க காலத்திலும் பணச்சுருக்க காலத்திலும் அவதிப்படுபவர்கள் தொழிலாளரும் சம்பளம் பெறாத நடுத்தரக் குடும்ப மக்களுந்தான். விலைச்சரிவு ஏற்பட்டால் வர்த்தகர்களும் வியாபாரிகளும் பண்டங்களை மிகவும் குறைந்த விலைக்கு விற்பார்கள். இதனால் அவர்களுக்கு நஷ்டம் ஏற்பட்டு விற்பனையை நிறுத்திவிடுவார்கள். அதன் விளைவாக, உற்பத்தியும் தவிர்க்கப்படும். நிலையான சம்பளம் வாங்குபவர்களுக்கு இது நலமான காலம் ஆயினும் அவர்களுடைய உத்தியோகம் நீடிக்குமா என்பது பிரச்சினை. ஒரு சாதாரண விவசாயி,விலைக் குறைவைத் தடுக்கத் தன்னால் இயன்ற மட்டும் அதிகப்படி உற்பத்தி செய்ய முயல்கிறான். அவன் செய்ய வேண்டிய செலவுகள் வார வாடகை, நிலத்தீர்வை, கடன் வட்டி, இவைகள் குறைவதில்லை. அதிகப்படி உற்பத்தியால் விலை சரிகிறதேயொழியக் கூடுவதில்லை. இதனால் சமூகம், பல திறப்பட்ட ஆட்களைப் பெற்றுள்ளது. கடன் கொடுத்தவரும் கடன்பட்டவரும், ஏற்றுமதியாளர் இறக்குமதியாளர் விற்போர், வாங்குவோர் என்றெல்லாம் உள்ளனர். இவர்களை விலைகள் அவ்வப்போது பாதிக்கின்றன. எடுத்துக்காட்டாக, விலையேற்றத்தினால் கடன் பட்டவருக்கு உண்மையான கடன்பளு குறைகிறது; கடன் கொடுத்தவர் பயன்பெறுவதில்லை. ஏற்றுமதி செய்பவருக்கு ஆதாயமளிக்கிறது; ஆயினும், இறக்குமதியாளருக்கு நஷ்டமாக இருக்கிறது. விற்பனையாளர், இதை ஆதரவோடு எதிர்பார்ப்பார்கள்; ஆனால் வாங்குபவர்கள் விலையேற்றத்தை விரும்பார்கள். தொழில், கொடுப்போரைத் தூண்டிவிடுகிறது; ஆயினும், கூலி பெறுவோர் அவதியுறுகின்றனர். சமூகத்தில் ஒவ்வொரு வகுப்பினராலும் இவ் விலையேற்றத் தாழ்வுகள் எம்மாதிரி எதிர்நோக்கப்படும் என்ற வர்ணனை முடிவற்றதாக இருக்கும். இதனால் தேசீய முறையின் கீழ் இவ்வாறான கருத்து வேற்றுமைகளைக் காண வேண்டிய நிர்ப்பந்தம் இல்லை. இதனின்று வெளிப்படையாக விளங்குவது என்னவெனில் திடீரென விலை மாற்றங்கள் பெரிய அளவில் ஏற்பட்டால், நாட்டின் பொருளாதாரம் பாதிக்கப்படும். இம்மாதிரி கட்டங்களில் முதலீட்டு முறைகளைக் கையாண்டும் தேவையைப்

பெருக்கியும் விலையைக் கட்டுப்படுத்த முயலக்கூடும். நாட்டின் சந்தை முறைகளில் தலையிட்டுச் செயல்புரிவதால் கெடுதலேயன்றி, நன்மை ஏற்படாதெனத் திண்ணமாகக் கூறலாம். நிலையான விலைமுறைப் பிரச்சினைகள் ஒரே அடியில் தீர்த்துவைக்கக்கூடிய அளவுக்கு எளிதானவையல்ல. உலக முழுமையும் விலைமாற்றம் ஏற்படுவதில்லை. சில பண்டங்களின் விலையை அது பாதிக்கலாம். இதர பண்டங்களின் விலை பாதிக்கப்படுவதில்லை. சிற்சில பண்டங்களின் விலைமாற்றங்கள் ஒரே சீராக அமைவதில்லை; அல்லது சில பொருள்களின் விலை யேறும்; அதே காலத்தில் இதர பொருள்களின் விலை இறங்கக்கூடும். இந்தியாவில் பற்றுக்குறை நிதி முறையாலும் அளவிறந்த செலவினங்களாலும், பண வீக்கச் சுழற்சி ஏற்பட்டு அதை நேருக்கு நேர் நாம் எவ்வாறு சமாளிப்பது என்று நம் அறிவுத் திறனை அல்லற்படுத்துகிறோம்.

**10. விவசாய விலைகளை நிலைபெருக்குதல்:** இந்தியா முழுமையும் விவசாயம் ஒரே ஒரு பெரியதொழிலாகக் கருதப்படுதலால் இதில் ஈடுபட்ட பெருவாரியான மக்களின் உணவுதான் வாழ்க்கைக்கான செலவினைப் பெரிய அளவில் ஈடுபடுத்துகிறது. அதில் கொடுக்கப்படும் கூலியின் மூலம்தான், நாட்டின் கூலி நிலையை அறியவியலும். ஆதலால் விவசாய விலைகளை மாற்றமின்றி நிலைநிறுத்த முயற்சிகள் செய்யப்படுகின்றன. விவசாய விலைகளின் நிலைபேருக்கலினால் இயந்திரப் பொருள்களின் விலைகளும் தாமாகவே நிலைபெற்றுவிடும் என்பதில் ஐயமில்லை. எல்லா விவசாயப் பொருளிலும் அரிசி, கோதுமை இவைகள் பெரும் பகுதிகளில் பயிராக்கப்படுதலாலும், இவை அயல்நாட்டுச் சந்தைகளில் பெரிய உணவுப் பொருள்களாக அமைவதாலும், இவற்றின் அவசியத்தை நாம் நன்கறிவோம். கிராமக் கடன் சர்வேக் குழுவினர் (Rural Credit Survey Committee) விவசாய விலைகள் நிலைபேருக்கப் பெற்றால்தான் கிராமக் கடன் முறை சீராக அமையும் என்றும் அதற்காகக் கொள்கை முறையில் தானியக் கிடங்குகளையும், மண்டிகளையும் அமைத்து அவற்றைக் கூட்டுறவு முறையில் விற்பனைக்கு உட்படுத்தி விற்பனை செய்யவேண்டுமென்று பரிந்துரைக்கிறது. இரண்டாவது ஐந்தாண்டுத் திட்டத்தைப் பற்றிய குறிப்பில், (Memorandum) இந் நாட்டுப் பொருளாதாரத் துறையினர் செய்த பரிந்துரையில், இந் நாட்டு அரசினர் தானியக் கிடங்குகளையும், மண்டிகளையும், நடத்த வேண்டுமென்றும், இதனால் விவசாயப் பண்டங்களின் இருப்பு, எதிர்பாராத தேவைகளுக்கு ஈடுகொடுக்க இயலும் என்றும், பருவ காலங்களில் ஏற்படும் விலையேற்ற இறக்கங்களை ஒழுங்குபடுத்தித் தேவைகளுக்கு ஏற்பப் பணவீக்க அலைவுகளைக் கட்டுப்

படுத்தப் பயன்படும் என்றும் கூறினர்.[1] ஆயினும் பேராசிரியர் பி.ஆர்.ஷெனுய்,தமது மாறுபட்ட குறிப்பில் அரசினர் தலையீட்டை எதிர்த்துள்ளார். இதனால் பருவ விலையின் அலைவுகளிலும் நீண்ட கால விலைமாற்றங்களிலும் அவர்கள் தலையிடுவது தவறு எனக் கூறுகிறார். குறுகிய கால விலை அளவுகளைப்பற்றி அவர்கொண்ட கவலை என்னவெனில் சர்க்காரின் தலையீட்டால் குறுகியகால விலை அலைவு நீண்டகால அலைவாக மாறிவிடலாம். திட்டவட்டமாக விலையேற்றச் சரிவுகளுக்கான எதிர்ப்பு முறைகளை அரசினர் கையாண்டால் விவசாயப் பொருள்களுக்கு உள்ள இம்முறையை இதர பகுதியினரும் பயன்படுத்தத் தொடங்கிவிடுவர். இதனால் விவசாயத்தில் ஈடுபடுபவர்களுக்கு எவ்விதமான பலனும் ஏற்படாது; இந்தக் காப்புமுறை, உற்பத்தியைப் பெருக்குவதால், விலை உடனே சரிய ஆரம்பிக்கும். உடனே இதற்காக அதிகப்படியான விலை சரியாக் காப்பு முறையை அமைக்க முயல்வர். முடிவில் ஒரு நிலையில் திறந்த சந்தையில் (open market) விவசாயப் பொருள் வாங்குவதற்கும், சேமிப்பதற்கும் போதிய வசதி செய்ய முடியாது போய்விடும். விலைக்காப்பு முறையை விட்டுவிடுவதால், பணவீக்கம் போன்ற பிரச்சினைகள் எழும்போது தீர்வு காண்பது கடினம். அமெரிக்க நாட்டில் விவசாயம் ஒரு சிறுபான்மைத் தொழில்தான். அங்கு அரசினர் 'விலை-காப்பு' முறையைக் கையாளுவதால், இருப்பு அதிகரித்து வருவதுடன் பயனற்று வீணாகிப் போகிறது. ஏதோ குறிப்பிட்ட சிலவற்றின் மீது காப்புமுறை போடுவது நமது இடரைப் போக்க இயலாது. விவசாயப் பொருள்களிடையே வேற்றுமை காட்டி விலை-காப்பு முறையை அனுசரித்தால், அது உற்பத்திக் கொள்கையைச் சிதைத்து நிலையற்ற தன்மையை உருவாக்கும்.[2]

பேராசிரியர் ஷெனாயின் வாதத்தில், செம்மையான அடிப்படை உண்மை பொதிந்திருப்பதால், சமயத்தையொட்டிக் கால நிலையைப் பொறுத்து, சாமர்த்தியமாக விலை நிலைபேற்றுக் கொள்கையைக் கையாண்டால் அது நல்ல பயன்தரும். எது எவ்வாறாயினும் இந்தியாவில் சோஷலிஸ அரசு அமைந்து வருகிறது. இதன் விளைவாக, அடிக்கடி தலையிடும் முறை அதிகமாக அமைந்துள்ளது. திடீரென எல்லாத் துறைகளையும் தாங்களே எடுத்து நடத்துவார்கள். விலைகள் கட்டுக்கடங்காமல் போவதைப் பார்த்துக்கொண்டு வாளாயிருக்கும் அரசின் போக்கை மக்கள் அனுமதிக்கமாட்டார்கள். அரசின் தலையீடு நேர்மையானதா? பயனுள்ளதா? நிலைமைக்குத் தக்கவாறு அமைந்துள்ளதா? என்பவை தனியே ஆராயப்படவேண்டியவை.

1. குறிப்பு (Memorandum), பாரா 38.
2. மறுப்புக் குறிப்பு, பாராக்கள் 37-9.

# 21. பாங்கு முறையும் கடன்நிலையும்

**1. இந்தியப் பாங்கு முறை:** (i) நாட்டுப் பாங்கு வணிகர்களான பம்பாயில் உள்ள ஷராப்புகள், மார்வாடிகள், சென்னையிலுள்ள செட்டிமார், பஞ்சாபிலும் உத்தரப்பிரதேசத்திலுமுள்ள கௌகார்கள், மகாஜன்கள், கத்திரிகள், வங்காளத்திலுள்ள பனியாக்கள், சேத்துகள் ஆகியோர் இந்தியாவிலுள்ள பாங்குகளின் முக்கிய உறுப்பினர்கள் ஆவர் (ii) கூட்டுறவுக் கடன் உதவிச் சங்கங்கள் (iii) நில அடைமானப் பாங்குகள் (iv)[1] இம்பீரியல் பாங்கு உள்பட கூட்டுப் பங்கு பாங்குகள் (v) அயல் நாட்டுச் செலாவணிப் பாங்குகள் (vi) சேமிப்பு நிதியுள்ள தபால் ஆபீஸ், ரிசர்வு பாங்கு, இந்தியாவின் பாங்க் முறையைத் தன் கட்டுப்பாட்டில் வைப்பதோடு கடன் முறையையும் ஒழுங்கான முறையில் திட்டப்படுத்துகிறது. நாட்டின் சேமிப்பு முறையை வலுப்படுத்தவும், அதைப் பாதுகாக்கவும் இன்ஷ்யூரன்ஸ் கம்பெனிகளும், பங்கு உலோகச் சந்தையினரும் உள்ளனர்.

**2. நாட்டுப் பாங்கு வணிகர்கள் :** இம்பீரியல் பாங்கு, அந்நிய நாட்டுச் செலாவணிப் பாங்குகள், கூட்டுப்பங்குப் பாங்குகள், கூட்டுறவுக் கடனுதவிச் சங்கங்கள் நீங்க, ஏனைய வகைகளை நாட்டுப் பாங்கு வணிகர் எனலாம். இப் பெயரின்கீழ்க் கூறப்படுபவர் தனி நபராகவோ, கூட்டு நிறுவனமாகவோ இருந்து வைப்புகளைப் பெற்றுக்கொண்டும், கடன் கொடுத்தும், உண்டியல் காகிதங்களை வழங்கியும் பணியாற்றுகின்றனர். வைப்புகளை ஏற்றுக்கொள்ளாமல் கடன் உதவிமட்டும் அளிக்கும் ஒரு சாரினர் உள்ளனர். நாட்டுப்புறக் கடன்கொடுப்போர்கள், கடன் உதவி புரியும் நிறுவனமாகப் பணியாற்றி வருகின்றனர். இவர்கள் வைப்புகளை ஏற்றுக்கொள்ளுவதில்லை. கடன் கொடுப்போருக்கும் நாட்டுப்பாங்கு வணிகருக்கும் வேறுபாடுகள் உள. நாட்டுப்

1. கூட்டுறவுக் கடன் சங்கத்தைப் பற்றியும், நில அடைமானப் பாங்குகளைப் பற்றியும் 11வது அதிகாரத்தில் விளக்கப்பட்டுள்ளது.

பாங்கு வணிகர் பாங்குத்தொழில் செய்கிறார். கடன்கொடுப்பவரோ கடனுதவி மட்டிலும் செய்கிறார். நாட்டுப் பாங்கு வணிகர், வர்த்தகம், தொழில், இவைகளுக்குத் தேவையான நிதியை அளித்து உதவுகிறார். ஆயினும், நுகர்வுக்கான வசதியை இவர் செய்வதில்லை. கடன் கொடுப்பவரோ அவ்வாறு எத் துறையும் ஒதுக்குதலின்றி எப்போதும் தக்க ஈடு இன்றிக் கடன் கொடுக்கிறார். இதனால் இவரது வட்டிவிகிதம் வெகு அதிகமாக உள்ளது எனலாம்.[1]

நாடு முழுமையும், குறிப்பாகப் பட்டணங்களிலும், நகரங்களிலும் கிராமங்களிலும் நாட்டுப் பாங்கு வணிகனைக் காணலாம். கிராமப் பெரியதனக்காரன் முதல், இந்தியாவிலும் உலகின் இதர பகுதிகளிலும் கிளைகள் அமைத்துத் தழைத்தோங்கும் குடும்பக் கூட்டுமுறைப் பணம் பெற்ற பாங்கர்களையும் காணலாம். இது சென்னையில் உள்ள செட்டியார் வகுப்பினரின் ஒரு சமூகப் பொறுப்புபோல் அமைந்துள்ளது.[2] கூட்டுப் பங்கு முறையில் நாட்டுப் பாங்கு முறை அமைக்கப்படவில்லை. இவர்களுக்குப் பங்கு மூலதனம் கிடையாது. பொறுப்போ தனிநபர் தலையில் விழலாம் அல்லது கூட்டுவர்த்தக முறையானால் கூட்டாகப் பொறுப்பு அமைகிறது. பொறுப்பு எல்லையற்றது. நாட்டுப் பாங்கு நடத்துபவர் குடியானவருக்கு முன்பணம் தருகிறார்; சிறிய கைவினைஞருக்குப் பணஉதவி செய்கிறார்; சிறு வியாபாரத்தில் உதவுகிறார்; உள்நாட்டு விளைச்சலை நுகர்வு செய்யவும் பிற பகுதிகளுக்கு அனுப்பவும், குறிப்பாகத் துறைமுகங்களுக்கு அனுப்பவும் உதவிபுரிகிறார்; நபர் ஜாமீன் பேரிலும், பொன் ஈட்டிலும், விற்பனைக்குரிய பண்டங்களின் ஈட்டிலும் கடனுதவி செய்கிறார்; பொருளும் பண்டங்களும் வழங்குவதில் ஈடுபட்டு, நடுவராக இருக்கிறார். அரசினர் கருவூல உண்டியலை வாங்கி, தேவையேற்பட்ட போது அதைத் தள்ளுபடி விலைக்கு வர்த்தகப் பாங்குகளில் எடுக்கிறார். அவருக்குக் கிடைக்கும் வைப்புகளுக்கு இதர பாங்குகளைவிடக் கூடுதல்[3] வட்டி கொடுக்கக்கூடும். தம் வாடிக்கைக்காரர்களைப்பற்றி நன்கு தெரிந்தவராதலால் கடன் ஜாமீன் விஷயத்தில் பாங்குகளைப் போல் மிகவும் கருராகவும், கண்டிப்பாகவும் இருப்பதில்லை.

1. மத்திய பாங்கு விசாரணைக் குழு அறிக்கை, பாரா 107.

2. எம். எஸ். எம். குப்பே அவர்களின் (M. S. M. Gubbay) இண்டிஜனஸ் பாங்கிங் இன் இண்டியா (Indigenous Banking in India) பக்கம் 11-12.

3. பிண்லேஷிர்ராஸின் இண்டியன் பைனான்ஸ் அண்ட் பாங்கிங்கைப் பார்க்க. பக்கம் 241. (Findlay Shirras, Indian Finance and Banking).

கடன்வசதியிலும் பணவசதி உண்டியலிலும் அதிகச் சுற்றுவழிப்பு முறைகளைக் கையாள்வதில்லை.

இந்தியப் பணச்சந்தைக்கும் வர்த்தகம் செய்யும் பெரும் பகுதியினருக்கும் இடையே உள்ள பெருந்தொடர்பு போன்று, இந்திய நிதி முறையில் ஷராப்பு அல்லது கடன்கொடுப்போர் பணியாற்றுகிறார். ஸர் ஜார்ஜ் ஷுஸ்டர் 1933-ல் ரிசர்வு பாங்கு மசோதாவைக் குறித்து, லெஜிஸ்லேடிவ் அசெம்பிளியில் பேசுகையில், 'இந்தியக் கடன் நிலையில் நாட்டுப் பாங்கர்கள் எடுத்த பகுதியை மிகைப்படுத்திக் கூறுவது சரியில்லை. ஆயினும், அவர்கள் 90 சதவீதமோ அல்லது 90 சதவீதத்துக்கு அதிகமாகவோ தொடர்பு கொண்டுள்ளனர்' என்று கூறினார்.

மூலதனத்தை ஒன்றுசேர்க்கவும், கடன்முறை நிறுவனங்களைக் கட்டுப்படுத்தவும் நாட்டுப் பாங்கர்களையும் கூட்டுப் பங்கு முறைகளையும் பணச் சந்தையுடன் இணைக்க வேண்டும் என்று பொதுவான அபிப்பிராயம் நிலவி வருகிறது. கடன் துறையையும் நாணயச் செலாவணியையும் மேற்கூறிய முறையில்தான் கட்டுப்படுத்த இயலும். இது சம்பந்தமாக மத்தியப் பாங்கு விசாரணைக் குழு, அநேக பரிந்துரைகளைச் செய்துள்ளது. அவைகளாவன : நாட்டுப் பாங்கர்களை ரிசர்வ் பாங்குடன் நேரடித் தொடர்பு கொள்ளச் செய்வது, ரிசர்வ் பாங்கின் அனுமதிப் பட்டியலில் அவர்களுடைய பெயரைச் சேர்த்து விடுவது, அவ்வாறு சேர்க்க அவர்கள் பாங்குத் தொழிலை இதர வர்த்தகத்துடன் இணைக்காமற் செய்யவேண்டும் என்றும், அவர்களுடைய சொந்த மூலதனம் எவ்வளவு என்றும் (அது கூட்டுப்பங்குப் பாங்கின் மூலதனத்தை விடக் குறைவாகவே வைக்கப்பட்டது.) ஆண்டுதோறும் அவர்களுடைய கணக்குப் புத்தகங்களை அனுமதி பெற்ற தணிக்கையாளர்மூலம் தணிக்கை செய்யவேண்டும் என்றும், ரிசர்வ் பாங்கின் ஆய்வுக்கும் பரிசீலனைக்கும் கணக்குப் புத்தகங்கள் காண்பிக்கப் படவேண்டும் என்றும் கூறியுள்ளது. இவ்வாறு தனிச் சலுகை பெற்ற நாட்டுப் பாங்கர்களுக்கு, அவர்களுடைய உண்டியல்களை மறுமுறை தள்ளுபடி பெற்றுப் பணம் வாங்க வசதி கொடுத்தும், இதர பாங்குகளுக்குப் பணம் அனுப்ப உள்ள அதே வட்டி விகிதத்தில் நாட்டுப் பாங்கர்கள் பணம் அனுப்ப வசதிசெய்தும் பாங்குப் புத்தகச் சாட்சிச் சட்டத்தின் (Bankers' Books Evidence Act) கீழ் நாட்டுப் பாங்குகளுக்கு வசதி ஏற்படுத்தவும் கூறியுள்ளது.

1937-ல் இந்திய ரிசர்வ் பாங்கு ஒரு திட்டத்தை உருவாக்கிக் கீழ்க்கண்டவாறு வகுத்தது : (1) ரிசர்வ் பாங்குடன் பெயரைப்

பதிவு செய்துகொள்ள விழையும் ஒவ்வொரு பாங்கும் ரூ. 2 லட்சத்துக்குக் குறையாமல் மூலதனம் பெற்றிருக்கவேண்டும். (2) வெகு விரைவில் அவர்கள் தங்கள் பாங்கு அல்லாத இதர வியாபாரத்தை மூடி விடவேண்டும். (3) அவர்கள் தங்கள் பாங்கு வியாபார முறையை ஒழுங்கு பெறச் சட்டத்துக்குட்பட்டுக் கூட்டுப் பங்குப் பாங்குகள் போன்று வைப்புகள் முறையைப் பலப்படுத்த முயலவேண்டும். (4) பதிவு பெற்ற தணிக்கையாளர்களால் அவருடைய கணக்குப் புத்தகங்கள் தணிக்கை செய்யப்பட வேண்டும். அவர்கள் தங்களின் வைப்பாளர்களின் நன்மையைக் கோரி, ஆண்டுக்கான ஐந்தொகையை வெளியிட்டு ரிசர்வ் பாங்கிற்கும் ஒரு நகல் தாக்கல் செய்யவேண்டும். இதர மாதாந்தர ஆண்டு அறிக்கைகளையும் தாக்கல் செய்ய வேண்டும். நாட்டுப் பாங்கர், இவ் வழிக்கு ஒத்துப்போக மறுத்து, ரிசர்வ் பாங்குத் திட்டத்தை மாற்றி, இதர வியாபாரத்துடன் பாங்குத் தொழில் நடத்த அனுமதி கோரினர்.

1941-ல் பம்பாய் ஷராப்புகள் சங்கத்துடன் இப் பிரச்சினையை ரிசர்வ் பாங்கு வாதித்தது. ஆயினும், எவ்விதமான முடிவும் காண இயலவில்லை. நாட்டுப் பாங்கர்களோ தங்கள் இதர வர்த்தகத்தைவிடத் தயாராக இல்லை. மேலும், ரிசர்வ் பாங்கில், தனி அட்டவணையின்கீழ் அமைப்பைக் கோரினர். எவ்வளவு கால வரையறையில் இதர வர்த்தகத்தை நிறுத்துவது என்ற தகராறில் தீர்வு காணவில்லை. நாட்டுப் பாங்கர்கள் தங்கள் இதர வர்த்தகத் தொழிலை மூட 5 ஆண்டுகள் கால எல்லைவேண்டும் என்று கேட்டனர். தற்காலிகமாகக் கூட, பாங்குத் தொழிலும், இதர வர்த்தகமும் இணைந்திருக்கக் கூடாதென்ற கொள்கையுடைய ரிசர்வ் பாங்கு, இதற்குச் சம்மதிக்கவில்லை. ஆக, தொன்மையான திட்டத்தை நவீன பாங்குகளுடன் இணைப்பதென்பது தீர்வு காணுத பிரச்சினையாகி விட்டதெனலாம். இன்று நம் நாட்டின் பொருளாதாரத் துறையில் பெரும் பகுதிக் கடன்முறை, நாட்டுப் பாங்கர்களால்தான் நடத்தப்பட்டு வருகிறது. அவர்களுடைய முறையில் தவறுகள் இருந்தபோதிலும், அவர்கள் பொருளாதாரத் துறையில் பெரும்பணி புரிகிருர்கள். சாதுரியத்துடனும், எச்சரிக்கையுடனும் அவர்களை ரிசர்வ் பாங்கு முறையின் கீழ்க்கொண்டுவர முயலவேண்டும். புதுமுறைகளை அவர்கள்மீது புகுத்துவதால் அவர்கள் செய்யும் பாங்குத் தொழிலில் சிதைவு ஏற்படலாம்; அல்லது பலர் இத் தொழிலுக்கு முற்றுப்புள்ளி வைத்து வெளியேறக்கூடும். ஆதலால் அவ்வாறு நிகழாவண்ணம் இவர்களைச் சமாளிப்பது இன்றியமையாதது.

**3. கூட்டுப் பங்குப் பாங்குகள் :** இந்தியாவில், பாங்குக் கம்பெனி[1] எனப்படுவது, தனது பிரதானத் தொழிலாக நடப்பு வைப்பின்கீழ்ப் பொதுமக்களிடமிருந்து வைப்புகளைப் பெறுகின்ற ஒரு கம்பெனியாகும். மேற்படி வைப்புகளைச் செக், டிராப்ட் அல்லது உத்தரவு மூலம் திரும்பப் பெறலாம். மேலும், பணம் கடன் கொடுத்தலும், பங்குகள் வாங்கி விற்பனை செய்தலும், கடன் பத்திரங்களும் முதலீட்டுப் பத்திரங்களும் வாங்கி விற்பனை செய்தலும் இதன் மற்ற பணிகளாகும். இது பொறுப்பாளராக இருந்து பதிலாள் வேலை செய்யவும் முடிகிறது. பாங்கு வியாபாரம் செய்யும் எந்தக் கம்பெனியும், பாங்கு, பாங்கர் அல்லது பாங்கிங் என்ற பெயருடன் திகழ வேண்டும். கூட்டுப்பங்குப் பாங்கின் வளர்ச்சியைப் பற்றிய விவரத்தை 8 ஆம் எண்ணுள்ள பாராவில் காண்க.

**4. இம்பீரியல் பாங்க் ஆப் இந்தியா :** இதர கூட்டுப் பங்குப் பாங்குகளைக் காட்டிலும் இம்பீரியல் பாங்கு தனி இடம் பெற்றுள்ளது. அது அரசின் வரவு செலவினங்களைக் கண்காணிக்கிறது. எங்கெங்கு ரிசர்வ் பாங்கின் கிளைகள் திறக்கப்படவில்லையோ, அங்கெல்லாம் ரிசர்வ் பாங்கின் பதிலாள் போன்று இது வேலை செய்கிறது.[2]

1921-ல் மாகாணப் பாங்குகளான சென்னை, வங்காள, பம்பாய்ப் பாங்குகள் ஒன்றாக இணைக்கப்பட்டு இம்பீரியல் பாங்கு அமைக்கப்பட்டது. வங்காள மாகாணப் பாங்கு 1806-ல் ரூ. 50 இலட்ச மூலதனத்துடன் தொடங்கியது. 1843-ல் ரூ. 30 இலட்ச மூலதனத்துடன் சென்னை மாகாணப் பாங்கு துவக்கப்பட்டது. வங்காள பாங்கு மூலதனத்தில் ரூ. 10 இலட்சம் கிழக்கிந்தியக் கம்பெனி கொடுத்தது. சென்னை மாகாணப் பாங்கு மூலதனத்தில் ரூ. 3 இலட்சம் கிழக்கிந்தியக் கம்பெனி கொடுத்தது. 1868-ல் இரண்டாவது மாகாணப் பாங்காக 1 கோடி மூலதனத்துடன் பம்பாய்ப் பாங்கு[3] திறக்கப்பட்டது. கம்பெனியின் அரசு சில நெறியாளர்களை நியமித்தது. 1857-க்கு முன்னரே செயலாளர், பொருளாளர் பதவிகள், கிழக்கிந்தியக் கம்பெனி அதிகாரிகளிடையே இருந்து வந்தன. இவர்களுக்குச் செலாவணித்தாள் வெளியிட அதிகாரம் கொடுக்கப்பட்டது. ஆயினும், அநேக

1. பாங்குக் கம்பெனி, பாங்கு இரண்டும் ஒரே பொருள் உடையவை.

2. 1955-ல் இம்பீரியல் பாங்கு தேசியமயமாக்கப்பட்டு, 1956-லிருந்து இராச்சியப் பாங்கு என வழங்கிவருகிறது.

3. 1840-ல் முதல் மாகாணப் பாங்கு திறக்கப்பட்டது. ஆயினும், வாணிக வர்த்தகத்தின் விளைவால் 1868-ல் திவாலாகியது.

கட்டுப்பாடுகள் இடப்பட்டதால் இச் சட்டம் பலனற்றிருந்தது. இம் மூன்று மாகாணப் பாங்குகளும், 1876-ல் அமலில் வந்த மாகாண பாங்குகள் சட்டப்படி நடத்தப்பட்டன. அவைகளுடைய பாங்குத் தொழிலில் வைப்புகள் பெறுதலும், உண்டியல்களில் தள்ளுபடி செய்தலும் முக்கியமானவை. அவை அரசினர்களுடைய பாங்காக இருந்தன. அவை அயல்நாட்டுச் செலாவணியை நடத்த அனுமதிக்கப்படவில்லை. ஆயினும் சென்னைப் பாங்கு இலங்கையுடன் அந்நியச் செலாவணியை நடத்த அனுமதிக்கப்பட்டது. அயல் நாடுகளிலிருந்து பணம் வாங்கவும் அனுமதிக்கப்படவில்லை. எவ்வளவு ஈட்டின்பேரில் கடன் கொடுக்கலாமென்றும், காலவரையறை எவ்வளவு என்பதும் அரசினரால் வரையறுக்கப்பட்டது. இவ்வளவு கட்டுப்பாடுகளுக்கு இடையில் பாங்கு மேன்மையான முறையில் வியாபாரத்தில் தழைத்தோங்கியது.

முதல் உலகப் போருக்கு முன்னரே இந் நாட்டிற்கு மத்தியப் பாங்கு அவசியம் எனக் கருதப்பட்டது. இதனால் கடன் முறையையும் செலாவணி வசதியையும் பலப்படுத்த இயலும் என்று முடிவாக்கப்பட்டது. 1920-ல் ப்ரஸல்ஸில் (Brussels) நடந்த உலக நிதி மாநாட்டில் எந்தெந்த நாடுகளில் மத்திய பாங்கு திறக்கப்படவேண்டும் எனத் தீர்மானிக்கப்பட்டது. இந்த அடிப்படையில்தான் மூன்று மாகாண பாங்குகளையும் ஒன்றாக இணைத்து இம்பீரியல் பாங்கு உருவாகியது.

1955-ல் தேசீய மயமாக்கப்படுமுன்னர் இம்பீரியல் பாங்கு தனியார் பாங்காக இருந்து வந்தது. இதை நெறியாளர் குழு கண்காணித்து வந்தது. அவர்களிலும் இருவர் அரசினரால் நியமனம் செய்யப்பட்டனர். 1934 ஆம் ஆண்டின் இம்பீரியல் பாங்கு அரசின் வரவு செலவினை ஓரளவு கவனித்து வந்தது. அரசினரின் வைப்புகளை ஏற்றுக்கொண்டு, அரசுக்காகப் பணம் கொடுத்து வந்தது. தனியார் துறையில் ஆறுமாத காலத் தவணைக்கு மேலாகக் கடன் கொடுக்கக்கூடாது என உத்தரவு பிறப்பிக்கப்பட்டது. அசையாச் சொத்தின்பேரில் கடன்கொடுக்க அனுமதிக்கப்படவில்லை. நபர் ஜாமீன்பேரிலும், தங்களுடைய பங்கின் ஈட்டிலும், கடன் கொடுப்பது தடைசெய்யப்பட்டது. வாடிக்கைக்காரர்களின் தேவைக்கேற்ப அந்நியச் செலாவணி வாங்கி விற்க அனுமதிக்கப்பட்டது.

1934-ல் ரிசர்வ் பாங்கு உருவானதும், இம்பீரியல் பாங்கின் அமைப்பில் மாறுதல் செய்யப்பட்டது. 1934ஆம் ஆண்டு இம்பீரியல் பாங்குத் திருத்தச் சட்டத்தினால் இது கொண்டுவரப்

பட்டது. 1920-ல் போடப்பட்ட கட்டுப்பாடுகளை நீக்கி, 1934 முதல் அந்நியச் செலாவணி வர்த்தகமும் இதர நாடுகளிலிருந்து வைப்புகள் பெறவும் அனுமதி கொடுக்கப்பட்டது. பருவக் கடன் வசதி ஆறு மாதங்களிலிருந்து 9 மாதங்களாக மாற்றியமைக்கப் பட்டது. அசையாப் பொருள் ஈட்டிலும் கடன்கொடுக்க அனுமதிக்கப்பட்டது. மேலும், எந்த இடத்திலும் கிளைகளைத் திறக்க அனுமதி வழங்கப்பட்டது.

ரிசர்வ் பாங்குடன் செய்துகொண்ட ஒப்பந்தப்படி அதன் செயலாற்றும் தனிப் பதிலாளாக 15 ஆண்டுகள் அமைக்கப்பட்டது. அதன் பின்னர், காலவரையறையின்றித் தொடர்ந்து அமைக்கப் பட்டது. வேண்டாம் என முடிவு செய்ய 5 ஆண்டு அறிவிப்புக் கொடுக்க வேண்டுமென முடிவு செய்யப்பட்டது. அரசினர் கணக்கின் பேரில் வரவு செலவுக்காக இம்பீரியல் பாங்கிற்குக் கமிஷன் தொகை ரிசர்வ் பாங்கு கொடுக்கவேண்டும் என முடிவாக் கப்பட்டது. 1935-40-ல் ஆண்டுதோறும் ரூ. 9 லட்சம் வீதம் மாறுக் கமிஷனை ரிசர்வ் பாங்கிடமிருந்து பெற்றது. 1940-45-ல் 6 லட்சம் வீதமும், 1945-50-ல் 4 லட்சம் வீதமும், ஆண்டுதோறும் கமிஷன் விற்றது. இம்மாதிரி இம்பீரியல் பாங்கின் உயரிய காரணத்தால் இதைப்பற்றி அநேக குறைபாடுகள் எடுத்துக் கூறப்பட்டன. அரசின் வரவு செலவு முறைகளை மேற் கொண்டதால் இது அளவில் பெரியதாகி இதர, பாங்கு வளர்ச்சிக்கு இடையூறாக இருந்தும் பொதுமக்களின் நலனைக் கவனிப்பதில்லை என்றும், ரிசர்வ் பாங்கியின் பணம், கருவூலம் இவற்றினை இது நடத்தி வருவதால் நாட்டில் நேர்மையான பாங்கு நடக்காது என்றும் கூறப்பட்டது. இதன் கிளைகளில் மிகவும் குறைவான தொகைகளை வைத்துக்கொண்டு தொழில் செய்கிறது என்றும் கூறப்பட்டது. கிராமியப் பாங்கு விசாரணைக் குழு இதை ஆய்ந்து கீழ்க்கண்ட யோசனைகளைக் கூறினர்: (1) வருங்காலத்தில் பாங்கு கருவூல அமைப்பில் இம்பீரியல் பாங்கு தொழில் புரியவேண்டு மானால், அது ரிசர்வ் பாங்கின் உதவி நிறுவனம் போன்று பணியாற்றி வரவேண்டும். (2) 1920-ல் இம்பீரியல் பாங்குச் சட்டத்தில் உள்ள, சட்டக் கட்டுப்பாட்டை 1934-ல் அரசு விட்டுக் கொடுத்துவிட்டது. மறுபடியும் அந்தச் சட்டங்கள் அமலுக்குக் கொண்டுவரப்பட்டு, இதன் தலைவர், உபதலைவர் ஆகியோரை நியமனம் செய்ய அரசினரின் அனுமதி கோரும்படிச் செய்ய வேண்டும். அவர் அரசின் முறையை ஏற்காமல் ஒழுங்கீனமாக நடப்பின், அரசினர் அவரைப் பதவியினின்று நீக்க அதிகாரம் உண்டு. மத்தியக் குழுவில் அரசினரின் உறுப்பினர் கூடுதலாக (ர்து; அதன் கொள்கைக்கு ஏற்ப நடத்தவேண்டும். ஆயினும்

பாங்கின் தினப்படிச் செலவில் அரசினர் தலையிடக் கூடாது. (3) வர்த்தகப் பாங்குகளின் தொகை மாற்றத்தைச் செலவின்றிச் செய்து தரவேண்டும். இந்தியத் தேசீயச் செலாவணியை வைத்திருப்பதால் அதன் வாயிலாக வர்த்தகப் போட்டி மூலம் தன் வன்மையான நிலையைப் பயன்படுத்தி, அமிதலாபம் சம்பாதிக்கக் கூடாது. (4) வட்டாரப் பகுதிகளில் தேவையைக் கண்காணிக்க அவர்களுக்குப் போர்டில் இடம் தருதல் வேண்டும். மத்திய போர்டிலும், அவர்களுடைய பிரதிநிதிகள் வரவேண்டும். வட்டார அலுவலகங்களும் திறக்கப்படவேண்டும். கிளைகளை அதிகமாகத் திறக்க முயலவேண்டும்.

ஜூலை 1955 வரையில் இம்பீரியல் பாங்கு பணி புரிந்தது. பின்னர் இராச்சியப் பாங்காக மாறியது.

**5. இந்திய அரசாங்கப் பாங்கு** : அகில இந்தியக் கிராமக் கடன் சர்வே அறிக்கை, எல்லாப் பாங்கிங் அலுவல்களும் இணைக்கப் பெற்ற இராச்சியக் கூட்டுப் பங்குள்ள அரசாங்கப் பாங்கு ஒன்று நிறுவப்படவேண்டுமென்று பரிந்துரைத்தது. அதன்படி, நாடு முழுமையும் கிளைகளைத் திறந்தும், நீட்சியுள்ள பண அனுப்பு வசதியைக் கூட்டுறவு மற்றும் இதர பாங்குகளுக்குக் கொடுத்தும், செம்மையான முறைகளில் பாங்கு வர்த்தகத்தைத் தொடர்ந்து நடத்தி வரவேண்டி மத்திய அரசினர் மேற்படிப் பரிந்துரையை ஏற்றுக்கொண்டு, அரசாங்கப் பாங்குச் சட்டமொன்றைக் கொணர்ந்து இம்பீரியல் பாங்கிற்குப் பதிலாக இதை நிறுவினர். அதற்கேற்ப இம்பீரியல் பாங்கின் மூலதனமாக இருந்த ரூ. 5,625 கோடியை ரிசர்வ் பாங்குக் கணக்கிற்கு மாற்றினர். பழைய இம்பீரியல் பாங்கின் பங்குதாரர்களில் முழுப் பங்குடையவர்கள் தங்கள் பங்கு ஒன்றை ரூ. 1,765-10-0 வீதம் விற்கவும், பகுதியான பங்கு உடைமையை ரூ. 431-12-4 வீதம் விற்கவும், அல்லது புதிய அரசாங்கப் பாங்கின் பங்குக்கு மாற்றிக்கொள்ளவும் அனுமதிக்கப் பட்டனர். அரசாங்கப் பாங்கின் மூலதனம் ரூ. 20 கோடியாக இருக்கும். அதில் 45% பழைய இம்பீரியல் பாங்கின் பங்குதாரர் களுக்கும் இதர முதலீடு செய்பவர்களுக்கும் பங்காக வழங்குவதென முடிவு செய்யப்பட்டது. இராச்சியப் பாங்கின் நிர்வாகம், ஒரு தனி மத்திய போர்டிடம் ஒப்படைக்கப்படும். பங்குதாரர்களால் தேர்ந் தெடுக்கப்பட்ட தலைவர், ஒரு துணைத் தலைவர், இரு நிர்வாக நெறியாளர்கள், ஆறு நெறியாளர்கள் ஆகியோரும் மற்றும் ரிசர்வ் பாங்கின் பரிந்துரையின் பேரில் மத்திய அரசினரால் எட்டு நெறியாளர்களும் நியமனம் செய்யப்பட வேண்டும். இவ் வெட்டு நெறியாளர்களில் இருவர் கூட்டுறவு இயக்கத்தையும் கிராமப்

பொருளாதாரத்தையும் பற்றிய விவரங்களை அறிந்தவர்களாக இருக்கவேண்டும். இவர்களில் ஒருவரை மத்திய அரசினரும் மற்ருெருவரை ரிசர்வ் பாங்கும் நியமனம் செய்தல் வேண்டும்.

இப்போது வர்த்தகத் துறையில் பெரிதும் ஈடுபட்டுள்ள இந்தப் பாங்கு மத்திய அரசினரின் உத்தரவை அனுசரித்துக் கொள்கைகளைப் பொது நன்மைக்கேற்ப அமைத்துக் கொள்ளுதல் இன்றியமையாதது.

இன்னும் 5 ஆண்டுகளுக்குள்ளாக மத்திய அரசினர் அனுமதித்த விடங்களில் 400 புதிய கிளைகளைத் திறக்கவேண்டும். இம் முறையில்தான், கிராமக் கடன் வசதியை நிலை நாட்டக்கூடும். ஆதாயமற்ற கிளைகளால் ஏற்படும் நஷ்டத்தை ஈடுகட்ட ரிசர்வ் பாங்கில் 'இணைப்புக்கும் வளர்ச்சிக்குமான நிதி' என்று ஒன்று அமைக்கப்பட்டுள்ளது. இந் நிதி ரிசர்வ் பாங்கு வைத்திருக்கும் 55 சதவீதப் பங்குகளுக்குக் கிடைக்கும் லாப ஈவும், மற்றும் அரசினர் தரும் இதர தொகைகளும் சேர்ந்தது.

கிராம நிதிமுறையைத் தவிர, இதர முறைகளில் இது பழைய இம்பீரியல் பாங்கு செய்துவந்த அதே முறையில் வியாபாரம் செய்யலாம். இதர பாங்கு நிறுவனங்களில், பங்குகளை எடுத்துக் கொண்டு அவற்றைக் கிளை நிறுவனங்களாக அமைத்துக் கொள்ள லாம். இந்த ஷரத்து, தனியாக இச் சட்டத்தில் சேர்க்கப் பட்டது. தனி இராச்சியங்களிலிருந்த பாங்குகள், இணைப்புப் பெற்றவுடன் தனியே வர்த்தகம் செய்ய இயலாத நிலையிலிருந் தவை, ரிசர்வ் பாங்கின் முழு உரிமை பெற்ற பதிலாட்களாகத் தம் கிளைகளில் ரிசர்வ் பாங்கின் செயல்களைப் புரிகின்றன. மேலும், ரிசர்வ் பாங்கிற்குக் கிளைகள் இல்லாத பகுதிகளில் இவை ரிசர்வ் பாங்கிற்குப் பதிலாகப் பணிபுரிகின்றன.

இந்திய அரசாங்கப் பாங்கின் திருத்த அவசரச் சட்டம் 1955-ல் அமலானவுடன் இப் புதுப் பாங்கின் தோற்றம் ஏற் பட்டது. இந்த அவசரச் சட்டத்தின்படி, இம்பீரியல் பாங்கு ஜூன் 30 ஆம் தேதிவரை நீடித்து, அயல்நாட்டு ஆஸ்திப் பொறுப்பினை அரசாங்கப் பாங்கிற்கு மாற்றும் வரை உதவி புரிந்தது.

**6. பாங்குக் கம்பெனிகள் சட்டம், 1949 :** கடந்த பல ஆண்டுகளாகப் பாங்குகளில் வைப்புகள் இடுபவர்களின் பணத் தைப் பாதுகாக்கப் போதிய சட்டங்கள் இயற்றப்படவேண்டு

மென்று சர்ச்சை செய்துவந்தார்கள். அதன் அடிப்படையாகத் தோன்றியதே 1949 ஆம் ஆண்டுப் பாங்குக் கம்பெனிகள் சட்டம். இதன் முக்கியப் பிரிவுகளாவன : (1) ஒவ்வொரு பாங்குக் கம்பெனியும் தன் தேவை வைப்புகளும், காலவைப்புகளுமாக அதில் 75 சதவீதம் இந்தியாவில் சொத்துருவில் வைத்திருக்க வேண்டும். (இப் பிரிவு திருவாங்கூர் தேசீயக் கொல்லத்துப் பாங்கு 1938-ல் திடீரென முறிந்துபோனதன் விளைவாக ஏற் பட்டது. தனது வைப்பாளர்களின் தொகையின் பெரும் பகுதியை இந்தியாவின் எல்லைக்கு அப்பால் சொத்துருவில் வைத்திருந்தது.) (2) நாட்டின் மத்திய பாங்கு (ரிசர்வ் பாங்கு) எல்லா பாங்குக் கம்பெனிகளையும் தணிக்கை செய்ய வேண்டியது இன்றியமையாதது. (3) இச் சட்டத்தில் 21-வது பிரிவின்படிப் பொது நலத்திற்கேற்ப அவ்வப்பொழுது பொதுவாக முன்பணம் கொடுக்கும் தன்மையையும், குறிப்பாக ஒருசில பாங்குகள் இது சம்பந்தமாகச் செய்யும் முறைகளை ரிசர்வ் பாங்கு கண்டிக்கவும், புதிய கொள்கைகளை அமைத்து அதன்படி நடக்க வேண்டுமெனப் பாங்குகளுக்கு உத்தரவு இடுவதற்கும் அதிகாரம் கொடுக்கப் பட்டிருக்கிறது. (4) எந்தப் பாங்குக் கம்பெனியும் கீழ்க்கண்ட வகைகளில் கடன்கள் கொடுக்க அனுமதிக்கப்படவில்லை. அவை களாவன: (அ) தங்களுடைய பங்குகளின் ஈட்டில் கடன் கொடுப் பது அனுமதிக்கப்படவில்லை. தங்கள் கம்பெனி நெறியாளர்கள், இதர கம்பெனிகளில் நெறியாளராகவோ, கூட்டுதாரர்களாகவோ, மற்றும் உரிமையாளர்களாகவோ, அந்த நிறுவனங்களுக்கு முன்பணமாகவோ அல்லது கடனாகவோ, அந்த நெறியாளரின் தனி நபர் ஜாமீனில் கடன் கொடுக்க அனுமதியில்லை. (5) அயல் நாடுகளில் இணைக்கப்பெற்ற பாங்குக் கம்பெனிகள் இந் நாட்டில் இருப்பின், இச் சட்டத்தின் 11ஆவது பிரிவின்படி அந்த நிறுவனத் திற்குத் தேவையான மூலதனத்தை ரிசர்வ் பாங்கில் ரொக்க மாகவோ முதலீட்டுப் பத்திரங்களாகவோ, அல்லது இவ் விரண்டும் கலந்ததாகவோ இட்டு வைக்கவேண்டும். மேற்படி முதலீட்டுப் பத்திரங்களை எக் காரணத்தினாலும் கடன் ஈடாக வைக்க அனுமதி யில்லை.

7. **ரொக்க ரிசர்வும், முதலீடுகளும் :** போதிய ரொக்க ரிசர்வ் வைக்கப்பட வேண்டியதன் முக்கியத்தை நாம் நன்கு அறிவோம். 1913-14-ல் எண்ணிறந்த பாங்குகள் இந்தியாவில் முறிவடைந்த காரணம், போதிய ரொக்க ரிசர்வ் இன்மையே எனலாம். எவ்வளவு ரொக்க ரிசர்வ் தேவைப்படும் என்பதை அநுபவத்தின் பேரில் தான் கூற இயலும். 1951-ல் ரிசர்வ் பாங்கில் இருந்த ரொக்க ரிசர்வும் கால, நடப்பு, வைப்புகளும் 10·7 சதவீதம் இருந்தன.

இந்தச் சதவீதம் 1952-ல் 9·5% ஆக இருந்தது. 1953-ல் 9·1% ஆக இருந்தது. இக் குறைவின் காரணத்தை விளக்கப் புகின், மத்திய பாங்கிலிருந்து, பாங்குக் கம்பெனிகள் கடன் வாங்கும் வசதியைப் பொறுத்தமைந்திருந்தது எனலாம். அட்டவணைப் படுத்தப்படாப் பாங்குக் கம்பெனிகளில் ரொக்க ரிசர்வ் 7 முதல் 8 சதவீதமாக இருந்தது. பணப்புழக்கம் குறைந்த காலத்தில், பாங்குகள் தங்களுக்குத் தேவைப்படும் ரொக்கத்தைப் பெற மற்ருெரு வசதி அழைப்புப் பணம் குறுகிய கால அறிவிப்பின் பேரில் கிடைப்பது. இது சில நாட்களில் திருப்பிக் கொடுக்கப் படும். உண்டியல் தரகர், பணச்சந்தையினர், பங்கு வியாபாரிகள் உண்டியல், தரகு அகங்கள் இவர்கள்தான் இதில் அதிகம் ஈடுபட்டிருப்பார்கள். அழைப்புக் கடன்களும் குறுகிய காலக் கடன்களும் ரொக்கக் கையில் உள்ளதற்கு ஈடுபோன்றது. இவைகளின் மூலம் வட்டி கிடைக்குமாயின், கையிருப்பு ரொக்கத்திற்கு வட்டிவராது. இந்தியாவில் ஒழுங்கான பணச்சந்தையினர் இல்லாத காரணத்தால், இத் துறையில் முன்னேற்றம் காணவில்லை எனலாம். இம்மாதிரியான கடன் வசதிகள் 1951-ல் ரூ. 11·2 கோடியும், 1952-ல் ரூ. 16·8 கோடியும், 1953-ல் ரூ. 13·4 கோடியுமாக இருந்தன. இது மொத்த வைப்புகளில் 0·1 சதவீதத்திற்கு மேலாக அமைந்திருந்தது.[1] தேவையின்போது ரொக்கம் கேட்கப்படும் முறை பம்பாயில் அதிகம் பெருகியுள்ளது. சென்னையிலும் கல்கத்தாவிலும் பணச்சந்தை சரியாக நிறுவப்படாததால் இது அவ்வளவாகப் புழக்கத்திலில்லை.

இந்தியாவிலுள்ள பாங்குகள் உண்டியல்களைத் தரகு முறையில் விலை தள்ளி மாற்றம் செய்து கொடுக்கின்றன. இதன் அடிப்படைக் காரணம் என்னவென்ருல், நம் நாட்டில் தனிப்பட்ட உண்டியல் சந்தை தோன்ருத காரணமாகும். 1951-ல் 398 பாங்குகள் செய்த முன்பண வசதி ரூ. 581·1 கோடியில் 39·3 கோடி உண்டியலைப் பொறுத்தது. 1953-ல் ரூ. 517·3 கோடி முன்பண வசதியில் ரூ. 51·8 கோடி உண்டியலின் பேரில் 504 பாங்குக் கம்பெனிகள் உதவியளித்தன.[2]

வர்த்தகர்களுக்கும் வியாபாரிகளுக்கும் தொழிலுக்கு வேண்டிய மூலதனத்தை அதிகப்பற்றுக் கடன் (overdraft) ரொக்க வரவு (cash credit) ஆகிய முறைகளில் பாங்குகள் கொடுத்துதவுகின்றன. 1954ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 31ஆம் தேதி வரை அட்டவணை

1. ஆங்கிலப் பாங்குகளில் தங்கள் வைப்புகளில் 3·5, 3·9 சதவீதமாக அமைந்திருந்தது.

2. ட்ரெண்டு அண்டு ப்ரோக்ரஸ் ஆப் பாங்கிங் இன் இண்டியா, 1958 பக். 41.

யிலடங்கிய பாங்குகள் ரூ. 557 கோடி முன்பண வசதி செய்தும், அட்டவணையிலில்லாப் பாங்குகள் ரூ. 38·45 கோடி முன்பண வசதியளித்தும் உள்ளன. முன்பணக் கடன் வசதியை விளக்கும் அட்டவணை, 1954 டிசம்பர் மாதம் 31ஆம் தேதி வரையில் உள்ள நிலையைக் குறிக்கிறது.

| | 83 அட்டவணையில் உள்ள பாங்குகள் | | 353 அட்டவணையிலில்லாப் பாங்குகள் | |
|---|---|---|---|---|
| | தொகை (கோடி ரூபாய்க் கணக்கில்) | மொத்த முன் பணத்தில் சதவீதம் | தொகை (கோடி ரூபாய்க் கணக்கில்) | மொத்த முன் பணத்தில் சதவீதம் |
| தொழில் ... | 190·9 | 34·3 | 7·09 | 18·4 |
| வர்த்தகம் ... | 277·9 | 49·9 | 17·08 | 44·4 |
| விவசாயம் ... | 4·5 | 0·8 | 2·40 | 6·2 |
| நபர் வகையும் பணியாளர் வகையும் ... | 47·6 | 8·5 | 9·67 | 25·1 |
| இதர வகை ... | 36·1 | 6·5 | 2·21 | 5·9 |
| | 557·0 | 100·0 | 38·45 | 100·00 |

வர்த்தகத்திற்கு அதிகப்படியான முன்பண உதவியும், விவசாயத்திற்கு மிகவும் குறைவான வசதியும் அளிக்கப்படுவதை இதனின்று காணலாம். அட்டவணையிலுள்ள பாங்குகள், தொழில்களுக்கு நிறைந்த அளவில் முன்பண உதவி அளிக்கின்றன. ஆனால் அட்டவணையிலில்லாப் பாங்குகளோ, தனி நபர் பணியாளர்களுக்குக் கொடுக்கும் முன்பண வசதி, தொழில்களுக்கு அளிக்கும் வசதியைக் காட்டிலும் அதிகம் எனக் கூறலாம். பொதுவாக நோக்கின், தொழிலும் விவசாயமும் எவ்விதமான பணவசதியும் பாங்குகளிடமிருந்து பெறுவதில்லை. பாங்குகளின் பணம், பெரும்பகுதி சர்க்கார் கடன்பத்திரங்களில் போடப்பட்டுள்ளன. 1951-ல் 398 பாங்குகளிலும், 1952-ல் 517 பாங்குகளிலும், 1953-ல் 504 பாங்குகளிலும் போடப்பட்ட தொகை முறையே ரூ. 315 கோடி, ரூ. 343·9 கோடி, ரூ. 354·8 கோடியாகும். 1954-ல் இது

ரூ. 378·03 கோடியாகியது. பணமுடை ஏற்பட்ட காலங்களில் இந்தப் பாங்குகள் இந்தக் கடன் பத்திரங்களை விற்றோ, அல்லது இவற்றின் ஈட்டில் இம்பீரியல் பாங்கிலிருந்தோ (தற்போது இராச்சியப் பாங்கு) அல்லது ரிசர்வ் பாங்கிலிருந்தோ கடன் பெறுவர்.

**8. நவீன பாங்கு முறை வளர்ச்சி :** நடைமுறையில் உள்ள பாங்கின் அமைப்பைச் சுருக்கமாக நாம் கூறியிருக்கிறோம். நவீன முறையில் உள்ள பாங்கின் தோற்றுவாயைப் பற்றிச் சற்று சிந்திப்போம். ஐரோப்பியப் பதிலாள் நிறுவனங்கள் கல்கத்தாவிலும், பம்பாயிலும் பாங்குத் தொழிலுக்கு முன் முனைவர்களாக இருந்தன. ஆயினும், பாங்கு வியாபாரம் அவர்களுடைய இதர வர்த்தகத்தின் உதவியாகவே அமைந்திருந்தது. ஊக வர்த்தகத்தில் அதிகப் பங்கெடுத்த காரணத்தால் 1829 லும் 1832லும் இவ் வர்த்தக அமைப்புகள் மண்ணைக் கவ்வின. இப் பதிலாள் நிறுவனங்களைத் தவிர, கிரின்ட்லேஸ் (Grindlays) போன்ற வர்த்தக நிறுவனங்கள், தங்கள் வர்த்தகத்துடன் பாங்குத் தொழிலும் நடத்தின. கம்பெனி அரசினரின் வர்த்தகத்திற்கு உறுதுணையாக, மூன்று மாகாணப் பாங்குகள் தோன்றியமை, இந்தியப் பாங்குகளின் வரலாற்றில் ஒரு முக்கிய நிகழ்ச்சி எனலாம்.

பாங்குத் தொழிலை மட்டும் மேற்கொண்ட ஒரு தனி நிறுவனமாக ஐரோப்பிய முறையில் பாங்க் ஆப்[1] ஹிந்துஸ்தான் (Bank of Hindustan) தோன்றி 1829-32-ல் ஏற்பட்ட பொருளாதார இக்கட்டின்போது திவாலாகியது. பங்குதாரர்களின் பொறுப்பு எல்லையற்று இருந்த காரணத்தால் 1860 வரை, பாங்குகள் வெகு மந்தமாகவே தோன்றிவந்தன. வரம்பிட்ட பொறுப்பு, 1860-ல் இந்தியா முழுவதும் ஏற்றுக்கொள்ளப்பட்டது. இதையடுத்து (1853-ல்) பாங்க் ஆப் அப்பர் இண்டியா (1865-ல்), அலகாபாத் பாங்க் இவை தோன்றின. 1894-ல் பதினைன்கு பாங்குகள் தோன்றின. அவை பெரும்பாலும் ஆங்கிலேயர் நிர்வாகத்தில் இருந்தன. 1905-ல் தோன்றிய, சுதேசி இயக்கத்தின் காரணத்தால், பாங்குகளின் வளர்ச்சி அதிகரித்தது. பாங்க் ஆப் பர்மா, தி இண்டியன் ஸ்பீஷி பாங்கு, சென்ட்ரல் பாங்க் ஆப் இண்டியா, பாங்க் ஆப் பரோடா, பாங்க் ஆப் மைசூர் முதலிய பாங்குகள் தோன்றின. இவை பெரும்பாலும் ஊகவர்த்தகத்தில் அதிக அளவில் ஈடுபட்டன. பொறுப்புகளுக்குங் கையிருப்பு ரொக்கத்

1. பாங்கு விசாரணைக் குழுவினரின அபிப்பிராயப்படி குக் எழுதிய ரைஸ், ப்ரோக்ரஸ் அண்ட் பிரஸன்ட் கண்டிஷன் ஆப் பாங்கிங் இன் இண்டியா என்பது ஏற்றுக் கொள்ளத் தகக தகவலில்லை. 1770-ல் பாங்க் ஆப் ஹிந்துஸ்தான் தோன்றும் முன்னரே ஒன்றல்லது இரண்டு பாங்குகள் தோன்றி அழிவு பெற்றன. (அறிக்கை, பக்கம் 15)

திற்குமிடையே உள்ள விகிதம், மிகவும் குறைவாக இருந்த காரணத்தால், பாங்கு முறிவு ஏற்படுவதைத் தவிர்ப்பது துர்லப மாக இருந்தது. 1913-14-ல் சுமார் 55 பாங்குகள் முறிந்தன. 1913-24 வரை பாங்குகளுக்கான காலம், மிகவும் சிரமமான நிலையைப் பெற்றிருந்தது. 161 பாங்குகள் தங்கள் பொறுப்புகளைக் கொடுக்க இயலாது சரிந்தன. 1923ஆம் ஆண்டில் டாட்டா இண்டஸ்டிரியல் பாங்கு (1918-ல் தோன்றியது) சென்ட்ரல் பாங்க் ஆப் இண்டியாவுடன் இணைந்தது. இது ஒரு விதிவிலக்கு எனலாம். இந்திய எண்ணம் இணைப்பதிலும், கூட்டுவதிலும் இல்லை. அதே ஆண்டில், அல்லயன்ஸ் பாங்க் ஆப் ஸிம்லா உடனே முறிந்தது. மக்களிடையே கலவரமும் பீதியும் தோன்ரு திருக்கவும், நிலைமையைச் சமாளிக்கவும் உடனே அரசினர், இம்பீரியல் பாங்க் ஆப் இந்தியாவை, அந்த பாங்கின் வைப்பு தாரர்களுக்குப் போட்ட தொகையில் 50% கொடுக்கச் சொல்லி, முறிவினுல் ஏற்பட்ட நஷ்டத்தை அரசினர் ஏற்றுக் கொண்டனர். 1929 லிருந்து உலகத்திலேயே பொருளாதார மந்தம் ஏற்பட்டது. இதன் காரணமாகவே பாங்குகள் மிகவும் சாதாரணமாக முறிய ஆரம்பித்தன. 1931 முதல் 1936 க்குள்ளாக 238 பாங்குகள் மூடப்பட்டன. இவைகளில் ஒன்றில்கூட 1 லட்சத்திற்கு மேல் மூலதனம் இல்லை. 1938-க்குப் பிறகு, மிகவும் அதிர்ச்சி ஏற்படக் கூடிய பாங்கு முறிவு ஏற்பட்டது. 'ட்ராவன்கோர் நேஷனல் அண்ட் கொய்லான் பாங்க்' (Travancore National & Quilon Bank) எதிர்பாராத வகையில் கதவடைத்து வைப்பாளர்களைத் துயரக்கடலில் ஆழ்த்தியது. இது அட்டவணைப்படுத்தப்பட்ட பாங்கு. இதன் காரணமாகத் தென்னிந்தியாவிலுள்ள இதர பாங்குகளிலிருந்து உடனே பெருமளவில் பணத்தைப் பெற வைப்பாளர்கள் முயன்றனர். இதனுல் 64 பாங்குகள் மூடப் பட்டன. இவ் வரலாற்றின் அடிப்படையில் இந்தியப் பாங்கு முறையைச் செம்மைப்படுத்த ஒரு மத்திய பாங்கு இன்றியமை யாதது எனக் கண்டுகொண்டனர். இரண்டாம் உலகப்போர் பாங்குத் தொழிலுக்குப் போதிய ஊக்கமளித்தது எனலாம். 1941-ல் ஜப்பானும் உலகப்போரில் குதித்தவுடன் மக்கள் மிகவும் கிலேச மடைந்து தங்கள் வைப்புகளை அவசரமாகக் கோரினர். எனவே இரண்டாம் மாபெரும் உலகப்போரின்போது இந்தியப் பாங்குகள் போரின் அதிர்ச்சிக்கு ஈடுகொடுத்து நிலைத்து நின்றன. அதன் பின்னர், பண வீக்கத்தின் காரணமாகப் பாங்குகள் அதிக ஊக்கத் துடன் வியாபாரத்தில் ஈடுபட்டன. இந்தப் பாங்குகளின் கிளைகள் அதிகமாயின. 1939 ஆம் ஆண்டு அட்டவணையின்கீழ் வந்துள்ள (ஷெட்யூல்டு) பாங்குகளின் வைப்புப் பொறுப்பு ரூ. 249·45 கோடி

1944 ஜூலை முடிவில் ரூ. 759·29 கோடியாகவும், பின்னர் டிசம்பர் 1949-ல் ரூ. 804 கோடியாகவும் அதிகரித்தது. அதேபோல் 1938-லிருந்த 1,471 கிளைகள் 1947-ல் 5,532 கிளைகளாக அதிகரித்தன. 1943,44,45 ஆண்டுகளில் பாங்குகளின் வளர்ச்சி அரசினரின் மிகையான பணப் புழக்கத்தால் அதிகரித்தது. போர்க்காலத்தில் கிடைத்த அதிகப்படியான பணம் பொதுமக்களால் வைப்புகளாகப் பாங்குகளில் இடப்பட்டது. போர்க்காலங்களில் எல்லாப் பாங்குகளிலும் தொழில் மிகவும் அதிகமாக நடந்தது. மிகவும் கூடுதலான மூலதனமும், பெரிய அமைப்புகளும் கொண்ட பாங்குகள் திறக்கப்பட்டன. அவைகள் நாட்டின் பல பகுதிகளிலும் தம் கிளைகளைத் திறந்து, இதர பாங்குகளுடன் வர்த்தகத்தில் போட்டியிட்டன. இப் போட்டி ஒவ்வொரு பட்டணத்திலும், நகரத்திலும், கிளைகளைத் திறப்பதிலும், ஒரு கிளையின் வர்த்தகத்தினை மற்றொரு கிளைக்கு மாற்றுவதிலும் காணப்பட்டது.

1947ஆம் ஆண்டில் நாடு பிரிந்தவுடன், ஏற்பட்ட மாபெரும் கிளர்ச்சிகளால், வங்காளத்திலும் பஞ்சாபிலும் இருந்த சில மாபெரும் பாங்குகளைக் கலைக்கவும், சிலவற்றை மூடவும் நேர்ந்தது. இன்னும் சில பாங்குகள் தங்கள் வர்த்தகத்தைத் தற்காலிகமாக நிறுத்திவைத்துப் பின்னர், அமைப்பை மாற்றி வர்த்தகத்தைத் தொடங்கின.

1948-ல் பாங்குகளின் எண்ணிக்கை 852 ஆகக் குறைந்தது. இந்தப் பாங்குகளின் எண்ணிக்கையில் சரிவு ஏற்பட்டுக்கொண்டே இருந்தது. 1949-ல் 4,441 ஆக இருந்து, 1953-ல் 4,036 ஆகக் குறைந்தது.[1] முன்னாளில் பொறுப்பற்ற முறையில் திறக்கப்பட்ட அளவு கடந்த எண்ணிக்கையுள்ள பாங்குகளைச் சீராக்க, இது ஒரு சிறந்த வழியாக அமைந்தது. அநேக அட்டவணைப்படுத்தப்படாத பாங்குகள் வர்த்தகத்தை நிறுத்திக்கொண்டு, இதர வியாபார முறைகளில் கவனம் செலுத்தின. பாங்கிங் கம்பெனிகள் சட்டப்படி இவை பாங்குகள் ஆகா. மூன்றுவதாக அநேக பாங்குகள் பெரிய பாங்குகளுடன் இணைந்தும், ஒன்று சேர்ந்தும் நிலைமையைச் சீர்படுத்திக் கொண்டன. இலாபமற்ற முறையில் நடக்கும் பாங்குகளை மூடியும் மற்ற பாங்குகளுடன் இணைத்தும் பாங்கு வளர்ச்சியைத் திடப்படுத்தினர். 1951 ஆம் ஆண்டு பாங்குகளுக்கு அதிகப் பொருளாதார நெருக்கடியை உண்டாக்கக்கூடிய காலமாக இருந்தது. குறிப்பாக வர்த்தக பாங்குகளுக்கு நிலைமையைச் சமாளிப்பது மிகவும் கடினமாக இருந்து வந்ததெ

1 இந்த விவரம் இந்திய யூனியனுடையது. (நாடு பிரிவினைக்குப் பிறகு) ட்ரெண்ட் அன் ப்ரோக்ரெஸ் ஆப் பாங்கிங் இன் இண்டியா, 1953-பக்கம் 76.

னலாம். கொரியாப் போர் நிகழ்ந்த ஆண்டில் விற்பனைக்குரிய பண்டங்களைப் பதுக்கிவைத்த காரணத்தால் விலைகள் மிகவும் அதிகமாயின. பணவீக்கத்தின் காரணத்தால் விலையேற்றமுண்டாயிற்று என்பது தெரிந்ததே. பணத்திற்குத் தேவை அதிகரித்து வைப்பாளர்கள் பாங்குகளிலிருந்து அதிகப்படி பணம் வேண்டுமென்றனர். இதனால் வைப்புகளின் அளவு குறைந்தது. பாங்குகள் அரசினர் கடன் பத்திரங்களில் செய்த முதலீட்டை மாற்றினர். இதனால் தங்களுடைய பொறுப்புகளை ஈடுபடுத்தக்கூடிய அளவில் பணமின்றி வறிய நிலைமையில் இருந்தனர். பணவீக்கத்தின் கடுமையைக் கட்டுப்பாட்டில் கொண்டுவர இதர தேசங்கள் கையாளும் பணவீக்கக் குறைப்பு முறையை அமலாக்கினர். பாங்கு வட்டி வீதம் 3%-லிருந்து $3\frac{1}{2}$% ஆக 1951ஆம் ஆண்டு நவம்பர்[1] மாதத்தில் அதிகரிக்கப்பட்டது. பணமுறைக் கட்டுப்பாட்டிலுள்ள மாற்றத்திற்குப் பாங்கு முறையில் திருப்திகரமான இசைவு ஏற்பட்டது.

1954 ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் 31 ஆம் தேதியில் இந்தியா முழுமையும் 4,041 கிளைகள் உள்ள 533[2] பாங்குக் கம்பெனிகள் இத் தொழிலை நடத்திவந்தன. உத்தரப்பிரதேசம், பம்பாய், சென்னை இம் மூன்று இராச்சியங்களிலும் அதிகப்படியான பாங்குகள் திறக்கப்பட்டுத் தொழிலில் முன்னேறி வருகின்றன. மக்கள்தொகை 10 ஆயிரத்துக்கு அதிகப்பட்ட இடங்களில் பாங்கு அலுவலகங்கள் பணியாற்றி வருகின்றன. மூலதனமும் ரிசர்வ் நிதியும் அதிக வேற்றுமையுடன் ஒவ்வொரு பாங்கியிலும் அமைந்துள்ளன. செலுத்தப்பட்ட மூலதனமும், ரிசர்வ் நிதியும் வைப்புகளும் எண்ணிறந்த அளவில் ஒருசில பாங்குகளிலேயே சேர்ந்துள்ளன. அட்டவணையிடப்பட்ட, அட்டவணையிலில்லாத பாங்குகளின் மொத்த எண்ணிக்கையின்மீது கணக்கிட்டால் அவைகளில் 72 சதவீதம் (மூலதனமும் ரிசர்வ் நிதியும் ரூ. 5 லட்சத்துக்குக் கீழாக உள்ளவை) 7 சதவீத மொத்த மூலதனமும் ரிசர்வும் பெற்று மொத்த வைப்புகளில் 3 சதவீதமும் பெற்றுள்ளன. ரூபாய் 50 லட்சத்துக்கு மேலாக ரிசர்வ் நிதியும் மூலதனமும் பெற்றுள்ள 6 சதவீத பாங்குகள் 75 சதவீத மொத்த ரிசர்வும் மூலதனமும் பெற்றுள்ளதோடல்லாது 87 சதவீத வைப்புகளையும் பெற்றிருக்

1. இந்தப் புதிய கொள்கை அடுத்துவரும் ரிசர்வ் பாங்கு என்ற பிரிவில் வைக்கப்பட்டிருந்தது.

2. ட்ரெண்ட் அண்ட் ப்ரோக்ரெஸ் ஆப் பாங்கிங் இன் இண்டியா-1954, பக்கம் 77. ரிசர்வ் பாங்கிற்கு அவ்வப்பொழுது அனுப்பப்படும் ஸ்டேட்மெண்டுகள் பாங்குக் கம்பெனி சட்டத்தின் கீழ்க்கொடுக்கப்பட்ட தகவல்களை அனுசரித்துக் குறிக்கப்பட்டிருக்கின்றன. ரிசர்வ் பாங்கிற்கு அவ்வப்பொழுது தகவல் கொடுக்க வேண்டியதில்லை என்ற பாங்குகளைப்பற்றிய விவரம் இதில் சேர்க்கப்படவில்லை.

கின்றன. 1954-ல் அட்டவணைப்படுத்தப்பட்ட பாங்குகள் பெற்றிருந்த, ரொக்கமும் ரொக்கமாக மாற்றும் விகிதமும் 12 ஆகவும் அட்டவணையில் இல்லாத பாங்குகளுக்கு 9 ஆகவும் இருந்தன. ரிசர்வ் பாங்கு அவ்வப்பொழுது கடன் வசதி கொடுக்க முன் வருவதால் பாங்குகள் அவ்வளவு குறைவான சதவீத மாற்றத்தைப் பெற்றிருக்கின்றன. 1954ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் பாங்குகள் கொடுத்த முன்பணம் ரூ. 595·45 கோடி;[1] இந்திய அட்டவணைப்படுத்தப்பட்ட பாங்குகள் 3-ல் 2 பங்கு முன்பணம் கொடுத்திருக்கின்றன. கால்பங்கு அந்நியச் செலாவணிப் பாங்குகளும் 14-ல் 1 பங்கு அட்டவணையில் இல்லாத பாங்குகளும் முன் பணம் கொடுத்துள்ளன. இம் முன்பணங்களில் ½ பகுதியிலும் குறைவாக வர்த்தகத்துக்கும் 3-ல் 1 பங்கிலும் குறைவாக இயந்திரத் தொழிலுக்கும் ரூ. 14·7 கோடி விவசாய உற்பத்திக்கும் (அதாவது 2·3%) கிடைத்திருக்கின்றன.

9. **பாங்கிங் ஒழுங்கு முறை:** வெகு காலமாக, வைப்பாளர்களின் நலனைப் பாதுகாக்கவும், இந்தியாவில் பாங்குகளை ஒழுங்கான முறையில் நடத்துவதற்கும் பொதுமக்களும் அரசினரும், ஆலோசனை செய்துவந்தனர். அநேக பாங்குகள் தங்கள் முறைகளைத் தவறான வழியில் நடத்தியும், கொள்கைகளுக்குப் புறம்பான வழியில் சென்றும், அளவுக்குமீறிய ரொக்கம் கொடுத்தும், ஈடின்றிக் கடன்களைக் கொடுத்தும், பாங்கு நெறியாளர்களுக்கும் அவர்களது விருப்பத்திற்கிசைந்த கம்பெனிகளுக்கும் முன்பணமாகக் கடன் கொடுத்தும் 1913-14 ஆம் ஆண்டுகளில் பாங்குகள் திடீரென முறிய ஆரம்பித்தன. மத்திய பாங்கு விசாரணைக்கு (1929-31) நிர்வாகம் அமைப்பு, கணக்கு ஆய்வு, பாங்குகளை மூடுதல் ஆகியவை சம்பந்தமான, பரிந்துரைகளை 1936ஆம் ஆண்டு இந்தியக் கம்பெனிகள் திருத்தச் சட்டத்தில் ஏற்றுக் கொண்டுள்ளனர். இந்தச் சட்டம் (1) பாங்கின் இலக்கணத்தைச் சரியான முறையில் கொடுக்கின்றது. (2) பாங்குக் கம்பெனிகள் சாதாரண பாங்கு வர்த்தகத்தை மட்டிலும் நடத்த வேண்டுமெனக் கூறுகிறது. (3) நிர்வாகப்பதிலாட்களை நியமிப்பதைத் தடைப்படுத்துகிறது. (4) மூலதனத்தை ரூபாய் 50 ஆயிரத்திற்குக் குறைவில்லாமல் பங்குகளில் வைத்திருக்கவேண்டும் எனக் கூறுகிறது. (5) செலுத்தப்படாத மூலதனத்தின்மேல் கட்டணம் விதிப்பதைத் தடைசெய்தது. (6) ரிசர்வ் நிதி லாபத்திலிருந்து 20% அளவில் ஒதுக்கப்பட்டு வேலைக்கான மூலதனத்திற்குச் சமானமாகும் வரை நீடித்தும், ரொக்க ரிசர்வ்

1. ட்ரெண்ட் அண்ட் ப்ரோக்ரஸ் ஆப் பாங்கிங் இன் இண்டியா, 1954, பக்கம் 63-67

குறைந்த அளவு $1\frac{1}{2}\%$ காலப் பொறுப்பினை கோரியும் 5% வைப்புப் பொறுப்பினை அனுசரித்தும் வைக்கப்படும். (7) உதவிக் கம்பெனிகளுடைய பங்குகளை வைத்துக் கொள்ளுவதில் சில விதி விலக்குகளை அனுசரித்து மேற்கொள்ளுதல். (8) தற்காலிக இடர்பாட்டினின்று பாங்குகளைக் காப்பாற்றக் கடன் கால நீட்டிப்புச் செய்தனர்.

இச் சட்டத்தில் அநேக குறைபாடுகள் உள்ளன எனலாம். ரிசர்வ் பாங்கின் யோசனையின்பேரில் புதிய பாங்கு மசோதா ஒன்று இந்திய அரசினரால் உருவாக்கப்பட்டது. போரின் காரணத்தால் நாட்டில் தோன்றிய வரம்புமீறிய நிலையைக் கண்டு இச் சட்டத்தை அமலாக்கவில்லை யெனலாம். இடைக்காலச் சட்டங்களை அமலாக்கிக் கூட்டுப்பங்குப் பாங்குகளைக் கண் காணித்தனர். இவ் விடைக்காலச் சட்டங்களை அவசரச் சட்ட மாகக் கொணர்ந்தனர். 1949ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் 16 ஆம் தேதி இந்தியப் பாங்குக் கம்பெனிகள் சட்டம், 1949-ல் அமலுக்கு வந்தது. அச் சட்டத்தின் முக்கியப் பிரிவுகளாவன :

(i) **எல்லை :** இச் சட்டம் இந்தியாவின் எல்லா இராச்சியங் களிலும் செல்லுபடியாகும். 1912 ஆம் ஆண்டுக் கூட்டுறவுச் சங்கச் சட்டத்தின்கீழ் அல்லது இதர கூட்டுறவு சம்பந்தப்பட்ட சட்டத்தின்கீழ்ப் பதிவு பெற்ற கூட்டுறவுப் பாங்குகளை இச் சட்டம் கட்டுப்படுத்தாது.

(ii) **வர்த்தகத்திற்குத் தடை :** எந்தப் பாங்கும் அல்லது பாங்குக் கம்பெனியும் நேர்முகமாகவோ அல்லது மறைமுக மாகவோ பண்டங்களை வாங்கி விற்பனை செய்தலிலும், பண்ட மாற்றலிலும், ஈடுபடக் கூடாதென வரம்பிடப்பட்டது. வாங்கிய கடனுக்கு ஈடாகவைக்கப்பட்ட பண்டங்களைக் கடன் மீட்சி யின்றேல் விற்பனை செய்யலாம். வர்த்தகரையோ அல்லது வியாபாரியையோ தன் நிருவாகியாகப் பாங்கு அமைக்கக்கூடாது. பாங்கு நிர்வாகம் இன்னொரு கம்பெனியின் நெறியாளர் அல்லது நிர்வாகப் பதிலாள் இவர்களால் நடத்தப்படக் கூடாது. அவ்வாறுன கம்பெனியும் பாங்கு நிறுவனத்தின் உதவிக் கம்பெனி யாக இருக்கக் கூடாது.

(iii) **குறைந்த அளவு மூலதனமும், ரிசர்வும் சம்பந்தப்பட்ட சட்ட திட்டங்கள் :** ஒரே இடத்தில்மட்டும் தொழில் நடத்தும் பாங்காக இருப்பின், ரிசர்வ், பணிக்கான மூலதனம், இரண்டும் சேர்ந்து ரூ. 50 ஆயிரம் இருக்கவேண்டும். பம்பாய், கல்கத்தா

முதலிய பெரிய நகரங்கள் அன்றி, இதர இடமொன்றில் இன்னொரு கிளை திறக்கப்படின் அந்தப் பாங்கின் மூலதனமும் ரிசர்வுமாகச் சேர்ந்து 1 லட்சம் இருக்கவேண்டியது இன்றியமையாததெனலாம். இது அதன் மூலக்காரியாலயத்தில் அமைதல் வேண்டும். அதன் கிளை ஒரே மாவட்டத்திலிருப்பின் ரூ. 10 ஆயிரம் கூட்டப்படும்; வேறு மாவட்டங்களிலிருப்பின் ரூ. 25 ஆயிரம் கூடுதலாகவும் அமைதல் வேண்டும். பாங்குத் தொழில் பல்வேறு இராச்சியங்களிலிருந்தாலும் ரூ. 10 லட்சம் மூலதனமும் ரிசர்வுமாகக் கூட்டியமைத்தல் வேண்டும். இந்தியா யூனியனின்றி அயல்நாடுகளில் இணைப்புள்ள பாங்குகளானால் ரூ. 15 லட்சம் மூலதனமும் ரிசர்வும் வைத்துக் கொள்ளவேண்டும். அம்மாதிரியான பாங்குகள் பம்பாய், கல்கத்தா முதலிய நகரங்களில் தொழில் அமைப்பின், 20 லட்சம் முதல் வைத்துக் கொள்ளவேண்டும்.

(iv) **பாங்குக் கம்பெனிகளின் ஆஸ்திகள் :** ஒவ்வொரு பாங்குக் கம்பெனியும் ரொக்கமாகவும், பொன்னாகவும், அனுமதிக்கப்பட்ட சொத்து ஈடுகளாகவும், நடப்பில் உள்ள சந்தை விலை மதிப்பீட்டில், பாங்கு மேற்கொள்ளும் காலவரம்பு, நடப்புப் பொறுப்புகளின் மொத்தத்தில் 20% அளவில் இருக்க வேண்டும். இந்தியாவில் பாங்குத் தொழில் நடத்தும் ஒவ்வொரு பாங்குக் கம்பெனியும் தங்களுடைய ஆஸ்திப் பொறுப்பின் கூட்டுத் தொகையில் 75% இந்தியாவில் வைத்திருக்கவேண்டும்.

(v) **ரொக்க ரிசர்வுகள் :** ஒவ்வொரு பாங்குக் கம்பெனியும் அட்டவணையிலுள்ளவை, அட்டவணையில் இல்லாதவை எதுவாயினும் தங்கள் வசத்திலாவது அல்லது ரிசர்வ் பாங்கின் கணக்கிலாவது காலப் பொறுப்பில் 2%-ம் நடப்புப் பொறுப்பில், 5%-ம் ரொக்கமாக வைத்துக் கொள்ள வேண்டும்.

(vi) **ரிசர்வ் நிதி :** ஒவ்வொரு பாங்குக் கம்பெனியும் தம்வசம் ரிசர்வ் நிதியை வைத்துக்கொள்ள வேண்டியது அவசியம். லாபப் பங்கீடு செய்யுமுன்னர், லாபத்திலிருந்து ஒதுக்கம் செய்யவேண்டும். லாபத்தில் 20% ரிசர்வ் நிதிக்கு ஒதுக்கீடு செய்தல் முக்கியம் எனலாம். பணிக்கான மூலதனமும், ரிசர்வ் நிதியும், ஒரேயளவு ஆகும் வரையில் ஒதுக்கீடுகள் செய்ய வேண்டும்.

(vii) **கடன்களுக்கும் முன்பணம் கொடுத்தலுக்குமுள்ள கட்டுப்பாடுகள் :** தங்களுடைய மூலதனப் பங்குகளின் ஈட்டின் பேரிலோ, தங்களுடைய நெறியாளர்களுக்குத் தக்க ஜாமீனற்ற கடனோ, மேற்படி நெறியாளர் நிர்வாகப் பதிலாளாகவோ, கூட்டு தாரராகவோ பணியாற்றும் நிறுவனங்களுக்கு நெறியாளர்களின்

உத்தரவாதத்தின்பேரில் கடனே கொடுக்கக்கூடாது என்றும் தனி நபர் ஜாமீன் பேரிலும் கடன்கொடுக்கக்கூடாது என்றும் அறுதியிடப்பட்டது.

(viii) **கூட்டுப் பங்குப் பாங்குகளின்மீது ரிசர்வ் பாங்கின் கட்டுப்பாடு :** (அ) இப் பாங்குகள் முன்பணம் கொடுத்தல் சம்பந்தமாக என்ன கொள்கையைக் கடைப்பிடிக்க வேண்டுமென்று ரிசர்வ் பாங்கு முடிவு செய்கிறது. எவ்விதமான தேவைகளுக்கு முன் பணம் அளிக்கலாம் அல்லது அளிக்கக்கூடாது என்று ரிசர்வ் பாங்கு நிலைமையை அனுசரித்துக் கூட்டுப்பங்குப் பாங்குகளுக்குத் தாக்கீது விடுவதற்கு அதிகாரம் கொடுக்கப்பட்டிருக்கிறது. (21) வது பிரிவு (ஆ) இந்திய யூனியனில் ரிசர்வ் பாங்கினின்று உரிமம் பெருது எந்த நிறுவனமும் பாங்குத் தொழிலைத் திறக்கமுடியாது. தொழில் நடத்த அனுமதி கொடுப்பதற்கு முன்னுல் ரிசர்வ் பாங்கு மேற்படி பாங்குக் கம்பெனியின் கணக்குப் புத்தகங்களைப் பரிசீலனை செய்து வைப்பாளர்களின் தொகைகளைப் பாதுகாக்குமளவு நிலைமை உள்ளதா என்று ஆய்வுபடுத்தி முடிவில் உரிமம் வழங்கும். (பிரிவு 22) (இ) முன்அனுமதி பெருது எந்தப் பாங்குக் கம்பெனியும் புது இடத்தில் தொழில் நிறுவக்கூடாது அல்லது ஒரே ஊரில் இடம் மாறக்கூடாது (பிரிவு 23) (ஈ) இந்திய யூனியனில் தங்களுக்கு எவ்வளவு ஆஸ்திகளும் பொறுப்புகளும் உள்ளன என்று காலாகாலத்தில் ரிசர்வ் பாங்குக்குத் தகவல்களை அறிவித்தல் வேண்டும். (பிரிவு 27) தணிக்கை செய்யப்பட்ட இருப்புத் தகவல்களையும் லாப நஷ்டக் கணக்கின் விவரங்களையும் ஆஸ்திகள், பொறுப்புகளுக்கான விவரங்களையும் அவ்வப்போது ரிசர்வ் பாங்கிற்கு அனுப்பவேண்டும். தானுகவோ அல்லது மத்திய அரசினரின் உத்தரவை மேற்கொண்டோ எந்தப் பாங்கு நிறுவனத்தையும் பரிசீலனை செய்ய ரிசர்வ் பாங்கிற்கு முழு அதிகாரம் உண்டு. (பிரிவு 35) ரிசர்வ் பாங்க் கம்பெனியையும் பரிசீலனை செய்வதற்கு அதிகாரம் உண்டு. இம்மாதிரிப் பாங்குகளுக்குத் தங்களுடைய யோசனைகளைத் தெரிவிக்கவும் உரிமையுண்டு. பல்வேறு பாங்குகளை ஒன்ருக இணைப்பதற்கும் 1934 ஆம் ஆண்டு ரிசர்வ் பாங்குச் சட்டத்தின் 18 வது பிரிவு முதல் உட்பிரிவின் மூன்ருவது பகுதியில் கூறியுள்ளபடி எந்தப் பாங்குகளுக்கும் முன்பணமோ அல்லது கடனே கொடுக்கலாம்.[1]

1. சட்டமுறையாக ரிசர்வ் பாங்கிற்கு இத் தொழிலை ஒழுங்குபடுத்தவும், எல்லாப் பாங்குகளுக்கும் கடன் கொடுக்கவும் பூரண அதிகாரம் கொடுக்கப்பட்டுள்ளது. இது மற்ற இடங்களில் பாங்குத் தொழில் அடைந்துள்ள வளர்ச்சியைப் போன்றுள்ளது. ஆர். எஸ். சேயர்ஸ்—பாங்கிங் இன் தி பிரிட்டிஷ் காமன்வெல்த் (1952), பக்கம் 256.

1950ஆம் ஆண்டு மார்ச்சு மாதத்தில் பாங்குக் கம்பெனிகளுடைய சட்டம் சில திருத்தங்களுடன் மாற்றியமைக்கப் பட்டது. இச் சட்டம் ஜம்மு, காஷ்மீர் இராச்சியப் பகுதி நீங்கலாக இதர பகுதிகளில் அமலாயிற்று. (முன்பு ஆங்கில அரசின் நேராட்சியில் இருந்த பகுதிகளுக்கு மட்டுமே இச் சட்டம் விஸ்தரிக்கப்பட்டுள்ளது.) இத் திருத்த மசோதா ரிசர்வ் பாங்கிற்கு (அ) அயல் நாடுகளில் இந்திய பாங்குகளால் கிளைகள் திறக்கும் முறையை ஒழுங்குபடுத்தவும், (ஆ) அனுமதி பெற்ற முதலீடுகளை உறுப்பினர் பாங்குகள் எந்த அளவில் வைத்திருக்க வேண்டும் என்று வரையறுக்கவும் (இ) இணைய விரும்பும் பாங்குகளை இணைக்கும் முறையை எளிதாக்கவும் அதிகாரங்கள் வழங்கப் பட்டுள்ளன.

**10. பாங்கு வசதிக் குறைவான தற்கால நிலை :** இந்தியாவில் நடப்பில் உள்ள பாங்குநிலை எவ்வகையிலும் பயனுள்ள தன்று என்றே கூறலாம். விவசாயத்திற்கோ அல்லது தொழிற் சாலைக்கோ காலநிலைக்கேற்ப நிதி வசதி அளிக்காது இருந்து வருகிறபடியால் எதிர்பார்த்த அளவில் இது பயன்படவில்லை எனலாம். விவசாயி தனது குடும்பத் தேவைகளுக்கு வேண்டிய அளவு பணமின்றி இருப்பதோடு விவசாயத்திற்காக வேண்டி, அவன் கோரும் விதைகள், உரங்கள் அறுவடைகளின்போது வசதி, மற்றும் சந்தைக்குக் கொண்டு செல்வதிலும், விற்பனை ஆக்குதலிலும் வசதிகள் இவைகளை ஈடுபடுத்தக் குறுகியகால மூலதனம் அவனுக்குத் தேவைப்படுகிறது. புதிய நிலங்கள் வாங்கவும், அல்லது இருக்கும் நிலங்களைச் சீரமைத்து மிகவும் மேம்பாடடையச் செய்யவும் பெருமளவில் அவனுக்கு மூலதனம் தேவை. இதை நீண்டகால மூலதனம் என்று கூறுவதில் தவறொன்றும் இல்லை. குறுகிய கால மூலதனத்தை ஈடுபடுத்துவதில் சில இடையூறுகள் உள்ளன. அவையாவன : (1) உண்டியல்களின் பேரில்தான் பாங்கினர் கடன்கொடுக்க முன்வருவார்கள். எழுத்தறிவற்ற விவசாயிக்குக் கையெழுத்துப் போடுவதே பெரும் பாரமான செயலாதலால் அவனால் உண்டியல்கள் எழுத முடியாமற்போகின்றது. (2) அறுவடை செய்யப்பட்ட பண்டங்களைச் சுகாதார முறையில் சேமித்துவைத்து, நாட்டின் சந்தைக் காலத்தை ஒட்டி விற்பனை செய்வதில் இடையூறு தோன்றுகிறது. நீண்டகால மூலதனத்தைப் பெறுவதில் விவசாயிக்குச் சில சிரமங்கள் உள்ளன. குறிப்பாக விவசாயி தன் நிலங்களைப் பாங்குகளில் அடைமானமாகப் பதிவுசெய்து கொடுத்தால்தான் கடன்கள் கொடுப்பது பயனாகும் எனலாம். ஆயினும், பாங்குகளில் இம்மாதிரியான நீண்டகால மூலதன வசதிகள்

இல்லாத காரணத்தாலும், பாங்குகளின் நடப்பு முறையில் உள்ள சில சிக்கல்களினாலும் இம்முறையில் கடன்பெறுவது எளிதான செயல் அன்று எனலாம். கடன் நிவாரணச் சட்டங்களும் இராச்சியங்கள்தோறும் ஏற்படும் மசோதாக்களினால் விவசாயிக்குக் கடனினின்று விதி விலக்குக் கிடைக்கும் காரணத்தாலும் பாங்குகள் விவசாயிகளுக்குக் கடன் கொடுக்கவோ முன்பணவசதியளிக்கவோ முன்வருவதில்லை. வர்த்தகப் பாங்கின் கொள்கைக்கு ஏற்ப அசையாப் பொருளின்மீது கடன்கொடுத்து பாங்கிற்குக் கையிலுள்ள ரொக்கத்தை ஒரே இடத்தில் ஈடுபடுத்தக்கூடாது என்பது செயல் அனுபவத்தில் தெரிந்த கொள்கையாகும்.

நீண்டகால மூலதன வசதி அளிப்பதற்கு உள்ள ஒரே ஒரு நிறுவனம் அரசினர் நடத்திவரும் தனிப்பட்ட நில அடைமான பாங்குகளே ஆகும். 1945ஆம் ஆண்டில் காட்கில் குழுவினர் நீண்டகால நிதி வசதியளிப்பதற்கெனவே விவசாயக் கடன் கார்ப்பரேஷன் முறையை ஒவ்வோர் இராச்சியத்திலும் உருவாக்க வேண்டுமென்று பரிந்துரைத்தனர். எனினும், இராச்சியங்கள் தோறும் மாறுபட்ட விவசாயச் சட்ட திட்டங்கள் உருவாக்கப் படும் காரணத்தாலும், நீண்ட கால அல்லது குறுகிய காலக் கடன் வசதி எல்லா இராச்சியங்களையும் அனுசரித்து ஒரு மத்தியக் கடன் நிறுவனத்தின் மூலம் செய்ய இயலுமா என்பது சற்று யோசிக்கத் தக்கதே எனலாம். எனவே, இராச்சியங்கள்தோறும், நில அடைமான பாங்குகளை நிறுவி, அவற்றின் மூலம் கடன் வசதிக்கு ஏற்பாடு செய்யலாம். உள்ளூர் நிலையை அனுசரித்து மேற்படிப் பாங்குகள் தங்கள் சட்ட திட்டங்களை அமைத்துக் கொள்ளலாம்.

**11. தொழிற்சாலைகளுக்கான நிதி வசதி :** இந்தியப் பொருளாதார நிலையில் பிற்போக்கான நிலைமை இருப்பதற்கான முக்கிய காரணம், தொழிற்சாலைகளை நடத்தப் போதிய பணமின்மையே எனலாம். மேலை நாடுகளில் முதலீட்டு அகங்களும், ட்ரஸ்டுகளும், பணம் கொடுக்கும் நிறுவனங்களும் மலிந்துள்ளன. இவைகள் தொழிற்சாலைகளை நடத்தும் கம்பெனிகளின் கூட்டுப் பங்குகளின்மேல் பணம் கொடுத்து அப் பங்குகளைப் பங்குச் சந்தைகளில் விற்று ரொக்க நிலையைச் சீர்செய்து கொள்கின்றன. ஜெர்மனியில் பெரும்பாலான தொழிற்சாலைகள் இவ்வாறான உதவியைத் தொடர்ந்து பெற்று வருகின்றன. தொழில்களுக்கு முன்பணவசதி கொடுத்தல் என்பது மொத்தப் பாங்கு வர்த்தகத்தில் மிகச் சிறிய சதவீதமே எனலாம். இவையனைத்தும் தங்கள் நிதியினைப் பாங்கு வர்த்தகத்திலேயே ஈடுபடுத்தியுள்ளன

மத்திய பாங்கு விசாரணைக் குழுவினர் ஜெர்மன் முறையைத் தழுவி இந் நாட்டிலும் இவ்வாறான வசதியை அளிக்க வேண்டுமென்று கூறுகின்றனர். ஆயினும், தேவைக்கேற்ற அளவு பண உதவியும் கடன் வசதியும் கொடுக்கப்படவில்லையெனலாம். 1948ஆம் ஆண்டு ஜூலை மாதத்தில் தொழிற்சாலை நிதி வசதி நிறுவனம் ஒன்று மத்திய அரசின் ஏற்பாட்டின்கீழ்த் துவக்கப் பட்டது. இந் நிறுவனம் கூட்டுறவு முறையின்கீழ் நீண்டகால, மற்றும் குறுகிய காலக் கடன் வசதிகளை இந் நாட்டில் பதிவு பெற்றுள்ள பெரும் கம்பெனி நிறுவனங்களுக்கும், கூட்டுறவு நிறுவனங்களுக்கும் உதவியளிக்க முன்வந்துள்ளது. மேற்படி நிறுவனங்கள் இந்திய யூனியனில் சுரங்கத் தொழில், மின்சாரத் தயாரிப்பு, சரக்குகளைப் பதனம் செய்யும்முறை இவ்வாறான பல்வேறு பெருந்தொழில்களைச் செய்யும் நிறுவனங்களாக இருக்க வேண்டும். அடிப்படைத் தொழிற்சாலைகளுக்கும், இயந்திரக் கருவிகள் உற்பத்திச்சாலைகளுக்கும், ரஸாயனத் தொழிற்சாலைகளுக்கும் இதுகாறும் கடன் வசதியளிக்கப்பட்டிருக்கிறது. இந்தத் தொழிற்சாலைநிதிக் கார்ப்பரேஷனின் மூலதனம் ரூ.10 கோடியாகும். அதில் பணிக்கான மூலதனம் ரூ 5 கோடியாகும். இவ்வைந்து கோடி ரூபாயில், ஒரு கோடி ரூபாயை மத்திய அரசும் ரிசர்வ் பாங்கும் கொடுத்துள்ளன. ரூ. $3\frac{1}{2}$ கோடி இந் நாட்டிலுள்ள அட்டவணைப்படுத்தப்பட்ட பாங்குகளாலும் இன்சூரன்சுக் கம்பெனிகளாலும், முதலீட்டு டிரஸ்டுகளாலும் கொடுக்கப்பட்டுள்ளன. இன்னும் $\frac{1}{2}$ கோடித் தொகையைக் கூட்டுறவுப் பாங்குகள் கொடுத்துள்ளன. மத்திய அரசினர், மூலதனத்தைத் திருப்பிக் கொடுப்பதற்கு, வருமான வரி நீக்கமும், $2\frac{1}{4}\%$ லாபப் பங்கு தருவதாகவும், உத்தரவாதம் கொடுத்துள்ளனர். இந்தக் கார்ப்பரேஷனைச் செயலாக்கம் செய்வதற்கு 12 நெறியாளர்களை மத்திய அரசினர் நியமித்திருக்கின்றனர். இவர்களில் நால்வரை ரிசர்வ் பாங்கு நியமித்துள்ளது. இதர நெறியாளர்களை இக் கார்ப்பரேஷனின் உறுப்பினர்கள் தேர்ந்தெடுத்துள்ளனர். மத்திய அரசினர், ரிசர்வ் பாங்க், அரசாங்க (இம்பீரியல்) பாங்கு இவர்களின் பங்குத் தொகை மொத்தப் பங்கில் 52% உள்ளதால் மத்திய அரசினர் கார்ப்பரேஷனை வன்மையாகக் கட்டுப்படுத்துகின்றனர். கடன்கோரும் வர்த்தக, தொழிற்சாலைகளின் தேவைகளில் ஒரு பகுதியையே இந்தக் கார்ப்பரேஷன் கொடுக்கும். அவ்வாறு அளிக்கும் முறைகள் வருமாறு : (1) நீண்டகாலக் கடனைக் கொடுத்தல் அல்லது தொழில் நிறுவனங்களில் 25 ஆண்டுகளில் விடுவிக்கப்படும் டிபெஞ்சர்ப் பங்குகளின்மீது கடன் கொடுப்பது, (2) மேற்படிக் கம்பெனிகளின் ஸ்டாக்குப் பத்திரங்கள், பங்குகள், டிபெஞ்சர்கள் ஆகியவைகளை ஏற்றெடுத்துக்

கொண்டு விற்பனை செய்தல், (3) 25 ஆண்டுகளில் திருப்பித்தரக் கூடிய கடன்களுக்கு உத்தரவாதம் அளித்தல். துவக்கத்தில் இருந்து நாளதுவரை இக் கார்ப்பரேஷன் கடன் வசதி அளிப்பது வரவரக் கூடுதலாகி இருக்கிறது எனலாம். 1949-ல் ரூ. 29 லட்சத்தில் இருந்து 1953ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் முடிய ரூ 8·16 கோடிகள் கடனைக் கொடுத்து இருக்கிறது. ஆரம்பத் தில் இருந்து 1952 ஆம் ஆண்டு பிப்ரவரிவரை இக் கார்ப்பரேஷன் கோரிய வட்டி விகிதம் 5½% (இதில் ½% குறித்த காலத்திற்குள் கடனைத் திருப்பிக் கொடுத்தோர்க்குத் தள்ளுபடியாகக் கொடுக்கப்பட்டது). பின்னர், வட்டிவிகிதம் 6 சதவீதமாக மாற்றியமைக்கப்பட்டது. (முன்போலவே ½% தள்ளுபடி விகித மும் கொடுக்கப்பட்டது.) இக் கடன்பெறும் நிறுவனங்கள் பெறும் பண உதவியைக் கண்காணிப்பதற்காக வேண்டி அடிக்கடி அவைகளை ஆய்வு செய்தும் நேரடியாகச் சென்று முன்னேற்றத் தைக் கவனித்தும் அவைகளின் வளர்ச்சி சம்பந்தமான ஆவணங் களை அனுப்பச் செய்து ஆராய்ந்தும் வருகிறது. தொழிற்சாலை களுக்கான இந்திய நிதிக் கார்ப்பரேஷன் 1948-ல் அமலுக்கு வந்து மறுமுறை மாற்றியமைப்புச் சட்டம் 1952-53-ல் வெளி வந்தது. இம் மாற்றுச் சட்டத்தின் காரணத்தால் இந்திய அரசினர் இக் கார்ப்பரேஷன் அயல்நாடுகளினின்று பெறும் கடன் வசதியை உத்தரவாதம் செய்வதற்குப் பன்னாட்டு வளர்ச்சிப் பாங்கினின்று பெருங்கடனை அனுமதித்து அதன் மூலமாக இந் நாட்டில் உள்ள தொழில் துறைகளுக்கு உதவி புரிவதற்கு இடமேற்பட்டுள்ளது. மேலும் இக் கார்ப்பரேஷன் ரிசர்வ் பாங்கிலிருந்து 90 நாள் கால வரம்பில் அரசினர் முதலீட்டுப் பத்திரங்கள் ஈட்டின் மேல் அதிகப் படியான அளவு ரூ. 3 கோடிவரை பெறவும் பத்திரங்கள், டிபெஞ் சர்கள் ஈட்டின் மேல் அல்லது ரிசர்வ் பாங்கு குறிப்பிடும் ஈடுகளின் மேல் 18 மாதக் காலவரம்பில் கடன் பெறவும் அனுமதி கொடுக் கப்பட்டுள்ளது. இந்திய நிதிக் கார்ப்பரேஷன் நிறுவனத்தின் அடிப்படையில் சில இராச்சிய நிதிக் கார்ப்பரேஷன்களும் தோன்றின. 1949ஆம் ஆண்டு மார்ச்சு மாதத்தில் சென்னை இராச்சியத் தொழிற்சாலை நிதிக் கார்ப்பரேஷன் ஒன்று ரூ. 2 கோடி மூலதனத்துடன் உருவாகியது. அதில் ரூ. 1.02 கோடி சென்னை இராச்சிய அரசினரால் மூலதனமாகக் கொடுக்கப்பட்டுள்ளது. அதிலுள்ள பங்குகளுக்கு 3% வரி விதிப்புக்குட்பட்ட லாபப் பங்கினையும், திருப்பிக் கொடுப்பதற்கு ஏற்ற உத்திரவாதத்தையும், இராச்சிய அரசினர் மேற்கொண்டுள்ளனர். இவ் வுத்தரவாத முறை 10 ஆண்டுகள் வரை நீடிக்கப்படும். 1950ஆம் ஆண்டு ஜனவரி மாதம் சௌராட்டிர இராச்சியமும் மேற்படி இராச்சிய நிதிக் கார்ப்பரேஷன் ஒன்றைத் துவக்கியது. பம்பாய், பீகார்,

உத்தரப்பிரதேசம் இவைகளும் நிறுவனத்தை துவங்கியுள்ளன. இன்னும் அநேக இராச்சியங்கள் இவற்றைத் தொடங்கலாம் என ஆலோசனை செய்து வருகின்றன. இராச்சியக் கார்ப்பரேஷன்கள் மத்தியதரச் சிறுவகைத் தொழில் நிறுவனங்களுக்குக் கடனுதவி அளிக்கவும், இந்திய நிதிக் கார்ப்பரேஷனால் கடனுதவி அளிக்க இயலாத இதர நிறுவனங்களுக்கு உதவிபுரியவும் முன் வருகின்றன. ஷராப் குழுவினர் தனியார் துறைக்குக் கடன் வசதி அளிக்க வர்த்தகப் பாங்குகள் முன் வரவேண்டுமென்று கூறியுள்ளனர். அதற்கென(1) தொழில் நிறுவனங்களின் பங்குகள், டிபெஞ்சர்கள் இவைகள் முதல்தரமாக இருப்பின், அவற்றைத் தங்களுடைய முதலீடாக மேற்கொள்ள வேண்டும். (2) தொழில் நிறுவனங்களுக்கு அவர்களுடைய பங்குகள், மற்றும் டிபெஞ்சர்கள்மீது போதிய அளவு கடன் வசதியளிக்க வேண்டும். (3) இந்திய நிதிக் கார்ப்பரேஷனிலும், இராச்சிய நிதிக் கார்ப்பரேஷனிலும் அதிக அளவு நிதி செலுத்தித் தங்கள் பங்காகிய மூலதனத்தை அதிகரிக்க முயலவேண்டும். மறைமுகமாக உதவியளிக்க இந்த வர்த்தகப் பாங்குகள் விரும்பினால், இவையனைத்தும் ஒன்றுகூடி இராச்சிய பாங்கின் தலைமையில் இன்சூரன்சு கம்பெனிகளுடன் ஒரு நிறுவனத்தையமைத்துக்கொண்டு அதன் மூலம் கூட்டுப் பங்குகளையும் இன்னும் டிபெஞ்சர் கடன் பத்திரங்களையும் வாங்கி விற்க முன்வரலாம். இதற்கேற்ப, இம்பீரியல் பாங்குச் சட்டமும் மாற்றியமைக்கப்பட வேண்டும். அரசினர் முதலீட்டுப் பத்திரங்களின் ஈட்டில் பிரிவு 17 (4) (a) கீழ் ரிசர்வ் பாங்கு, கடன் கொடுப்பதுபோல் கம்பெனிகளின் பங்குகளின் பேரிலும், டிபெஞ்சர்களின் ஈட்டிலும் கடன் கொடுக்க வேண்டும்.

**12. சேமிப்பை ஒன்று திரட்டல் :** இந் நாட்டிலுள்ள பணச் சேமிப்பினைப் பாங்குகளால் வன்மையான முறையில் ஒன்று திரட்ட முடியவில்லை. இன்னும் கிராமங்களில் இவைகள் பணியாற்றாமல் உள்ளன எனலாம். இன்றுள்ள நிலைமையில் விவசாயி, தன் கையில் கிடைத்துள்ள பணம் அனைத்தையும் தராதரமின்றி எல்லாச் செலவுகளையும் செய்ய உபயோகித்துவிடுகிறான். அவன் மிகவும் முன்னேற்பாடுடன் செலவு செய்து வருவான் எனக் கருதினாலும், சிற்சில சமயங்களில் அநாவசியமான செலவுகளையும் செய்ய ஆரம்பிக்கிறான். பாங்கில் பணம் போடும் பழக்கத்தை ஏற்படுத்தும் முன்னர் அதைப் பயனுள்ள செலவுக்குத் தேவைப்படும் போது, உடனே திரும்பப் பெறலாம் என்ற எண்ணம் அவனுக்கு ஏற்படும்படிச் செய்யவேண்டும். தற்போதுள்ள நிலைமையில் பாங்குடன் தொடர்பு கொண்டுள்ள விவசாயிகள் கடன் வாங்கவே

முன் வருகின்றனர். பாங்குகளில் அவர்கள் வைப்பாளர்களாக வரவில்லை.

இதுகாறும் பாங்கு வர்த்தகம் நடைபெறுதிருந்த இடங்களிலும் கூட, பாங்குகள் தங்கள் கிளைகளைத் திறக்கவேண்டும் என்று யோசனை கூறப்படுகின்றது. 1951ஆம் ஆண்டில் நடத்திய மக்கள் தொகைக் கணக்கெடுப்பின்படி இந் நாட்டில் 3,018 நகரங்கள் உள்ளன என்றும் அவற்றில் பகுதிக்கு மேல் (1,463) ஒரு பாங்கு நிறுவனமோ அல்லது பாங்குக் கிளைகளும்கூட, அமையப் பெறாத நகரங்களாக உள்ளன எனக் கூறியுள்ளார்கள். அண்மையில் பாங்கு நிறுவனங்களின் எண்ணிக்கை குறைந்து கொண்டே வருகின்றது என்பதை மக்கள் அறிவர்.[1] ஷராப் குழுவினர் தங்கள் பரிந்துரையில் ரிசர்வ் பாங்கு மத்திய அரசின் அபிப்ராயத்தை மேற்கொண்டு அட்டவணையிடப்பட்ட பாங்குகளுக்கு நிதிஉதவி செய்ய ஒரு திட்டம் வகுக்க வேண்டுமென்றும், புதிய கிளைகளைத் திறப்பதற்கும், பாங்குத் தொழிலை விஸ்தரிப்பதற்கும் மற்ற பாங்குகள் ரிசர்வ் பாங்கிற்குத் தங்கள் திட்டத்தை அனுப்பி அனுமதி பெற்ற பின்னரே அவ்வாறு செய்ய வேண்டுமென்றும் கூறுகின்றனர். இவர்களுக்கு ஒரு முழுத்தொகை மான்யமாகக் கொடுக்கவேண்டும் என்றும் அதன் வழியாகப் பாங்கு நிறுவனத்தின் ஆரம்பச் செலவின் ஒரு பகுதியை ஈடு செய்யலாம் என்றும் கருதப்பட்டது. அதேபோன்று புதிய பாங்குகள் ஆரம்பகாலத்தில் வசூலிக்கும் வைப்புகள்மீது ஓர் அளவுக் கமிஷன் கொடுக்கலாம் என்றும் முடிவு செய்துள்ளது.[2] ஒரு குறுகிய காலத்துக்குள் அதாவது ஐந்து ஆண்டுகளுக்குள் மற்றொரு பாங்கு தனது கிளையை வளர்ச்சி பெறாத வட்டாரத்தில் திறக்க ரிசர்வ் பாங்கு அனுமதிக்கக் கூடாது. சிறு நகரங்களிலும் பட்டணங்களிலும், பாங்கு வளர்ச்சி ஏற்படாதிருப்பதன் காரணம் என்னவெனில் பாங்குகள் வைத்து நடத்தப்படுவதில் ஏற்படும் கட்டுக்கடங்காத ஆரம்பச் செலவுகளே எனலாம். இதற்கான அடிப்படைக் காரணம் தொழில் தகராறும் அம்மாதிரியான தொழில் தகராறில் செய்யப்பட்ட கோர்ட்டுத் தீர்ப்புகளுமாகும். 1949 முதல் 1952 வரை அட்டவணையிடப்பட்ட பாங்குகளில் வைப்புகள் ரூ. 647·7 கோடியிலிருந்து ரூ. 650·8 கோடியாக அதிகரித்தது. ஆயினும், பாங்குகளின் எண்ணிக்கை 2,852-லிருந்து 2,692 ஆகக் குறைந்து, பாங்குச் சிப்பந்திகளின் செலவுகள் ரூ. 9·50 கோடியிலிருந்து ரூ. 12·84 கோடியாக அதிகரித்தது. சிப்பந்திச்

1. எட்டாம் பத்தியைப் பார்க்க.

2. தனியார் துறையில் நிதியைப்பற்றி இக் குழுவினர் விட்ட அறிக்கை, பத்தி 131.

செலவு விகிதம் வைப்புகளின் அடிப்படையில் 1948-ல் 1.09 சத வீதத்தில் இருந்து 1952-ல் 1·80 சதவீதமாக அதிகரித்தது. 65 சதவீதம்[1] ஏற்றத்தைப் பெற்றது. ஒவ்வொரு பாங்கு அலுவல் கம்பெனியாகக் கணக்கெடுத்ததில் ரூ. 30 ஆயிரத்திலிருந்து ரூ. 48 ஆயிரமாக அதிகரித்து 60 சதவீத ஏற்றத்தைக் கொடுத்தது.[2] சிப்பந்திச் செலவுகளும் பாங்கு நடத்தும் செலவுகளும் மிதமிஞ்சி அதிகரித்துக்கொண்டே போனால், இந் நாட்டில் பாங்குகளின் நிலை மிகவும் கவலைக்கு இருப்பிடமாக அமையும். ஷராப் குழு வினர் கூலி, சம்பளம் இவை சம்பந்தமாகத் தக்க ஆய்வுகளை நடத்த வேண்டுமென்றும், அதற்கென மத்திய அரசினர் உடனே ஒரு வல்லுநர் குழுவினை நியமனம் செய்து கூலியும் சம்பளமும் கொடுக்கும் முறைகளை விஞ்ஞான ரீதியாக அமைத்துப் பாங்குகளை நடத்த ஏற்படும் செலவுகளை எவ்வாறு குறைக்கலாம் என்ற வழிகளைக் கண்டுபிடிக்க வேண்டும் என்றும் கூறியுள்ளனர். ஷராப் குழுவினர் அமெரிக்க நாட்டில் உள்ளதுபோலப் பாங்கு நடத்தும் முறையை வன்மைப்படுத்த, வைப்பு இன்சூரன்சுத் திட்டத்தை நடப்பில் கொண்டுவந்து பொதுமக்களின் நம்பிக்கையைப் பெறவேண்டும் என்று பரிந்துரை செய்தார்கள்.

தற்போதுள்ள நிலைமையில் விவசாய உற்பத்திகள் அனைத்தும் கடன் கொடுப்போருக்கே கிடைக்கின்றன என்பது வெள்ளிடைமலை. விவசாயி பட்ட கடனைத் தீர்க்கவே தான் உழைத்து விவசாயப் பலனைக் கடன் கொடுப்போருக்குக் கொடுத்துவிடுகிறான். பெற்ற கடனைத் தீர்த்ததுபோக எஞ்சியுள்ள பணத்தைப் பொன், வெள்ளி, அணிகலன்களை வாங்குவதிலும் ஆடம்பரச் செலவுகளிலும் ஈடுபடுத்துகிறான். இவ்வாறு செய்யப்பட்ட சேமிப்பு, அளவில் மிகவும் குறைவாக இருப்பதாலும் தக்க சமயத்தில் பயன்பெறாது அமைவதாலும் இவை பயனுள்ள செலவுகளுக்குக் கிடைப்பதில்லை. இப் பயனற்ற பதுக்கல் முறையைக் குறைக்கப் பல்வேறு யோசனைகள் கூறப்பட்டன. ஹில்டன் யங் குழுவினர் பொன் பத்திரங்களை ஏற்படுத்தி அவற்றில் பணத்தை ஈடுபடுத்தும்படிக் கூறினார்கள். பீகார், ஒரிசா இராச்சிய, பாங்குக் குழுவினர் மகளிர்க்கான தனிப்பட்ட ரொக்கப் பத்திரங்களை உருவாக்கி அவைகளை ஸ்திரீதனப் பத்திரம் என வழங்கி நடப்பில் உள்ள வட்டி விகிதத்திலும் கூடுதலான வட்டி விகிதத்தை அதற்குக் கொடுக்க வேண்டுமென்று முடிவு செய்தார்கள். இந்திய அரசினரும் 1954ஆம் ஆண்டு மே

1. அமெரிக்க நாட்டில் 1952-ல் இந்த விகிதம் 0·84 சதவீதமே.

2. தனியார் துறையில் நீதியைப்பற்றி இக் குழுவினர் விட்ட அறிக்கை, பத்தி 108.

மாதம் 24ஆம் தேதி வெளியிட்ட தகவல்படி தேசீயத் திட்டக் கடனுக்காகப் பொன் அணிகலன்களை நடப்புச் சந்தை விகிதத்தில் பணமதிப்பிட்டு, சேமிப்புப் பத்திரங்களுக்குச் செலுத்த அனுமதித்தனர். இதன் விளைவாகப் பதுக்கலில் உள்ள பொன், வெள்ளி அனைத்தும் தேசீயத் திட்டத்திற்குப் பயனுகும் எனக் கருதப்படுகிறது.

கிராமங்களில் சேமிப்புகளின் பெரும்பகுதி, பெருநிலக்கிழார்கள், கடன்கொடுப்போர், வர்த்தகர்கள், மில் சொந்தக்காரர்கள், கிராமச் சிறுதொழில் உரிமையாளர்கள் இவர்களால் சேமிக்கப்படுகின்றன. சில சிறிய நிலக்கிழார்களும், வாரப் பயிரிடுவோர்களும் விலையேற்றத்தினுல் அதிகப்படியான ஆதாயமடைந்துள்ளனர். இவர்களும் சேமிப்புச் செய்யலாம். நிலத்தில் பணியாற்றுவோரும் அதிகப்படியான கூலிபெறுகிறபடியால் அவர்கள்கூடச் சேமிப்பதற்கு முயலக்கூடும். தபால் அலுவலகங்களில் 1882, 1883 ஆம் ஆண்டுகளில் சேமிப்புக் கணக்கினைத் துவக்கினர். ஆண்டுதோறும் அது பெருகி வளர்ந்துகொண்டே வருகிறது. 1937-38-ல் (ஆங்கில ஆட்சிக் காலத்தில்) ஏறத்தாழ 5 லட்சம் கிராமங்களில், 12,631 சேமிப்புக் கணக்குகள் நடத்தப்பட்டு வந்தன. இவைகளில் போடப்பட்ட வைப்புத் தொகை 1913-14-ல் ரூ. 10,99 லட்சத்திலிருந்து 1937-38-ல் ரூ. 43,27 லட்சமாகவும் 1950-51-ல் 97,48 லட்சமாகவும் பெருகியது. இந்தச் சேமிப்புப் பாங்குகளைப் பொது மக்கள் விரும்பும் முறையில் நடத்தக் கீழ்க்கண்ட யோசனைகள் தரப்பட்டுள்ளன. அவையாவன: (1) ஆண்டுதோறும் பாங்கில் இடப்படும் தொகைக்கு உச்சவரம்பு இடாது இருக்க வேண்டும். (2) அதிகப்படியான வட்டி விகிதத்தைக் கொடுக்க வேண்டும். (3) பாங்கில் பணம் வாங்குவதற்கு, செக் முறையை அனுமதிக்கவேண்டும். ஒவ்வொரு வைப்பாளருக்கும் ரூ. 750 ஆண்டுதோறும் பாங்கில் போடுவதற்கு அனுமதி கொடுத்திருந்தார்கள். 1943-ல் இருந்து இதை இரட்டிப்பாக்கி ரூ. 1,500 ஆக அதிகரித்தனர். தனி நபர் கணக்கின் உச்சவரம்பு ரூ. 10 ஆயிரத்திலிருந்து ரூ 15 ஆயிரமாகவும், கூட்டுக் கணக்கினை ரூ. 20 ஆயிரத்திலிருந்து ரூ. 30 ஆயிரமாகவும் 1952ஆம் ஆண்டு ஏப்ரல் முதல் தேதியிலிருந்து அமலுக்குக் கொண்டு வந்தார்கள். அதே தேதியிலிருந்து வட்டி விகிதத்தை 2% ஆக அதிகரித்து ரூ. 10 ஆயிரத்திற்கு மேற்பட்ட வைப்புகளுக்கு $1\frac{1}{2}$% கொடுப்பதென்றும் முடிவு செய்யப்பட்டது.[1] செக் மூலம் பணத்தைத் திரும்பப் பெறுவதில் சில சிக்கல்கள் இருப்பதனுலும் பலவகைப்பட்ட பாங்குக் கணக்கு முறைகளை நடத்தவேண்டியிருப்பதனுலும் அதிகப்படிப் பணியாளர்களை நியமனம் செய்தால்தான் இது எளிதில்

1. பழைய வட்டி விகிதம் ரூ. 200 வரை $1\frac{1}{2}$%, 200க்கு மேல் 2% இருந்தது.

நடைபெறும். இவ் வைப்புக் கணக்குகள் நீங்கலாக, ரொக்க முதலீட்டுப் பத்திரங்கள், பாதுகாப்பு முதலீட்டுப் பத்திரங்கள் இவைகளையும் தபால் அலுவலகங்கள் விற்கின்றன.

கிராமப் பாங்கு விசாரணைக் குழுவினர், இந் நாட்டில் மிகச் சிக்கனமாகச் சேமிப்புக் கணக்கினை நடத்துவோர்கள் தந்தி, தபால் அலுவலகத்தினர்தான் என்று சேமிப்புக் கணக்குகளைப்பற்றிக் கூறுகையில் குறிப்பிட்டுள்ளனர். அவர்கள் செய்யும் பல்வேறு பணிகளில் இதுவும் ஒன்றாகும். எனவே, கிராமங்கள்தோறும் தபால்-தந்தி நிறுவனங்களை அமைத்து அவைகளின் மூலம் சேமிப் புக் கணக்கினைத் திறக்கும்படி ஏற்பாடு செய்யவேண்டுமென்று யோசனை கூறியுள்ளனர். கிராமங்களில் உள்ள உபரித் தொகை யைச் சேமிப்பாகப் பெறும் நோக்கத்துடன்தான் தபால் நிலையங் களைத் திறக்கவேண்டும் எனக் கூறியுள்ளது. இந்தச் சேமிப்பு சம்பந்தமாகப் பணியில் ஈடுபடுபவர் கிராம மக்களுக்குப் பயனுள்ள முறையில் பணியாற்றுவதும் தேவைக்கேற்ப வசதிகள் செய்து கொடுப்பதும் மிகவும் அவசியம் எனலாம். ஒழுங்காக மக்களிடையே சென்று தகுந்த விளக்கங்களைத் தந்து பிரசார வேலையில் ஈடுபட்டால் நல்ல பலனைக் காணலாம் என்று இயம்பியுள்ளனர்.[1]

13. **ரிசர்வ் பாங்கு :** ஒரு மத்திய பாங்கு நாட்டிற்கு எவ்வளவு இன்றியமையாதது என விளக்கத் தேவையே யில்லை. நாட்டின் செலாவணி, கடன்வசதி, வர்த்தகம், பாங்கு முறை இவைகளை ஒழுங்குபெறச் சீரமைத்துத் திட்டப்படுத்திக் கொண்டு வர ஒரு மத்தியப் பாங்கு ஒவ்வொரு நாட்டிலும் ஏற்பட்டுள்ளது. ஆயினும், இச் செயல்களைக் கண்காணிக்க 1935 வரை நம் நாட்டில் மத்திய பாங்கு நிறுவப்படவில்லை. பொருளாதாரக் காரணங்கள் ஒரு பக்கம் இருக்க, நாட்டில் தோன்றும் அரசியல் வளர்ச்சியும்[2] சுய ஆட்சி வேண்டுமென்ற அடிப்படைக் காரணத் தினாலும் மக்கள் இந் நாட்டிற்கு ஒரு தனி மத்திய பாங்கு வேண்டு மென்று கோரியதில் எவ்விதத் தவறும் இல்லை. இந் நாட்டில் மத்திய அரசினர் நடத்தும் நிதி இலாக்காவை ஒரு மந்திரியிடம் ஒப்படைக்க, அதனால் ஏற்பட்ட ஆட்சி மாற்றங்களின்[3] அடிப் படையில் ரிசர்வ் பாங்கு உருவாகியது எனலாம். இந்தப் பாங்கு

1. *கிராமப் பாங்குவிசாரணைக் குழுவினரின் அறிக்கை, பத்தி 50.*
2. *பி. வேரவெட் எழுதிய தி மிர்ரர் ஆப் இன்வெஸ்ட்மெண்ட், பக்கம் 19.*
3. *எஸ். கே. முரஞ்சன் எழுதிய மார்டன் பாங்கிங், பக்கம் 247.*

திறக்கப்பட்ட சமயத்திலிருந்து அண்மையில் சிறிதுகாலம் வரை (தனியார்), பங்குதாரர் பாங்காக இருந்தது. அதற்கு ரூ. ஐந்து கோடி மூலதனமாக வைத்து அதன் பங்கு ஒன்றினை ரூ. 100 அளவில் பிரித்து அளவிட்டிருந்தார்கள். அதில் மத்திய அரசினர் ரூ. 2,20,000 அளவிற்கு மூலதனத்தைப் போட்டிருந்தனர். இந்தப் பாங்கு தேசீய மயமாக்கப்பட்டவுடன் 1948 ஆம் ஆண்டு ரிசர்வ் பாங்குச் சட்டம் இயற்றப்பட்டு 1949 ஆம் ஆண்டு ஜனவரி முதல் தேதியன்று ரூ. 100 மதிப்புள்ள பங்கு ரூ. 118·10 அணுவாக மதிப்பீடு செய்யப்பட்டது. இது 1947ஆம் ஆண்டு மார்ச்சு மாதம் முதல் 1948 பிப்ரவரி மாதம் வரை சராசரிச் சந்தை விலையில் மதிப்பீடு செய்யப்பட்டது. இந்தப் பணத்தைத் திருப்பிக் கொடுப்பதற்காக ஒரு பகுதியை ரொக்கமாகவும் மற்றொரு பகுதியை 3% சர்க்கார் பிராமிசரி நோட்டாகவும் கொடுத்தார்கள்.

இந்தப் பாங்கிற்கான நெறியாளர் குழுவில் 14 பேர் உள்ளனர். அவர்களில் ஒருவர் கவர்னர், இரண்டு உதவிக் கவர்னர்கள், பத்து நெறியாளர்கள். இவர்கள் அனைவருமே அரசினரால் நியமிக்கப்படுகின்றனர். இவர்களுடன் ஓர் அரசாங்கப் பணியாளரும் இருப்பார். பம்பாய், டெல்லி, சென்னை, கல்கத்தா ஆகிய வட்டாரங்களுக்கான நான்கு நெறியாளர்கள் மத்திய போர்டில் உறுப்பினராக இருப்பார்கள். இதர ஆறு பேர்கள் ஏனைய வகுப்புகளுக்குப் பிரதிநிதிகளாக இருப்பார்கள். பம்பாய், கல்கத்தா, டெல்லி ஆகிய இடங்களில் உள்ள உள்ளூர்ப் போர்டு கண்காணிக்கிறது. இந்த நெறியாளர்களும், அரசினரால் நியமனம் செய்யப்படுகின்றனர். ரிசர்வ் பாங்கு இங்கிலாந்தில் உள்ள மத்திய பாங்கின் அமைப்புப் போன்றே உருவாகியுள்ளது. இதிலும் இரண்டு தனிப்பட்ட பகுதிகள் உள்ளன. அவையாவன : வெளியீட்டு இலாக்காவும் பாங்கு இலாக்காவும். இவற்றுடன்கூட விவசாயக்கடன் இலாக்காவும் ஒன்று உள்ளது. விவசாயக்கடன் இலாக்காவில் தேர்ச்சிபெற்ற பணியாளர்கள் உள்ளபடியால், விவசாய சம்பந்தமான ஆராய்ச்சிகள் அவர்களால் செய்யப்படுகின்றன. 1956ஆம் ஆண்டு ரிசர்வ் பாங்குத் திருத்தச் சட்டம் கொண்டுவருமுன்னரே வெளியீட்டு இலாக்காவின் ஆஸ்திகள் வருமாறு : அதற்கு நிகரான பொறுப்புகள், மதிப்புகள், பொன் நாணயங்கள், பொன் கட்டிகள், ஸ்டர்லிங் முதலீட்டுப்பத்திரங்கள், வெள்ளி நாணயங்கள், வெள்ளி முதலீட்டுப் பத்திரங்கள் முதலியவை ஆகும். மொத்த ஆஸ்தியில் 40%க்குக் குறையாமல் பொன் நாணயமும், பொன் கட்டிகளும் இருக்கவேண்டுமென்றும், அவை எக் காலத்திலும், 8·47512 குண்டுமணி எடை மதிப்பிலுள்ள பொன்னுகவும், ரூபாய் அளவீட்டில் தோலா ஒன்றுக்கு ரூ. 21-3-8

விகிதத்தில் ரூ. 40 கோடி மதிப்பிற்குக் குறையாமலும் இருக்க வேண்டும். இதில் 60% ரூபாய் நாணயமாகவும், ரூபாய்ப் பத்திரங்களாகவும், இந்தியாவில் கொடுபடத்தக்க உண்டியல் பத்திரங்களாகவும் இருக்கவேண்டும். ஆரம்பகாலத்தில் ரூபாய்ப் பத்திரங்களில் இடப்படும் தொகை ரூபாய் 50 கோடி எனத் தீர்மானிக்கப்பட்டு அது மொத்த ஆஸ்தியில் [1] பங்காக இருக்கவேண்டுமென்று கட்டுப்படுத்தப்பட்டது. இக் கட்டுப்பாடு 1941-ல் போட்ட அவசரச் சட்டத்தில் நீக்கப்பெற்றது.

விடுத்தல் இலாக்காவின் ஆஸ்திகள் ஸ்டர்லிங் முதலீட்டுப் பத்திரங்களாகவும், முதல்தரமான உண்டியல் பத்திரங்களாகவும், ஐந்தாண்டுகளுக்குள் திரும்பக் கிடைக்கக்கூடிய ஆங்கில நாட்டின் அரசினர் முதலீட்டுப் பத்திரங்களாகவும் இருக்கலாம். இந்தப் பாங்கு தேசீயப் பாங்காக மாறியதும், விடுத்தல் இலாக்காவின் ஆஸ்திகளை, பன்னாட்டுச் செலாவணிக் குழுவில் உறுப்பாக உள்ள எந்த நாட்டின் முதலீட்டுப் பத்திரங்களாகவும் வைத்துக்கொள்ள அநுமதிக்கப்பட்டது. மேற்படி இலாக்காவில் (1) 90 நாட்களில் திருப்பிக் கிடைக்கக்கூடிய இரு மதிப்பிற்குரிய கையொப்பமிட்ட உள்நாட்டு உண்டியல் பத்திரங்களையும் (2) ஐந்து ஆண்டுகளில் திருப்பிக்கிடைப்பதாக இருப்பின் அயல்நாட்டு அரசின் முதலீட்டுப் பத்திரங்களையும் வைத்துக்கொள்ளலாம். விடுத்தல் இலாக்காவின் ஆஸ்திகளின் மதிப்பில் செலாவணித் தாள்களும் நாணயங்களும் வெளியீடு செய்யப்படும். செலாவணித்தாள்களை வெளியீடு செய்யும் ஏகபோக உரிமை ரிசர்வ் பாங்கிற்கு உண்டு. 567 ஆம் பக்கத்தில் வரும் அட்டவணையில் ரிசர்வ் பாங்கின் விடுத்தல், பாங்கு இலாக்காக்களிலுள்ள ஆஸ்திகள், பொறுப்புகள் ஆகியவற்றின் நிலை விளக்கப்பட்டுள்ளது.

1956ஆம் ஆண்டு ரிசர்வ் பாங்குத் திருத்தச்சட்டம் ஒன்று வெளியாகியது. அதன்படி, சுருங்கிவிரியும் தன்மையுடைய ரிசர்வ் விகிதங்களை அமைக்கவும், அட்டவணைப்படுத்தப்பட்ட பாங்குகள் வைத்துக்கொள்ளவேண்டிய ரொக்க ரிசர்வ் விகிதத்தை 5% முதல் 20% வரை வைப்புப்பொறுப்புக்களின்மீது கணக்கிட்டும் 2% முதல் 8% வரை காலப் பொறுப்புகளின்மீது கணக்கிட்டும் அதிகப்படுத்தும்படி உத்தரவிட இந்தப் பாங்கிற்கு அதிகாரம் கொடுக்கப்பட்டுள்ளது. நடப்பில் இந்த விகிதங்கள் முறையே 5% ஆகவும் 2% ஆகவும் உள்ளன.

இச் சட்டம் செலாவணி ரிசர்வ் சம்பந்தப்பட்ட பிரிவுகளையும் மாற்றியமைத்திருக்கிறது. (பிரிவுகள் 33ம் 37ம்) கிட்டத்தட்ட

## ரிசர்வ் பாங்கின் பொறுப்புகளும் ஆஸ்திகளும் கொண்ட அட்டவணை

(இதில் காணப்படும் எண்கள் கோடி ரூபாய்க் கணக்கில் குறிக்கப்பட்டுள்ளன.)

| பொறுப்புகள் | 1949 | 1951 | 1953 | 1954 | ஆஸ்திகள் | 1949 | 1951 | 1953 | 1954 |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| மூலதனமும் ரிசர்வ் களும் ... | 10·0 | 10·0 | 10·0 | 10·0 | பொன் நாணயமும் கட்டியும்[1] ... | 40·1 | 40·0 | 40·0 | 40·0 |
| புழக்கத்தில் உள்ள செலாவணித்தாள் | 1,137·7 | 1,205·7 | 1,121·8 | 1,178·8 | அயல்நாட்டு ஆஸ்திகள் .. | 859·3 | 838·4 | 712·4 | 738·2 |
| வைப்புகள் ... | ... | ... | ... | ... | ரூபாய் நாணயம்[2] ... | 48·6 | 61·1 | 90·2 | 100·3 |
| மத்திய அரசினர் ... | 152·8 | 173·4 | 121·0 | 97·7 | செலாவணித்தாள்கள். | 24·2 | 24·7 | 23·6 | 23·2 |
| இதர அரசினர்கள் . | 20·3 | 16·2 | 18·7 | 21·7 | ரூபாய் செக்யூரிட்டிகள் | 500·8 | 583·1 | 525·8 | 502·5 |
| பாங்குகள் ... | 67·4 | 60·5 | 47·5 | 52·1 | கடன்களும் முன் பணமும்— | | | | |
| இதரர்கள் ... | 65·5 | 68·6 | 59·7 | 42·2 | அரசினருக்கு ... | 3·7 | 5·2 | 2·4 | 1·2 |
| இதர பொறுப்புகள் ... | 39·7 | 42·7 | 48·9 | 46·1 | இதரருக்கு ... | 7·9 | 9·5 | 16·4 | 27·1 |
| | | | | | வாங்கி, தள்ளுபடிக் குக் கொடுக்கப்பட்ட உண்டியல் ... | 4·9 | 6·7 | 9·3 | 8·2 |
| | | | | | இதர ஆஸ்திகள் ... | 4·1 | 8·4 | 7·3 | 8·2 |
| | 1,493·5 | 1,577·1 | 1,427·6 | 1,448·8 | | 1,493·5 | 1,577·1 | 1,427·6 | 1,448·8 |

1. ட்ரெண்ட் அண் ப்ராக்ரஸ் ஆப் பாங்கிங் இன் இண்டியா, 1953 அண் 1954. தோலா எடை ரூ. 21-3-10 என மதிப்பிடு செய்யப்பட்டது.

2. ஒரு ரூபாய் நோட்டுகளையும் (தாள்களும்) இதர சிறிய நாணயங்களையும் சேர்த்துக் கணக்கிடப்பட்டுள்ளது.

ரூ. 400 கோடி அளவில் அயல்நாட்டு முதலீட்டுப் பத்திரங்களும் ரூ. 115 கோடி அளவில் பொன்னுக விடுத்தல் இலாக்காவிலும் வைத்துள்ளன. ஆஸ்திகள் சப்பந்தமாகத் தாற்காலீக நிறுத்தங்கள் செய்யப்பட்டுள்ளன. இவைகள் அயல்நாட்டு முதலீட்டுப் பத்திரங்களில் போடப்பட்டு விடுத்தல் இலாக்காக்களில் வைக்கப் பட்டுள்ளன. பாங்கியிலுள்ள பொன்னைப் பன்னாட்டுச் செலாவணி நிறுவனத்தின் மதிப்பீடான ஒரு தோலா ரூ 62-8-0 (அதாவது ஓர் அவுன்சு 35 டாலர்) என்ற விகிதத்தில் மதிப்பீடு செய்யவும் இச் சட்டம் இடமளிக்கிறது.

பாங்கு இலாக்கா பெருவாரியான பாங்கு வர்த்தகத்தைக் கவனிக்கிறது. அரசினரிடமிருந்தும், உள்ளூர்ப் பஞ்சாயத்து, நகராட்சிகளிடமிருந்தும், பாங்குகளிலிருந்தும், தனி நபர்களிட மிருந்தும், வட்டியின்றி வைப்புகளைப் பெறலாம். உண்டியல் களையும், பிராமிசரி நோட்டுகளையும் வாங்கி விற்றும், மறுமுறை மாற்றுத் தள்ளுபடி செய்தும் வர்த்தகம் செய்யலாம். (1) மேற்படி உண்டியல் பத்திரங்கள் இந்தியாவிலேயே எழுதப்பட்டுக் கொடுக்கப்படவேண்டியதாகவும் வர்த்தக அடிப்படையில் தோன்றியும் இருக்கவேண்டும். (2) மதிப்பிற்குரிய இரண்டு கையொப்பங்கள் உள்ளதாக இருக்கவேண்டும். அவற்றுள் ஒன்று அட்டவணைப்படுத்தப்பட்ட பாங்காக அமையவேண்டும். (3) 90 நாட்களில் திருப்பக்கூடியதாக இருக்கவேண்டும். வாங்கிவிற்றல், மாற்றுத் தள்ளுபடிக்கு விடல், இவற்றிற்கான காலவரம்பு 90 நாட்களாகும். இந்தப் பாங்கு அயல்நாட்டுச் செலாவணிகள் மற்றும், இதர அயல்நாட்டு முதலீட்டுப்பத்திரங் களை வாங்கி விற்கலாம். இந்திய இராச்சியங்களுக்கும், நகராட்சி களுக்கும் அட்டவணைப்படுத்தப்பட்ட பாங்குகளுக்கும் மாகாண அல்லது இராச்சியக் கூட்டுறவுப் பாங்குகளுக்கும், கோரும்போது திருப்பித்தரத்தக்க காலவரையில் அல்லது குறிப்பிட்ட காலவரை யறையில் அல்லது 90 நாட்களுக்கு மேற்படாத எல்லையுள் திருப்பித்தரத்தக்க கடன்களையோ, முன்பண வசதியையோ கொடுக்க முன்வருகிறது. மத்திய அல்லது உள்ளூர் ஆட்சியின ருக்கு வசதிக்கடன்களாக 90 நாட்களில் திருப்பித் தரத்தக்க முன் பணமாகக் கடனுதவி அளிக்கக்கூடும். தனது இதர அலுவலகங் கள்மீதும் தனது பதிலாள் நிறுவனங்கள்மீதும் பணம் அனுப்பு வதற்கு வசதியாக 'டிமான்டு டிராப்டு'களும் கொடுக்கிறது ; அரசினர் கடன்பத்திரங்களையும் வாங்கி விற்கிறது. 30 நாட் களுக்கு மேற்படாத கடன் வசதி ஒப்பந்தத்தை உள்ளூர் அட்டவணைப்படுத்தப்பட்ட பாங்குகளுடனும் அல்லது இதர நாட்டு மத்திய பாங்குகளுடனும் செய்துகொள்ளக் கூடும்.

**14. மத்திய பாங்கின் அலுவல்கள் :** ரிசர்வ் பாங்கு அரசினருக்குப் பணியாற்றும் பாங்கு என நாம் அறிவோம். அரசினருக்காகப் பொதுக்கடன் பகுதியைச் செவ்வனே நடத்துவ தோடு, பாங்குத் தொழிலையும் மேற்கொண்டு அரசினருக்காகச் செலாவணி மாற்றம் செய்தும், பணம் அனுப்பியும் அரசினர் கணக்கிற்காகப் பணத்தை ஏற்றுக்கொண்டும், பணம் பட்டு வாடாச் செய்தும் வருகிறது. செலாவணித்தாள், கடன் இவை களைச் சீரிய முறையில் நடத்துவதற்காகப் பணம் பெறுதலையும், பாங்கு ரிசர்வ்களையும் செம்மையாக அமைத்துக் கொள்கிறது. அயல்நாட்டுச் சந்தைகளில் ரூபாயின் வெளிமதிப்பைச் சீரிய முறையில் வைப்பதற்கு இது பாடுபடுகிறது.

பாங்கு விகிதத்தை மாற்றியமைப்பதும், பொதுச் சந்தைகளில் வாங்கி விற்பனை செய்ய முன்வருவதுமான கடன் கட்டுப்பாட்டு முறைகளை அனுசரிப்பதோடு, வர்த்தகப் பாங்குகளின் ரொக்க ரிசர்வ் எவ்வளவு இருக்கவேண்டுமென்றும் தீர்மானிக்கிறது. ரிசர்வ் பாங்கு மற்ற பாங்குகளின் கொள்கைகளை அவ்வப்போது பரிசீலனை செய்தும் கட்டுப்பாடு செய்கிறது. பாங்குகளுக்குப் போதிய பிரச்சார வேலை செய்தும் கடன் முறையைக் கட்டுப்பாடு செய்கிறது.

அட்டவணைப்படுத்தப்பட்ட ஒவ்வொரு பாங்கும் தனது நடப்புப் பொறுப்புகளின் மீது 5%ம், காலவரம்புப் பொறுப்பின் மீது 2%ம் ரிசர்வாக, ரிசர்வ் பாங்கில் கட்டி வைக்கவேண்டியது. இந்த ரிசர்வுத் தொகை அன்றுட வைப்பு, காலவரம்புப் பொறுப் பின் இருப்பு ஆகியவைகளைப் பொறுத்து அமையும். ஏதாவது ஒரு பாங்கு இம் முறையினின்று வழுவினுல், உடனே ரிசர்வ் பாங்கு அதனை அட்டவணையிலிருந்து நீக்கி, முறைப்படித் தண்டனையும் கொடுக்கலாம். ஒவ்வோர் அட்டவணைப்படுத்தப் பட்ட பாங்கும் வாராந்தரத் தகவல்களில் ரிசர்வ் பாங்கிற்கு நடப்பு வைப்பு, கால வைப்பு, கையிருப்பில் உள்ள ரொக்கம், இந்தியா வில் தள்ளுபடி நீக்கி மாற்றிக் கொடுத்த உண்டியல்கள் ஆகிய வைகளைப் பற்றிய விவரங்களைக் கொடுக்கின்றன. பொதுச் சந்தையில் இதர பாங்கு வர்த்தகரைப் போலவே, பொன் நாணயம், பொன்கட்டி, மற்றும் அரசினர் பத்திரங்கள் இவைகளை வாங்கி விற்பதற்கு ரிசர்வ் பாங்கிற்கு அதிகாரம் உண்டு. இந்திய நிலைமையில் அயல்நாட்டுச் செலாவணிகளை வாங்கி விற்பதற்கும் சட்டம் இயற்றப்பட்டுள்ளது. இரண்டாம் உலகப் போருக்கு முன்னர், பெருமளவில் எந்தப் பாங்கும், சந்தையில் பத்திரங்களை வாங்கி விற்க முன் வந்ததாகத் தெரியவில்லை. ஓரளவுக்கு நடந்த

| | 1945 டிசம்பர் | 1948 டிசம்பர் | 1950 டிசம்பர் | 1951 டிசம்பர் | 1952 டிசம்பர் | 1953 டிசம்பர் | 1954 டிசம்பர் |
|---|---|---|---|---|---|---|---|
| கருவூல உண்டியல்கள் ... | 4·69 | 0·98 | 1.1 | 0·7 | 5·3 | 2·8 | 1.9 |
| கடன் பத்திரங்கள் காலாவதியாகும் ஆண்டு : ... | | | | | | | |
| 5 ஆண்டுகளுக்குள் ... | 25·09 | 28·76 | 31·5 | 25·9 | 33·4 | 30·3 | 24·0 |
| 5 முதல் 10 ஆண்டுகளுக்குள்ளாக ... | 25·22 | 20·67 | 22·7 | 47·3 | 42·9 | 47·9 | 58·6 |
| 10 முதல் 15 ஆண்டுகளுக்குள்ளாக ... | 19·06 | 31·92 | 29·7 | 15·3 | 8·5 | 15·1 | 11·5 |
| 15 ஆண்டுகளுக்குப் பிறகு ... | 25·94 | 17·69 | 15·0 | 10·8 | 9·8 | 3·8 | 3·9 |

விற்பனை சர்க்கார் பத்திரங்களின் விலையை நிரந்தரமாக்கவேண்டு மென்ற நோக்கத்துடன்தான் நடந்தது எனலாம். 1951-52-ல் இந் நாட்டில் இருந்த பருவகாலப் பணமின்மையைப் போக்கவே, அரசினர் கடன் பத்திரங்களை இந்தப் பாங்குப் பொதுச்சந்தைக்கு வந்து வாங்க முன்வந்தனர். அயல்நாட்டுச் செலாவணி சம்பந்த மான எல்லாப் பாங்கு வர்த்தகமும் ரிசர்வ் பாங்கின் அயல்நாட்டுச் செலாவணிக் கட்டுப்பாட்டு இலாக்காவின்மூலம் நியமப்படி நடத் தப்பட்டுவருகிறது.

ரிசர்வ் பாங்கு பிறப்பிக்கும் உத்தரவுப்படி எவ்வகைக் கடன் பத்திரங்களை உறுப்பினர் பாங்குகள் வைத்துக் கொள்ள வேண்டுமோ அவற்றின்படியே இந்தப் பாங்குகள் பணியாற்ற வேண்டும். வர்த்தகப் பாங்குகள், முதலீடு செய்யும் கடன் பத்திரங்களின் கால வரம்பினைச் சீரான வகையில் ஆய்வு செய்து, நீண்ட காலக் கடன் பத்திரங்களில் தங்கள் பணத்தொகையை ஈடு படுத்த வேண்டாம் என்றும், குறைந்த கால வரம்புள்ள கடன் பத்திரங்களிலேயே ஈடுபடுத்தவேண்டுமென்று உறுப்பினர் பாங்கு களுக்கு ரிசர்வ் பாங்கு தாக்கீது கொடுத்து அவ்வப்போது நிலைமையைக் கண்காணித்து வந்தது அட்டவணைப்படுத்தப் பட்ட பாங்குகள் நீண்ட காலக் கடன் பத்திரங்களில் (15 ஆண்டுகள் கழித்து முடிவடையக்கூடியவை) 1950-ல் செய்த 15% முதலீடு 1951-ல் 11% ஆகக் குறைக்கப்பட்டது. பிற்காலங்களில் இந்த ஈடுபாட்டு விகிதம் வெகுவாகக் குறைந்துகொண்டு வந்ததை முன் பக்க அட்டவணையில் விவரப்படுத்தப்பட்டிருக் கிறது.[1]

பொதுச் சந்தையில் வாங்கி விற்பனை செய்வதை, கல்கத்தா, பம்பாய் ரிசர்வ் பாங்குகள் அதிக அளவில் செய்கின்றன. சென்னை யில் வெகு குறைந்த அளவிலேயே இது நடைபெறுகிறது

1935 ஆம் ஆண்டு ஜூலை மாதம் 4 ஆம் தேதி முதன் முதலாக ரிசர்வ் பாங்கு, பாங்கு விகிதத்தை $3\frac{1}{2}$% ஆக அதிகார பூர்வமாக வெளியிட்டது. சுலபமான பணப்புழக்கம் இருந்த காரணத்தால் அவ்வாண்டிலேயே நவம்பர் மாதம் 28 ஆம் தேதி 3% ஆகக் குறைக்கப்பட்டது. இந்தப் பாங்கு விகிதம் தொடர்ந்து 1951 ஆம் ஆண்டு நடுப்பகுதி வரையில் இருந்து பின்னர், பணவீக்கத்தைக் குறைக்கும் பொருட்டு, $3\frac{1}{2}$% ஆக அதிகரிக்கப்பட்டது.

1. ட்ரெண்ட் அண்ட் ப்ரோக்ரெஸ் ஆப் பாங்கிங் இன் இண்டியா, 1949, 1958 அறிக்கைகள். இதில் காணப்படும் சதவிதங்கள் புள்ளியின்று இரண்டு இடங்களுக்கு மட்டும் காட்டப்பட்டுள்ளன. எனவே, அவைகளின் கூட்டுத்தொகை 100 ஆகா.

கொரியாப் போர் உருவெடுத்த உடனேயே, அமெரிக்க நாட்டில் பாங்குத் தொகைகளின் எண்ணிக்கை ஒரு திட்டமாகவே அமைந்த காரணத்தாலும், பங்குச் சந்தையில் அதிகப்படியான ஏற்றத் தாழ்வுகள் ஏற்பட்ட காரணத்தாலும், 1951ஆம் ஆண்டு அமெரிக்க நாட்டில் கடன் சம்பந்தமாகப் பணவீக்கம் ஏற்பட்டது. பாங்குக் கடன் வசதியை அதிகரிக்கும் நோக்கத்துடன் ரிசர்வ் பாங்கு, பொதுச் சந்தையில் வந்து எல்லாப் பாங்குகளும் விற்க முன்வரும் கடன் பத்திரங்களை வாங்கிக் கொண்டது. இதனால் ரிசர்வ் பாங்கு ரூ. 21 கோடி அளவில் அதிகப்படியான கடன் வசதியை 1950 ஆம் ஆண்டை விட 1951ஆம் ஆண்டில் கொடுத்தது. 1951ஆம் ஆண்டில் ஏற்பட்ட பாங்கு விகித ஏற்றம் இந்தியாவில் மட்டும் ஏற்படவில்லை. அது உலகம் முழுவதும் தோன்றிய நிலைமை எனலாம். பணவீக்கத்தினால் ஏற்பட்ட நிலைமையை சீர் திருத்தவும், பணமதிப்புக் குறைப்பைத் தூண்டவும் எல்லா நாடுகளும் தங்கள் பாங்கு விகிதத்தை அதிகப்படுத்தியது போல் இந்தியாவும் செய்தது.

இந்தியாவில், வர்த்தகம், தொழில், உற்பத்திப் பெருக்கு இவைகளை வாடவிடாமல் கடன் வசதி அதிகரித்திருப்பதைக் கட்டுப்பாடு செய்வது பெரும் பிரச்சினையாக இருந்தது. பணச் சந்தையில் சுருங்கி விரியும் தன்மையுள்ள கடன்வசதியை அமைத்துக் கொடுத்தனர். பாங்கு விகிதத்தை ரிசர்வ் பாங்கு இயற்றியவுடன் பணச் சந்தையில் கடன் கிடைப்பது குதிரைக் கொம்பாகியது. பருவகாலத் தேவைகளை ஈடுபடுத்த ரிசர்வ் பாங்கு வழக்கமாகப் பாங்குகளிடமிருந்து, பொதுச் சந்தையில் கடன் பத்திரங்களை வாங்கும் முறையைக் கைவிட்டது. பணவீக்கக் குறைப்பு முறையைக் கையாண்டு பருவகாலத் தேவைகளை ஈடு செய்தது. இது சம்பந்தமாகத்தான் ரிசர்வ் பாங்கு இந்தியாவில் உண்டியல் சந்தையை அமைக்கப் பாடுபட்டது.

இந்தியப் பாங்கு வர்த்தகத்தில் தற்போதுள்ள நிலைமையில் ரிசர்வ் பாங்கு, பாங்குகளுக்குக் கடைசிக் காலத்தில் கடனுதவி செய்யும் பொறுப்பினை ஏற்றுக்கொள்கிறது. முன்னர், இம்பீரியல் பாங்கினை அந்நியப் பாங்குகள் கடனுதவி செய்யுமாறு எதிர் நோக்கி இருந்தன. பாங்கு விகிதம் ஏறிய காரணத்தால் இம்பீரியல் பாங்கும் அதன் ரூ. 5 லட்சத்திற்கு மேலான கடன் வசதிக்கான $2\frac{3}{4}\%$ வட்டி விகிதத்தை $3\%$ ஆக அதிகரித்தது. பிறகு இரண்டு முறைகள் $\frac{1}{4}\%$ கூட்டி முடிவில் $3\frac{1}{2}\%$ ஆக அதிகரித்தது. இதனால் இதர பாங்குகள் நேரடியாக ரிசர்வ் பாங்கியில் இருந்தே கடன் கோர ஆரம்பித்தன. 1934ஆம் ஆண்டு ரிசர்வ் பாங்குச்

சட்டத்தின் 17 (4) (a) பிரிவின் கீழ் ரிசர்வ் பாங்குகளுக்குக் கடன் பத்திரத்தின் ஈட்டின்மேல் கொடுத்த முன்பண வசதி பொதுப் பாங்கு விகிதத்தில் 1950 ஆம் ஆண்டிலிருந்த ரூ. 13 கோடியிலி ருந்து 1951 ஆம் ஆண்டில் ரூ. 77 கோடியாக அதிகரித்தது. கூட் டுறவுப் பாங்குகளுக்கு மட்டிலும் விகிதத்தில் தள்ளுபடி செய்து, பாங்கு விகிதம் ஏறிய காலத்திலும்கூட அவர்களுக்குக் கொடுக்கும் கடன் வசதிக்கு $1\frac{1}{2}\%$ பாங்கு விகிதமாக அமைத்தது. 1948-ல் ரூ. 1 கோடி கடன் வசதியும், 1950-ல் ரூ. 5 கோடி கடன் வசதியும் 1951-ல் ரூ. 9 கோடி கடன் வசதியும் கூட்டுறவுப் பாங்குகளுக்கு ரிசர்வ் பாங்கு அளித்துவந்தது. நாட்டின் பொருளாதாரத் துறை யில் சில பகுதிகளில் ஏற்பட்ட பணச்சிக்கல்களைத் தீர்க்க 1952-ல் போதிய பணவசதியை அளித்தது. அதே ஆண்டில் ஏப்ரல் மாதத் தில் அமெரிக்க நாட்டிலிருந்து செய்த பெருமளவு பருத்தி இறக்கு மதிக்குத் தேவையான பணத்தை நெருக்கடியின்றி ரிசர்வ் பாங்கு கொடுக்க முன்வந்தது. அநேக பாங்குகள் கடனீடாக வாங்கி யுள்ள பருத்திச் சிப்பங்களுக்கு, சர்க்காரின் உத்தரவாதத்தை யொட்டி, ஒரு குறிப்பிட்ட விலைக்கு முன்பண வசதி கொடுக்க ரிசர்வ் பாங்கு முன் வந்தது. இந்திய, அயல்நாட்டுப் பருத்திகளைப் பெருமளவில் கொள்முதல் செய்வதற்குப் பணவசதி அளிக்கும் பாங்குகளுக்குப் போதிய கடனுதவியை ரிசர்வ் பாங்கு கொடுத்தது. பீகாரிலும், உத்தரப் பிரதேசத்திலும், கையிருப்புச் சர்க்கரையின் மீது கொடுக்கும் முன்பண வசதியைக் குறைக்கும்படியாக ரிசர்வ் பாங்கு தாக்கீது கொடுத்தது. தேயிலைத் தோட்டங் களுக்குப் போதிய அளவு பணவசதி கிடைப்பதற்காக ரிசர்வ் பாங்கும் அரசினரும் அட்டவணைப்படுத்தப்பட்ட பாங்குகளுக்கும் உச்சக் கூட்டுறவுப் பாங்குகளுக்கும் கடன் வசதிக்கான உத்தரவாதத்தைக் கொடுத்தார்கள். உச்சக் கூட்டுறவுப் பாங்குகள் 53-54 தேயிலைப் பருவ காலத்தில் கொடுத்த முன் பணவிகிதத் (15% முதல் 20%) திற்காக இந்தத் திட்டத்தின் கீழ்ப் பெற்ற பண உதவி 2·91 லட்சம். நாளடைவில் தேயிலை விலையேற்றத்தின் காரணத்தால் இத் திட்டத்தின்கீழ்ப் பெருமளவுப் பணஉதவி தேவைப்படவில்லை. பருத்தி சம்பந்தமாகக் கொடுக்கப் பட்ட பணவுதவி எதிர்பார்த்த அளவு பயன்பட்ட காரணத்தினுல் இத் திட்டத்தையும் அரசினர் 1953 ஆம் ஆண்டு டிசம்பர் 29 ஆம் தேதி திரும்பப் பெற்றுக்கொண்டார்கள்.

ரிசர்வ் பாங்கு கடன்கொடுப்போரில் கடைசி நிலையாக அமைந்தது பற்றியும், அவ்வப்பொழுது பல வகைப்பட்ட பொருளாதார வட்டங்களில் நிதி உதவி அளித்ததைப்பற்றியும், கடன் கட்டுப்பாடு கையாண்டதைப்பற்றியும் இதுகாறும் நாம்

விளக்கியிருக்கிறேம். 1949 ஆம் ஆண்டு இந்தியப் பாங்குக் கம்பெனிகள் சட்டத்தின்கீழ் இந்தியாவில் பாங்குகளை ஒழுங்காக அமைத்தும், அதை வளரச் செய்யும் முறையிலுள்ள செயல்களில் பங்குகொண்டும் பணியாற்றியது. 1940ஆம் ஆண்டு பாங்குக் கம்பெனிகளை மிகவும் சுருங்கிய அளவில் ஆய்வுசெய்ய ஆரம்பித்து 1950ஆம் ஆண்டு மார்ச்சு மாதத்துக்குள்ளாக மிகவும் அகன்ற முறையில் ஆய்வு முறையை விஸ்தரித்தது. உண்மையான மாற்றியமையக்கூடிய மூலதனத்தின் மதிப்பு இவைகளை ஆய்வு செய்ய ஆரம்பித்து, முடிவில் தராதர மதிப்பீட்டால் பாங்கு முறைகளைப் பரிசீலனை செய்து பாங்கின் தகுதியை இன்னதென்று முடிவு செய்தது. இந்த ஆய்வுகளின் முடிவாக, அநேக பாங்குக் கம்பெனிகள் நடத்திவந்த தவருன வழிகளைக் கண்டுபிடித்தது. குறிப்பாகப் பாங்கு வர்த்தகம் செய்யாத கம்பெனிகளைப் பாங்கு கள் கட்டுப்படுத்தும் முறையையும். அவர்களுடைய பங்குகளை மிகவும் ஏற்றமான விலையில் வாங்கியும், தங்களுடைய பணத்தை வர்த்தகக் கம்பெனிகளில் முடக்கி, வர்த்தகக் கம்பெனிகளிலும் பாங்குக் கம்பெனிகளிலும் தொடர்ந்தாற்போல நெறியாளராக இருந்துவந்த தவருன முறையையும் கண்ணுற்றது. நிர்வாகத்தில் உள்ளவர்களுக்குத் தக்க ஈடில்லாத கடன்களைக் கொடுத்தும், கண்மூடித்தனமாகக் கிளைகளைத் திறந்தும், முடிவாக வைப்பாளர் களின் நன்மைக்குப் புறம்பாகச் செயலாற்றியும் வந்த முறைகளைக் கண்டித்து அவைகளை நீக்கவேண்டுமென்ற நோக்கத்துடன் 1949ஆம் ஆண்டு பாங்குக் கம்பெனிகள் சட்டம் இயற்றப் பட்டது

எல்லாப் பாங்குகளும், கூட்டுச் சேர விரும்பினுலும். தங்கள் வைப்பாளருடனே கடன் கொடுத்தவர்களுடனே பாங்கு சம்பந்த மாக எந்த ஏற்பாடு செய்ய விரும்பினுலும், ரிசர்வ் பாங்கின் அனுமதியைப் பெற்ற பிறகே அவைகளைச் செய்யவேண்டும். இணைக்கப்படுதலால் பாங்குகள் வலிமை பெறுமெனில் யாதொரு தடங்கலுமின்றி ரிசர்வ் பாங்கு அம்மாதிரியான இணைப்பை அனுமதிக்கிறது. தனிப்பட்ட பாங்குகள் எந்த நிலையில் பணி யாற்றி வருகின்றன எனக் கண்காணிக்கவும் அவைகளைச் சீரிய முறையில் நடத்துவதற்கான வழிகளை ஆய்வுசெய்யவும் உயர்ந்த நிர்வாகக் குழு ரிசர்வ் பாங்கில் உள்ளது.

**15. உண்டியல் சந்தையின் வளர்ச்சி:** பாங்குகளுக்குக் குறைந்தகால முதலீடாக அமைவது உண்டியல் பத்திரங்களே. குறைந்த கால அளவில் இப் பத்திரங்களைப் பணமாக மாற்றிக் கொள்ளலாம். எனவே, இவை கையிலுள்ள ரொக்கத்திற்கு,

ஒப்பாகும். உண்டியல் பத்திரங்களுக்கும் கையிலுள்ள பணத்திற்கும் அதிகப்படியான பேதம் ஒன்றுமில்லை. அவ்வாறு இருப்பின், உண்டியல் தாள்கள் வட்டியை அளிக்கின்றன. ஆயினும் கையிருப்பு ரொக்கம் பயனற்றே கிடக்கின்றது. பாங்குகள் தங்களிடமுள்ள உண்டியல்களை மறுமுறை தள்ளுபடிகோரி, மத்திய பாங்கிலிருந்து பணவசதி பெறலாம். இது காலத்தை அனுசரித்துத் தேவைக்கேற்பப் பணவசதி பெறுகிறது. மறுபடி தள்ளுபடி விகிதத்தை ஏற்றி இறக்குவதனால் ரிசர்வ் பாங்கு நாட்டின் கடன் நிலைமையைச் சமாளித்துத் தேவைக்குப் போதிய பணமும் வழங்க முன்வருகிறது. எனவே, உண்டியல் சந்தை இதர கடன் நிறுவனங்களுடன் இணைக்கப்பட்டு, முடிவில் ரிசர்வ் பாங்கின் மேற்பார்வையில் கண்காணிக்கப்பட்டு நாட்டிற்குத் தேவையுள்ள கடன்முறையைச் செம்மையாக அமைக்கிறது.

இந்தியாவில் உண்டியல் சந்தை உருவாவதில் பல இடர்ப்பாடுகள் உள்ளன. ஸ்டாம்புச் சட்டத்தின்கீழ் அதிக மதிப்பிற்குரிய ஸ்டாம்புகளை ஒட்டவேண்டி நேருகிறது. இரண்டாவதாக வட்டாரங்கள்தோறுமுள்ள பல்வகைப்பட்ட பழக்க வழக்கங்களால் இந்த உண்டியல் அனைத்தும் புழக்கத்தில் வருவதில்லை. மூன்ருவதாக ஓர் உண்டியலைக்கண்ட மாத்திரத்திலேயே இது உண்மையான உண்டியலா அல்லது ஏமாற்றத்திற்குரிய உண்டியலா என்ற ஐயப்பர்ட்டைத் தோற்றுவிக்கிறது. மேலும் இந்த உண்டியல் வர்த்தகத்தின் அடிப்படையில் சரக்கு விகிதத்தை அனுசரித்து எழுதப்பட்டதா அல்லது தனி நபருக்கு நம்பிக்கையின்பேரில் பணவசதி அளிப்பதற்கென எழுதப்பட்டதா என்று காண முடியாது. இதன் காரணத்தால் பாங்குகள் தங்களிடமுள்ள பட்டியலில் உள்ள நபர்களால் எழுதப்பட்ட உண்டியல்கள்மீது முன் பணவசதி அளிக்கின்றன. ரிசர்வ் பாங்குகளை ஏற்படுத்து முன்னர் இம்பீரியல் பாங்க் ஓர் அளவில் ரிசர்வ் பாங்கின் பணிகளை மேற்கொண்டது. அக் காலத்தில் பாங்குகள் தங்கள் உண்டியல்களைக் கொண்டுவந்து மறுமுறைத் தள்ளுபடி கோரிக் கடன்வசதி பெற விரும்பவில்லை. ஏனென்ருல் இம்பீரியல் பாங்கிடம் இந்தப் பாங்குகள் உண்டியல் சம்பந்தமான தகவல் அனைத்தும் கொடுக்க நேரிட்டது. தங்களுடன் போட்டியிடும் பாங்கிற்கு வர்த்தக முறையில் இம்மாதிரியான தகவல்களை இதர பாங்குகள் கொடுக்கவில்லை. இம் முறையினுல் பாங்கு வர்த்தகம் வெகுவாகப் பாதிக்கப்படுமென்று அவர்கள் எண்ணினுர்கள் போலும். மேலும், இம்பீரியல் பாங்கு இவ்வாருன மறுமுறை தள்ளுபடிக்கு வந்த பல்வேறு உண்டியல்களைத் தங்கள் விருப்பத்திற்கேற்பச் சட்டவரம்பின்றித் தள்ளுபடி செய்தார்கள். எனவே,

கூட்டுப்பங்குப் பாங்குகள் தங்களுடைய வாடிக்கைக்காரர்களிட மிருந்து பெறும் உண்டியல்கள் அனைத்தையுமே ரொக்க ஆஸ்தி யாகக் கருத இயலாது போய்விட்டது.

இந்திய அயல்நாட்டு வாணிகத்திலும், ஏற்றுமதி இறக்கு மதியிலும் வழங்கப்படும் உண்டியல்கள் ஸ்டர்லிங் மதிப்பில் எழுதப்பட்ட காரணத்தால் உள்நாட்டு உண்டியல் சந்தையில் அவைகள் விலைபோகாமல் இருந்தன. மேலும் ஏற்றுமதி சம்பந்தப் பட்ட உண்டியல்களை இந்நாட்டுப் பாங்குகள் தள்ளுபடி செய்து முன் பணம் கொடுக்கத் தயாராயில்லை எனலாம். ஏனெனில் இவ் வுண்டியல்கள் இந்தியாவிற்கு வெளியே உள்ள ஊர்களிலே கொடுபடவேண்டியிருந்தன. மேலும் இறக்குமதி உண்டியல்கள் சிறிய தொகைகளுக்கு எழுதப்பட்ட காரணத்தால் மத்திய பாங்குடன் மறுமுறை தள்ளுபடி கோரி, பணவசதி பெறுவது எளிதாக இல்லை எனலாம். அண்மையில் அநேக மாறுதல்கள் தோன்றிய காரணத்தால் இந் நாட்டில் ஓர் உண்டியல் சந்தை ஏற்பட வசதியுள்ளது எனலாம். ரிசர்வ் பாங்குச் சட்டத்தின் பிரிவுப்படி (17) (4) (c) உள்நாட்டுப் பிராமிசரி நோட்டுகள்மீதும் உண்டியல்களின்மீதும் அட்டவணைப்படுத்தப்பட்டுள்ள பாங் குகள் ரிசர்வ் பாங்கியினின்று கடன்வசதி பெற்றுக்கொள்ள லாம். இம்மாதிரியான உண்டியல்கள் (1) இந்தியாவிலேயே எழுதப்பட்டு இந் நாட்டிலேயே கொடுக்கப்பட வேண்டியதாக அமையவேண்டும். (2) இவை வெறும் உதவியளிக்கும் உண் டியல்களாக இல்லாமல் வர்த்தகத்தின் அடிப்படையில் எழுதப் பட்டதாக அமைதல்வேண்டும். (3) இரண்டு நல்ல கையொப் பங்கள் அமைந்த உண்டியலாகவும், அவ்விரண்டில் ஒன்று அட்டவணைப்படுத்தப்பட்ட பாங்குக் கையொப்பமாகவும் இருத்தல் இன்றியமையாதது. (4) முன்பணம் கொடுக்கும் தேதி யினின்று 90 நாட்களில் இந்த உண்டியல்கள் காலாவதியாதல் வேண்டும். அட்டவணைப்படுத்தப்பட்ட பாங்குகள் தங்கள் உறுப்பினரின் உண்டியல்களின் பேரில் ஓர் ஆண்டிமாண்டு (பிராமிசரி) நோட்டினை எழுதிக்கொடுத்து டிமாண்டுக் கடன்களை ரிசர்வ் பாங்கியினின்று பெறலாம். இதை முன்னிட்டு அட்ட வணைப்படுத்தப்பட்ட பாங்குகள் கடனுதவியளித்துத் தாங்கள் பெறும் டிமாண்டுப் புரோநோட்டினை 90 நாட்களில் காலாவதி யாகும் நோட்டுகளாக ஒரு பகுதியினை மாற்றி அமைக்கின்றன. அட்டவணைப்படுத்தப்பட்ட பாங்குகளுக்குக் கடன் வசதியளிக்க முன்வரும்போது, ரிசர்வ் பாங்கு உண்டியல்களைக் கவனிப்ப தோடல்லாது பாங்குகளின் வர்த்தக முறைகளைக்கூடப் பரிசீலனை

செய்யலாம். எக் காரணமும் கூறுது பாங்குகளுக்கு முன் பண வசதியை மறுக்க உரிமையுண்டு.

இந்தியாவில் உண்டியல் சந்தை ஏற்பட ரிசர்வ் பாங்கு வட்டி விகிதத்தை ½% குறைவாக அமைத்துள்ளது. அந்தப் பாங்கு தன் விருப்பத்திற்கேற்ப இதைக் கூட்டவோ, குறைக்கவோ செய்ய லாம். உண்டியல் சந்தை விரைவில் ஏற்படவேண்டும் என்ற நோக்கத்துடன் உறுப்பினர் பாங்கு செய்யும் ஸ்டாம்புச் செலவில் பாதியை ரிசர்வ் பாங்கு ஏற்றுக்கொள்கிறது. இது குறிப்பாக டிமாண்டு உண்டியல்களைக் கால உண்டியலாக மாற்றம் செய்யத் தேவைப்படும் ஸ்டாம்புச் செலவில்தான் என்று விதிக்கப்பட்டிருக் கிறது.

ரிசர்வ் பாங்குச் சட்டத்தின் 17 (4) (c) பிரிவின் கீழ்க் கொடுக்கப்படும் முன்பணம் பருவகால நெருக்கடியைச் சமாளிக்கவே ஏற்பட்டுள்ளது. ஒவ்வொரு பாங்கும் ஒரே சமயத்தில் ரிசர்வ் பாங்கினின்று ரூ. 25 லட்சத்திற்குக் குறையாமல் பெற்றுக் கொள்ளலாம். தனிப்பட்ட உண்டியல்கள் 17 (4) (c) பிரிவின் கீழ் ரிசர்வ் பாங்கிற்கு ஈடாகக் காட்டவேண்டியது ரூ. 1 லட்சத்திற்குக் குறையாமல் இருக்கவேண்டும்.

ஆரம்பகாலத்தில் இந்தப் பிரிவின்கீழ் ரிசர்வ் பாங்கு முன்பண வசதி கொடுப்பதில் காலதாமதம் ஏற்படும் என்பதில் ஐயமில்லை. இம்மாதிரியான தகவல்களில் ரிசர்வ் பாங்கு மிகுந்த எச்சரிக்கை யுடன் உண்டியல்கள் சம்பந்தப்பட்ட விவரங்களை ஆய்ந்து தகுதி உள்ளனவா என்று முடிவுகட்டிய பின்னரே கடன்கொடுக்க முன் வரும். எந்தவோர் அட்டவணைப்படுத்தப்பட்ட பாங்கிற்கு மிகவும் அவசரமான நிலைமையில் பணமுடை ஏற்பட்டாலும், அந்தப் பாங்கு தன் கையில் உள்ள கடன் பத்திரங்களை ஈடாக வைத்து, நடைமுறையில் உள்ள பாங்கு விகிதத்தில் பண வசதியைப் பெற்றுக்கொள்ளலாம். இதற்குள்ளாக ரிசர்வ் பாங்கு நடத்த வேண்டிய ஆய்வுகளை முடிவுசெய்து 17 (4) (c) பிரிவின்கீழ்க் கடன்வசதி அளிக்க முன்வரும். இவ்வாறு காலதாமதமின்றி வசதி பெற உதவும் திட்டம் 1952ஆம் ஆண்டு பிப்ரவரிமாதம் 15ஆம் தேதி அமலுக்கு வந்தது. அனுபவத்தை யொட்டி இதை மாற்றி அமைக்கலாம்.

**16. செக்குத் தீர்வகம்:** பல்வேறு பாங்கு நிறுவனங்களுக் கிடையேயுள்ள கணக்கினைத் தீர்த்து வைப்பதற்கென்று செக் கொடுத்து, கணக்கினை முடிக்க ஒரு பொது இடம் தேவைப்

படுகிறது. அம்மாதிரியான இடத்திற்குச் செக்குத் தீர்வகம் என்று பெயர். இங்கு எல்லாப் பாங்கு நிறுவனங்களும் தங்கள் கணக்குகளை வைத்துக் கொண்டிருக்கிறார்கள். இச் செக்குத் தீர்வகம் உண்மையில் பாங்குகளுக்கெல்லாம் தலைமைப் பாங்காக இருந்தால்தான் எளிதில் நிறைவேறும் எனலாம். மேலும் செக்குகள் மூலமாகத்தான் கணக்கில் பொதுவாகத் தீர்வு காணமுடியும்.

இந்தியாவில் தலைமைச் செக்குத் தீர்வகங்கள் பம்பாய், கல்கத்தா, டில்லி, சென்னை, கான்பூர் முதலிய இடங்களில் உள்ளன. எங்குச் செக்குத் தீர்வகம் இல்லையோ அந்த இடங்களில் இம்பீரியல் பாங்க் மூலம் (அரசாங்கப் பாங்கின் மூலம்) பாங்குகள் ஒன்றுக்கொன்று செக் எழுதிக் கணக்கைத் தீர்த்துக் கொள்கின்றன. ரிசர்வ் பாங்க், இம்பீரியல் பாங்க் (அரசாங்க பாங்க்) செலாவணிப் பாங்க் ஆங்கிலப் பாங்கும், பதிலாள் நிறுவனங்களும், புகழ்பெற்ற இந்தியக் கூட்டுப் பங்குப் பாங்கு, இவையனைத்தும் செக்குத் தீர்வகத்தில் அங்கம் வகிக்கின்றன. ரிசர்வ் பாங்கு, பாங்குகளுக்கெல்லாம் தலைமைப் பாங்காக இருந்து இவைகளுடைய கணக்குப் பாக்கிகளைத் தீர்த்துவைக்கிறது.

**17. செலாவணிப் பாங்குகள் :** இந்தியாவில் 1954ஆம் ஆண்டு டிசம்பர் மாதம் முடிய, பெரிய நகரங்களிலும், டெல்லியிலும், 14 செலாவணிப் பாங்குகள் 65 கிளைகளுடன் பணியாற்றி வருகின்றன. இவையனைத்தும் அயல்நாட்டுப் பாங்குகளே. இவைகளில் தாமஸ் குக் அண்டு சன், தி அமெரிக்கன் எக்ஸ்பிரஸ் கம்பெனி ஆகிய இரண்டு பாங்குகளும் சுற்றுலாச் சம்பந்தமான வர்த்தகத்தில் ஈடுபட்டுள்ளன. மூன்று பாங்குகள் பெரும்பாலும் இந்தியாவில் வர்த்தகத்தில் ஈடுபட்டுள்ளன. இதர பாங்குகள் அயல்நாட்டிலுள்ள பெரிய பாங்குகளின் பதிலாள் போன்று பணியாற்றி வருகின்றன. இவைகளின் முழு விருப்பங்கள் அனைத்தும் அயல்நாட்டிலேயே உள்ளன எனலாம். இவற்றில் ஐந்து மாபெரும் பாங்குகள் லாயிட்ஸ் பாங்க், சார்ட்டர்ட்டு பாங்க் ஆப் இண்டியா ஆஸ்திரேலியா அண்டு சைனா, தி நேஷனல் பாங்க் ஆப் இந்தியா, தி மெர்கண்டைல் பாங்க் ஆப் இந்தியா, தி நேஷனல் சிட்டி பாங்க் ஆப் நியூயார்க் ஆகியவை.

இச் செலாவணிப் பாங்குகள் வர்த்தகப் பண்டங்களின் ஏற்றுமதி, இறக்குமதிகளுக்குத் தக்க சமயத்தில் பண உதவி அளிப்பதுடன் உள்நாட்டிலிருந்து துறைமுகப் பட்டினங்களுக்கு வர்த்தகப் பண்டங்களை அனுப்புவதிலும் உதவிசெய்ய முன்வருகின்றன. இந்திய ஏற்றுமதியாளர் இந்தியப் பொருளை ஏற்றுமதி

செய்யமுற்படுமுன், இலண்டனில் உள்ள கொள்முதல் செய்பவர், அங்குள்ள பாங்கியின் மூலம் ஏற்றுமதியாளர் பெயரில் இந்தியப் பாங்கியின் கணக்கை ஏற்படுத்திக்கொள்கிறார். இதன் பிறகு ஏற்றுமதி செய்யப்பட்ட பண்டங்களின் மதிப்பைக் குறிப்பிடும் தொகை அல்லது அது சம்பந்தமாகத் தமக்குச் சேரவேண்டிய பணத்திற்காக ஓர் உண்டியலை இந்திய ஏற்றுமதியாளர் தயார் செய்து கப்பலில் அனுப்பப்பட்ட சரக்கிற்கான கப்பல்வழி ரசீது, இன்சூரன்சுப் பத்திரம் போன்ற இதர ஆவணங்களுடன் சேர்த்து இந்தியாவில் உள்ள செலாவணிப் பாங்கில் (எதில் இலண்டன் இறக்குமதியாளர் கணக்கைத் திறந்துள்ளாரோ, அதில்) கொடுக்கிறார். இவ் வுண்டியலுக்கான தவணை மூன்று மாதங்கள். இவ் வுண்டியல் பத்திரம் ஸ்டர்லிங் மதிப்பில் எழுதப்படுகிறது. வர்த்தகத்தில் அனுப்பப்படும் சரக்கு சைனு, அல்லது ஜப்பானுக இருப்பின், 'என்' நாணயத்திலும் ரூபாய் நாணயத்திலும் எழுதப் படுகிறது. இந்த ஆவணங்கள் அனைத்தும் உண்டியல்களுடன் இறக்குமதியாளர் ஊரில் உள்ள செலாவணிப் பாங்குக் கிளைக்குப் போய்ச் சேருகின்றன. இறக்குமதியாளர் உண்டியலை ஏற்றுக் கொண்ட உடனேயே சரக்கு சம்பந்தமான எல்லா ஆவணங்களும் அவரிடம் ஒப்படைக்கப்படும். இவர் சம்மதித்து ஏற்றுக்கொண்ட உண்டியல் அச் செலாவணிப் பாங்கின் பின்குறிப்புடன் இலண்டனிலோ, அயல்நாட்டுப் பெரு நகரங்களிலோ உள்ள உண்டியல் மாற்ற நிறுவனங்களில் (exchange bank) குறைந்த தள்ளுபடிக்கு மாற்றிப் பணமாக்கப்படலாம். இம் முறைக்குச் சம்மதித்து ஏற்றுக்கொண்டதன் பேரில் ஆவணங்கள் கொடுக்கப் படும் முறை என்று பெயர்.

இந்தியாவிற்குள் இறக்குமதி செய்யப்படும் வர்த்தகப் பண்டங்களுக்கு அயல்நாட்டு ஏற்றுமதியாளர், இந்திய இறக்குமதியாளர் பெயரில் எழுதியுள்ள உண்டியலுக்கான பணத்தைக் கொடுத்த பின்னரே ஆவணங்கள் கொடுக்கும் முறையை நடப்பில் கொண்டு வந்துள்ளனர். இதன் முழு விவரம் வருமாறு: பொதுவாக அயல்நாட்டு ஏற்றுமதியாளர் கொடுக்கும் ஒவ்வோர் உண்டியலையும் இந்திய இறக்குமதியாளர் சம்மதித்து ஏற்றுக் கொண்டால் மட்டும் போதாது; அவ்வாறு செய்யின், இறக்குமதிப் பண்டங்கள் அவர் கைவசம் போய்ச்சேரா. 60 நாட்கள் கால வரம்புள்ள இந்த உண்டியல்களைப் பணம் கொடுத்துப் பெற்றாலன்றி சரக்குகள் சம்பந்தமான ஆவணங்கள் அவர் கைவசம் கொடுக்கப்படமாட்டா. தற்போது உள்ள நிலைமையில் இந்த இடர்ப்பாட்டை நீக்க இந்திய இறக்குமதியாளர் பாங்கருக்கு ட்ரஸ்ட் ரசீது ஒன்று எழுதிக்கொடுத்து அதன்

காரணமாக, தான் உண்டியலுக்கான பணம் பட்டுவாடாச் செய்யும் காலம்வரையிலும் அந்த இறக்குமதிச் சரக்குகளுக்குத் தனது டிரஸ்டியாகப் பாங்கரை நியமிக்கிறார்.

இவ் விரண்டு முறைகளுமே இந்திய வர்த்தகர்களுக்கு உபயோகமின்றி அமைந்துள்ளன. இந்திய ஏற்றுமதியாளர் தம் உண்டியலுக்காக அதில் குறிக்கப்பட்ட காலம்வரை பணமின்றி வாளா இருக்க நேரிடுகிறது. மேலும், அயல்நாட்டுச் செலாவணிப் பாங்குகளும், இலண்டனில் உள்ள பாங்குகளும் இந்த உண்டியல்களைப் பெருமளவில் கழிவு செய்கிறார்கள். இதனால் இந்திய ஏற்றுமதியாளருக்கு எவ்வித அநுகூலமும் ஏற்படவில்லை யெனலாம். மேலும், இலண்டனில் உள்ள பாங்குகள் இந்த உண்டியல்கள்மீது வட்டியைப் பெறுகின்றன. அந்த வசதியும் இந்திய வர்த்தகர்களுக்குக் கிடைப்பதில்லை.

பணத்தண்டல் செய்து ஆவணங்களைக் கொடுக்கும் முறை இந்தியாவில் ஏற்பட்டுள்ளது. இந்த முறையின்கீழ்ப் பாங்குகள் 6% வட்டியை வசூலிக்கலாம் என்றும், எனவே அயல்நாட்டு ஏற்றுமதியாளர் உண்டியல் எழுதிய தேதியிலிருந்து பணம் கட்டும் தேதி வரையிலும் அவர்கள் வட்டியையும் வசூலிக்கிறார் கள். இந்த ட்ரஸ்ட் ரசீது முறையும் தேவையற்ற சிவில் பொறுப்பினை இந்திய வர்த்தகர் மீது சுமத்துகிறது.

இச் செலாவணிப் பாங்குகள் வெகுகாலமாகவே இந்தியாவில் அயல்நாட்டு வர்த்தகத்தைத் தங்கள் ஏகபோக உரிமையாக நடத்தி வருகின்றன. மொத்த வர்த்தகத்தில் 15% தான் இந்தியப் பாங்குகள் செய்து வருகின்றன. கமிஷனாகவும், கழிவாகவும், தரகு முறையிலும் வட்டியாகவும், இன்சூரன்சுப் பணமாகவும் நம் நாட்டு வருமானத்தில் பெரும்பகுதி இந்தப் பாங்குகளிடம் போய்ச் சேர்ந்துவிடுகிறது. இந்தியாவில் உள்நாட்டு வர்த்தகத்திலும் இவர்கள் ஈடுபட்டு இந் நாட்டுப் பாங்குகளுடன் போட்டியிடு கின்றனர். தங்கள் நாட்டு வர்த்தகராக இருப்பின், அவர்களுக்குத் தனிப்பட்ட முறையில் சலுகைகள் காட்டி, அதன்வழியே இந்திய வர்த்தகர்களை ஒடுக்கப் பாடுபடுகின்றனர்.

**18. இந்திய அயல்நாட்டுச் செலாவணிப் பாங்க் தோற்று விக்க யோசனைகள் :** மத்திய பாங்கு விசாரணைக் குழுவினர், அயல் நாட்டுச் செலாவணியிலும் வர்த்தகத்திலும்[1] இந்தியாவுக்குக் கிடைக்கக்கூடிய உரிமைப் பங்கைப் பெற, கீழ்க்காணும் கொள்

1. *மத்திய பாங்கு விசாரணைக் குழுவினரின் அறிக்கை, பக்கம் 481.*

கைகளைப் பரிந்துரைத்தனர். அவை (1) தங்கள் வாடிக்கைக் காரர்களுடைய சௌகரியத்தை முன்னிட்டு, சீரிய முறையில் தொழில் செய்யும் இந்தியக் கூட்டுப் பாங்குகள் அயல்நாட்டுப் பாங்குகளுடன் தொடர்பு வைத்துக் கொள்ளவேண்டும். (2) இந்திய அயல்நாட்டு வர்த்தகத்தில் இம்பீரியல் பாங்கு அதிகப்படியான ஈடுபாடு கொள்ளவேண்டும். (3) இம்பீரியல் பாங்கு அவ்வாறு இந்திய அயல்நாட்டு வர்த்தகத்தில் பொறுப்பெடுக்க வில்லையானால் ரூ. 3 கோடி முதலிட்டு இந்தியச் செலாவணிப் பாங்கு ஒன்றை நிறுவி அயல்நாட்டு வர்த்தகத்தை நடத்த வேண்டும். குறித்த காலத்திற்குள்ளாகத் தேவையான மூலதனம் கிடைக்கவில்லையானால் அரசினர் அதற்கான மூலதனத்தைக் கொடுக்க முன்வரவேண்டும். இந்தியர்களும், இந்திய ரல்லாதார் களும் இதில் சமமான கூட்டாளிகளாக இருந்து பணியாற்ற வேண்டும்.

இந்தியச் செலாவணிப் பாங்குகளைத் திறக்கச் செய்த ஏற்பாடுகள் பலனற்றுப் போயின. இதற்கு மாறாக இந்தியப் பாங்குகள் அயல்நாட்டு உண்டியல்களில் பெருவாரியான வர்த்தகம் செய்யவும் கிளைகள் திறக்கவும் இந் நாட்டு அதிகாரிகள் அனுமதி கொடுத்துள்ளனர். இதன் மூலமாக வர்த்தக அனுபவம் பெறவும் இவற்றில் உள்ள சிக்கல்களைத்[1] தெரிந்துகொள்ளவும் போதிய வாய்ப்புக் கிடைக்கக்கூடும்.

சமீப காலம் வரை, இந்தியாவிற்கு அப்பால் இணைப்புப் பெற்ற அயல்நாட்டுச் செலாவணிப் பாங்குகளை ரிசர்வ் பாங்கு அடக்க முடியாமல் இருந்தது. 1949ஆம் ஆண்டில் ஏற்பட்ட பாங்குக் கம்பெனிகள் சட்டப்படி ரிசர்வ் பாங்கு இவைகளையும் கட்டுப் படுத்த முடிகிறது. இந்தியாவிலன்றி இதர நாட்டில் இணைப்புப் பெற்ற எந்தப் பாங்காவது கல்கத்தா அல்லது பம்பாயில் ஒரு கிளை திறப்பின், அந்தப் பாங்கு ரிசர்வ் பாங்கியில் ரூ. 15 லட்சத்திற்குக் குறையாது வைப்பு வைத்தல் வேண்டும். செலாவணிப் பாங்குகள் தங்கள் நடப்பு வைப்புப் பொறுப்பில் 20%ஐ ரிசர்வ் பாங்கில் போட்டுவைக்க வேண்டும். நடப்பு வைப்புக் கால வைப்பின் பொறுப்பில் 75% அளவில் உள்ள ஆஸ்தியை இந்தியாவில் வைத்திருக்கவேண்டும். மேலும், தங்களுடைய பாங்கு வர்த்தகத்தைப்பற்றி அவ்வப்போது ரிசர்வ் பாங்கிற்குத் தகவல் கொடுப்பதுடன் இருப்புக் கணக்கினை வெளியிடவும் வேண்டும்.

1. ஆர். எஸ். சேயர்ஸ் (பதிப்பு) பாங்கிங் இன் தி ப்ரிட்டிஷ் காமன் வெல்த் பக்கம் 172.

# கலைச் சொற்கள்

## A

Abbott and Wood Report — அப்பெட்-உட் அறிக்கை
Abrasives — உறைப்பான்கள்
Acworth Committee — அக்வொர்த் குழுவினர்
Alutees — அலுட்டிகள்

## B

Balutees — பலூட்டிகள்
Bankers' Book Evidence Act — பாங்கர்கள் புத்தகச் சட்டம்
Bawxite — பாக்ஸைட்
Belief and Action — ஒரு புத்தகத்தின் பெயர்
Biuili — பியிலி
Blending — பதனப்படுத்துதல்
Bonus — போனஸ்
Bonemeal — எலும்புச் சத்து

## C

Carbonisation — கரியாக்கும் முறை
Cattle Act — கால்நடைக் குறுக்கீட்டுச் சட்டம்
Central Locust Organization — மத்திய வெட்டுக்கிளி நிறுவனம்
Chawl — சாள்
Chromite — கிரோமைட்
Cochieal — தம்பலப் பூச்சி
Contour — கான்டூர்

## D

Desulphurisation — கந்தக நீக்கம்
Doab — இரட்டை நதிச் சமவெளி
Drill — துளை போடும் கருவி

F

Fermentation — புளிக்க வைத்தல்
Ferro Manganese — பெர்ரோ மாங்கனீஸ்
Flu — நச்சுக் காய்ச்சல்
Fragmentation — சிதறுண்டு போடுதல்

G

Galla — கல்லா
Gelatine — ஜிலடின்
Gratuity — பணிக்கொடை
Gypsum — ஜிப்ஸம்

H

Hatta — அங்காடி
Herbicide — வேர் நீக்கு மருந்து
Humus — இலை மக்கு

I

Imperial Gazetteer — இம்பீரியல் கெஜட்டீர்
Indian Council of Agricultural Research — இந்திய விவசாய ஆராய்ச்சி நிறுவனம்
Indian Standard Institute — இந்தியத் தர நிறுவனம்
Imperial Gazette of India — இம்பீரியல் கெஜட் ஆப் இந்தியா

K

Kapok — இலவம்பஞ்சு
Keatinge — கீட்டிஞ்சு
Khardesh — கார்தேஷ்

L

Laterite — லேட்டரைட்
Lift Irrigation — இறவைப் பாசனம்
Lime — சுண்ணாம்பு

M

Mandi Arhatiya — மண்டித் தரகர்
Metre Gauge — மீட்டர் கேஜ்
Money Account call — அழைப்பின் பேரில் பணம் தரல்

N

| | | |
|---|---|---|
| National Metallurgical Institute | — | தேசிய உலோக ஆய் கூடம் |
| Nepenthes | — | வேர்ப்புழு |
| Nitrogen | — | நைட்ரஜன் |
| Non-recurring | — | மீளாத |

O

| | | |
|---|---|---|
| Optimum | — | சீரான அமைப்பு |

P

| | | |
|---|---|---|
| Permanent Settlement | — | நிரந்தரச் செட்டில்மென்டு |
| Phosphate | — | பாஸ்பேட்டு |
| Pig-iron | — | வார்ப்பிரும்பு |
| Pipri | — | பிப்ரி |
| Plant Protection Organization | — | தாவரப் பாதுகாப்பு நிறுவனம் |
| Plenary Labour Conference | — | ஆண்டுமுழுத் தொழில் மாநாடு |
| Preliminary Negotiations | — | முதல் பேச்சு வார்த்தை |
| Prickly pear | — | நாகதாளி (சப்பாத்தி) |
| Proteins | — | புரதப் பொருள் |
| Purchasers | — | கொள் முதலாளர்கள் |
| Pyrite | — | பைரைட் |

Q

| | | |
|---|---|---|
| Quarantine | — | ஒதுக்கு முறை |

R

| | | |
|---|---|---|
| Raw Rubber | — | கச்சா ரப்பர் |
| Record of Rights | — | உரிமை மதிப்பீடு |
| Recurring | — | மீளும் |
| Ridging | — | குன்றுபோல் கட்டுதல் |

S

| | | |
|---|---|---|
| Seasoning | — | பதனம் |
| Shallow | — | மேல் பூச்சாக |
| Sheet Erosion | — | மேல் தரை அரிப்பு |

| | |
|---|---|
| Shramadan | — சிரமதானம் |
| Slaughter house | — கால்நடை வெட்டுமிடம் |
| Shift | — ஷிப்டு |
| Sterilization | — சுத்தம் செய்தல் |
| Subdivision | — உட்கோட்டப்படுத்துதல் |
| Sulphur | — கந்தகம் |
| Sulphur-di-oxide | — கந்தக வாயு |
| Sulphuric Acid | — கந்தகக் காடி |
| Super Phosphate | — சூபர் பாஸ்பேட் |

T

| | |
|---|---|
| Tennesse Valley Authority | — டென்னிஸி வேலி அத்தாரிட்டி |
| Terracing | — உயர்மாடி அமைத்தல் |
| Thermal | — சூட்டு முறை |
| Tripartite Labour Conference | — முக்கூட்டுத் தொழில் கூட்டம் |
| Trawlers | — மீன் படகுகள் |

U

| | |
|---|---|
| Utility Urine | — உபயோகத்திற்குள்ள சிறுநீர் |

W

| | |
|---|---|
| Wall Street | — வால் தெரு |
| Waterlift | — நீர் தூக்கி |
| Weed | — களை |
| Weedicide | — களை நீக்கு மருந்து |
| Whitely Commission | — விட்லீ குழு |

# பொருட்குறிப்பு அகராதி